




# தொகுதி ரு

(பகுதி ௩௧—௩௬)

[பவ௵ ஆடி௴ முதல் மார்கழி௴ முடிய.]




---

## கௌரவப் பத்திரிகாசிரியர்கள்

(1) பெ. நா. அப்புஸ்வாமி ஐயர், பி.ஏ., பி. எல். (2) எஸ். அனவரதவிநாயகம் பிள்ளை, எம். ஏ., எல்.டி. (3) மு. இராகவையங்கார், தமிழ் லெக்ஸிகன் ஆபீஸ் தலைமைத் தமிழ்ப் பண்டிதர். (4) கே. வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர், பி. ஏ., பி, எல். (5) டி. கே. சிதம்பரநாத முதலியார், பி. ஏ., பி.எல். (6) தீ. சிவராமசேதுப்பிள்ளை, எம். ஏ., பி. எல். (7) கே. சுவாமிநாதன், எம். ஏ., பி. எல். (8) க. அ. நீலகண்டசாஸ்திரி, எம். ஏ. (9) எம். லக்ஷ்மி அம்மாள், எம். ஏ., எல். டி. (10) எஸ். வையாபுரிப் பிள்ளை, பி. ஏ., பி. எல். (11) ஆர். நாராயணசாமி ஐயர், பி.ஏ., பி.எல். (நிர்வாகப் பத்திரிகாசிரியர்.)

---

1934

சென்னை லா ஜர்னல் அச்சுக்கூடம், மயிலாப்பூர்.

 [ரு. 2—6—0

# ஆறூந் தொகுதியின் பொருளடக்கம்

உபாத்தியாயர் பகுதி:



கதைகள்:



கவி: ..



..

குறிப்புந் திரட்டும்:

**சரித்திரம்:**

சிறுவர் பகுதி:



நற்கலை:



மதிப்புரை:

## கட்டுரை எழுதியவர்கள்




# வெங்கனூர்க் கோயிற்சிற்பம்

மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர்

---

கற்பனைக் களஞ்சியமென்றும் கவிதாசார்வபௌமரென்றும் அறிஞர்களாற் பாராட்டப்படும் துறைமங்கலம் சிவப்பிரகாச ஸ்வாமிகள் பெருமையை அறியாதவர் தமிழ்நாட்டில் பெரும்பாலும் இரார். அவருடைய கவிமாலைகளைப்புனைந்து தமிழ்நாட்டாருடைய நினைப்பில் இருந்துவரும் தலங்களுட் சிறந்தது திருவெங்கையென மருவிவழங்கும் வெங்கனூராகும். [1]‘மந்திரிக்கோவை’யென்று புலவர்களாற் சிறப்பித்துப் புகழப்படும் கோவையொன்றும் உலாவொன்றும் கலம்பகமொன்றும் அலங்காரமொன்றும் அத் தலவிஷயமாகச் சிவப்பிரகாச ஸ்வாமிகளாற் பாடப்பெற்றுள்ளன. அது திருச்சிராப்பள்ளி ஜில்லாவில் பெரும்புலியூர்த் தாலூகாவிலே உள்ளது.

அத்தலத்திலுள்ள கோயிற்சிற்பம் மிக அருமையாக அமைந்துள்ளது; “கருப்ப இல்லிற் கிணையில்லை யென்னும் திருவெங்கை”, “வல்ல கோனுக்கு வல்லவண்ணமலையார்கட்டு கோயில்” (திருவெங்கைக்கோவை), “மல்லலுறச், சந்தி பொருத்தித் தகுஞ்சீர் கெடாதடுக்கிப், புந்தி மகிழற் புதவணித்தா - முந்தையோர், செய்யுள் போற் செய்த திருக்கோயில்” (திருவெங்கையுலா) என அக்கோயில் பாராட்டப்பட்டுள்ளது. அதன் [2]வரலாறு வருமாறு:—

---

1. கோவைகளுள் திருச்சிற்றம்பலக் கோவையார் அரசென்றும் திருவெங்கைக்கோவை மந்திரியென்றும் கவிஞர்கள் கூறுவர்.

2. நான் பெரும்புலியூர்த்தாலுகாவிலுள்ள இடங்களிலிருந்து இளமையில் படித்துக்கொண்டுவந்த காலத்தில் இவ்வரலாற்றைச் செங்கணம் விருத்தாசல ரெட்டியார் முதலியவர்கள் மூலமாகக் கேட்டேன். இதனைச் சிறிது வேறுபடுத்தியும் வேறுதலங்களோடு சார்த்தியும் கூறுவாரும் உளர்.

துறைமங்கலமென்னும் ஊரில் பண்டகுலத்தில் லிங்கப்ப ரெட்டியாரென்னும் பரம்பரைச்செல்வர் ஒருவர் இருந்தார். அவருடைய குடும்பப் பெயர் வல்லகோலென்பது. அவருக்கு அண்ணாமலை ரெட்டியாரென்றும் நீலகண்டரெட்டியாரென்றும் இரண்டு குமாரர்கள் உண்டு. அவருள் அண்ணாமலைரெட்டியாரே திருவெங்கைக்கோயிலைக் கட்டியவர்.

அவர் கல்வியறிவொழுக்கமும் சிவபக்தியும் உடையவர்; தமிழ் நூற்பயிற்சியும் தமிழ்ப்புலவர்களிடத்தில் பேரன்பு முள்ள வர். சிற்றரசர் போன்ற பெருமதிப்புடையவர். சிவப்பிரகாசஸ்வாமி களிடத்தில் அளவற்ற பக்தி பூண்டு பலவகையில் அவரை ஆதரித்து வந்தவர்; அவருக்காகப் பல இடங்களிற் பலவசதிகளைச் செய்து கொடுத்தவர். அவற்றுள் அவருக்காகக் கட்டுவித்த நடைவாவிகள் மிகச் சிறந்த வேலைப்பாட்டுடன் இக்காலத்திலும் காண்போர் கண்களைக் கவர்ந்து விளங்குகின்றன. மனிதர்களைப் பாடாத வீறுபெற்ற அப்புலவர்பெருமானுடைய அருமைத் திருவாக்கினால் உள்ளங்குளிர்ந்து புகழ்ந்த பெருமையை உடையவர் ரெட்டியார்;

“ .. .. .. ...வினவினர்க்குப்
பண்டை யறத்தின் படிவமிது வென்னவுருக்
கொண்ட விலிங்கையன் குலமைந்தன்-உண்ட
படிதாங்கி மாயன்றேர்ப் பார்தாங்கி யாங்கேம்
குடிதாங்கி நல்லிசைமென் கோதை—முடிதாங்கு
கல்வி யுறுநீல கண்டன் றுணைவனலர்ச்
செல்வி யுறையுந் திருமார்பன்
* * * *
இலையென்றல் கேட்பவுமின் றுதென் றிரப்போர்
நிலைகண்டாங் கெப்பொருளு நேர்வோன்...
* * * *
வந்துதன்சீர் பாடுநரை மண்மீதி லந்நிலையே
இந்திரன்ரு ளுக்கு மியல்பினான்..
* * * *
... ...மண்புலவர்
தம்மைவிழி காக்குந் தகவி னிமைபோலச்
செம்மை பெறக்காக்குஞ் சீருடையோன்..
* * * *
வேலியறஞ் செய்ய விளைத்துக் கரும்பயிலக்
கூலி கொடுக்குங் குலத்தோன்றல்”

என்று அக்கவிஞர்பிரான் அவருடைய புகழைப் பலபடப் பாடி யுள்ளார். ஸ்வாமிகள் தாம் துறவியாக இருந்தும், “எம்குடிதாங்கி”

என்று நாவாரக் கூறி வாழ்த்தும் பெருமைவாய்ந்த அண்ணுமலை ரெட்டியாருடைய புகழை வேறு எம்மொழிகளால் சொல்ல முடியும்?

அண்ணுமலைரெட்டியார் தமக்கு உரிய கிராமங்களுள் ஒன்ருகிய வெங்கனூரில் இருந்துவந்தார். அப்பொழுது ஒவ்வொரு பிரதோஷதினத்திலும் விரதமிருந்து விருத்தாசலம் சென்று பழமலை நாதரையும் பெரியநாயகி யம்மையையும் தரிசித்துவருவது அவர் வழக்கம். இந்த நியமத்தில் என்றும் தவருமல் அவர் நடந்து வந்தார். இடையில் ஓடும் வெள்ளாற்றில் அளவு கடந்த வெள்ளம் வந்துவிட்டமையால் ஒரு பிரதோஷத்தன்று அவரால் விருத்தாசலத்துக்குப் போக இயலவில்லை. ஆதலின் மிகவும் மன்முடைந்தவராகி வருந்தினர். அன்றிரவு அவருடைய கனவில் பழமலைநாதர் தோன்றி, வெங்கனூரில் இன்ன அடையாளமுள்ள இடத்தில் ஒரு கோயில் அமைத்து அங்கே சிவலிங்கத்தையும் மற்ற மூர்த்தங்களையும் பிரதிஷ்டைசெய்து வழிபடுக வென்று கட்டளையிட்டு மறைந்தருளினர். இந்தச்செயலை, 'சிவபெருமான் வெங்கையிலே வாசம் செய்தலை விரும்பினர். வாமபாகத்திலுள்ள பெண் ஆசையையும் சுந்தரமூர்த்தியார் பொன்னைத் திருமுருகன் பூண்டியிலே பறித்த பொன்னுசையையும் பெற்ற திருவுள்ளத்தில் மண்ணுசையும் உண்டாயிற்று; ஆதலின் தேவர்களும் விரும்பும் சிறப்பை அளிக்கக் கருதி, முன் மாவலிபாற்சென்று மண்ணை இரந்த திருமாலைப் போல் குறுகியவுருவங் கொண்டு யாசியாமல் இயல்பானவுருவத்தோடே கனவிற் சென்று இரந்து பெற்றனர்' என்று அழகுபெறச் சிவப்பிரகாச ஸ்வாமிகள் கூறியுள்ளார்:

"வெங்கை நகரிருப்பு வேண்டியே—பங்குபடு
பெண்ணுசை நம்பிபசும் பொன்னுசை பெற்றவுளம்
மண்ணுசை தானு மருவுதலால்—விண்ணுசை
கொள்ளுஞ் சிறப்புக் கொடுப்பத் திருவுளங்கொண்
டெள்ளுங் குறியவுரு வின்றுபோய்த்—தெள்ளும்
கனவு நனவுபோற் காட்டியிரந்து" (வேங்கையுலா.)

விழித்தெழுந்த அண்ணுமலைரெட்டியார் சிவபிரான் திருவருட்டிறத்தை எண்ணிப் பரவரசராய் மனமுருகினர். பிறகு சிவபெருமானுற் குறிப்பிக்கப்பெற்ற இடத்தைச் சென்று கண்டார்; சிவாலயம் அமைப்பதற்குரியவற்றைச் செய்யத்தொடங்கினர்; நர்மதை நதியிலிருந்து பாணலிங்கம் வருவித்துத் தனியே பிரதிஷ்டை செய்வித்துத் தரிசனம் செய்துகொண்டு வந்தார்.

அக்காலத்தில் வடதேசத்தில் உண்டான பஞ்சத்தால் பல சிற்பிகளும் அவர்களுடைய தலைவனும் அங்கிருந்து தென்னாட்டை நோக்கி வந்தனர். அவர்கள் திருவெங்கை வழியாகச் செல்லுகையில் அவர்களுடைய வருகையை அறிந்த அண்ணாமலை ரெட்டியார் தாம் மேற்கொண்ட சிவாலயத் திருப்பணியை அவர்களைக்கொண்டு செய்விக்க எண்ணினார். தம் கருத்தை அவர் அவர்களிடம் கூறவே, அவர்கள் பஞ்சகாலத்தில் அத்தகைய பேருதவி கிடைத்ததை யெண்ணி மிகமகிழ்ந்து உடன்பட்டுக் கோயிலைக் கட்டத்தொடங்கினார்கள்.

சிற்பிகள் வெங்கனூர்த் திருக்கோயிலை விதிப்படி ஊக்கத்தோடு கட்டிவந்தனர். உணவு முதலியவற்றிலும் பிறவற்றிலும் அவர்களுக்கு யாதொரு குறைவும் நேராவண்ணம் எல்லாவற்றையும் அண்ணாமலை ரெட்டியார் செய்வித்துவந்தனர். அவருடைய அன்புடைமையினால் சிற்பிகள் மகிழ்ச்சியுடன் தங்கள் கடமைகளைச் செவ்வனே நிறைவேற்றி வந்தார்கள். ஒவ்வொருநாளும் அவர் சிவாலயத்திருப்பணியை மேற்பார்த்து வருவார். சிற்பிகளுக்கு ஏதேனும் குறையுண்டோவென விசாரித்தறிந்து அதனை நீக்குவார். அவர்களுடைய தலைவன் இடைவிடாமல் தாம்பூலம் போடுவதையறிந்து அவனுக்கு ஓர் அடைப்பைக்காரனை அமைத்து அவன் வேலைசெய்யுங் காலத்திலும் மற்றச்சமயங்களிலும் தாம்பூலம் உதவிவரும்படி செய்வித்தார். பிற இடங்களில் பெறுதற்கரிய உபசாரங்களை அங்கே பெற்றமையினால் அத்தலைவனுக்கு மேன்மேலும் வேலையில் ஊக்கம் உண்டாயிற்று.

ஓரிடத்தில் பாவுகற்களின் உட்புறத்தில் சிற்பிகளின் தலைவன் சில சிற்பங்களை அமைத்துக்கொண்டிருந்தான். சாரம் போட்டுக்கொண்டு அதன்மேற் படுத்தபடியே அண்ணாந்து பார்த்துச் சிற்றுளியால் நுட்பமான வேலைகளை மனவொருமையோடு செய்துகொண்டிருந்தான். அடைப்பைக்காரன் கீழே நின்று அடிக்கடி வெற்றிலை மடித்து அவனுக்குக் கொடுத்துக்கொண்டேயிருந்தான். ஒருநாள் வழக்கம்போல் அண்ணாமலை ரெட்டியார் சிற்பிகள் செய்துகொண்டிருக்கும் வேலைகளைப் பார்க்க வந்தார். அவர்கள் தங்களுடைய ஆற்றலால் கல்லைச் சித்திரிக்கும் அருங்கலைத்திறத்தை உணர்ந்து மகிழ்ந்தனர். பிறகு அவர்கள் தலைவன் இருந்த இடத்தில் மெல்லப் புகுந்தார். தம் வரவை அவன் அறிந்தால் அவனுடைய வேலை தடைப்படுமென்று ஓசைப்படாமல் சென்றார். சாரத்தின்மேலிருந்த சிற்பிகளின் தலைவன் படுத்தபடியே அண்ணாந்து திருப்பணிபுரிந்தானாதலின் அவர்

வரவைக் கவனிக்கவில்லை. அப்பொழுது அவன் வழக்கம்போல் தாம்பூலம் போட்டுக்கொள்ளவேண்டி இடக்கையைக் கீழே நீட்டினான். அவனுக்குத் தாம்பூலம் கொடுப்பவன் அந்தச்சமயத்தில் அயலிடம் சென்றிருந்தான். சிற்பி தாம்பூலத்திற்காகக் கையை நீட்டுகின்றானென்றறிந்த அண்ணாமலை ரெட்டியார் தமக்கு அருகில் இருந்த தம் அடைப்பைகாரன் தமக்கு அப்பொழுது கொடுத்த தாம்பூலத்தை வாங்கிச் சிற்பியின் கையிற் கொடுத்தார். சிற்பி கீழ்நடப்பது ஒன்றையும் அறியாமல் தன்னுடைய கைவினையிற் கண்ணாக இருந்தானாதலின் வழக்கம்போலத் தன் அடைப்பைக் காரனால் தரப்பட்ட தாம்பூலமென்றே யெண்ணி அதை வாயிலிட்டு மென்றான். அது மிக உயர்ந்த வாசனைப் பொருள்கள் சேர்த்தமைத்ததாதலின் மெல்லுகையில் பரிமளம் உண்டாயிற்று. அவன், அது தனக்குக் கொடுக்கப்படும் வெறும் வெற்றிலையும் சீவலுமாக இராமல் வாசனைத்தாம்பூலமாக இருத்தலை உணர்ந்து திரும்பிக்கீழே நோக்கினான். ரெட்டியார் மீண்டும் சிற்பி கையை நீட்டும்பொழுது கொடுப்பதற்காகத் தாம்பூலத்தை ஸித்தமாக வாங்கி வைத்துக் கொண்டு நின்றார்.

அவரைக்கண்ட சிற்பி திடுக்கிட்டான்; அவனுக்குண்டான வியப்பிற்கும் அச்சத்திற்கும் எல்லையேயில்லை; உடனே கீழே குதித்தான்; சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினான்; "கருவிலே திருவுடைய செல்வச்சீமானும் சிவபெருமானைப் பிரத்தியட்சமாகக் கனவிற்கண்ட சிவபக்த சிகாமணியுமாகிய நீங்கள் இங்ஙனம் செய்யலாமா? என்பாற் பெரிய அபசாரத்தை ஏற்றிவிட்டீர்களே!" என்று மனந்தடுமாற வாய்குழறக் கூறினான். கலைவல்லாருடைய கலைத்திறத்தையே மதிப்பதில் ஒப்பற்றவராகிய ரெட்டியார், "நான் ஒன்றும் தவறுசெய்ய வில்லையே; தாம்பூலம் போட்டுக் கொள்ளாவிட்டால் ஊக்கம் குறையுமென்று கருதியே கொடுத்தேன்" என்றார்.

சிற்பி:—தாங்கள் வந்ததை நான் தெரிந்துகொள்ளவில்லை. அடைப்பைக்காரன் தான் தருகிறானென்று நினைத்தேன். தாம்பூலத்தின் உயர்ந்தபரிமளம் என்னைக் கீழே பார்க்கச் செய்தது. எவ்வளவோ அடியார்களுக்கும் வறியாருக்கும் அள்ளி அள்ளிக் கொடுக்கும் தங்கள் திருக்கரம் இந்த வேலையையா செய்வது! நான் இடக்கையையல்லவா நீட்டிவிட்டேன்!

அண்ணாமலை ரெட்டியார்:—குற்றமுள்ள வேலை யொன்றும் செய்யவில்லையே. உம்முடைய கைகள் புண்ணியம் பண்ணிய கைகளல்லவா? சிவபெருமானுக்கு ஆலயம் நிருமிக்கும் புண்ணியத்

தொழிலைப் பலமுறைசெய்து பயின்ற பெருமையை உடையன என்பது எனக்குத் தெரியாதா? அக்கைகளால் அமைக்கப்படும் சிற்பம் நெடுங்காலம் மறையாமல் நிற்பதாயிற்றே! அந்தக் கைக்குத் தாம்பூலம் கொடுப்பதனால் ஒரு குற்றமும் உண்டாகாது. உம்முடைய ஊக்கம் இடையிலே தடைப்படக் கூடாதென்று தான் அங்ஙனம் செய்தேன்.

சிற்பி:—பஞ்சத்தினால் வருந்திவந்த எங்களை அருஞ்சுரத்தில் தனி மரம்போல் ஆதரித்த தங்களுடைய உபகாரம் மிகப்பெரிது. அதனோடு இந்தச் செயல் என்பாற் பெரியகடனைச் சுமத்தி விட்டது. தங்களையும் தங்கள் அருஞ்செயலையும் ஏழுபிறப்பிலும் மறவேன். தங்கள் விஷயத்தில் நான் என்ன செய்யப்போகிறேன்! என்னுடைய முழு ஆற்றலையும் கொண்டு எனக்குத் தெரிந்த சிற்ப வகைகளையெல்லாம் காட்டி இந்தக் கருப்பக் கிருகம் முதலியவற்றை அமைப்பேன். எனக்குத் தெரிந்தவற்றைத் தங்களுக்குரிய இந்த இடத்தில் அமைக்க நான் எவ்வளவோ புண்ணியம் பண்ணி இருக்கவேண்டும். எங்களுக்கு ஆகாரத்தையும் உடையையும் அளித்தலே போதும். இனிக் கூலியே வாங்கமாட்டோம்.

பிறகு அவன் ரெட்டியாருடைய அனுமதி பெற்றுக் கருப்பக் கிருகம் முதலியவற்றைப் பிரித்துவிட்டு மீண்டும் சிறப்பாகப் பல அரிய சிற்பங்களோடு அமைத்தான். வெறுங்கூலிக்குச் செய்யாமல் அன்புக்குச் செய்த பணியாதலின் அவை மிக அழகாக அமைந்திருக்கின்றன. ஆலயம் கட்டி முடிந்தவுடன் [1]கும்பாபிஷேகம் சிறப்பாக நடைபெற்றது. அண்ணாமலை ரெட்டியார் பலமுறை வற்புறுத்தியும் சிற்பி கூலிபெற மறுத்துவிட்டான். ஆயினும், தக்கபரிசுகளை அவனுக்கும் மற்றச் சிற்பிகளுக்கும் ரெட்டியார் அளித்துப் பாராட்டினார்.

காவியப் புலவர்களை ஆதரித்துக் காத்த பெருந்தகைமையுடைய [2]அண்ணாமலைரெட்டியார் ஓவியப் புலவர்களையும் ஆதரிக்கும் இயல்பை இவ்வரலாறு நன்கு விளக்கி யாரிடத்தும் எளியராயிருக்கும் அவருடைய உயர்ந்த சீலத்தையும் தெரிவிக்கின்றது. அவருடைய அன்பின் பயனாகவே சிவப்பிரகாசருடைய சொற்சிற்பங்களும் வெங்கனூர்க்கோயிற் கற்சிற்பங்களும் நின்று நிலவுகின்றன.

---

1. கும்பாபிஷேகம் நடைபெற்ற காலம் சாலிவாகன சகாப்தம் 1545-ம் (கி. பி. 1622) வருஷமென்று தெரிகிறது.

2. இவருடைய பரம்பரையோர் வெங்கனூரில் மேற்கூறிய ஆலயப் பணியைச் செய்துகொண்டும் நித்திய நைமித்திகங்களைச் செவ்வனே நடத்திக்கொண்டும் வாழ்ந்து வருகிறார்களென்று கேள்வியுற்றிருக்கிறேன்.




# பாஷைச் சிற்பம்

எஸ். ஜி. எஸ்.

---

உள்நாட்டு மனிதர் இருவர் நகரத்தில் காட்சிச்சாலையில் வைத்திருந்த ஓர் அருமையான பதுமையை நோக்கிக்கொண்டிருந்தார்கள். அவரில் ஒருவர் அதை வியந்து கூறின வார்த்தையைக் கேட்டு மற்றவர், "இதை உண்டாக்குவதற்கு விசேஷ சாமர்த்தியம் வேண்டுமோ? ஒரு பெரிய பளிங்குக்கல்லை எடுத்து, அதில் நமக்கு வேண்டாத பாகங்களைக் கொத்தி நீக்கிவிட்டால், எஞ்சி நிற்பது தானே பதுமையாகிவிடுகிறது?" என்றார்.

உண்மைதான். 'கொத்தி நீக்குவது' என்பதை எவ்வளவு சுலபமாகச் சொல்லுகிறோம்! பளிங்கிலானாலும், பாஷையிலானாலும் அதைச் செய்வது எவ்வளவு சிரமமாக இருக்கிறது! நடையின் அழகென்றும், பாஷையின் தூய்மை என்றும் சொல்கிறார்களே, அவை, இவ்வண்ணம் கொத்தி நீக்குவதனால் மட்டிலுமே ஏற்படுகின்றனவல்லவா?

ஆறுமாதமான ஒரு குழந்தை ஒருவஸ்துவைப் பிடிக்க முயலும் போது அது அந்தவஸ்துவைச் சுற்றிலும் கையை இங்கும் அங்கும் வீசி உடம்பு, கை, கால், முகம் எல்லாவற்றையும் முறுக்கிக் கொண்டு சிரமப்பட்டுப் பிறகுதான் விரும்பும் பொருளை அடைகிறது. நடிக்கும் திறமையில் பழகின ஒருவர் அதே வஸ்துவை எடுத்தால் அந்தச்செய்கை கம்பீரமானதாகவும் அழகு பொருந்தியதாகவும் இருக்கிறது. அவர் தேகத்திலாகிலும் முகத்திலாகிலும் அநாவசியமான ஒரு நரம்புகூட அசைவதில்லை; கேவலம் அச்செய்கைக்கு வேண்டிய சக்தியே செலவழிக்கப்படுகிறது. ரஸிகர்கள் பார்த்து மகிழ்கிறார்கள்.

இந்தக் குழந்தை சுற்றிப்பிரயாசப்பட்டுப் பிடிப்பது போல, சில பெரிய குழந்தைகள் தங்கள் கருத்தை வெளியிடுகிறார்கள்.

ஆனால், சிறு குழந்தை செய்வதைப் பார்த்தால் நமக்கு விளையாட்டாகவும் சந்தோஷமாகவும் இருக்கிறது; பெரிய குழந்தைகள் பேசுவதையும் எழுதுவதையும் பார்த்தால் அவ்விதம் இருப்பதில்லை. மிகவும் பொறுமை வாய்ந்த சிலருக்கு விளையாட்டாகத் தோன்றலாம். ஆனால் ஒருவருக்கும் சந்தோஷம் கிடையாது.

அநாவசியமான அம்சத்தை உபயோகிக்காமல் அவசியமானதை மாத்திரம் உபயோகித்தால் எந்த விஷயத்திற்கும் சிறப்பு உண்டாகிறது. அவசியமான வார்த்தைகளைப் பொறுக்கி உபயோகிக்கும் திறமை பெற்றதனால் மனிதர்களில் கவிகள் சிரேஷ்டராகிறார்கள். பொறுக்குவதென்பது, பொறுக்கி உபயோகிப்பது, பொறுக்கி நீக்குவது என்னும் இரண்டும் கூடிய செயலாகும்.

அவ்விதம் பொறுக்குவதில் வெவ்வேறு நோக்கங்களை முக்கியமாகக் கொள்ளலாம். வசனத்தின் அமைப்பையும் அர்த்தத்தின் பொருத்தத்தையும் கவனிக்கலாம். பொதுவில் வார்த்தைகளைச் சுருக்குவதையும் ஒரு கொள்கையாகக் கொள்ளலாம். ஒவ்வொரு வார்த்தையையும் பற்றி 'இது அவசியந்தானா' எனத் தீர்மானித்து, அவசியமில்லாததை நீக்கிவிட்டால், பதுமையின் உருவம் அமைவது போல வாக்கியம் அமையும். இந்த ஒரு குணத்தினாலேயே வாக்கியத்திற்கு ஓர் அழகு உண்டாவதோடு, அர்த்தமும் நிறைகுளத்து ஜலம்போல வழிந்து நிற்கும். ஒரு தகப்பனாரின் சொத்தைப் பல பிள்ளைகளுக்குப் பங்கிட்டால் ஒவ்வொருவருக்கும் சிறிதளவுதான் கிடைக்கும். அத் தகப்பனாருக்கே இரண்டு மூன்று பிள்ளைகள் மாத்திரம் இருந்தால் ஒவ்வொருவருக்கும் அதிகம் கிடைக்கும். அவ்விதமே வார்த்தைகள் சுருங்கியிருக்கும் வாக்கியத்தில் அர்த்தம் நிறைந்திருக்கும்.

"பிரான்மலைத்தேவன் ஒருவருடைய பணப்பையைக் கண்டால், அவர் அதைப் பிற்பாடு காணுவதில்லை" என்றால் பிரான்மலைத் தேவனின் கைச்சுறுசுறுப்பைப் பற்றியும், அவன் எவ்வளவு முறை சிறைச்சாலை போயிருக்கிறான் என்பதைப்பற்றியும் இரண்டொரு பக்கம் விஸ்தரித்து எழுதவேண்டியதில்லையல்லவா?

"கேசவன் மிகவும் கொடியோன். சதாகாலமும் மற்றவர்களுக்குத் தீங்கிழைப்பதே அவன் எண்ணம். அவனோடு சகவாசமே கூடாது" என்று சொல்லலாம்; அல்லது "கேசவனா! அவனைப் பாம்பு தீண்டினால் பாம்பு இறக்கும்" என்றும் சொல்லலாம். இந்த வாக்கியத்தில் வார்த்தையைச் சுருக்குவதில் போக்கையும் மாற்றும்படியாயிற்று.

இவ்விதம் சுருங்கச்சொல்வதில் அவர்வர்களுடைய மனோ பாவத்தின்படி சாதுர்யத்தையும் காட்டலாம்.

"மோட்டார்ப் பந்தயங்களில் தவிராமல் போட்டியிட வரும் மாதவனைச் சிலநாளாகக் காணோமே? என்ன காரணம்?" என்று ராமன் கேட்கிறான்.

அதற்குக் கிருஷ்ணன் சாதாரணமாகப் பதில் சொல்வது வருமாறு: "ஒருநாள் அவன் பாதையில் போய்க்கொண்டிருக்கையில் ஒரு ரயில்வண்டி செல்வதைப் பார்த்து, ஒரு திறந்தவாயிலைக் கடப்பதற்கு அதனுடன் பந்தயம் வைத்துக்கொண்டான். மோட்டாரை வேகமாக ஓட்டினான். ஆனால் ரயிலும் அதே வேகமாக வந்துவாயிலண்டை இரண்டும் முட்ட மாதவன் இறந்துவிட்டான்" என்பது. ஆனால் சுருக்கிச்சொன்னால், "ஒரு வாயிலைக் கடப்பதற்கு ரயில் வண்டியோடு பந்தயம் வைத்தான். கர்மாந்திரம் இந்த மாசம் 17-ஆம் தேதி" என்னலாம்; அல்லது, "இன்ஷ்யூரன்ஸ் பணத்தை வார்சுகள் வாங்கியாய்விட்டது" என்னலாம்.

சிறந்த நடைக்கு இவைகள் திருஷ்டாந்திரம் என்று நான் கூறவில்லை; என்னுடைய தாத்பர்யத்தை வெளியாக்குவதற்கு மாத்திரமே இவைகளை எடுத்து எழுதினேன்.

வார்த்தைகளைச்சுருக்கி, அர்த்தத்தை நிரப்பிய உதாரணங்கள் எத்தனையோ நம் கவிகளிடத்தில் காணலாம். ஆனால் கவிகளை எல்லாராலும் அனுபவிக்க முடியாது. எல்லாராலும் முதல் வகுப்பு வண்டியில் பிரயாணம் செய்ய முடியாது. அதற்குத் தகுந்த ரூபாய் கொடுக்கும் சக்தியுள்ளவர்களே அவ்விதம் செய்ய முடியும். ரூபாயைச் சம்பாதித்தாகவேண்டும். கவிகளின் இனிமையை அனுபவிக்கும் திறமையும், படித்து நம் மனதைப் பண்படுத்திச் சம்பாதிக்கவேண்டும்.

உயர்ந்த படிப்பு இல்லாதவர்களும் சாதாரணப் படிப்புப் பெற்றதனால் வசனநடையில் இனிமையைப்பெறுவதற்கு யோக்கியர்களாகிறார்கள். சிறிது காலத்துக்கு முன்வரையில் தமிழில் உள்ள புத்தகங்கள் அநேகமாய் நீலகிரி மலையின் ரயில் தொடருக்கு ஒப்பிடும் விதம் இருந்தன. முதல் வகுப்பில் போகும் யோக்யதையற்றவர்கள் மூன்றாம் வகுப்பில் அடைபட்டுச் செல்ல வேண்டுமே தவிர, இதற்கும் அதற்கும் நடுத்தரமான நிலைமை கிடையாது. குறிப்பிட்ட இடத்தையோ—அர்த்தத்தையோ—முடிவில் அடைகிறோம் என்கிற ஒரு திருப்தியைத்தவிர்த்து மார்க்கத்தில் இன்பத்துடன் சென்றோம் என்று சொல்வதற்கு இடம் இல்லை.

இவர்களுக்கு ஏற்பட்ட தமிழ்நடை பத்திரிகைகளில் சவரன் விலையும் சந்தாதார்க்கு அறிக்கைகளும் தெரிவிக்கப்படும் நடையே.

இப்போது சிலகாலமாக அது மாறி, எளிய தமிழ்ப்பத்திரிகைகளுக்குள் சிலவற்றிலாவது ரஸமுள்ள விஷயங்கள் அமைந்திருப்பதுடன், எவ்விதமாகிலும் அர்த்தத்தை வெளியிட்டால் போதுமென்றெண்ணுமல், வெளியிடும் விதத்தையும் அவை கவனித்து வருகின்றன.

அவ்விதமான பத்திரிகைகள் வாசிப்பவர்கள், அதிக பாண்டித்தியம் பெற்றுக் கவிகளை அனுபவிக்கும் யோக்யதை பெற்றவர்களல்லாவிடினும், மழையடித்தால் இருள்சூழாமல் கண்ணடி ஜன்னல்களும், வெயிலில் உருகாமல் எலக்டிரிக் விசிறிகளும் பெற்ற இரண்டாம் வகுப்புப் பிரயாணிகளுக்குச் சமமாக, சந்தோஷத்துடன் யாத்திரை செய்வதல்லாமல், சில சமயம் பக்கத்திலிருக்கும் முதல்வகுப்பு வண்டியை எட்டிப்பார்க்கவாகிலும் துணிகிருர்கள்.

சிலநாட்களுக்கு முன், "இது போதுமோ, இன்னும் வேணுமோ?" என்ற பெயருடன் ஒரு கிராமபோன் ரிகார்டு வெளியாயிற்று. அதிலடங்கிய பாட்டு ஒரு பரிகாசம். அச்சமயம் ஓர் ராஜாங்கத்தால் அந்நாட்டிற்கு உபகாரமுண்டா இல்லையா என்ற ஒரு வாதம் இருந்தது. ஓர் ஆசிரியர் யாதோர் உபகாரமும் இல்லை என்ற கட்சியைச் சேர்ந்தவர் என்பது யாவரும் அறிந்த விஷயம். அவ்விதமிருக்க அவர் ஒரு நாள் ஒரு பத்திரிகையில் எதிர்க்கட்சியைச் சேர்ந்த அபிப்பிராயம் கொண்டவர்போல, இன்ன விதமான உபகாரங்கள் உண்டாயிருக்கின்றன என்று வழக்கப்படியுள்ள ஜாபிதாவை வரைந்தனர். எழுதும் விதத்திலேயே வாசிப்பவர்களுக்கு நம்பிக்கை உண்டாகாதவிதமாக, மாணுக்கன் பாடம் செய்து ஒப்பிக்கும் விதம் அது உயிரில்லாமல் எழுதப்பட்டிருந்தது. முடிவில் ஒரு வாக்கியம் மாத்திரம் அவருடைய சொந்த அபிப்பிராயத்தைத் தெரிவிக்கும்படி காட்டினுர்: அந்த வாக்கியம், "இது போதுமோ, இன்னும் வேணுமோ?" என்பது. எதிராளியை வெட்டுவதற்குத் தாம் ஓர் ஆயுதமாக உண்டாக்கி வைத்திருந்த ஒரு பரிகாச வசனத்தை உபயோகித்து விட்டார். வார்த்தையைச் சுருக்கி அர்த்தத்தை வழியச்செய்து விட்டார்.

வசனநடை மேன்மையடைவதற்குப் பல விதத்தில் நாம் முயற்சி செய்யலாம். அதற்கு முக்கியமாகச் சோபை கொடுப்பது அநாவசியமான வார்த்தைகளை நிர்த்தாட்சண்யமாக நீக்குவதே.

# முதல் துயரம்

தேசிக விநாயகம்பிள்ளை

---

பிள்ளை :

1. முல்லை பூத்ததம்மா ! - இருவாட்சி
மொட்ட விழ்ந்ததம்மா !
மல்லி கைப்பூவும்—மலர்ந்துநல்
வாசம் வீசுதம்மா !

2. தும்பி பாடுதம்மா !—கிளிபயில்
சோலை தேடுதம்மா !
தம்பி எங்கே அம்மா ?—விளையாடத்
தனியே நின்றேனம்மா !

3. படரு முந்திரியில்—கனிமிகப்
பழுத்து திருதம்மா !
தொடரும் வேனிலும்—நமக்கிங்கே
தொடங்கி விட்டதம்மா !

4. சின்னஞ் சிறுபிஞ்சு—வெள்ளரியில்
செழித்தி ருக்குதம்மா !
கன்னிக் காய்பறிக்கத்—தம்பியையும்
காணே மேயம்மா !

5. அம்பொன் மாலைகள்—செடிபல
அணிந்து நின்ற வம்மா !
தம்பி யில்லாமல்—அழகவை
தருவ தில்லையம்மா !

6. புனைந்த சித்திரம்போல்—வண்ணத்திப்
பூச்சி சுற்றுதம்மா !
துணைவ னில்லாமல்—யானுமதைத்
தொடர்ந்து செல்லேனம்மா !

7. வளர்த்த ரோஜாவும்—புதுமண
மகிழ்ச்சி காட்டுதம்மா!
அழைத்து வாராயம்மா!—தம்பியும்
அறிந்தி டானோஅம்மா?

தாய்:

8. யார ழைத்தாலும்—அவன்செவிக்
கெட்ட மாட்டாதே;
பாரில் நம்மையவன்—இனிவந்து
பார்க்க மாட்டானே!

9. வாச மலரைப்போல்—வளர்ந்தவன்
வாடி விட்டானே!
ஈசன் சந்நிதியில்—விளையாடி
இருக்கின் றானப்பா!

பிள்ளை:

10. குயிலைத் தேடானோ?—கிளியொடு
கொஞ்ச வாரானோ?
மயிலை நோக்கானோ?—நம்மையெலாம்
மறந்தும் போனானோ!

11. வேனிற் காலமெலாம்—நம்மையிங்கு
விட்டி ருப்பானோ?
யானு மென்னசெய்வேன்!—தனித்தினி
இருப்ப தெப்படியோ!

12. காலை மாலைதனில்—சிற்றோடைக்
கரையில் சோலைதனில்
சேலச் செல்வனொடு—சுற்றிநிதம்
திரிதல் போச்சுதையோ!

13. இனிய கதையெலாம்—அவனைப்போல்
யாவர் சொல்வரம்மா!
கனியைச் செந்தேனை—இனிஎந்தக்
காலம் காண்பேன்ஐயோ!




# மலையாள நாடகம்

ஒ. ப. தேசிகன்

---

கண்ணனூருக்கு வடக்கே பதினாறுமைல் தூரத்திலுள்ள ஏலிமலை யென்னும் குன்றை வடக்கெல்லையாகவும் கன்னியா குமரியைத் தெற்கு எல்லையாகவும் கிழக்கு மேற்கில் மேற்குத் தொடர்ச்சி மலையையும் அரபிக் கடலையும் எல்லையாகவும் கொண்ட நிலப்பரப்பே மலையாளப் பிரதேசம் என்று அழைக்கப்படுகிறது. இம்மலையாளச் சீமையானது இந்தியாவின் ஏனைய நிலப்பகுதி களைக் கருதுமிடத்து மிக்க அபூர்வமான குணவிசேஷம் பொருந் தியதாக இருக்கிறது. இதனுடைய சீதோஷ்ண நிலைமையும், சமூக ஆசாரப் பழக்கவழக்கங்களும், பண்டைப் பெருமையும், கலைப் பெருக்கும் இந்தியாவில் பல் வேறிடங்களிலுள்ள நிலைமை களுக்கும், வாழ்க்கை நெறிகளுக்கும் பெரிதும் மாறுபட்டனவாக இருக்கின்றன. மேலே குறிப்பிட்ட அம்சங்கள் ஒவ்வொன்றிலும் மலையாள நாட்டிற்கும் மற்ற இடங்களுக்கும் இடையில் காணப் படும் ஒற்றுமை வேற்றுமைகள் எவ்வளவு விரிந்தனவாக இருந்த போதிலும், நாடகங்களை நடிக்கும் முறையிலேயே இவைகளுச்குள் காணப்படும் பேதமானது மற்ற யாவற்றினும் சிறப்பாகப் புலப் படுகிறது.

மலையாள நாடகங்களுக்கு அப்பிரதேசத்தில் 'கதைக்களி' அல்லது 'சாக்கியர்கூத்து' என்னும் பெயர் வழங்குகிறது. இந்நாட கங்களை நடிப்பதற்காகத் தேர்ந்தெடுக்கப்படும் நாடகபாகங்கள் யாவும் பெரும்பாலும் இராமாயண மஹாபாரத காவியங்களி லிருந்தே திரட்டப்படுகின்றன.

கதைக்களி நாடகங்களின் சிரேஷ்டமான அமிசங்களை இந்தியாவில் பல இடங்களிலும் நடிக்கப்பெறும் நாடகங்களுடன் ஒப்பிட்டுப் பார்க்குங்கால் நமது கவனத்தை ஈர்த்து வியப்பை யூட்டக் கூடிய புதுமையான பல விஷயங்கள் அதிலடங்கியிருப்பதையும் தற்கால வழக்கிலுள்ள நாடகமுறைகளின் போக்கைத் போன்றதாக இராமல், இரண்டொரு முக்கியமான அமிசங்களில் மாத்திரமே அவைகளைப் போன்றதாக இருப்பதையும் அறியலாம். அப்படிப்பட்ட விசேஷங்களில் நடிகர்களின் வேஷமும், அதன் பொருட்டு அவர்கள் அணியும் ஆடைகளும் குறிப்பிடத் தக்கவைகளாகும்.

கதைக்களியில் தோன்றும் நாடக பாத்திரர்கள் அனைவரும் இதிகாஸ புருஷர்கள்; அவர்கள் தெய்வீகசம்பந்தம் வாய்ந்த புருஷர்களின் பாத்திரங்களையே நடித்துக் காட்டவேண்டியிருக்கிறது. ஆதலின் அத்தகைய நாடக பாத்திரங்களில் தோன்றுகிறவர்கள் தமது வேடத்திற்கு எவ்வகையிலும் பொருத்தமான ஆடையாபரணங்களையே அணியவேண்டும். கதைக்களியைத் தவிர மற்றச் சாமானிய வகுப்பு நாடகங்களில் நடிகர்களின் உடைகள் யாவும் சற்றேறக்குறைய ஒரே ரீதியாக யிருக்கும். அவர்கள் புராண புருஷர்களாயிருப்பினும், அல்லது 'அயன் ராஜபார்ட்டு' வேஷக்காரர்களாயிருப்பினும் இவை யெல்லாவற்றிற்கும் ஒரே விதமான ஆடையையே அணிந்திருப்பார்கள். கிருஷ்ண பகவான், இராவணன், அர்ஜுனன், விக்ரமாதித்யன், சந்திரகுப்தன் முதலிய வேஷங்களில் எதைத் தரித்தபோதிலும், உடையளவில் சில முக்கியமான வித்தியாஸங்களைத் தவிர மற்ற விதங்களில் சாதாரணமாக ஓர் அரசன் அணிந்திருப்பதைப் போன்ற ஆடைகளையே இவ் வேஷதாரிகள் அணிவார்கள்.

ஆனால் கதைக்களியிலோ, நடிகர்களின் வேஷமும், தோற்றமும் நமது தேவாலயங்களில் கோயில் கொண்டிருக்கும் உற்சவ மூர்த்திகளுக்கு அலங்காரம் செய்திருப்பவற்றைப் போன்றிருக்கின்றன. தாங்கள் வழக்கமாக அணியும் ஆடைகளைத் தவிரக் கிரீடங்கள், குண்டலங்கள், பதக்கங்கள் முதலிய ஆபரணங்களையும் அவர்கள் அணிந்திருப்பார்கள். வேஷதாரி ஓர் ராக்ஷதனைப் போல நடிக்கவேண்டியிருப்பின், நடிகனுக்கு 'தம்ஷ்ட்ரங்கள்' (கோரைப்பற்கள்) கூடப் பிரத்தியேகமாகத் தயாரித்துக் கொடுக்கப்படும். அப்பொழுது அவனுடைய உடைகளும் தோற்றமும் சாதாரணமாக நாம் கோயில்களில் காணும் துவார பாலர்களுடையவற்றைப் போன்றனவாக இருக்கும்.

இஃதொன்று மாத்திரமே குறிப்பிடத்தக்க வித்தியாஸமாக இருப்பினும், நவீன 'டிராமாக்'களினின்றும் கதைக்களியை வேறு படுத்திக் காட்டும் சிறப்பியல்கள் வேறுபல உள.

மலையாள நாடகத்தில் நடிகனுடைய திறமை யனைத்தும் அவன் தனது நாடக பாகத்தை மௌனமாகவும் ஏற்ற பாவங்க ளுடனும் அபினயங்களுடனும் நடித்துக் காட்டுவதோடு முற்றுப் பெறுகிறது. அதைத் தவிர அவன் வேறொன்றும் செய்வதில்லை. பின்பாட்டுக்காரர்களும், மிருதங்கம் முதலிய வாத்தியக்காரர்களும் அவனுக்குப் பல வழிகளிலும் உதவிபுரிகிறார்கள்; ஆயினும் நடிகன் அங்கசாடையினாலும், முகத்தோற்றத்தினாலும், தனது பாத் திரத்தை மிகவும் அற்புதமாக நடித்துக்காட்டுவதொன்றிலேயே தனது முழுக்கவனத்தையும் செலுத்துவான். அவன் தன் வாயி னால் ஓர் அக்ஷரத்தைக்கூட உச்சரிக்க மாட்டான். கதைக்களி யின் விசேஷ மனைத்தும் இதிலேதான் அடங்கி யுள்ளது.

இந்த முக்கியமான அமிசத்தைக் கருதுகையில் கதைக்களி நாடகங்களை, தற்கால நாடக அரங்கத்தினின்றும் சிறிது சிறிதாக மறைந்து கொண்டுவரும் பொம்மலாட்டங்களுக்கு ஒருவாறாக ஒப்பிடலாம். சாமானிய நாடகங்களில் நாடக பாத்திரர்கள், முறையே பாட்டு, நடிப்பு, அபினயம், சம்பாஷணை ஆகியவைகளுள் ஒவ்வொன்றிலும் தமது சாமர்த்தியத்தை வெளிப்படுத்திக் காட்ட வேண்டியவர்களாக இருக்கிறார்கள். ஆதலின் மேற்கூறிய ஒவ்வோர் அமிசத்திலும் புகழையும் கீர்த்தியையும் பெறவேண்டுமாயின்—மஹாஜனங்கள் ரஸிகர்கள் ஆகியவர்களுடைய பாராட்டுதலுக்குத் தம்மைத் தகுதியுள்ளவர்களாகச் செய்துகொள்ளவேண்டுமாயின்—அதன் பொருட்டு மிகுந்த பிரயாஸையையும் ஊக்கத்தையும் அவர்கள் மேற்கொள்ளவேண்டும்.

ஆனால் கதைக்களியிலோ பின்பாடகர்களும் லயவாத்தியக் காரரும் வழக்கம்போல் தமது வேலைகளைக் கவனித்துவரும் போது, நாடக அரங்கத்தில் நடிகனானவன் தன் சிந்தை முழுவதை யும் நாட்டிய சாஸ்திரம் ஒன்றிலேயே செலுத்தவேண்டியிருக் கிறது. இசைக்கருவியாளர், பின்பாடகர், தாளக்காரர் ஆகியவர் களில் ஒவ்வொருவனும் தன்னளவிற்குக் குறிப்பிடப்பட்டுள்ள விஷயங்களில் கவனத்தைச் செலுத்தினால் போதுமானது. பாடகர் கள் கீர்த்தனைகளையும், விருத்தங்களையும் உற்சாகமாகப் பாடிக் கொண்டே வருகையில் அவைகளின் தாத்பர்யத்தையும், முக்கிய சாரங்களையும் மட்டுமேயன்றி அவைகளின் வாயிலாக வெளிப்

படுத்தவேண்டிய பாவங்களையும் அந்த அந்த ரஸத்திற்கு ஏற்ற விதமாக எடுத்துக்காட்டி அதன்மூலம் நாடகாபிமானிகளைப் பரவசப்படுத்துவது நடிகனின் தொழிலேயாகும்.

கதைக்களி நாடகங்களின் தோரணையும், அவற்றை நடித்துக் காட்டும் போக்கும் பெரும்பாலும் பொம்மலாட்டங்களை அனுஸரித்ததாகவே யிருப்பதாகக் கூறிவிடலாம். மலையாளக் கூத்துகளில் திரைக்காட்சி யென்பது ஒன்றுமே கிடையாது. ஏனெனில் நாடகத்தில்தோன்றும் நாயகனே தன்னுடைய நடிப்புத்திறமையின் விசேஷத்தினால் நாடகாபிமானிகளின் உள்ளத்தில் அந்த அந்தக் காட்சிகளினால் தோற்றுவிக்கக் கூடிய மனோவுணர்ச்சியையும், நினைவையும் எழுப்பி, அதன் மூலம் தனது சாமர்த்தியத்தையும், தனது நடிப்பின் மேன்மையையும் குறித்து அவர்கள் நல்லபிப்பிராயங் கொள்ளுமாறு செய்விக்க வேண்டும். சந்தர்ப்பத்திற்கேற்ற இயற்கைக் காட்சிகளாலும், செயற்கைக் காட்சிகளாலும் நாடக அரங்கம் ஜோடிக்கப்படமாட்டாது. ஆனால் அவைகள் இராத குறையை உணராவண்ணம் நடிப்பதிலேயே அவர்களுடைய திறமை அடங்கி யிருக்கிறது.

உதாரணமாக: பகாசுரனை வதம் செய்யும்பொருட்டுப் பீமஸேனன் கிளம்புவதாக வைத்துக் கொள்ளுவோம். பீமஸேனனாக நடிப்பவன் பகாசுரனைச் சந்திப்பதற்கு முன் தோன்றும் ஆரண்யக் காட்சியில், அவ்வனத்தின் பயங்கரமான தோற்றத்தையும், மற்றும் பல இயற்கைக் காட்சிகளையும்பற்றிய நினைவைத் தன் முகக்குறிப்பினாலும் அரைகுறையான உச்சரிப்புக்களாலும் நடித்துக்காட்டுவதன் மூலமாகக் காண்போரின் உள்ளத்தில் உண்டாக்குவதற்கு முயலவேண்டும்.

அதேமாதிரியாகக் குசேலனென்னும் ஏழைப்பிராம்மணனாக நடிப்பவன் கிருஷ்ண பரமாத்மாவின் தரிசனத்திற்காக விரைந்து செல்லுங் காலத்தில், துவாரகாபுரியின் இணையற்ற மாட்சியையும் காம்பீர்யத்தையும், அதிலுள்ள உன்னதமான மாளிகைகளையும் ஒவ்வொரு மூலைமுடுக்கையும் கூடத் தான் கண்ணுற்றதும் எத்தகைய உணர்ச்சி அடைகிறானென்பதைத் தன்னுடைய நடிப்புத் திறமையாலும் பாவ விசேஷங்களாலும் நன்கு விவரித்துக் காட்ட வேண்டும்.

கதைக்களியின் ஒவ்வொரு புதிய காட்சியும் ஒரு சுலோகத்துடனேயே ஆரம்பமாகும். பின்பாடகர்கள் திரைக்குப் பின்னால் நின்றுகொண்டு அந்தச் சுலோகத்தைப் பாடுவார்கள்.

அந்தச் சுலோகத்தில் அடுத்துவரும் காட்சியின் முக்கிய சாராம்சம் அடங்கியிருக்கும். அதன் பிறகு திரைவிழுந்தவுடன் நடிகர்கள் நாடகாபிமானிகளின் முன் தோன்றி தமது நடிப்புத்திறமையால் அவர்களை மகிழச்செய்வார்கள்.

மகத்தான இக்கலையின் மேன்மையையும், இதை நடித்துக் காட்டுவதிலுள்ள அருஞ்சிரமத்தையும், கலா நுட்பத்தையும் கருதுகையில் அதற்கேற்ற ஊதியமும், ஆதரவும் நடிகர்களுக்குக் கிடைப்பதில்லை என்று கூறப்படுவதைக் கேட்க வருத்தமே மேலிடு கிறது. மலையாள தேசத்திலேயே அதனுடைய வியாபகம் நாளுக்கு நாள் குறைந்துவருகிறது. ஆனால் மலையாளநாடு இது காலை பல வகைகளிலும் அதிதீவிரமாக முன்னேறிவருகிறது. நாகரிகநற்கலைகள் ஒவ்வொன்றிலும் அங்கே மறுமலர்ச்சிதோன்றிப் புத்துயிர் பெற்று வரும் இதுகாலை பிரசித்திபெற்ற மலையாளக் கவிசிரேஷ்டரான ஸ்ரீமான் வள்ளத்தோல் நாராயண மேனேன் அவர்களது தலைமையில் ஊக்கம் மிகுந்த வாலிப ரஸிகர்களின் அருமுயற்சிகளின்பயனாக, மலையாளத்தின் பூர்விக நாடகங்களும் புத்துயிரும் புத்தொளியும் பெற்றுச் சமீபகாலத்தில் மிகச்சிறந்து விளங்கக் கூடும் என்று நம்புவதற்குப் பெரிதும் இடமிருக் கிறது.

---

## நீர்க்குள் சுரங்க வழி

லிவர்பூல் நகரத்தையும் பெர்க்கன் ஹெட் பட்டணத்தையும் இணைக் கும்படி, ஆற்றின் அடியில் 36 அடி அகலமும் $2\frac{1}{3}$ மைல் நீளமும் கொண்ட பிரமாண்டமான, தண்ணீரைத் துளைத்துச் செல்லும் ஒரு சுரங்கவழி கட்டி முடிக்கப்பெற்றிருக்கிறது. இதனை மன்னர்பெருமான் ஜூலை 18-ம் தேதி திறந்துவைப்பார். 1925-ல் இந்தவேலை ஆரம்பமானது. 70 லட்சம் பவுன் இதன் பொருட்டுச் செலவாயிருக்கிறது. சுரங்கம் முற்றிலும் நீர்த்தடை செய்யப்பட்டிருக்கிறது. நான்கு ரயில் வண்டித் தொடர்கள் ஏககாலத்தில் இத னூடே சொல்லலாம். முன்னர் இந்நதியைக் கடப்பதற்கு முக்கால்மணி நேரம் சென்றது. இப்போழுது 7 நிமிடத்தில் கடந்துவிடலாம். சுரங்கத் தினுள் நேரக்கூடும் அபாயங்களை நொடிப்பொழுதில் அறிந்து அதனைத் தடுப்பதற்கான எண்ணற்ற கருவிகள் சுரங்கத்தின் வெளியில் ஒரு தனி அறையில் அமைக்கப்பட்டிருக்கின்றன.

# சரித்திரம்

## ஐயாயிரம் வருஷங்களுக்கு முந்திய சிந்து தேச நகரம்

திரிவிக்கிரம நாராயணன், பி. ஏ.

---

பரதகண்டத்தில் முதன்முதலில் நாகரிகமற்ற ஜாதியார் வசித்து வந்தாரென்றும், அவர் இருந்த இடத்தில் திராவிடரும் ஆரியரும் வந்து குடியேறினரென்றும் நமது சரித்திரங்கள் தொடங்குகின்றன. எகிப்து, சுமேரு, கிரீஸ் முதலிய தேசங்கள் சிறப்புற்றிருந்த காலத்தில் நமது நாட்டில் நாடு நகரங்களில்லை என்று நினைத்து வந்தோம்.

ஆனால் சில வருஷங்களுக்கு முன் சிந்துதேசத்தில் மொகஞ்சொ-தரொவிலும், பஞ்சாபில் அரப்பாவிலும் (*Mohengo-Daro, Harappah*) கிடைத்த சில முத்திரைகளிலிருந்து பற்பல புதிய விஷயங்கள் வெளிவந்திருக்கின்றன. மொகஞ்சொ-தரொ[1] கராச்சிக்கு வடக்கே 270 மைல் தூரத்தில் சிந்து நதியின் மேற்குக் கரைக்குச் சமீபத்தில் முள்மரங்களடர்ந்த ஒரு குன்று. புராதனமான நகரமொன்று இங்கே இருந்தது என்று மட்டும் சுற்றுப் பக்கங்களில் கதை வழங்கிவந்தது.

அந்தக் குன்றின் உச்சியில் பாழடைந்த புத்தஸ்தூபம் ஒன்றிருப்பதாக அறிந்து அதைப் பார்வையிடும்பொருட்டுக் காலஞ்சென்ற ராகல் தாஸ் பானர்ஜி 1921-இல் அங்கே சென்றார். இதுவரை கண்டுபிடிக்கப்படாத பண்டைக்காலச் சின்னங்களிருப்பதனால் அது ஆராய்ச்சிக்குத்தக்க இடம் என்று கருதினார். அதன் பிறகு சிலாசாஸன பரிசோதனசாலையின் தலைவரான ஸர் ஜான் மார்ஷலும், அவருடைய உத்தியோகஸ்தர்களும் (M. S. வாட்ஸ், K. N. தீக்ஷித், E. J. H. மெக்கே முதலியவர்) மொகஞ்

---

1. மொகஞ்சொ-தரோ வடமேற்கு இருப்புப்பாதையில் (*N. W. R.*) டோக்ரி (*Dokri*) ஸ்டேஷனிலிருந்து 8 மைல் தூரத்திலிருக்கிறது.

சொ-தரோவுக்கு வந்து, புத்தஸ்தூபியைச் சுற்றிலுமுள்ள நிலத்தைத் தோண்டி எடுக்கச்செய்து அங்கே கண்டுபிடிக்கப்பட்டவைகளை வெளியிட்டிருக்கிருர்கள்.

அவைகளிலிருந்து, குறைந்த பக்ஷம் ஐயாயிரம் வருஷங்களுக்குமுன் சிந்துநதிச் சமவெளிக்கும் சுமேரு பேபிலோனிய தேசத்துக்கும் போக்கு வரவு இருந்தது என்று அறியப்படுகிறது. பேபிலோனியாவின் கட்டடங்களில் கிடைத்துள்ள முத்திரைகளும் மற்றப் பொருள்களும் மொகஞ்சொ-தரொவிலுள்ளவைகளைப் போலவே இருப்பதாலும், பேபிலோனியாக் கட்டடங்களின் காலம் நிர்ணயிக்கப்பட்டிருப்பதாலும், மொகஞ்சொ-தரோவில் குடிகள் வாழ்ந்திருந்த காலம் கி. மு. 2750 என்று ஊகிக்கப்படுகிறது.

இப்பழைய நகரம் பாழடைந்து மண்ணுல் மூடப்பட்ட இடத்தில் வெகு காலத்துக்குப்பின் புத்தஸ்தூபி கட்டப்பட்டது. இது ஸாஞ்சியிலும் தக்ஷசிலையிலுமுள்ள ஸ்தூபிகளைப்போல அழகாக அமைக்கப்பட்ட தென்பதற்குரிய அறிகுறிகள் ஒன்றும் இல்லை. ஸ்தூபியில் அகப்பட்ட நாணயங்களிலிருந்து குஷான் வமிசத்து வாசுதேவன்காலத்தில் (கி. பி. 200) பௌத்த சன்யாசிகள் இங்கே இருந்தார்களென்று தெரிகிறது.

இதற்குக் கீழே அடுக்கடுக்காய்ச் செங்கற் கட்டடங்கள் இருக்கின்றன. ஒவ்வோர் அடுக்கும் வெவ்வேறு காலத்தில் கட்டப்பட்டிருக்க வேண்டும். ஐயாயிரவருஷங்களுக்கு முந்திய செங்கற்களும் அவைகளால் நிர்மாணிக்கப்பட்ட சுவர்களும் தற்காலத்தவைகளை விட நேர்த்தியாகத் தோன்றுகின்றன. கற்கள் இன்றும் உறுதியாயிருக்கின்றன வென்ருல் பண்டைக்காலத்துச் சிந்துதேசத்தவர்களின் சிற்பத் திறமையை அறியலாம். சுவர்கள் ஒன்றுடன் மற்ருென்று சேர்ந்திருக்கும் மூலைகளிடையில் கத்தியின் முனைகூடச் செல்லுவதரிது. பிற்காலங்களில் சுற்றிலுமுள்ள ஜனங்கள் இங்குள்ள கற்களை வெகு தூரம் எடுத்துச் சென்று வந்தார்களாம். புத்தஸ்தூபியின் கீழ்வரிசைகளில் கூடப் பழங்கற்கள் காணப்படுகின்றன. பௌத்தர்களுக்குரிய கற்கள் மேல்வரிசைகளில் வேருகத் தெரிகின்றன.

ஸ்தூபிக்கு மேற்கே 39 அடி நீளமும் 23 அடி அகலமும் உள்ள பெரிய தண்ணீர்த்தொட்டியொன்று வீடுகளின் மத்தியில் இருக்கிறது. வடக்கிலிருந்தும் தெற்கிலிருந்தும் கீழே இறங்கப் படிகள் இருக்கின்றன. சுற்றிலுமுள்ள வீடுகளின் தரை தென்மேற்கே வாட்டம் செய்யப்பட்டு ஓரங்களில் ஜலதாரைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இவை தெருக்களின்கீழே கற்களால் மூடப்

பட்ட கால்வாய்க்குள் ஓடிக் கலந்தன. அக்காலத்திலேயே அசுத்த நீரையும் மழைநீரையும் வெளியே கொண்டுபோக ஏற்பாடு செய்திருந்தது கவனிக்கத்தக்கது. கிழக்கு அறைகளுள் ஒன்றில் வட்டமாகச் செங்கற்களால் கட்டப்பட்ட கிணறு ஒன்று இருக்கிறது. எல்லா வீடுகளிலும் சிறிய சிறிய அறைகள் காணப்படுகின்றன. இவை குளிப்பதற்காக உபயோகப்பட்டிருக்க வேண்டும். மொகஞ்சொ-தரோ வாசிகள் ஸ்நான பானத்தில் சுத்தமாயிருந்தவர்கள் போலும்.

மொகஞ்சொ-த்ரோவின் வீடுகளும் தெருக்களும் தற்கால நகர அமைப்புப்படி நேர்நேராகவும் சமதூரத்திலும் அமைக்கப்பட்டிருப்பது மிகவும் வியக்கத்தக்கது. ஆனால் வீடுகளில் தாழ்வாரமும் தோட்டமும் இல்லை. முற்றமும் பெரியதல்ல. வீடுகள் மாடியுடன் கட்டப்பட்டவை. மாடிப்படிகள் தெருவிலிருந்து செல்கின்றன. இவ்வீடுகளில் ஜனங்கள் நெருக்கமாகவே குடியிருந்திருக்கவேண்டும். சண்டைசச்சரவுகளில்லாமலிருக்க அவர்கள் ஒற்றுமையும் நல்லொழுக்கமும் உடையவர்களாக இருந்திருக்க வேண்டும்.

வீட்டுச்சுவர்களில் சித்திர வேலைகள் இல்லை. சாந்து பூசப்பட்டதாகக் கூடத் தெரியவில்லை. சுவர்களின் இடையிடையே துவாரங்கள் காணப்படுகின்றன. அவைகளில் மரவிட்டங்கள் வைக்கப்பட்டு அழிந்து போயிருக்கவேண்டும். அந்தக்காலத்தில் சிந்து தேசம் பாலைவனமாக இல்லாமல் செழிப்பாக இருந்தது என்று கூறற்குரிய காரணங்கள் பல உண்டு. இங்கே கிடைத்த முத்திரைகளில் பொறித்திருப்பவைகளில் யானை, காண்டாமிருகம், புலி முதலியவை காணப்படுகின்றன. மணல் வெளியில் வசிக்கும் ஒட்டகம், சிங்கம் முதலியவைகளின் சித்திரங்கள் இல்லை. ஆகவே அந்த நாளில் இப்பிரதேசத்தில் உயர்ந்த மரங்களுள்ள அரணியங்களிருந்தனபோலும். மழை நன்றாகப் பெய்துவந்திருக்க வேண்டும்.

அவ்விதம் சுபிக்ஷமாயிருந்த நாட்டின் நாகரிகம் மொகஞ்சொதரோவில் கிடைத்துள்ள பின்வரும் பொருள்களிலிருந்து ஒருவாறு விளக்கமாகிறது.

(1) முத்திரைகள்—நேர்த்தியாகச் சித்திரங்களும் எழுத்துக்களும் செதுக்கப்பட்டவை.

(2) தந்தங்கள், தந்தத்தால் செய்யப்பட்ட சீப்புக்கள்.

(3) பீங்கான் சாமான்கள்.

(4) பற்பல விதமான மண் பாண்டங்கள்—பெரியமிடாக் களிலிருந்து சிறிய மூடிபோடப்பட்ட செப்புக்கள் வரையி லுள்ளன; மண்தட்டுக்கள், மண் தீவட்டிக் காம்பு, குழந்தைகள் விளையாட்டுக்காகச் சுட்டமண்ணால் மனிதர், மிருகம், பறவைகளைப் போலச் செய்யப்பட்ட பொம்மைகள், சாயம் பூசப்பட்ட பாண் டங்கள்.

(5) கிளிஞ்சல்கள்—கிளிஞ்சல்கள் பதித்துப் பூவேலை செய்த மண்பாத்திரங்கள்; பெரிய கிளிஞ்சல்களால் செய்யப்பட்ட கரண்டிகள்.

(6) கற்கள்—சக்கி முக்கிக் கற்களால் செய்யப்பட்ட நிறை கள்; சாதாரணக்கல்லால் செய்யப்பட்ட மா அரைக்கும் இயந்திரம்.

(7) தாமிரம்—வாள், அரம், அம்பு, ஜாடிகள், தட்டுக்கள், விளையாட்டுப்பிரதிமைகள், க்ஷுவரத்திற்கு உபயோகப்படுவன போன்ற பல கத்திகள்.

(8) ஆபரணங்கள்—பொன், வெள்ளி, தாமிரம், பீங்கான், பலவிதக்கற்கள் இவைகளாலான மணிகள் கோக்கப்பட்ட மாலைகள்.

முத்திரைகளிலுள்ள எழுத்துக்களின் பொருளை அறிவதற் காகப் பிரபல பாஷாதத்துவ நிபுணர்கள் முயன்று வருகிறார்கள். இவைகளில் வெட்டப்பட்டிருக்கும் உருவங்களில் எருது, காண்டாமிருகம், எருமை, யானை, மான், முதலை முதலியவை காணப்படுகின்றன. சிந்து தேசத்தில் பிரசித்தி பெற்ற குதிரை யுள்ள முத்திரை கிடைக்கவில்லை. ஆனால் சில விசித்திரமான உருவங்கள் இன்னவை என்று தெரியவில்லை. உதாரணமாக: தலை யில் கொம்பும், புஷ்பங்களால் அலங்கரித்த கிரீடமும், கையில் வளையல்களும் உள்ள ஓர் உருவம் தோன்றுகிறது. மற்றொன்று இவற்றோடு தலைமயிர் பின்னலிடப்பட்டு உடல் புலிபோல் அமைந்து இருக்கிறது. எகிப்து தேசத்துப் பழைய மிருக தேவதைகளைப்போல் இவைகள் மொகஞ் சொ-தரோ தேவதைகள் போலும். பாய்மரமில்லாத படகுபோன்ற ஒரு சித்திரமும் நோக் கத்தக்கது.

இங்கே கிடைத்தவைகளுள் விசேஷமான ஒரு கிளிஞ்சல் இருக்கிறது. இது சுமார் $2\frac{1}{2}$ அங்குல நீளமுள்ளது. இதில் சரிசம மான கோடுகள் வரையப்பட்டிருக்கின்றன. இது சிந்துதேசவாசி களுடைய தசாம்ச அளவைக் கருவியின் ஒரு பாகமென்றும்

தசாம்ச பின்ன கணிதம் சிந்து தேசத்திலிருந்தே உலகமெங்கும் பரவியிருக்கலாம் என்றும் ஆசிரியர்கள் கூறுகின்றார்கள்.

சில ஆபரணங்கள் வைக்கப்பட்ட ஒருமண் பாத்திரம் ஏதோ ஒரு வஸ்துவால் சுற்றப்பட்டிருந்தது. பூதக்கண்ணாடியால் பரிசோதித்துப் பார்த்ததில் அதைப் பருத்தி என்று தீர்மானித்தார்கள். அதுவே தற்காலத்தில் உலகத்திலுள்ள மிகப் பழைய பருத்தியா யிருக்கலாம் என்று சொல்லுகிறார்கள்.

மொகஞ்சொ-தரோ வீடுகளில் புதைந்து கிடந்த மனித எலும்புக் கூடுகளைப் பரீக்ஷை செய்ததில் அம்மனிதர்கள் மாமிச உணவு சாப்பிட்டவர்களென்றும், பெரிய மூளையும் நீண்ட மூக்கும் உடையவர்களென்றும் கூறப்படுகிறது. இவைகளில் சில மெசபொடேமியாவில் கிடைத்தவைகளைப் போலவும், சில மங்கோலிய சாதியாரைப் போலவும் காணப்படுகின்றன. ஓரிடத்தில் எலும்புக்கூடுகள் தலைவேறாகச் சிதறிக்கிடந்தன. அங்கே கொள்ளைக்காரராலோ, எதிரிகளாலோ ஜனங்கள் கொல்லப்பட்டிருக்கவேண்டு மென்று தோற்றுகிறது.

ஐம்பது நூற்றாண்டுகளுக்குப்பின் அழியாமல் அகப்பட்ட கோதுமை இக்காலத்தில் தென்மேற்கு இந்தியாவில் விளைவதைப் போல் இருக்கிறது.

பண்டைக்காலத்தில் சிந்துச் சமவெளியில் வசித்தவர்களின் சாதி, மதம், பாஷை, ஆட்சி முறை, பழக்க வழக்கங்களை நிச்சயமாகக் கூறுவதற்குப் போதுமான ஆதாரங்கள் இன்னும் கிடைக்கவில்லை. இருந்தாலும், நமது சரித்திரத்தின் பழமையான செய்திகளை அறிவதற்கு வேண்டிய அரிய சாதனங்கள் பல அங்கே கிடைத்திருக்கின்றன.

---

## ரப்பர் சூப்பி

**குழந்தைகளுக்குத் தாய்மார்கள் ரப்பர் சூப்பியைக் கொடுப்பது தீங்கு விளைவிப்பதாகுமென்றும் அதனால் வயிற்றுக்கோளாறுகள் ஏற்படுகின்றனவென்றும் வைத்தியர்கள் கூறுகிறார்கள். சூப்பிகளைச் செய்வதும் விற்பதும் கூடாவென்று பிரான்ஸ் தேசத்திலே சட்டம் போட்டிருக்கிறார் கிறார்கள். ரப்பர் சூப்பியைப் பூதக்கண்ணாடியில் பார்த்தால் ஆயிரக்கணக்கான நுண்ணிய நோய்க்கிருமிகளைக் காணலாம்.**

**ஸி. எஸ். ஜ.**




# உணவு நஞ்சாவது ஏன்?

பி. என். அப்புஸ்வாமி, பி.ஏ., பி.எல்.

---

பசி உலகை ஆட்டுவிக்கின்றது.

நமது உலகத்திலே உள்ள உயிர்கள் யாவும் பிராணதாரப் போராட்டம் என்று சொல்லப்படும் வாழ்க்கைப் போரிலே ஈடுபட்டிருக்கின்றன என்று உயிர்நூல் விற்பன்னர்கள் கூறுகிறார்கள். இப்போருக்கு அடிப்படையான முக்கிய காரணமாய் இருப்பது உணவுதேடும் முயற்சியே என்று கூறலாம். உணவு காரணமாகவே இவ்வுலகம் இயங்குகின்றது என்றும், பசியென்னும் கொடுங்கோல் மன்னனுடைய ஆட்சிக்கு உட்பட்டு மன்பதைகள் அனைத்தும் வாடி வருந்துகின்றன என்றும் அறிவாளர் கூறுகின்றனர். நமது நாட்டிலும்,

> ‘சேவித்தும் சென்றிரந்தும் தெண்ணீர்க் கடல்கடந்தும்
> பாவித்தும் பாராண்டும் பாட்டிசைத்தும்—போவிப்பம்
> பாழி னுடம்பை வயிற்றின் கொடுமையால்
> நாழி யரிசிக்கே நாம்’

என்ற நல்வழிச் செய்யுளானது இவ்விஷயத்தைக் கிட்டத்தட்ட அதே மாதிரியாகவே எடுத்துக்கூறுகின்றது. ஆதித் தொழில்களாகிய வேட்டையும் கிருஷியும் உணவு நிமித்தமானவை. உலகத்தில் நடக்கின்ற போர்கள் யாவும், அரசரின் ஆரவாரங்களும், வீழ்ச்சிகளும், ஜனங்களின் கலகங்களும், உயர்ச்சிகளும் பெரும்பாலும் உணவையும் வாழ்க்கைச் சௌகரியங்களையும் கருதியே நிகழ்கின்றன என்று சரித்திர நூல் விற்பன்னர்கள் கூறுகின்றனர். ஆகவே, பொதுவாக, உணவு விஷயமானது உலகத்தின்மேல் செலுத்திவந்த அதிகாரமானது அளவுகடந்தது. இனி ஒவ்வொருவன்மீதும் அது எத்தகைய வன்மையுடையதாய் இருக்கிறது என்பதைப் பார்ப்போம்:

ஒருவன் உட்கொள்ளுகின்ற உணவு சரியாக ஜீரணித்துப் பயன்தரவேண்டுமானால் அது அவனுக்குப் பொருத்தமானதாக இருப்பது அவசியம். அது அவனுடைய உடலையும், அதன் அமைப்பையும், உணவையும், அதன் குணகுணங்களையும் ஒட்டிய விஷயம். ஆதலால் இவற்றையெல்லாம் ஒரு சிறிதளவாவது தெரிந்து கொள்ளவேண்டியது அவசியம்.

உணவின் அளவு.

முதலாவது, உணவைப்பற்றி ஆராய்வோம்; அதன் அளவைப்பற்றிக் கருதுவோம். ஒவ்வொருவனும் தனக்குவேண்டிய அளவு உணவை உட்கொள்ளவேண்டும். அந்த அளவுக்கு மிஞ்சி அதிகமாக உட்கொள்ளவும் கூடாது; குறைவாக உட்கொள்ளவும் கூடாது. இந்த அளவானது ஆளைப் பொறுத்திருக்கிறது; ஒருவனுடைய தேக ஆகிருதியையும், அவன் செய்யும் வேலையையும், அவன் இருக்கும் இடத்தையும், அவன் வயதையும், ஆரோக்கிய அனாரோக்கிய நிலைமைகளையும் ஒட்டியிருக்கிறது. பெரிய உடலன் பொடி உடலனைவிட அதிகமாக உண்பதுதான் சாதாரண நிகழ்ச்சி. பாண்டவர்கள் பிக்ஷையெடுத்துக்கொண்டு வந்த உணவில் பீமசேனனுக்குச் சரிபாதியும் மற்றவர்கள் எல்லாருக்குமாக மற்றொரு பாதியுமாகப் பங்கிட்டுக் கொண்டார்கள் என்று சொல்லும் கதையை இதற்கு உதாரணமாகக் கூறலாம். இதனால் பொடி உடம்பை உடைய மனிதர்கள் எல்லாரும் தடி உடம்பு உள்ளவர்களைக் காட்டிலும் குறைவாகவே சாப்பிடுகிறார்கள் என்று சொல்ல நான் முன் வரவில்லை. குறைவாகச் சாப்பிடுகிற தடியர்களையும் ஆச்சரியப்படும்படி சாப்பிடுகிற பொடியர்களையும் நாம் எல்லாரும் பார்த்திருக்கிறோம். உட்கொள்ளும் ஆகாரத்தின் அளவைப் பாதிக்கின்ற விஷயங்களில் இது ஒன்று என்று தான் நான் சொல்லுகிறேன். அதே மாதிரியாக, ஒருவன் குழந்தைப் பருவத்தில் குறைவாகவும், யௌவனதசையை அடைய அடைய அதிகமாகவும், பிறகு யௌவனதசை மாறி முதுமைப் பருவத்தைப் பெறப்பெற மீண்டும் குறைவாகவும் சாப்பிடுவதை நாம் அறிவோம். அதுபோலவே, ஒருவன் நோயுற்ற போது சாதாரணமாய்க் குறைவாகவும், நோயற்ற நன்னிலையில் இருக்கும்போது மிகுதியாகவும் சாப்பிடுவது இயல்பு. சாதாரணமான பசியை உண்டாக்கும் நீரிழிவு, யானைத்தீ என்பவற்றைப் போன்ற சிற்சில நோய்களைப் பற்றி நான் இங்கே கூறவில்லை. அம் மாதிரியே உடல்வேலை செய்யும் ஒருவன் அதிகமாகவும், உடல் வேலை செய்யாமல் சும்மா இருப்பவன் குறைவாகவும் சாப்பிடுவது

தான் சாதாரணம். சீதோஷ்ண நிலைமையினுல் உணவின் அளவு மாறுபடுவதையும் நாம் காண்கிருேம். உதகமண்டலம், கோடைக் கானல், குற்ருலம் முதலிய இடங்களுக்கு நாம் போகும்பொழுது, அங்கே நமக்குப் பசி அதிகமாக உண்டாவதையும், நாம் சாதாரண மாகச் சாப்பிடுவதைவிட அவ்விடங்களிலே அதிகமாகச் சாப்பிடு வதையும் நாம் காண்கிருேம். சிற்சில ஆகார வகைகளாலும் அளவு மாறுபடுகிறது. நாம் அரிசிச் சாதம் சாப்பிடுகிற அளவு கோதுமைச் சாதம் சாப்பிடுவதில்லை. உப்புமாவைச் சாப்பிடுகிற அளவு அல் வாவைச் சாப்பிடுவதில்லை; சாப்பிடவும் முடியாது.

**உணவின் மிகுதி.**

ஆகவே நாம் உட்கொள்ளும் உணவுக்கு ஓர் அளவு இருக் கிறது என்பதும், அது பல விஷயங்களைப் பொறுத்ததாயிருக்கிறது என்பதும் தெரியவரு கின்றன. அளவுக்கு மிஞ்சி ஆகாரம் செய்தால் உண்டாகும் தொந்தரவுகளுக்குக் கணக்கில்லை. இதை யறிந்தே நமது நாட்டில் ‘அளவுக்கு மிஞ்சினுல் அமுதமும் நஞ்சாம்’ என்னும் பழமொழி வழங்கி வருகிறது. அளவுக்கு அதிகமாக உட்கொள்ளப்பட்ட உணவானது நமக்கு அளவுக்கேற்றபடி நன்மையை விளக்காது; அதுவுமன்றித் தீங்கையே அது விளைக் கும் என்பதைத் தான் வெகு காலமாக வழக்கிலிருந்து வரும் இப் பழமொழி வற்புறுத்திக் கூறுகிறது. அளவுக்கு மிகுதியாக உட்கொள்ளுவதானது உணவை நஞ்சாக்குவதற்கான ஒரு வழி.

**உணவின் குறைவு.**

மிகவும் அதிகமாக ஆகாரத்தை உண்பதனுல் விளையும் கேடு கள் சில. இதைப் போலவே மிகக்குறை வாக ஆகாரம் உண்பதாலும் பட்டினிகிடப்ப தாலும் உண்டாகும் வியாதிகளும் அநேகம். இவ்வேளைகளில் உடலுறுப்புக்கள் தமக்கு வேண்டாதனவற்றை வெளியே தள்ளுவதில்லை. பசியால் பிராணன் போகிறவன் தனக்குக் கிடைத்தது எந்தப் பொருளாயினும் அதை ஆகாரமாகக் கொள்ள முயலுவான். கோட்டைக்குள் அடைபட்டவர் குதிரைகளைத்தின்ற பிறகு அவற்றின் சேணங்களையும் தம்முடைய செருப்புக்கள் ஜோடுகள் முதலியவற்றையும் தின்றதாகப் பல கதைகள் உண்டு. குறைவாக ஆகாரம் உட்கொண்ட உடலானது தீங்கு செய்யும்; வேண்டாப் பொருளையும் வெளித்தள்ளாமல் உள்ளே ஏற்றுக் கொள்ளத் தொடங்குகிறது; அதனுல் நஞ்சுற்று வருந்துகிறது. ஆகையால் உணவானது அளவின் குறைவாலும் நஞ்சாகி விடுதல் கூடும். இவ்வாறு உண்டாகும் நஞ்சுகளை **‘டாக்ஸின்கள்’** என்று

கூறுகிறார்கள். உடல் இவ்வாறு நஞ்சுறுவதை 'ஆடோ இன்டாக்ஸிகேஷன்' என்கிறார்கள்.

உணவைப் பற்றிய விஷயம் வேறொன்றைக் கவனிப்போம்: அதாவது உணவுப்பொருளின் குணகுணங்கள்.

**உணவுப் பொருளின் குணகுணங்கள்: செழுமை.**

இரசாயன முறைகளால் உணவுப் பொருள்களை ஆராய்ந்து பார்த்தால் அவற்றில் பலவகையான இரசாயனப் பொருள்கள் காண்கின்றன. உணவுப்பொருள்களை நீர், இனார்கானிக் உப்புக்கள், புரோடீன்கள், கார்போஹைட்ரேட்டுக்கள், கொழுப்புக்கள், வைடமின்கள் என்று ஆறுவகைகளாக வகுத்திருக்கிறார்கள். இவ்விவரங்களை வேறொரு இடத்தில் விரிவாகச் சொல்லியிருப்பதைக் காண்க (கலைமகள்—பகுதி, 6, 7, 8) இப்பொருள்களால் உணவுகளின் குணங்கள் பலவகையாக மாறுபட்டிருக்கின்றன; அவற்றை உட்கொள்ளும் நம்மைப் பலவிதமாய்ப் பாதிக்கின்றன. இந்த இரசாயனப் பொருள்கள் நாம் உண்ணும் உணவில் அளவுக்கு மிஞ்சியவையாய் இருக்குமானால் நமது உடலானது அவை அனைத்தையும் ஏற்றுக் கொள்ளாது. தனக்கு வேண்டிய அளவை மட்டுமே ஏற்றுக் கொண்டு அதிகமானதை வெளியே தள்ள முயலும். இம்முயற்சி வீணாக அதன் மீது சுமத்தப்பட்ட முயற்சியாகும். அநேகமாக இது சரியாக நடந்தேறி வரும். எனினும், ஒவ்வொரு நாளிலும் ஒவ்வொரு வேளையிலும் நாம் அனுவசியமாக உட்கொள்ளும் பொருளில் ஏதோ ஒரு சிறு அளவில் கழி பொருள் அகற்றப் படாது மிகுந்து விடுதல் கூடும். அப்படி உடலிலேயும் ஏற்றுக் கொள்ளப்படாது வெளியேயும் தள்ளப்படாது தங்கி நிற்கும் பொருள்களெல்லாம் நஞ்சாகி விடுகின்றன; நமக்குப் பலவிதமான ஹிம்சைகளையும் நோய்களையும் விளைவிக்க ஏதுவாகின்றன. பித்தம், வாதம் என்று சொல்லப்படும் இவையும், இரத்த அழுத்தம் என்று சொல்லப்படுகிற உடல் நிலையும் இதனால் வருகின்றனவாகும். இந்த இரத்த அழுத்தமானது நெஞ்சு வியாதிக்கும், படபடப்புக்கும், பக்கவாதம் என்னும் நோய்க்கும், அளவு கடந்த காரணமில்லாக் கோபத்துக்கும் காரணமாகின்றது.

இவ்வாறு மிகவும் செழிப்பான ஆகாரத்தை உட்கொண்டால் உடலுக்குக் கெடுதல் உண்டாவது போலவே

**செழிப்பின்மை.**

செழிப்பற்ற ஆகாரத்தை உட்கொள்ளுவதாலும் உடல் நோயுறுவதுண்டு. பெரிபெரி, சிற்சிலவகைச் சொறி சிரங்குகள், எலும்பும் பல்லும் சீராக வளராதிருத்தல் முதலிய சிற்சில நோய்கள் நாம் உட்கொள்ளும் ஆகாரத்தின் குணக்குறை

வால் உண்டாகின்றன, ஆகவே ஆகாரமானது செழுமைக் குறைவாலும் நோய் விளைக்கும் நஞ்சாகின்றது.

**அஜீரணப் பொருள்கள்.**

இவற்றைத் தவிர, சிற்சில ஆகாரங்கள் இலகுவாய் ஜீரணத்துக்கு வராதன. அத்தகைய ஆகாரங்களும் நமக்கு நஞ்சாகவே ஆவன. நெருப்புக் கோழி விழுங்குவதுபோல் நாம் எந்த ஆகாரத்தையும் விழுங்குவதற்கில்லை. நமது வயிற்றைக் குப்பைத்தொட்டி என்று எண்ணுபவரைப்போல் சிலர், கண்ட ஆகாரங்களை யெல்லாம் அதற்குள்ளே போட்டு வருகிறார்கள். அதற்குள்ள தண்டனையை அவர்கள் இன்று பெறுவார்கள், அல்லது நாளைப் பெறுவார்கள், அல்லது சில காலம் கழித்துப் பெறுவார்கள். ஆனால் பெறாமற் போகார்கள்.

**உணவு உண்ணும் நேரம்.**

ஒவ்வொரு வேளையிலும் நாம் உட்கொள்ளும் ஆகாரம் ஜீரணிக்கப் போதுமான நேரம் வேண்டும். அதற்கிடையில் நமது ஜீரணக் கருவிகளைத் தொந்தரவு படுத்துவது தவறு. ஒரு வேளை ஆகாரத்துக்கும் மற்றொரு வேளை ஆகாரத்துக்கும் குறைந்தது மூன்று மணி நேரமாவது இடையீடு இருப்பது அவசியம். அப்படிக்கின்றி வேளை கெட்ட வேளைகளில், இடையீடில்லாமல் பெட்டியில் சாமானைவைத்து மூடுவது போல, நமது வயிற்றில் ஆகாரங்களைப்போட்டுக் கொண்டேயிருந்தால் நாம் புதிதாய்ப் போட்ட ஆகாரம் மட்டுமன்றி நாம் முன்னே உட்கொண்ட ஆகாரமும் நஞ்சாக மாறி நம்மை எத்தனையோ விதமான நோய்களுக்கும் தொந்தரவுகளுக்கும் உட்படுத்தும். 'மாடு அசை போடுவதைப் போல எப்பொழுதும் அசைபோட்டுக் கொண்டேயிருந்தால் ஏன் வியாதிவராது?' என்று சிலர் சொல்லுவதைக் கேட்கிறோம். ஆதலால், வேளை கெட்ட வேளையில் உட்கொள்ளுவதாலும் ஆகாரம் நஞ்சாகும் என்பது தெரியவருகிறது.

மேற்கூறியவை எல்லாம் உணவுப் பொருள்களையே பெரும்பான்மையும் பொறுத்துள்ளன. நமது உடலைப் பொறுத்துள்ள சில விஷயங்களையும் இனிமேல் கவனிப்போம்.

(தொடரும்.)

# சிவசமுத்திரம் நீர்வீழ்ச்சியும் மின்சார உற்பத்திசாலையும்

எம். கிருஷ்ணமூர்த்தி, பி.ஏ., எல்.டி.

---

இக்காலத்தில் மனிதனுல் செய்யப்படும் பலவிதமான காரியங்களுக்கு மின்சார சக்தி பயன்படுகிறது; யந்திரங்கள் ஓட்டுதல், நெசவு நெய்தல், மா அரைத்தல், நெல்குத்தல், கல் உடைத்தல், விளக்கெரித்தல், மரம் அறுத்தல், தண்ணீர் இறைத்தல் இன்னும் நூற்றுக்கணக்கான வேலைகள் மின்சாரசக்தியின் உதவியைக் கொண்டே நடந்து வருகின்றன.

முதலில் மின்சாரசக்தி நீராவியின் உதவியைக் கொண்டு தயாரிக்கப்பட்டது. இதற்குச் சிரமம் அதிகம் ஏற்பட்டதோடல்லாமல், பணச்செலவும் மிகுதியாய் ஏற்பட்டது. ஆனுல் இச்சக்தி இப்போது நீரின் விசையைக்கொண்டு அபரிமிதமாய்த் தயாரிக்கப்படுகிறது. கீழ்க்கண்ட அட்டவணையில் *உலகத்திலுள்ள சில முக்கியமான நாடுகளில் தயாரிக்கப்படும் மின்சார சக்தியின் அளவு குறிக்கப்பட்டிருக்கிறது.

| நாட்டின் பெயர் | மொத்தம் தயாரிக்க வசதியுள்ள சக்தி (லக்ஷம் குதிரையாற்றல் கணக்கில்). | இப்பொழுது தயாரித்து வரும் அளவு (லக்ஷம் குதிரை யாற்றற் கணக்கில்) | தயாரிக்கக் கூடியதில் இப்பொழுது நூற்றுக்கு எவ்வளவு என்பது. |
|---|---|---|---|
| அமெரிக்க ஐக்கிய நாடுகள் | 350 | 117 | 33 |
| இந்தியா | 270 | 22·5 | 1 சதாம்சத்துக்கும் குறைவு. |
| கானடா | 182 | 45 | 25 |
| பிரான்சு | 54 | 21 | 37 |
| ஜப்பான் | 45 | 17 | 37 |
| ஸ்பெயின் | 4· | 1 | 25 |
| இத்தாலி | 38 | 18 | 47 |
| ஸ்விட்ஸர்லாந்து | 25 | 18 | 72 |
| ஜெர்மனி | 20 | 11 | 55 |

---

* *Vide.* Indian Review, July 1930, Page 448.

மேற்கண்ட அட்டவணையிலிருந்து நாம் அதிகமான விஷயம் தெரிந்து கொள்ளலாம். இந்தியாவில் நீரின் விசையைக்கொண்டு அதிகமான சக்தி தயார் செய்ய இடமுண்டு. ஆனால் இங்கே 100-க்கு 1 பாகம்கூட நீரின் விசையினால் ஏற்படும் சக்தி உபயோகப்படவில்லை. ஐரோப்பாவிலுள்ள ஸ்விட்ஸர்லாந்து என்னும் மலைநாட்டில் 72 சதாம்சம் வீதம் நீரின் விசையினால் ஏற்படும் சக்தி உபயோகப்படுகிறது. நீரின் விசையினால் ஏற்படும் சக்தி உலகத்திலேயே மிக அதிகமாய் அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் கானடாவிலும் தயாராகிறதென்பதை அட்டவணையில் காண்க. எனவே இவ்விஷயத்தில் இந்தியா மிகவும் பின்னணியில் இருக்கிறதென்பது நன்கு புலனாகும். என்றாலும் இப்பொழுது இந்தியராகிய நாம் வரவர அதிகமாக இவ்வித மின்சாரசக்தியை உபயோகித்து வருகிறோம். இந்தியாவில் மழை அதிகம் பெய்து ஆறுகள் அதிகமாய் ஏற்பட்டிருப்பதாலும் அவைகள் அநேக இடங்களில் மேட்டிலிருந்து பள்ளத்தில் நீர்வீழ்ச்சியாக விழுவதாலும் அந்த அந்த இடங்களில் காற்றாடிகளை உபயோகித்து நீரின் விசையைக் கொண்டு மின்சாரசக்தி தயாராகிறது. இவ்விதம் மைசூர் ராஜ்யத்திலுள்ள சிவசமுத்திரம் நீர்வீழ்ச்சிக்கு அருகிலும், பம்பாய் நகருக்கு அருகில் மேற்குத் தொடர்ச்சிமலையிலும் அநேக வருஷங்களாக மின்சாரம் உற்பத்தி செய்யப்படுகிறது. இப்பொழுது பஞ்சாப் மாகாணத்தில் ஜோகிந்த்ரா என்னுமிடத்தில் மிகப் பெரியதொரு மின்சார உற்பத்திசாலையும் தென்னிந்தியாவில் நீலகிரிஜில்லாவில் பைக்காரா என்ற நதியின் உதவியைக்கொண்டு பைக்காரா மின்சார உற்பத்திசாலையும் நூதனமாக ஸ்தாபிக்கப்பட்டுள்ளன. இங்கு நாம் சிவசமுத்திரம் நீர்வீழ்ச்சியையும் அதனருகில் ஸ்தாபிக்கப்பட்டுள்ள மின்சார உற்பத்திசாலையையும் விவரிப்போம்.

மைசூர் ராஜ்யம் ஓர் உயர்ந்த பீடபூமியாகும். அது சமுத்திர மட்டத்துக்குமேல் 2000 முதல் 3000 அடிவரையில் உயர்ந்துள்ளது. அதன் மேற்கே மேற்குத் தொடர்ச்சிமலையும், கிழக்கே கிழக்குத் தொடர்ச்சிமலையும் அமைந்துள்ளன. இவற்றிற்கிடையிலுள்ள பாகம் முக்கோண வடிவமாய்த் தெற்கே குறுகியும் வடக்கே அகன்றும் இருக்கிறது. மேற்குத் தொடர்ச்சி மலையில் உற்பத்தியாகும் ஆறுகள் சில வடகிழக்காகவும் சில கிழக்காகவும் ஓடுவதால் நிலம் வடகிழக்கு, கிழக்குத்திசைகளில் சரிந்திருக்கிறதென்று தெரிகிறது. இவ்விதம் ஓடிவரும் ஆறுகள் கிழக்குத் தொடர்ச்சிமலையிலுள்ள இடைவெளிகள் வழியாய்ச் சமவெளியை அடைகின்றன.

இவ்விதம் பீடபூமியிலிருந்து சமவெளியை அடையும் இடங்களில்தான் நீர்வீழ்ச்சிகள் ஏற்பட்டிருக்கின்றன.

காவேரிநதி குடகு ராஜ்யத்தில் மேற்குத் தொடர்ச்சி மலையில் உற்பத்தியாகி, அவ்விராஜ்யத்திலேயே சுமார் 30 மைல் ஓடி மைசூர் ராஜ்யத்தில் பிரவேசிக்கிறது. அங்கே அநேகமாய்க் கிழக்குமுகமாய்ச் சுமார் 120 மைல் ஓடிச் சிவசமுத்திரம் என்னுமிடத்தில் நீர் வீழ்ச்சியாக விழுகிறது. பங்களூர் மைசூர் இருப்புப்பாதையில் பங்களூரிலிருந்து 44-ஆம் மைலில் மத்தூர் என்ற ரயில் ஸ்டேஷன் இருக்கிறது. அதில் இறங்கித்தான் சிவசமுத்திரம் செல்ல வேண்டும். மத்தூருக்கும் சிவசமுத்திரத்துக்கும் உள்ள தூரம் சுமார் 30 மைலிருக்கும். பாதை நல்ல மோட்டார்ப் பாதை. நிலம் வறண்டதாயும் சாரமற்றதாயு மிருப்பதால் பயிர்ச்செலவு, வயல்கள் அதிகம் இல்லை. எனவே இப்பாதை அதிக ஜனசஞ்சாரமில்லாத ஓர் வறண்ட நிலபாகத்தின் வழியாய்ச் செல்லுகிறது.

## கால்வாய் (*Power-house Canal*)

மத்தூரிலிருந்து தென்கிழக்குத் திசையாய் 28 மைல் பிரயாணம் செய்தால் காவேரியாற்றின் கரையை அடையலாம். ஆற்றின் இடது கரையில் புதிதாய் வெட்டப்பட்டு வெகு ஜாக்கிரதையுடன் மேற்பார்வையிடப்பட்டுவரும் ஓர் கால்வாய் இருப்பதைக் காணலாம். இதுவே மின்சார உற்பத்திசாலைக்கு வேண்டிய தண்ணீர் கொண்டு செல்ல ஏற்பட்ட கால்வாய். அச்சாலையிலுள்ள காற்ருடிகளை ஓட்ட மிகச் சிறிது தண்ணீரே போதுமானது. அக்காற்ருடிகளை இயற்கையாய் ஏற்பட்டுள்ள நீர்வீழ்ச்சியின் கீழே அமைப்பது அபாயகரமானது. ஏனெனில் யந்திரங்களை ஓட்டச் சிறிது தண்ணீரே போதுமானது; மேலும் ஆற்றில் வெள்ளம் வரும்காலத்தில் மின்சார உற்பத்திசாலையே முழுகிப்போனாலும் போகும். ஆகவே உற்பத்திசாலையை நீர்வீழ்ச்சியின் அடியில் அமைக்காமல், அங்கிருந்து பின்னும் ½ மைலுக்குக் கீழே அமைத்துள்ளார்கள்.

மேற்கூறிய கால்வாய் சுமார் 3 மைல் நீளமிருக்கும். அகலம் 25 அடி முதல் 30-க்கு அதிகமில்லை, அதன் தலைப்பு, மத்தூரிலிருந்து வந்தசாலை ஆற்றின்கரை யோரமாய்ச் செல்லும்சாலையைச் சேரும் இடத்திலிருந்து 2 மைல் மேற்கேயுள்ளது. இவ்விதம் மேற்கே இரண்டு மைல் தூரத்தில் வாய்க்கால் மதகு ஏற்பட்டிருப்பதற்குக் காரணம் உண்டு. சாதாரணமாய்ச் சிவசமுத்திரம் நீர்வீழ்ச்சியினருகில் 250 அடி உயரத்திலிருந்து தண்ணீர் கீழே விழுகிறது. ஆனால்

இதைவிட மட்ட வித்தியாசம் (*difference in level or height*) ஏற்பட்டால் நலமென்று எஞ்ஜினீயர்கள் கண்டார்கள். நீர்வீழ்ச்சிக்கு மேலேயும் கீழேயும் ஆறு சரிவிலேதான் ஓடி வருகிறது. ஆகவே அதற்கு மேலே 2 மைலுக்கு அப்பால் வாய்க்காலேப் பிரித்து, மேட்டிலேயே மேட்டுவாய்க்காலாகக் கொண்டுவந்து, நீர்வீழ்ச்சிக்குக் கீழே சுமார் அரை மைல் தூரத்துக்கு அப்பால் மறுபடியும் காவேரி ஆற்றுடனே சேர்த்துவிடுகிருர்கள். இவ்விதம் செய்வதால் மட்டவித்தியாசம் (*height*) சுமார் 400 அடி ஏற்படுகிறது.

வாய்க்கால் தலேப்பு நீர்வீழ்ச்சிக்குமேலே சுமார் இரண்டு மைல் தூரத்தில் இருக்கிறதென்று சொன்னேம். இங்கே ஆற்றின் குறுக்கே தண்ணீர் மட்டம் வரையில் ஓர் அணே கட்டியிருக்கிருர்கள். ஆகவே இங்கே தண்ணீர் எப்பொழுதும் தேங்கி ஓர் பெரிய ஏரி போல் காணப்படுகிறது. மழை குறைந்து ஆற்றில் தண்ணீர் அதிகம் வராத காலத்தில் கூட இந்த அணேயிருப்பதால் இங்கே தண்ணீருக்குப் பஞ்சமில்லே. வெள்ளம் அதிகம் வரும்போது அணேயின்மேலே வழிந்து ஓடும். ஆகவே பன்னிரண்டு மாதங்களிலும் இங்கே வேண்டியவளவு தண்ணீரிருப்பதால் கால்வாய் தண்ணீர்த் தட்டில்லாமல் ஓடி மின்சார உற்பத்திசாலேக்கு உபயோகமாகிறது. இந்த அணேயினருகில் முன்காலத்தில் ஓர் பாலமிருந்ததாம். 1924-ஆம் வருஷம் வெள்ளத்தில் இப்பாலம் இடிந்து போய் விட்டது. அது இருந்த அடையாளங்கள் மட்டும் இன்னும் அங்கே தென்படுகின்றன.

ஆற்றுக்கு அக்கரையில் ஸ்ரீரங்கநாதர் கோவில் அமைந்துள்ளது. ஐப்பசி மாதத்தில் ஸ்நானம் செய்ய யாத்திரிகர்கள் இங்கே வருகிருர்கள். கோவில் பட்டாசாரியார் வீடும், முஸோபரி பங்ளாவும், சில குடியானவர்கள் வீடும் தவிரச் சுற்றுப் புறத்தில் ஒருமைலுக்கு வேறு வீடுகள் இல்லே. இந்த இடத்திலிருந்து மின்சார உற்பத்திசாலே சுமார் 3 மைலிருக்கும். பாதை ஆற்றின் இடது கரையோரமாய்ச் செல்லுகிறது. பக்கத்திலேயே கால்வாயும் ஓடி வருகிறது.

## மின்சார உற்பத்தி சாலே

சுமார் 25 அடி அகலமுள்ள கால்வாய்வழியாய்க் கொண்டு செல்லும் ஜலம் என்னவாகிறதென்று கவனிப்போம். சிலசமயங்களில் இந்த ஜலம் கூட அதிகமாகப் போய்விடுவதால் அது ஓடுவதற்குத் தனிமையான வழியிருக்கிறது. வேண்டிய தண்ணீரை

மதகின் வழியாய் அடைத்துக் குழாய்கள் மூலமாய்க் கீழே அனுப்புகிறார்கள். அந்த இடத்திலிருந்து கீழே பார்த்தால் கிடுகிடு பாதாளமாயிருக்கிறது. அப்பள்ளத்தில் காவேரியாறு ஓடுகிறது. காவேரியாற்றுக்கும் மேலேயுள்ள கால்வாய்க்கும் உள்ள செங்குத்தான உயரம் சுமார் 400 அடி இருக்கும். கீழே ஒரு பர்லாங் தூரத்தில் ஆற்றின் கரையோரமாய் உற்பத்திசாலை அமைந்துள்ளது. வாய்க்காலில் வந்த தண்ணீர் 13 குழாய்களின் வழியாய் உற்பத்தி சாலையை அடைகிறது. இக்குழாய்களின் குறுக்களவு சுமார் 1 அடி முதல் $3\frac{1}{2}$ அடி வரையிலிருக்கும். இவைகள் கரடுமுரடான சரிவின் மேல் பொருத்தப்பட்டுள்ளன.

குழாய்கள் பொருத்தப்பட்டிருக்கும் கரடுமுரடான பாதை வழியாய் உற்பத்திசாலையை அடைவது அசாத்தியம். ஆகவே மனிதர் இறங்குவதற்கும் சாமான்களைக் கொண்டுசெல்லுவதற்கும் தனியான பாதையுண்டு. இதுசுமார் ஒருபர்லாங் நீளமிருக்கும். இப்பாதையில் இரும்புத்தண்டவாளங்கள் பொருத்தப்பட்டு அவற்றின்மேல் டிராலிவண்டிகள் மின்சாரசக்தியால் மேலும் கீழும் நகருகின்றன. ஒரு டிராலி மேலே ஏறும்போது மற்றொன்று கீழே இறங்கும். இப்பாதை 45 டிகிரி சாய்வாய் அமைந்திருப்பதால் அநேகமாய்ச் செங்குத்தாய் தோன்றும். அதில் சாதாரணமாய் நடந்து ஏறுவதோ இறங்குவதோ அசாத்தியம்.

மேற்கூறிய தண்டவாளப்பாதை உற்பத்தியின் பக்கத்தில் போய்முடிகிறது. அச்சாலை நான்கு மெத்தைகளோடு கூடிய சுமார், 100 அடி உயரமுள்ள ஓர் பெரிய கட்டிடம். அது மேலேயுள்ள வாய்க்கால் மதகிலிருந்து பார்த்தால் ஓர் சிறிய வீடுபோல் தோன்றுகிறது. கட்டிடத்துப்பக்கத்திலும் மேலேயும் இடிதாங்கிகள் அமைந்துள்ளன. சாதாரணமான கட்டிடங்களுக்கே இடிதாங்கிகள் அவசிய மென்பதை நீங்கள் அறிவீர்கள். இங்கு மின்சாரம் அதிகம் உற்பத்தி செய்யப்படுவதால் இதற்கு இடிதாங்கியிருப்பது மிகவும் அவசியமே.

கட்டிடத்தின் அடித்தளத்துக்குக் கீழே சுமார் 10 அல்லது 12 அடிப்பள்ளத்தில் காவேரிநதி ஓடுகிறது. அங்கே காவேரியின் அகலம் சுமார் 60 அடியிருக்கும். எதிர்த்தபக்கம் சுமார் 100 அல்லது 150 அடி உயரமுள்ள செங்குத்தான பாறையாலான கரை தோன்றுகிறது. குழாய்களில்வரும் தண்ணீர் பெரியகாற்றாடிகளில் வந்து மோதுகின்றன. ஆகவே அக்காற்றாடிகள் வெகு வேகமாய்ச் சுற்றுகின்றன. காற்றாடி சுற்றுவதிலிருந்து காந்தசக்தியை உபயோகித்து மின்சாரசக்தியை உண்டுபண்ணுகிறார்கள். அச்சக்தியைச்

சேகரித்துப் பலவிடங்களுக்கும் அனுப்ப அநேக இயந்திரங்களை அமைத்துள்ளார்கள். ஜாக்கிரதையாய் இருக்கவேண்டுமென்றும், உலோக சம்பந்தமான பொருளைத் தொடக்கூடாதென்றும் சிவப்பு வர்ணத்தால் எங்கே பார்த்தாலும் எச்சரிக்கைகள் எழுதப்பட்டுள்ளன. இந்தச் சாலை 1922-ஆம் வருஷந்தான் கட்டிமுடிக்கப் பட்டது. அதற்கு முன்னிருந்த சாலை சற்று மேலேயே அமைந்துள்ளது. அதற்கு, சேஷாத்திரி உற்பத்திசாலை யென்று பெயர். அப்போது ஜலமட்ட வித்தியாசம் சுமார் 100 அடிதான் இருந்ததாம்.

இங்கே தயாரிக்கும் மின்சார சக்தி சுமார் 35 மைல் தூரத்திலுள்ள மைசூருக்கும், 70 மைல் தூரத்திலுள்ள பங்களூருக்கும், 120 மைல் தூரத்திலுள்ள கோலாருக்கும் அனுபப்படுகிறது. இதுவரையில் மேட்டூரில் அணைகட்டுவதற்கு இங்கிருந்து தான் மின்சாரசக்தி சென்று கொண்டிருந்தது. கோலார் தங்கச்சுரங்கத்தில் நடக்கும் எந்த வேலையும் மின்சாரசக்தியாலேயே நடக்கிறது. ஆகவே சிவசமுத்திரம் உற்பத்திசாலை கோலார் தங்கச்சுரங்க வேலைக்காகவே முதல் முதலில் ஏற்பட்டது. ஆனால் இப்போது மின்சாரசக்தியின் உபயோகம் அதிகரித்து வருகிறது. பங்களூர் மைசூர் முதலிய நகரங்களில் விளக்குகள் அதனுதவியால் எரிவதோடல்லாமல், பஞ்சாலைகளும் நெசவுச் சாலைகளும் வேறு பலவிதத் தொழில்களும் அதன் உதவியாலேயே நடைபெறுகின்றன. மேலும் மின்சாரசக்தியை இடத்துக்கிடம் அதிக-தூரமானாலும் கொண்டு செல்வது சுலபம். தார் பூசிய காட்டுமரங்களைத் தந்திக்கம்பங்களாக உபயோகித்துக் கம்பிகள் போட்டு மின்சாரசக்தி இடத்துக்கிடம் கொண்டு செல்லப்படுகிறது. இவ்விதம் மைசூர் ராஜ்யத்தில் அதிகமாக மின்சார்சக்தி உற்பத்தி செய்யப்படுவதாலும், அச்சக்தி வெகு தூரத்திலுள்ள இடங்களுக்குக்கூட வெகு சுலபமாகவும் அதிகப் பணச்செலவில்லாமலும் கொண்டு செல்லப்படுவதாலும் எல்லாவிதமான வேலைக்கும் இச்சக்தியையே உபயோகிக்கிறார்கள். சக்தி அதிகம் செலவாகிறது. இந்தவேலை சம்பந்தமாக ஆயிரக்கணக்கான உத்தியோகஸ்தர்கள் உள்ளார்கள். ஆகவே மைசூர் அரசாங்கத்தார் 'மின்சார இலாகா' (*Electrical Department*) என்ற ஓர் தனி இலாகாவை ஏற்படுத்தியுள்ளார்.

### நீர் வீழ்ச்சி

இதுவரையில் நாம் மனிதனுடைய முயற்சியால் சாதித்த காரியங்களைத் தெரிந்துகொண்டோம். இனி இயற்கையாகச் சிவசமுத்

திரம் நீர்வீழ்ச்சியை விவரிப்போம்: மேற்கூறிய மின்சார உற்பத்தி சாலையின்மேலே வாய்க்கால் மதகிலிருந்து நீர்வீழ்ச்சி சுமார் அரை மைல் தூரமிருக்கும். நீர்வீழ்ச்சியின் சுற்றுப்புறத்தில் சுமார் ¼ மைல் தூரத்துக்கு வீடுவாசல் கிடையா. நீர்வீழ்ச்சிக்கு எதிர்ப்புறத்தில் ஓர் பெரிய பாறையுண்டு. அந்தவிடம் வரையில் பஸ்கள் செல்லும். அந்த விடத்துக்கு 'ப்ளப்' (*bluff*) என்று பெயர். அதற்குக் கீழே 12 அடி நீளம் 8 அடி அகலமுள்ள ஓர் ஒற்றை மண்டபம் உண்டு. ஒற்றை மண்டபத்துக்கு எதிரில்தான் நீர்வீழ்ச்சி அமைந்திருக்கிறது. நீர்வீழ்ச்சியின் காட்சி வெகு அழகானது. காவிரிநதி எதிர்த்தாற்போலுள்ள பாறைகளின் மேல் அடர்ந்த புதர்களுக்கு இடையில் ஓடிவந்து நீர்வீழ்ச்சிக்கு மேலே மூன்று பிரிவாகப் பிரிகிறது. ஒன்று சரிவாய் வந்து விழுகிறது. மற்றொன்று முதலில் 150 அடி செங்குத்தாயும் மறுபடி 4 அல்லது 5 அடி கடந்து மறுபடியும் 100 அடி செங்குத்தாயும் விழுகிறது. மூன்றாவது பிரிவு ஒரேயடியாய் 250 அடியும் செங்குத்தாய் விழுகிறது. பசுமையும் பழுப்பும் கலந்த பாறையின்மேல் மூன்று பிரிவாய்த் தோன்றும் இவற்றின் காட்சி மூன்று பெரும்பூமாலை சாத்தியிருப்பதை ஒத்திருக்கிறது. மேலேயுள்ள கரையிலிருந்து தண்ணீர் ஓடுமிடம் சுமார் 250 அடி ஆழமிருக்கும். தண்ணீரை அடையச் சரியான பாதையில்லை. கால்கைகளை ஊன்றிக்கொண்டு குரங்கு நடப்பதுபோல் நடக்கவேண்டும். நீர் வீழ்ச்சியில் ஏற்படக்கூடிய சத்தம் வெகுதூரம் கேட்கிறது. தண்ணீரிலிருந்து கிளம்பும் புகை போன்ற நீர்த்துளிகள் தண்ணீர் மட்டத்திலிருந்து 20 அல்லது 30 அடி உயரம் வரையில் எழும்புகின்றன. நீர்வீழ்ச்சியைத் தாண்டியதும் காவேரியாறு செங்குத்தான பாறைகளுக்கு இடையில் ஓடுகிறது. பக்கத்திலுள்ள பாறைகள் சுமார் 150 முதல் 200 அடி வரையில் உயரமுள்ளவை. இவைகளுக்கு இடையில் ஓடும் காவேரியாறு இவ்விடத்தில் சுமார் 80 அல்லது 100 அடி அகலந்தான் உள்ளது.

---

## உப்பு உற்பத்தி

இத்தாலி, ஸ்பெயின், கிரீஸ், ஜப்பான் உள்பட ஏழு தேசங்களில் உப்பு உற்பத்தி கவர்ன்மெண்டின் ஏகபோக பாத்தியமாக இருந்துவருகிறது. இந்தியா, பிரான்ஸ், பிரேஸில் முதலிய ஆறு நாடுகளில் உப்புவரி விதிக்கப்படுகிறது. சீனாவில் உப்பு வரியே கவர்ன்மெண்டின் முக்கிய வருமானமாக இருந்துவருகிறது.

—சு. மீ.

# பல்லி

என். ஆர். இரகுநாதாசாரியார், எம்.ஏ., எல்.டி.

---

குலமகள் நண்பர்களே! வந்தனம். நான் ஒரு பல்லி. எங்கள் வகுப்பைச் சார்ந்த பாம்புகளைப்பற்றி நீங்கள் அறிந்திருக்கலாம். மனிதன் பயந்த சுபாவமுள்ளவனுகை யால், பாம்போ பல்லியோ ஏதானுலும்சரி, "புகையைப் போட்டுக் கொன்றுவிடு; தடி



யால் அடித்துப்போடு" என்று ஒரே உறுதியாய் இருந்து வருகிறுன். பயத்தினுலேதான் மனிதன் எங்கள் இனத்தையும் பாம்பினத்தையும் வணங்கிவருகிறுன்; அகப்பட்டால் அடி, அகப்படாவிட்டால் கும்பிடு. இல்லாவிடில் என்ன காரணத்திற்காக என்னைக் காஞ்சீபுரம் முதலிய கோவிலில்வைத்துக் கும்பிடுகிறுன்? ஏன் என் சொல்லுக்குக் கௌரவம்வைத்து அதனுற் புலன் உண்டு என்று நம்புகிறுன்?

என்னைக் கோவிலில் வைத்துக் கும்பிடுவதனுலும், என்சொல் நடையைப்பற்றிப் பஞ்சாங்கங்கள் விசேஷமாகக் கூறுவதனுலும் நான் எந்தவிதத்தில் மற்றப் பிராணிகளைக் காட்டிலும் உயர்ந்தவன் என்று எனக்கே சந்தேகம் தோன்றி, பலரைக் காரணம் கேட்கலானேன். "ஐயா, ஜோஸியரே! என்னகாரணத்தால் நீர் என்சொல்லுக்கும் நான் ஓடுதல் விழுதல் முதலியவற்றிற்கும் மகிமை வைக்கிறீர்? தயவு செய்து உத்தரம் கூறவேண்டும்" என்றேன்.

ஜோஸியர்:—அப்பா! பல்லி, காரணமா? எனக்குத் தெரியாது. புராதன காலத்திலிருந்து உனக்கு மகிமை வழங்கிவருகிறது. ஆகையால், நானும் அந்த ஆசாரத்தை அனுஷ்டித்து வருகிறேன்.

பல்லி:—ஐயா! வைத்தியரே! என் மகிமைக்கு என்ன காரணம்?

வைத்தியர்:—உனக்கோ விஷமில்லை. உன்னுல் மனிதனுக்கு ஒரு பிரயோஜனமும் காணப்படவில்லை. மனிதனுக்கு அபகாரம்

செய்ய உன்னால் முடியாது. உன்மகிமைக்குக காரணம் புலப்பட வில்லை.

இவ்வாறே, வக்கீலும் பண்டிதரும் பூஜாரியும் சொல்லக் கடைசியாக, நான் ஓர் உயிர்நூல் அறிஞரிடம் சென்று தலை வணங்கிப் பயந்து நடுநடுக்கத்துடன்வணக்கமாகக் கேட்டேன்:

"உயிர்நூல் அறிஞரே! உயிர்ப் பிச்சை தரவேண்டும். ஒரு சந்தேகம் தீர்த்துக்கொள்வதற்காக நான் உம்மிடம் வந்தேன். என்னைப்பிடித்து க்ளோரபாரத்தினால் (*Chloroform*) கொன்று, என்வயிற்றைக் கிழித்துப் புட்டியில் போட்டு ஸ்பிரிட் (*Spirit*) ஊற்றி, உம் காட்சிச்சாலையில் வைக்காமல், என்னகாரணத்தினால் ஜகத்தையெல்லாம் ஆளும் மனிதன் என்னை உயர்வாகக்கொண் டாடுகிறான், என் சொல்லுக்குப் பலன் கொடுக்கிறான் என்பதைச் சொல்லவேண்டும்."

உயிர்நூல் அறிஞர்:—அப்பா, பல்லி! பயம் வேண்டாம். உன்னைக்கொன்று புட்டியில் போட்ட நாள்கள் போய்விட்டன. இப்போது, உன்னை நீ இருக்கும் இடத்திலேயே செவ்வையாகக் கவனித்து உன் நடத்தைகளையும், உன் ஆகாரம், நீ அதைத் தேடும் வழி, நீ முட்டையிட்டுக்குஞ்சுகளை அபிவிருத்திக்குக்கொண்டுவரும் வழி முதலியவற்றையும் கற்றுக்கொண்டு, அந்தகாரத்தில் முழுகி யிருக்கும் நாங்கள் உலக வாழ்க்கையைச் சுகமாகக் கழிப்பதற்கு நீயும் மற்றப்பிராணிகளும் எவ்வாறுநடந்து கொள்ளுகிறீர்களோ அவ்வாறே நாங்களும் நடக்கவேண்டும் என்று முயலுகிறோம். நீ கேட்டகேள்விகளுக்குச் சரியானஉத்தரம் அளிக்க எனக்குத் தெரி யாதபோதிலும், எனக்குத் தோன்றும் இரண்டு காரணங்களை மட் டும் கூறுகிறேன், கேள்:

பிரகிருதிசிருஷ்டியில் ஆதியில், புழு பூச்சிமுதலிய ஜந்துக் கள் தோன்றின. பிறகு நீரில்வாழும் மீன்களும், அதன் பிறகு நீரிலும் நிலத்திலும் வாழும் தவளை முதலிய முதுகு எலும் புடைய பிராணிகளும் தோன்றின. அவைகளுக்குப் பிறகு நிலத்தி லேயே வாழக் கூடிய ஊர்வனவும், அவற்றினின்றும் பக்ஷிகளும், உரோமம் வாய்ந்த ஸ்தன்யபானிகளும்தோன்றின. ஊர்வனவற்றின் வகுப்பில் உன் இனம் முதலாவதாகவும், பாம்பு, முதலை, ஆமை யென்பன பிறகும் உதித்தனவென்று தோன்றுகிறது. ஊர்வனவகுப் பின் ஒரு கிளையே பக்ஷிகளாம்; மற்றொரு கிளையே ஸ்தன்ய பானி களாகிய மிருகங்கள், மனிதன் முதலிய பிராணிகள். மனிதஉற்பத்திக் குக் காரணபூதங்களாகிய பிராணிகளில், உன் இனம் முதல் முதல்

நிலத்தில் வசிக்க வல்லமை உள்ளவையானபடியால் உங்களினத்தை ஒரு சிருஷ்டிகர்த்தாவாக வைத்துக் கும்பிடுகிறார்கள் என்று நம்புகிறேன். இரண்டாவது உன் சொல்லுக்குப் பலன்கூறும் காரணம் என்னவெனில், உன் இனம் பூமியில் தோன்றுவதற்கு முன்னிருந்த பூச்சி, மீன் இனங்களுக்கு வாயினால் சப்தம் செய்யும் சக்தி கிடையாது. தவளைக்குச் சப்தம் செய்யும் சக்தி இருந்தபோதிலும், மழைக் காலம் தவிர மற்றக் காலங்களில் பாம்பின் வாயில் அகப்பட்டுக் கொண்டால் ஒழியத் தவளை சப்தம் செய்வதில்லை. நீயோ பேச்சுப் போல் சப்தம் செய்கிறாய். சிருஷ்டியில், முதல் முதலில் உனக்கு வாயினால் சப்தம் செய்யும் சக்தி உண்டானபடியால் உன்சொல்லுக்குப் பலன்களை ஏற்படுத்தினார்கள் என்று நான் நினைக்கிறேன். நீரைவிட்டு நிலத்தில் வாழ்வதற்கு உரிய உன் அமைப்பே, உன் பெருமைக்குப் போதுமான காரணம்.

"ஐயா! நிரம்ப சந்தோஷம். பக்ஷிகள், உரோமம் வாய்ந்த ஸ்தன்ய பானிகள், மனிதன் எல்லாரும் என் வகுப்பைச் சேர்ந்த பிராணிகளினின்றும் உதித்தன என்று கேட்கும்போது எனக்கு ஆச்சரியமும் கர்வமும் மேலிடுகின்றன. இச்செய்தியை என் இனத்தைச்சார்ந்த மற்றவர்களிடம் சொன்னால், அவர்களும் எவ்வளவு சந்தோஷம் அடைவார்களோ! நான்போய், ஓணான், அரணை, பச்சை ஓந்தி, உடும்பு முதலிய என் இனத்தாரைக் கூட்டிக்கொண்டு வருகிறேன். தயவு செய்து எங்களுக்கெல்லாம், எக்காரணத்தினால் எங்கள் வகுப்பைப் பக்ஷி மிருகவகுப்புக்களின் காரணபூதமென்று நினைக்கிறீர் என்பதைத் தெளிவாய்க் கூறவேண்டும்."

உயிர்நூல் அறிஞர்:—அப்படியே; சரி. எல்லாரையும் கூப்பிட்டுக் கொண்டு வா. முடியுமானால், எங்கேயாவது ஒருபல்லி அல்லது ஓணான் இறந்துபோய் அதிக நேரம் ஆகாமலிருந்தால், அந்தப் பிணத்தையும் கொண்டுவா; பக்ஷி, மிருகம், மனிதன், முதலியவைகளைப்போல் உன் தேகத்திலும் இந்திரியங்கள் அமைந்திருப்பதைக் காட்டுகிறேன். அதைப்பார்த்தால், உனக்கு எல்லாம் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் புலப்படும்.

இது கேட்டதும், நான் உடனே புறப்பட்டுப் பக்கத்திலிருந்த புதரில் சென்று என் இனத்தார் எல்லாரையும் கூப்பிட்டுக் கொண்டு வந்தேன்; வருகையில், ஒருமரத்தினடியில் ஒரு பூனை ஓர் ஓணானை வாயில் கவ்விக்கொண்டிருப்பதை நாங்கள் பார்த்தோம். எப்படியாவது கொத்துயிரும் கொலையுயிருமாயிருக்கும் அந்த ஓணானைப் பூனைவாயிலிருந்து மீட்டால், உயிர் நூல் அறிஞருக்கு அர்ப்பணம் செய்ய உசிதமாயிருக்கும் என்று எண்ணி, பூனையோடு

எவ்வாறு சண்டையிடுவது என்று எண்ணிக்கொண்டிருந்தோம். அத்தருணத்தில், கையில் சாமணம், கத்த, கத்திரி, ஊசிகளுடன் உயிர் நூல் அறிஞரே எங்கள் திசையை நோக்கிவந்தார். அவரைக் கண்டு பயந்த பூனை ஓடத் தொடங்கி என்னையும் மற்ற என் இனத்தாரையும் பார்த்து, ஓணானுடன் ஒரு பல்லியையும் சேர்த்துப் புசிக்கலாமென்ற துராசைகொண்டு என்மேல் பாய்ந்தது. வாயிலிருந்த ஓணானும் விழுந்தது. நானும் திடீரென்று ஒதுங்கித் தப்பித்துக் கொண்டேன். உடனே உயிர்நூல் அறிஞர் செத்துப்போன ஓணானைத் தம் சாமணத்தினால் பிடித்துக்கொண்டு எங்களுக்குப் பின்வருமாறு எடுத்துக் காட்டலானார்:

"ஓணானின் தேகம், தலை, கழுத்து, உடல், வால் என்ற பாகங்களை உடையது. உடலில் இரண்டு ஜதை அவயவங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. பொந்துகளிலும், கிளைகளிலும் வசிப்பதனால் உருவம் நீண்டு உருண்டுள்ளது. விரல்களுக்குக் கூர்மையான நகங்கள் இருக்கின்றன. இந்நகங்களினால் ஓணான் சுலபமாக மரம், கொடி, சுவர்களாகியவற்றின்மேல் ஏறுகிறது. மிகவும் வழவழப்பான கண்ணாடி போன்ற சுவர்களில் ஓணான் ஏற முடியாது".

பல்லி:—ஐயா! நான் மிகச் சுலபமாக எவ்வளவு வழவழப்பாயிருந்தாலும் செல்லுவேன்.

உயிர்நூல் அறிஞர்:—சற்றுப் பொறு. கடைசியில் உங்கள் ஒவ்வொருவரையும் பற்றிய விசேஷ குணங்களை எடுத்துச் சொல்லுகிறேன். இப்போது ஓணானைக் கவனியுங்கள்!

பக்ஷிகளுக்குள்ள சிறகுபோலவும், ஸ்தன்யபானிகளுக்கு உரோமம்போலவும் ஓணானுக்கு உடல் முழுவதும் சிறியசிதல்கள் மூடிக்கொண்டிருக்கின்றன. தலைப்பாகத்தின்முன் அகன்றவாயும் அதன்மேல் இரண்டு சிறிய நாசித்துவாரங்களும் இருக்கின்றன. தலையின் இரண்டு பக்கத்திலும் ஒவ்வொரு கண் உண்டு. மேல் இமை கீழ் இமையோடு மெல்லிய வெளுத்த மூன்றும் இமையும் உண்டு. கண்ணுக்குச் சற்றுப் பின்னே காதின் துவாரம் மெல்லிய தோலினால் மூடப்பட்டிருக்கிறது. ஓணானின் தலையின்மேலும் கழுத்திலும் கொம்பு போன்ற சிறிய முட்கள் இருக்கின்றன.

ஓணானின் உடல் நீண்டு இரண்டு ஜோடி அவயவங்களை உடையதாயிருக்கிறது. முன்னே இருக்கும் கைகள் குட்டையானவை; பின்னே இருக்கும் கால்கள் சற்று நீளமானவை. கை கால் ஒவ்வொன்றும் ஐந்து ஐந்து கூர்மையான நகங்களை உடையதா

யிருக்கிறது. ஓணானுக்கு வால் நீளம். வாலுக்கும் உடலுக்கும் மத்தியில், கீழ்ப்பாகத்தில் ஒரு துவாரம் உண்டு. அதன் வழியே மலம், மூத்திரம், ஆண் ரேணுக்கள் (*Male germ cells*) முட்டைகள் எல்லாம் வெளியே வருகின்றன. ஓணான் வாயைத் திறந்து பார்த்தால் அதனுள் அநேக வரிசைகள் பற்கள் காணப்படுகின்றன. பற்கள் எல்லாம் ஒரே மாதிரியாக இருக்கின்றன. பற்கள் தாடை எலும்புகளின் பக்கத்தில் புதைக்கப்பட்டிருக்கின்றன; எளிதில் பிடுங்கிவிடக்கூடும். ஓணானின் நாக்கு அதிக நீளமல்ல. பற்கள் ஆகாரத்தைக் கடிப்பதற்குப் பிரயோஜனப்படமாட்டா. வாயின் பின்புறத்தில் இருக்கும் ஒரு சிறிய துவாரத்தின் வழியே காற்று சுவாஸப்பைகளுக்குச் செல்லுகிறது.

ஓணான் புதர்களிலும், மரக்கிளைகளிலும், தரையிலும் வசிக்கும். சிறிய பூச்சிபுழுக்களைப் பிடித்துத்தின்னும். சிலவேளைகளில் ரஸ்தாக்களின் ஓரத்தில் நின்று கொண்டு தலையை அடிக்கடி தூக்கித்தூக்கிப் பார்க்கும். வெருட்டினால் உடனே ஓடிவிடும். விரைவாகவே செல்லும்.

இப்படியெல்லாம் கூறினபிறகு, உயிர்நூல் அறிஞர் செத்துப்போன ஓணானை ஒரு சிறிய பலகையின்மேல், மேல்புறம் கீழாக வைத்துத் தம் கையிலிருந்த கத்தரியினாலும் சாமணத்தினாலும் அதன் உடலை அறுத்துக் காட்டினார். அச்சிறிய தேகத்தினுள் அடங்கியிருக்கும் அவயவங்களைப் பார்த்தபொழுது எங்களுக்கு ஆச்சரியம் மேலிட்டது. உடலின் முன்பாகத்தின் மத்தியில் மூன்று அறைகளாகத்தடுக்கப்பட்ட ஹ்ருதயம் ஒன்றிருக்கிறது. அதினின்றும் மூன்று ஜதை இரத்தக்குழாய்கள், இரத்தத்தைச் சுவாஸப்பைகளுக்கும் தேகத்தில் உள்ள மற்ற அவயவங்களுக்கும் கொண்டு போகின்றன. மற்றும் மூன்று குழாய்கள் இரத்தத்தை ஹ்ருதயத்திற்குக் கொண்டுவந்து சேர்க்கின்றன. ஹ்ருதயத்தின் இரண்டு பக்கங்களிலும் இரண்டு சுவாஸப்பைகள் இருக்கின்றன. உடலின் மத்திய பாகத்தில், அநேக பாகங்களாகத் துண்டுபட்டிருக்கும் ஈரலும், அதன் இடது பக்கத்தில் வயிறும் காணப்படுகின்றன. உடலைப் போல் வயிறு நீண்டு இருக்கிறது. வயிற்றிலிருந்து சிறிய குடலும் அதன்பிறகு பெரிய குடலும் வளைந்து வளைந்து சுருட்டப்பட்டிருக்கின்றன. கடைசியாகக் குடல் ஆஸனத்துவாரத்தில் போய்ச் சேருகிறது. குடலைச் சற்று ஒருபுறம் தள்ளிப்பார்த்தால், மூத்திர கோசங்கள் (*Kidneys*), மூத்திரக்குழாய்கள், ஆண் உறுப்புக்கள் அவற்றின் குழாய்களாகியவை காணப்படுகின்றன.

இவைகளையெல்லாம் பார்த்து வியப்படையுங் காலத்தில், அறிஞர், மாமிசத்தை அறுத்து முதுகு எலும்பையும் காட்டினார்; பின்னர், எலும்பையும் வெட்டி அதனுள் இருக்கும் முதுகு நரம்பின் ஒரு பாகத்தையும் காட்டி, அதன்பின் மண்டையைப் பிளந்து மூளையையும் வெளிப்படுத்தினார். அதன் அவயவங்கள் யாவும் மனிதன் உடம்பிலுள்ளவற்றைப் போலவே அமைக்கப்பட்டிருக்கின்றன; ஆனால் அவ்வளவ விஸ்தாரமாகவும் பிரபலமாகவும் சூக்ஷ்மமாகவும் இல்லை.

இவையெல்லாம் கண்டவுடன், 'நாங்கள் எவ்வாறு சுவாஸிக்கிறோம், எங்கள் உணவு எவ்வகையில் ஜீர்ணம் ஆகிறது, நாங்கள் எப்படி முட்டையிடுகிறோம்' என்பவற்றைப்போன்ற அநேக விஷயங்களை நாங்கள் எளிதில் அறிந்தோம். ஆனாலும், மற்றும் சில சந்தேகங்கள் தோன்ற, அறிஞரை நான் பின்வருமாறு கேட்டேன்:

"ஐயா! ஏன் ஓணானுக்குப் பேசும் சக்தி கிடையாது?"

அறிஞர்:-—வாயின் உட்புறத்தில் சுவாஸப்பைகளுக்குக்காற்றானது செல்வதற்கு ஒரு துவாரம் இருக்கிறது என்று சொன்னேனல்லவா? அந்தத் துவாரத்திற்கும் சுவாஸப்பைகளுக்கும் இடையே சுவாஸக்குழாய் ஒன்று இருக்கிறது. அக்குழாயின் முதற்பாகம் (வாயினண்டை) சற்றுப் பருத்திருக்கும். இதனுள், தவளை, பல்லி, பச்சை ஓந்தி முதலிய ஜந்துக்களுக்கு இரண்டு தகடுபோன்ற கயிறுகள் உண்டு. காற்றானது உள்ளே போகும்பொழுதும் வெளியே வரும்பொழுதும் அவைகளை அசக்கிச் சப்தத்தை உண்டாக்குகிறது.

பச்சை ஓந்தி:—ஐயா! நான் மட்டும் முட்டையிடாமல் குஞ்சுகளை வெளிப்படுத்தும் காரணம் என்ன?

அறிஞர்:—உன் உடலிலும் முட்டைகள்தான் உண்டாகின்றன. ஆனால், அவைகள் பெண் ஓந்தியின் உடலினுள்ளே பெண் உறுப்புக் குழாயிலே வெகுகாலம் தங்குவதனால் குஞ்சுகள் வெடித்து வெளியே வருகின்றன. வேறு விசேஷமில்லை.

அரணை:—ஐயா! மலையாள தேசத்தில் இருக்கும் ஒருவகைப் பல்லிக்குப் பறக்கும் சக்தி எவ்வாறு ஏற்பட்டது?

அறிஞர்:—அந்தப்பறக்கும் பல்லியின் விலா எலும்புகள் மிகவும் நீண்டிருக்கின்றன. அவ்வெலும்புகளில் மேலே சதைபடர்ந்திருக்கிறது. பல்லி எலும்புகளை விரிக்கும்; உட்காரும்போது அவைகளை மடக்கிக் கொள்ளும். ஆனாலும் பறக்கும் பல்லி, பக்ஷிகளைப் போலாவது வௌவாலைப்போலாவது மேலே பறக்க முடியாது. உயரத்திலிருந்து சற்றுத் தூரத்திலும் தாழ்வாகவும் உள்ள இடத்திற்கு ஆகாயத்தில் சரிந்து செல்லும்.

ஓணன் :—ஐயா, போதும். எனக்கு ஒரு பெரிய ஸந்தேகம்; கேட்கிறேன், மன்னிக்கவேண்டும். எங்கள் இனத்தில் யார் உயர்ந்தவன் என்று சொல்லவேண்டும்.

அறிஞர் :—நான் சொல்லவேண்டியதில்லை. நீங்கள் ஒவ்வொருவரும் உங்கள் நடத்தையை இந்தச் சபையில் சொல்வீர்களானால், நீங்களே தீர்மானத்திற்கு வரலாம். ஆகவே உங்கள் ஒவ்வொருவருடைய கதையையும் சற்றுக் கேட்போம்.

பல்லி :—ஐயா, நான் மரம் சுவர் முதலிய எங்கும் ஏறி ஓடுவேன். வயிறு மேல்புறமாகவும், முதுகு கீழ்ப்புறமாகவும் இருக்கக் கூரையில் செல்லுவேன்; பேசுவேன்; மனிதனுடன் கூட வீடுகளில் வாழ்ந்து அவனுக்குத் துன்பம் விளைவிக்கும் கொசுமுதலிய பூச்சி புழுக்களைப் பிடித்துத் தின்பேன்.

அறிஞர் :—உன் உள்ளங்காலை எல்லோருக்கும் காட்டு. பாருங்கள்! அதில் புஸ்தகத்தின் ஏடுகள்போன்ற சிறிய செதில்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. வாயில் ஒருகாகிதத்தை வைத்துக் காற்றை உள்ளே இழுத்தால் காகிதம் எப்படி ஒட்டிக் கொள்ளுகிறதோ, அவ்வாறே இச்செதில்கள் சுவரோ கூரையோ மரமோ எங்கிருந்தாலும் ஒட்டிக் கொண்டு பல்லியைக் கீழே விழாமல் செய்கின்றன.

அரணை :—நான் புதர்களிலும் பொந்துகளிலும் வசிக்கிறேன். என் கைகால்கள் மிகவும் குட்டையாயிருப்பதால், என்னைப் பாம்பு என்று நினைத்துப் பக்ஷிகளும் சிறுகுழந்தைகளும் பயப்படுகிறார்கள். என் தேகம் மிக வழவழப்பாயும், பளபளப்பாயும் இருக்கிறது. என் வால் அறுந்துபோனால் முளைக்கும்; சில சமயங்களில் நான் ஒன்றுக்கு இரண்டு வால்களை உண்டாக்கிக்கொள்வேன்.

சிவப்புவால் அரணை :—நான் சிறிய ஜந்துவானாலும், என்னைக் கண்டால் மனிதனுக்குப் பயம் அதிகம். நான் நாக்கினால் நக்கினால், விஷம் என்று ஒரு வதந்தி ஏற்பட்டிருக்கிறது. எனக்கு விஷமில்லையென்பது எனக்குத் தெரியும். நான் ஏன் அதை மற்றவருக்குத் தெரிவிக்க வேண்டும்? அநியாயமாகச் சிறுபிள்ளைகள் என் வாலைத் துண்டித்து, அதைத் துடிக்கவிட்டு வேடிக்கை பார்க்கிறார்கள். ஒரு வால் போனால் எனக்கும் வேறொன்று முளைக்கும்.

வேலி அரணை (*Sitana*) :—என் மெல்லிய உடலும், அழகிய பருத்ததலையும், நீண்டகைகால்களும், மிகநீண்ட வாலும், அதிவிரைவான ஓட்டமுமே எனக்குப் பெருமை தருபவை. ஆயிரம் ரூபாய் பந்தயம்! நான் வேலியிலிருக்கும்போது என்னை யாராவது பிடித்துவிட்டால் சரி!

ஓணான்:—என் சிவந்த கழுத்தையும் தலையையும் பார்த்துச் சிலர் பயப்படுகிறார்கள். மற்ற விஷயங்களை அறிஞரே எடுத்துக் காட்டியிருக்கிறார்.

பறக்கும் பல்லி, "யார்தான் உயர்ந்தவனோ பாருங்கள்!" என்று சொல்லி, உயர ஏறிப் பறக்கத்தொடங்கியது.

உடும்பு:—என் வன்மையை மதில் ஏறிக் குதிக்கும்திருடர்களல்லவோ மெச்சிக் கொள்ளவேண்டும்! என் இரத்தத்தின் மகிமையை, குதிரைகளை வளர்க்கும் கனவான்கள் அறிவார்கள். பருத்த உடல், நீண்டவால், பிளந்த நாக்கு, உயர்ந்த மாமிசம், இவைகளே என் பெருமைக் குரியவை.

பச்சை ஓந்தி:—நான் அதிகமாய்ப் பேச விரும்பவில்லை. நான் செய்யும் சில அற்புதக் காட்சிகளைப் பாருங்கள். இதோ, கைகால்களை விட்டு விட்டேன்; வாலினால் கிளையைச் சுற்றிக்கொண்டேன். பெரிய காற்று அடித்தாலும், நான் கீழே விழமாட்டேன். இதோ பாருங்கள்: என் உடல் பச்சைநிறம்; ஒன்று, இரண்டு, மூன்று, சிவப்பாய் மாறிவிட்டது. சிவப்புப்போய், சாம்பல் நிறம்வந்து விட்டது. இப்படி நான் இருக்கும் இடத்திற்குத் தகுந்தாற்போல், என் நிறத்தைப் பச்சை, சிவப்பு, சாம்பல், மஞ்சள்களாக மாற்றிக்கொள்வேன். என் விரல்களைப் பாருங்கள்: இரண்டு முன்னும், மூன்று பின்னுமாகப் பக்ஷிகளைப்போல் கிளைகளைப் பற்றிக்கொள்ளும். என் கண்களைச் சற்றுக் கவனியுங்கள். வலது கண்ணால் வலது புறத்தில் இருக்கும் அறிஞரைப் பார்க்கிறேன் இடதுகண்ணால், மற்றொரு புறத்திலிருக்கும் பல்லியைப் பார்க்கிறேன். இந்தச் சக்தி வேறு யாருக்கு உண்டு? மற்றும் ஒருவேடிக்கை: அதோ சற்றுத்தூரத்தில் கிளையில் உட்கார்ந்திருக்கும் வெட்டுக்கிளியைக் கவனியுங்கள்.

இங்ஙனம் சொல்லி அது நாக்கை வெகுநீளம் நீட்டி, நாக்கின் பசையினால் வெட்டுக்கிளியைப் பற்றித் தின்றது. இவைகளையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்த ஒருபெண் பச்சை ஓந்தி ஒரு சிறிய குட்டியை வெளியிட்டது.

அதைக்கண்டு எல்லாரும் களித்து, அறிஞருக்கு எங்களுடைய அன்பார்ந்த நன்றியைக் காட்டி, இனத்தில் ஒவ்வொருவனும் பெரியவன் என்ற எண்ணங்கொண்டு எங்கள் வீடு சென்றோம்.

போய் வருகிறேன் வந்தனம்.

# கணக்கதிகாரம்

கி. ஸ்ரீநிவாஸ ராகவன், பி. ஏ., (ஆனர்ஸ்)

---

**ப**ண்டைத் தமிழ் ஆராய்ச்சியினால் இப்பொழுது பல துறைகளில் புத்தகங்கள் வெளிவருவதை நாம் அறிவோம். ஆயினும் நமது பழைய கணித புத்தககங்கள் எவை என்பதை நாம் அறியோம். நம் தேசத்துக் கிழவர்களுக்கும் ஏதோ 'லீலாவதி' என்னும் ஒருபெயரே தெரியுமல்லாது நமது புத்தகங்களின் பெயர்கள் அடியோடு மறந்துபோயிருப்பதைக் கவனித்தால் நாம் சில நூற்றாண்டுகளாகக் கணிதப்பயிற்சி செய்யவில்லை என்பது நன்றாக விளங்கும். வெளியாகி இருக்கும் சில ஸம்ஸ்கிருத கணிதபுத்தகங்களிலிருந்து அந்தக் காலத்து அறிவுவளர்ச்சியை நாம் தெரிந்து கொள்கிறோம். 20-ஆம் நூற்றாண்டு ஆரம்பத்தில் ஐரோப்பியர் அறிந்தவைகள் நம் கணிதாசிரியர்களுக்கு இற்றைக்கு 1000 வருஷங்களுக்கு முன்பே தெரிந்து இருந்தன. அம்மாதிரி தமிழில் ஆராய்ச்சிசெய்து சொல்ல இப்பொழுது நம்மால் முடியாது. அதுவுமன்றிப் பண்டைக்காலத்துத் தமிழ்க் கணிதாசிரியர்கள் ஸம்ஸ்கிருத வல்லுநராய் இருந்தவர்கள்; ஆதலால் பொது ஜனங்களுக்கு ஏற்றவற்றைத் தவிர மற்றவைகளைத் தமிழில் எழுதாமல் இருந்திருக்கவும் கூடும்.

கணக்கதிகாரம், கணிதாமிர்தம், கணக்கு, பெருங்குழி, ஆஸ்தானகோலாஹலம், கிரகணகணிதம் முதலியன முக்கியமான பண்டைத்தமிழ்க் கணிதபுத்தகங்கள். இவைகளைப் படிக்கப் பேரவாக் கொண்டு சிலகாலம் திரிந்தேன். தமிழில் அதிகப் பயிற்சி இல்லாததனாலும், ஏட்டுப்பிரதி படிப்பது மிகவும் கஷ்டமானதாதலாலும் நான் சிரமப்பட்டேன்.

ஆனால் ஸ்ரீமான் வ. வே. சு. ஐயர் அவர்கள் இரண்டு வருஷம் ஊட்டிய உணர்ச்சி என்னைத் தூண்டிக்கொண்டே நின்றது. அவருக்குப்பின் என் முயற்சிகள் வேறு சில துறைகளில் சென்றனவாதலால் நான் அப்புத்தகங்களை முற்றும் ஆராயாமல் விட்டுவிட்டேன். இவைகளின் ஏட்டுப்பிரதிகள் சென்னை ஏட்டுப்

பிரதிப் புத்தகசாலையிலும், தஞ்சை ஸரஸ்வதி மஹாலிலும் கிடைக்கக்கூடியவை.

கணக்கதிகார ஏட்டுப்பிரதிகள் 7 இருக்கின்றன. அவைகள் ஒன்றுக்கொன்று கூடக்குறையப் பாட்டுக்கள் உள்ளனவாயிருக்கின்றன. சிலவற்றில் உரையாசிரியரும் எழுதினோரும் பல உதாரணங்களையும் கணக்குக்களையும் சேர்த்து இருக்கிறார்கள். பிரதிகளில் முக்கியமானது சென்னைப் புத்தகசாலையில் உள்ள R.199,C. இது 12 அங்குல நீளம் 1½ அங்குல அகலமுள்ளது. 36 ஏடுகள் உள்ளன. ஆக 72 பக்கத்திற்கும் பக்கம் ஒன்றுக்கு 8 வரிவீதம் நன்றாக எழுதப்பட்டிருக்கிறது. I-4-16 என்னும் என்னுடையது ஒரு கையெழுத்து நோட்டுப் புத்தகம்; அதைச் சுலபமாகப் படிக்கலாம்.

இப்புத்தகத்தின் உள்ளுறை 'எண்ணளவு' என்பதே என்று ஆசிரியர் கூறுவதைக் கவனிக்கும்போது மற்ற அளவைகளைப்பற்றி அவர் அறிந்தும் எழுதியும் இருக்கலாம் என ஊஹிக்கவேண்டி இருக்கிறது. இதில் 60 பாட்டுகள் இருக்கின்றன. அவை 6 அத்தியாயங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. நிலத்துக்கணக்கில் 23-ம் பொன்னினத்தில் 20-ம், நெல்லுக்கணக்கில் 6-ம், அரிசிக்கணக்கில் 2-ம், கல்லுக்கணக்கில் 1-ம், கால்கணக்கில் 3-ம், பொதுவாக 5-ம் இருக்கின்றன. அதில் எண்மானம், நீளம், கனம், நிறை, காலம் முதலியவைகளுக்கு வாய்பாடு, பல மிருகங்கள் பூச்சிகள் முதலியவைகளின் ஜீவியகால அளவு, நீர்க்கடிகாரம் செய்யும் முறை, சேனைகளின் பெயர் தொகை முதலியவை, சதுர்யுகம், கலியில் சென்றவருஷம் காண, அளவைகளை அளவிட உரைத்தல், அளவை இடுகுறியாக்க, அஃகுநிலை, ஒருவன் சொன்ன தொகை அடக்க, கிராமபலன், சிறுகுழி அளவு, குளவெட்டுஅளவு, குளியூன்றிநிலகுசொல்வது, பல்உருச் சாதாரணக்ஷேத்திர கணிதம், வர்க்கம், வர்க்கமூலம், முதல்தொகை விகற்பம், ஒன்பதுதொகை வினா, விகற்பம், உரை கல், மெழுகு வெள்ளி பொன்னுக்கு மாற்றுச்சொல்வது, புடம்வைப்பது முதலியவை கூறப்பட்டிருக்கின்றன. இப்புத்தகத்தில் முறைகள் வெகு சுருக்கமாய் இருப்பதைக் கவனிக்கையில் இது பையன்களுக்கு உபாத்தியாயர் சொல்லிக்கொடுத்த பின் அவர்கள் வாய்பாடு செய்துகொள்ள எழுதப்பட்டதுபோல் தோன்றுகிறது.

ஆசிரியர் பெயர் 'காரி' என்பதும் அவர் சுமார் 2000 வருஷங்களுக்கு முன் 'டாலமி' முதலியவர்களால் பாராட்டப்பட்ட

'முகரி' நகரில் வாழ்ந்தவர் என்பதும் கீழ்க்கண்ட பாயிரத்தினுல் அறியக்கிடக்கின்றன.

"பொன்னி நாடு பொருந்திய புகழ்ப்பெரு
மன்னவர் சேவை வழிமுத லுடையோன்
முத்தமிழ் தெரிவோன் முகரியம் பெரும்பதி
மத்தியிற் றன்ம மறையவர் வாழும்
குற்றமில் காட்சிக் கொறுக்கையர் கோமான்
புத்தன் அருளிய புதல்வன் மேன்மைக்
கணக்கர் சிரோமணி காரி"

இதனின்று இவர்காலம் முகரி சோழர்களால் ஆளப்பட்ட காலமென்றும், புத்தமதம் தமிழ்நாட்டில் விளங்கின காலத்தை ஒட்டியது என்றும் அறியலாம். இவரை '**மேன்மைக்கணக்கர் சிரோமணி**' என்று கூறி இருப்பதால், இவர் ஒரு பெரிய முக்கியமான வித்தியாசாலையில் கணிதாசிரியராகவாவது, முக்கியமானவொரு கணிதபுத்தம் எழுதி, அரசனுல் நன்கு மதிக்கப்பட்டுச் செல்வவந்தராக வாழ்ந்தவராகவாவது இருக்கவேண்டும். இப்புத்தகத்திற்கு உரை ஆசிரியர்கள் பல மதஸ்தர்களாக இருப்பதை அவர்கள் எழுதியுள்ள சிறப்புப்பாயிரங்களால் அறிகிறோம். அவற்றில் ஒன்று கீழ்வருமாறு:

"இக்கணக்கி லொன்றும் இடையூறு வாராமல்
பொற்கணவன் பெற்ற பொருகளிறே—இக்கணக்கில்
நேரே விளங்கி நிகரன்றி நிற்கும்வண்ணம்
பார்மேல் விளங்கவே பார்"

இதற்கு அகத்தீசனுர் சிறப்புப்பாயிரம் என ஒன்று இருக்கிறது.

வேறு ஓர் உரையாசிரியர், கால அளவிற்கு உதாரணங்காட்டும் பொழுது, தமிழ்நாட்டு வழக்கமான சாலிவாகன சகாத்தத்தில் தமது காலத்தைப் பராபவ வருஷம் சகம் 1528 என்று கூறியிருப்பதைக் கவனிக்கும்போது (கலி 4707-1607 கி.பி.) அவ்வுரை ஆசிரியர் காலம் இற்றைக்குச் சுமார் 325 வருஷங்களுக்கு முற்பட்டது என்று சொல்லலாம். அதற்குப் பிறகே நம் தேசத்தில் இது வழக்கொழிந்தது போலும். ஆனுல் ஆசிரியர் கலியுகத்தின் கால அளவு சொல்லி இருப்பதைக் கவனிக்க நம் நாட்டில் சாலிவாகன சகாப்தம் வழக்குக்கு வருவதற்குமுன்பே அவர் இருந்து இருக்கவேண்டும் என்று கூறலாம்; (அதாவது இற்றைக்கு சுமார் 2000 வருஷங்களுக்குமுன்). 'மேன்மைக் கணக்கர் சிரோமணி' எனப் பட்டம்

பெற்று அரசனால் போற்றப்பட்டுவந்த இவர் இந்தப் புத்தகத்தில் ஆர்யபட்டர், பிர்ம்ம குப்தர் முதலியவர்களைப்பற்றியும் அவர்களுக்கு முன் பின் இருந்த ஆசிரியர்கள், அவர்களது கணித வான சாஸ்திர நூல்கள் இவற்றைப் பற்றியும் கூறுவதைக் கவனிக்கையில், இவர் அவர்களுக்குமுன் இருந்து இருக்கவேண்டும் அல்லது வேறு ஒரு பெரிய கணித புத்தகம் எழுதி இருக்க வேண்டும் என்றும், இது பொது ஜனங்களுக்கு என்று வாய்பாடு போல் எழுதப்பட்ட சிறு நூல் என்றும் கொள்ளலாம். பண்டைக் காலத்து கணித புத்தகங்களில் வானசாஸ்திரம் ஒரு பாகமாயிருப்பது நாம் அறிவோம். கணிதமும் வானசாஸ்திரமும் ஒரு பொழுதும் பிரிக்கப்பட்டவை அல்ல. அப்படி இருக்க இவருடைய புத்தகத்தில் பலவிஷயங்களைக் கூறி இருக்க வானசாஸ்திரம் அடியோடு விடுபட்டிருப்பதைப் பார்த்தால் இவர் வேறு ஒரு பெரிய கணிதபுத்தகம் எழுதி அதில் ஜோதிஷம் முதலியவற்றை விஸ்தாரமாக எழுதி இருக்கவேண்டும் என என்மனதில் தோன்றுகிறது. எவரேனும் முயற்சி எடுத்துக்கொண்டு இவற்றை ஆராய்ச்சி செய்யின் தமிழ்நாடு நன்றியுள்ளதாகும்.

ஏட்டுப் பிரதிகள் கிடைக்கும் இடம்:

I சென்னை எழும்பூர்ப் புத்தகாலயம்.

1. கணக்கதிகாரம் R. 199. c; 76. I. 4. c; R. 238. 1 326. H. 62. 15.
2. ஆஸ்தான கோலாஹலம் H. 60-14.
3. கணக்கு 235. H. 60-14. a.
4. பெருங்குழி R. 204.
5. கிரகணகணிதம் R. 245.
6. கணிதாம்ருதம். 331-H. 62-18-c.
   330-H. 62-18-a.
   163-H. 54-14-b.

II தஞ்சை ஸரஸ்வதி மஹால்.

கணக்கதிகாரம்: 79, 80, 346.

---

## ஆகாயவிமானங்களின் வேகத்தை அதிகப்படுத்தல்

*ஆகாயவிமானங்களின் இறக்கைகளிலும் பக்கங்களிலும் மெழுகைத் தடவி மழமழப்பாக்கினால் அவைகளின் வேகம் அதிகரிக்கின்றதாம். மணிக்கு நூற்றைம்பது மைல்களுக்கு அதிகமான வேகத்துடன் பறக்க வேண்டிய விமானங்களுக்கு இவ்வாறு செய்கின்றனர்.*



# கல்யாணி

ஐ.

——(o)——

(நாடக பாத்திரங்கள்.)

வேங்கடராமன்—ஒரு வக்கீல்.

ராமச்சந்திரன்—பி. ஏ. பரீட்சையில் தேர்ச்சி செய்துவிட்டு வேலைக்காகத் திரிந்துகொண்டிருக்கும் ஒருவன்.

ஜானகிராமையர்—வேங்கடராமனுடைய மாமன்.

கல்யாணி—வேங்கடராமன் மனைவி.

மங்கம்மாள்—வேங்கடராமன் தாயார்.

---

## காட்சி 1.

[இடம்: வேங்கடராமன் வீடு; காலம்: மாலை.]

(கல்யாணி ஏற்றிய விளக்குக்குக் குங்குமமிட்டுப் பூச்சூட்டியும், பக்கத்தில் சுவரில் மாட்டியிருக்கும் ராம படத்திற்குப் பூச்சூட்டியும் பிரதக்ஷிணம் செய்து நமஸ்கரித்து, அங்கு வந்த தன் அத்தை மங்கம்மாளுக்கு நமஸ்காரம் செய்கிறாள்.)

மங்கம்மாள்:—மகா ராஜியாயிரு கண்ணே, கோவிலில் தீபாராதனை சமயமாயிருக்கிறது. பத்திரமாயிரு. இதோ போய், சுவாமி தரிசனம் செய்து வந்து விடுகிறேன்.

கல்யாணி:—ஆகா அத்தை! போய் வாருங்கள். இருட்டிப் போய்விட்டது; கீழே பார்த்துப் போங்கள். எங்கே பார்த்தாலும் கல்லும் கறடுமாயிருக்கிறது. வழியில் வெளிச்சமே யில்லை. சீக்கிரம் வந்துவிடுங்கள்.

மங்கம்மாள்:—கண்ணே, கவலைப்படாதே. அடுத்த வீட்டுக் காரர்கள் கூடவருகிறார்கள். இதோ வந்து விடுகிறேன்.

(போகிறாள்.)

கல்யாணி:—(மறுபடியும் ராமபடத்தின் முன்வந்து கை கூப்பி) ராமா! உன் கருணை என்னென்று வியப்பேன்! உனது கிருபையினாலேயே ஏற்ற கணவரைப் பேற்றேன். அவரும் பி. எல்.

பரீக்ஷையில் தேறி 'ஸன்னத்' பெறச் சென்னபட்டணத்திற்குச் சென்றிருக்கிறார். எப்பொழுது திரும்பிவருவாரென்று ஆவலுட னிருக்கிறேன். ராமா, அவரைத் தீர்க்காயுளுடன் வைத்திருந்து என் மங்கலத்தைக் காக்கவேண்டும்.

(நமஸ்கரித்துக் கையில் தம்புரா வைத்துச் சுருதி மீட்டிக் கொண்டிருக்கிறாள். வாசலில் ஏதோ சப்தம் கேட்கிறது. கல்யாணி திடுக்கிட்டுப் பார்க்கிறாள். வாயில் வெற்றிலைபாக்குப் புகையிலை யுடன் கோபு பிரவேசிக்கிறான்.)

**கோபு:**—என்ன கல்யாணி! சௌக்கியந்தானே?

**கல்யாணி:**—(தனக்குள்) ஐயோ! இந்தச் சனி எங்கேவந்தது இப்பொழுது! (வெளிப்படையாக) அத்தான் வா. ஏது இத்தரு வாய்க்கு இங்கே வந்தாய்?

**கோபு:**—காரணம் வேறு வேண்டும் இதற்கு? வெறுமனே, வெகுநாளாய்ப் பார்க்க வில்லையே; அம்மங்காவைப் பார்த்து விட்டுப் போவோமென்றுதான் வந்தேன்.

**கல்யாணி:**—சந்தோஷம், அத்தான். இவ்வளவு கருணை வைத்திருக்கிறாயே. அதே போதும். வீட்டில் ஒருவருமில்லையோ? உன் தாயார் ஊருக்குப் போயிருந்தார்களே, வந்து விட்டார்களா?

**கோபு:**—இன்று காலையில்தான் வந்தாள். அம்மங்கா? உன் பேரில் நான் எப்பொழுதும் கருணை வைத்துத்தான் இருக்கிறேன். நீதான் ஏதோ மாதிரியாயிருக்கிறாய். இனிமேல் கவனிக்கவா போகிறாய்? பெரிய பி.ஏ., பி.எல். பெண்டாட்டி ஆகிவிட்டாய். உம்! அதிருக்கட்டும். கல்யாணி, வேங்கடராமனைக் காணவில்லையே, எங்கே? ஊருக்குப் போயிருக்கிறானா?

**கல்யாணி:**—அத்தான் நீ கேட்பது எனக்கு ஆச்சரியமா யிருக்கிறது. உனக்கு விஷயம் தெரியாமலா இருக்கும்? பி. எல். 'ஸன்னத்' பெற்றுவரப் பட்டணம் போயிருக்கிறார்கள்.

**கோபு:**—ஓகோ! தெரிகிறது. வாய் கொப்புளிக்கக் கொஞ்சம் ஜலம் கொண்டு வா.

**கல்யாணி:**—இதோ கொண்டுவருகிறேன்.

(போகிறாள்.)

**கோபு:**—(தனக்குள்) இவள் அத்தையும் கோவிலுக்குப் போகிறாள். வீட்டில் ஒருவருமில்லை. ஏ கல்யாணி! என்னை ஏமாற்றி உன் அத்தைமகனைக் கலியாணம் செய்துகொண்டாய். இன்று நீ எனக்கு இணங்கினாலாயிற்று. இல்லாவிட்டால் உன்

உயிருக்கு உலைவைப்பேன் என்பது மட்டும் நிச்சயம். அத்தான் அத்தானென்று பேசி என்னை ஏமாற்றவா கருதுகின்றாய்?—இதோ வருகிறாள்.

(எதையோ பார்ப்பதுபோல் பாசாங்கு செய்கிறாள்.)

கல்யாணி:—இந்தா அத்தான்.

(ஜலம் கொணர்ந்து கொடுக்கக் கோபு மெள்ளக் கையைத் தொடுகிறான்.)

கல்யாணி:—(தனக்குள்) ஏதோ விபரீத புத்தியுடன் இவன் இங்கே வந்திருப்பதாக நினைக்கிறேன். எதற்கும் தைரியத்தை விடக்கூடாது.

(கோபு வாய் கொப்புளித்துப் பாத்திரத்தைக் கல்யாணியிடம் கொடுக்கவருகிறான். கல்யாணி வாங்காமல் கீழே வைக்கும்படி சமிக்ஞை செய்கிறாள்).

கோபு:—இது என்ன புது வழக்கம்?

கல்யாணி:—இல்லை அத்தான், கோபித்துக்கொள்ளாதே. வீட்டில் ஒருவருமில்லை. நீயும் நானும் தனிமையாகப் பேசிக் கொண்டிருந்தால் அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் ஏசிப் பேச இடமாகும். எவ்வளவு படித்தால் தானென்ன? அல்லது நாகரிகம் வந்தென்ன? வம்புபேசும் பெண்மக்கள் சபைக்குக் குறைவில்லை. உன்னிடம் பாத்திரத்தை ஜலத்துடன் கொடுத்தபொழுது என்கை உன் கையிற்பட்டது. மறுபடியும் படப்போகிறதே என்று கீழே வைக்கச் சொன்னேன். தவறாக நினைக்காதே.

கோபு:—என்ன சாதுர்யமாகப் பேசுகிறாய்! 'காகம் கா் என்று கத்தியதாம், கணவனைக் கட்டி அணைத்தாளாம்' என்ற கதையாயிருக்கிறது. உன்னை நான் தொடக்கூடாதோ?

கல்யாணி:—அத்தான்! (கையைக்கூப்பி) உனக்குக் கோடி புண்ணியமுண்டு. சிறுபெண் மனப்பான்மை உனக்குத் தெரியாது. தனிமையாயிருக்கும் என்னுடன் வார்த்தையாடுவது உனக்கேற்ற தல்ல. போ, இப்பொழுது. அத்தை வந்தவுடன் வா.

கோபு:—ஹூம்! (பெருமூச்சு விடுகிறான்.)

கல்யாணி:—(தனக்குள்) மெள்ள இவனை வெளியில்போகச் செய்து கதவைத் தாளிடவேண்டும். (கையிலிருந்த மோதிரம் கீழே விழுந்ததைத் தேடுவதாகப் பாவனை செய்கிறாள்.) நான் உனக்குத் தண்ணீர் கொணர்ந்தபொழுது, வாசலில் நழுவவிட்டேனோ என்னவோ?

(கோபு வெளியில் தேடுகிறான்.)

**கல்யாணி:**—அத்தான், நல்ல பாட்டரி விளக்கொன்று கொண்டுவருகிறேன். இதோ வந்து விட்டேன்.

(உள்ளே போய், வெளியில் கோபு இருக்கும்பொழுது. வாசல் கதவைச் சார்த்தித் தாளிடுகிறுள்).

**கோபு:**—(கதவைத் தட்டிப்பார்க்கிறுன். அடைத்திருக்கிறது). கேவலம் ஓர் பெண்பிள்ளையா என்னை ஏமாற்றுகிறது? உன் உயிருக்கு வழி வைக்கிறேன்.

(போகிறுன்.)

---

## காட்சி 2.

---

[இடம்: கோபுவின் வீடு; காலம்: பகல்.]

(கோபு வீட்டுத்திண்ணையில் உட்கார்ந்துகொண்டு வெற்றிலை பாக்குப் போட்டுக்கொண்டிருக்கிறுன். ராமச்சந்திரன் வருகிறுன்.)

**ராம:**—கோபு! என்ன, சாவகாசமாய் உட்கார்ந்துகொண்டிருக்கிறுய்?

**கோபு:**—வா, அப்பா. இராமச்சந்திரா! ஏது நேற்று முழுவதும் உன்னைக்காணவில்லையே? பி. ஏ. பாஸ் பண்ணிவிட்டு வேலைக்கு அலைந்துகொண்டிருக்கிறுய். இன்னும் ஆறுமாதம் போனுல் என்னைப்போல் உனக்கும் வயது 25 முடிந்துவிடும். திண்ணை திண்ணையாய் உட்கார்ந்து வெற்றிலைபாக்குப் போடவேண்டியதுதான்...

**ராம:**—உன்னேடு என்னை இப்போழுதே சேர்த்துவிட்டாயா? என்னைக் காணேமென்கிறுயே. நேற்று மாலையில் வந்தேன். இரவு எட்டு மணிவரையில் காத்திருந்தேன்; உன்னைத்தான் காணேம்.

**கோபு:**—ஓஹோ! அந்தச் சமயத்திலா வந்தாய்?

**ராம:**—எந்தச் சமயத்தில்? பெருமூச்சு விடுகிறுயே?

**கோபு:**—வேங்கடராமன் வீட்டிற்குப் போயிருந்தேன்; அப்பொழுது அங்கே...........

**ராம:**—ஏண்டா! வேங்கடராமன்தான் ஊரில் இல்லையே. அங்கே உனக்கு என்னவேலை?

**கோபு:**—போடா; பைத்தியக்காரா! அங்கே என் அம்மங்கா இல்லையா ஒருத்தி?

ராம:—உம்! யார்?

கோபு:—கல்யாணியடா! வேங்கடராமன் பெண்டாட்டி; லகுப்பட்ட பேர்வழியில்லையடா அவள்!

ராம:—கோபு, வீணில் அபவாதம் சொல்லாதே. அந்தக் குழந்தை மஹாபதிவ்ருதையாச்சே. வாசலில் சென்றால் தன் கால்விரலைத் தவிர வேறு எதையும் பார்க்கமாட்டாளே அவள்!

கோபு:—அட! சட்! அப்படிப்பட்ட பெண்களைத்தான் அப்பா நம்பக்கூடாது. நீ இந்தமாதிரி உலக வியவகாரமே தெரியாமலிருந்தால் எப்படியடா உனக்கு வேலையகப்படும்? பார்த்த மாத்திரத்தில் அறியவேண்டாமா?

ராம:—நீ ஆஸாமிகளை அறியுங் குணத்தைப்பெற்றவன். அதனால் தான் தீவட்டித்தடியனாய்த் திரிகிறாய். போடா; போ.

கோபு:—அடே ராமு! நான் சொல்வதில் சந்தேகமேயில்லை. இதைப்பற்றி முழுவதும் பிறகு சொல்லுகிறேன். எனக்கு நேற்று இரவு நடந்ததை நினைக்கும்பொழுது மஹா அவமானமா யிருக்கிறது. உன்னிடம் சொல்லக்கூட வெட்கமாயிருக்கிறது. நேற்று இரவு என்னை மிகவும் அவமானப்படுத்திவிட்டாள். அதற்கேற்றபடி.......

ராம:—நீ அங்கே போய் உன் கைவரிசையை ஆரம்பித் திருப்பாய்.

கோபு:—அடே! எனக்கு அம்மங்கா..(சற்று யோசித்து) பிறகு நான் சொல்லுவதாகச் சொன்னேனே. நான் பட்ட அவ மானத்திற்கு அவள் உயிருக்கே எப்படியாவது உலைவைத்துவிட வேண்டும்.

ராமு:—என்னடா! உன்னை அவ்வளவு கேவலமாகப் படுத்தி விட்டாள்?.......ஆமாம். ஆமாம். வேங்கடராமனும் நம் முடன் படித்த பயல்தானே. மெட்ராஸுக்குப் போகிறேன் என்ற கூடச் சொல்லிக்கொண்டு போகவில்லையடா! நானும் வாசலில் குதிர்மாதிரித்தான் உட்கார்ந்து கொண்டிருந்தேன்.

கோபு:—அடே! அவனுக்கு மட்டுமோ அந்தப் பெருமை? அவன் பெண்டாட்டி, இந்தக் கல்யாணியடா, சொர்ந்தக்காரர்களைக் கூடக் கவனிப்பதில்லையடா! நம் வேங்கடராமன் நல்லவன். இந்தக் கல்யாணிதான் அவனுக்கு இவ்வளவு கர்வம் வரும்படி ஏற்றிவிட்டவள். இவளைத் தொலைத்துவிட்டால் அவன் கர்வமும் இறங்கிவிடும். இப்பொழுது தெரிகிறதா?

ராம:—தெரிகிறது. அதற்கென்ன யோசனை செய்திருக்கிறாய்?

கோபு:—நான் சொல்லுகிறபடி செய்யவேண்டும்.

ராம:—என்னைக்கேட்பானேன்? பீ.ஏ. 'பாஸ்' பண்ணிவிட்டு ஒரு வேலையுமில்லாமல் உட்கார்ந்துகொண்டிருக்கிறேனே; நீ சொல்லுகிற வேலையைக்கூடவா கேட்கக்கூடாது?

கோபு:—இதோ இந்தக் கடிதாசும் பேனாவும் எடுத்துக் கொள். சொல்லுகிறபடி உன் கையெழுத்தென்று தெரியாதபடி எழுது.

(கோபு சொல்ல ராமச்சந்திரன் எழுதுகிறான்.)

"சிரஞ்சீவி வேங்கடராமனுக்கு ஆசீர்வாதம். க்ஷேமம் க்ஷேமத்திற்குப் பதில். இவ்விடம் விட்டு நீ போனதுமுதல் உன் மனைவி கல்யாணி அவள் அத்தானாகிய சோபு என்கிற பயலுடன் நிரம்பக் கசிந்து கொண்டிருப்பதாகத் தெரிகிறது. இவ்விஷயம் ஊர் முழுவதும் தெரிந்து கேலியாய் விட்டது. உடனே வர வேண்டும்.

இப்படிக்கு, உன் அத்தை,

மங்கம்மாள்."

ராம:—என்னடா இது? பேஷ்! நல்லயுக்தி!

கோபு:—அந்தக் கடிதத்தை "அ. வேங்கடராமன்; ஜானகி ராமையர் வசம், 51-நெ. வீடு, சின்னத்தம்பி தெரு, இராயப் பேட்டை, மதராஸ்" என்று விலாசமெழுதித் தபாலில் போட்டு விடு. அந்தக் கடிதம் வேங்கடராமன் கையில் சேருமுன் நீ சென்னைக்குப் போ. அவனை அங்கே கண்டு இந்த சமாசாசாரத்தை உண்மைபோல் சொல்லிவிடு. வேங்கடராமன் எவ்வளவு நல்லவனானாலும் பதற்றம் உள்ளவன். உன்னைப் பார்த்துச் சங்கதியைக் கேட்டுக் கடிதத்தையும் படித்தானானால் நான் நினைக்கிறபடியே நடக்கும். அப்புறம் வேடிக்கையைப் பார்ப்போம். இதோ! இந்தா, ரூபாய் ஐம்பது உன் செலவிற்கு வைத்துக்கொள். எப்பொழுது புறப்படுகிறாய்?

ராம:—இங்கே வெட்டி முறிக்கிற வேலை அதிகமா? இதோ போய்ச் சாப்பிட்டவுடன் புறப்பட்டுவிடுகிறேன்: போய்வரட்டுமா?

(தனக்குள்) நல்ல வேளை! சென்னை, கிண்டியில் நடக்கும் குதிரைப்பந்தயத்திற்குப் போகிறதற்குப் பணமில்லையேயென்று ஏங்கினேன். சமயத்திற்குப் பணம் வந்தது. நாளையதினம் 'பார்லகிமிடி கப்' பார்த்துவிட்டுப் பிறகு போய் வேங்கடராமனைப்

பார்த்தாலாச்சு. இந்த லெட்டரையும் நாளையதினம் தபாலில் அனுப்பி விடுகிறேன்.

(போகிறான்.)

கோபு:—கல்யாணி! உன் கழுத்தில் கத்திவைத்தாய் விட்டது.

——:o:——

## காட்சி 3.

[இடம்: சென்னைக் கடற்கரை; காலம்:மாலை.]

(வேங்கடராமன் உலாவிக்கொண்டிருக்கிறான்.)

வேங்:—ஊரைவிட்டுப் புறப்படும் பொழுதே கல்யாணி மனம் வருந்தினாள். என் ஞாபகமும் அவள் மீதே நிற்கின்றது. வந்த வேலை முடிந்துவிட்டது. இன்று இராத்திரி எட்டு மணிக்கே புறப்படவேண்டுமென்றிருந்தேன். மாமா இன்று தாமதித்து நாளை புதன்கிழமை போகும்படி சொல்லி யிருக்கிறார். அவர் மொழியை மீறிச் செல்லவும் மனம் வரவில்லை......

(ராமச்சந்திரன் வருகிறான்.)

வேங்:—ராமு! இங்கே எப்பொழுது வந்தாய் நீ? ஊரிலெல்லாரும் சுகந்தானே?

ராம:—அப்படியா! நீ இங்கேதானிருக்கிறாயா? நீ வந்த தகவல் தெரிந்து உன்னைக் காணவேண்டுமென்று நினைத்தேன். ஆயினும் உன் ஜாகையை அறியமுடியவில்லை. நேற்றே சன்னது வாங்கிக்கொண்டு இரவு ஊருக்குப்போய்விட்டால் என்ன செய்வதென்று மனம் வருந்தினேன். நல்ல வேளை; உன்னைச் சந்திக்க நேர்ந்தது. சௌக்கியந்தானே? ஊரில் எல்லாரும் சௌக்கியந்தான்.

வேங்:—உன்னை இங்கே சந்தித்ததில் மிகுதியான சந்தோஷம் கொண்டேன். இன்று கமிஷனர் ஆபீசில் ஒரு ரிவால்வர் லைசென்சு வாங்கத் தவக்கப்பட்டது. அன்றியும் என் மாமா நாளைப் போகும்படி சொல்லியிருக்கிறார். நான் இங்கே வந்து ஒரு வாரமாகி விட்டது. ஊரில் ஏதாவது விசேஷமுண்டா? இருக்கட்டும். நீ என்ன காரணமாக வந்தாய் என்று சொல்லவில்லையே!

ராம:—நான் சென்ற சனிக்கிழமை கிண்டி குதிரைப் பந்தயத்திற்கு வந்தேன். பந்தயத்தில் ரூ. 525 லாபம் வந்தது. நாளை 'சிவகங்கா கப்' பந்தயம்; போய்விட்டு இரவில் ஊருக்குப் பயணம். ஊரில் திருப்திகரமான விசேஷம் ஒன்றுமில்லை.

வேங்:—அதிருப்திகரமான விசேஷம் உண்டு போலும்?

ராம:—ஒன்றுண்டு, . உம். . . . அதென்ன ப்ரமாதம்? எங்குமுள்ள விசேஷந்தான். . தள்ளு. . பெற்றதெல்லாம் பிள்ளைகளா? நட்டதெல்லாம் மரங்களா?

வேங்:—என்ன அது? தள்ளென்று சொல்லுகிறாயே! நம்மூரில் நடைபெற்ற விசேஷத்தைக் கேட்க எனக்கு ஆவல் இராதா?

ராம:—இருக்கத்தான் செய்யும். ஆனால் அதைக் கேட்டால் கொஞ்சம் மனவருத்தமடைவாய். என்னவோ சின்னக் கழுதை. . தெரியாமல் செய்துவிட்டது. . உனக்கு ப்ராப்தம் அவ்வளவு தான்.

வேங்:—யாரது? என்ன சமாசாரம்? விளங்கச்சொல். என்னைப் பொறுத்த சமாசாரமென்று தெரிகிறது. என்னிடமே மறைத்துப் பேசுகின்றாயே?

ராம:—வெங்கு! அதைவிட்டுத் தள்ளு. தூண்டித்தூண்டிக் கேட்கிறாயே. . புத்தியில்லாமல் செய்த விஷயம். . அபவாதத்திற்கு இடம். . உழவுமாடுகளிலே ஒரு மாடு போனது என்று வைத்துக் கொள்.

வேங்:—யாருக்குப் புத்தியில்லை! என்னவோ மறைத்துப் பேசுகிறாயே!

ராம:—என்ன சொல்லச்சொல்லுகிறாய்? விஷயமும் உனக்குத் தெரியாதுபோலிருக்கிறது. நான் மறைக்கக்கூடியதுமில்லை. நான் இன்று சொல்லாதிருந்தாலும் நாளைக்கு உனக்கு யாராவது சொல்லுவார்கள். ஊர் முழுவதும் 'டாம்டாம்' ஆகிவிட்டதே? வீட்டிற்குள் ஏதேனும் விஷயம் நடந்தால் அது வெளியில் வரவேண்டுமோ?

வேங்:—ராமு, தயவுசெய்து சொல், வியக்தமாக.

ராம:—வேறென்ன? உன் பெண்சாதி—கல்யாணிதான்—என்னவோ—சின்னநாய்—அதை வெளியில் சொல்லக் கூசுகிறது. நிஜமோ—பொய்யோ—கேவலமான விஷயம்—ஊர்வாயை அடக்க முடியுமா! அப்பா வெங்கு! இனி மேலாவது என்னைத் தூண்டாதே.

வேங்:—இனிமேல் எப்படித் தூண்டாதிருக்க முடியும்? என் மனம் பெரிதும் கவலையடைகிறதே. என் மனைவியைப்பற்றி என்ன சமாசாரம்?

ராம:—வேறென்ன? நம் ஊருக்கு ஒரு போக்கிரி இருக்கிறானே இல்லையோ. . கோபு. . அந்தப் பயலோடே. . என்னவோ. . உம். .

வேங் :—என்ன? அவள் அத்தான் கோபு! (கோபத்துடன்) அவனுடன் என்ன? சிநேகமா?

ராம :—வெங்கு, நீயோ புத்திசாலி. இதெல்லாம் எங்கு மிருக்கிறதுதான்..மனசில் வைத்துக்கொள்ளாமல் விட்டு ஒழி.. நான் கேள்விப்பட்டுக் கோபுவையும் கண்டித்து வைத்திருக்கிறேன். இனி மட்டும் அப்படி ஏற்படாமல் பார்த்துக்கொள். அதுதான் புத்திசாலித் தனம். இதைப் பிரமாதம் பண்ணினால் உனக்குத் தான் கேவலம்.

வேங் :—இஸ்! (பெருமூச்சு விடுகிறான்).

ராம :—வெங்கு, இதற்குத்தான் நான் சொல்லமாட்டேன் என்றது. உன்புத்தி மிகவும் சபலமாயிருக்கிறது. இதற்கெல் லாம் கவலைப்பட்டு முடியுமோ? முன்னமே சொல்லி யிருக்கிறேன், விஷயம் நிஜமோ, பொய்யோ என்று.

வேங் :—ராமு! இப்பொழுது என் மனம் என்னவோ மாதிரியாக இருக்கிறது. நீ போய் வா; நான் நாளை ஊருக்குப் போகிறேன்.

ராம :—என்னவோ அப்பா; என்னைப்பற்றி வேறுவிதமாக நினைத்துக்கொள்ளாதே. நீதான் தூண்டித்தூண்டிக் கேட்டாய்; இல்லாவிட்டால் நான் சொல்லவேமாட்டேன். நான் நாளைக்குக் குதிரைப் பந்தயத்திற்குப்போய் இரவு ரயிலில் ஊருக்கு வந்து விடுகிறேன்.

(ராமச்சந்திரன் போகிறான்.)

வேங் :—(அங்குமிங்கும் உலவிக் கொண்டே) இதென்ன அநியாயம்!..கல்யாணியா!..அவளா இப்படிச் செய்பவள்! என் காதுகளை நம்ப இடமில்லையே! ஓர் வேளை அயோக்யர்கள் இந்த அவதூறை அவள் மீது சுமத்தினார்களோ? அல்லது உண்மையி லேயே இப்படி நடந்திருக்குமா?..நான் ஒருகாலும் இனி அதை நம்பமாட்டேன்..கோபு போக்கிரிதான்...ராமச்சந்திரன் இப்படி வீண்பழி சுமத்தக்கூடிய அயோக்கியனல்லவே. அவனும் அடிக்கடி அது நிஜமோ பொய்யோ என்று சொல்லிக்கொண்டான். நம் நாட்டில் வீண் வம்பர்கள் இந்த அபவாதங்களைக் கிளப்பிவிட்டு வேடிக்கை பார்ப்பது சகஜம்; எச்செயலினையும் ஆராய்ந்த பின்னரே செய்யவேண்டும்.

(ஜானகிராமையர் வீட்டிலுள்ள ஓர் வேலைக்காரன் ஒரு கடிதத்துடன் வருகிறான்.)

வேலைக்காரன் :—ஐயா, தங்கள் மாமா இதை உங்கள் கையில்கொடுக்க உத்தரவு செய்திருக்கிறார்கள். சற்று முன்பு

தான் தபாலில்வந்தது. அவரும் நான் வரும் சமயம் கடற்கரைக்கு வருவதற்காகச் சட்டைபோட்டுக் கொண்டிருந்தார்கள்.

(கடிதத்தைக் கொடுத்துவிட்டுப் போகிறான்.)

வேங்:—(விலாசத்தை உற்றுப்பார்த்து) நம்மூர் முத்திரை தான்! (உடைத்துக் கடிதத்தைப் பிரித்துப்பார்த்து மனவேறு பாட்டுடன்) ஆஹா! ராமச்சந்திரன் கூறியது முற்றிலும் உண்மைதான். என் அத்தையே இதோ கடிதம் எழுதி யிருக்கிறாளே! ஏ கல்யாணி! நீ இத்தகையவளென்பதை இப்பொழுது தான் உணர்ந்தேன். என் குலமாகிய மரத்தை வெட்டவந்த கோடரியே! இருக்கட்டும்; இனிப் பேசுவதில் பயன் யாது?

(ஜானகிராமையர் கொஞ்சதூரத்தில் வருவதைப் பார்த்துக் கோபத்தை அடக்கிக்கொண்டு, முகத்திற்படிந்த தூசியைத் துடைப்பதுபோல் கைக்குட்டையால் முகத்தைத் துடைக்கிறான்.)

ஜான:—என்ன வெங்கு, மத்தியானம் சாப்பிடவரவில்லையே? எங்கே போயிருந்தாய்? அகத்திற்குப் போகலாம் வா. உன் அம்மாமி நிரம்பக் கோபித்துக் கொண்டாளப்பா!

வேங்:—(மன வேறுபாட்டுடன்) மத்தியானம் எங்கள் ஊரி லிருந்து வந்த ராமச்சந்திரனுடன் சென்றிருந்தேன். இப்போது தான் நியோகோமளவிலாஸ் சிற்றுண்டி சாலையில் காப்பி சாப்பிட் டேன். பசிக்கவில்லை. நான் கொஞ்சம் கடைவீதி வரையில் போய்த் திரும்பிவருகிறேன்.

ஜான:—வந்த பிள்ளை அகத்தில் தங்காமல் அலைந்துகொண் டிருக்கிறாயே. இரவு எட்டு மணிக்குள் வந்துவிடு. எந்தக் கடைக் குப் போகிறாய்?

வேங்:—மவுண்டுரோடு, பி. ஆர். அண்டு ஸன்ஸில் தான் முக்கியமான வேலை; அதைப் பார்த்துக்கொண்டு வந்துவிடு கிறேன்.

ஜான:—உம்! எனக்குத்தெரியாதோ? என்னிடம் சொன்னால் வேண்டாமென்று சொல்லப்போகிறேனா! இந்தக் காலத்துப் பிள்ளைகள் பெண்டாட்டிக்குச் செய்கிறதிலேயே அலைகிறார்கள். வேண்டுமென்றால் அம்மாமியையும் கூட்டிக்கொண்டு போ. நல்ல நகைகளை வாங்கித் தருவாள்.

(சிரித்துக்கொண்டே போகிறார்.)

வேங்:—ஐயோ பாவம்! என் மனோநிலைமை இவருக்கு என்ன தெரியும்! (போகிறான்).

(தொடரும்.)

# மீனி

ந. பிச்சமூர்த்தி, பி. ஏ.

---

காந்திமதிப்பாட்டியின் வீட்டிற்கு முதல்நாள் இரவுதான் மீனி வந்திருக்கவேண்டும். ஏனெனில் அன்று இரவு முழுவதும் அலமாரியின் மேல் 'தொப் தொப்' என்று ஏதோ விழும் சப்தமும், சமயலறையில் பாத்திரங்களும் கரண்டிகளும் உருளும் ஓசையுமாயிருந்தன. கிழவிக்கு இன்னதென்று புரியவில்லை. அர்த்த ராத்திரியில் எழுந்திருந்துபோய்ப் பார்க்கவும் அலுப்பு.. எலியாயிருக்குமென்று சபித்துக்கொண்டே மறுபடியும் கண்ணயர்ந்தாள்.

மறுநாள் அதிகாலையில் கிழவி திருப்பள்ளி எழுச்சிகளும் சிவன் தோத்திரங்களும் சொல்லி முடித்துவிட்டு எழுந்த பொழுது மீனி குறுக்கே ஓடிற்று. "அட தரித்திரமே! நீதானு ராத்ரி முழுதும் கொட்டம் அடித்தாய்? போதாக்குறைக்கு முதல் முதல் உன் தரிசனம் தானு?.. என்ன ஆபத்து வரப்போகிறதோ?" என்று நொந்து கொண்டாள்.

அதற்குப் பிறகு பகல்முழுதும் மீனி கண்ணில் படவில்லை. அன்று கிழவிக்குக் கறி காய் நறுக்கும்பொழுது அரிவாள்மணை கூடக் கையில் படவில்லை. 'இப்படி சாஸ்திரம் பொய்யாகுமா?' என்று கிழவி யோசித்துக் கொண்டிருந்தாள்.

இரவு வந்தது. பலஹாரத்திற்குப் பால் கொழுக்கட்டை செய்து ஜாக்ரதையாய் மூடி வைத்துவிட்டுச் சுவாமி தரிசனத்திற்குச் சென்ருள். பலஹாரத்திற்குக் காவலாகப் பேரன் சூரியநாராயண மூர்த்தியையும் அவன் தங்கை கௌரியையும் நியமித்தாள்.

சிறிதுநேரம் சென்றது. சூரியநாராயணமூர்த்தி ராமசப்தம் சொல்லிக்கொண்டிருந்த சிரமத்தில் ஈடுபட்டிருந்தான். அண்ணனுடைய உத்யோகத்தையும் சேர்த்துப் பார்த்துவந்த கௌரி அப்படியே கூடத்தில் தூங்கிப்போய்விட்டாள்.

உள்ளே தாம்பாளம் உருண்டு விழுந்தது. அந்தச் சப்தத்தைக் கேட்டுத் திடுக்கிட்டுச் சூரி உள்ளே ஓடினுன். பூனைக்குட்டி அந்தர்தியானமாய்விட்டது. பாத்திரத்தில் கொஞ்சம் பால் குறைந்திருந்தது. கிழவிவந்து தொண தொணக்கப்போகிருளே எனப் பயந்து,

தாம்பாளத்தை மறுபடியும் மூடிவைத்து விடலாமென்று கையி லெடுத்தான். சமயத்தில் கிழவி திரும்பிவந்துவிட்டாள். ஒரு வினாடிக்குள் விஷயம் விளங்கிவிட்டது. பாட்டியின் அம்பறாத்தூணியிலுள்ள அவ்வளவு வசவுகளும் அழகாய்ப் புறப்பட்டன. அப்புறம் சூரிக்கு இரண்டு அறை; தூங்குமூஞ்சி கௌரிக்கு நான்கு. வாரிச்சுருட்டிக்கொண்டு கௌரி எழுந்தபொழுது வீட்டு விட்டத்தின் மீது மியா, மியா என்று பிரலாபித்துக் கொண்டிருந்த பூனைக்குட்டியைப் பார்த்தாள். தன் நிலைமையைப் பார்த்து இரங்குவது போல் கூவிய பூனைக்குட்டிக்கு மீனி என்ற அன்புப்பெயர் சூட்டினாள்.

அன்றுமுதல் அண்ணனுக்கும் தங்கைக்கும் மனஸ்தாபம். இரவு எட்டு மணிக்குத் தூங்கக் கௌரிக்கு யாதொரு நியாயமுமில்லையென்றும், படிப்பவனைச் சுயேச்சையாய் விடவேண்டியது ஸ்திரீதர்மமென்றும், அதையெல்லாம் மறந்து தூங்கிப்போன கௌரி கணவன் வீட்டிற்குப் போய் நல்லபெயர் வாங்கப்போவதில்லை யென்றும் சூரி எண்ணிக்கொண்டிருந்தான். கௌரி நினைத்தாள்: 'எனக்குத்தான் தூக்கம் தலை சுற்றியடித்ததை இவன் பார்த்தானே; நானும் சொன்னேனே. கைசொடுக்கும் நேரத்தில் நெட்டுருச் செய்யவேண்டியதை ஒருயுகம் வரையில் செய்தால் யார் ஜவாப்? மக்குப்பையன்! சமையலறையிலாவது விளக்கைவைத்துக் கொண்டு வாசிக்கலாகாதா? அதையெல்லாம் விட்டுவிட்டுக் கிழவிக்குத் தூபம்போட்டு எனக்கு அடிவாங்கிவைத்தானே. களிமண்! பிரும்மஹத்தி!! இவனுக்குப் படிப்பு வருமா?'

மீனியும் அன்று முதற்கொண்டு அங்கேயே ஸ்திரவாஸமாகிவிட்டது. ருசிகண்ட பூனை விடுமா? அங்கே இங்கே பாட்டி போயிருக்கையில் நெய்யைத் தின்றுவிடுவது, பாலைக் குடித்துவிடுவது, நைவேத்யத்தைத் தொட்டுவிடுவது, நூற்கண்டைச் சிடுக்கடித்துவிடுவது—இப்படியெல்லாம் பூனைக்குட்டிக்குத் தெரிந்த அவ்வளவு விஷமமும் செய்தது.

ஒருநாள் சமையல் அடுப்பிற்குள் மீனி தூங்கிக்கொண்டிருந்தது. காந்திமதிப் பாட்டி அதைப்பார்க்கவில்லை. "இந்தாடா காபி" என்று காபியைவைத்துவிட்டுக் காசித்தும்பைப் பூப்பறித்து வரச் சென்றாள். சூரி மசிக் கூடு, நோட் புஸ்தகங்கள் இவைகளை ஒழுங்குபடுத்தி விட்டு வருமுன் காபியில் பாதிக்குமேல் காணமல் போய்விட்டது. பாட்டியினிடம் போய்ச்சொன்னான். "உனக்கு நன்றாய் வேண்டும்!" என்று கிழவி ஆசீர்வதித்தாள். சூரிக்கு வந்த ஆத்திரத்திற்கு அளவில்லை. அங்கிருந்த சுடுதண்ணீரை எடுத்துப்

பூனையின்மேல் கொட்டினான். மியாவூ வென்று நீளமாக அழுது கொண்டே அது ஓடிவிட்டது.

இதைப் பார்த்திருந்த கௌரிக்குக் கண்ணில் ஜலம் வந்தது; தன்மீது சுடுதண்ணீர் விழுந்த எரிச்சல் உண்டாயிற்று. அதி லிருந்து மீனியின்மீது கௌரிக்குப் பின்னும் அதிகமான ஆசை யும் நேசமும் உண்டாயின. கிழவிக்கும் சூரிக்கும் தெரியாமல் நெய்யுடன்கலந்த சாதத்தைக் கொல்லையில் கொண்டுபோய் மீனிக்குப் போடுவாள்; தன் காபியில் கடைசியில் பாக்கிவைத்து, கிணற்றங்கரையில் பாத்திரம் தேய்க்கும் பாவனையாய் மீனிக்குக் காபியைக் கொடுப்பாள்; மத்தியான வேளைகளில், பாட்டி தூங்கும் போதோ, பஞ்சீகர்ணம் போடும்போதோ மீனியுடன் கொல்லையில் விளையாடப்போவாள்.

நாளாக நாளாக ரஹஸ்யம் அம்பலமாகிவிட்டது. இருவருக் கும் வெட்கம் கெட்டுப்போயிற்று. கௌரி காபி குடிக்கும் பொழு தும், சாதம் அல்லது பக்ஷணம் சாப்பிடும் பொழுதும் பஹி ரங்கமாய் அவளிடம் வந்து மீனி கத்தும். அவள் பரிவுடன் தன் னுடையதை அதற்குப் பகிர்ந்து கொடுப்பாள். இதர வேளை களில் வெறுமனே கௌரியின்மீது அன்புடன் மீனி உராயும்.

பூனையைப்பற்றிக் கிழவியின் உணர்ச்சிகள் ஒருவிதம். எவ் வளவு ஜாக்கிரதையாய்க் கிழவி வீட்டுக்காரியங்களைச் செய்தபோதி லும் முடிவில் எதிலாவது ஏமாறாமல் இருக்கமாட்டாள். தவிர, தினசரி காலையில் பூனை தரிசனம். கண்ணாடிக் குப்பியில் அடைத்து வைத்திருக்கும் அக்கினித் திராவகத்தைப்போல் மீனியின் மீதுள்ள கோபத்தை அடைத்து வைத்திருந்தாள். அவள் இல்லா விட்டால் தங்கப் பூனைகளாய்ச்செய்து தானம்செய்ய அவளிடம் ஐவேஜி ஏது? எனவே கிழவியின் ஆத்திரத்திற்கு இலக்கு கௌரி தான்!

சூரியின் உணர்ச்சி மற்றொருவிதம். என்றையதினம் மீனியின் சாக்கிட்டுத் தனக்கு அடிவிழுந்ததோ அதுமுதல் அதை எப்படி யாவது தொலைத்துவிடவேண்டு மென்றதாக நினைத்தான் அவன். அதற்குக் குறுக்கே நின்றாள் கௌரி. இல்லையா? தவிர அவளைப் பார்த்ததும் மீனி தாவிப் பாய்ந்து ஓடிப்போய்விடுவதும், கௌரி யைக்கண்டால் கொஞ்சிக்குலாவுவதும் அவனுக்குப் பிடிக்கவில்லை; 'ஒரு பூனைகூட என்னைப்பார்த்து அலக்ஷியம் செய்யும்படி ஆகிவிட் டதா?' என்ற துயரம். இவ்வளவு எண்ணங்களும்சேர்ந்து 'மீனியை யும் கௌரியையும் ஏககாலத்தில் சர்வபங்கப் படுத்திவிடு' என்று சூரிக்கு உபதேசம் செய்து கொண்டிருந்தன.

ஒருநாள் காலைவெயிலில், குட்டிச்சுவருக்குப் பின்னால் மீனி கால்களை நீட்டிக்கொண்டு சுகமாய்ப் படுத்துக்கிடந்தது. சூரி பார்த்தான். ஒரு பெரிய சாக்கைக் கொண்டுவந்து, 'திடும்' என்று பூனையின்மீது போர்த்திச் சாக்கையும் பூனையையும் அப்படியே தூக்கிக்கொண்டுவந்தான். கிழவி பார்த்து, "அடே! பூனை ஹத்திசெய்யாதே. பிராயச்சிதம் செய்யப் பணமில்லை!" என்று கூப்பாடு போட்டாள்.

"ஒன்றும் செய்யவில்லை, பயப்படாதே" என்று சொல்லிக் கொண்டே ஒரு கம்பிக் கூட்டில் கொண்டுபோய் அதை அவன் அடைத்துவிட்டான். சர்க்கஸில் சிங்கம் புலிகளைப் பழக்கவில்லையா? அதற்குப் பிறகு, 'இப்படிச்செய்' 'அப்படிச்செய்' என்று ஆட்டிவைத்தபடி யெல்லாம் அவைகள் ஆடவில்லையா? அதைப் போல, புலிக்குப் பதிலாகப் பூனையை வைத்துக் கௌரியைக் கண்டால் ஓடிப்போகும்படி பழக்கவேண்டுமென்ற உத்தேசம்போலும் சூரிக்கு! மீனி சிறிதுநேரம் கத்திப் பார்த்தது. பிறகு கூண்டுக்குள் குறுக்கும் நெடுக்குமாய் நடந்து கம்பி இடுக்குகளில் முகத்தைவிட்டுப் பார்த்தது. அப்பால் கம்பிகளை முன்கால்களால் பிறாண்டிப் பார்த்தது. ஒன்றும் பலிக்கவில்லை. திரும்பவும் முன்போல் அலையத் தொடங்கிற்று. சிறிதுநேரம் சென்று சூரி பூனைக்குப் பால்கொண்டுபோய் வைத்தான். என்ன காரணத்தாலோ மீனி பால் சாப்பிட மறுத்தது. கண்களை மூடிக்கொண்டு ஏதோ குருட்டுயோசனை செய்தது.

நடந்தது அவ்வளவும் கௌரிக்குத் தெரியும். இருந்தாலும் அவ்வளவு வெளிப்படையாய்ச் சூரியுடைய விரோதி ஆவதற்குக் கௌரிக்குத் துணிவில்லை. இருந்தாலும் மீனியின் நிலைமைக்காக வருந்தாமல் இருக்கவில்லை. அன்று கௌரிக்கு சாப்பாடுகூடச் சரியாகச் செல்லவில்லை. இரவு எப்பொழுது வரும் என்று காத்துக்கொண்டிருந்தாள்.

இரவு ஒன்பது மணியிருக்கும். எங்கே கூட்டில் பூனை செத்துப் போய்விடப்போகிறதோ என்று பயந்து மெதுவாய் ஒருவருக்கும் தெரியாமல் கூட்டை அப்படியே வெளியே எடுத்துக்கொண்டு போய்ப் பூனையை விட்டுவிடுவோம் என்ற எண்ணத்துடன் கிழவி அக்கூட்டண்டைவந்து சேர்ந்தாள். அங்கே கொஞ்சம் இருட்டு; அவ்விருட்டில் மற்றோர் உருவம் தோன்றிற்று. "யாரது?" என்றாள். "நான்தான்" என்றாள் தூங்கிப்போய் விட்டதாக நினைத்தாளே அந்தக் கௌரி.

"இருட்டில் இங்கே என்ன செய்கிறாய்?" என்றாள் கிழவி.

"நீ என்ன செய்யப்போகிறாய் பாட்டி?" என்று பதில் கேள்வி கேட்டாள் கௌரி.

"பயப்படாதே; உன் பூனைக்குட்டியைச் சந்தில் கொண்டு போய் விட்டு விடுகிறேன். இல்லாவிட்டால் இந்தச் சூரி அதைக் கொன்றுவிடுவான்......நீ என்ன செய்கிறாய் இருட்டில்?"

"ஒன்றுமில்லை" என்று கௌரிசொன்னது பொய். உண்மையில் சாயங்காலம் தனக்குக் கிடைத்த காபியில் கொஞ்சம் ரஹஸ்யமாய் மிகுத்துவைத்து அப்பொழுதுதான் மீனிக்குக் கொடுத்து முடிந்திருந்தது.

"ஆனால் சரி, நீ இங்கேயே இரு; நான் கொண்டுபோய்விட்டு விடுகிறேன்" என்றாள் கிழவி.

கௌரிக்கு மீனியை இழக்கவும் இஷ்டமில்லை; குற்றவாளியைப்போல் கூட்டில் பார்க்கவும் இஷ்டமில்லை. முடிவில் எங்கேயாவது பிழைத்துக்கிடக்கிட்டும் என்று தைரியம் மூட்டிக்கொண்டு, "சரி பாட்டி, எடுத்துக்கொண்டு போ" என்று தானும் சந்துவரையில்போய் விட்டுவந்தாள். 'சனி ஒழிந்தது' என்று கிழவி அக மகிழ்ந்து கொண்டிருந்தாள். கௌரிக்கோ துக்கம் நெஞ்சை அடைத்தது. அவரவர்கள் படுக்கப் போய்விட்டார்கள்.

நல்ல நிசிவேளை. பின்னும் ஓர் உருவம் பூனையைப் பார்க்க வந்தது—ஆஜர் பார்க்க! சந்தேகமென்ன? சூரிதான்! இருட்டில் குனிந்து பார்த்தபொழுது கூடுமட்டும் இருந்தது; பூனையைக் காணோம். வடவாக்கினிபோலக் கோபம் சீறியெழுந்தது; "அந்தக் கௌரியை ஒருகை பார்க்கிறேன். ராத்திரி பூனையை விரட்டிவிட்டால் எனக்குத் தெரியாமல் போய்விடுமா?.......இருக்கட்டும்" என்று சபதம் செய்தான்.

மறுநாள் பொழுது விடிந்தது. கிழவி படுக்கையைவிட்டு எழுந்ததும் மீனி முகத்தில் விழித்தாள்; "சிவ சிவ! போனசனியன் திரும்பிவந்து விட்டதா?" என்று தலையில் அடித்துக்கொண்டாள். ஆனால் கௌரியின் மகிழ்ச்சிக்கு அளவில்லை. கொல்லைப் பக்கம் பல்துலக்கப் போனாள். வெந்நீர் அடுப்புக் கூரைமேல் பூனைக்குட்டி பதுங்கிக்கொண்டிருந்ததைப் பார்த்தாள்.

"அட மீனி!" என்றாள் கௌரி.

'மியாவ், மியாவ்' என்று கத்திக்கொண்டே அவளருகில் வந்தது பூனை.

"என்னை விட்டுப் போகமாட்டாயோ? நல்ல மீனி! தங்கக் கம்பி! கண்ணு!"

'மியாவ் மியாவ்' — — —

"சூரி பார்த்தால் ஓடிப்போன திருடன் என்று உன்னைக் கொன்று விடுவானே—என்ன செய்கிறது?"

'மியாவ் மியாவ்'

இப்படி கௌரியும் மீனியும் பிரேமா பாஷையில் பேசிக் கொண்டிருந்தபொழுதே சூரி வந்து விட்டான்.

"ஏண்டீ கௌரி! பூனைக்குச் செப்பிடு வித்தை தெரியும் போலிருக்கிறது. கூட்டிலே இருந்து தானே வெளியிலே வந்து விட்டதே" என்று கண்ணைச் சிமிட்டினான்.

"போடா குரங்கு. எனக்கென்னடா தெரியும் அதெல்லாம்?" என்று சீறினாள் கௌரி.

மீனி காலபைரவனைக் கண்டதுபோல் எங்கேயோ நடுங்கிப் பதுங்கிவிட்டது.

சூரிக்கு அவமானம் தாங்கவில்லை. 'நான் கௌரிக்கு அண்ணன் என்று உணரும்படி செய்யாவிட்டால் என் பெயரை மாற்றிக்கொள்கிறேன்' என்று ஓர் அந்தரங்க சங்கல்பம் செய்து கொண்டான். ஆனால் பதற்றமாய் ஒன்றும் செய்யவில்லை. தந்திரத்தைக் கைக்கொண்டான்.

"கௌரி! உன்மேல் எவ்வளவு ஆசை பார்த்தாயா மீனிக்கு! போன ஜன்மத்திலே அது உனக்குத் தங்கை. அதுதான் அவ்வளவு கொஞ்சுகிறது. அப்போது நான் ஓர் எலி. அதுதான் உங்கள் இரண்டு பேருக்கும் என்மேல் கோபம் வருகிறது. பழையதெல்லாம் போகட்டும். இனிமேல் எல்லாரும் சேர்த்தியாய் இருப்போம். சரிதானா?" என்று அழகாய் உருக்கமாய்ப் பேசினான்.

கௌரி வெகுளிதானே! பேச்சு அவள் மனதைக் கரைத்தது. அண்ணாவுக்கு நல்லபுத்தி வந்துவிட்டதென்ற சந்தோஷத்தால் தன் பக்ஷணத்தில் ஒருபங்கு அண்ணானுக்கு வழங்கினாள்.

மணி பத்தடிக்கவே சூரி காலைப் பள்ளிக்கூடத்திற்குப்போய் விட்டுத் திரும்பினான். இரண்டாம் தரம் சாப்பிட்டானபிறகு ஒரு அழுக்குக் கடுதாசியை எடுத்து எழுதினான்:

"சார் அவர்களுக்கு,

எனக்கு ரொம்ப ரொம்பத் தலைவலி. பாட்டி மத்யானமாய்ப் பள்ளிக்கூடம் போகாதே இன்னாட்டாள். எனச்குப் பொட்டில் மொளகு அறச்சுப்போட்டிருக்கு. எனச்கு லீவ் வேணும்.

டி. சூர்யநாராயணமூர்த்தி."

இக்கடிதத்தை அடுத்தவீட்டுப்பையனிடம் கொடுத்தனுப்பி விட்டான். "வயிற்று வலி; பள்ளிக்கூடம் போகமுடியாது" என்று

பாட்டியிடம் சொல்லிவிட்டு ஒரு பாயை எடுத்துப்போட்டுக் கொண்டு நான்குதரம் அங்கப் பிரதக்ஷிணம் செய்தான். பாட்டி குழந்தைக்கு ஓமமும் வெற்றிலேயும் கொடுத்துவிட்டு, மூக்குக் கண்ணுடியை மாட்டிக்கொண்டு மெய்மறந்து ஞானவாசிஷ்டம் படிக்க ஆரம்பித்துவிட்டாள்.

சமயம் வாய்த்ததென்று பாயைவிட்டுச் சூரி மெதுவாய் நழுவினன். வீட்டின் இரண்டு கட்டிலும் கௌரியைக்காணும். "திருடர்கள் கொல்லேயிலிருப்பார்கள்" என்று எண்ணிக் கொண்டே குதிருக்குப்பின் வைத்திருந்த கிட்டுப்புள் கழியை முதுகுக்குப் பின்னுல் ஒளித்து எடுத்துக்கொண்டு கொல்லேப்புறம் போனுன்.

கௌரி ஒரு காலே நீட்டிக்கொண்டு ஆனந்த சாகரத்தில் மூழ்கியபடி உட்கார்ந்திருந்தாள். எதிரே அம்மானேக் காய்கள் கிடந்தன. மீனி அவைகளேக் கடித்துக் குதறிக்சொண்டிருந்தன. சூரிக்கு மீனியைக்கொல்லவேண்டுமென்ற எண்ணமல்ல. பள்ளிக் கூடத்து வாத்தியார் ரூல் கழியால் லேசாகத் தலேயில் தட்டுகிருரே அதைப்போல் மீனிக்கு இரண்டு தட்டுப்போட்டால் அது வழிக்கு வந்து விடும் என்றயோசனே. மெதுவாய், கௌரிக்குத்தெரியாமல் அவளுக்குப்பின்போய் நின்று, ஓர் அடிபோட்டான். அது இவ்வளவு பலமாய் விழும் என்று அவனே எதிர்பார்க்கவில்லே. கௌரி அடிப்பதற்கு முந்திப் பார்த்துவிடப்போகிருளே என்ற பயத்தாலேயே அடி அவனே யறியாமலே பலமாய் விழுந்துவிட்டது.

மீனி பிரமாதமாய் அழுதவண்ணம் ஒடிந்துபோன இடுப்பை இழுத்துக்கொண்டு ஒரு புதருக்குள் மறைந்தது.

சூரிக்கு ஹஸ்தியில் சுரம். அதைப் பொய்க்கேள்வியால் மறைக்கப் பார்த்தான். "ஏண்டீ கௌரி! நான் விளேயாட்டுக்குத் தானே மெதுவாய்த்தட்டினேன். உன்னேப்போலவே உன் பூனேயும் ஈாமாலம் பண்ணுகிறதே."

கௌரி பதில் சொல்லவில்லே. முகம் கடுகுபோலாகிவிட்டது. பூனேகிட்டப்போனுள்—தடவிக்கொடுப்பதற்காக. மீனி பழைய மீனியாகவே இல்லே. நல்லபாம்புபோல் புதருக்குள் ளிருந்தபடியே சீறிற்று. "மீனி! மீனி!! நான் கௌரிதானே? ஒன்னுடெ சேத்தி தானே. கோவிச்சுக்கறயே? கொலேகாரன் சூரி இன்னு அடிச்சான்" என்று அழுகையுடன் கெஞ்சினுள். மீனி புஸ் புஸ் என்று சீறியதுமல்லாமல் கௌரியின் கைகளேப் பிருண்டி விட்டது. அவ்வளவு துன்பம் போலும் அதற்கு! கௌரிக்குப் பிருண்டினது கூடப் பெரிதாய்த் தோன்றவில்லே. தன்னேயும்பார்த்து மீனி நடுங்க

லர்ச்சே என்ற துக்கம். துக்கத்தால் அழுகை பலத்தது; தாரை தாரையாய்க் கண்களில் நீர் வடிந்தது. கௌரி அழுவதைப் பார்த்த சூரிக்கு என்றும் அறியாதவாறு கண்ணீர் ததும்பிற்று. அண்ணனும் தங்கையும் ஒருவரைப்பார்த்து ஒருவர் தேம்பித் தேம்பி அழுதார்கள். அழுகை ஓய்ந்ததும் சூரி போய் மீனிக்கு வைத்தியம்செய்ய முயன்றான். பிரயோஜனப்படவில்லை. பிறகு இருவரும் கைகோத்துக் கொண்டு உள்ளே போய்விட்டார்கள்.

இரவு வந்தது. கிழவி கௌரியைப்பார்த்து, "எங்கே என் பிரதிவாதி—உன் மீனி?" என்றாள். கௌரி கண்களில் வரும் ஜலத்தைக் கசக்கிக்கொண்டு, "போ பாட்டி, உனக்கு வேறே வேலையில்லையோ?" என்றாள்.

அன்றிரவு பத்துமணிக்குமேல் மழை பிடித்துக்கொண்டது. ஒரே பாயில் படுத்துக்கொண்டிருந்த சூரியும் கௌரியும் மீனியை உத்தேசித்து மழையைத் திரும்பிப்போகும்படி பிரார்த்தித்துக் கொண்டிருந்தார்கள்.

மறுநாள் அதிகாலையில் கரிச்சான் குருவியும், சேவலும், பச்சைக் குழந்தைகளும் எழுந்திருக்கும் நேரத்தில் இருவரும் எழுந்திருந்து கொல்லைப்புதரில் போய்ப் பார்த்தார்கள். பூனை கண்ணில் படவில்லை. எங்கேனும் போயிருக்கும் என்று திருப்தியடைந்தார்கள்.

அந்திப்பொழுது. பலமாய்க் காற்றுக்கிளம்பிவிட்டது. மரங்களெல்லாம் பேயாடின. தெருக்களில் தென்னை மட்டையும் உதிர்ந்த இலைகளும் விழுந்தன. இலைச் சருகுகள் சுழன்றன. வடகிழக்கிலிருந்து சமுத்திரமே புரண்டு வருவதுபோல் கருமேகக் கூட்டங்கள் வானில்வந்து நிரம்பின. ஓஹோ! மழை காலத் துவக்கம்!

பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பிவந்த சூரிக்கு ஒரு குடைச்சல், சந்தேகம்—ஒருவேளை தாங்கள் காலை இருட்டில் பூனையைச் சரியாகத் தேடவில்லையோவென்று. அப்படி இருந்துவிட்டால் இரண்டாவது நாளும் மீனி மழையில் நனைந்துவிடுமே என்று நினைத்துக் கௌரியையும் அழைத்துக்கொண்டு கொல்லைப்புறம் போனான்.

காலையில் பழைய பத்திரிகையோ இலைச்சருகோ என்று அலக்ஷியம்செய்தது இப்பொழுது மீனியென்று தெரிந்தது. குழந்தைகள் நெஞ்சம் இளகுநீராகிவிட்டது. பரபரப்பாய் இருவரும் உள்ளே சென்று ஆளுக்கொருபிடி நெய்யும் சாதமுமாய்க் கொண்டுவந்து மீனியின்முன் வைத்தார்கள். அது ஆவலின்றிக்

கொஞ்சம் தின்றது. அன்ருவது மழையில் நனையாமல் உள்ளே இருக்கட்டும் என்று அவர்கள் மீனியைப் பிடிக்க முயன்றும் பயன்படவில்லை. வலி பொறுக்கமாட்டாமல் இருவர் கையிலும் சிறி ரத்தக்காயம் அடித்துவிட்டது. கௌரி கண்கொட்டாமல் சூரியைப் பார்த்தாள். அவன் தலைகவிழ்ந்து கால் கட்டைவிரலால் மண்ணைத்தோண்டினன். மழை வந்ததும் குழந்தைகள் உள்ளே போய்விட்டார்கள்.

அன்றுமுதல் எட்டுத்திக்கும் கரைந்து விடும்படியாக மழை பொழிந்தது. ஜலப்பிரளயம்; வெளியே தலை நீட்ட முடியாது. அப்படியும் குழந்தைகள் ஒவ்வொருதினமும் புதாடியில் மீனிக்குக் கொண்டுபோய் ஏதேனும் ஆகாரம் வைப்பார்கள். மூன்ருவது நாள் போனபொழுது மீனி விறைத்துக் கிடந்தது. பாவம்! இருகுழந்தைகளும் அதைப்பார்த்து விம்மி விம்மி அழுதார்கள். அவர்களுக்குத் தேறுதல் சொல்லிய கிழவியின் வார்த்தைகள் அவ்வளவும் புதுக்கோட்டை அம்மன் காசுகூடப் பெறவில்லை.

---

## இந்திய வைத்தியச்சிறப்பு

இந்தியாவிலே, மதத்தையும் தத்துவ சாஸ்திரத்தையும் நாகரிகத்தையும் போலவே வைத்திய வித்தையும் புராதன காலத்திலே மிகவும் விருத்தியடைந்து இருந்தது. இதற்கு ஓர் உதாரணம்: 'ஹ்யூமரல்பேதாலஜீ' '(*Humoral Pathology*)' என்ற கொள்கை எல்லா இந்தியவைத்திய முறைகளுக்கும் அடிப்படையானதாகும். இந்த முறை கிறிஸ்துவுக்குமுன் -2000 வருடத்துக்கு முந்தியே-புராதன இந்திய வைத்தியருக்குத் தெரிந்திருந்ததாக ரிக்வேதத்தில் அத்தாட்சி காணப்படுகிறது. இந்தக்காலம் ஹிப்போகிரேடஸ் பிறப்பதற்குப் பல நூற்ருண்டுகளுக்கு முற்பட்டதாகும். இந்த முறைதான் கிரேக்க ரோம அராபிய வைத்தியத்துக்கும், 18-வது நூற்ருண்டு வரை ஐரோப்பிய வைத்தியத்துக்கும் ஆதாரமாக இருந்து வந்திருக்கிறது. புராதன இந்தியரின் வைத்திய நூல்கள், ரண வைத்திய முறைகள் ஆகியவைகளின் மூலக்கருத்துக்களே பாரசீக, உபிரேய, ரோம, அராபிய, சீன, தீபேத்திய வைத்திய முறைகளிலும், தற்காலத்தில் ஐரோப்பியவைத்தியத்திலும் காணக்கிடக்கின்றன. ஆகையால், கோபுருக் என்னும் சரித்திர ஆசிரியன், "புராதன இந்தியர்கள் வைத்தியத்தில் கூட மற்றவர்களுக்குப் போதிப்பவர்களாயிருந்தார்களே தவிர, மற்றவர்களிடமிருந்து கற்றுக் கொள்பவர்களாயிருக்கவில்லை" என்று கூறியிருப்பது ஆச்சரியப்படத்தக்கதல்ல.

—டாக்டர். ஸி. முத்து.

# ஸ்வீகாரம்

சங்கு ஸுப்ரஹ்மணியன்

---

[கதையில் அதிக ஜோடனையுமின்றி, வர்ணனையுமின்றிச் சிறு கதை எழுதுவது ஓர் தனித்திறமை. மாக்ஸிம் கார்க்கி,டோப்டோஸ்கி, முதலிய ருஷிய ஆசிரியர்கள் கதாபாத்திரங்களின் உணர்ச்சிப் பெருக்கை மட்டும் படம் பிடிப்பனவான சிறு கதைகள் பல எழுதியிருக்கின்றனர். அவர்களுடைய போக்கைத் தழுவி இந்தக்கதை எழுதப்பட்டிருக்கிறது.
ஸு. ஸு.]

நான் அப்போது பள்ளிக்கூடத்துப் பையன். பணங்கட்டும் பரீட்சையில் இரண்டு தரம் 'பிளக்'காகி மூன்ருவது தடவை முயற்சி நடந்துகொண்டிருந்தது. நான் குடியிருந்த இடம் ஓர் அறை; ஐந்து ரூபாய் வாடகை. அந்த அறை மிக்க சௌகர்யமானதாக இருந்தது. நல்ல காற்று. கொசு கிடையாது. இவ்வளவு சௌகர்யமான அறையாக அது இல்லாவிட்டால் நான் அந்த வீட்டை எப்போதோ காலிசெய்திருப்பேன், ஏனெனில் எனக்கு ஒரு விஷயத்தில் பலமான அருவருப்பு அந்த வீட்டில் குடியிருந்ததில் ஏற்பட்டுக்கொண்டிருந்தது. அந்த அருவருப்புக்குக் காரணம் எதிர் அறையில் வசித்துவந்த ஓர் கிழவன்.

ஒரே வகுப்பில் மூன்ருவது வருஷம் படிக்கும் மாணவன் பள்ளிக்கூடத்துக்கு ஒழுங்காய்ப் போய்க்கொண்டிருப்பானு மாட்டானு என்ற விஷயத்தை ஓர் உபாத்தியாயரைக் கேட்டால் தெரியும். என்னையோ அண்டுவார் அடக்குவார் யாருமில்லை. பிதுரார்ஜித சொத்தைக் குத்தகைக்கு எடுத்தவர் மாதமாதம் பணம் அனுப்பிக்கொண்டேயிருந்தார். நானும் பட்டணத்தில் 'ஷோக்'காக இருந்துகொண்டு வருஷந்தவருமல் 'பிளக்' ஆகிக்கொண்டுமிருந்தேன். என்னுடைய வாழ்வுக்கு அருவருப்பாக அந்த வீட்டில் அந்தக் கிழவன் ஒருவன்தான் தோன்றினன்.

கிழவனுக்குச் சாயந்திரங்களில் . . . . வழக்கம் கொஞ்சம் உண்டு என்று தோன்றிற்று. அவன் மாடிப்படியில் ஏறிவரும் போது கொஞ்சம் நாறும். ஆனல் அவன் அதைப் பிரகடனப் படுத்தியதேயில்லை.

நேரே அறைக்குப் போய்விடுவான். ஆனல் அவனுக்கு என்ன தோன்றிற்ருே என்னவோ என்னிடம் அடிக்கடி வர ஆரம்பித்தான்.

எனக்கு அவன்வருவது கட்டோடு பிடிக்கவில்லை. என்ன செய்வது? வயது ஆனவனை எப்படி உதறிப் பேசுவது?

ஒருநாள் காலையில் நான் உட்காந்து 'பொயட்ரி' உருப் போட்டுக்கொண்டிருந்தபோது இருமிக்கொண்டே கிழவன் உள்ளே வந்தான். 'இது ஏதடா சனியன்!' என்று நினைத்துக் கொண்டே புத்தகத்தை மூடிவைத்தேன். வந்தவன் நேரே எதிரிலிருந்த நாற்காலியில் உட்கார்ந்தான். நான் உட்காரச் சொல்லவில்லை; அவனே பாத்யதை கொண்டாடிவிட்டான்.

"என்ன தம்பி! உடம்பு என்னவோ போலிருக்குதே!" என்று பேச்சை ஆரம்பித்தான். பேசுவதற்கு இத்தகைய ஆரம்பம் செய்வது நம் நாட்டு வழக்கமல்லவா? மழையைப்பற்றியோ வெயிலைப்பற்றியோ பேசுவதற்கு வழியில்லாவிட்டால் உடம்பில் கோளாறு சொல்வது ஓர் ஸம்பிரதாயம்.

"தாத்தா, உடம்புக்கு ஒன்றுமில்லையே!" என்று சுளித்துக் கொண்டே கூறினேன்.

கிழவன் கனைத்துக்கொண்டே, சரியாய்த் தேய்க்காத தனது பல்வரிசையைக் காட்டிக் கொண்டு, "எனக்கு ஒரு காரியம் செய்யறையா தம்பி!" என்று கேட்டான்.

"ஆஹா! என்ன செய்யவேண்டும்?"

"ஒரு நீண்ட கடுதாசி எழுதித்தரவேணும். கவர் இருக்குதா உன்னிடம்?"

"இருக்கிறது" என்று கூறிப் பேனா, மசிக்கூடு, காகிதம், கவர் சகிதம் வந்து உட்கார்ந்தேன்.

கனைத்துக்கொண்டே கிழவன் முதலில் மேல் விலாசத்தைச் சொல்ல ஆரம்பித்தான்.

"கோயமுத்தூர்ப் பட்டணத்தில் பெரிய ஹைஸ்கூலில் ஆறுவது பாரத்தில் படித்துக் கொண்டிருக்கும் சிரஞ்சீவி ராஜுவென்று சொல்லப்படும் ராம சுப்பிரமணியனுக்கு" என்று கூறினான்.

நான் சிரித்துக் கொண்டே விலாசத்தை நவீன முறையில்,

ராம சுப்பிரமணியன்,
VI பாரம்
ஹைஸ்கூல்
கோயமுத்தூர்

என்று எழுதிவிட்டுக் கடிதத்தை எழுத முன்னேற்பாடுகளைச் செய்து கொண்டேன்.

கிழவன் மறுபடியும் கனைத்துக் கொண்டே கடிதத்தின் விஷயத்தைச் சொல்ல ஆரம்பித்தான்.

"எனது அருமைப் புத்திரனான சிரஞ்சீவி ராஜூவுக்கு: பழனியாண்டவர் கிருபையால் நான் இவ்விடம் க்ஷேமம். அவ்விடத்தில் உனது க்ஷேமத்திற்கும் உனது வாத்தியார்கள் க்ஷேமத்துக்கும் அடிக்கடி கடிதம் எழுதிக்கொண்டிரு. பழனியாண்டவர் குழந்தையாகிய உனக்கு நல்ல குணத்தைக் கொடுப்பாராக. ஆண்டவன் அருளால் நீ படிப்பு எவ்வாறு படித்துவருகிறாய்...." என்று ஏதேதோ வரிசையாகச் சொல்லிக் கொண்டே போனான். நானும் பழையகாலத்துக் கடிதம் எழுதும் முறையினை நினைத்துப் புன்சிரிப்போடு எழுதிக்கொண்டே போனேன். கனைப்பு, திருத்தம், அடிப்பு முதலிய சம்பிரமங்களோடு ஒருவழியாகக் கடிதம் எழுதி முடிந்தது.

"இந்தக் கடிதம் யாருக்கு?" என்று மெதுவாகக் கிழவனைக் கேட்டேன்.

"தெரியல்லையா தம்பி! அது என் பிள்ளை ராஜூவுக்கு—கெட்டிக்காரப் பையன்தான். பணம் கட்டிப் பரீட்சையில் இரண்டு தடவை தோற்றுப்போனான்; ஹூம்! அதிருஷ்டமில்லை! ஆனால் நல்ல பையன். தனியாயிருக்கிறான். தலையிலெழுத்து!"

"தாத்தா, அப்படியானால் உங்களுக்குப் பிள்ளையொருத்தன் இருக்கிறானா?" என்று வியப்புக்கலந்த குரலில் கேட்டேன்.

"அதென்னா தம்பி அப்படிக் கேட்டியே! கிழவனான எனக்கு ஒரு பிள்ளை இருக்கக் கூடாதா என்ன? ரொம்ப சந்தோஷம்; கவரை ஒட்டாதே; என்கிட்டே அப்படியே கொடு" என்று கிழவன் கேட்டான். கிழவனுடைய புத்திரனைப்பற்றி விசாரிக்க வேண்டுமென எனக்கு ஆசை ஏற்பட்டாலும் கிழவனைச் சீக்கிரம் அனுப்பவேண்டுமென்று நினைத்துக் கடிதத்தை உடனே கொடுத்து விட்டேன்.

போகும்போது சிறுவர்களுக்கு உபதேசம் செய்யாமல் போவது கிழவர்களின் வழக்கமல்ல.

"தம்பி! நீ பேதிக்கு வாங்கிக்கறதே இல்லை போலிருக்குது. பேதிக்குச் சாப்பிடு. உனக்கு எதாவது கஷ்டமிருந்தா என்னைக் கேளு. மருந்து தர்ரேன்" என்று சொல்லிவிட்டுக் கடிதத்தை வாங்கிக்கொண்டு போய்விட்டான். கனைப்புக்குரல் வெகுதூரத்தில் போனபின்பு கிழவனைப்பற்றி நினைத்து ஒரு தடவை நானே சிரித்துக்கொண்டேன். 'ஒரேபிள்ளையைத் தனி

யாக வேற்றூரில் விட்டுவிட்டு இந்தக் கிழவனுக்கு இங்கே என்ன வேலை?' என்று நினைத்துப் பார்த்தேன். பதில் தெரியவில்லை. நானோ தகப்பனார் தாயார் இருவரையு மிழந்தவன். ஒரு தகப்பன் இருந்தும் பிரயோஜனமில்லாமல் தனியாகக் கோயமுத்தூரில் இரண்டு தடவை பரீட்சையில் தவறிப் படித்துக்கொண்டிருக்கும் அந்தப் பையனைப்பற்றிய நினைவு எனக்கு ஏற்பட்டது. 'பொயட்ரி' யை அன்றைக்கு நான் படிக்கவில்லை.

இரண்டு வாரம் கழிந்தன. பொழுதே போகவில்லை. கடைத் தெருவைப் போய்ச் சுற்றிவிட்டு வரலாமென்றால் அசட்டுத் தூறல் தூறிக்கொண்டே யிருந்தது. நான் ஜன்னலண்டை உட்கார்ந்து வெளியே பார்த்துக்கொண்டிருந்தேன். மனதில் ஓர் ஆலோசனையும் நிலைத்து நிற்கவில்லை. கண்ணில் ஒரு காட்சியும் தென்படவில்லை. அந்தச் சமயத்தில் கிழவனின் இருமல் கேட்டது. இத்தனைநாள் தொந்தரவாக நான் எண்ணிக்கொண்டிருந்த கிழவன் இன்றைக்கு எனக்கு நல்ல பொழுதுபோக்குச்குரியவனாக இருப்பானென நினைத்தேன்.

"வாருங்கள் தாத்தா! உட்காருங்கள்" என்று நாற்காலியைக் கொணர்ந்து போட்டேன்.

கழியை இரண்டு கையாலும் பிடித்துக் கொண்டே கிழவர் உட்கார்ந்தார். 'கிழவன்' என்று இதுவரை நான் சொல்லியது தப்பு என்று தோன்றுகிறது.

உட்கார்ந்தார்.

"தம்பி ரொம்ப வேலையாயிருக்கிறையோ?"

"இல்லை தாத்தா! உங்களுக்கு என்ன வேண்டும்?"

"தம்பி! எனக்கு நீ ஒரு கடுதாசி எழுதித் தரவேணும். எழுதித் தரையா?"

"யாருக்கு? உங்கள் பிள்ளைக்கா?"

"சே! சே! இல்லை. இப்போது பிள்ளையிடமிருந்து எனக்கு!" என்றார் கிழவர்.

"என்ன தாத்தா! பிள்ளையிடமிருந்து உங்களுச்கு நான் எழுதவாவது? புரியவில்லையே!"

கிழவர் கனைத்துக்கொண்டு, "என்பிள்ளை எழுதுகிறாப்போல—அதாவது அவன் ஒரு பெரியவருச்கு எழுதுகிறாப்போல எழுதேன். இது போதும். பெரியவர்களுக்குப் பையன்கள் லெட்டர் எழுதமாட்டார்களா? அந்தமாதிரி சொல்றேன் கேளு: என்னைப்

பெற்றெடுத்த தகப்பனருக்கு அநேக நமஸ்காரம் செய்து எழுதுவதாவது: பழனியாண்டவர் கிருபையால் நான் க்ஷேமம் க்ஷேமத்திற்கு எழுதவும் . . . . ”

எனக்குக் கிழவர் சொல்வது விளங்கவில்லை. கிழவர் முகத்தைப் பார்த்தால் ஏதோ உணர்ச்சி ததும்பிக் கொண்டிருப்பது போலத் தோன்றிற்து. அவர் மனத்தில் ஏதோ பொங்கிக் கொண்டிருந்தது. விஷயம் என்னவென்று ஒருவாறு ஊகித்தேன்.

“தாத்தா கோபித்துக் கொள்ள மாட்டீர்களே! உங்களுக்குக் கோயமுத்தூரில் பிள்ளை யிருக்கிறனென்பது ஒருவேளை பொய்யோ?” என்று கேட்டேன்.

கிழவரின் கண்கள் கலங்கிக்கொண்டிருந்தன. ‘ஆம்’ என்று ஆமோதிப்பதுபோலத் தலையை அசைத்தார்.

கிழவருக்கு ஏதோ தப்புச் செய்துவிட்டோமென்று எனக்கும் தோன்றிற்று. நெஞ்சில் கரகரப்பு ஏற்பட்டது. அத்தனை வயதான கிழவரின் கண்களில் நீர் ஊறிக்கொண்டிருப்பதைப் பார்த்து விட்டு என் கண்கள் சும்மாயிருக்குமா?

அப்படியே மௌனமாய்ச் சிறிது நேரம் உட்காந்திருந்து விட்டு என்னிடம் சொல்லிக்கொள்ளாமல் கடிதத்தையும் முடித்து வாங்கிக்கொள்ளாமல் கிழவர் எழுந்து போய்விட்டார்.

நான் வெகு நேரம் பிரமை பிடித்தவன் போல உட்கார்ந்திருந்தேன். இப்படி இந்தக் கிழவர் இரண்டு கடிதம் எழுதுவானேனென்பது எனக்கு விளங்கவேயில்லை. ‘சரி, கிழவரையே நேரில் கேட்டு விடவேண்டும்; அவருக்கு என்னதான் துக்கமென்று அறிய வேண்டும்’ என்ற தீர்மானங்களோடு அவர் அறையை நோக்கி நடந்தேன். அப்போது இராத்திரி மணி ஏழரை.

கிழவர் மல்லாக்கப் படுத்துக்கொண்டு மோட்டுவளையைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

“தாத்தா!” என்று அழைத்துக் கொண்டு அருகே போய் உட்கார்ந்தேன். கிழவர் என்னை அப்போது ஓர் அன்புப் பார்வை பார்த்தார். அப்பா! அதை நான் எப்படி விவரிப்பது! என் உயிரையே அந்தப் பார்வை கவ்வி விட்டது.

“தாத்தா!” என்று குழைவான குரலில் மீண்டும் அழைத்தேன்; “உங்களுக் கென்ன துக்கம்?” ......

கிழவர் மெதுவாக என் கையைப் பற்றிக்கொண்டே எழுந்து உட்கார்ந்தார்.

"தம்பி! நீ சொன்னது வாஸ்தவம். எனக்கு ராசுவுமில்லை, கீசுவுமில்லை. நான் ஒருத்தன்தான் உலகில் தனியாயிருக்கிறேன்" என்றார். "அன்றைக்கு ஒரு கடுதாசி எழுதினீர்களே; அது யாருக்கு?" என்று கேட்டேன்.

"அதுவா!" என்று சிரித்துக்கொண்டே கிழவர் தலைமாட்டி லிருந்து எடுத்தார். "இதோ இருக்கிறது பார், அன்றைக்கு எழுதியது. அதைத் தபாலில் போடவேயில்லை. ஆள் அப்படி ஒருத்தன் இருந்தாலல்லவா பெட்டியில் போடலாம்?"

அந்தக் கடுதாசியை என் கையில் வாங்கிக் கொண்டேன்.

"வாஸ்தவமாக உங்களுக்குப் பிள்ளையேயில்லையா!" என்று வியப்புக் குரலில் மறுபடியும் கேட்டேன்.

"ஊஹூம்" என்று சொன்னார்;

"எனக்குப் பிள்ளையில்லாமற் போனாலென்ன? நான் கடுதாசி யாருக்காவது எழுதக்கூடாதா? யாராவது ஒரு பிள்ளை எனக்குக் கடுதாசி எழுதக்கூடாதா? அதற்காகத்தான் உன்னை இன்றைக்கு வேறு தினுஸாக ஒரு கடுதாசி எழுதச் சொன்னேன்" என்று சொல்லிக் கொண்டிருந்தபோதே கண்ணில் பலபலவென நீர் வடித்தார் கிழவர்.

எனக்கு எல்லாம் விளங்கி விட்டது. நான் இருந்த அதே வீட்டில் வேறோர் அறையில் என்னைப் போன்று நாதியற்ற -அன்பு தருவாரற்ற-ஆத்மா ஒன்று இருப்பது எனக்கு விளங்கி விட்டது. தாய், தகப்பன், மாமன் முதலிய பந்துக்களற்ற பையன் நான். பிள்ளை, மருமகன், பேரன், பெண் முதலிய எவருமேயில் லாத கிழவர் அவர். அந்தக் கிழவருக்குக் கற்பனையிலாவது ஒரு பிள்ளையைச் சிருஷ்டித்துச் சந்தோஷப்பட வேண்டுமென்று தோன்றிற்றுப்போலும்! ஆகவே அவர் வாத்ஸல்ய நாடகம் நடிக்க ஆசைப்பட்டார்.

கிழவர் மறுடியும் சொன்னர்: "தம்பி, நீ பள்ளிக்கூடத்துக்குப் போயிருக்கும் சமயத்திலே இங்கே யாராவது வருவாங்க. அவுங்ககிட்டே இந்தக் கடுதாசியைத் தந்து படிக்கச்சொல்வேன். அதைக் கேக்கறபோது செத்துப்போன எனது ஒரேபிள்ளையின் ஞாபகம் . . . ." என்று கூறினர் கிழவர்; அவர் கண்களில் நீர் வழிந்தது.

எனக்கும் கண் கலங்கி விட்டது.

"தாத்தா, உங்களுக்குச் சந்தோஷம் இதில் என்றால் ஆயிரம் கடுதாசி வேண்டுமானாலும் எழுதித் தருகிறேன்" என்று கூறினேன்.

"தம்பி, வேண்டாம். ஏதோ அல்ப ஆசைகள். நீ இருக்கும் போது எனக்கென்ன குறை?" என்று கூறிக்கொண்டே என் தலையை வாத்ஸல்யத்தோடு தடவினார் கிழவர்.

நான் அப்படியே அவரது பாதங்களில் சரணாகதியாக விழுந்து விட்டேன். அவரைத் தந்தையாக அன்றுமுதல் நான் ஸ்வீகாரம் செய்து கொண்டேன்.

---

## கவலை மரணத்துக்குக் காரணம்

கவலையினால் மனிதனுடைய தேகபலம் குறைகின்றது. கவலை மனிதனை விரைவில் மரணத்துக்கருகில் செலுத்துகிறது. இவ்வுண்மை 160 வயது வரையில் சந்தோஷமாக வாழ்ந்த ஒரு கிழவர் ஒரு சிறு கவலையால் இறந்த பின்வரும் செய்தியால் புலப்படுகிறது.

துருக்கியில் ஜோரோ ஆகா என்ற ஒருவர் தம்முடைய 160-ஆவது வயதில் ஜூன் மாதம் 27-ஆம் தேதியன்று மரணமடைந்தார். அவருக்கு 120 வயதுதான் ஆயிற்றென்று யாரோ சொன்னார்களாம்; அதனால் கவலையுண்டாகி ஜ்வரநோய்க்குள்ளாகி இறந்தாராம்.

அவர் 1775-ஆம் வருஷம் பிறந்தவர். பன்னிரண்டு மனைவிகளை மணந்தார். அவருக்கு 36 குழந்தைகளிருக்கின்றன. அவர்களுள் ஒரு மகளுக்கு 88 வயதாகிறதாம். 126-ஆம் வயதில் அவருக்கு ஒரு குழந்தை பிறந்து இறந்துவிட்டது. அவர் தம்முடைய கடைசி மனைவியை 152-ஆம் வயதில் மணந்துகொண்டார்.

அவருக்கு 160 வயதாகியும் வளையாமல் நிமிர்ந்து நடந்துவந்தார். அவருடைய உயரம் 6 அடி. கூர்மையான பார்வையுடையவராகவும் இருந்தார். கண்ணாடி போட்டதேயில்லை. அவர் 1930-ஆம் வருஷம் உலகயாத்திரை செய்தார். அமெரிக்காவுக்குச் சென்றிருந்தபோது அவரைப் பரிசோதித்த வைத்திய அறிஞர்கள் இன்னும் 25 வருஷம் அவர் வாழக்கூடுமென்று கூறினார்கள். அவர் எப்போதும் மதுபானம் செய்ததில்லை; இறைச்சி உண்பதில்லை; புகைபிடித்ததில்லை; நாள்தோறும் நெடுந்தூரம் உலாவி வருவார். அவர் தம்முடைய 24-ஆவது வயதில் நெப்போலியனைப் பார்த்திருக்கிறாராம்.

இத்தகையவர் மனக்கவலையினால் மரணமடைந்தனரெனின் கவலையின் வன்மையை என்னவென்று சொல்வது?

# வாடிய மொட்டு*

## என். தங்கவேலன், பி. ஏ.

---

"தங்கப்பா!" என்று கூப்பிட்டது ஒரு குரல்.

தின்றுகொண்டிருந்த பக்ஷணத்தை எடுத்துக்கொண்டே வாசற்படியண்டை ஓடினேன்.

"இத்தனை நாழியாச்சா பள்ளிக்கூடத்திலிருந்து வர? சரி சரி, விளையாடலாம் வா" என்றாள் வாசற்படியில் நின்றிருந்த நீலா.

அவளுக்கு வயது நான்கு. எனக்கு ஆறிருக்கும். அவள் அடுத்த வீட்டிலிருப்பவள். பிராம்மண குலம். தந்தை ஓர் தனிகர். நாங்களிருவரும் மலரும் மணமும்போல் வாழ்ந்து வந்தோம். உண்டி, விளையாட்டு, படித்தல் முதலிய எல்லாவற்றையும் இருவருமாகத்தான் செய்வோம். எங்கள் ஒற்றுமையைப் பெற்றோர்கள் பேசிப் பேசி வியப்பது வழக்கம்.

"போகலாமா?" என்று புறப்பட்டேன். கையிலிருந்த பக்ஷணம் பங்கிடப்பட்டது. இருவரும் குதித்துக்கொண்டு வெளியே ஓடினோம்.

"என்ன விளையாட்டு விளையாடலாம்?" என்றேன்.

"கண்ணாமூச்சி."

"இரண்டே பேர்தானே இருக்கிறோம்; போதாதே?"

"நீதான் சொல்லேன்; என்ன விளையாடுவது?"

"புருஷன் பெண்டாட்டி."

"போடா தங்கப்பா! அதுன்னா சும்மா சண்டை வந்துடும். வாண்டாம்."

கடைசியில் வீடுகட்டி விளையாட ஆரம்பித்தோம்.

* * *

அநேக வருஷங்களாயின. நான் எட்டாம் வகுப்பில் படித்துக்கொண்டிருந்தேன்.

---

* உண்மையில் நடந்த கதைகள் வேண்டுமென்று சென்ற இதழில் எழுதியிருந்தது அன்பர்களுக்குத் தெரிந்திருக்கலாம். அதன்பயனாக அனுப்பப்பட்ட கதைகளுள் ஒன்று இது. பெயர் முதலியன மாற்றப்பட்டனவாம்.
—ப—ர்.

ஒருநாள் மாலை, “தங்கப்பா! உங்கப்பாவை மாத்தியாச் சாமே? நீங்களெல்லாம் ஊருக்குப் போப்போறேளாமே?” என்றாள் நீலா.

“ஆமாம், நீலா; எங்கள் வாழ்வே இப்படித்தான். கண் போன்ற சினேகிதர்களை யெல்லாம் விட்டுவிட்டுப் பிரியவேண்டுமென்று எழுதியிருந்தால் விடுமா? நீலா!”

“தங்கப்பா! என்னை மறந்திடுவையா? திருச்சி ரொம்ப தூரத்திலிருக்கே. அடிக்கடிக்கூட வரமாட்டியே?”

“இல்லை, நீலா! நிச்சயம் வருவேன். உன்னையா நான் மறப்பேன்?”

என் தகப்பனர் ஓர் ஸப்ரெஜிஸ்ட்ரார். திருவாரூரிலிருந்து திருச்சிக்கு மாற்றப்பட்டோம். எப்படியோ இதை அறிந்து கொண்டாள் நீலா. என் ஸ்லேட்டும், பள்ளிக்கூடத்தில் பிரைஸ் வாங்கின பொம்மைப் புத்தகங்களும் அவளிடம் ஞாபகார்த்தமாகக் கொடுக்கப்பட்டன. எனக்காக மாதக்கணக்காய்ப் பின்னிய பூப்போட்ட துண்டு ஒன்றை வெகு சீக்கிரமாக முடித்து அதை எனக்களித்தாள் நீலா.

திருச்சிக்குப் பிரயாணமானேம். வாசற்படியில் கண்கலங்கி நின்றுகொண்டிருந்தாள் நீலா;

“தங்கப்பா! நாளைக்குச் சாயங்காலம் வந்துடணும். மறந்து போயிடாதே” என்றாள். பாவம், பேதை!

* * *

பல வருஷங்கள் பறந்தன. திருச்சி நேஷனல் காலேஜில் ‘இண்டர்மீடியேட்’ படித்துக்கொண்டிருந்தேன். நான் அதற்கப்புறம் ஒருநாளாவது நீலாவைக் காணச்செல்லவில்லை. கடிதப் போக்குவரத்தோடு சரி.

காலேஜில் இருக்கும்பொழுது ஒரு நாள் மாலை எனக்கு ஒரு தந்திவந்தது. நீலாவிற்குக் கல்யாணமாம். அன்றே பிரயாணமானேன் திவாரூருக்கு.

கல்யாணப் பந்தலில் தன் கணவனுடன் உட்கார்ந்திருந்தாள் அவள். மங்கைப்பருவமடையும் சமயமாதலால், மணக்கோலத்துடன் மிளிர்ந்த அவளுடைய பேரழகு, மதனனின் மனைவிக்கு ஒப்பாயிருந்தது என்றால் மிகையாகாது.

எனக்கோ சங்கோஜம். ஒரு மூலையில் உட்கார்ந்திருந்த என்னை அவள் குனிந்த கண்கள் நோக்கின. சட்டெனத் தலையை நிமிர்ந்தாள்.

"வா அண்ணு? நீயும் எங்களுடன் சென்னைக்கு வரவேண்டும். (கணவன்வீடு சென்னை). அம்மா, அண்ணுவை முன்னுலழைத்து உட்கார வை."

நானும் சென்னை சென்றேன். பலநாள் கழித்து ஆவைப் பிரியும் கன்றென அரிதில் அவர்களைப் பிரிந்துவந்தேன்.

* * *

பி. ஏ. வகுப்பு ஸெலக்ஷன் பரீக்ஷை எழுதிக்கொண்டிருந்தேன். தபால் சேவகன் என்முன் ஒரு தந்தியுடன் நின்ருன். நீலாவிற்குக் குழந்தை பிறந்திருக்குமென்று என்னெண்ணம். பிரித்துப் படித்தேன்.

"திருவாரூரில் நீலா அம்மை நோயால் பீடிக்கப்பட்டு அபாய நிலையில் இருக்கிருள்" என்றிருந்தது.

இரவு எட்டுமணிக்குத்தான் வண்டி திருவாரூரை யடைந்தது. வீட்டில் ஒரு மெத்தைமேல் நீலா படுத்திருந்தாள். அடையாளங் கூடக் கண்டுபிடிக்கமுடியாதபடி அவ்வளவு அம்மை போட்டிருந்தது.

"அண்ணு! வந்தீர்களா! வீட்டில் அப்பா அம்மா, தாங்கள் எல்லாம் க்ஷேமந்தானே. அப்பாவுக்கு வேலை சுலபமாயிருக்கிறதா? தங்களுக்குப் படிப்பு கஷ்டமாயில்லையே?" என்றெல்லாம் விசாரித்தாள். பதிலளித்தேன்.

"அம்மா! அண்ணு கொடுத்த படப் புத்தகத்தையும், ஸ்லேட்டையும் என் பெட்டியில் வைத்திருந்தாயே; அவைகளைக் கொண்டுவந்து அவரிடம் கொடு. இதோ. என் டோலக்கையும் கழற்று" என்ருள்.

டோலக்கும் பிறவும் அவள் கையில் கொடுக்கப்பட்டன.

"அண்ணு, கிட்டவாங்களேன். இவையெல்லாம் நீங்களே வைத்துக் கொள்ளுங்கள். கடவுள் என்னை அழைக்கிருர். நான் விரைந்து புறப்படவேண்டும். டோலக்கைத் தங்களுக்கு மனைவியாக வரும் என் சகோதரிக்கு அளியுங்கள். அண்ணு! என்னை மறந்து விடமாட்டீர்களே!"

* * *

கீழ்த்திசையில் வெள்ளி முளைப்பதற்கும் நீலாவின் ஆவியை அந்தகன் கொள்ளை கொள்ளுவதற்கும் நேரம் ஒத்திருந்தது. வெள்ளியின் உருவில் கடவுள் தோன்றி அவளை வரவேற்றனர் போலும்!

நான் இப்பொழுது ரெஜிஸ்ட்ரேஷன் டிபார்ட்மெண்டில் ஒரு குமாஸ்தாவாக இருக்கிறேன். எனக்கு முதலில் பிறந்த பெண் குழந்தைக்கு நீலாவதி என்று பெயரிட்டிருக்கிறேன். ஆயினும் உயர்குலத்துதித்திருப்பினும் உள்ளன்பு பூண்ட என் உத்தம சகோதரியாயிருந்த அவ்வொப்பற்றவணங்கு, மலர்ந்து, காய்த்துப் பழுக்காமல், சாவென்னும் பனியால் சாடப்பெற்று முகைப்பருவத்திலேயே மாண்டனளேயென்னும் மாற்றற்கரிய கவலை என்னைக் கணந்தொறும் வாட்டும்.

என் சிறுபிராயத்தில், யாவரும் திருச்சிக்குப் பிரயாணமாகப் புறப்படும்பொழுது, கண்களில் நீர் ததும்ப வாசற்படியில் நின்றுகொண்டு யதார்த்தமான உள்ளத்துடன், "தங்கப்பா. நாளைக்குச் சாயங்காலம் வந்துடணும். மறந்து போயிடாதே?" என்று சொன்னது மாத்திரம் எப்பொழுதும் என் மனக்கண்முன் நின்று காட்சியளிக்கிறது.

---

## இந்தியரின் புராதன சித்திகள்

இப்பொழுது உலகம் முழுவதும் உபயோகிக்கப்பட்டு வருகிற கணித எண்களும், பின்னக்குறிகளும், ஆல்ஜிப்ரா என்ற கணிதமும், சதுரங்கவிளையாட்டும், கதைகள் முதலியனவும், புராதன இந்தியர்களாலேயே கண்டுபிடிக்கப்பட்டன. புராதன இந்தியாவில்தான் மனித தேகத்தை அறுத்து ஆராய்ச்சி செய்யும் முறை முதல் முதலாகக் கண்டுபிடிக்கப்பட்டது. முதல் தடவையாக மனிதருக்கும் மிருகங்களுக்கும் ஆஸ்பத்திரிகளும் மருந்துச்சாலைகளும் ஏற்படுத்தினதும், பாதரசம் முதலிய மருந்துகளை உள்ளுக்குக் கொடுக்கும் முறை முதலாவது ஆரம்பித்ததும், தோல் ஒட்டவைத்தல், கண்ணில் பூ விழுந்திருப்பதை அறுத்தெடுத்தல் முதலிய ரண வைத்திய முறைகளை முதலில் வழக்கத்துக்குக் கொண்டுவந்ததும் புராதன இந்தியாவில்தான். பெண்களை டாக்டர்களாகவும், மருத்துவிச்சிகளாகவும் முதல் முதலாவதாக நியமித்ததும் புராதன இந்தியாவில்தான்.

—டாக்டர் ஸி. முத்து.

# நாடி வைத்தியர்

டி. எஸ். இராமச்சந்திரையர், பி. ஏ.

---

திருவெண்காடு, சின்னப்பண்ணை சிதம்பரமுதலியார் தம் வீட்டுப் புறத்திண்ணையில் உட்கார்ந்து கணக்குப்பிள்ளை காரியஸ்தர்களிடம் பேசிக்கொண்டிருந்தார். அப்பொழுது சுமார் 8 மணியிருக்கும். அவர் கணக்குப்பிள்ளையைப் பார்த்து, "அதோ தெருவில் வருகிறவர் யார்? புதியவராயிருக்கிறாரே" என்று கேட்டார்.

"அவரை நீங்கள் இன்னமும் பார்க்கவில்லையா? அவர்தான் வினைதீர்த்தான் குடியிலிருந்து வந்திருக்கும் வைத்தியர். இவ்வூருக்கு வந்து ஒரு மாதமாயிற்று. அவர் நாடிபார்ப்பதில் அதிக திறமையுள்ளவர். ஆதலால் அவரை நாடி வைத்தியரென்றே யெல்லோரும் அழைக்கிறார்கள். அவரை இங்கே கூப்பிடுகிறேன்.

"என்ன நாடிவைத்தியரே, இவ்வளவுகாலையில் புறப்பட்டீர்? இங்கே வாரும்."

"இங்கேதான் வரவேண்டுமென்று கிளம்பினேன். நல்ல சகுனமாயிற்று. முதலியாரவர்களை நெடுநாளாகப் பார்க்க வேண்டுமென்று ஆவல்கொண்டிருந்தேன். இன்றைக்குத் தரிசனம் கிடைத்தது."

இவ்வாறு கூறித் திண்ணையருகில்வந்தவுடன் முதலியார் அவரைப் பார்த்து, "வாரும்; உட்காரும். உம்மைப்பற்றி மிகவும் சிறப்பாகக் கணக்குப்பிள்ளை பேசுகிறார். ஏதோ நாடி பார்ப்பதில் அதிக சாமர்த்தியமுள்ளவராமே; இதோ என் கையைப் பாரும்" என்று கூறிக் கையை நீட்டினார்.

வைத்தியர் முதலில் வலதுகை நாடியைப் பார்த்தார்; பிறகு இடதுகை நாடியைப் பார்க்கையில் முதலில் ஒருவிரலை வைத்தழுத்திக் கவனித்து, "ஓ நீர்க்கோவையா? சரி!" என்று கூறினார். பிறகு மற்றொரு விரலைப் பக்கத்தில் வைத்துக் கவனித்து, "வெங்காயம் சாப்பிட்டதாலும் தூக்கங் கெட்டதாலும் வந்ததா? சரி!" என்றார். பிறகு பக்கத்தில் மற்றொரு விரலைவைத்துக் கவனித்தபின், "என்ன? மிளகா? எவ்வளவு? பன்னிரண்டா? சரி" என்று சொன்னார்.

இவைகளையெல்லாம் கேட்ட முதலியார் வியப்படைந்து, "என்ன வைத்தியரே! நாடியோடு பேசுகிறீர். நான் வெங்காயம் சாப்பிட்டதும் கண்விழித்திருந்ததும் உண்மைதான். ஆனால் அவைகள் எப்படி நாடியிலிருந்து உமக்குத் தெரிந்தது."

"தாங்கள் தந்தி ஆபீசுக்குப் போயிருக்கிறீர்களே; அங்கே கடகடவென்று அடிக்கும் சப்தத்தினால் விஷயங்களை அவர்கள் எப்படிச் சொல்லுகிறார்கள்?"

"அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்? அவர்கள் எழுத்துக்களுக்குச் சங்கேதங்கள் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். அதனால் அறிந்துகொள்ளுகிறார்கள்."

"அதுபோலவேதான் நாடிகளுடைய பாஷைக்கும் சங்கேதங்களுண்டு. அவை எங்கள் குடும்பத்தவர்களுக்குத்தான் கிடைத்திருக்கின்றது. தேவருலகிலுள்ள வைத்தியர்களுள் தன்வந்திரிக்கு மாத்திரம் தெரியும்."

"அப்படியா! உங்களுக்கு எப்படிக் கிடைத்தது?"

"அதுதான் ரகஸ்யம். ஆனால் இவ்விடத்தில் கூறுவதனால் பாதகமில்லை; சொல்லுகிறேன்: எங்கள் முன்னோர் உஜ்ஜயினீநகரத்தில் ஆதிகாலத்தில் இருந்துவந்தனர். அங்கே விக்கிரமாதித்தன் அரசாண்டு வருகையில் அவனுடைய குமாரனுக்கு மண்டைக் குடைச்சல் உண்டாகித் துன்பப்படுத்தியது. அக்காலத்திருந்த எங்கள் குலத்தவராகிய காலயுக்தியென்பவரை யழைத்து அரசன் கேட்டான். அவர் 'குமாரர் நீரை அருந்தும்பொழுது தவளையின் முட்டையொன்று உள்ளேசென்று இருதயத்தின்வழியாய்த் தலைக்கேறித் தவளையாகித் தங்கியிருந்ததால் குடைச்சல் உண்டாகின்றது' என்று சொன்னார்.

'என்ன காலயுக்தி, தவளை எப்படித் தலைக்குள் உயிரோடிருக்கும்? நீர் சொல்வது புதுமையா யிருக்கிறதே!'

'மகாராஜா, இது ஒரு புதுமையா? கல்லிற்குள் தேரை யிருந்து சப்தம்செய்வதைக் கண்டதில்லையா? அதைப்போன்றதேதான் இதுவும்.'

'ஓ! அதனால்தான் குமாரன் தூங்குகையில் தலைக்குள்ளிருந்து சப்தம் கேட்கிறது. நல்லது; அதற்கென்னவிதம் சிகிச்சை செய்வது? சொல்லும்.'

'தலையைப் பிளந்து தவளையை எடுக்கவேண்டும். அதுசெய்வதற்குத் தன்வந்திரியைத் தவிர வேறொருவருக்கும் தெரியாது. அவரை வரவழைக்கவேண்டும்.'

"அதுகேட்ட அரசன் தனது தவவலிமையால் தன்வந்திரியை அழைத்துச் சிகிச்சை செய்யும்படி வேண்டினன். அவர் அதற்கிசைந்து குமாரனது தலை ஓட்டை நீக்கிப்பார்க்கையில் தவளை மூளையைக் கவ்விக்கொண்டிருந்தது. அதைப் பிடித்திழுத்தால் மூளை விழுந்துவிடுமே, என்னசெய்வதென்று சிறிது ஆலோசித்தார். அப்பொழுது பக்கத்திலிருந்த காலயுக்தி தம் கையில் தயாராக வைத்திருந்த நீர் நிறைந்த தட்டை மூளையினருகில் கொண்டு வந்தவுடன் நீரில் தவளை பாய்ந்தது. உடனே மண்டை ஓட்டை மறுபடியும் மூடிவிட்டுத் தனவந்திரி காலயுக்தியைப் பார்த்து, 'உன் பெயருக்கேற்றபடி தகுந்த உபாயம் செய்தாய். அதனல் எனக்கு உண்டாகிய ஆநந்தத்திற்கு அளவில்லை. நீ செய்த உபகாரத்திற்குப் பிரதியாக உனக்கு நாடிகளின் பாஷையை உபதேசிக்கிறேன். அதை உங்கள் குலத்தவர்களுக்கே உபதேசித்து வரவேண்டும். அதுவும் மூத்தமகனுக்கே உபதேசித்து வரவேண்டும்' என்று சொல்லி உபதேசம் செய்தார். அதுமுதல் பரம்பரையாய் வந்துகொண்டிருக்கிறது."

இதுகேட்ட முதலியார் வைத்தியரைநோக்கி, "நீர் சொல்வது சரிதான். ஆனல் மூன்று விரல்களால் பார்த்துத் தனித்தனியாய்க் கேட்டீர்களே; அதெப்படி? சொல்லும்."

"முதலியார்! வெகு சூக்ஷ்மமாகக் கவனித்திருக்கிறீர்கள். அதுவும் அதிக கூடமானது; இதுவரையில் ஆருக்கும் நான் சொன்னதில்லை. சாதாரணமாக வைத்தியர்களெல்லாம் இரண்டுகைகளிலும் நாடி பார்ப்பார்கள். ஆனல் அதன் காரணம் இன்னதென்றறியார்கள். எல்லாரும் இரண்டு கைகளிலும் பித்தவாதகபமென்று மூன்று நாடிகள் பேசுவதாகக் கூறுவார்கள். அவர்கள் இதன் உண்மையை அறியார். வலக்கை நாடிகள் இம்மூன்றையுமே காட்டும். இடதுகை நாடிகளோவென்ருல் நோய், அதன் மூலகாரணம், அது தீரும்வழியாகிய மூன்றையும் முறையே காட்டும். இதுவும் தன்வந்திரியால் சொல்லப்பட்ட விஷயம். இதைக் குறிப்பதற்காகவே திருவள்ளுவரும், 'நோய்நாடி, நோய்முதல் நாடி, அதுதீரும் வாய் நாடி" என்று மூன்றுநாடிகள் சொல்லி யிருக்கிருர்."

"வைத்தியரே! சற்று நிறுத்தும்; என்ன தோன்றியபடி யெல்லாம் சொல்ல வாரம்பித்து விட்டீர்! இந்தக் குறளில் நாடி யென்பதற்கு ஆராய்ந்தறிந்தென்றல்லவோ பொருளுரைக்கிருர்கள்?"

"பண்டிதர்கள் அவ்வாறுதான் பொருள் கூறுகிருர்கள். ஆனல் நான் சொல்லியதுதான் அதன் உண்மைப் பொருளென்பதில் சந்தேகமில்லை. ஏனெனில் இதுதான் பொருளென்று திருவள்ளு

வரே எங்கள் குலத்தவராகிய காலநேமிக்குக் கூறியுள்ளார். ஆதலால் இப்பொருள் எங்கள் குலத்தில் பரம்பரையாய் வந்து கொண்டிருக்கிறது.''

"இதென்ன விபரீதம்! திருவள்ளுவரை உங்கள் குலத்தவர் எப்படி சந்தித்தார்?''

"அதைக் கூறுவேன்: நாயனர் சிவஸ்தலங்கள்தோறும் சென்றுவருகையில் வினைதீர்த்தான் குடியை யடைந்தபொழுது அவருக்குச் சுரம்கண்டது. அப்பொழுது அங்கே வந்து சேர்ந் திருந்த காலநேமியை அழைத்து அவர்கையைக் காட்டியபொழுது காலநேமி நாடிகளின் பாஷையையறிந்து கூறக்கேட்டு அதிசயித்துத் தாமும் இதன் உண்மையை அறிவிக்கவேண்டியே இக்குறளில் நாடியென்னும் பதத்தை மூன்றுதடவை உபயோகித்திருப்பதாகக் கூறினராம்.''

"வைத்தியரே! உம்மிடத்தில் பேசிக்கொண்டிருந்தால் பொழுதுபோவது தெரியாது. நல்லது; இப்பொழுது என் நீர்க் கோவைக்கு என்னசெய்ய வேண்டும்?''

"அதற்கா? பன்னிரண்டு மிளகெடுத்துச் சட்டியிலிட்டு வறுத் துக் கால்படி நீர்விட்டு வீசம்படியாகக் காய்ச்சி இறக்கி அதில் நான்கு சொட்டுத் தேன்விட்டருந்துங்கள். மிளகு பன்னிரண்டிருப் பது அவசியம். ஏனெனில் ஆதித்தியர்கள் பன்னிருவரல்லவா? அவர்கள் தாமே நீரைச் சுருக்குபவர்கள்?''

இவ்வாறு கூறி வைத்தியர் எழுந்துசென்ருர்.

முதலியார் அவருடைய சக்தியில் ஈடுபட்டவராய் அவரைக் குடும்ப வைத்தியராக வைத்து வேண்டிய அளவு திரவியம் அளித்து வந்தார்.

இவ்வாறு ஒருவருஷகாலஞ் சென்றபின் அவ்வூரில் ஒரு விஷ சுரம் கிளம்பியது. முதலியார் வீட்டில் அனைவரும் சுரத்தால் வருந் தினர். அதேசமயத்தில் வைத்தியருக்கும் சுரம் கண்டது. முதலி யார் இரண்டுமூன்றுநாள் சொல்லியனுப்பியும் வைத்தியருக்கு வரமுடியவில்லை. அப்பொழுது முதலியார் வைத்தியரால் வர முடியாவிட்டால் சிஷ்யனையாவது மருந்துடன் அனுப்பும்படி சொல்லிவிட்டார். உடனே தம் சீடனுகிய மதிவாணனை அழைத்துக் கைபார்த்து நோயின் காரணங்களை எப்படி அறிந்து சொல்லவேண்டுமென்பதை ரகஸ்யமாகக் கூறிக் கட்டுமாத்திரை யையும் கொடுத்தனுப்பினர். மதிவாணன் முதலியார் வீட்டரு கில் வந்து வெளியில் சுற்றிப்பார்த்துவிட்டு உள்ளே நுழைந்து கூடத்தில் படுத்திருக்கும் முதலியார் அருகிற்சென்று உட்கார்ந்

தான். முதலியார் கைகளைக் காட்டினர். சீடன் நெடுநேரம் கைகளை ஊன்றிப் பார்த்து ஒன்றும் பேசாமலிருந்தான். அதுகண்ட முதலியார், "என்ன மதிவாணு, பேசவில்லை? நாடி என்னசொல்கிறது? சும்மா பயப்படாமல் சொல்" என்றார்.

"என்ன சொல்லுகிறது? சுரம் கடுமையாய்த்தான் இருக்கிறது. ஒரு குதிரையைத் தின்றுவிட்டால் சுரமெப்படி கடுமையாயடிக்காமலிருக்கும்?"

"குதிரையாவது தின்னவாவது! என்ன பிதற்றுகிறாய்? மதிவாணு! உனக்குச் சுரம் அடிக்கிறதோ? சன்னிகண்டிருக்கிறதா?"

"அதெல்லாமில்லை. அதோ மூலையில் குதிரைஜேணம் மாத்திரம் வைத்திருக்கிறது. குதிரையைக் காணோம். ஆகவே நீங்கள் அதைத் தின்றிருக்கவேண்டுமென்று தீர்மானித்தேன். என்னுடைய குரு தங்கள் வீட்டின் வெளிப்புறத்திலிருக்கும் குப்பையிலுள்ள வஸ்துக்களால் என்னபதார்த்தம் சாப்பிட்டீர்களென்று சொல்லவேண்டுமென்றார். குப்பையில் ஒன்றும் காணப்படவில்லை. இங்கே குதிரைச் சாமான்கள் காணப்பட்டன. ஆனதால் நான் இவ்வாறு தீர்மானித்தேன்."

இதுகேட்ட முதலியார் தாம் அதுவரையில் வைத்தியரால் வஞ்சிக்கப்பட்டதை நினைந்து வருந்தி மதிவாணனை நோக்கி, "நீ போய் வைத்தியரைச் சுரம் விட்டவுடன் வரச்சொல்" என்றார்.

மதிவாணன் சென்று நடந்தவிஷயங்களை வைத்தியருக்குத் தெரிவித்தான்.

அவர் நம்முடைய வஞ்சனை வெளியாய்விட்டதே, இனியிங்கிருக்கலாகாதென்று அன்றிரவில் சீடனும் தாமுமாய் வண்டியேறி ஊரைவிட்டு ஓடிப்போயினர்.

மறுநாள் வைத்தியர் வீட்டிற்கனுப்பிய வேலைக்காரர்கள் முதலியாரிடத்தில் வந்து வீடு பூட்டியிருப்பதாயும் வைத்தியர் போனவிடம் தெரியாதென்றும் சொன்னான்.

---

## சின்னஞ்சிறிய பிடில்

கலிபோர்னியாவில் பஸடினு என்னும் இடத்தில் உள்ள பிடில் உற்பத்திக்காரர்களில் இருவர் மிகச் சிறிய பிடிலைச் செய்வதில் போட்டி போட்டார்கள். பாஸர் பேர்ரன் (*Fassauer Ferron*) என்பவர் ஐந்து மாதம் முயன்று ஒரு சிறிய பிடிலைச் செய்தனர்; அதன் நீளம் ஒன்றே முக்கால் அங்குலமே; ஓர் அவுன்ஸின் முப்பத்திரண்டில் ஒரு பாகமே அதன் கனம். எம்மன்ஸ் ஸி மோல்டன் என்ற மற்றொருவர் ஆறுமாதம் உழைத்து ஒன்றரை அங்குல நீளத்தில் ஒரு பிடில் செய்தார். இரண்டும் பிடிலுக்குரிய எல்லா லக்ஷணங்களும் அமைந்துள்ளன.—பாபுலர் ஸயன்ஸ்.




# வெள்ளி நகை

வி. விசாலாக்ஷி அம்மாள்

---

'பொன்னிடப் பொன்னிடப் பெண் அழகு, மண்ணிட மண்ணிட மாடம் அழகு' என்பது ஒரு பண்டைக் காலத்துச் சொல். வைரம், முத்து, இரத்தினம் போன்ற கற்கள் பதிக்கப்பட்ட ஆபரணங்களைவிடத் தங்க நகைகளையே சிலர் சிலாக்கியமானவைகளாகக் கருதுகிறார்கள்; 'தங்கம் என்றைக்கும் தங்கமாகவே இருக்கும்; மற்றவைகள் எல்லாம் அப்படியா?' என்று அவர்கள் கூறுகிறார்கள். ஆனால், அவ்விதம் கூறுகிறவர்கள் மிகச் சிலரே. அநேமாகக் கற்கள் பதிக்கப்பட்ட நகைகளையும் அவைகளைச் செய்து கொள்ளச் சக்தி இல்லா விட்டால், தங்கத்தினால் செய்யப்பட்ட அணிகளையுமே மாதர்கள் விரும்புகிறார்கள். வெள்ளியினால் செய்யப்பட்டிருக்கும் நகைகளை ஒருவருமே விரும்புவதில்லை. காலில் போட்டுக் கொள்ளும் பாதசரம், கொலுசு, காப்பு, மெட்டி, சுற்று இவைகளை ராஜ வம்சத்தைச் சேர்ந்தவர்களைத் தவிர, மற்றவர்கள் தங்கத்தினால் செய்து காலில் அணிந்து கொள்ளக் கூடாது என்று நம்மவருள் ஓர் ஐதீகம் இருப்பது அனைவருக்கும் தெரிந்த விஷயந்தான். ஆகையினால் இந்த நகைகளை மட்டும் வெள்ளியில் செய்து போட்டுக் கொள்ளுகிறார்கள். மற்ற நகைகளை வெள்ளியில் செய்து அணிந்து கொள்ளுவது நாசூக்கான அலங்காரமாக எண்ணப்படுவதில்லை.

ஆனால், கால வேறுபாட்டின் மகிமையால், சமீபத்தில், வெள்ளியில் செய்த லோலக் முதலியவைகளைச் சிலர் அணிந்து கொள்ளத் தொடங்கி இருக்கிறார்கள். இந்த நகைகள் வெள்ளியில் செய்யப்பட்டு, அழகிய வர்ணங்களில் இனமல் பூசப்பட்டுப் பார்வைக்கு நேர்த்தியாகவே இருக்கின்றன. பெரியவர்கள்

அணிந்து கொள்ளுவதற்கு ஏற்றனவாக இவைகளைக் கூறுவதற்கில்லை. சிறிய குழந்தைகளுக்குப் போட்டால் மிகவும் அழகாக இருக்கும். எட்டு வயதான ஒரு பெண் குழந்தை இந்த வெள்ளி இனமலில் செய்த நகைகளை அணிந்து அதற்கு ஏற்றாற் போல் சிங்காரம் செய்துகொண்டு தெருவில் விளையாடிக் கொண்டிருந்தது. இந்த அலங்காரம் அந்தக் குழந்தைச்கு மிகவும் பொருத்தமாகவும் நாசூக்காகவும் நேர்த்தியாகவும் இருந்தது.

இந்தப் பெண், 'கிரீம்' கலர் பட்டில் பாவாடை கட்டி இருந்தாள். பாவாடையின் உடலில் நல்ல தூய வெள்ளைப் பட்டில் சிறிய பூக்கள் போடப்பட்டிருந்தன. கறைக்கு ஒரு வித இலேசான நீலத்தில் சாண் அகலத்திற்குக் கறை அச்சிடப்பட்டிருந்தது. சட்டையும் இதற்கு ஏற்றதாகவே இருந்தது. அவள் காதில் நீல இனமல் பூசப்பட்ட வெள்ளி லோலக்குப் போட்டிருந்தாள். இது குடம் போல் செய்யப்பட்டிருந்தது. குடத்தின் மேல்பக்கத்துக்குப் பத்தி பத்தியாக நீல இனமல் பூசப்பட்டிருந்தது. கீழுக்கு, வட்டமாகச் சிறிய வெள்ளிக் கம்பிகள் அடியில் மிகவும் சிறிய வெள்ளிச் சலங்கைகளுடன் இசைக்கப்பட்டிருந்தன. அவள் கையில் வெள்ளி இனமல் வளையல் ஒரு ஜதையும், கண்ணாடி வளையல் ஒரு ஜதையும் போட்டிருந்தாள். கழுத்தில் இதே மாதிரியில் செய்யப்பட்ட 'நெக்லெட்' அணிந்திருந்தாள்.

இந்த லோலக்குகள் வளையல்கள் எல்லாம் மிகவும் மலிவான விலைக்கு விற்கப்படுகின்றன. இனமல் பூசின ஒரு ஜதை வெள்ளி லோலக்குகளின் விலை மூன்று ரூபாய்களுக்கு மேல் ஆவதில்லை. ஜதை வளையல்களின் விலை இரண்டு ரூபாய்களில் இருந்து மூன்று ரூபாய்கள் வரையில் ஆகின்றன. அதிக விலை இல்லாததனால் இந்த நகைகளைக் குழந்தைகளுக்குத் தாராளமாகப் போடலாம்; அழகாகவும் இருக்கும். இனமல் பூசி இருப்பதனால் திட்டமான வர்ணங்களில் வாங்கிப் போடலாம். இனமல் பூசி வெள்ளியில் பல தினுசுகளில் 'புரோச்'சுகளும் செய்து விற்கிறார்கள்.

---

## பச்சை நாகம்

திருவிதாங்கூரிலுள்ள காடுகளில் 4,000 அடி உயரமுள்ள இடங்களில் பச்சை நிறமுள்ள நாகங்கள் இருக்கின்றன; அவை மிகக்கொடிய விஷமுடையவை. அவை பச்சைப்பாம்பைப் போலவே இருக்கின்றனவாம். ஆனால் படம் எடுக்கின்றனவாம்.

# அரிசி ஹல்வா

## வி. விசாலாக்ஷி அம்மாள்

---

கோதுமைப் பால் எடுத்து ஹல்வாச் செய்வது போல், பச்சை அரிசியிலும் ஹல்வாச் செய்யலாம். இதற்கு அரிசியை முதலில் நன்ருகக் குத்திப் புடைத்து நொய் இல்லாமல் கொழித்துச் சுத்தமாக எடுத்துக்கொள்ள வேண்டும். கால்படி அரிசியை ஹல்வாச் செய்வதாக இருந்தால், ஒரு கீற்றுத் தேங்கா யையும் அதில் சேர்த்துக் கொள்ளவேண்டும். அரிசி நன்ருக ஊறினதும் களைந்து அரித்து வடித்து எடுத்துக்கொண்டு மேற் சொன்ன அளவில் தேங்காயைச் சேர்த்து நன்ருக ஒட்டி ஒட்டி அரைக்க வேண்டும். மா நன்ருக வெண்ணெ போல் மசியும் வரை யில் அரைக்க வேண்டும். பிறகு, கால் படி அரிசிக்கு அரைப்படி சர்க்கரை என்ற அளவில் அஸ்கா சர்க்கரையை ஜீராக் காய்ச்ச வேண்டும். சர்க்கரையும் தண்ணீருமாகக் கலந்து கொதிக்கும் பொழுது அதில் கொஞ்சம் பாலேயோ அல்லது எலுமிச்சம்பழத் தின் ரசத்தையோ தெளித்து அழுக்கை எடுத்து ஜீராவைச் சுத்தம் செய்து காய்ச்சிக்கொள்ளவேண்டும். பாகு கம்பிப் பதத்திற்கு வந்ததும் அடுப்பை விட்டு இறக்கி வைத்துக் கொள்ளவேண்டும். வாய் அகலமான, அடி கனமான ஓர் ஈயம் பூசின பாத்திரத்தில், அரைத்து வைத்திருக்கும் மாவின் மொத்தையைப் போட்டு ஜலம் விட்டு நல்ல இளகலாகக் கரைத்து அடுப்பில் வைத்துக் கிளற வேண்டும். மா மறுபடியும் இறுகலாக வெந்து சேர்ந்ததும் தயா ராகக் காய்ச்சி வைத்திருக்கும் ஜீராவை அதில் சொட்டு நெய் விட்டுக் கைவிடாமல் கிளறவேண்டும். கையில் ஒட்டாமல் ஹல்வா சுருண்டு வந்ததும் வறுத்த வாதுமைப்பருப்பு, கரைத்த குங்குமப் பூ, பொடி செய்த ஏலக்காய் இவைகளை அதில் கொட்டி, நன்ருகக் கலந்து கிளறிக் கீழே இறக்க வேண்டும். ஓர் ஈயம் பூசின தாம்பா ளத்திலாவது அலுமினியம் தாம்பாளத்திலாவது நன்ருக நெய் யைத் தடவி ஹல்வாவை அதில் கொட்டிச் சமனுகப் பரப்ப வேண்டும். ஆறினதும் கத்தியால் துண்டுகளாகக் கீறி எடுத்துக் கொள்ளவேண்டும். இந்த ஹல்வா வாய்க்கு ருசியாகவும் மண மாகவும் இருக்கும்.



# தாலாட்டு

தா. பத்மாஸனி

———

[தமிழ் நாட்டுப் பெண்மணிகளுக்குக் குரல் பிறக்கையிலே பாட்டுங் கூடப்பிறக்கிறது. அவர்களுக்கு உணர்ச்சி ததும்புங்காலத்திலெல்லாம் பாட்டு வாயிலிருந்து தானே வெளிவருகிறது. வீங்கி முழங்கியழுங் குழந்தையைத் தூங்கவிட்டுத் தாலாட்டுப்பாடும்பொழுது அந்தப்பச்சைக் குழந்தை தாலாட்டு லாஹிரியிலே மயங்கித் தூங்கிவிடுகிறது. தமிழ் நாட்டுப் பெண்மணிகள் தொன்றுதொட்டுப் பாடிவரும் தாலாட்டுப் பாட்டுக்கள் பல. அவற்றில் அரிய கருத்துக்களும் இனிய உவமைகளும் அங்கங்கே மின்னிக்கொண்டிருக்கும். அவை முதலில் இலக்கணத் தோடு பொருந்தி வழங்கியிருக்கலாம். இப்பொழுது வழங்கும் உருவத் தில் பெண்கள் வாய்ப்போக்கில் அமையும் 'எகனைமொகனை'களைக் காண லாம். இடையிடையே சொற்களின் உருவம் அவர்களுடைய 'எகனை மொகனை' விளையாட்டில் மாறியிருக்கும். 'தகப்பனர்' என்னும் வார்த்தை 'தோப்பனர்' என்று மாறி அதற்கேற்றபடி தோப்பு என்ற மோனைபெற்று நிற்பதைப் பின்வரும் தாலாட்டில் பார்க்கலாம். இப்படி உண்டாயிருக்கும் சிருஷ்டிகள் இலக்கணத்துக்குத் தூரமானலும் குழந்தைகள் காதுக்கு அருகில் இருக்கின்றன. இவற்றைப் பாதுகாப் பது நம் கடமையன்றோ? —ப—ர்.]

ஆறிரண்டும் காவேரி அதனடுவே சீரங்கம்
சீரங்க மாடித் திருப்பாற் கடலாடி
மாமாங்க மாடி மாசிக் கடலாடி
தைப்பூச மாடித் தவஞ்செய்து வந்தானே!

சஷ்டி யிருந்து சங்குபால் தானெடுத்து
பட்டினி யிருந்து பகவானைச் சேவித்து
மலைமேல் தவமிருந்து வந்து பிறந்தானே!

ஆளப்பிறந்தானே! அரசாள வந்தானே!
தானே வளந்தானே! தர்மர்கள் தந்தானே!

அஞ்சு குடிக்கரசோ! பஞ்சவர்கள் பாற்குடமோ!
இலைதீய்ந்து கொடிவாடி இல்லையென்று போமிடத்தில்
சருகுதிர்த்துப் பழம்பழுத்த சாதிப் பலாப்பழமோ!
கெட்டகண்ணைத் தந்தானே! பட்டகுறை தீர்த்தானே!
கேளாச் செவியிரண்டும் தாளாய்த் திறந்தானே!
பாட்டனார் ஆண்ட பழுதில்லா ராச்சியத்தைத்
தாயாதி ஆளாதே தானாள வந்தானே!
தோப்பனார் ஆண்ட தோப்புத் துரவுகளை
ஆளப் பிறந்தானே! அரசாள வந்தானே!

ஆளப் பிறந்தானுக் காரார் துணையிருப்பார்?
பக்கத்துணையிருப்பார் பார்வதியும் ஈசுவரரும்
சாரத் துணையிருப்பார் சந்திரரும் சூரியரும்.
நடுவே துணையிருப்பார் நாரதரும் பிரும்மாவும்.

ஆளப் பிறந்தானுக் காரார்கள் தோழன்மார்?
மேலத் தெருவினிலே மெல்லியர்கள் தோழன்மார்.
கீழத் தெருவினிலே கிளிப்பிள்ளை தோழன்மார்.

ஆளப் பிறந்தான் அழுங்குரலைத் தான்கேட்டு
மாடப் புறுவெல்லாம் வந்தே நிழல்காட்டிக்
கூவப் படாதென்று குரல்காட்டி நிற்கிறது.
அழைத்து விளையாட அன்னம்வந்து நிற்கிறது.

தாத்தா அடித்தாரோ தாமரைப்பூச் செண்டாலே!
பாட்டி அடித்தாளோ பால்புகட்டும் சங்காலே!
அத்தை அடித்தாளோ அரவணைக்கும் கையாலே!
மாமா அடித்தாரோ மல்லிகைப்பூச் செண்டாலே!
சித்தி அடித்தாளோ சின்னஞ்சிறு கையாலே!

அடித்தாரைச் சொல்லியழு ஆக்கினைகள் பண்ணிவைப்போம்.
தொட்டாரைச் சொல்லியழு தோள்விலங்கு போட்டுவைப்
[போம்.
அறையில் அடைத்துவைப்போம் ஆக்கினைகள் பண்ணிவைப்
[போம்.
சிறையில் அடைத்துவைப்போம் சேர்விலங்கு போட்டுவைப்
[போம்.

கட்டை விரல்தறித்துக் கடல்மீது ஏற்றிடுவோம்.
சுண்டு விரல்தறித்துச் சீமைவிட் டகற்றிடுவோம்.

ஆரடித்த கண்ணீர் ஆருய்ப் பெருகியது?
ஆருய்ப் பெருகி ஆனை குளித்தேறிக்
குளமாகத் தேங்கிக் குதிரை குளித்தேறி
வாய்க்காலாய் ஒடி வழிப்போக்கர் கால்கழுவி
மஞ்சளுக்குப் பாய்ந்து மருதோன்றி வேரோடி
இஞ்சிக்குப் பாய்ந்து எலுமிச்சை வேரோடி
தாழைக்குப் பாய்கையிலே தளும்பினதாம் கண்ணீர்
வாழைக்குப் பாய்கையிலே வற்றியதாம் கண்ணீர்.

அம்மான் களத்திலே அவனுக்கு நெல்கேட்டு, அவன்
பொன்னுன வாயாலே போவென்று சொல்லாதே
காசாய்க் கொடுத்தால் களிம்பேறிப் போமென்று
துட்டாய்க் கொடுத்தால் துருப்பிடித்துப் போமென்று
காசை அவலாக்கிக் கைநிரம்பத் தந்தானே!
பணத்தை அவலாக்கிப் படிநிரம்பத் தந்தானே!

கண்ணுன கண்ணனுக்குக் காதுகுத்த வேணுமிப்போ !
மண்ணில்லா வெல்லம் மறுவில்லாப் பச்சரிசி
கண்ணில்லாத் தேங்காய் கணுவில்லாச் செங்கரும்பு.
கொண்டுவா அம்மானே என் குஞ்சரத்தின் காதுகுத்த
வாங்கிவா அம்மானே என் வண்ணமகன் காதுகுத்த.

---

## நுண்ணெலி பெருக்கும் இயந்திரம்

மிகவும் நுண்ணிய ஒலிகளைப் பெருமுழக்கமாகப் பெருக்கிக் காட்டும் ஒருவகை இயந்திரம் இப்பொழுது கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. அதை 'முழக்க மைக்ராஸ்கோப்' (*Noise Microscope*) என்னும் பெயரால் வழங்குகின்றனர். அந்த இயந்திரம் ஒரு கைப்பெட்டியினளவிலேயே அமைந்துள்ளது; ஆதலின் அதனை எங்கும் தூக்கிச் செல்லலாம். அக்கருவி மிகவும் நுண்ணிய ஒலிகளை நூறுகோடி மடங்கு அதிகமாக ஒலிக்கச் செய்கின்றது. அந்தக் கருவியைக் கண்டுபிடித்தவர், இரண்டு தபால் முத்திரைகளைக் கிழிக்கும் சிற்றெலியானது அக்கருவியினுல் 3,50,000 மைல்களுக்கப்புறம் கேட்கத்தக்க பெருமுழக்கமாகப் பெருக்கப்படுமென்று கூறுகிருர். இந்தக் கருவி, புழுக்கள் அரிக்கும் ஒலியையும், வைத்திய ஆராய்ச்சிக்குதவியாக மனித உடலில்உள்ள மூட்டுக்களில் உண்டாகும் ஒலியையும் அறிந்துகொள்ள உதவுமென்று தெரியவருகிறது.

—பாபுலர் ஸயன்ஸ்.

# விடுகதைகள்








குழந்தைகளே! மேலேயுள்ள படங்களைப் பார்த்துப் பின்னுள்ள விடுகதைகளுக்குச் சரியான விடைகளைத் தெரிந்துகொள்ளுங்கள்.

1. தகதக வென்ற தாம்பாளம்; தங்கத் தங்கத் தாம்பாளம்; ஆற்றுக் குள்ளே கிணற்றுக் குள்ளே அசைந்து மிதக்கும் தாம்பாளம்; பாதாளக் கரண்டி பத்துப் போட்டாலும் எடுக்க முடியாத தாம்பாளம்.

2. கறுப்புச் சட்டைக்காரன்; கள்ளத்தனத்தில் கெட்டிக்காரன்; தோட்டிவேலை செய்திடுவான்; சுறு சுறுப்பாய் இருந்திடுவான்; ஒருவனை நாம் கூப்பிட் டால் ஊராரையே அழைப்பவன்; சீதையையே கொத்தினதால் ஸ்ரீராமர் சாபம் ஏற்றவன்.

3. பச்சைக்கோலி, கண்ணுடிக்கோலி, பார்க்க அழகானசோலி; கொத்துக் கொத்தாய்க் கொடியில் காய்த்துக் கொல்லையிலே தொங்குவது; ஒருகாலத்தில் ஒரு நரிதான் சீ சீ யென்றே ஓடினதாம்.

4. செக்கச் சிவந்திருக்கும்; சிவப்புரத்னம் போ லிருக்கும்; கடைகளிலே வந்திருக்கும்; கண்ணில் பட்டால் அழுகை வரும்.

5. நிலத்தில் வரும், நீரில்வரும்; தவளை அல்ல; நீட்டியதன் தலை இழுக்கும்; அட்டை யல்ல; பலத்த ஒரு ஓடிருக்கும்; தேங்காயல்ல; பாய்ந்துவர முடி யாது; பாம்புமல்ல.

6. ஆடிவரும்; ஆனாலும் தாசியல்ல; ஆடுகையில் சீறிவிழும்; குடத்தில் போகும். மூடித் திறந்துவிட் டால் முகத்தைக் காட்டும்; முக்கண்ண னுனசிவன் உடம்பில் வாழும்.

[எஸ். ஜகந்நாதன்.]

# பாலர்வகுப்புப் பாஷைப்பாடமும் விளையாட்டுப் பயிற்சிகளும்

## முன்னுரை

எஸ். ஜகந்நாதன்

---

[நண்பர் ஸ்ரீமான் ஜகந்நாதன் தம்முடைய சொந்த அனுபவத்தினால் அறிந்த பலவிஷயங்களை இதில் விளக்கி யிருக்கிறார். குழந்தைகளுக்குக் கவர்ச்சி ஏற்படும்படியான வகையில் கல்வியைக் கற்பிக்கவேண்டும். படம் விளையாட்டு முதலியவற்றைப் போன்ற பல முறைகளால் பிள்ளைகள் உற்சாகத்தோடு கல்வி வளர்ச்சியைப் பெறமுடியும். இதனை நன்கு அறிந்தவர் ஸ்ரீமான் ஜகந்நாதன். சிலவகைப் படங்களின் மூலமாகப் பாலர் வகுப்புப் படிக்கும் பிள்ளைகளுக்கு வார்த்தைகளைச் சொல்லிக்கொடுக்கும் முறைகள் சிலவற்றை அவர் எழுதியுள்ளார். பல மாதங்களுக்கு முன் சென்னையில் நடைபெற்ற தமிழ்அன்பர் மகாநாட்டுப் புஸ்தகக் காட்சிசாலையில் சிறுவர்களுக்குரிய பகுதியில் இந்த முறைகள் அவரால் காட்டப்பட்டன. இவற்றிற்கு வேண்டிய உபகரணங்களைச்செய்து அங்கே அவர் காட்சிக்காக வைத்திருந்தார். அவற்றைக்கண்ட அறிஞர் பலர் அவருடைய உழைப்பையும் ஆர்வத்தையும் பாராட்டியதோடு இந்த முறைகளைப் பற்றியும் சிறப்பாகக் கூறினர்கள். இவைமற்ற ஆசிரியர்களுக்கும் பயன்படவேண்டுமென்பது எங்கள் அவா.
—ப—ர்.]

"சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம்
வைத்ததொரு கல்வி மனப்பழக்கம்—நித்தம்
நடையும் நடைப்பழக்கம் நட்பும் தயையும்
கொடையும் பிறவிக் குணம்."

என்பதேபோல் குழந்தைகள் படிப்பில் நல்ல பழக்கம் பெறுவதற்கேற்ற பயிற்சிகளும் அப்பியாசங்களும் இன்றியமையாதவை. அப்பயிற்சிகள் சாதாரணமான ஓர் அச்சுப்புத்தகத்தில் இருத்தல் மாத்திரம் போதாது. ஏனெனில், குழந்தைகள் பற்பலவிஷயங்களில் தமது கவனத்தைச் செலுத்துகிறார்கள். ஒரு பண்டத்தைக் கையில் எடுத்துப் பார்த்து விளையாடுவது அவர்களது இயற்கை. சிறுவயதில் விளையாட்டே அவர்களது வளர்ச்சியின் ஜீவாதாரமாயிருக்கிறது. பார்ப்பது, கேட்பது, கையாளுவது, படிப்பது இவ்வாறு பலமார்க்கங்களில் கல்வியை ஏற்றுக்கொள்ளுவது சரியான முறையாகும். ஆகவே குழந்தைகளது இயற்கைக்குத் தக்கன

வாயும் விளையாட்டிலேயே படிப்பையும் அப்பியாசம் செய்யக் கூடியனவாயுமுள்ள பயிற்சிகளைக் கொண்டு கல்வியைச் சொல்லிக் கொடுப்பது மிகவும் சிறந்தமார்க்கம் என்று நன்கு தெரியவருகிறது. அவ்வாறு செய்வதற்கு ஏற்ற சில உபகரணங்கள் இன்றியமையாதவை. இங்கே சில விளையாட்டுப் பயிற்சிகளும் அவைகளுக்கேற்ற சில உபகரணங்களும் காண்பிக்கப்பட்டிருக்கின்றன.

சாதாரணமாக, குழந்தைகள் பொருள்களைப் பார்த்து அவற்றின் பெயரைத் தெரிந்துகொள்ளுகிறார்கள். சற்றே படிக்கத் தெரிந்தபிறகு சில வார்த்தைகளைப் படித்துவிட்டு அவை எப்பொருள்களைக் குறிக்கின்றனவென்றும் தெரிந்து கொள்ளுகிறார்கள்.

## 1. வார்த்தையும் பொம்மையும்




வட்டமான அட்டையிலுள்ள அறைகளில் பொம்மையை ஒருபக்கத்தில் வைக்க வேண்டும். அதன் எதிர்ப்புறத்தில் அந்தப் பொம்மையின் பெயர் எழுதப்பட்ட துண்டு அட்டையை வைக்க வேண்டும். வட்டப்பலகையிலுள்ள குச்சியைச் சுற்ற அதன் ஒரு நுனி ஏதாவது ஒரு பொம்மையையும் மற்றொரு நுனி அப்பொம்மையின் பெயரைக்குறிக்கும் வார்த்தையையும் காட்டுவதை நாம் பார்க்கலாம்.

## 2. வார்த்தையும் வீட்டுப் பண்டமும்

இந்தப்பலகையில் வார்த்தைக்கு எதிராக ஒரு சிறு பெட்டியில் பண்டங்களை வைக்கப்பட்டிருக்கின்றன.



## 3. வார்த்தையும் படமும்

தேங்காய்
தாமரை
எலி
பசுமாடு



வார்த்தைகளைத் துண்டு அட்டைகளில் எழுதி நடுவிலுள்ள பெட்டியில் வைத்துக் கொள்ளுவதுநலம். பிள்ளைகள் ஒரு வார்த்தையை எடுத்துப் பார்த்துவிட்டு அதைச் சரியான படத்தின் அடியில் வைக்கவேண்டும்.

சாதாரணமாக ஒரு நந்தவனத்தில் மரம்செடி கொடிகளின் பெயர்கள் பலவகைத் துண்டுகளில் எழுதப்பட்டிருப்பதை நாம் கண்டிருக்கலாம். சிற்சில வீடுகளிலும் கலியாண காலங்களில் நிரம்பச் சாமான்கள் வாங்கிவைக்கும்பொழுது அவைகள் வைக்கப்பட்டிருக்கும் கோணி, தகரடப்பி, சட்டி ஆகியவைகளின் மீது சுண்ணும்பால் பெயரை எழுதி வைப்பது வழக்கமே. அம்முறையையேதான் இங்கே நாம் கையாண்டிருக்கிறோமே தவிர வேறல்ல.

**வேண்டிய உபகரணம்:**—மேலே சொல்லியபடி வட்டமான அட்டைகளைத் தயார் செய்துகொள் வேண்டும். அவைகளை இங்கே காட்டியபடி வட்டமான பலகையில் வைக்க வேண்டும். பலகையில் மத்தியிலுள்ள ஒருவட்டமான கட்டையில் ஒரு நீண்ட குச்சி வைத்திருக்கிறது. அதை ஒரு விரலால் தட்டினால் அது சுற்றும். சுற்றி நின்றபிறகு எதற்கு நேர்நிற்கிறது, எந்த வார்த்தையைக் காட்டுகிறது என்று பிள்ளைகள் தாங்களே அறிவர்கள். இங்கே காட்டிய படங்களில் ஒரு வட்டம் எட்டுச் சமபாகமாகப் பிரித்து வார்த்தைகளையும் படங்களையும் எழுதிக் காட்டப்பட்டிருக்கிறது. சாதாரணமாய் 16 பாகங்களாகவும் பிரித்துக் கொள்ளலாம்.












## மானஸ ஸரஸ்

இமாசலத்தின்மேல் 'மானஸ ஸரஸ்' என்ற ஒருபெரிய வாவி இருக்கின்றது. அதனுடையபெருமையைப் புராணங்கள் பலபடியாகப் புகழ்கின்றன. அதைப்போய்ப் பார்த்த ஒருவர் எழுதியவற்றிலிருந்து சிலசெய்திகளை யாழ்ப்பாணம் 'இந்து சாதனம்' பத்திரிகை வெளியிட்டிருக்கிறது. அவை வருமாறு:—

மானத வாவியின் சிறப்பை ஒருவர் இருந்து சிந்தித்தல் முடியுமேயல்லாமல் அதைப்பற்றி விவரித்து எழுதுவதும் சொல்லுவதும் இலகுவல்ல. கடவுட்பத்தி என்பது அற்பமேனும் இல்லாத ஒருவன் அங்கே செல்லினும் அவ்வாவியின் காட்சியைக் கண்டமாத்திரத்தே ஆச்சரியம் அடைவான்; அவனுள்ளத்தில் மகிழ்ச்சியும் தெய்வபத்தியுஞ் சனிக்கும். மானச வாவி கைலாயத்திற்குப் பதினெட்டு மைல் தூரத்தில் இருப்பது. சடல்மட்டத்திலிருந்து 1400 அடி உயரத்துள்ள உன்னத மேடான இடமே அதன் தானமாகும். பலவேறுபாடான உயரத்தோடுகூடிய மலைகள் அதனை நாற்புறமுஞ் சூழ்ந்துள்ளன. நாற்பக்கமும் மலைகள் சூழ்ந்திருப்ப, நடுவிலுள்ள பள்ளத்தில் கிண்ணத்திலே தண்ணீர் இருப்பதுபோல அவ்வாவி மலைகளின் மத்தியில் விளங்குகின்றது. வாவியின் மேற்புறம் பெரும்பாலும் அலைகளின்றிக் காணப்படுகின்றது; அதன் சிறப்பை எல்லாராலும் எடுத்துச் சொல்ல முடியாது. அதனைப் பார்த்தமாத்திரத்தே பார்த்தவர் உள்ளமானது அதன் இயற்கையழகில் மூழ்கிவிடுகின்றது. அந்த வாவியை நான் சென்றுபார்த்த நேரம் நிலாவோடுகூடிய இராவாகும். அதற்குப் பக்கத்திலேயுள்ள ஒரு மலைச்சிகரத்தில் அந்த வாவியை ஏககாலத்தில் பார்த்தல் முடியும்; நாற்புறத்துமுள்ள மலைகளின் பிரதிவிம்பம் அத்தைவிகமான நீர்நிலையிற் காணப்படும்போது எவருள்ளத்தும் பயபக்தி யுண்டாகும். மலைச்சாரல்களிலுள்ள குகைகள் தூரத்தில் நின்று பார்க்கும்போது சிறிய பொந்துகளைப் போலத் தோன்றும். இக்காட்சிகளைக் கண்டவுடன் எவர்க்கும் மனம் தானே உருகும்; இறைவன் இந்த வாவியிலேதான் தேசோமயானந்தமாய் வீற்றிருக்கின்றானென்று சொல்லலாம். புராணங்கள் இந்த வாவியைப் பலவாறு வர்ணிப்பது ஒரு நூதனமல்ல.

இவ்வாவியின் சுற்றளவு 65 மைல். இதனைக் கால் நடையிற் சுற்றி வருதற்கு இரண்டு மூன்று நாள் செல்லும். இரு சிற்றாறுகள் இதற்குள் வீழ்கின்றன. 'சின்பு' என்னும் ஒருவகை வெண்காயச் செடிகள் இதன் ஓரத்துள்ள மலைச்சாரல்களிற் பரந்துகிடக்கின்றன. யாத்திரைக்குப் போவோர் ஒவ்வொருவரும் மலைச்சாரலிலுள்ள ஒவ்வொரு கல் எடுத்துக்

கொண்டுபோய்ப் பாதையிலுள்ள பள்ளத்தை நிரவிவிடுகிறார்கள். இப்படிச் செய்தல் ஒரு திருத்தொண்டென்பதே அவர்கள் கொள்கையாகும்; டாக்டர் சுவீன்ஹெடின் என்பவரே முதன் முதல் ஒரு சிறிய வள்ளத்தை இவ்வாவியுள் விட்டு அதன்மேல் ஏறிச் சுற்றிப் பார்த்தவர்; அவர் இந்த வாவியை அளந்து முள்ளார்; ஐந்து அடி தொடக்கம் நூறு அடி வரையில் ஆழங்கள் உண்டு. திபேத்வாசிகள் இதனை ஒரு புண்ணிய தீர்த்தமாக மதித்துள்ளாராதலின், குறித்த டாக்டர் செய்த செயல் அவர்களுக்கு வெறுப்பாக இருந்ததாம். இந்த வாவிக்கு ஒரு அதிதேவதை யிருப்பதாகவும் அவள் ஒரு கரத்தில் மீனமும் ஒரு கரத்தில் தண்டமும் தரித்தவளாய் நீரிலிருந்து வெளியே தோன்றி இவ்வாவியை அசுசிப்படுத்துவோரை அத்தண்டத்தினுற் புடைத்துத் தண்டிப்பதாகவும் ஒரு கொள்கை திபேத்வாசிகளிடம் உண்டு. இவ்வாவியில் இறங்கவொண்ணாது, மூழ்கி அசுசிப்படுத்தவொண்ணாதென்ற கட்டுப்பாடுகள் உண்டு. இவ்வாவியின் இடையிடையே வெந்நீர் ஊற்றுக்கள் இருக்கின்றனவென்றும் அக்காரணத்தினுற்றான் வாவிநீர் அதிகக் குளிச்சியற்றிருக்கின்றதென்றும் சொல்லப்படுகின்றது. இவ்வாவியின் கரையில் மகாகாளிகோவில் இருக்கிறது. அக்காளியை வழிபட்டுக்கொண்டு வாவிக்கரையிற் பலர் தவஞ்செய்கிறார்கள். அப்படிச் செய்வதனுல் தங்கள் மனோரதமனைத்தும் கைகூடுமென்பதே அங்குள்ளார் கொள்கையாம்.

## செடிகளின் வளர்ச்சி

உலகிலுள்ள பிராணிகள் யாவும் முடிவாகத் தாவரப்பொருள்களையே உணவாகக்கொண்டு ஜீவிக்கின்றன. தாவரவர்க்கங்களில் நமக்கு உணவாக உதவுகின்ற பலவகைச் சத்துப்பொருள்கள் இருக்கின்றன. தாவரங்கள் வளர்ச்சிபெற்றுப் பசுமை நிறம் பெறுவதற்கு மூலகாரணமாக இருக்கும் பொருளுக்கு 'க்ளோரோபில்' (*Chlorophyll*) என்று கலைஞர்கள் பெயரிட்டிருக்கிறார்கள். அந்தப்பொருள் சூரியவெளிச்சத்திலிருந்து ஒருவகைக் கிரணங்களைப் பிரித்தெடுத்துச் சேமிக்கின்றது. அதனுல் காற்றிலுள்ள 'கார்பன் டை ஆக்ஸைட்' என்னும் பொருளைச் சர்க்கரை, மா, புரோடீன் முதலிய வஸ்துக்களாக மாற்றித் தாவரங்களை வளரச்செய்கிறது. 'க்ளோரோபில்'வின் அரிய வேலையினுல் நாம ஜீவித்திருக்கிறோம். அது இல்லாவிடின் நமக்கு உணவுப்பொருள் கிடையாதல்லவா?

அமெரிக்க அறிஞர்கள் செடிகளிலுள்ள 'க்ளோரோபில்'லை ஆராய்ச்சி செய்து வருகிறார்கள். அவர்கள், கரிப்பொருள், ஜலவாயு, பிராணவாயு, நைட்ரஜன், மக்னீஷியம் என்பவற்றின் அணுக்கள் ஒரு சிக்கலான முறையில் பிணைந்து 'க்ளோரோபில்' லாக அமைந்துள்ளன வென்று கண்டுபிடித்திருக்கிறார்கள். ஆனுல் மேலே கூறிய அணுக்களைக்கூட்டி 'க்ளோரோபில்'லை உண்டாக்க அவர்களால் முடியவில்லை இன்னும் முயன்றுவருகிறார்கள். அவர்கள் முயற்சி வெற்றியடையுமாயின் அந்தக்ளோரோபில்லின் உதவியால் ஒளியிலிருந்தும் காற்றிலிருந்துமே நமக்குரிய உணவுப் பொருள்களைப் பெறும்படி செய்து விடலாம். ஒளியை உண்ணும் சகோரமும் காற்றை உண்ணும் பாம்பும் உணவுப்பொருள்களை அவற்றிலிருந்து அடைகின்றனவென்பதை அப்பொழுது சொந்த அநுபவத்தால் நாம் அறியலாம்.




**டால்ஸ்டாய்:** [ஸ்ரீமான் ஆக்கூர் அனந்தாசாரி அவர்கள் எழுதியது; கிடைக்குமிடம்: கிட்டப்பாமலர் பிரசுராலயம், திருவல்லிக்கேணி, சென்னை; விலை அணா 3.]

இந்தக்காலத்தில் மனிதனுடைய அறிவு உலகசமாசாரங்களை அவாவிநிற்கிறது. இலக்கியங்கள் அகிலம்பரந்த செய்திகளைப் புனைகின்றன. பிறநாட்டு நூல்களையும் பிறநாட்டுப் பெரியோர்களையும்பற்றி அறிவதில் ஊக்கம் நாட்டில் வளர்ந்துவருகிறது. எனவே, ருஷிய ஞானியாகிய டால்ஸ்டாயின் வரலாறு தமிழ்நாட்டினரால் வரவேற்கப்படுவதேயாகும்.

இப்புத்தகம் டால்ஸ்டாயின் ஜீவிய வரலாற்றைச் சுருக்கமாகக் கூறுவது. அவருடைய வாழ்க்கையில் நிகழ்ந்த சில சம்பவங்களையும் அவருடைய கருத்துக்கள் சிலவற்றையும் தொகுத்து இடையில் இதனை எழுதியவர் அமைத்திருக்கின்றனர். இந்த முறையில் வெளிவரும் பெரியோர்களுடைய சரித்திரங்கள் தமிழ் நாட்டு இளைஞர்களுக்கு வழிகாட்டிகளாக இருக்கும்.

**தனிப்பா வலங்கல்:** [ஸ்ரீமான் பண்டித இராமசுப்பிரமணிய நாவலர் அவர்கள் இயற்றியது; கிடைக்குமிடம் : அமைச்சர், செந்தமிழ் நிலையம், பத்மநாபபுரம், தக்கலை போஸ்ட்; விலை: முதற் பகுதி 3 அணா ; இரண்டாம் பகுதி 4 அணா.]

இதனை வெளியிட்டோரால் அவ்வப்போது இயற்றப்பட்ட பாக்கள் இதில் காணப்படுகின்றன. பலவகையான ஸமஸ்யைகளைப் பூர்த்திசெய்த பாடல்கள் பல இப்புத்தகத்தில் உள்ளன. பாக்கள் செம்பாக முடையன.

**இஸ்லாத்தின் கோட்பாடுகள்:** [ஜனாப் எஸ். அப்துல் மஜீது அவர்கள் எழுதியது; கிடைக்குமிடம்: இஸ்லாமியா பாடபுத்தகசாலை, நாச்சியார் கோவில்; விலை அணா 5.]

இஸ்லாம் மதசம்பந்தமான பல கொள்கைகளையும் செய்திகளையும் சிறுவகுப்பில் படிக்கும் சிறுவர்களுக்குப் புகட்டுதற் கென்று இப்புத்தகம் எழுதப்பட்டிருக்கிறதாகத் தெரிகிறது. நல்ல எளிய தமிழ் நடையில் எழுதப்பட்டிருக்கும் இந்தப் புத்தகம் முஸ்லிம் சிறுவர்களுக்கு உபயோகப்படும் என்பதில் ஐயமேயில்லை. மற்றவர்களுக்கும் விஷயங்களை உணர்ந்து கொள்ள இது ஆரம்பக் கருவியாயிருந்து உதவும்.

கலியுகப்பிரகலாதன்: [ஸ்ரீமான் டி. எஸ். ஸ்ரீபால் அவர்கள் இயற்றியது; கிடைக்குமிடம்: தென்னிந்திய ஜீவரக்ஷாபிரசாரக சபை, 436, தங்கசாலை வீதி, சென்னை; விலை அணா, 8.]

இது ஜீவகாருண்யத்தைப் புகட்டும் நோக்கத்தோடு எழுதப்பட்ட ஒரு நாடகம். அருள் நெறியை மேற்கொண்டொழுக வேண்டிய மக்கள் மறநெறிப்பட்டுத் தெய்வ வழிபாட்டிலும் மறம்புரியும் தீமையை இது நன்கு வெளிப்படுத்தி நிற்கிறது. நம் நாட்டில் தெய்வங்களின் பேரால் நடக்கும் கொலைகளுக்கு எல்லையேயில்லை. அதனை ஒழிக்கப் பாடுபட்டுவரும் ஜீவரக்ஷாப்பிரசாரக சபையார் இந்தப் புத்தக வெளியீட்டினால் ஒரு சிறப்பான காரியத்தைச் செய்தவர்களாகிறார்கள்.

எவ்வளவோ பிரசங்கங்களாலும் அறிவுரைகளாலும் திருந்தாத பாமர மக்கள் நாடகங்களைக் கண்டு ஈடுபடுவார்கள். ஜீவகாருண்ய நெறியை அவர்கள் மனத்தில் பதிப்பதற்கு இத்தகைய நாடகங்கள் உதவும். நாடகங்களை நடிக்கும் தமிழ்நாட்டு அன்பர்கள் இதைப் போன்ற நாடகங்களை நடிப்பதனால் ஒரு பெரிய புண்ணியச் செயலைப் பண்ணியவர்களாவார்கள். ஆதலின் தமிழ் அன்பர்களுடைய பேராதரவு இந்நாடகத்தின்பால் இருக்க வேண்டுமென்பது எமது வேணவா.

ஸம்ஸ்க்ருத இலக்கணம்: [ஸ்ரீமான் சிரோமணி, ஜி. ஏ. இராமச்சந்திர சாஸ்திரி அவர்கள் எழுதியது; கிடைக்குமிடம்: ஆசிரியர், ஏ. வி. ஹைஸ்கூல், பள்ளத்தூர், இராமநாதபுரம் ஜில்லா; விலை ரூ. ஒன்று.]

உயர்தரப்பள்ளிக்கூடங்களில் படிக்கும் பிள்ளைகளுக்கு வடமொழி இலக்கணபாடமாகப் பயன்பட வேண்டுமென்னும் நோக்கத்தோடு ஆங்கிலத்தில் எழுதப்பட்ட புத்தகம் இது. உயர்ந்த வகுப்புக்களுக்கு ஆங்கில இலக்கணத்தைப் போதிக்கும் முறையில் ஸம்ஸ்கிருதத்தையும் சொல்லிக்கொடுக்கும்படி புதுவகையில் இப்புத்தகம் அமைந்திருக்கின்றது. இதுகாறும் இம்முறையில் வெளிவந்த புத்தகங்கள் காணற்கரியன. இது மாணவர்களுக்கு மிகப்பயன்படும். பள்ளிக்கூடங்களிற் பாடமாக வைத்தற்கு ஏற்றது.

பரதன்: [ஸ்ரீமான் க. ராமஸ்வாமி ஐயங்காரவர்கள் இயற்றியது; கிடைக்குமிடம்: ஆசிரியர், 2, ஆறுமுகம் செட்டி தெரு, திருவல்லிக்கேணி; விலை ரூ. ஒன்று.]

இராமாயணத்தில் பரதனைப்பற்றியுள்ள வரலாறுகளைத் தொகுத்து நாடக உருவில் அமைக்கப்பெற்ற இது மூன்று அங்கங்களை உடையது. இதை இயற்றியவர் அங்கங்கே பல உட்கருத்துக்களை அமைத்து எழுதியிருக்கிறார். அவை அடிக்குறிப்புக்களால் விளங்குகின்றன. அவற்றைப் பார்க்கும் பொழுது இரண்டு மூன்று பொருள்கள்கள் படும்படி நாடகப் பேச்சுக்கள் இருக்கின்றன வென்று தோற்றுகிறது. எதுகை மோனைத்தொடைகளோடு பாத்திரங்கள் பேசுவதை இவ்வாசிரியர் பெரிதும் விரும்புகிறார். குறிப்புக்கள் அவ்வளவும் ஏற்புடையனவா என்பது ஆராயத்தக்கது.

உயர்ந்த நடையில் நாடகங்களை நடத்த விரும்புவர்களுக்கும் படித்து மகிழ்பவர்களுக்கும் இது பயன்படும்.



காலஞ்சென்ற
ஸ்ரீமான் டி. எஸ். இராமச்சந்திரையரவர்கள், பி.ஏ.
(1871—1934)

காலஞ்சென்ற ஸ்ரீமான்

# டி. எஸ். இராமச்சந்திர ஐயரவர்கள்

கலைமகள் பத்திரிகையின் நிர்வாக ஆசிரியராக இருந்த ஸ்ரீமான் டி. எஸ். இராமச்சந்திர ஐயர் அவர்கள் சென்றமாதத்தில் திடீரென்று காலமானதை நமது நேயர்களுக்கு மிகவும் வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம். இவர்களையே பெருந் துணையாகக் கொண்டு ஸ்ரீமான் நாராயணஸ்வாமி ஐயரவர்கள் இப்பத்திரிகையைத் தொடங்கினார்கள். இவர்களும் அந்தப் பொறுப்பை உற்சாகமாக மேற்கொண்டு தமது சிறந்த அறிவையும் அரிய அநுபவத்தையும் இதை நடத்துவதில் செவ்வனே உபயோகித்து வந்தார்கள். இவர்களுடைய மேற்பார்வையில் பத்திரிகை மேன்மேலும் அபிவிருத்தியாய்க்கொண்டு வந்தது. இந்நிலையில் இவர்களை இழக்க நேரிட்டது பத்திரிகையின் துரதிர்ஷ்டம் என்றே சொல்லவேண்டும்.

இராமச்சந்திர ஐயரவர்கள் தமிழிலும், வடமொழியிலும், ஆங்கிலத்திலும் திறமை உள்ளவர்கள். 'கலைமகள்' தோன்றுவதற்கு ஐயரவர்களே முக்கியகாரணராக இருந்தார்கள். தமிழ்மொழியின் மேல் இவர்கள்கொண்ட அன்பே இவர்களை இம் முயற்சியில் தூண்டியது. இவர்கள் எளிய வாழ்க்கையையும் உயர்ந்த லக்ஷியங்களையும் அரிய கல்வித் திறமையையும் உடையவர்கள்; அரசியல் விஷயங்களை உருவகித்து மிகவும் அழகாகக் கதைபோல எழுதும் ஆச்சரியமான வன்மை பெரிதும் வாய்ந்தவர்கள். இத்தகைய விசேஷமான திறமை வாய்ந்தவர் ஒருவர் மேலைநாடுகளில் பிறந்திருப்பாரானால் அவர் பத்திரிகை யுலகத்திலே பெரும்பதவியையும் பெயரையும் பெற்றிருப்பாரென்பது திண்ணம்.

இவர்களுடைய மரணம் காரணமாக 29-7-34-ல் கூடிய அநுதாபக் கூட்டத்திலே தலைமைவகித்த மகாமகோபாத்தியாய ஸ்ரீமான் எஸ். குப்புஸ்வாமி சாஸ்திரிகள் அவர்களும், 'கலைமகள்' பத்திராதிபர்களின் சார்பாக ஸ்ரீமான் டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்களும், தமிழ்ப்பத்திராதிபர்களின் சார்பாக ஸ்ரீமான் ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களும் இவ்விஷயங்களைப்பற்றி விரிவாக எடுத்துக் கூறினார்கள். ஸ்ரீமான் இராமச்சந்திர ஐயரவர்களின் எதிர்பாராத மரணத்தால் நாங்கள் அடைந்துள்ள பெருந்துயரத்தை இதன்மூலம் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

**கலைமகள் பத்திரிகாசிரியர்கள்**




# 'அவன் போய்விட்டான்'

மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர்

---

வித்துவான்களை ஆதரித்துப் பாதுகாத்துவந்த ஸம்ஸ்தானங்களுள் ஒன்றான தஞ்சாவூர் அடைந்திருந்த புகழ் மிகவும்பெரியதென்று தமிழ் நாட்டிலும் பிறநாட்டிலும் உள்ளவர்கள் அறிவார்கள். போஸல வம்சத்தினராகிய மகாராஷ்டிர மன்னர்கள் அருங்கலை விநோதர்களாக இருந்தார்கள். அவர்களுடைய உதாரகுணமும் கலைவல்லாரை அவர்கள் ஆதரித்துவந்த இயல்பும் வித்துவான்களுடைய கூட்டங்களில் இன்றளவும் வழங்கப்படுகின்றன. பல ஸங்கீத வித்துவான்களின் ஸங்கீதஸாஹித்தியங்களை உலகத்திற்குப் பயன்படும்படி செய்த பெருமையை அந்த ஸம்ஸ்தானம் மிக உடையது. மகாராஷ்டிர மன்னர்களுடைய சபாமண்டபம் எப்பொழுதும் வித்துவான்கள் நிறைந்ததாகவே இருந்தது. தங்கள் தங்கள் திறமையைக்காட்டிப் பெருமையையும் பட்டங்களையும் அடைவதற்கு உரையாணியாக அந்த ஸபை இருந்தது. வித்துவான்கள், அங்கே பாடிப் பரிசுபெற்றசெய்தியைத் தம்முடைய கௌரவத்திற்குச் சிறந்த அறிகுறியாகக் கூறி மற்ற இடங்களிற் சென்று பெருமையை அடைவார்கள்.

அந்த ஸம்ஸ்தானத்தில் மிகச்சிறப்பாக இருந்த அரசர்களுள் சரபோஜி அரசர் ஒருவர். அவருடைய காலத்தே தான் தஞ்சை ஆங்கிலேயர் பால் ஒப்பிக்கப்பட்டது. அவருக்குப் பின்பு அவருடைய புதல்வராகிய சிவாஜி இருந்தார். அவரும் வித்துவான்களை ஆதரித்துவந்தார்; ஸங்கீத ரஸிகராகிய அவருடைய காலத்திற்குப்பின் அவருடைய மருகாகிய ஸகாராம் ஸாஹேப் என்பவர் ஒருவாறு ஆதரித்தனர். பின்பு தஞ்சைஸம்ஸ்தானநிலையே மாறிவிட்டது.

சிவாஜி யரசரால் ஆதரிக்கப் பெற்ற வித்துவான்களில் ஆதி மூர்த்தி ஐயர் என்பவர் ஒருவர். அவர் இளமை தொடங்கியே முறையாக ஸங்கீதம் கற்றுத் தேர்ந்தவர். பச்சைமிரியன் ஆதிப் பையருடைய சிஷ்யராகிய பல்லவி கோபாலையரிடத்தும் கனம் கிருஷ்ணையரிடத்தும் அவருடைய தமையனார்களாகிய சுப்பரா மையர், சுந்தரமையர் என்பவர்களிடத்தும் ஸங்கீதப் பயிற்சி பெற்றவர். தமிழ், தெலுங்கு, வடமொழி ஆகிய மூன்றுமொழிக ளிலும் ஆயிரக்கணக்கான கீர்த்தனங்கள் அவருக்குப் பாடம் உண்டு. எவ்வளவு பெரிய வித்துவான்களுடைய சபையிலும் இயற் றியவர்களுடைய அமைப்பு மாறாமல் வர்ணசுத்தமாகவும் இனிமை யாகவும் கீர்த்தனங்களை அவர் பாடுவார். பல்லவி பாடுவதிலும் விரிந்த மனோபாவத்துடன் கற்பனைஸ்வரங்களைப் பாடுவதிலும் வல்லவர். கனம் கிருஷ்ணையருடைய கீர்த்தனங்களை மிக நன்றாகப் பாடுவார். நல்லொழுக்க முடையவர். அடக்கமாக இருப்பார். சிவாஜி மன்னருடைய சபையில் அவர் பிரகாசமுற்று விளங்கினார். மகா வைத்தியநாதையர், பலகாலமாக வழங்காமலிருந்த 72 மேள கர்த்தா ராகமாலிகையை மெட்டு அமைத்துத் தஞ்சை ஸம்ஸ் தானத்திற் பாடும்போது பாடியது பொருத்தமாக உள்ள தென்பதைத் தேர்ந்து கூறுதற்கு அவரே தகுதியானவரென் றெண்ணி அங்ஙனமே நியமிக்கப்பட்டார். என்னுடைய தந்தை யாராகிய வேங்கடஸுப்பையருக்கும் அவருக்கும் இளமை தொடங் கிப் பழக்க முண்டு. கனம் கிருஷ்ணையருடைய கீர்த்தனங்களை அவர் பாடினால் கிருஷ்ணையர் பாடுவதைப்போலவே யிருக்கும் என்று என் தந்தையார் கூறியிருக்கிறார்.

தம்மிடம் காட்டிய அபிமானத்தை யறிந்து சிவாஜி மன்ன ரிடத்தில் ஆதிமூர்த்தி ஐயர் அன்புடையவராகி யிருந்தார். அருமையறியாதவர்களிடத்திற் பழகுவதற்கு அவருடைய மனம் பொருந்தாது. சிவாஜி மன்னர் காலத்திற்குப் பிறகு அவர் தஞ்சா வூரிலேயே தெற்கு வீதியில் வராகப்பையர் சந்தில் மேல்சிறகில் தமக்குரிய வீடு ஒன்றில் வசித்துவந்தார். வேறு பிரபுக்களிடம் சென்று பழகுவதை அவர் விரும்பவில்லை.

* * * *

சற்றேறக்குறைய ஐம்பது வருஷங்களுக்கு முன்பு நான் கும்ப கோணம் காலேஜில் இருந்த காலத்தில் சீவகசிந்தாமணி, பத்துப் பாட்டு முதலிய பழைய நூற்சுவடிகள் தஞ்சை ஸரஸ்வதி மஹாலில் இருக்குமோ என்று தேடியறிய எண்ணினேன். அதற்காக ஒரு முறை தஞ்சைக்குப் புறப்படுகையில் என் தந்தையார்,

ஆதிமூர்த்தி ஐயர் அங்கே இருக்கிறாரென்றும் அவரைப் பார்த்து க்ஷேமத்தை விசாரித்துவிட்டு வரவேண்டுமென்றும் சொல்லி அவர் இருக்கும் இடத்தையும் தெரிவித்தனர். எந்தையார் பலமுறை அவரைப்பற்றிக் கூறியிருத்தலின் அவரைப் பார்க்கவேண்டுமென்னும் ஆவல் இருந்தது.

தஞ்சையில் நான் ஆதிமூர்த்தி ஐயருடைய வீட்டை விசாரித்துத் தேடிப் பிற்பகல் இரண்டு மணிக்குச் சென்றேன். வீட்டு வெளிக்கதவு திறந்திருந்தது. உள்ளேயிருந்து வெளியில் ஒருவரும் வரவில்லை; ஆதலின் விசாரிப்பதற்கு இயலாமல் அங்கே சில நேரம் இருந்தேன். அப்பால் உள்ளே இருந்து ஒரு முதிய பிராமணர் வெளியில் வந்தார். ஆஜாநுபாகுவான அவர் தம் கையில் ஒரு செம்பில் ஜலம் வைத்துக் கொண்டிருந்தார். அவருடைய தலைமயிர் நரைத்திருந்தது. நான்கு மாதங்களாக க்ஷவரம் செய்து கொள்ளவில்லையெனத் தோற்றியது. ஓர் அழுக்கு வஸ்திரத்தைத் தட்டுடையாகக் கட்டிக்கொண்டிருந்தார். அவருடைய தோற்றம் எல்லாவற்றையும் வெறுத்து இருக்கும் துறவியின் தோற்றத்தைப் போல இருந்தது. அவரைக் கண்டவுடன் நான் எழுந்து நின்றேன்; "ஸங்கீதவித்துவான் ஆதிமூர்த்தி ஐயரவர்களைப் பார்ப்பதற்காகவந்தேன். அவர்கள் வீடு இதுதானா?" என்றேன். அவர் ஒருமுறை என்னை விழித்துப் பார்த்தார்; பிறகு, "ஆதி மூர்த்தியா! அவன் இறந்து போய்விட்டானே" என்றார்.

நான் சற்று நிதானித்தேன்; பிறகு, "அவர்கள் இப்போது இருக்கிறதாகக் கேட்டுத்தான் வந்தேன். என்னுடைய தகப்பனாரவர்கள் அவர்களுடைய க்ஷேமலாபத்தை விசாரித்து வரவேண்டுமென்று சொன்னார்கள்" என்றேன்.

அவர் :—நீர் யார்? யாருடைய பிள்ளை?

நான் :—உத்தமதானபுரம் வேங்கடஸுப்பையரவர்கள் பிள்ளை.

அவர்:—ஓ! அப்படியா? வேங்கடஸுப்பையர் ஸௌக்கியமாக இருக்கிறாரா?

நான் :—ஆம், சௌக்கியமாகவே இருக்கிறார்கள்.

அவர் :—நீர் என்ன செய்கிறீர்?

நான் :—கும்பகோணம் காலேஜில் தமிழ்ப்பண்டிதராக இருக்கிறேன்.

அவர் :—என்ன சம்பளம்?

நான் :—ஐம்பது ரூபாய்.

அவர்:—அப்படியா! வேங்கடஸுப்பையர் பாக்யசாலிதான். ஆதிமூர்த்தி போய்விட்டான் என்று நீர் அவரிடம் போய்ச் சொல்லும். சிவாஜிமகாராஜா எப்போது இறந்துபோனாரோ அப்போதே அவனும் இறந்துபோய் விட்டான்.

நான்:—"தாங்கள் பேசுவதைப் பார்க்கையில் தாங்கள் தான்....." என்று கொஞ்சம் இழுத்தேன்.

அவர்:—ஆம் ஐயா! நான் இருப்பதும் இல்லாததும் ஒன்று தானே? இறந்ததற்குச் சமானந்தானே? எப்பொழுது என் வித்தைக்கு வினியோகம் இல்லையோ அப்பொழுது எனக்கு என்ன கௌரவம்? அருமை தெரியாதவர்களுக்கு நடுவில் நடைப்பிணமாக இருப்பதுதானே இப்போது கண்டது? எனக்கு ஸங்கீதம் தெரியுமென்பதை வெளியில் சொல்லவேண்டாம். என்னுடைய ஸங்கீதம் துருப்பிடித்துப் போய்விட்டது. தங்களைத் தாங்களே வித்துவான்களாக மதித்துக்கொண்டு புதுப்பேர்வழிகள் கிளம்பி விட்டார்கள். அவரவர்கள் பாடுவதைக் கேட்பதற்கு ஏற்ற பிரபுக்களும் இருக்கிறார்கள். இப்போது எல்லோரும் வித்துவான்கள், எல்லோரும் பிரபுக்கள். இந்தக்காலத்திலே என்னை யாரையா மதிக்கிறார்கள்? நான் ஒருவன் இருக்கிறேனென்று யார் நினைக்கிறார்கள்? யார் இங்கே வருகிறார்கள்? ஏதோ அத்திபூத்தாற்போல நீர் வந்தீர். வேங்கட ஸுப்பையருக்கு மட்டும் பழைய அபிமானம் இருக்கிறதுபோலத் தோற்றுகிறது. அவருக்கு என் அருமை தெரியும்; அவர் அருமை எனக்குத் தெரியும். அவர் இப்போது யாதொரு குறையுமில்லாமல் ஸௌக்கியமாக இருக்கிறாரா?

நான்:—அவர்கள் தங்களை அவசியம் பார்த்து விட்டு வரவேண்டுமென்று சொன்னார்கள். தங்களுக்குக் குமாரர்கள் இருக்கிறார்களா?

அவர்:—ஒருவன் இருக்கிறான்; இப்போது மைசூரில் ஸம்ஸ்தான வித்துவானாக இருக்கிறான். வேங்கட ஸுப்பையரை நான் மிகவும் விசாரித்ததாகச் சொல்லவேண்டும். உமக்கு ஸங்கீதம் தெரியுமா?

நான்:—சில வருஷங்கள் அப்பியாஸம் செய்தேன். தமிழ் கற்றுக் கொண்ட பின்பு அதிகக்கவனம் செலுத்த முடியவில்லை.

அவர்:—அடடா! என்ன காரியம் செய்தீர்? அதை ஏனையா விட்டு விட்டீர்? அப்பியாஸம் பண்ணினால் கனம் கிருஷ்ணையருடைய கீர்த்தனங்களையெல்லாம் வேங்கடஸுப்பையரிடம் கற்றுக் கொண்டிருக்கலாமே.

நான்:—இப்பொழுதும் சில தெரியும். ஆனாலும் உங்களைப் போன்ற மகாவித்துவான்களுக்குமுன் பாடுவதற்கு எனக்குத் தைரிய மில்லை.

இங்ஙனம் சிறிது நேரம் பேசிக்கொண்டே யிருந்துவிட்டுப் பிறகு விடைபெற்றுக் கொண்டு சென்று என் தந்தையாரிடம் நடந்தவற்றைத் தெரிவித்தேன்.

வித்துவான்கள் அருமை தெரிந்து ஆதரிப்பவர்களை மறவாமல் நினைப்பதற்கும் அருமையறியாதவர்கள் நடுவில் இருப்பதை வாழ்வாகக் கருதாமைக்கும் ஆதிமூர்த்தி ஐயருடைய இந்த வரலாறே உதாரணமாகும். அவருக்குச் சிவாஜி மன்னரிடத்தில் இருந்த பேரன்பை நான் நினைந்து நினைந்து உருகினேன். "இனிப் பாடுநருமில்லை பாடுநர்க்கொன் றீகுநருமில்லை" என்று சொன்ன சான்றோர் மன நிலையும்,

"பூமா திருந்தென் புவிமா திருந்தென்ன பூதலத்தில்
நாமா திருந்தென்ன நாமிருந் தென்னநன் னாவலர்க்குக்
கோமா னழகமர் மால்சீதக் காதி கொடைமிகுந்த
சீமா னிறந்திட்ட போதே புலமையும் செத்ததுவே"

என்று கூறிய ஒரு புலவருடைய மனநிலையும் இன்னபடி இருந்திருக்குமென்று ஆதிமூர்த்தி ஐயருடைய நிலைமைக் கண்டு ஒருவாறு அறிந்துகொள்ளலாமன்றோ?

---

## மலிவான மோட்டார்

ஜப்பானில் தயாரிக்கப்படும் சிறிய மோட்டார்கள் கூடிய விரைவில் இந்தியாவுக்கு வரக்கூடுமென்றும், இந்த மோட்டார்களை 650 ரூபாய்க்கு வாங்கமுடியுமென்றும் தெரிகிறது. இந்த மோட்டார்களை உற்பத்தி செய்பவர்கள் கல்கத்தாவில் விற்பனைத்தார்களை நியமித்துவிட்டார்கள்.

இந்த மோட்டாரின் பெயர் 'டாட்ஸன்' என்பது. இது ஏழுகுதிரை வேகமுடையது. டோக்கியோ நகரிலுள்ள ஜிதோஷா வீஸோ கம்பனியார் இதைச் செய்பவர்கள். இவர்களுக்கு யோக்கஹாமாவிலும், ஓஸாகாவிலும் மோட்டார்த் தொழிற்சாலைகள் இருக்கின்றன. இந்த 'டாட்ஸன்' மோட்டாருக்கும் பிரிட்டனில் தயாரிக்கப்படும் 'ஆஸ்டின் ஸெவன்' மோட்டாருக்கும் விசேஷ பேதங்கிடையாது. இவ்விரண்டு மோட்டார்களின் யந்திரங்களும் ஒரே அமைப்பு உடையன. நவீனவசதிகளனைத்தும் இதில் அமைக்கப்பட்டிருக்கின்றன. ஒரு காலன் 'பெட்ரோலுக்கு' இம்மோட்டார் 45 மைல் தூரம் போகும்.



## பந்து ஆடுதல்

வித்துவான் ச. தண்டபாணி தேசிகர்

**வி**ளையாட்டு என்பது சிறியோர் பெரியோர் முதலிய யாரையும் மனங்களிக்கச்செய்யும் தொழிலாம். அது செய்பவர்களுடைய சரீரத்திற்கும் மற்ற அந்தஸ்துகளுக்கும் தக்கவாறு வேறுபடும். அவ்விளையாட்டு பேச்சிலும் நிகழ்வதுண்டு. மனத்திற்கு அயர்ச்சியைக் கொடுக்காது கிளர்ச்சியை உண்டுபண்ணும் வேடிக்கைப்பேச்சுக்கள் விளையாட்டுப் பேச்சு எனக் கூறப்பெறுகின்றன. ஒருவிதப் பயனையும் அளிக்காத வீணுகக் கழிந்துபோகின்ற பேச்சுக்களும் அவ்வாறே கூறப்பெறுகின்றன. ஆகவே விளையாட்டு, தொழிலிலேயன்றிப் பேச்சிலும் உண்டு என்பது அறியப்பெறும். இவ்விருவகையான விளையாட்டுக்களில் தேக உழைப்பு மிக்கவன் தேகப்பிரயாசைதரும் விளையாட்டுக்களை மேற்கொள்வானுயின் சரீர அயர்ச்சி அதிகப்படும். அவனுக்குப் பெரும்பாலும் மனக்கிளர்ச்சி உண்டுபண்ணும் விளையாட்டுப் பேச்சுக்கள் அதிகபலனைத் தரக்கூடியவாகலாம். அதுபோல மன உழைப்புடையவனுக்குத் தேக உழைப்புக்குக் காரணமான விளையாட்டுக்கள் பலன்தருவனவாம். அவற்றுள் பந்தாடுதலும், நீர் விளையாட்டும் சிறந்தனவாம். மணற்குவியலில் குச்சிமறைத்தல், கழங்காடுதல், அம்மானை ஆடுதல், காற்றுடிவிடுதல் முதலிய பிற விளையாட்டுக்களும் உள.

பந்தாடுதல் என்ற வழக்கம் ஆண் பெண் என்ற இருபாலாரிடமும் இப்போது பரவியுள்ளது. காற்பந்து, கிரிகெட், ஹாக்கி, டென்னிஸ், பாஸ்கட்பால், வாலிபால் முதலிய பலவகை ஆட்டங்கள் வழங்குகின்றன.

இப்பந்தாட்டம் நமது நாட்டில் பண்டைக்காலத்து எவ்வாறு இருந்தது என்பதை ஆராய்தலே இக்கட்டுரையின் பெருநோக்காம். ஆதலால், பந்து எதனுல் செய்யப்பெற்றது, ஆட்டத்தின் பிரிவுகள், பந்தாடுமிடத்தின் அமைதி, இவ்விளையாட்டு யாருக்கு உரியது முதலியவற்றைப் பற்றிச் சிறிது ஆராய்வோம்.

## பந்து செய்யும் விதம்

பந்து இக்காலத்திற்போலப் பூநூலாலும் ரப்பர் தோல் முதலியவற்றாலும் செய்யப்பெறவில்லை. நெட்டி, பூளைப்பஞ்சு, பட்டுநூல் இவற்றைக் கெட்டியாக உருட்டி, அதன்மேல் மயில் தோகை மயிர் இவற்றைச்சுற்றி அதன்மேல் நூலையும் கயிற்றையும் இறுக்கிச் சுற்றி அழகுபெற நன்றாக உருட்டி அதற்கு மேல் பலவர்ணப் பூநூலைக்கொண்டு பாம்புத்தோல் போலவும், மயில் தோகையிலுள்ள கண்கள்போலவும், தையல்வேலை செய்யப் பெற்றிருக்கும். தண்ணீர் நுரைகள்போல மெதுவாகவும், சிறு காற்று அடித்தாலும் தானே எழுந்தாடும்படி இலேசாகவும் இருக்கும். இவ்வாறு பந்துசெய்யும் விதத்தைக் கற்பித்த புலவர்பெருமகனார் பெருங்கதை செய்த கொங்குவேள் ஆவர். "வரிப்புனை பந்து" என்பதற்கு, 'நூலாலே வரிந்துகட்டி அழகுசெய்த பந்து' என நச்சினார்க்கினியர் உரை கூறுவதால் நூலால் மட்டும் பந்து செய்தலும் உண்டு என்பது அறியப்பெறும்.

## பந்தாடுமிடம்

பந்தாடுமிடங்கள் முத்துக்களை விளிம்பிலே அழுத்தப் பெற்றன, பொன்னாலே பண்ணப்பட்டன, மணி பத்தியிற் குயிற்றப்பட்டன, எனச் சிந்தாமணியாசிரியர் கூறுகின்றார். இதில் வருணனைப் பகுதிகளைத் தள்ளித் தெள்ளி நோக்கும்போது சுற்றி நாற்புறமும் வெண்கோடுகளும் நடுவில் நீலநிறக் கோடுகளும் இடப்பெற்றுப் பத்தியாக அமைக்கப் பெற்றிருந்தது என்பது புலனாம். இவ்வாறன்றி நிலாமுற்றங்களிலும் பந்தாடுவதுண்டு என்பதைப் பெருங்கதையுணர்த்தும்.

## ஆட்ட வகைகள்

பந்தைக் கையால் தொடாமல் காலாலேயே தட்டி ஆடும் ஒரு வகை ஆட்டமும் உண்டு. நற்றிணையில்,

"செல்வத் தந்தை யிடனுடை வரைப்பின்
ஆடுபந்து உருட்டுநள் போல ஓடி
அஞ்சி லோதி இவள்உறும்
பஞ்சி மெல்லடி நடைபயிற் றும்மே"

என்ற பகுதியால் இதனை அறியக்கூடும். ஒரு நாயகன் தன் மனைவியைப் பாலை நிலத்தின்வழியாக அழைத்துச் செல்கின்றான். அவள் வெயில்வெப்பந் தாங்காமல் ஓட்டமும் நடையுமாகத் தன் தகப்பன் வீட்டில் ஆடும் பந்தை உருட்டுபவள்போல் ஓடினாள்.

இந்த உவமையால் காலாலேயே பந்துருட்டி விளையாடும் வழக்கம் இருந்தது என்பது துணியலாம். சிந்தாமணியில்,

"வைத்தபந்தெடுத்தலும் மாலையுட்கரத்தலும்
கைத்தலத்தினொட்டலும் கண்ணி நெற்றிதீட்டலும்
பத்தியிற் புடைத்தலும் பையரவ்வின் ஆடலும்
இத்திறத்த பந்தினோடு இன்பம் எல்லையில்லையே"

எனப் பந்தாட்டத்தின் வகைகள் சில கூறப்பெறுகின்றன. மற்றொரு கட்சியார் வைத்த பந்தைக் கையால் தொடாமல் காலாலேயே தட்டி எழுப்புதலும், ஆடிக்கொண்டிருக்கும் போதே சாதுரியமாக மாலையில் மறைத்துக்கொள்ளுதலும், தலையிற் சூடிய மாலையையும் நெற்றியையும் தீண்டுதலும், ஒரு முறைக்கு ஒருமுறை உயர எழும்பும்படி வரிசையாக அடித்து எழுப்புதலும், பாம்பைப் போல வளைந்து நடந்து சென்று ஆடுதலும் எனப் பலதிறப்படும்.

ஒருவரே ஐந்துமுதல் இருபத்தொருபந்துவரை வைத்தாடியதாகத் தெரியவருகிறது. சிந்தாமணியில், விமலையென்ற பெண் ஐந்து பந்துகளை வைத்துக்கொண்டு ஆடினாள் எனக் கூறப்பெறுகின்றது. இதில் கையில் வைத்திருந்த பந்து விழுகின்ற சாதுரியத்தால் தானே மாலையில் மறையுமாறு செய்தலும், மாலை மேலுராயுமாறு மேலே விட்டெறிதலும், பின்பக்கம் விட்டெறிந்து முன்பக்கமாகப் பிடித்தலும் முதலான ஆட்டத்தின் சமத்காரங்களை யறியலாம். இவ்வண்ணம் ஆடும்பொழுதே மாலைகட்டுதலும், நெற்றியில் குங்குமப் பொட்டு வைத்துக் கொள்ளுதலும், பக்கத்துள்ளாரோடு பேசுதலும் பெருவியப்பைத் தரும் நிகழ்ச்சிகளாம்.

பந்தாட்டத்தில் போட்டியும் நிகழ்ந்ததாக நூல்களில் விளக்கப்பெறுகின்றன. பெருங்கதையின் கதாநாயகனாகிய உதயணனுடைய மனைவிமார்கள் இருவரும் போட்டியிட்டுக்கொண்டு தத்தம் கட்சியிலுள்ள பெண்களைக் கொண்டு பந்தாடச்செய்தனர். அப்பெண்களுள் ராசனை யென்பாள் ஏழு பந்துகளை எடுத்து ஒன்றன்பின் ஒன்றாகக் கையில் தங்காது மேலே போகும்படி விட்டெறிந்தாள். பிறகு கால்மேல் சுழன்று வரும்படியும் முன்னும் பின்னுமாகச் சுற்றி வரும்படியும், மீட்டும் தனித்தனி மேலே செல்லும்படியும் ஆயிரங்கையாடினாள்.

காஞ்சனமாலை யென்பவள் அந்த ஏழு பந்துகளையும் எடுத்துக்கொண்டு ஒருபந்து திரும்பிவரும்போது மற்றொரு பந்தால் அதனை மேலேபோகும்படி அடித்தும் தலைக்குமேல் வந்த பந்தைக் கையை மடக்கிக் குத்தியும் மாலையில் மறையச்செய்தும் கைக்குள்ளாகப் போமாறு செய்தும் ஆயிரத்தைந்நூறு கையாடினாள்.

அயிராபதி என்னுங் கூனி அப்பந்துகளைத் தான் எடுத்து முன்னர் உயரப்போகும்படி விட்டெறிந்து நான்குபக்கமும் சுற்றி வந்தும், போனபந்துகள் மீள்வதற்குள் கைதட்டியும், குதித்தும், உள்ளங்கையில் வைத்த பந்துகள் கீழே விழாதபடி கையைக் கவிழ்த்தும், உள்ளங்கையிலிருந்து புறங்கைக்கும் புறங்கையிலிருந்து உள்ளங்கைக்கும் போகுமாறு பந்துகளை உருட்டியும், தோள்மேற் புரளுமாறு எறிந்தும், கூன்மேற் புரளுமாறு செய்தும், தன்மார்பின் நடுவில் ஒட்டியும், காண்பார்யாவரும் களிக்கும்படி கூந்தலைக் கோதி முடித்தும், நெற்றியில் பொட்டுவைத்துக்கொண்டும், அதற்குள் பந்துவந்துவிடப் புறங்கையால் அடித்தும் இரண்டாயிரங்கை ஆடினாள்.

விசுவலேகை யென்பவள் குள்ளமானவள். ஆதலால் பந்தடிக்குங் கோலையும், பந்துகளையும் வாங்கிக்கொண்டு ஒவ்வொன்றாக மேல் எழுப்பி வானவில்லைப்போலத் தாவித்தாவி அடித்து விரல்களை மடக்கிக் குத்தியும், கையைவிரித்து அடித்தும், பந்துகளில் ஒன்றுமாறி ஒன்றை ஒரேவிரலில் நிற்கச்செய்தும், குருவி பல இடங்களுக்கும் பறந்து செல்வதைப்போலப் பந்துகள் பலவிடங்களுக்கும் செல்ல ஒன்றும் தவறாதபடி அடித்தும், நீரருவி போல வளைந்து விழும்படி யடித்தும், ஒரு கைப்பந்து மற்றொரு கைக்குப் போகும்படி அடித்துப் பிடித்தும், பாம்போட்டம்போல வளைந்து சென்றடித்தும் இரண்டாயிரத்துஐந்நூறு கையாடினாள்.

ஆரியை என்பவள் பந்தாடும்போதே நடுவிற் கிடைக்கும் சிறு நேரத்திற்குள் கூந்தல் முடித்தும், வளைகளைச் செறித்தும், காலிலணிந்த காப்பு முதலியவற்றைத் திருத்தியும், நாடகப் பெண்களைப்போல உலாவியும் ஆடினாள். பறவையைப்போல ஓரிடத்தும் நில்லாமல் ஆபரணங்களும் ஆடையும் குலைய நிற்கிறாளா? அல்லது பறக்கிறாளா? என்று பார்ப்பவர் ஐயுறும்படி மூவாயிரங் கையாடினாள்.

கடைசியாகக் கோசலதேசத்து அரசன் மகளாகிய மானனீகை என்பவள் இருபத்தொருபந்தை எடுத்துக்கொண்டு, மற்றவர்களைப்போல் ஓடியாடித் திரியாமல் மெதுவாக, நாட்டியப்பெண்கள் தன் அபிநயங்கண்டு கொண்டாடவும், பாடகர்கள் பாட்டைக் கண்டு பாராட்டவும், பக்கவாத்தியக்காரர்கள் இலயம்தவறாமல் அடிவைக்கும் அழகினைக் கொண்டாடவும் பந்தாடினாள். அவள் ஆடிய ஆட்டத்தியல்பு காணமுடியாவிட்டாலும் இடைக்கிடை அவள் செய்த சாமர்த்தியங்களாவன:—ஆடையணிந்தாள்; முகவேர்வையைத் துடைத்தாள்; பக்கத்திலுள்ள பெண்களுக்குப்

பந்து சுற்றும்விதம் இப்படி என்று சொல்லிக்கொடுத்தாள; தொடைமாலை, கொண்டைமாலை முதலியன கட்டினுள்; உள்ளங் காலிலிருந்து உச்சந்தலைவரை அணிந்திருந்த ஆபரணங்களைத் திருத்திக்கொண்டாள்; இவ்வளவோடு கண்ணையும் மூடிக்கொண்டு 21 பந்துகளும் சக்கரம் சுழலுவதுபோலத் தொடர்ந்து வரும்படி அடித்தாள்; அதன் நடுவில் தன்தோழியர்களோடும் பலவிஷயங் களைப் பேசிக்கொண்டாள்; 'எங்கள் எஜமாட்டியாகிய வாசவ தத்தை வாழ்க' எனக் கந்துகவரியும் பாடினுள்; இப்படி என்ணு யிரம் கையாடினுள். இவை பெருங்கதையில் கூறப்பெற்றுள்ளன. இக்கதைப்பகுதியில் இருந்து எத்தனைவிதமான பந்தாட்டங்களும், அவற்றின் எண்ணிக்கைகளும், நடுவில் நடத்தப் பெறும் சாமர்த் தியங்களும் அறியப்பெறுகின்றன! இக்காலத்து, திரைகள் கட்டிக் கூடாரம் அடித்து ஆடப்பெறும் 'சர்க்கஸ்' என்னும் மிருகக் கூத்துமேடைகளில் மூன்று அல்லது ஐந்து காய்களைவைத்துச் சாதாரணமாக விட்டெறிந்து விளையாடுவதையும், கைமாற்றி விளையாடுவதையும் கண்டு பெருவியப்பு அடைகின்றோம். 21 காயைவைத்து வண்டியுருளைபோலத் தோன்றும்படி, நிலத்தி லறைந்து விளையாடுவதென்றால்—அதிலும் தோழியரோடு பேசுதல் முதலிய சாமர்த்தியங்களைச் செய்து விளையாடுவதென்றால் இச் செய்கை யாரைத்தான் ஆச்சரியப்படச் செய்யாது?

இதனுல் நந்தமிழ்நாட்டுப் பண்டைப் பெண்மக்களின் விளையாட்டு வன்மை, கண்முதலிய இந்திரியங்கள் எவ்வழிச் சென்றாலும் பந்தையே பின்பற்றிச்செல்லும் மனத்தின்மாட்சி, தவறாது சென்று அடிக்கும் சரீரத்தின் சாதகம் ஆகிய இவை நன்குவிளங்கின என்பது அறியப்பெறும். சதாவதானிக்கு உள்ள அவ்வளவு கவனிப்புச் சத்தியோடு சரீரவன்மையும் இருந்தமை பெரிய ஆச்சரியத்தை விளைவிக்கும் அற்புதமேயாம். இதிலிருந்து கோல்வைத்துப்பந்தடித்தல் பண்டைநாளிலும் இருந்தது என்ப தும், வெற்றியை ஒருகை இருகை எனக் கையென்ற பெயரால் வழங்கினர் என்பதும் தெரிகின்றன.

நற்றிணையில்

"ஆட்டொழி பந்திற் கோட்டுமூக் கிறுபு
கம்பலத் தன்ன பைம்பயிர்த்தாம்
வெள்ளில் வல்சி"

என்ற செய்யுட்பகுதியில் பசுமையான பயிர்களின்மேல் காம்பு இற்று வீழ்ந்து கிடக்கும் விளாம்பழங்கள் பச்சைக் கம்பளத்தின் மேல் ஆடாமற் கிடக்கும் பந்துகளைப் போன்றன என்று கூறப்

பெறுகிறது. இதனுல் பச்சைக்கம்பளியை விரித்துப் பந்தாடுவதும் வழக்கம் என்பது அறியப்பெறுகின்றது.

## யாருக்கு உரியது?

இங்கே எடுத்துக் காட்டிய இருபெருநூல்களின் கதைப் பகுதியாலும், பிறநூல்களாலும் இவ்விளையாட்டு மகளிர்க்கே உரியது எனத் தெரிகிறது. அல்லாமலும் ஆடவர்கள் பந்தாடுதல் ஒருபெரிய இழிவான காரியமாய்க்கூட எண்ணப்பட்டுவந்தமையை, "வரிப்புனை பந்தொடு பாவை தூங்க" என்ற திருமுருகாற்றுப் படையால் அறியலாம். எப்படிஎனின்: வலிமைமிக்க அரசன்—சண்டையை விரும்பித் தோள்தினவெடுத்த அரசன் மற்றப் பகையரசர்களை அவமதிப்பதற்காகத் தனது கொடியின் அருகிலே பந்து மரப்பாவை முதலிய பெண்கள் விளையாடும் பொருள்களைத் தொங்கவிடுவது வழக்கம் என்பதை இவ்வடி விளக்குகிறது. ஆடவர்களை அவமதிப்பதற்காகக் கட்டப்பெற்றது என்பதால் ஆண்களாற் பந்தாடுதல் பெரிய இழிவான—ஆண்தன்மைக்கேலாத காரியமென்றே எண்ணப்பெற்றமை வலியுறும்.

சிலப்பதிகாரத்து வேட்டுவவரியில் ஆவேசங்கொண்ட சாலினி கேட்க வேடர்கள்,

"பாவையுங் கிளியும் தூவி யஞ்சிறைக்
கானக் கோழியும் நீனிற மஞ்ஞையும்
பந்துங் கழங்கும் தந்தனர் பரசி"

எனக் காணப்படுவதால் தெய்வங்களில்கூடப் பெண்தெய்வங்களுக்கே பந்து காணிக்கைப் பொருள்களில் ஒன்ருகக் கொடுக்கப்பெற்றது என்பதும் இக்கருத்தை வலியுறுக்கும்.

இத்தகைய பந்தாட்டம் இடைக்காலத்துப் பெண்களிடம் அறவே ஒழிந்தது. இப்போது இருபாலாராலும் ஆடப்பெற்று வருகின்றது. இவ்விளையாட்டு, பெண்களுக்கு உரியதாக இருப்பினும், இப்போதுள்ள ஆட்டவகைளிற் பெரும்பாலன ஆடவர்களுக்கு ஏற்றமுறையில் இருப்பதால் அவர்களும் மேற்கொள்ளுதல் மிகுந்த சிறப்பையே தரும்.

பழந்தமிழ் நூல்களில் வேட்டையைத்தவிர வேறு எந்த விளையாட்டுக்களும் பெரியோர்களாற் செய்யப்பெற்றதாகக் கூறப் பெறவில்லை. அவர்கள் நிர்வாகிகளாய் உழைக்கவேண்டி யிருந்ததே காரணமாகும்.

# அக்கினி தேவர்

சக்கரவர்த்தி ஸ்ரீநிவாஸன்

பாரதகண்டத்தில் அக்கினி, தெய்வ அம்சமாகவே விளங்குகிறது. சுப காரியங்களோ அல்லது அசுபகாரியங்களோ எவையும் இந்தத்தேசத்தில் அக்கினி சாக்ஷியாகவே நடைபெறுகின்றன. ஹிந்துமதக் கொள்கையைத் தழுவின எல்லா வைதிக காரியங்களிலும் அக்கினி வளர்க்கப்பட்டு அதில் நெய் ஆஹுதி செய்யப்படுவது முக்கிய சம்பிரதாயமாக இருந்து வருகிறது.

அக்கினி தெய்வத்தின் விக்ரஹம் காண்பதற்கு அரிதானது. அக்கினி ஒரு திக்கின் அதிபதி. அக்கினி கோணம் எனப்படும் தென் கிழக்குப் பிரதேசத்திற்கு அவர் அதிபராக விளங்குகிறார். அஷ்ட (எட்டு) லோக பாலர்களில் அக்கினியும் ஒருவர். மஹாயானபுத்தர்கள் பத்து லோக பாலர்களிருப்பதாகவும், அவர்களுள் அக்கினி ஒருவரென்றும் சொல்லுகின்றனர். ஆனால் இந்த மஹாயானிகள், அக்கினியின் ஸ்தானம் வருணனுக்கு அளிக்கப்பட்டிருப்பதாகக் கருதுகின்றனர். திக்பாலர் அல்லது லோகபாலர்கள் நால்வர், எண்மர், பதின்மர் அல்லது பதினல்வர் என்று சங்கிரஹம் கூறுகின்றது. பத்துத் திக்கு பாலர்களின் வணக்கம் தாந்திரிக நூல்களில் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றது. இப்பத்து லோகபாலர்களின் பெயர்கள் பின்வருமாறு:—இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன், பிரும்மா, விஷ்ணு; இவர்களின் விக்ரஹங்கள் சில ஜைனர் கோயில்களில் காணக் கிடைக்கின்றன.

இப்பாலர்களில் அக்கினி மிகவும் முக்கியமானவர். பழந்தேவர்களில் அக்கினி ஒருவர். அக்கினியின் நிறம் நெருப்பின் நிறமே. இவருக்குத் தலைகள் இரண்டு; கண்கள் ஆறு; நாக்குக்கள் ஏழு; கொம்புகள் நான்கு; கால்கள் மூன்று. இவரைச் சுற்றி அக்கினி ஜ்வாலைகள் படர்ந்து நிற்கும். தாமரை மலர்மீதே இவர் வீற்றிருக்கிறார். இவரது கைகளில் புரோக்ஷணி, ச்ருக், ச்ருவா, பரணபத்திரம், தாமரை, வியாஜானி, கிருதபத்திரம் இவையிருக்கும். இவருக்குப் பூணூல் உண்டு; செவ்வாடை அணிந்து கொண்டிருப்பார். இவரது வாகனம் செம்மறி ஆடு. இவர் கொழுத்த வயிறு

படைத்தவரெனக் கூறப்படுகின்றது. ஸ்வாஹா, ஸ்வாதா என்ற இருவரும் இவருடைய மனைவிகள். இது அக்கினி தேவரின் ஓர் அம்சம்.

விஷ்ணுதர்மோத்திரத்தில் அக்கினி தேவர் விக்ரஹத்தைப் பற்றிய விரிவான விவரம் காணப்படுகின்றது. இதன் பிரகாரம் அக்கினி தேவரின் தலைமயிர் முடியப்பட்டிருக்குமாம். அவரது ஆடை புகைநிறமாம். உடலைச் சுற்றி அக்கினி ஜ்வாலைகள் வீசும். மூன்று கண்களும், ஒரு தாடியு மிருக்குமாம். கைகள் நான்காம். 'வாகதண்டம், தான தண்டம், திக்தண்டம், வாத தண்டம்' எனப்பற்கள் நான்காம்; இவரது ரதம் புகைவர்ணமானது; இதை நான்கு கிளிகள் இழுத்துச் செல்லுகின்றன. வாயுதான் இந்த ரதத்தைச் செலுத்துபவர். அக்கினி தமது தொடையில்தான் 'ஸ்வாஹா' என்றமனைவியை வைத்துக்கொண்டிருக்கிறார். இவள், தனது கையில் புஷ்பங்கள் கொண்ட ஒருகுடத்தைத் தாங்கிக் கொண்டிருக்கிறாள். அக்கினிதேவரின் ஒரு கையில் தீப்பந்தமும், மற்றொருகையில் ஜபமாலையும் இருக்கின்றன.

'விச்வகர்ம சில்பம்' என்னும் நூலில் அக்கினி தேவர் பின் கண்டவாறு வர்ணிக்கப்படிருக்கிறார்: "அக்கினியின் கையில் ஒரு கொடி உண்டு. இவரது கண்கள் செம்பு நிறத்தை யொத்தவை; நிறம் புகையைப் போன்றது. இவரைச் சுற்றி அக்கினி படர்ந்து ஒரே தீட்சண்யமாகவிருக்கும். இவர் ஒரு குண்டத்தின்மீது நிற்கிறார். இவரைச் சுற்றி யோகபட்டமுள்ளது. 'ஸ்வாஹா' என்னும் மனைவி இவரது வலப்பக்கத்திலிருக்கிறாள். இவரது ஆபரணங்கள் வெண்மை நிறமானவை."

ஹேமந்த்ரி என்பர், அக்கினி தேவருக்கு ஒரே ஒருமுகந் தானென்றும்,மூன்று கண்களும் நான்கு கைகளுமுண்டு என்றும், அவரது மனைவி 'ஸ்வாஹா' அல்லவென்றும், அவளது பெயர் 'சாவித்ரி' என்றும் அபிப்பிராயப்படுகிறார்.

ஆதித்ய புராணத்தின் வண்ணம் அக்கினியின் நிறம் செம்மை; அவர் பெருத்ததொந்தியுடன் கூடியவர்; புருவமயிர் வெண்மையானது; கைகளில் ஜபமாலையும், சக்தியு மிருக்கின்றன; அவரிடம் ஏழு ஜ்வாலைகளிருக்கின்றன; வாஹனம் ஆடு.

மாயா என்ற ரிஷி அக்கினியிடம் தங்கத்தாலான செம்மறி ஆடும், சக்திச் சின்னமு மிருப்பதாகக் கூறுகிறார். இவருக்கு ஏழு செந்நாக்குக்களுண்டு; இவைதாம் இவரது குதிரைகள். நிறம் செம்மை. இவருக்கு முன்னே எண்ணற்ற கொடிகள் படர்ந்திருப்பதாக மஹாபாரதம் செப்புகின்றது.

'அக்கினி மித்திரன்' என்னும் மன்னவனொருவன் பழங்காலத்திருந்ததாகவும், அவனால் வழங்கப்பட்ட நாணயங்களில்தான் அக்கினியின் மிகவும் பழைய உருவம் காணப்பட்டதாகவும் தெரிய வருகின்றது. அக்கினிதேவரின் உருவம் நின்றுகொண்டிருப்பது போல் இவற்றில் அச்சிடப்பட்டிருந்ததாம்.

தென்னிந்தியாவில் விசேஷமாகவும், ஒரிஸ்ஸா மாகாணத்தில் சிற்சில இடங்களிலுமுள்ள கோயில்களில்தான் அக்கினி தேவரின் உருவங்கள் அதிகமாகக் காணப்படுகின்றன. ஆனால் அவரது ரதங்களின் உருவங்கள் ஆங்காங்கு மாறுபட்டிருக்கின்றன. ஒரிஸ்ஸாப் பிரதேசத்திலுள்ள கோயில்களில் அக்கினியின் வாஹனம் வெள்ளாடாகவும், செம்மறி ஆடாகவும் விளங்குகின்றது. மைசூரிலுள்ள ஹரிஹரேசுவரர் ஆலயத்தில் அக்கினிக்கு வெள்ளாட்டு வாகனம் அமைக்கப்பட்டிருக்கிறது. பாகாலா என்னும் இடத்திலுள்ள தேவாலயத்தில் குதிரை வாஹனத்தின்மீதே அக்கினிதேவர் அமர்ந்திருக்கிறார்.

இந்தியாவிற்கு முதல்முதல்வந்த பிராடஸ்டண்ட் கிறிஸ்தவப் பாதிரியார், "இந்தியாவின் தெய்வங்கள்" என்று 1869-ம் வருஷத்தில் வெளியிட்ட புத்தகத்தில் அக்கினியின் வாஹனம் வெள்ளாடும், குதிரையும் என்றே குறிப்பிட்டிருக்கிறார். ஆனால் இந்நாட்டுப் பிரதிமைகளின் ஆராய்ச்சிப்படி தாமரை மலர், வெள்ளாடு, செம்மறியாடு, குதிரை இந்நான்கும் அக்கினியின் வாஹனங்களே எனத்தெரிகின்றது. பர்லின்நகரைச் சேர்ந்த மிஸ்டர் டி. எ. இ. வால்ஹீம்டா பான்ஸெசா என்பவர் எழுதியுள்ள "இந்தியாவின் பௌராணிகம்" என்ற புத்தகத்தில் செம்மறி ஆட்டையே அக்கினியின் வாஹனமாக வர்ணித்திருக்கிறார். அவருக்கு இரண்டு கால்கள் நான்கு கைகள் எனவும், அவர் தமது கையில் ஒரு ஈட்டியை வைத்துக் கொண்டிருப்பதாகவும், மற்றிரு கைகளில் ஜபமாலையும் தாமரைப் புஷ்பமுமிருப்பதாகவும், நான்காவது கை செம்மறியாட்டின் கழுத்தின் மீதிருப்பதாகவும் அவர் சொல்லுகிறார். அவரது கிரீடம் வாளையொத்ததாம். அக்கினி தேவரின் மனைவி 'அக்னேயி' அல்லது 'அக்னாயி' அல்லது 'ஸ்வாஹா' என்பது வால்ஹீம்டாவின் கருத்து.

அக்கினிக்கும் ஆட்டிற்கும் இவ்வளவு நெருங்கிய சம்பந்தம் ஏற்படவேண்டிய காரண மென்னவென்பதை ஆராயப்புகுந்தால் ஆதி சிருஷ்டியில் சிருஷ்டி சர்த்தாவின் வாயினின்றும் முதல்முதல் அக்கினியும் ஆடும் பிராம்மணனும் வெளிவந்ததாக உபநிஷத்துக்கள் கூறுவதை நாம் கவனிக்க வேண்டியிருக்கிறது.

எல்லோரா கைலாச ஆலயத்திலும், கல்கத்தா மியூஸியத்திலு முள்ள அக்கினி தேவர் விக்ரஹங்களுக்குச் செம்மறியாடு வாஹனமே உள்ளது. ஒரே முகத்துடன் கூடிய உருவங்களே அதிகமாகக் கிடைக்கின்றன; இரண்டு முகங்களுடன் கூடிய விக்ரஹங்கள் எங்கோ ஒன்றிரண்டுதான் இருக்கின்றன; மூன்று முகங்கள் தாங்கியவை இதுவரை எங்கும் கண்டு பிடிக்கப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை.

---

## ரேடியம்

உலகில் மிகவும் உயர்ந்த மதிப்புடைய உலோகம் தங்கமென்று பலர் நினைக்கின்றனர். அதனினும் பலமடங்கு உயர்ந்தவிலையுடையது ரேடியமென்னும் உலோகம். இது சற்றேறக்குறைய 40 வருடங்களுக்கு முன் கண்டுபிடிக்கப்பட்டது. இதுவரையில் உலகமுழுவதிலும் 26 அவுன்ஸ் நிறையுள்ள ரேடியமே கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது.

எக்ஸ்ரேமூலம் வைத்திய சிகிச்சைசெய்ய இந்த உலோகம் மிகப் பயன்படுகிறது. பிளவைகளை ஸ்வஸ்தப்படுத்துவதற்கு இந்த உலோகம் இன்றியமையாதது. ஆயினும் வேண்டிய அளவு இது கிடைத்தற்கின்மையின் இதனாற் பெறும்பயனைப் பேரளவில் மக்கள் அடைய முடியவில்லை. ஐக்கிய அமெரிக்காவில் ஓர் அவுன்ஸ் ரேடியத்தின் விலை 336,000 பவுன் ஆகச் சொல்லப்படுகிறது. ரேடியத்தின் உதவியால் ரஸவாதங்கூடச் செய்யலாமென்று சில விஞ்ஞானிகள் கூறுகின்றார்கள்.

1898-ஆம் வருஷத்தில் போலந்துநகரப்பெண்மணி யொருத்தியால் இவ்வரிய உலோகம் கண்டுபிடிக்கப்பட்டது. அவள்பெயர் மேரியென்பது.

ரேடியம் கொடிய விஷத்தன்மை யுடையது; அதன் ஒரு சிறிய அணுக்கூட மனிதனைக்கொல்லும் வன்மையுடையது. வைத்தியசாலைகளில் பிளாட்டினத்தாற் செய்த ஊசிகளுக்குள் அதன் சிறிய அணுக்கள் வைக்கப்பட்டிருக்கின்றன.




## உணவு நஞ்சாவது ஏன்?

பி. என். அப்புஸ்வாமி, பி.ஏ., பி.எல்.

(27-ஆம் பக்கத்தொடர்ச்சி)

**நமது உடல் ஒரு விசித்திரமான இயந்திரம்.**

நமது உடலானது மிகவும் ஆச்சரியமான இயந்திரம். அதை அரசாங்கத்துக்கும், இயந்திரசாலைக்கும் இன்னும் எத்தனையோ விஷயங்களுக்கும் ஒப்பிட்டுப் பேசுவதுண்டு. அதில் காணப்படும் உறுப்புகள் அனைத்தும் தம்முள் ஒன்றற்கொன்று எவ்வளவோ மாறுபட்டுத் தோன்றினும், யதார்த்தத்தில் ஒன்றோடொன்று மிகவும் விந்தையாய்ப் பிணைக்கப்பட்டிருப்பதைக் காண்கிறோம். முதலில் பார்வைக்கு உடனே புலனாகாது போனாலும் இவ்வகையான நெருங்கிய பிணைப்பு ஒன்று இருக்கிறது என்பது மறக்க வொண்ணாத விஷயம்.

உடலிலே மனமும், சதையும், புத்தியும், உணவும், உணர்ச்சியும் மிகவும் நெருங்கிப் பின்னியனவாகக் காணப்படுகின்றன. அவற்றுள் ஒன்றை யொன்று பாதிக்கின்ற முறையையும் அளவையும், ஒன்றுலொன்று மாறுபடுகின்ற தன்மையையும் பார்த்தால் அவற்றுள் வலிமிக்கது எது, வலியிற் குறைந்தது எது என்று சொல்லுவது இயலாது.

**உணர்ச்சியும் இரசாயனமும்.**

களைப்பு, பசி, உறக்கம் முதலிய உணர்ச்சிகளுக்குக் காரணம் தசையிலும் உதிரத்திலும் உண்டாக்கப்படும் சிற்சில இரசாயனப் பொருள்கள் தாம் என்பது இப்பொழுது நன்றாக அறியப்பட்டிருக்கிற விஷயம். ஆகவே உடலில் உண்டாகும் சிற்சில இரசாயன மாறுபாடுகளால்தான் பசி முதலிய உணர்ச்சிகள் உண்டாகின்றன என்பது ஒருண்மை. கடுங்கோபம், பெரு வியப்பு, பேரச்சம் முதலிய சிற்சில உணர்ச்சிகளால் நமது இரத்தத்திலும் நமது உடலிலும் சிற்சில அவயவ மாறுபாடுகளும் இரசாயன மாறுபாடுகளும் நரம்புத் தளர்ச்சி கிளர்ச்சிகளும் உண்டாகின்றன என்பது

மற்றொருண்மையாம். ஆகவே உணர்ச்சிகளால் உடலும், உடலால் உணர்ச்சிகளும் ஒரு பெரிய அளவில் பாதிக்கப்படுகின்றன என்பது தெளிவாகிறது.

தந்தியும் தபாலும்.

முற்காலத்திலே இவ்விஷயங்களைப்பற்றிப் போதிய அறிவு நமக்கு இல்லாதிருந்தது. அப்பொழுது இம்மாறுபாடுகளுக்குக் காரணம் நமது உடலின் தந்திக் கம்பிகளாகிய நரம்புகள்தாம் என்று எண்ணியிருந்தோம். அதுவும் நன்றாக விளங்கவில்லை. அதாவது நமக்கு ஏதாவது ஓர் உணர்ச்சி ஏற்பட்டால் அதை உடனே நம்முடைய நரம்புகள் மூளையென்னும் மேலதிகாரிக்கு உடனே தந்தி கொடுத்து விடுகின்றன. பிறகு அந்த அதிகாரி தந்தி மூலம் கொடுக்கின்ற உத்தரவுகளுக்கிணங்க அவயவங்கள் நடந்து கொள்கின்றன என்று மட்டிலும் எண்ணியிருந்தார்கள். இப்பொழுது அதைத் தவிரப் பின்னொரு விஷயமும் நமக்குத் தெரிந்திருக்கிறது: இந்தத் தந்தி ஆபீஸைத் தவிர உடலிலே தபால் ஆபீஸ் போன்ற வேறோர் ஏற்பாடும் இருக்கிறது என்பது. இந்த ஏற்பாட்டில் சம்பந்தபட்டவை உடலிலுள்ள சிற்சில கிரந்திகள் (கிலாண்டுகள்). 'ஹார்மோன்கள்' என்னும் ஒரு வகையான இரசாயனப் பொருளை அவை உண்டாக்குகின்றன. இரத்தக்குழாய்களின் வழியே உடலெங்கும் பாய்ந்தோடும் இரத்த வெள்ளத்திலே இவை இறங்கி, உடலில் எங்கும் சென்று சென்று அங்கங்கே விஷயங்களைத் தெரிவிக்கின்றன. உத்தரவுகளைக் கொண்டு கொடுக்கின்றன. உடல் மத்தியிலே உள்ள கல்லீரலுக்கும், உடல் வெளி ஓரங்களில் உள்ள கைகால்களில் உள்ள தசைகளுக்கும், எல்லாவற்றையும் மேல் பார்த்து நடத்தும் மூளைக்கும் இவை நீந்திச் சென்று விஷயங்களைத் தெரிவிக்கின்றன.

இது மிகவும் மெதுவாக நடக்கின்ற காரியம் என்று எண்ணலாகாது. ஓரிடத்தில் இரத்தத்தில் கலந்த பொருளானது உடலெங்கும் பரவ வெகுநேரம் ஆகும் என்று எண்ணக்கூடாது. நெஞ்சிலிருந்து புறப்பட்ட இரத்தமானது கிட்டத்தட்ட முக்கால் நிமிஷத்தில் உடல்முழுதும்ஓடிவிட்டு மீண்டும் நெஞ்சுக்கு வந்துவிடக்கூடும். ஆகவே இந்த வாய்க்கால்களின்வழியாக அனுப்பப்படும் செய்திகள் மந்தமாக அறிவிக்கப்படுகின்றன அல்ல.

அறிவிக்கும் முறை.

நாம் சாப்பிடும்போது உட்கொள்ளும் உணவுகளில் சில—எளிதாகக் கரைந்துபோகக் கூடியவையாயும் சுவை மிக்கனவாயும் இருப்பன—வாயிலே ஜீர்ணமாகி வாயிலுள்ள இரத்தக்குழாய்களின்

வழியாக நெஞ்சுக்குச்சென்று உடலில் எங்கும் பரவிவிடுகின்றன. வாயில் போட்ட சில விநாடிகளுக்குள்ளே அவை உடலின் சிறு பகுதிகளான செல்களையும் உடலிலுள்ள கிரந்திகளையும், 'பான் கிரியாஸ்', குடல் முதலிய உறுப்புக்களையும் எட்டிவிடுகின்றன. அங்கே சென்று, இன்ன இன்னவகையான உணவுப்பொருள்கள் பின்னால் வந்து கொண்டிருக்கின்றன என்பதைத் தெரிவிக்கும் தூதர்களாகி விடுகின்றன; வரப்போகும் ஆகாரத்தின் மாதிரி யையும் அவ் வுறுப்புக்களுக்குக் காட்டி அத்தகைய ஆகாரத்தை ஜீர்ணிப்பதற்கு உரிய திராவகங்களை (நீர்களை)த் தயார் செய்து கொள்ளும்படி அந்த உறுப்புக்களைத் தூண்டுகின்றன. அவ் வுறுப்புகளும் இச் சாரணர்களின்மூலம் தாம் தெரிந்துகொண்ட விஷயங்களுக்கு ஏற்ப நடந்துகொள்ளுகின்றன. இவ்வாறு சுவை உணர்ச்சிக்கு ஒத்து அதனோடு ஈடுபட்டு உடலிலுள்ள பிற ஜீர்ண அவயவங்களும் நடந்து கொள்ளுகின்றன என்பது கவனிக்கத் தகுந்தது.

**சுவாச ஏற்பாடு.**

இம்மாதிரியே வேறு நிகழ்ச்சிகளும் உடலில் நிகழ்வதைக் காணலாம். நாம் பிறந்தது முதல் சாகும்வரை இடைவிடாது, விழித்திருக்கும் வேளைகளிற் போலவே உறங்கும் வேளைகளிலும், செய்துவரும் தொழில் என்ன வென்றால் மூச்சு விடுவதுதான். தாயின் வயிற்றினுள்ளே அவளு டைய உதிரத்திலிருந்து தனக்கு வேண்டும் உணவையும் பிராண வாயுவையும் பெற்று வந்த கருவானது பிறந்ததும் 'குவா' என்று கத்திக்கொண்டு மூச்சுவிட ஆரம்பிக்கின்றது; ஆயுசு முழுவதும் இடைவிடாமல் மூச்சு விட்டுக்கொண்டே இருக்கிறது. அது வயது முதிர்ந்து சாகும்போது 'மூச்சு நின்று விட்டது' என்று சொல்லுகிறோம்.

ஆனால் ஒன்று. நாம் உயிருள்ளவரை மூச்சுவிட்டுக்கொண்டே யிருக்கிறோமாயினும் நம்முடைய ஆயுள் முழுவதும் ஒரே அளவாக எப்போதும் மூச்சு விடுவதில்லை. சாதாரணமாக ஒரு மனிதன் ஒரு நிமிஷத்துக்குப் பதினெட்டு அல்லது பத்தொன்பது தரம் மூச்சு விடுகிறான். அவன் ஓடும்போதும் மும்மரமாய் வேலைசெய் யும்போதும் சுரமுறும்போதும் அவன் இதைக் காட்டிலும் வேக மாய் மூச்சு விடுவதை நாம் பார்க்கிறோம். இது ஏன்?

**கரியமில வாயு வின் தொழில்.**

நம்முடைய மூச்சின் அளவையும்—அதாவது சாதாரண மூச்சா பெரு மூச்சா என்பதையும்—அதன் வேகத்தையும் அடக்கியோ ஓட்டியோ வருவது 'கார்பன் டை ஆக்ஸைட்', 'கார்பானிக் ஆசிட்'

என்றெல்லாம் சொல்லப்படும் கரியமில வாயு. இது நமது உடலிலே உடற் கூறுகளின் — 'செல்லுக'ளின் — சிதைவினாலே உண்டாக்கப்பட்டு இரத்தத்தில் ஒரு கழிவுப் பொருளாகத் தள்ளப்படுகிறது. இது நம்முடைய உடலிலிருந்து ஒரு பெரிய அளவிலே கழிக்கப்படும் பொருளாக இருந்து வருகிறது. நமது உடற் கூறுகளிலே செல் சிதைவுகளினால் உண்டாகிய இது இரத்தத்தில் தள்ளப்படுகிறது. இதைத் தாங்கியுள்ள இரத்தமானது அசுத்த இரத்தக் குழாய்களாகிய நரம்புகளின் வழியாயோடி நெஞ்சில் வந்து விழுகிறது. அங்கிருந்து நுரையீரலுக்கு எடுத்துக்கொண்டு போகப்படுகிறது. அங்கே நாம் சுவாசிக்கும்பொழுது உள்ளிழுக்கும் நல்ல காற்றோடு கலந்து நல்ல காற்றைத் தான் ஏற்றுக் கொண்டு அதற்குப் பதிலாகக் கரியமில வாயுவைக் கொடுத்துவிடுகிறது. நாம் மூச்சை வெளிவிடும்போது அந்தக் கரியமில வாயுவை வெளியே தள்ளி விடுகிறோம். இதுதான் சுவாச முறையும், அதனுடைய மர்மமும். ஆகவே சுவாசிப்பது நமது இரத்தத்தில் உள்ள அசுத்தங்களுள் முக்கியமான கரியமில வாயுவை வெளியே தள்ளுவதற்கு என்று ஏற்படுத்திய ஏற்பாடு தான்.

நமது இரத்தத்திலே கலக்கின்ற கரியமில வாயுவானது ஓரளவுக்கு மேற்பட்டு விட்டால் அது நுரையீரலின் வழியே செல்லும்போது அதிலுள்ள நரம்புகளை ஒரு வகையாகத் தூண்டுகின்றது. அத் தூண்டுதலானது மூளைக்குத் தந்தியாகப் போகிறது; அங்கே ஒருவகை உபத்திரவமாகத் தோன்றுகிறது. மூளையின் கீழ்ப்பாகத்திலே மூச்சுநிலை என்று ஒன்று இருக்கிறது. அங்கே இந்தச் சமாசாரம் போய்ச்சேர்ந்தவுடன் அது நெஞ்சுக் கூட்டிலுள்ள தசைகளுக்கு 'வேகமாய் வேலை செய்யுங்கள்' என்று அவசரத் தந்தி கொடுக்கிறது. ஆகவே மூச்சானது தீர்க்கமாகவும் துரிதமாகவும் விடப்படுகிறது. இதனால் அந்தக் கரியமில வாயுவானது முன்னிலும் வேகமாகவும் அதிகமான அளவிலும் உடலினின்று வெளியே தள்ளப்படுகிறது.

இவ்வாறு வேகமாய் விடும் மூச்சினால் அளவுக்கு அதிகமாய் உடலில் சேர்ந்துள்ள கரியமிலவாயு வெளியே தள்ளப்படும் வரையில் இத்தகைய துரிதமான சுவாச ஏற்பாடு நடந்து வருகின்றது. ஏனென்றால் இடைவிடாது கரியமிலவாயுவின் மிகுதியைக் குறித்த தந்திகள் அசுத்த இரத்தத்தினால் மூச்சு நிலைக்கு அனுப்பப்பட்டுக் கொண்டே யிருக்கின்றன. அங்கிருந்தும், இடைவிடாது நெஞ்சுக் கூட்டின் தசைகளுக்கும் உத்தரவு வந்து கொண்டே

இருக்கிறது. இவ்வாறான முயற்சிகளால் அதிகமாயுள்ள கரியமில வாயுவெல்லாம் அகற்றப்பட்டு, இரத்தமானது மீண்டும் தன் சுய நிலையை அடைந்தபோதுதான், இத்தகைய தந்தி சாமாசாரங்களை அனுப்புவதும் நின்று போகிறது. அது நின்றவிடவே மறுபடியும் சுவாசமானது முன்போலச் சாதாரண நிலையை அடைகிறது. இந்த ஏற்பாடானது மிகவும் நுட்பமாகச் செய்யப்பட்ட ஏற்பாடு. இரத்தத்திலே அதிகப்பட்டுக் காணும் கரியமில வாயுவின் அளவானது மிகச் சிறு அளவாக இருந்தாலுங்கூட உடனே நெஞ்சுக்கூடு துருத்திபோல் மும்மரமாக வேலை செய்யத் தொடங்கி விடுகிறது.

**நிகழ்ச்சிகளும் உடலும்.**

திடீரென்று ஏதாவது ஒரு நிகழ்ச்சியானது நமது கண்முன் நடக்கும்போது நமது உடலில் என்ன நடக்கிறதென்பதைக் கவனிப்போம்: ஒருவன் மீது வண்டியொன்று ஏறி விடுகிறதை நாம் பார்க்கிறோம்; அல்லது படீரென்று ஒரு சத்தம் நமது காதில் படுகிறது; அல்லது நாம் ஏறிச்செல்லும் வண்டி கவிழ்ந்து விடும்போல் தள்ளாடிச் சாய்கிறது என்று வைத்துக் கொள்ளுவோம். நாம் உள்ளே போகும்போது ஒரு குழந்தை வேடிக்கையாகக் கதவுக்குப் பின்னால் ஒளித்துநின்றுகொண்டு 'டப்' என்று சொன்னாலும் போதும். அப்பொழுது நமது உடலில் ஏற்படுகிற நிகழ்ச்சிகள் என்ன என்று பார்ப்போம். நமக்குத் திடுக்கிடுகிறது; தூக்கி வாரிப் போடுகிறது; அல்லது நமது கண்ணும் வாயும் ஆச்சரியத்தால் திறந்து போகின்றன. அந்தச் சமயத்தில் நாம் மூச்சுவிடுவதை மறந்து விடுகிறோம். ஒரு க்ஷண நேரம்போல் மூச்சு நின்று போகிறது. 'மூச்சுப் போய் வந்தது' என்று சொல்லுகிறோம். உடனே உடலுள் இரத்தத்திலே 'கார்பானிக் ஆசிட்' குவிந்து விடுகிறது. வெகு சீக்கிரமாக அது மூச்சு நிலையைப் போய்த் தாக்கி அதைத் தூண்டுகிறது. உடனே நாம் பெருமூச்செறிகிறோம். அதிகமாக வந்து குவிந்த கரியமில வாயுவை வெளித்தள்ளும்பொருட்டுத் துரிதமாகவும் ஆழமாகவும் மூச்சு விடத் தொடங்குகிறோம். ஆதலால் இரத்தத்தோடு நல்ல காற்று அதிகமாகக் கலக்கத் தொடங்குகிறது.

**உணர்ச்சிகளின் வன்மை.**

இது கேவலம் ஆச்சரிய உணர்ச்சியால் மட்டிலும் நடைபெறும் நிகழ்ச்சி. அவ்வகை உணர்ச்சியோடு கலந்து நாம் வேறு வகையான உணர்ச்சிகளையும் பெறுவோமானால் இவற்றைத் தவிர வேறு சில விஷயங்களும் உடலுள் நிகழ்கின்றன. நம்மைத் திடுக்குறச்

செய்த விஷயமானது நமக்கு அருவருப்பைத் தருவதாயிருக்கு மானாலும், நமக்குக் கண்டால் பிடிக்காத ஒருவனால் தூண்டப் பட்டதாயிருக்குமானாலும், மேற்கூறிய தந்தியைத் தவிர வேறொரு தந்தியும் மூச்சு நிலைக்கு அனுப்பப்படுகிறது. அதாவது, 'ஏதோ விசேஷ சம்பவம் நடந்தாலும் நடக்கலாம். அதற்குத் தயாரா யிருக்கவேண்டும். ஆகையால் மறு தந்திவருகிறவரை, விசேஷ நிகழ்ச்சிக்குச் சன்னத்தமாயிருக்கும் பொருட்டு விரைவாகவும் ஆழமாகவுமே மூச்சுவிட்டுக்கொண்டிருக்கும்படி உத்தரவு போடு' என்பது. அதுவும் அவ்வாறு செய்கிறது. ஆதலால் கோபமூண்டு சண்டைக்குத் தயாராகும் மனிதர், உடல் துடிதுடிக்க மடமட வென்று மூச்சு விடுவதை நாம் எல்லாரும் பார்க்கலாம். பயந்து கலேந்த மாடு சீறும்போது இது நன்றாகத் தெரியும்.

ஆகவே, கோபத்தையோ அருவருப்பையோ, அச்சத்தையோ போன்ற உணர்ச்சிகளை நாம் பெறும்போதெல்லாம் நம்முடைய உடலின் அமைதியும் சமத்துவ நிலையும் மாறிவிடுகின்றன. உடலின் இரசாயன நிலையானது சீர்கெட்டு, ஒழுங்கில்லாத, நல்லதல்லாத நிலையாக மாறிவிடுகிறது. ஆதலால், இப்படி அடிக்கடி உண்டாகும் நிலைமாறுபாடுகளினால் உடலானது மிகவும் கெட்டுப்போகிறது. மேலும், இந்நிகழ்ச்சிகள் யாவும் ஜீர்ணத் தொழிலையும் சரிவர நடக்க ஒட்டாது கெடுத்துவிடுகின்றன என்பதும் முக்கியமாய்க் கவனிக்கவேண்டிய மற்றொரு விஷயம். நாம் சாப்பிட்டுக் கொண் டிருக்கும்போது திடீரென்று ஒரு துக்க சமாசாரத்தையோ அல்லது சந்தோஷச் செய்தியையோ கேட்டால் அப்படியே நாம் உண்ண முடியாது போய் விடுகிறது என்பதையும் நாம் யாவரும் அறிவோம். ஒருவர் மிகவும் வருத்தமான சமாசாரத் தைக்கேட்டாலும் சரி, அல்லது அது வருமென்று எதிர் பார்த்துக் கொண்டிருந்தாலும் சரி, "வயிற்றைப் போட்டு என்னவோ செய் கிறதே" என்று சொல்லுவதைக் கேட்கிறோம். சாப்பிட்டானதும் கோபமாய்ச் சண்டை போட்டாலும் இம்மாதிரியே ஜீரணத் தொழிலுக்கு இடையூறு உண்டாவதை நாம் அறிவோம். சிற்சில பேருக்கு வாந்தியும் வயிற்றுவலியுங்கூட வந்து விடுவதும் உண்டு.

இது உண்மைதானென்று நமக்கு வெகு காலமாகத் தெரியும். 'சாப்பிடும் போது அமைதியுடன் சாப்பிடவேண்டும்', 'அழுது கொண்டு சாப்பிட்டால் உடம்பில் ஒட்டாது' என்றெல்லாம் சொல்லுவதைக் கேட்டிருக்கிறோம். ஆனால் ஏன் இவை நடக் கின்றன என்பது தெரியமாலிருந்தது.

**எக்ஸ் ரே செய்த உதவி.**

'எக்ஸ் ரே' என்னும் விந்தையான கிரணங்களை நாம் உபயோகிக்கத் தொடங்கிய பிறகு வயிற்றுக்குள் நடக்கிற விஷயத்தைக்கூட உள்ளங்கை நெல்லிக்கனிபோல் நாம் பார்க்கும் திறமையைப் பெற்று விட்டோம். அதன் துணையைக் கொண்டு, சாப்பிடும்போது வயிறு சாதாரணமாய் என்ன செய்து கொண்டிருக்கிறது, இவ்வகைக் குழப்பங்கள் உண்டாகும்போது அது எவ்வாறு மாறுபடுகிறது என்பவற்றை ஆராய முடிந்துவிட்டது. அந்தச் சோதனை வருமாறு:

ஒரு பூனையின் வயிற்றின்வழி எக்ஸ்ரேயைச் சாதாரணமாய்ப் புகவிட்டால் அது முழுவதும் ஊடுருவிப் போய்விடும். நிழல் ஒன்றும் விழாது. ஆகையால் வயிற்றுக்குள் நடக்கிறது ஒன்றையும் நாம் அறியமுடியாது. அதற்காக, அது உண்ணும் ஆகாரத்தோடு பிஸ்மத்து அல்லது டால்கம் பொடிகளைக் கலந்து கொடுத்துவிடுவார்கள். அந்தப் பொடிகளுக்கு மணமும் கிடையாது, சுவையும் கிடையாது. ஆதலால் பூனை ஆகாரத்தோடு ஆகாரமாய் அவற்றையும் உட்கொண்டுவிடும். ஆனால் அவை தடித்த வஸ்துக்கள் ஆகையால் இப்பொழுது வயிற்றின் வழி எக்ஸ்ரே கிரணங்களைப் புகவிட்டால் இப்பொருள்கள் அவற்றைச் சிறிது மறைக்கும்; ஆகவே நிழல் விழும். அந்த நிழலைச் சோதித்துப் பார்த்தால் வயிற்றில் புகுந்த உணவானது என்ன என்ன பாடெல்லாம் படுகிறது என்பது நமது கண்ணுக்குத் தெரியவரும். சாதாரணமாக வயிறானது தனக்குள் விழுந்த ஆகாரத்தைப் பிசைந்து கடைந்து கொண்டேயிருக்கும். சிறிது சிறிதாகச் சிறு குடலில் ஆகாரம் இறங்கும். எக்ஸ்ரே நிழலில் இது நன்றாகத் தெரியும். பிறகு திடீரென்று பூனை இருக்கும் அறையில் ஒரு நாயைக் கொண்டு வந்துவிட்டால்—அதுவும் நாய் கிட்ட வந்து உறுமிக் குலைக்கத் தொடங்கிவிட்டால்—உடனே வயிற்றின் சலனம் அப்படியே நின்று போவதைக் காணலாம். சிற்சில வேளைகளில் அது எதிர்முகமாகவும் நிகழத் தொடங்கிவிடும். அதாவது குடலுள் இறங்கிக் கொண்டிருந்த உணவானது எதிர்த்து மீண்டும் வயிற்றுக்குள் வரும். சிற்சில வேளைகளில் வயிற்றிலிருக்கும் உணவும் அன்னக்குழாயின் வழி மேலேறி வாந்தி யெடுக்கும். ஆதலால் மனநிலையால் உணவு ஒழுங்காக ஜீரணம் ஆவது தடைப்பட்டுப் போகிறது. அதோடு நிற்காமல் அது அழுகவும் தொடங்குகிறது. ஆகவே நல்லுணவானது யதார்த்தமாகவே நஞ்சாக மாறிவிடுகிறது.

இதே மாதியான நிகழ்ச்சிகள்தாம் நமது மானிட உடலிலும் நிகழ்கின்றன. பொருமை, கோபம், வெறுப்பு, அச்சம் முதலிய உணர்ச்சிகளை நாம் உண்ணும் தறுவாயில் பெறுவோமானல், நமது ஜீர்ணம் தடைப்பட்டு, நமக்கு அஜீர்ணம் ஏற்படுகிறது. உண்ணும் உணவு நன்மையை அளிக்காமல் நஞ்சாகித் தீங்கை விளைவிக்கின்றது.

இவ்வாறு, அடிக்கடி நிகழுமானல் ஒவ்வொரு தடவையும் நஞ்சுற்று நஞ்சுற்று, நமது உடலில் தங்கும் நஞ்சுத் தொகுதி அதிகமாகிக்கொண்டு வருகிறது. உடலிலிருந்து எவ்வளவு அசுத்தம் வெளியே அகற்றப்பட்ட போதிலும், எஞ்சிய ஓர் அளவு தங்கி நின்று நம்மைத் துன்பத்துக்குள்ளாக்குகிறது. பித்தம் முதலிய நோய்கள் அப்பொழுது தலையெடுத்து நம்மை வாட்டுகின்றன.

**மெய்யான மன அமைதி வேண்டும்.**

கோபம் முதலிய உணர்ச்சிகள் தலையை வெளிக்காட்டாது உள்ளே இருந்து கறுமுறுவென்று இருந்தாலுங் கூட இத்தகைய நிகழ்ச்சிகள் நடந்தே தீருகின்றன. அப்பொழுது ஒருகால் அவை பெரிய அளவில் நிகழாதிருக்கலாம். ஆயினும், சிறிது சிறிதாக விஷயங்களை அவை நமது உடலில் சேர்த்துக் கொண்டே வரும். ஆகையால் ஆரோக்கிய நிலையை நாடும் ஒவ்வொருவனும் பரிபூரணமான மன அமைதியை உடையவனுக இருக்க வேண்டும். கோபம் முதலிய தீய குணங்களுக்குச் சிறிதும் மனத்தில் இடங்கொடுக்கக் கூடாது.

சுருங்கக்கூறின், உணவின் அளவின் மிகுதியாலும் குறைவாலும், அதன் குணுகுணங்களாலும், உண்ணுவோனது மன நிகழ்ச்சிகள் காரணமாகவும் உணவு நஞ்சாகக் கூடும். இவற்றையெல்லாம் ஆராய்ந்து, ஏற்ற உணவை அமைதியுடன் உண்பது தான் நல்ல ஜீர்ண முறையாகும். அதுவே தான் ஆரோக்கிய வழி.

---

## எலுமிச்சம்பழ ரசம்

எலுமிச்சம்பழாசம் சீதளமென்றும் அது தொண்டையில் கபத்தை விருத்தி செய்யுமென்றும் வைத்தியசாஸ்திரம் அறியாத பலர் பொதுவாக அபிப்பிராயப்படுகிறார்கள். இது தொண்டைக்கு வலிவைத் தரக்கூடியதேயன்றி நோயை உண்டுபண்ணக் கூடியதன்று. மேனுட்டு வைத்தியர்களுங் கூடத் தொண்டையைப்பற்றிய வியாதியில் நன்ருக உபயோகிக்கலாமென்று அறிவிக்கின்றனர். பிரான்ஸ் தேசத்தில் சங்கீதவிற்பன்னரும், நாடகரும், பாடகரும் தொண்டைக் கம்மல் தொண்டையில் கபம் சேருதல் முதலியவற்றைப் பரிகரிக்கவும் தடுக்கவும் எலுமிச்சம்பழத்தைச் சிறந்த பரிகார வஸ்துவாக உபயோகிப்பது வழக்கம்.

# விரைந்து செல்லும் பொருள்கள்

அ. ஸ்ரீநிவாசாசாரியார், பி. ஏ.. எல். டி.

---

உலகத்துக் காணப்படும் பொருள்களில் சில மெதுவாக நகர்ந்து செல்லுகின்றன; ஆனால் வேறு சில மிக்க விரைவோடு பறந்து செல்லுகின்றன. தற்கால நாகரிகத்தின் பயன்களுள் ஒன்று யாதெனின், ஒருபொருள் செல்லும்வேகத்தை மேன் மேலும் அதிகப்படுத்திக்கொண்டுபோவதே. இயற்கைப் பொருள் களின் குணங்களையும் இயற்கையிற் காணப்படும் சக்திகளின் இயல் பையும் ஆராய்ந்தறிந்து அவைகளை இயன்றவரையில் நமக்குப் பயன்படுத்த முயலும் பௌதிக நூல் விற்பன்னர் நாளுக்குநாள் அதிகவேகத்தோடு செல்லக்கூடிய கருவிகளையும் முறைகளையும் யூகத்தாற் கண்டுபிடித்து வருகின்றனர். இந்நிலையில், ஒரு பொருள் செல்லக்கூடிய விரைவிற்கு ஓர் எல்லைதான் உண்டோ என்ற வினா இயல்பாக எழுகிறது; அன்றியும் உலகத்துள்ள பொருள்கள் அனைத்தினும் மிக்க விரைவோடு செல்வது யாது என்ற வினாவும் எழுகின்றது. பொருள்களின் விரைவைப்பற்றி ஆராயும்போது, மிகத் தாமதமாகச் செல்லும் பொருள்களிலிருந்து தொடங்கி, படிப்படியாகச் சென்று, முடிவில் மிக்கவிரைவுள்ள பொருள்களைப் பற்றிச் சிந்திப்போம்.

## தாமதப் பொருள்கள்

அசைந்து முன்செல்லும் பொருள்கள் அனைத்திலும் மிக்க தாமதமுடையவற்றுள் ஒன்று, மனிதனது கைக் கட்டைவிரலி லுள்ள நகம். அது நகரும் பொருள்களில் ஒன்றோ என்று பலர் கேட்கலாம். ஆனால் அது வளரும் பொருள்களில் ஒன்றல்லவா? அதன் வளர்ச்சி ஒரு செகண்டிற்கு ஒரு கஜத்தில் 50 கோடியில் ஒருபங்கு என்று கணக்கிடப்பட்டுள்ளது; இதனினும் சற்று விரைவாக வளர்வது மூங்கில் மரம்; இது ஒரு செகண்டிற்கு ஒரு கஜத்தில் (சுமார்) 4 லக்ஷத்தில் ஒருபங்கு உயரம் வளர்வ தாகக் காணப்படுகிறது. அதற்கு அடுத்தபடியாக விரைவுள்ள பொருளாவது, உயிர்ப்பிராணிகட்குள் மிக மெதுவாக நகரும் நத்தையென்பது. 'நத்தையைப்போல நகர்தல்' என்பது

ஆங்கிலத்தில் வழங்கும் ஒரு பழமொழி, அது ஒரு செகண்டில் ஒரு கெஜத்தில் 700-ல் ஒருபங்குதூரம் சுமாராகச் செல்லும். உயிர்ப் பிராணிகட்குள் உயர்ந்தவனான மனிதன் நடந்து செல்லுங்கால், $6\frac{1}{2}$ நிமிடங்கட்குள் ஒருமைல்வரை நடக்கக்கூடும்; அதாவது, ஒரு மணிக்கு $9\frac{1}{4}$மைல்வரை விரைவாக நடப்பான். அவன் ஓடுவானா கில், $4\frac{1}{4}$ நிமிடங்கட்குள் ஒருமைல் தூரம் ஓடக்கூடும்; அவ்வேகம் மணிக்கு $13\frac{1}{2}$ மைல் வீதம் ஆகும். சாதாரணமான தரைமீது ஒரு மனிதன் ஓடும்போது, அதனினும் விரைவாக ஓடுவதில்லை யென்றாலும், பனிக்கட்டிமீது சருக்கிச் செல்வதற்காக உபயோகிக்கும் ஒருவகைச் செருப்பை யணிந்து, பனிக்கட்டியால் மூடப் பெற்ற தரைமீது விரைந்து வழுக்கிக் கொண்டே போகுங்கால், அவன் $2\frac{1}{5}$ நிமிடங்கட்குள் ஒருமைல்தூரம் சருக்கிவிடுவான்; இந்த வேகம் விரைந்து செல்லும் புகைவண்டியின் வேகத்திற் பாதியாகும்.

## விரைந்துசெல்லும் படகுகள்

அடுத்தபடியாக விரைந்து செல்வன, தண்ணீர்மீது செல்லும் படகுகளே. அவைகட்குள்ளும் மிக்க விரைவுள்ளன, நீர் மூழ்கிக் கப்பல்களை அழிக்கும் சில கப்பல்கள். கடலின்மீது மிதந்து செல்லும் படைக்கப்பல்களை நீர்மூழ்கிக்கப்பல்கள் அழிக்கும்; அக்கப்பல்களுக்கும் யமன்போன்று உலவும் கப்பல்கள் ஒரு மணிக்கு 48 மைல் வீதம் கடலைக் கிழித்துக் கொண்டு விரைந்து செல்லும். ஆகாய விமானங்களைப்போன்று சிறகுகள் அமைக்கப் பெற்று, அவைகளைப்போல் ஒரு வலிமையுள்ள யந்திரத்தில் தண்ணீரின்மீது விரைவாக ஓட்டப்படும் படகுகளும் உள; இம்மோட்டார்ப்படகுகள் நீரின் மீதோடும் எந்தக் கப்பலையும் தோணியையும் வெல்லும் வேகமுடையனவாம். இத்தகைய படகு ஒன்று ஆற்று நீரை எதிர்த்தும் ஆற்றின்நீர் செல்லும் திசையிலுமாக மூன்று முறை மாறிமாறி விரைவாக ஓடியபோது, அதற்குச் சராசரி வேகம் $76\frac{1}{2}$ மைலாயிற்று. இதன்கண் அமைக்கப்பட்டிருந்த இரண்டு மோட்டார் யந்திரங்களுள் ஒவ்வொன்றும் 450 குதிரையாற்றல் உடையதாயிருந்தது. (ஒருமோட்டாரின் ஓட்டும் சக்தியை ஒரு குதிரையின் ஆற்றலோடு ஒப்பிட்டு, இத்தனை குதிரைகளின் ஆற்றலுக்குச் சமமானதென்று சொல்லுதல் மரபு.) ஒருமுறை போட்டிபோட்டுக்கொண்டு ஓடியபோது, இப்படகு 77 மைலுக்கு மேற்பட்ட வேகத்தோடு ஓடியதுமுண்டு.

மனிதனைச் சுமந்து செல்லும் பொருள்களில் மிக விரைவானவற்றுள் ஒன்று பனிக்கட்டிப் படகு எனப்படுவது. தண்ணீரின்

மீது செல்லும்போது ஏற்படும் தடையைக் காட்டிலும், வழவழப்பான பனிக்கட்டியின்மீது ஓடும்போது ஏற்படும் தடை மிகக் குறைவானது என்பது வெளிப்படை. இப்படகுகள் பனிக்கட்டி மீது வழுக்கிச் செல்வதற்கு ஏற்றவாறு செய்யப்பட்ட அடிப்பக்கத்தை உடையனவாய், பாய்மரங்கள் அமைக்கப்பெற்றனவாய், காற்றடிக்கும்போது அதே திசையை நோக்கி விரைந்து செல்லும் தன்மையனவா யிருக்கும். வேகமாக இயங்குதற்குத் தக்கவாறு முறைப்படி இயற்றப்பட்ட இத்தகைய படகுகள் ஒரு நிமிடத்திற்கு இரண்டு மைல் வீதம், அதாவது ஒரு மணிக்கு 120 மைல் வீதம் விரைந்து சென்றுள்ளன. ஆனால் சிறிய பிரயாணக் கப்பல்கள் கடலின்மீது செல்லுங்கால் சுமார் இருபது மைல் வேகத்தோடு செல்வதன்றி, அதற்கு மேற்பட்டு விரைவாகச் செல்வதில்லை; பெருங் கப்பல்களுக்கும் 26 முதல் 30 மைல் வரைதான் வேகம் உண்டு.

## தண்டவாளத்தின்மீது ஓடும் வண்டிகள்

இருப்புத் தண்டவாளங்கள் மீதோடும் புகைவண்டிகளின் வேகம், அவைகள் தோன்றிய காலமுதல் வரவர மிகுந்து வந்திருப்பது உண்மையாயினும், மணிக்கு நூறு மைலுக்குமேற் போயிருப்பது அபூர்வந்தான். அதைவிட வேகமாகச் செல்லும் நீராவி யந்திரங்களை இயற்றுதல் இயலவில்லை என்பதுமட்டுமல்ல; அவ்வளவு வேகமாக வண்டிகளைத் தண்டவாளங்கள்மீது ஓட்டுதல் இலாபகரமான தொழிலாகுமா என்பதைப்பற்றிப் பெரிய நீராவி வண்டிகளை இயற்றும் நிபுணர்களும் சந்தேகம் கொள்கின்றனர். 1901-ஆம் ஆண்டில் ஒரு நீராவி வண்டித்தொடர் ஐந்து மைல் தூரம் அமெரிக்காவிற் சென்றபோது, மணிக்கு 120 மைல் வேகம் அதற்கு உண்டாயிற்றாம். அமெரிக்கா தேசத்திலுள்ள பிரதான பட்டணங்களுக்கிடையே ஓடும் மிக துரிதமான நீராவி வண்டித் தொடர்களும் பொதுவாக 70, 80 மைல் வேகத்தை அடைவது உண்டென்றாலும், சராசரி வேகம் அதற்குக் குறைந்ததாகவே அமைகின்றது. பிரயாணிகளை ஏற்றிச்செல்லும் வண்டித்தொடருக்கு மணிக்கு 60 மைல் வேகமே ஆபத்திற் கிடமில்லாத உயர்ந்த வேகமெனக் கருதப்படுதலின், பொதுவாக இவ்வேகமே சராசரியாக மிக விரைவான நீராவி வண்டித்தொடர்கட்கும் ஏற்படுகின்றது.

மின்சாரத்தின் உதவியால் இயங்கும் வண்டித் தொடர்கள் பொதுவாக மணிக்கு 130 மைல் வேகத்திற்கு மிஞ்சிச் செல்வதில்லை. ஜெர்மனியிலுள்ள பிரதானமான நகரில் ஓடும் மின்சார

வண்டித்தொடர்களின் வேகத்தைச் சோதித்துப் பார்த்தபோது, மணிக்கு 130 மைல் வேகமே உயர்ந்ததாகக் காணப்பட்டது.

மோட்டார்வண்டிகள் இதனினும் வேகமாக மனிதனை ஏற்றிச் சென்றுள்ளன; ஒருவர் தமது பந்தய ஓட்டத்திற்கெனத் தயாரித்த மோட்டாரில் ஒரு மைல் தூரத்தை 23 செகண்டுகட்குச் சற்றுக் கூடிய நேரத்திற் கடந்து சென்றுராம்; இவ்வேகத்தைக் கணக்கிடும் போது, மணிச்கு 156 மைல் வீதம் ஆகின்றது. தரையில் இதற்கு மிஞ்சிய வேகத்தோடு மனிதன் சென்றதில்லையாம்.

## ஆகாய விமானங்கள்

தரையிலும் நீரிலும் செல்லும் வேகத்தைக் காட்டிலும் மிக்க வேகத்தோடு ஆகாயத்தில் சஞ்சரித்தல் இயல்பே; ஏனெனில், ஒரு பொருள் தரைமீதும் நீரின்மீதும் செல்லும்போது உரசுவதனுல் ஏற்படும் தடை ஆகாயத்தில் அப்பொருள் செல்லும்போது உண்டாகும் தடையைவிடக் குறைவாயிருத்தல் வேண்டுமல்லவா? சில ஆண்டுகட்கு முன்பு நடந்த ஆகாய விமானப் பந்தயப் போட்டியொன்றில், ஒரு பிரஞ்சு மாலுமி சுமார் ஒருமணி நேரத்திற்குள் 168½ மைல் தூரம்வரை சென்றுர். அதற்குப் பின்னர் ஓர் ஆகாயவிமானி மணிச்கு 193 மைல் வேகத்தோடு பறந்தனர். தற்காலம் மணிக்குச் சுமார் 240 மைல் வேகத்தோடு பறக்கும் விமானங்களும் உள்ளன என்பது தெரியவருகின்றது.

## அதிக விரைவுள்ள பொருள்கள்

இனி, இயற்கைப் பொருள்கள் சிலவற்றின் வேகத்தையும் கவனிப்போம்: இடியிடிக்கும்போதும் நாம் ஒருவர்க்கொருவர் பேசும்போதும் ஒலிகள் எழுகின்றனவல்லவா? இவ்வொலி நம்மைச் சூழும் வாயுவில் எழும் அலைகளின் பயனுல் உண்டாவதொன்றே; அந்த அலைகள் எங்கும் பரவி நமதுகாதில் விழும்போதே ஒலியைப் பற்றிய உணர்ச்சி உண்டாகின்றது. குளத்தில் கல்லை எறியும்போது, நீரின்மீது அலைகள் எழுந்து வட்டமாக எல்லாப் பக்கங்களிலும் பரந்து செல்வதுபோல், ஒலியலைகளும் ஓரிடத்தினின்று கிளம்பி மேலும் கீழும் எண்டிசைகளிலும் பரவுகின்றன. இவ் வலைகள் வாயுவில் எவ்வளவு வேகத்தோடு செல்கின்றன என்பதை நிபுணர்கள் சோதித்து அளந்துள்ளனர். இவர்களுடைய ஆராய்ச்சியின்படி, ஒலியலை ஒரு செகண்டிற்கு 1100 அடி வீதம், அதாவது 1 மணிக்கு 750 மைல் வீதம் விரைந்து செல்கின்றது; மிக்க வேகத்தோடு செல்லும் மனிதன் வாயுவேகத்தோடு செல்

கிறுன் என்பது நமது வழக்கம். வாயுவின் வேகம் ஒலியின் வேகத்தினும் மிக்கதே. பிரசண்டமாருதம் ஒன்று (அதாவது பெரும் புயற்காற்று ஒன்று) வீசும்போது, ஒரு செகண்டுக்கு 585 கஜம் வீதம், அதாவது மணிக்குச் சுமாராக 1200 மைல்வீதம் வாயு விரைந்து செல்கின்றது. இப்பூமியில் இதனினும் மிக்க விரைவுடன் பாய்ந்து செல்லக்கூடிய செயற்கைப் பொருள் பீரங்கியின் வாயினின்று வெடிமருந்தின் உதவியாற் கிளம்பிப் பாயும் குண்டு ஒன்றுதான். இது ஒரு செகண்டிற்கு 975 கெஜம் அதாவது மணிக்கு 2000 மைல் வேகத்தோடு வெளிச்செல்லக் கூடியது. மிக்க விரைவோடு துப்பாக்கியினின்று வெளியேறும் குண்டும் ஒரு செகண்டுக்கு ஒருமைல் வேகத்திற்கு அதிகமாகச் செல்வதில்லை; அதாவது, ஒரு மணிக்கு 3600 மைல் வேகத்திற்கு மிஞ்சிய வேகம் ஒரு குண்டிற்குக் கிடையாது.

வெடிமருந்தின் சக்தியால் வெளியேற்றப்படும் குண்டினும் மிக்கவிரைவாகச் செல்லும் பொருள் ஒன்று நமக்கு இருப்பிடமாகும் பூமியேயாயினும், இதனை அசையும் பொருளாக அறிபவர் சிலரே. கண்ணிற்கு அசைவற்றதாகத் தோன்றும் இப்பூமி சூரியனை உண்மையாகச் சுற்றி வருவதனாலேதான், சூரியன் ஆகாயத்தில் மாதத்திற்கு ஓர் இராசிவீதம் நகர்ந்து வருவதாகத் தோன்றுகிறது. சூரியன் அஸ்தமித்ததும் வானத்தில் மேற்கே அடிவாரத்தில் தோன்றும் நக்ஷத்திரம் எதுவென்பதை இன்று கவனித்து விட்டு, ஒருமாதம் கழிந்தபின் அதேஇடத்தில் சூரியன் மறைந்ததும் இரவில் தோன்றும் நக்ஷத்திரம் எது என்பதை நோக்கினல் இந்த உண்மை புலப்படும். சூரியன் மேஷராசிக்கு வருடத்திற்கு ஒருமுறை வருவதன் காரணம், பூமி சூரியனை ஒரு முறை சுற்றி வருவதற்கு ஓராண்டு பிடிப்பதே என்று வானநூல் வல்லார் துணிகின்றனர். இவ்வாறு சுற்றிவரும் வீதியின் நீளத்தைக் கண்டு பிடித்து, பூமியின் வேகத்தைக் கணக்கிடுங்கால், மணிக்கு 65533 மைல் வேகம் கிடைக்கின்றது.

பூமியிலுள்ள பொருள் ஒவ்வொன்றும் அணுக்களால் ஆக்கப்பட்டுள்ளது; அவ்வணு ஒவ்வொன்றையும் பிரித்துப் பார்க்குங்கால், மத்தியிலுள்ள ஒரு நுண்ணிய பகுதியைச் சுற்றி மிகச் சிறிய பகுதிகள் பல சுழன்றுவருவது தென்படுகிறது. அண்டத்திலுள்ளது பிண்டத்திலும் உண்டு என்பர் நமது முன்னோர். இவ்வண்டத்து ஒரு சூரியனைச் சுற்றிப் பலகிரகங்கள் சுழன்று வருவது போல், ஓர் அணுவிற்குள்ளும் ஒரு மத்திய பகுதியைச் சுற்றிப் பல சிறிய பகுதிகள் சுழன்று வருகின்றன. இவ்வாறு சுழலும்

பகுதிகளை மின்னுருக்கள் (*Electrons*) என்றழைப்போம்; அவைகள் மின்சார சக்தியின் உருவாய் அமைந்துள்ளன என்று தெளியப் படுதலின், அப்பெயர் அவைகட்குப் பொருந்தும். இந்த மின்னுருக்கள் ஒவ்வொன்றும் ஒரு செகண்டிற்கு 10000 மைல் தூரம் விரைந்து செல்லும் என்று நிபுணர்கள் நிதானித்துள்ளார்கள்.

ஆயினும், இதனினும் வேகமான இயற்கைப் பொருள் ஒன்றும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. அது யாதெனின் ஒளியலையே. நீரில் அலைகள் பரவுவதுபோலவும், வாயுவில் ஒலியலைகள் பரவுவது போலவும், ஆகாசவீதியில் ஒளியலைகள் எங்கும் பரந்து செல்கின்றன என்று பௌதிக நூலார் நிலைநாட்டியுள்ளார்கள். சூரியனது ஒளி பூமியைவந்து சேர்வதற்கு 8¼ நிமிடங்கள் சுமாராகப் பிடிக்கின்றன என்று அந்நூல் விற்பன்னர் கணக்கிட்டுள்ளனர். இதன் பொருள் யாதெனில், யாதானும் ஒருமாய காரணத்தால் ஒளியைச் சொரியும் சூரியன் திடீரென அணைந்து ஒளியற்றதாக ஆகிவிடுமாயின், சுமார் எட்டு நிமிடங்கட்குப் பின்னர்த்தான் இப்பூமியில் இருள் நிறையும். ஒளியின்வேகம் ஒரு செகண்டுக்கு 186000 மைல் என்று தீர்மானிக்கப்பட்டுள்ளது. உலகத்திலுள்ள எப்பொருளுக்கும் இதனினும் உயர்ந்த வேகம் உண்டாதல் இயலாது என்று அறிஞர் துணிந்திருக்கின்றனர்; ஆதலின் இதுவே அனைத்தினும் உயர்ந்த வேகமாகும். இவ்வேகத்தை மனோவேகத்திற்கு ஒருவாறு ஒப்பிடலாம். ஒளியலையின் வேகமே மின்சார அலையின் வேகமும். கம்பியில்லாத் தந்தியிலும் 'ரேடியோ' என்னும் கருவியிலும் மின்சார அலைகளே விசித்திரமான செயல்களை நிகழ்த்தி வருகின்றன. இவ் வலைகள் (ஒளியலைகளைப்போல்) 25000 மைல் சுற்றளவுள்ள நமது பூமியை ஒரு செகண்டிற்குள் ஏழுதடவை சுற்றிவரும் வேகத்தை யுடையனவாம். மனிதர்க்குத் தெரிந்தவரை, இவ்வேகமே எல்லாவற்றிலும் உயர்ந்த வேகமாகக் கருதப்படுகிறது. இன்னும் எட்டி யோசிக்குங்கால், ஒளிவேகத்தையும் மின்சார வேகத்தையுமே இவ்வுலகில் ஒரு பொருளிற்கு ஏற்படக் கூடிய வேகத்திற்கு எல்லையென்று கூறவேண்டி யிருக்கிறது என்றும் நிபுணர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள். ஆக, மனிதனது கைக் கட்டைவிரலின் வளர்ச்சி வேகத்தை ஒருபக்கத்து எல்லையாகவும் ஒளியின் வேகத்தை மற்றொரு பக்கத்து எல்லையாகவும் கொண்டால், இவ் வுலகத்துள்ள பொருள்களின் வேகங்கள் யாவும் அந்த இரண்டு எல்லைகட்கும் இடையில் உள்ளனவேயாம்.

# தாமஸ் எடிசன்

முத்து, பி. ஏ. (ஆனர்ஸ்)

"மானிடன் ஆயுதம் உபயோகிக்கும் ஒரு மிருகம்" என்று ஆங்கிலப் பேராசிரியர் கார்லைல் தமது 'ஸார்ட்டர் ரிஸார்ட்டஸ்' என்ற நூலில் எழுதியுள்ளார். இது மிகவும் பொருத்தமான கூற்றே. மனிதனைவிட உடல்வலியுள்ள மிருகங்கள் பல உள்ளன. மிகவும் அற்பமான கொசு, மூட்டைப்பூச்சி முதலியபிராணிகள்கூட மனிதனை அலட்சியமாகக் கடிக்கின்றன. வலைகொண்டு கொசுவைத் தடுக்கவேண்டியிருக்கிறது; 'பிலிட்' அல்லது வேறு பூச்சி விஷத்தைக் கொண்டு மூட்டைப்பூச்சியை அழிக்கவேண்டியிருக்கிறது. தேகவலிமையொன்றைக்கொண்டே மனிதசமூகம் தற்காலப்பெருமையை யடைந்திருக்க இயலாது. ஆயுதங்களை ஆக்கி உபயோகிக்கவல்ல அறிவினாலேதான் ஏனைய உயிர்ப்பிராணிகளை மனிதன் அடக்க முடிந்தது.



காட்டு மிருகங்களிடமிருந்து தங்களைக் காப்பதற்கு ஆதிகால மனிதர் கற்களினாலும், மரங்களினாலும் சில முரட்டு ஆயுதங்களைச் செய்துகொண்டனர். அதுமுதற்கொண்டு இவ்வுலகில் பலவகையான ஆயுதங்கள் தோன்றின. ஆயுதங்களைச் செய்ய உபயோகிக்கப்படும் இயற்கைப் பொருள்களின் குணங்களையும் மனிதர் கற்றனர். பல்லாயிரக்கணக்கான வருடங்களாக லக்ஷக்கணக்கான மனிதர்களால் செய்யப்பட்ட முயற்சியே இப்போதைய மனிதசமூகத்தின் உயர்நிலைக்குக் காரணம்.

மனிதசமூகத்திற்கு உபயோகமான கருவிகளை அமைத்தவர்களில், அமெரிக்காநாட்டில் ஒஹியோ மாகாணத்தில் மிலான் நகரில் கி. பி. 1847-ஆம் வருஷம் பிறந்த தாமஸ் ஆல்வா எடிசன் முக்கியமானவர். ஒரு பள்ளிக்கூடத்தில் சேர்ந்தாரேயன்றி அங்குப்

போதிக்கப்பட்ட படிப்பில் அவருக்கு ஊக்கம் உண்டாகவில்லை. வீட்டில் அவருடைய அன்னை கல்வி சிறிது போதித்துவந்தாள். தமக்கு நூதனமான கருவிகளையோ விஷயங்களையோ கண்டால் அவகளைப்பற்றி நன்கு அறிந்தோர்களைப் பல கேள்கவிகள் கேட்பார். இயற்கைப் பொருட்சாஸ்திர ஆராய்ச்சிகளில் அவருக்கிருந்த விருப்பம் சிறு வயதிலேயே வெளிப்பட்டது. ஓர் இருப்புப் பாதை வண்டித்தொடரில் தினசரிப்பத்திரிகை விற்கும் பையனாக அவருடையவாழ்க்கை தொடங்கிற்று. வண்டியிலேயே சில பொருள்களைச் சேகரித்துக்கொண்டு சில ஆராய்ச்சிகளைச் செய்து வந்தார். ஒருநாள் அவ்வாராய்ச்சியால் அருகிலிருந்த பொருள்கள் தீப்பற்றிக்கொண்டன. கோபங்கொண்ட வண்டிக்காப்பாளர் அவரை வண்டியைவிட்டு இறக்கிவிட்டனர்.

அவ்விருப்புப்பாதையில் தந்திக் குமாஸ்தாவாக இருந்த ஒருவருடைய குழந்தையை ஓர் ஆபத்திலிருந்து எடிசன் காப்பாற்றியதால் அக்குமாஸ்தா மிக்க நன்றியறிதலுடன் தந்தியடிக்கும் வித்தையும் அக்கருவியின் இலக்கணங்களையும் தமக்குத் தெரிந்தவரையில் அவருக்குக் கற்பித்தார். பலவிடங்களில் தந்திக் குமாஸ்தாவாகவிருந்து தேர்ச்சிபெற்று நியூயார்க்கு நகரம் வந்தடைந்தார்; "நியூயார்க்கு கோல்டு அண்டு ஸ்டாக்கு தந்திக்கம்பெனி"யாரிடம் வேலையிலமர்ந்தார். தந்தி கண்டுபிடித்துச் சில வருடங்களேயாகியிருந்தமையால் அக்காலக் கருவிகள் இக்காலத்தவைபோல உயர்ந்தவையல்ல; அடிக்கடி வேலை செய்யாமல் நின்றுவிடும். ஒருநாள் எடிசன் சேர்ந்த நிலயத்தில் கருவிகள் வேலை செய்யாமல் தடைப்பட்டன. அங்கிருந்த பலரும் முயற்சிசெய்தும் கருவிகள் சீர்பெறவில்லை. அருகேயிருந்த எடிசன் முதலாளியின் உத்தரவின்மேல் இரண்டே நிமிடங்களில் எல்லாக்கருவிகளையும் ஒழுங்குபடுத்திவிட்டார். எடிசனை மிகவும் மெச்சிய முதலாளி, அந்தக் காரியாலயத்தின் நிருவாஹகராக அவரையே நியமித்துச் சம்பளத்தை மிகவும் உயர்த்தினர்.

உலகத்தோருக்குப் பயன்படக்கூடிய பல கருவிகளைக் கண்டுபிடித்தலையே தம்முடைய வாழ்க்கையின் இலட்சியமாக எடிசன் கொண்டார். பணக்கஷ்டம் இப்பொழுது நீங்கியதால் ஆராய்ச்சிகளில் வெகு தீவிரமாக இறங்கினர். தந்திக் கருவியில் பலவித முன்னேற்றங்களைச் செய்தார். அனுப்பப்படும் செய்தியைத் தானகவே ஒருகடிதத்தில் குறித்துக்கொள்ளும் ஒரு தந்திக்கருவியுண்டு. இதற்கு "ஆடோமாடிக் தந்தி" (*Automatic Telegraph*) என்று பெயர். சாதாரணத் தந்தியிற் காட்டிலும் இதில் வேகமாகச்

செய்திகளை அனுப்பலாகும். எடிசன் காலத்தில் இத்தந்தியின் மூலமாக நிமிடத்திற்கு இருநூறு வார்த்தைகள் வீதமே அனுப்ப முடிந்தது. இராப்பகலாகப் பலநாட்கள் படித்து ஆராய்ச்சி செய்து நிமிடத்திற்குச் சுமார் மூவாயிரம் வார்த்தைகளை அனுப்பும் வகையை அவர் கண்டுபிடித்தார். தாம் அமைத்த நூதனக் கருவிகளுக்கெல்லாம் பாதுகாப்புப் (*Patent*) பெற்றுக்கொண்டார்.

டெலிபோன் (*Telephone*) கருவியை முதலில் உபயோகப்படும் வண்ணம் சீர்படுத்தியமைத்தவர் கிராஹம்பெல் (*Graham Bell*) என்ற விஞ்ஞானசாஸ்திரி. அளிப்புக்கருவியும் (*Transmitter*) ஏற்குங்கருவியும் (*Receiver*) ஒரே மாதிரி அமைக்கப் பெற்றிருந்ததால் பெல் கண்டுபிடித்த டெலிபோனை வெகுதூரங்களுக்கு உபயோகித்தல் கூடாமலிருந்தது. கரியை உபயோகித்து ஒரு நேர்த்தியான அனுப்புக் கருவியை (*Carbon Transmitter*) எடிசன் அமைத்தார். இக்கருவியையும் பெல் கண்டுபிடித்த ஏற்குங் கருவியையும் உபயோகித்ததால் டெலிபோன் நன்றாக அமைந்தது. பலருக்குப் பயன்படுவதைக் கருதி அக்கருவியின் பாதுகாப்பைப் பெல்லுக்கு எடிசன் விற்றுவிட்டார்.

மின்சார ஆர்க்கு விளக்குகளே அக்காலங்களில் இருந்தன. அவைகள் மிகவும் ஒளியோடிருந்தமையால் வீடுகளில் உபயோகிக்கத்தகுதியற்றிருந்தன. மின்சாரத்தை ஒரு மெல்லிய கம்பியில் ஓட்டினால் சூடுண்டாகும்; கம்பி மிக மெல்லியதாகவிருந்தால் சூடு மிக அதிகமாகிக் கம்பி ஒளிவிடக்கூடும். பல உலோகங்களைக் கம்பியாக இழுத்து அவர் உபயோகித்தார்; அவைகள் சரியாக உழைக்கவில்லை. கரியையே கம்பியாகச் செய்து பிராணவாயு நீக்கப்பட்ட ஒரு கண்ணாடிக்கூண்டுக்குள் அதை வைத்து மின்சாரத்தை ஓட்டினார். பலமணிநேரங்கள் அக்கரிக்கம்பி ஒளியுடன் பிரகாசித்தது. இவ்விளக்கு அவருக்குத் திருப்தியாகவிருந்தது. இம்மாதிரியான விளக்குகள் வீடுகளுக்கு உபயோகப்பட்டன. இக்காலத்தில் "டங்ஸ்டன்", "ஒஸ்மியம்" முதலிய அரிய உலோகக்கம்பிகளையே இத்தகைய விளக்குகளில் உபயோகிக்கின்றனர்.

சென்னைபோன்ற நகரங்களில் ஒரு வீதிவழியாகப் புறப்பட்டால், ஒரே காலத்தில் பலகடைகளிலிருந்தும் கிராமபோன் சங்கீதங்கள் தோன்றி நம்மை வருத்துவதால் அக்கருவியைக் கண்டுபிடித்தவரைச் சிற்சில சமயங்களில் சபிக்க எண்ணியிருக்கிறோம். ஆயினும் மிதமாகவும் ஏற்றகாலங்களிலும் அனுபவித்தால் கிராமபோன் ஒரு நல்ல பொழுதுபோக்கே. சங்கீத மகாவித்துவான்களுடைய குரல்களையும் பதிப்பித்துக் கொள்ளலாம். அக்கருவியை

உபயோகப்படும் விதமாக முதலில் அமைத்தவர் எடிசனே. அவர் கண்டுபிடித்த கருவிக்கு 'போனகிறுப்' என்று பெயர். தற்செயலாக நடந்த ஒரு சம்பவத்தால் அவர் இக்கருவியை அமைக்க முடிந்தது. தந்தியில் உபயோகப்படும் குறிகள் மேடாகச் செதுக்கப்பட்டிருந்த ஒரு தகட்டால் ஒரு கம்பியை ஆட்ட முயன்றுகொண்டிருந்தார். அப்பொழுது அக்கம்பி பலவித ஒலிகளைச்செய்தது. இதில் எடிசனுடைய கவனஞ்சென்றது. மேடு பள்ளங்களுடைய ஒருதகட்டால் இவ்வித ஒலிகள் உண்டாக்கப் படுவதால் எதிர்மாருக ஒலியால் ஒருதகட்டில் மேடு பள்ளங்களை உண்டாக்க முடியுமாவென்பதைச் சோதிக்க எண்ணினார். யாதானுமொருபொருள் மிக விரைவாக ஆடி அருகேயுள்ள வாயுவின் அணுக்களையும் ஆடச்செய்வதே ஒலிக்குக் காரணமாகும். வாயுவின் அணுக்களின் ஆட்டத்தால் ஒரு மெல்லிய தகட்டையும் அதனுடன் பிணைக்கப்பட்டிருந்த ஓர் ஊசியையும் ஆட்டச்செய்தார். அவ்வூசி ஒரு மெழுகு தடவிய கடிதத்தில் பட்டுக்கொண்டிருந்தது; கடிதம் ஓர் உருளையில் சுற்றப்பட்டும் அவ்வுருளை தன்னைத் தானே சுற்றிக்கொண்டும் மெதுவாக ஒரு பக்கமாக நகர்ந்து கொண்டும் இருந்தது. இந்த உபாயத்தால் வளைந்து வளைந்து செல்லக்கூடிய ஒருகோடு அக்கடிதத்தில் வரையப்பட்டது. அவர் சோதனைக்கு எடுத்துக்கொண்ட ஒலி ஒரு நண்பர் பாடிய பாட்டாகும். உருளையை முன்னிருந்த இடத்தில் வைத்து ஊசியைக் கோட்டின் ஆரம்பத்தில் வைத்து அதேவேகத்துடன் உருளையைச் சுற்றியதும், மெல்லிய குரலுடன் முதலில் பாடப்பட்ட பாட்டே வெளிவந்தது. இப்பொழுதுள்ள கிராமபோன் இதே முறையில் செய்யப்பட்டாலும், உருளைக்குப்பதில் தட்டையான தகடுகள் உபயோகப்படுகின்றன. முதலில் பதிக்கப்பட்ட தகட்டைப்போல எண்ணிறந்த பிரதிகளையும் எடுக்கின்றனர்.

சினிமா என்ற ஓடும் படக்காட்சிக்கும் எடிசன் அடிகோலினார். இவர் கண்டு பிடித்த கினிடாஸ்கோப் (*Kinetoscope*) என்ற ஒருகருவியில் அசையும் பொருள்களைச் செகண்டிற்குப் பதினாறுக்குக் குறையாத வேகத்துடன் எடுத்த போட்டோப்படங்களை அதேவேகத்துடன் தொடர்ச்சியாக ஒரு பிரகாச ஒளிக்கு முன்வரச் செய்யப்படும். இவ்வொளிக்கிரணங்கள் அப்படங்களைக்கடந்து சில பூதக்கண்ணாடி (*Lens*)கள் வழியாகச் சென்று ஒரு திரையில் விழுந்து படம்பிடிக்கப்பட்ட பொருள்களை அவைகள் அசைந்து கொண்டிருந்தவாறே காட்டும்.

மேல் ஒருவாறு விளக்கப்பட்டவை எடிசனால் அமைக்கப்பட்ட முக்கியமான சில கருவிகள். இவைகளேயன்றிப் பல சிறிய கருவிகளையும் இவர் கண்டுபிடித்துள்ளார்; இவைகளை விரிப்பிற் பெருகும். தமக்குக் கிடைத்த செல்வத்தைக்கொண்டு விஞ்ஞான சாஸ்திர ஆராய்ச்சிக்குச் சாதனமான இடங்களை அமைத்தார். அறிவுள்ள இளைஞர்களைத் தெரிந்தெடுத்து ஆராய்ச்சித்துறையில் பழக்க வசதிகளைச் செய்தார். 1931-ஆம் வருஷம் அவர் அக்டோபர் மாதம் உயிர்துறந்தார். சாஸ்திர ஆராய்ச்சியில் ஈடுபடுவோர்க்கெல்லாம் இருக்கவேண்டிய ஆர்வமும் விடாமுயற்சியும் இவரிடம் சிறந்து விளங்கின.

---

## மிருகங்களின் பாஷை

பிராணிகள் தங்கள் தங்கள் இனத்துக்கேற்ற சில சப்தங்களை வெளியிட்டுத் தங்கள் கருத்துக்களை வெளியிடுகின்றன. நம்முடைய நாட்டுப் பழங்கதைகளில் சில அறிஞர்கள் மிருகபாஷையை அறிந்திருந்தார்களென்ற செய்தி சொல்லப்படுகிறது. பாரிஸ் நகரத்திலுள்ள நாடகாசிரியரான காம்ரில் டி. அனுன்ஸியா என்பவர் நாயின் பாஷையைப்பற்றி ஆராய்ச்சி செய்து வருகிறார். அவர் நாய்ப்பாஷையின் ஒரு சிறு அகராதி வெளியிட்டிருக்கிறார்; குரங்குகளுக்கு ஒருவகைப் பாஷை இருப்பதாகப் பல நிபுணர்கள் ஆராய்ந்து கூறியிருக்கின்றனர். பூனையின் பாஷயை ஆராய்ந்த ஒரு பேராசிரியர் 32 வார்த்தைகள் வரையிற்கண்டு பிடித்திருக்கிறார். காலஞ் சென்ற தேசிய கவியாகிய சி. சுப்பிரமணிய பாரதியார் காகங்களின் பாஷையை ஆராய்வதில் ஊக்கமுடையவராக இருந்தார். தம்முடைய ஆராய்ச்சியைப் பற்றி அவர் பல வருஷங்களுக்கு முன்பு ஒரு தமிழ்ப் பத்திரிகையில் எழுதியிருக்கிறார்.

# சரித்திரம்

## ஹெட்டி க்ரீன்

[*Hetty Green*—1825—1906.]

சி. வி. சுப்பிரமணியன், பி. ஏ., (ஆனர்ஸ்.)

[தற்சமயம் உலக மெங்கும் பரவியிருக்கும் பொருளாதார நெருக்கடிக்குக் காரணம் மனிதனின் அறிவின்மையே. செல்வ மென்பது யாது என்று மனிதன் இன்னும் உணரவில்லை. அவனுடைய நாணய மாற்றுக் கொள்கைகளும் முறைகளும் இன்னும் அறிவு நிரம்பாப் பழங்காலக் கொள்கைகளையே பின்பற்றுகின்றன. பணம் செல்வமல்ல; அதைச் செல்வமென்று கருதுவது ஓர் மூட நம்பிக்கை என்பதை நமக்குச்சில கோடீசுவரர்களின் சரிதங்கள் திண்ணென விளக்கிக்காட்டும். அவர்கள் பொருள் எவ்வாறு ஈட்டினார்களென்றும், எங்ஙனம் அவற்றை மனிதனுக்குப் பயன்படுமாறு உபயோகித்தார்களென்றும் சிறிது ஆராய்வோம். அவ்வித ஆராய்ச்சி ஒன்றே நமக்குச் செல்வம் என்றால் என்ன? செல்வம் சேமிக்கும் வழிகள் யாவை? அதை எவ்வாறு உபயோகித்தால் மனிதனுக்குப் பயன்படும், நாட்டின் செல்வமும் வளரும்? என்னும் பல அரிய உண்மைகளை எடுத்துக் காட்டும்.]

செல்வத்தைச் சேகரித்து அதனை உபயோகப்படுத்தத் தெரியாதவர் மிகச் சிலரே. அச்சிலரில் ஹெட்டி க்ரீன் என்னும் மாதும் ஒருத்தி. அவள் 1825-ம் வருஷம் 'ந்யூ பெட்போர்ட்' என்னும் இடத்தில் பிறந்தவள். அவள் இறக்குமுன் சுமார் முப்பது லக்ஷம் பவுன் சேகரித்திருந்தாள்.

அவளுக்குப் பணத்தாசை அதிகமாகப் பிடித்திருந்த போதிலும் வீட்டு வேலைகளிலும் மற்ற விஷயங்களிலும் கவனம் செலுத்தாமல் இருக்கவில்லை. பிறருடன் சிற்சில வேளைகளில் சல்லாபமாயிருந்த போதிலும் தன் காரியத்தில் கண்ணுங் கருத்துமாகவே இருந்தாள். சிறு வயதிலிருந்தே லோப குணம் அவளிடம் குடி கொண்டிருந்தது. நாளாக ஆக அக்குணந்தான் மேலோங்கிற்று. சுகமென்பதையே அனுபவித்தறியாத அவள், பொறுக்க

முடியாத குளிர் காலங்களிலும் பத்திரிகைத் துணுக்குகளையே ஆடையாக உபயோகித்தாள். வயிறாரவும் உண்ணமாட்டாள். நல்ல வீடுகளில் வசிக்கவும் அவள் பிரியப்பட்டாளில்லை. அரசாங்க வரிகளைக் கொடுக்க இஷ்டப்படாமல், மோசக்கருத்து டன் வெவ்வேறு சிறுசிறு இராஜ்யங்களுக்குச் சென்று ஒளிந்து கொள்வாள். பணப்பேயும் பொறாமைப் பேயுமே அவளிடம் அதிகமாகத் தலைகாட்டத் தொடங்கின. இரக்கமற்ற நெஞ்சின ளான அவள், தன் தொழிலிற் குறுக்கிட்டவர்களை வஞ்சம் தீர்த்துக் கொள்ளப் பின் வாங்கினாளில்லை. இக்காரணம் பற்றியே அவளிடம் அன்பெனும் பாசம் அறவே ஒழிந்திருந்தது. அவள் சுற்றம் சிறிதும் பேணவில்லை. அவள்பாற் சிக்கி அல்லற் பட்டு மானமிழந்தோர் பலர். தான் மணந்த மணாளனையும் மீளாத்துய ரத்தில் அவள் வீழ்த்தினாளென்றால் என்னே பணப்பேய் செய்யும் கொடுமை! ஹெட்டியின் தகப்பன் சிக்கனத்தைக் கடைப்பிடித்த ஓர் கப்பல் வியாபாரி. சிறுவயதில் ஹெட்டி மற்றப் பெண்களை விட அழகில் குறைந்தவளாக இருக்கவில்லை. ஆனால் எப்பொழு தும் அவள் முகம் சிடுசிடுப்பாகவே இருக்கும். தன் தாயாருக்குத் தொந்தரவு கொடுப்பதென்றால் அதிக சந்தோஷம். உலக நட வடிக்கையாவது சிறிது பழக இடமுண்டென்றெண்ணி சிறுவயதி லேயே ந்யூயார்க் (*New York*) கிற்கு அவள் பெற்றோர் அவளை அனுப்பினர். செலவிற்கும் 1200 தாலர்கள் (*Dollars*) கொடுத் திருந்தனர். ஆனால் அப்பணத்தைச் செலவிட மனமின்றி, அதை ஒன்றிற்குப் பத்தாகப் பெருக்க எண்ணி அதை ஓர் நிதியில் (*Bank*) அவள் சேமித்தாள்.

ஹெட்டிக்கு அவள் தகப்பனாரிடமிருந்து பத்து லக்ஷம் தாலர்கள் கிடைத்தன. அவள் அத்தையும், தன் சொத்தில் ஒரு சிறுபாகமான 5 அல்லது 6 லக்ஷம் தாலர்களை அவளுக்கே விட்டுச் சென்றாள். பேராசை பிடித்த ஹெட்டியின் மனம் அத்துடன் திருப்தி அடையுமா? தன் அத்தையின் முழுச் சொத்தையும் அபகரிக்கத் தூர்எண்ணங் கொண்டாள். அதற்காகப் பொய்யாகக் கையொப்பமிடல் முதலான சட்ட விரோதமான காரியங்களையும் செய்யப் பின் வாங்கவில்லை. எவ்வளவு முயன்றும் அவள் முயற்சி பயனற்றதாயிற்று.

தாங்கள் செய்த குற்றத்தவறுகளின் அவமானத்தைச் சகிக்க முடியாமல் ஹெட்டியும் அவள் புருஷனும் சிறிது காலம் லண்டனில் தலை மறைவாகக் காலங் கழிக்கலாயினர். அங்கும் ஹெட்டி, 'கழைக்கூத்தாடினாலும் காரியத்தில் கண்' என்றபடி

பணம் சேகரிப்பதிலேயே கண்ணுங் கருத்துமா யிருந்தாள். ஒன்றை இரண்டாக்குவதே அவள் நோக்கம். சர்க்கார் கடன் பத்திரங்களை அதிகமாக வாங்கலானுள். அவள் கணவனே மிக்க யூகசாலியான போதிலும், வியாபார முறைகளில் அதிகத் தேர்ச்சி பெற்றவனுன போதிலும், சேகரிப்பதை யெல்லாம் அளவு மீறிச் செலவிடுதலிலேயே நாட்டமுள்ளவன். பொருள் விரய மாவது அவனுக்கு ஒரு பொருட்டல்ல. ஹெட்டியும் அவனும் இவ்விஷயத்தில் மிக முரண்பட்டனர். புருஷன் அதிக ஊதாரியா யிருந்தும் ஹெட்டி முதல் வருஷத்திலேயே 15 லக்ஷம் தாலர்கள் சேர்த்தாள்.

தம்பதிகள் இருவரும் 1874-ம் வருஷம் தங்கள் ஜன்ம பூமிக்கே திரும்பினர். அமெரிக்காவில் அப்பொழுதிருந்த நிலைமை யும் ஹெட்டியின் எண்ணத்திற்கேற்றதாகத் தோன்றிற்று. ஆவ லென்னும் பெருந்தீ சுடர் விட்டெரிந்தது. அதற்கு அனுகூல மாகவே நாட்டில் விலை வாசிகளெல்லாம் மிகச்சரஸமாய் மலிந்து கிடந்தன.

அக்காலத்தில் ரயில்வே பங்குகள் (*Railway Stocks*) வாங்குவது அதிக லாபத்தை அளிக்கக்கூடியதா யிருந்தது. அவை களை வாங்குவதிலேயே ஹெட்டி தன் கவனத்தைச் செலுத்தினுள். மற்றக் கைத்தொழிற் பங்குகள் (*Industrial Stocks*) வாங்கு வதில் அவள் மனது சிறிதேனும் செல்லவில்லை. மலிவான ரயில்வே பத்திரங்களை (*Bonds*) வாங்கினுல் தானே விலை ஏறும் பொழுது அவைகளை அதிக விலைக்கு விற்று மிக்க ஊதியம் அடை யலாம்? பணத்தைச் செலவழிப்ப தென்ருல் அவள் இரத்தக் கண்ணீர் சொரிவாள். தான் சேகரிப்பதை யெல்லாம் தன் புருஷன் வீணுக்குவது அவளுக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. தம் பதிகள் இருவரும் இம்மாதிரி முரணுற்ற கொள்கையினராயிருக் கும் வரையிலும் இல்லறச் சகடம் அமைதியுடன் எவ்வாறு நடைபெறும்? தன்னை மணந்தோனுக்குத் தன் சொத்துகளின் மேல் உள்ள பாத்யதையை அறவே நீக்கிவிட்டாள். அவனு டைய சொந்த சொத்தாகிய 10 லக்ஷம் தாலர்களையும், தனியே பிரித்து அவனிடமே ஒப்படைத்துவிட்டாள். சகல பாந்தவ்யங்க ளையும் முற்றும் ஒழித்தனள். அவனும் தன் ஊதாரித்தனத்தின் பய னுகத் தன்னுடைய அந்தியகாலத்தை ந்யூயார்க்கில் ஏழையாக ஆண்டி போலக் கழித்தனன்.

தன் புருஷன் கதி இப்படியாக ஹெட்டியோ பண உலகத் தில் சிறந்து விளங்கினுள். எந்த நிதியில் (*Bank*) வேண்டு

மானாலும் அவளைப் பார்க்கலாம். எப்பொழுதும் கையில் ஒரு கத்தைப் பத்திரங்கள் இல்லாமல் இருக்கமாட்டாள். தன் காரியங்களையும் அந் நிதிகளின் குமாஸ்தாக்களைக்கொண்டே பொருட்செலவு சிறிதும் இல்லாது முடித்துக் கொள்ளக் கூடிய அவ்வளவு திறமை வாய்த்திருந்தாள். எவ்வித அட்டகாசஞ் செய்வதற்கும் பின்வாங்கமாட்டாள். அவளிடம் லோப குணமும், பிடிவாதமுமே குடி கொண்டிருந்தன. ஈவிரக்க மற்ற மனத்தினள் என்பதற்குச்சான்று ஒன்று கூறுவோம்: ஒரு சமயம் தற்செயலாக அவளுடைய ஒரே மகனுக்குக் காலொடிந்தது. காலொடிந்த மகனுக்கு வைத்தியம் செய்தால் பணச்செலவாகுமென்று, அவனைக் கவனிக்காது முடமாக்குவதற்கு அவளே முக்கிய காரணமாயிருந்தாளென்றால், அவளைப் பணப்பேய் எவ்வளவு தூரம் ஆட்டியிருக்குமென்று நாமே ஊகித்துக் கொள்ள வேண்டும். அன்புடன் அவளே அவனுக்குத் தன்கைகளால் சிகித்ஸை செய்ததாகச் சொல்லப்படுகிறது. ஆனால் அவன் காயத்தைச் சுத்தமான துணிகளினாலும் கட்டினாளில்லை. அசுத்தக் கந்தைகளால் அவன் கால்களைக் கட்டுவதும் இலவச வைத்தியசாலைகளுக்குச் சென்று மருந்து கேட்பதுமாயிருந்தாளென்றால் இது ஒரு விந்தையினும் விந்தையல்லவா?

ஹெட்டி இவ்வளவு லோபியானபோதிலும், தனக்குரிய மரியாதையைச் சிறிதேனும் இழந்தவளல்ல. ஏன்? அவள் குணமும், பழக்க வழக்கங்களும் அக்காலத்திற்கு ஏற்றவாறே இருந்தன. காலத்திற் கேற்ற கோலம். 'பணமே செல்வம், பணமே பிரதானம், பணமே சகலமும், பொருளில்லாற்கிவ்வுலகம் இல்லை' யென்ற எண்ணம் எங்கும் நிறைந்திருந்த காலத்தில் அவள் வேறு என்னதான் செய்திருக்கக் கூடும்? ஒருவரின் குணாதிசயங்களையும், பழக்க வழக்கங்களையும் அவரவர் காலத்திற்கேற்றவாறுதானே சீர்தூக்கிப்பார்த்தல் வேண்டும்? சத்ஜன சங்கமில்லாத அவள் பணமிருந்தும் பிணமானாள். ரஸ்கின் (*Ruskin*) என்னும் ஆங்கிலக் கவிஞர் பொருளாதார சாஸ்திரத்தை மிக இழிவாகக் கூறியதும் இக்காரணம் பற்றியே. அக்காலத்து ஜனங்களின் எண்ணங்களும், தற்காலத்தைப் போல், முன்னேற்றம் அடைந்திருக்கவில்லை.

ஹெட்டியை நல்வழியில் திருப்ப ஒருவருக்கும் முன் வந்தாரில்லை. இக்காலத்து உலகம் முழுதும் பரவியிருக்கும் வியாபாரமுறைகளும் நாணயமாற்று முறைகளுமே அவள் நல்வழியிற் செல்லாததற்குக் காரணம். தங்கம், வெள்ளியாலாகிய நாணயங்

கள் ஒருகாலும் செல்வமாகா. அவை தெருவிற்கிடக்கும் கற்களுக்குச் சமமே. பணம் செல்வமல்ல; நாணயங்களைக் கொண்டு வாங்கி, மனிதன் அனுபவிக்கும் பொருள்களே செல்வம் என்னும் உண்மையே அவள் பணமெனும் பேய்வாய்ப்பட்ட தற்குக் காரணம். ஒருவனிடம் கோடிக் கணக்கான பவுன்கள் இருந்தாலும் அவற்றை ஸஹாரா பாலைவனத்தில் தன்னந்தனியாய் வைத்துக் கொண்டு என்ன செய்வது?

---

## உணவுக்கிடையில் நீர் அருந்தல்

சாப்பிடுங்காலத்தில் சிலர் பிடிக்குப் பிடித் தண்ணீர் அருந்துகின்றனர். அங்ஙனம் செய்தல் அவர்களுடைய ஜீரணசக்தியின் குறைவைக்காட்டு கிறது. ஜீரணம் செய்வதற்கு உதவுகின்ற எச்சில் நீர் அவர்களிடம் குறை வாக இருத்தலின் உணவை உட்கொள்ளுகையில் நீரின் உதவியை அதிகமாக வேண்டுகிறார்கள். உழைத்துவேலைசெய்யும் கூலியாட்கள் உண்ணும்போது இடையில் பெரும்பாலும் நீரை உட்கொள்வதேயில்லை. உண்டபின்பே ஒரே தரத்தில் வேண்டிய நீரை உட்கொள்கின்றனர். அவர்களுக்கு நல்ல ஜீரண சக்தியிருக்கிறது. சாப்பிடுவதற்கிடையில் தண்ணீர் குடிப்பதால் வயிற்றி லுள்ள விஷக்கிருமிகள் அங்குமிங்கும் ஓடி அநேகவிதமான வியாதிகளை உண்டாக்குமென்றும் அஜீரணமேற்படு மென்றும் வைத்திய நிபுணர்கள் கூறு கின்றனர்.

# சிவாஜியின் குரு

டி. இராஜகோபாலன், பி. ஏ.

பதினாறாவது நூற்றாண்டின் பிற்பகுதியில், கோதாவரி நதியின் கரையிலுள்ள, ஜாம்பவா என்னும் கிராமத்தில் சூர்யாஜி பண்டிதர் என்ற பிராமணச்சிரேஷ்டர் வசித்துவந்தார். அவர் தமது உத்தம மனைவியான ராணுபாய், என்பவளுடன், இன்பமாக இல்லறம் நடாத்துகையில், ஒருகால் யாகம் செய்ய நேர்ந்தது. அச்சமயம், மற்றோர் பிராமணோத்தமர், ராணுபாய் இரண்டு புத்திரர்களைப்பெறுவாளென்று ஆசீர்வதிக்க, அதுவும் அவ்வாறே நடைபெற்றது. இளையவனுக்கு நாராயணனென்று பெயரிட்டு அவனுடைய ஐந்தாவது ஆண்டிலேயே உபநயநமும் செய்வித்தார்கள். நாராயணனும் வேதங்களைச் செவ்வனே பயின்று மகோன்னத ஸ்திதியை அடைய வேண்டியிருக்கையில் தகப்பனார், ஆறாவது வயதிலேயே இறந்துபோனார். குடும்பநிர்வாகம் இப்பாலன் தலையில் விழுந்தது. இருந்தபோதிலும் ஒழிந்தவேளைகளில் கோதாவரி தீரத்தின் கரையில் உட்கார்ந்துகொண்டு வேதசாஸ்திரங்களை தன்னந்தனியே செவ்வனே விசாரணைசெய்வான். இச் சிறுவனுடைய உள்ளப்போக்கை அறியாத அவன் தாயாரும் தமயனும், அவன் பொழுது போக்குவதாக எண்ணி அவனை நையப்புடைத்து வந்தார்கள்; அவர்களின் பேதைமையைப் பொருட்படுத்தாமல் தன் போக்கே போய்க்கொண்டிருந்தான். நாராயாணன், சிலவேளைகளில் வேதாந்த விசாரணைகளில் மெய்மறந்து வீட்டையும் மறந்தான். அவ்விதமாகப் பஞ்சவடி என்ற காட்டில் மெய்மறந்திருக்க, தாயாரும் தமயனும் அவனைக்கண்டுபிடிக்க இரண்டுநாட்கள் தேட வேண்டியதாயிற்று.

தன்தாய்நாடாகிய இந்தியாவை சீர்கேடாக்கிய, முகலாய அரசர்களின் மேலும் அவனுக்கு ஆராக்கோபம் பொங்கிற்று. நம் கோவில்களை இடித்துத் தகர்க்கும் அவர்களை அடியோடு வேரறுத்து ஹிந்துமதம் சனாதன ஆசாரியமங்களுடன் கூடிச் சீர்பெறுமாறு முயற்சிக்க வேண்டுமென்று தீர்மானித்தான்! ‘எக்கஷ்டம் வரினும் பயமில்லை; ஹிந்துமதத்தைக் கைதூக்கி விடுவேன்’ என்ற வீர எண்ணத்துடன் துறவறம் பூண்டான்.

இந்தவித அதிசயமாறுதலைக் கண்ணுற்ற தமயனுக்கு ஒருவித மானபயம் தோன்றியது. நாராயணனே முன்போல, வாடினமுகத்துடன், சதாசிந்தனைகளில் ஆழ்ந்திராமல், தேஜஸ்வியாய் விளங்குவதைக்கண்டு, தான் தன் தம்பியைச் சோம்பேறியென்றும் பித்தனென்றும் தீர்மானித்தது தவறு என்பதை உணர்ந்தான்.

"அண்ணு! நீ என் வியப்படைகிருய்? நான் இனிமேல் சந்யாசாசிரமத்தைக் கைக்கொண்டு, பிரம்ம குலத்தையும் ஹிந்து மதத்தையும் உத்தாரணம் செய்யப் பாடுபடப் போகிறேன்" என்ருன் பின்னவன்.

தமையன், "அதிருக்கட்டும்! நீ இப்பொழுது வீட்டிற்கு வா" என்றழைத்துக் கொண்டுபோனுன்; யாவரும் அவனைக் கலைக்க முயன்ருர்கள். ஓர் அழகான பெண்ணை நாராயணனுக்கு மண முடிப்பதாக நிச்சயித்தார்கள். ஆனுல் நாராயணன் வீட்டைவிட்டு ஓடிப்போய் ஓர் ஆற்றின் மடுவில் குதித்துவிட்டான். பிறகு அவனை மிகுந்த சிரமத்துடன் உயிர்தப்பவைத்து, கலியாணத்தைப்பற்றிப் பேசுவதையே நிறுத்திவிட்டார்கள்.

சிறிதுகாலம் சென்றபின், ஒருநாள் அவன்தாயார், "குழந்தாய், வேதங்களை அறிந்த நீ வேதவாக்குச்கு விரோதமாகத் தாய் சொல் தட்டலாமா?" என்ருள்; "அம்மா! தட்டக்கூடாதுதான்; ஆனுல் தாய்நாட்டிற்காகவும் பாடுபடவேண்டுமென்று அதேசாஸ்திரம் கூறுகிறதல்லவா? தாயைப்பணிந்து தாய்நாட்டை மறப்பவன், உண்மை மனிதனுவானு? ஆகையால், தாய்க்கும் தாய்நாட்டிற்கும் தொண்டுபுரிதலே, மாந்தர் கடமையாகும்!" என்று அவன் பதிலளித்தான்.

"குழந்தாய்! தாயார் தெய்வமென்பதை ஒப்புக்கொள்கிருயல்லவா? ஆனபடியால் நீ என்சொல்லையும் கேட்கவேண்டுமல்லவா?" என்ருள். அதற்கவன் "ஆம்! சந்தேகமின்றி; நீங்கள் சொல்லும் வார்த்தையை நான் கூடியவரையில் மீறமாட்டேன்" என்ருன்.

"நல்லது! என்னிடம் உனக்குச் சிறிதேனும் பற்றிருந்தால் நீ கலியாணம் செய்துகொள்ளத்தான் வேண்டும்" என்ருள் தாய்.

நாராயணனுக்கு இன்னது செய்வதென்றே புரியவில்லை. மணப்பந்தலும் போட்டு மணப்பெண்ணுடன் நாராயணன் உட்கார வைக்கப்பட்டான்; வாயைக்கூடத் திறவாமல், வாடின முகத்துடன் நாராயணன் உட்கார்ந்துகொண்டு, 'கடவுளே! இப்பந்தத்திலிருந்து என்னைத் தப்புவிப்பாயாக' என்று பிரார்த்தித்துக் கொண்டிருந்தான். புரோகிதர்கள் வெள்ளிக்கரண்டியில் தீர்த்

தத்தை எடுத்து அவன்கையில் கொடுக்கும் தருணம் மணப் பலகையிலிருந்து ஒரே குதியாய்க்குதித்து எவர் கையிலும் அகப் படாமல் ஓடிவிட்டான். நேராக நாஸிக் என்னும் இடத்திற்குச் சென்று பன்னிரண்டு வருஷகாலம் ராமதாஸ் என்கிற புனை பெயருடன், சாஸ்திர ஆராய்ச்சி செய்துகொண்டு திரிந்தான்.

திரிந்ததுமன்றி உபதேசம் செய்தும், எழுதியும் தன் கருத் துக்களை வெளிப்படுத்தவே, அநேகர் அவனுடைய தைவிக குணங்களையும் சாந்தத்தையும் கண்டு சிஷ்யர்களாயினர். இப் பன்னிரண்டுவருட ஆராய்ச்சியால் 'தசபோதம்' என்கிற அரிய நூலை யியற்றினன்.

இப்படியிருக்க 1659-ஆம் ஹு சிவாஜி என்கிற அரும்பெரும் மகாராஷ்டிரத்தலைவன் அவனைக் குருவாயடைந்தான். சிவாஜிக்கு, ராமதாஸ் சொல்லியதே வேதவாக்காயிற்று. "இப்பாரதகண்டத்தி லுதித்து ஆண்பிள்ளையென்று சொல்லிக்கொண்டு தாய் நாட்டுக் குரிய கடைமையைச் செலுத்தாமல் மிருகம்போன்று திரியும் மானிடப்பிறவிகள், அலியாவார்கள்" என்பது போன்ற பலவித மான ஆவேசமூட்டக்கூடிய உபதேசங்களால் ராமதாஸ் சிவாஜி யைத் தன்வசப்படுத்திப் பரவசமூட்டினன்.

"என்குருநாதனே! பிராமணவகுப்புத்தான் இந்துமதத்திற்கு ஆணிவேர்போன்றது. அபாரபுத்தி கூர்மையைப்பெற்ற இவர்கள் கைதூக்கப்பெறுவிடின் இந்துமதம் நிலைக்குமென்ற எண்ணம் எனக்குத் தோன்றவில்லை. மற்ற வகுப்பார்களையும் ஒன்றுசேர்த்து, ஹிந்து மதத்தை ஒழுங்கு படுத்திவிட்டால், அது பின்பு உலகத் தில் யாவராலும் அழிக்கக்கூடாத பலத்தை அடையும். ஆகையால் உமது கட்டளையைச் சிரமேற்றுங்கி முகலாயர்களைத் தலையெடுக்க வொட்டாமல் செய்கிறேன்" என்று சபதம் பூண்டான்.

சிவாஜி குருவினிடம் வைத்திருந்த வாத்சல்யத்தை வெளிப் படுத்தும் வேறொரு சம்பவமும் உண்டு. ஊரெல்லாம், திரிந்து கொண்டுவருகையில், ராமதாஸ் சிவாஜி ஆண்டுவந்த ஊருக்குப் பிச்சைக்காக வந்தான். ஒரு கிரஹஸ்தன் வீட்டில், "ஜே! ரகுபதி!" என்று கூறிப் பிச்சையாசித்துக் கொண்டிருக்கையில், தற்செயலாய் சிவாஜி அடுத்தவீட்டில் வந்திருந்தான். தன் குருவின் குரலைக் கேட்டு, உடனே ஒருசாஸனம் எழுதச்சொல்லித் தன் குருவை அழைத்து வரச்செய்து அரசாங்க முத்திரையிடப்பட்ட அந்தச் சாஸனத்தை அக்குருவின் பிச்சைப் பாத்திரத்தில் போட்டு விட்டான்.

"குழந்தாய்! உன் செய்கை விநோதமாகவன்றோவிருக்கின்றது! பசியென்று பிச்சை கேட்ட நான் இக்காகிதத்தை வைத்துக் கொண்டு யாது செய்வது?" என்று கூறிக்கொண்டு ராமதாஸ் அக் காகிதத்தைப் பிரித்துப் படித்தான். அதில் சிவாஜி, தனக்குச் சொந்தமான ராஜ்யம், தனம் எல்லாவற்றையும் தன் குருவுக்குப் பிச்சையாகக் கொடுத்ததாக எழுதியிருந்தான்.

ராமதாஸ் சிரித்துக்கொண்டு, "பிள்ளாய்! நீ பிறகு என்ன செய்யப்போகிறாய்?" என்றான். "உங்கள் சிஷ்ய கோடிகளில் ஒருவனைப் பின் தொடரப்போகிறேன்; அதுவே எனக்குப் பரம சந்தோஷம்" என்றான் சிவாஜி.

"நீ அரைத்துணி கட்டிக்கொண்டு வீட்டுச்கு வீடு சென்று பிச்சை யெடுப்பாயா?"

"உங்கள் பொருட்டு எது வேண்டுமாகிலும் செய்வேன்" என்று சொல்லிக் காவி வஸ்திரம் பூண்டு வீட்டுச்கு வீடு பிச்சை யெடுக்கவாரம்பித்தான் மகாராஷ்டிர மன்னன்.

"உன்னைவிட எனக்குப் பிரியமான சிஷ்யன் ஒருவனுமில்லை. ஆனாலும் நீ போய் ராஜ்யத்தை ஸௌக்யமாக ஆண்டுகொண்டிருப்பதுதான் எனக்கு மிகவும் திருப்தியளிக்கும்."

"க்ஷத்திரிய தர்மத்திற்கே கேடான சம்பவமன்றோ அது? எங்கள் கடமை: கொடுத்ததைத் திரும்பிக் கேட்பது கூடாது."

"ராஜ்யத்தை ஒழுங்காகப் பரிபாலனம் செய்வதன்றோ க்ஷத்திரியர்களுக்கு அழகு? நீ இம்மாதிரி என்னோடு வரத் துணிந்தால் ராஜ்யத்தில் பெருங்குழப்பமன்றோ ஏற்படும்?"

சிவாஜி ஒரே பிடிவாதமாக, "கொடுத்த தானத்தைத் திரும்பிப்பெறமாட்டேன்" என்று சொல்ல, ராமதாஸ், "நீ என்னுடைய பிரதிநிதியாக ராஜ்யத்தை ஆண்டு வா" என்றதும் ராஜ்ய பரிபாலனத்தை மீண்டும் மேற்கொண்டான்.

மகாராஷ்டிரக்கொடி பறக்க வாரம்பித்தது. எல்லோரும் அக்கொடியின் கீழ்த் திரண்டார்கள். மகாராஷ்டிரர்கள் பலத்தார்கள். ஒவ்வொரு யுத்தத்திலும் காரியங்களிலும் சிவாஜிக்கும் அவனது பரிவாரங்களுக்கும் ஹிந்துமத ஸ்தாபனமே மேல் நோக்கி நின்றதுமன்றி ராமதாஸ் எந்தவிதம் இந்தியா இருக்க வேண்டுமென்று நினைத்தானோ, அதே பிரகாரம் அவன் பிரதிநிதியாகிய சிவாஜி ஆண்டு வந்தான்.

ஒருசமயம், கல்யாண் என்ற தேசம் மகாராஷ்டிரர்களால் கைப்பற்றப்பட்டு அதன் அரசனாகிய மூலான் அகமது என்பவன்

சிறைப்பட்டதும், அபாஜி சாண்டேவ் என்கிற சிவாஜியின் தளகர்த்தன், சிவாஜியிடம் வெகுமதியாகச் சிறைப்பட்ட அரசனின் பெண்ணைக் கொண்டு வந்தான். மந்திரிப்பிரதானிகளனைவரும் அப்பெண்ணின் அழகைக் கண்டு வியந்திருக்க, சிவாஜிமட்டும் "ஒவ்வொரு பெண்ணும் என் தாயாருக்குச் சமம். ஒருவனுக்குக் களங்கமற்ற கீர்த்தியின் மேல் ஆசையிருக்குமானால் இம்மாதிரி, தனக்குச் சொந்தமற்ற பெண்ணைப்பற்றிச் சிந்திக்கவே கூடாது. ராவணன் அக்கெட்ட எண்ணத்தினாலேயே குலத்தோடு அழிந்தொழிந்தான். நம்மில் எவரேனும் தற்சமயம் சிறைப்பட்டு, நம் மனைவியையோ பெண்ணையோ தாயையோ பகைவன் காதலித்துக் கற்பைக்கெடுக்க எண்ணங்கொள்வானாகில், நம்முடம்பு எவ்வாறு துடிக்கும்?" என்ற வீரமொழிகளால் அவர்களுக்குப் புத்தி கற்பித்துவிட்டு அப்பெண்ணுக்கு அநேகவிதமான சம்மானங்கள் கொடுத்து மரியாதை செய்து வழியனுப்பினான். சிவாஜியின் அத்தகைய மேன்மைக் குணங்களுக்கெல்லாம் ராமதாஸே காரணமென்று நமக்கு விளங்குகிறது. ராமதாஸுக்கு இராமபிரானிடமும் ஹனுமானிடமும் மிகுந்த பக்தி உண்டு. ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் ஹிந்துதேசம் முன்னேற்றமடைய ஹனுமான்செய்த சேவையையே தாய்நாட்டிற்கு ஒவ்வொருவரும் செய்வது அவசியமென்று எடுத்துரைப்பான்.

இப்பேர்ப்பட்ட உத்தமன், சிவாஜி இறந்த அடுத்தவருடத்தில் தன்னுடைய 73-வது வயதில் இப் பூதவுடலை நீத்தான். மூச்சு இருக்குமளவும், ராமதாஸ் தாய்நாட்டிற்குத் தொண்டுபுரிந்தான். ஆனால், சிவாஜியின் மகன் சம்பாஜி பட்டத்திற்கு வந்ததும், ராமதாஸின் கொள்கைகளை அனுசரித்து ராஜ்யபாரம் நடத்திய தன் தந்தையின் வழியைப்பற்றாது போனமையால் பிற்காலத்தில் ராஜ்யம் சீர்குலைந்தது.

---

## பழ ரஸம்

பழங்களின் ரஸங்கள் பலவகையான நோய்க்கிருமிகளை அழிக்கும் ஆற்றலுடையனவாக இருக்கின்றன. நம்முடைய முன்னோர்கள் மாதந்தோறும் விரதமிருந்து அக்காலங்களில் பழங்களை உண்டனரென்பதை நாம் அறிவோம். அவர்கள் அங்ஙனம் செய்ததால் நோய்க்கிருமிகளைத் தங்கள் உடலினின்றும் போக்கி உடல்நலம் பெற்றனர். 'டைபாயிட்' ஜ்வரம் முதலிய நோய்களை உண்டாக்கும் கிருமிகளைக் கொல்லும் அமிலங்கள் பழங்களில் அடங்கியிருக்கின்றனவாம். திராக்ஷைப்பழங்களிலுள்ள டார்ட்டாரிக் அமிலமும் சீமை அத்திப்பழத்திலுள்ள மாலிக் அமிலமும் நோய்க்கிருமிகளைக் கொல்கின்றன. இங்ஙனமே டான்னிக் அமிலமும் சைட்ரிக் அமிலமும் சில பழங்களில் இருக்கின்றனவாம்.



# கல்யாணி

## ஐ.

---

(56-ஆம் பக்கத் தொடர்ச்சி)

### காட்சி 4.

[இடம்: சென்னை எழும்பூர் ரயில்வேஸ்டேஷன்;
காலம்: இரவு $8\frac{1}{2}$ மணி.]

[ஜனங்கள் அங்குமிங்கும் கூட்டமாசப் போகிறார்கள். திடீரென்று ஒருவர் தம் நகைப்பையைக் காணோமென்று டிக்செட்டுக்கொடுக்குமிடத்திலிருந்து கத்துகிறார். போலீஸ்காரர்கள் பல பக்கங்களிலும் ஓடிச் சந்தேகம் உண்டானவர்களைத் தேடிப்போகிறார்கள்.]

ராமச்சந்திரன்:—(கையில் ஒரு சிறு மூட்டையுடன் வருகிறான்.) என்ன மதிமோசம்போனேன்! முன் குதிரைப்பந்தயத்தில் லாபம்வந்த பணத்தையும், என் கையிலுள்ள பொருளையும் பந்தயம்வைத்து எல்லாவற்றையும் தொலைத்து விட்டேன். ஊருக்குப்போக ஒரு பைசா என்னிடமில்லை. 'பர்லின்' குதிரை முதலில் வருமென்று எவ்வளவோ நம்பியிருந்தேன். அது போன விடமே தெரியாமல் போய்விட்டது.....என்னசெய்வது?.... (கையிலிருக்கும் மோதிரத்தைப்பார்த்து) ஆறுமாதம் தீபாவளிக்கு என்மாமனார் வீட்டில்போட்ட மோதிரம் என்கையிலிருக்கிறது. இதை அடகுவைத்தோ அல்லது விற்றோ, ஊர்போய்ச் சேரவேண்டும்......இரவு $10\frac{1}{2}$ மணிக்குக் கடைசிவண்டிக்கு எப்படியாவது போக முயற்சி செய்யவேண்டும். இனிக் கடைவீதிக்குப் போவதென்றால் ஒருமணிநேரம் பிடிக்கும். இதோ பார்சல் ஆபீசில் சிலர் இருக்கிறார்கள். அவர்களே விலைக்கு எடுத்துக்கொள்வார்களா பார்க்கிறேன். (போய், பார்சல் குமாஸ்தா ஒருவரைப் பார்த்து) ஐயா! நான் தஞ்சாவூர் போகவேண்டும்; கொண்டுவந்த பணம் முழுதும் செலவாகிவிட்டது. தயவுசெய்து இந்த மோதிரத்தை விலைக்கு யாராவது வாங்கிக்கொள்வீர்களா?

ஒருவர்:—ஐயா! இப்படித்தான் திருட்டு நகைகளைக் கொண்டுவந்து ஒருவன் சென்றமாதம் விற்றப்போனான். போலீசார்வந்து அவனைப்பிடித்து நகைகளை மீட்டுப்போனதோடல்லாமல், அவன் தப்புவதும் தம்பிரான் புண்ணியமாகும்போலிருக்கிறது.

வேறொருவர்:—சற்று முன்பு யாரோ நகைப்பையைக் காணோமென்று கூச்சல்போட்டார்கள். அதில் சம்பந்தப் பட்டநகையோ என்னவோ? போலீசார் வசம் சொல்லப்பா.

ராம:—ஐயா! நான் திருடனல்ல; ஏதோ சமயத்திற்கு உதவ இந்தமோதிரத்தை விற்கவந்தேன்;

(பேசிக்கொண்டிருக்கும் போதே, ஒருபோலீஸ் சேவகன் வருகிறான்.)

போலீஸ்சேவகன்:—எந்தஊர் ஐயா நீர்? இந்த மோதிரம் ஏது உமக்கு? சற்றுமுன்பு திருட்டுப்போன நகைப்பையில் மோதிரம் ஒன்று இருந்ததாகச் சொல்லி வழக்குக் கொடுத்திருக்கிறார்கள். வாரும் சப்இன்ஸ்பெக்டர் முன்பு.

ராம:—இம்மோதிரம் என்னுடையது; என் ஊருக்குப் போகச் செலவுக்குப் பணமில்லை. அதற்காக........

போ. சே:—இந்த சமாசாரம் அதிகாரியிடம் சொல்லிக்கொள்ளும்; வாரும். (பிடித்திழுக்கிறான்.)

(வேங்கடராமன் ஒரு ரயில்வே போர்டரோடு, பெட்டி படுக்கையுடன் வருகிறான்.)

ராம:—வெங்கு! வெங்கு! (வேங்கடராமன் திரும்பிப் பார்க்கிறான்) இங்கே வா. அவசரம். (வேங்கடராமன் வருகிறான்.) வெங்கு! இந்தப் போலீஸ் சேவகன் நான் இந்த மோதிரத்தைத் திருடியிருப்பேனென்று என்னைப் போலீஸ்ஸ்டேஷனுக்கு அழைக்கிறான்; இது யாருடையது என்றுசொல்.

வேங்:—ஐயா! இந்த மோதிரம் இவர்கையில் வெகுநாளாக இருக்கிறது.

போ. சே.—அதெல்லாம் எனக்குத் தேவையில்லை. இதில் ஏதோ சந்தேக மிருக்கிறது. ஸ்டேஷனில் வந்து சப் இன்ஸ்பெக்டரிடம் சொல்லிக்கொள்ளுங்கள்.

வேங்:—இதில் என்ன சந்தேகம் வந்தது?

ராம:—என் கையிலிருந்த பணத்தை எல்லாம் குதிரைப்பந்தயத்தில் இழந்துவிட்டேன். ஊருக்குப்போகப் பணமில்லாமல் இந்த மோதிரத்தை விற்கவந்தேன். கொஞ்சநேரத்துக்கு முன்பு

இங்கே ஒருவர் நகைப்பை திருட்டுப்போனதாம். இவைகளை உத்தேசித்து இது திருட்டு நகைகளில் ஒன்று என்று சந்தேகப்படுகிறார்கள்.

வேங்:—ராமு! இதோ ரூபாய் இருபது; செலவுச்கு வைத்துக்கொள். என் வண்டிபுறப்பட இன்னும் ஐந்து நிமிஷமிருக்கிறது. நான் போய்வருகிறேன். இந்த மோதிரத்தை, நகைப்பையை இழந்தவருச்குக் காட்டுவார்கள். அவர் இது தம் பொருள் இல்லையென்றால் உன்னைப் போகச்சொல்லுவார்கள். நீ பயப்படாதே. ஏதாவது உன்பேரில் குற்றம் காட்டினால் எனச்குத் தந்திமூலமாகத் தெரிவி.

(போகிறான்.)

ராம:—(தனியாக, சேவகனுடன் போய்க்கொண்டே) வேங்கடராமனுக்குத் தீங்கிழைத்தேன். அவன் எனச்கு நன்மையைச் செய்கிறான். போலீசில் என்னை விசாரித்துப் போகச்சொன்னால் உடனே ஊர்போய் உண்மையை வெங்குவிடம் சொல்லி மன்னிப்புக் கேட்கவேண்டும்.

(போகிறான்.)

---

## காட்சி 5.

[வேங்கடராமன் வீட்டில் படுக்கையறை; இரவு 10 மணி.]

(வேங்கடராமன் ஓர் சாய்வான நாற்காலியில் படுத்துக்கொண்டு ஏதோ ஆலோசனை செய்கிறான். கல்யாணி ஒரு பச்கமாக வருகிறாள். கல்யாணியைக் கண்டதும், பாராதவன்போல் வேங்கடராமன் வெளியில் போகிறான்.)

கல்யாணி:—என்மனம் மிகுதியான பயமடைகிறது. ஊரிலிருந்து வந்ததுமுதல் என் நாதர், என்னுடன் விரும்பிப்பேசவேயில்லை. அப்படி அவர் கோபம் கொள்ளுமாறு நான் யாதொன்றும் செய்யவில்லையே! தமச்கு எழுத்துவேலை அதிகமிருப்பதாகக் கூறினார். அதற்காக நாற்காலியும் மேஜையும் போடப்பட்டிருக்கின்றன. மைக்கூடும் பேனாவும் இருக்கின்றன. ஏதோ தெரியவில்லை; சற்று உள்ளேபோயிருக்கிறேன்.

(ஓர் அறைக்குள் போகிறாள்.)

கோபு:—(பதுங்கி வருகிறான்.) மெள்ள இந்தக் கடிதத்தை மேஜையின்மேல் வைத்து விடுகிறேன். அப்பா! எவ்வளவு கஷ்டம்! யாராவது என்னைப் பார்த்துப் பிடித்துக்கொண்டால் என் கதி என்னவது? அதெற்கெல்லாம் யோசனைபண்ணிச் சாத்தி

யப்படுமோ? (தான் கொண்டுவந்த கடிதத்தை மேஜையின் மேலுள்ள ஓர் அட்டைக்கு அடியில்வைத்து விடுகிறான்.) ஏ! கல்யாணி! இன்றுடன் உன் வாழ்நாள் முடிந்துவிடும். அதைப் பார்க்கத்தான் இங்கே வந்திருக்கிறேன். என்னைக் காணுதவிதமாக எங்கேயாவது பதுங்கிக்கொள்ளுகிறேன்.

(பதுங்கிக்கொள்ளுகிறான். வேங்கடராமன் பிரவேசம்.)

வேங்.—(மேஜையின் அருகில் தன்னுடைய ரிவால்வரை வைக்கிறான். அட்டையிலிருந்து கடிதம் ஒன்றை எடுத்துப்படிக்கிறான்.) சரிதான், என் கருத்தை வலியுறுத்த இக்கடிதம் கிடைத்தது.... கோபுதான் கல்யாணிக்கு எழுதியிருக்கிறான். ஆஹா! இக்கடிதத்திலிருந்து இவர்கள் ஸ்நேகம் பாராட்டிய முறை முழுதுமன்றோ விளங்குகின்றது.... இப்படிப்பட்ட ஒருத்தியை மனைவியாகக் கொண்ட பாவம் இன்றே நீங்கும்.

(ரிவால்வரைப் பார்த்து, நாற்காலியில் அமர்ந்து யோசித்துக் கொண்டிருக்கிறான்.)

கல்யாணி:—(அறையிலிருந்து வந்து) இதென்ன! என் நாதர் வந்து நெடுநேரமாயும் என்னுடன் ஒரு வார்த்தைகூடப் பேசாதிருக்கிறார். சென்னை போய்வந்ததில் ஏதேனும் மனவருத்தம் நிகழ்ந்திருக்கலாம். அன்றியும் ஆடவர்கள் கோபமாயிருந்தாலும் வேறு மனதில் வருத்த மேற்பட்டிருந்தாலும் பெண்பிள்ளைகள் அதனைப் போக்கடிக்கவேண்டும். (புருஷன் அருகில்சென்று) நாதா!

(பேசாதிருக்கிறான்.)

கல்யாணி:—யார்பேரில் என்னகோபம்? அல்லது என்ன மனவருத்தம்? இதோ பால் ஆறிப்போகிறது.

(பால் பாத்திரத்தை எடுக்கப்போகிறாள்.)

வேங்:—அப்பா! ஸ்திரீகள் நம்பத்தகுந்தவர்களல்ல! இப்பாவி பேசுகின்றபேச்சு என்மனோதிடத்தையுமன்றோ மாற்றுகின்றது? (கல்யாணி, பாலுடன் வருகிறாள்.) யார்பேரிலும் கோபமொன்றுமில்லை; பாலை மேஜையின்மேல் வைத்துப் போ.

கல்யாணி:— ஏதோ எழுதவேண்டு மென்றீர்களே?

வேங்:—எழுதத்தான் வேண்டும்; கொஞ்சம் சிரமமாயிருக்கிறது.

கல்யாணி:—உண்மைதான். வெகுதூரம் ரயிலில் வந்த அலுப்பு. சயனித்துக்கொள்ளுங்கள். காலையில் எழுதினால் போகிறது. (படுக்கையை விரித்துப்போடுகிறாள்.)

வேங்:—(தனக்குள்) யாதொரு குற்றமும் அறியாள்போல் மிக இனிமையாயன்ருே பேசுகிருள்?...... உன் பேச்சும் சாமர்த்தியமும் இன்றுடன் முடிந்துவிடும். (கல்யாணியைப்பார்த்து) நீபோய் படுத்துக்கொள். எனக்கிப்பொழுது தூக்கம்வரவில்லை.

கல்யாணி:—நான் தங்களுடன் தங்களுக்குத் தூக்கம் வரும் வரையில் பேசிக்கொண்டிருக்கிறேன். எனக்குமட்டும் தூக்கம் வருமா? பின் தூங்கி முன் எழுதலன்ருே பெண்கள் கடமை?

வேங்:—என்னுடன் பேசவேண்டாம். நீ படுக்கச் செல்.

கல்யாணி:—(ரிவால்வரைக் கையிலெடுத்து) இதென்ன நாதா! இதெதற்கு? ஆபத்துக்கிடமாயிற்றே?

வேங்:—இது பந்தோபஸ்திற்காக. (ரிவால்வரை வாங்கிக் கொள்ளுகிருன்.) நீ சயனித்துக்கொள். அல்லது உனக்கேதாவது வேறு வேலையிருந்தால் பார். நான்போய் உலாவிவந்து படுத்துக் கொள்ளுகிறேன்.

(போகிருன்.)

கல்யாணி:—(படுக்கையின் பக்கம் போய், சுவாமியை ஸ்தோத்திரம் செய்கிருள்.) என் நாதன் கடுமொழிவழங்கி நான் ஒரு நாளு மறியேன். இன்று அவர் பேசியதைப் பார்த்தால் என்மீது ஏதோ கோபம்கொண்டிருப்பதாய்த் தெரிகிறது. இடை இடையே அவர் பேசிய சிலவார்த்தைகளால் என் கற்பின்மீது ஐயப்பாடு கொண்டிருக்கிருர் என்று தோன்றுகிறது. கடவுளே, நான் பதி சொற்கடவாத பத்தினியானல் என்னைக் காக்கவேண்டும். நான் சிறிதேனும் நெறிதவறியிருந்தால் அதோ தெரியும் வானம் இடிந்து என்தலையில் விழக்கடவது...... அவர் மேஜைமேல் ரிவால்வர் வைத்திருந்ததையும் பேசுவதையும் நோக்கின் என்னை மாய்க்கவே கருதி இருக்கலாம் எனச் சந்தேகமுண்டாகிறது... என் புருஷர் கையால் மடிவதற்கு நான் அஞ்சவில்லை. என்னைக் கொன்ற குற்றம் அவரைத் துன்புறுத்தலாகாது.... அன்றியும் நான் மாசற்றவள் என்பதை நிரூபிக்க நான் பிழைத்திருத்தலவசியம். என்ன செய்வது?.... பேசவும் இடங்கொடுக்கமாட்டே னென்கிருர். இந் நாட்டில் சிறிதேனும் உண்மையில்லாத அவதூறினல் எவ்வளவு சகோதரிகள் என்போல் தவிக்கின்ருர்களோ தெரியவில்லை.... சரிதான். ஒரு யோசனை தோன்றுகிறது. நான் முக்காடிட்டுப் படுத்திருப்பதுபோல் இத் தலையணைகளை அடுக்கிவைத்துவிட்டு, நான் ஒருபுறம் மறைந்திருந்து கவனிக்கின்றேன்.

(தலையணைகளை அடுக்கி மூடி, தான் முக்காடிட்டுப் படுத்திருப்பது போல் போட்டுமறைந்து கொள்கிருள்.)

வேங்:—(பிரவேசித்து) கல்யாணி! (கல்யாணி பேசாமலிருக்கிறாள்.) அவள் தூங்கியிருப்பாள்; மூடி அயர்ந்து தூங்குகிறாள். சமீபம் சென்று பார்த்தால், அவள் அழகுள்ள முகம் என் மனதை மாற்றிவிடும். இனித் தாமதிப்பதில் பயனில்லை. (ரிவால்வரை எடுத்து).... எல்லாக்கொலைகளிலும் கொடியது ஸ்திரீ ஹத்தி. அதிலும் என்னுடன் இன்பமாய் வாழ்ந்த மனைவியை யன்றோ கொல்லத்துணிந்திருக்கிறேன்?.... கல்யாணி! உன் துர்ச்செய்கை என் தளர்ந்த மனதைக் கல்மனமாக்கியது. உன்னையும் கொன்று என்னையும் உடனே மாய்த்துக்கொள்ளத் தீர்மானித்திருக்கிறேன். ...... இனி யோசித்தாலும் அவள் விழித்துக்கொண்டாலும் நம் காரியம் கைகூடாது.

(ரிவால்வரினால் தலையணையிற் சுடுகிறான்; பின்புறமாக வந்து
தன்பேரில் சுடத் தயார் செய்கிறான். உள்ளே யிருந்து
யாரோ ஓடுகிற சப்தம் கேட்கிறது, திரும்பிப்பார்க்கிறான்;
கோபு ஓடுகிறான்.)

இவனையும் கொன்றுவிடவேண்டும். பிறகுதான் என்னுயிரை மாய்த்துக்கொள்ள வேண்டும்.

(கோபு ஓட, பின் தொடர்ந்து ஓடுகிறான், வெளியிலிருந்து
ராமச்சந்திரன் வருகிறான்.)

ராம:—வெங்கு! அடாபாவி! யாதுசெய்தனை? கோபு செய்தசூழ்ச்சி யிது என்று உன்னிடம் சொல்லவேண்டி ஊருக்கு வந்ததும் வந்தேன். இரவில் உன்னை எழுப்பக்கூடாது என்று வாசல் திண்ணையில் படுத்திருந்தேன். அதற்குள் உன் மாசற்ற மனைவியைக் கொன்றுவிட்டாயே; இதோதான் ஓடுகிறான் கோபு.

வேங்:—அப்படியா! ஆஹா! அடே போ! பாவி கோபு! உன்னை விடுவதில்லை. உன்னையும் கொன்று, நானும் உயிர்துறந்து என் கண்மணியைக் கூடுவேன்.

(வேங்கடராமன் ஓட, ராமச்சந்திரன் பின் தொடருகிறான்.)

கல்யாணி:—பிழைத்தேன்; என் கற்பும் பிழைத்தது. அறிவினனான இந்தக் கோபுவே என் கணவர் மனத்தை மாற்றிவிட்டான்போலும். என் கணவர் கொடிய சபதம்செய்து கொண்டு சென்றிருக்கிறார். இருவர் உயிர்களையும் காப்பாற்றவேண்டும்.

(போகிறாள்.)

---

## காட்சி 6.

[இடம்: ஒரு தோட்டம்; காலம்: இரவு.]

கோபு:—நல்லவேளை தப்பினேன். (சுற்றிப் பார்த்து) ஐயோ! அதோ ஒரு டார்ச்சு வெளிச்சத்துடன் வருகிறானே; இனி ஓட மார்க்கமில்லை. சரணாகதி அடையவேண்டியதுதான்.

வேங்:— அடே! கோபு! மகாபாவி! மாசற்ற என் கண்மணி கல்யாணியை நான் கொன்ற கொலைபாதகம் உன்னையே சார்வதாக. உண்மையைக் கூறு. அல்லது இதோ பார். குண்டுபோட்டுத் தயாராயிருக்கிறது.

(ரிவால்வரைக் காட்டுகிறான்.)

ராம:—(பிரவேசித்து, வேங்கடராமன் காலில் விழுந்து) வெங்கு, முதலில் என்னை மன்னிப்பதாகச் சொல். கோபு எவ்வளவு குற்றவாளியோ, அவ்வளவு குற்றம் நானும் செய்திருக்கிறேன். உன்மனைவி யாதொரு குற்றமும் செய்தவள் அல்ல.

கல்யாணி:—(ஓடிவந்து வேங்கடராமனைப் பிடித்துக் கொண்டு) நாதா! சற்றுப் பொறுங்கள். அவசரப்படாதீர்கள். மூடத்தனமாய்ச் செய்யத்தகாததைச் செய்துவிட்டார்கள். தாங்கள் பொறுக்கத்தான் வேண்டும்.

வேங்:—(பிரமித்து) ஆ! இதென்ன! நான் கனவு காண்கிறேனா அல்லது நனவுதானா! குண்டுபட்டு இறந்த இவள் எப்படி இங்கேவந்தாள்? இவளது பிசாசுதான் போலும். கல்யாணி, உன்னை நான் கொலை செய்ததற்காகப் பிசாசு ரூபங் கொண்டு என்னை வாட்டவந்தனையோ? உன்னை அநியாயமாய்க் கொன்ற இப்பாதகன் இனி உயிர் வாழ்வது நியாயமில்லை. உன் கொலைக்குக் காரணமான இப்பாவியை மாய்த்தபின்னரே நான் மாளக் கருதி யிருக்கிறேன்.

கல்யாணி:—நாதா! நான் பிசாசல்ல. உங்கள் ரிவால்வரைக் கீழே தாழ்த்திவிடுங்கள்; நான் பிழைத்தவிதம் சொல்லுகின்றேன். (ரிவால்வரைக் கீழே தாழ்த்துகிறான்.) நாதா! தாங்கள் என்னிடம் விரும்பிப் பேசாமையால் தாங்கள் என்மீது கோபங்கொண்டிருக்கிறீர்கள் என்பதை அறிந்து கொண்டேன். மேஜையிலிருந்த ரிவால்வர் என் மரணத்தை அறிவுறுத்தியது. உடனே இரண்டு தலையணைகளை நான் போர்த்துப் படுத்திருப்பதுபோல் அமைத்து விட்டுக் கட்டிலின் கீழ்ப்பக்கம் பதுங்கிக் கொண்டேன். ரிவால்வரின் குண்டு என்மேல் படவில்லை.

**வேங்:**—கண்மணி! உன் அறிவு ஒருபுற மிருக்கட்டும். உன் கற்பே உன்னைக் காத்தது. கற்புடையமாதருக்கு இயலாத செய லொன்று முண்டோ? உன்கற்பே என் மரணத்தையும், இவனைச் சுடுவதால் படும் துன்பத்தையும் நீக்கிக் காத்தது.

**கோபு:**—வெங்கு! இந்த உத்தமியின் கற்புத்தான் என்னையும் காத்தது. நான்செய்த செயலுக்கு எனக்கு மரணமே ஏற்ற தண்டனை, உனக்குப் பொய்க்கடிதம் எழுதியவன் நானே. வீணில் கல்யாணியின்மேல் பழிசுமத்தினவன் நானே. என்னைக் காப்பாற்றி னாலும் சரி; அல்லது உன் கைக்குண்டுக்கு இரையாக்கினாலும் சரி.

(தாழ்ந்து நிற்கிறான்,)

**மங்கம்மாள்**—(அவசரமாக வருகிறாள்.) என்னடா வெங்கு? ஆத்தில் ஒரு பெரியவளிருக்கிறாள் என்றும் நினைக்காமல் இவ் வளவு தடபுடல் செய்துவிட்டாயே? என்னைக் கேட்கக்கூடாதோ? நீ குழந்தையைச் சுட்டு இருந்தால் என்ன கதியாகிறது? குடும் பமே அதோகதியாகுமே?

**வேங்:**—ஈசனருளால் ஒன்றும் நடக்கவில்லை. பதறாதே, இதோ கோபுவைப்பார். இவன்தான் இதெற்கெல்லாம் காரணம்.

**மங்கம்மாள்**—கோபு! (கோபத்துடன்) நீயும் பிள்ளையென்று பிறந்தாயே!

**கல்யாணி:**—அத்தை! கோபியாதேயுங்கள். அத்தான், நீ எனக்கு எவ்வளவு துன்பந் தந்தவனாயினும் கடைசியில் என்னைக் காத்தவனும் நீயே ஆகிறாய். வருந்தாதே. நாதா! இவனைத் தாங் கள் மனபூர்வமாக மன்னிக்கவேண்டும்.

**வேங்:**—கண்மணி! உன்னைப்போலுள்ள உத்தமப்பெண்கள் வேறு எங்கே கிடைப்பார்கள்? கல்யாணி! நான் யோசனையின்றிச் செய்த அக்கிரமங்களுக்கு என்னைத் தயைசெய்து மன்னிப்பாயாக.

**கல்யாணி:**—நாதா! தாங்கள் சிறிதும் வருந்தவேண்டாம். எல்லாம் ஈசன்செயல். நாதா! (ராமச்சந்திரனைப்பார்த்து) இவர் இந்த விஷயத்தில் சம்பந்தப்பட்டது எப்படி?

**வேங்:**—கண்ணே! என் தோழன் கோபுவின் தூண்டுதலால் உன்னைப்பற்றி அவதூறு கூறியவன் இவன்.

**கல்யாணி:**— ஏன் அவதூறு கூறியவர் என்கிறீர்கள். என் கற்பை நிலைபெறச்செய்தவர் என்று கூறுங்கள். ஒருவரும் வேண் டாம். எல்லாம் நலமாகவே முடிந்தது. வீடுசென்று கடவுளைத் தொழுவோம் வாருங்கள்.

(போகிறார்கள்.)

**(முற்றும்.)**

# கௌரவ நாசம்

பே. கோ. சுந்தர ராஜன்

---

லக்ஷ்மியின் கண்களில் நீர் ததும்பியது. இமைகளின் ஓரத்தில் முத்துப்போல் விளங்கிய நீர்த்துளிகள், ஊஞ்சற்பலகை அசையவும், அவளது கன்னங்களில் விழுந்து சுடுநீர்ச் சிற்றருவியைப் போல் கீழே பாய்ந்தன.

அச்சமயம் இரண்டு சிறுமிகள் ஓடிவந்து அப்பெண்ணை நோக்கி, "என்னடி லக்ஷ்மீ! ஏண்டி அழறே? வண்டிவந்தூட்டதே! எல்லாரும் அப்பவே ஆத்தங்கரைக்குப் போய் விட்டார்களே! அழுதழுது புதுப்புடவையைக் கெடுத்துக் கொள்றயே" என்றனர்.

லக்ஷ்மியோ இதற்குப் பதிலளிக்காது தன் வருத்தத்தைக் காட்டாது சிரிக்கமுயன்றவாறு ஊஞ்சலை விட்டிறங்கினள். பலகையும் சங்கிலியும் அவ்வழகியபெண் தம்மை விட்டு நீங்கியதைச் சகிக்காதவைபோல் 'கீச்'சென ஒலித்தன.

தெருவில் பல வண்டிகள் நகர்ந்துகொண்டிருந்தன. மாதரும் கட்டுச்சாத மூட்டையுடன் ஊருக்கு ஒருமைல் தூரத்திலுள்ள நதியை நோக்கிப் போய்க்கொண்டிருந்தனர். அன்றே ஆடித்திங்களின் பதினெட்டாவது புனிதநாள்.

லக்ஷ்மி ஆற்றை அடைந்தபோது அங்கே புது ஆடைகள் அணிந்த சிறுமிகள் களிப்புடன் ஒருவரோடொருவர் விளையாடி மகிழ்ந்து கொண்டிருந்தனர். சிலர் ஆற்று மணலில் ஓடியாடினர். மற்றுஞ் சிலர் ஸ்படிகம் போன்ற அந்நதி நீரை வாரித்தெளித்து விளையாடினர். வயது முதிர்ந்த மாதர் படிகளில் இலைகளை விரித்துச் சிற்றுண்டி பரிமாறினர். லக்ஷ்மி வண்டியை விட்டிறங்கினதும் அவளுடைய தோழிகள் ஆனந்தத்துடன் அவளை யணுகி, "நல்லவேளை வந்துவிட்டாள்! ஏன், நீ வரமாட்டாயென்று உங்கள் அம்மா சொன்னளே?" என்று ஏக காலத்தில் கூவினர்.

லக்ஷ்மி பெருமூச்செறிந்து சிறுமுறுவல் பூத்தாள். அப்பெண்கள் தன்னைச் சூழ அவள் ஒரு பெருங்கல்லின்மேல்

அமர்ந்து ஆற்றில் உணவருந்துவோரைப் பார்த்துக்கொண்டிருந்தாள். தன்னுடைய சிநேகிதிகள் கேட்கும் பிடிவாதமான கேள்விகளுக்கு அவள் சரியான பதில் கூறவில்லை. அவளுடைய முகம் மலர்ச்சியற்றுக் கவலையுற்றிருந்தது. அந்தி வெளிச்சம் இருட்டிற்கிடங்கொடுக்க ஆரம்பித்தது.

தாமரை இலை நீர்த்துளியைப் போன்றது பெண்மை. லக்ஷ்மியின் தோழிகள் அவளிடம் அதிக அன்பு கொண்டவர்களான போதிலும் அவளது களிப்பின்மையை விரும்பாது ஒவ்வொருவராய் அவளை விட்டு நீங்கினர். ஓடும் நீரில்நின்று உணவருந்தும் மாதர்களில் சிலர் லக்ஷ்மியைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தனர். ஒரு பருத்த ஸ்திரீ தன் வாய்நிறையத் தயிர்ஞ்சாதத்தை அடக்கிக்கொண்டே, “பாவம்! லக்ஷ்மி! ஆனால் அவள் ஏன் எப்பொழுதும் இப்படிக் கவலையோடே யிருக்கவேணும். அவர்கள் தன்னாலே நாளைக்கே வந்து மன்னிப்புக் கேட்டுக்கொள்ளப் போகிறார்கள்” என்றாள்.

மற்றொரு மாது, “அது ஒருநாளும் நடக்காதடியம்மா! மாப்பிள்ளை வீட்டுக்காரர் வெகு கர்வம் பிடித்தவர்களாச்சே! அவர்கள் கொஞ்சத்திலே ராஜியாகமாட்டார்களே! என்னதான் இருக்கட்டும். லக்ஷ்மியின் தாய்தகப்பனார்.........” என்று ஏதோ சொல்ல வாயெடுத்தவள் ஒருவயது முதிர்ந்த ஸ்திரீ கையில் கிண்ணத்துடன் அவ்விடத்தை அடைந்ததைப் பார்த்தும் தன் பேச்சை நிறுத்திவிட்டாள்.

அவர்களுக்கு ஊறுகாய் வேண்டுமோ என்று கேட்கவந்த அந்தஸ்திரீ அவர்களுடைய முகக்குறிகளிலிருந்தே அவர்கள் யாரைப்பற்றிப் பேசிக்கொண் டிருந்தார்களென்பதை உணர்ந்தாள். உடனே அவள் கரைப்பக்கம் நோக்கி, “லக்ஷ்மி! அங்கே தனியாய் என்ன செய்கிறாய்? ஏதாவது சாப்பிடுகிறதுதானே!” என்று கூப்பிட்டாள்.

“இல்லை அம்மா! ஒன்றும் வேண்டாம்; எனக்குப் பசிக்கவில்லை” என்று லக்ஷ்மி மெல்லிய குரலில் பதிலளித்தாள். லக்ஷ்மியின் தாயார் தன் உதட்டைக் கடித்தவண்ணம் தனது மற்றக்குழந்தைகள் சாப்பிட்டுக் கொண்டிருந்த இடத்தை அடைந்தாள்.

உடனே முன்பேசிக் கொண்டிருந்த ஸ்திரீகள் தமது வம்பை மீண்டும் தொடங்கினர். ஆனால் லக்ஷ்மியோ மற்றவர்கள் மகிழ்ச்சியுடன் காலங்கழித்துக் கொண்டிருந்ததை சிறிதும் கருதவில்லை. முன்னொருநாள் தன் கணவன் தன் கழுத்தில் மங்கல சூத்திரம் அணிவித்ததைப்பற்றியே அவள் நினைத்துக்கொண்

டிருந்தாள். தன் வீட்டில் ஊஞ்சலில் அமர்ந்திருந்தபோதும் அவள் தனது விவாகவைபவத்தைப் பற்றித்தான் கனவு கண்டு கொண்டிருந்தாள். மணப்பந்தலில் கணவனுடன் ஊஞ்சலாடிய காட்சியை நினைத்துக்கொண்டிருந்தபோதுதான் அவளுடைய சிறுசகோதரிகள் தோன்றி அவளுடைய கனவைக் கலைத்தனர். இப்பொழுதோ நதி நடுவே நகைத்து நட்பாடும் பெண்களின் பேச்சுக்கள் அவளது கலியாணத்தை அவளுக்கு மீண்டும் நினைப்பூட்டின. சிறு பெண்கள் தன்னைச் சூழ்ந்து பாடிப் பரிகசித்த தெல்லாம் அவள்முன் தோன்றின. கலியாணம் நடந்து நான்கு வருஷங்கள் கழிந்துவிட்டன. ஆனால் லக்ஷ்மி அதன்பிறகு தன் கணவனைப் பார்க்கவேயில்லை.

விவாகங்களில் தவறாது தோன்றும் சிறு மனஸ்தாபங்களி லொன்று லக்ஷ்மியின் விஷயத்தில் விபரீதமாக முடிந்தது. மணம் நடந்த ஆறாவது மாதம் லக்ஷ்மியின் மாமனார் அகத்திலிருந்து ஓர் அழைப்புக் கடிதம் வந்தது. அவளுடைய நாத்தனாரின் வளைகாப்பு முகூர்த்தத்திற்கு வீட்டு நாட்டுப் பெண் வரவேண்டுமென்று அவர்கள் விரும்பினர். ஆனால் லக்ஷ்மியின் தாயார் அச்சமயத்தில் அதிக தேகஅசௌக்யமாயிருந்ததால் லக்ஷ்மி போகமுடியவில்லை. லக்ஷ்மி வராமலிருந்தது பெரிய அவமரியாதை என்று அவளது மாமியார் கருதினாள். பழிக்குப் பழி வாங்க அவர்களுக்குச் சமயமும் வாய்த்தது. ஆனால் அவர்கள் வரம்பு கடந்தனர்.

பதினெட்டு மாதங்களுக்கு முன் லக்ஷ்மி பருவமடைந்தாள். இச்சுப செய்தியை லக்ஷ்மியின் பெற்றோர் தம் சம்பந்திகளுக்கு விரைவில் அறிவித்தனர். இரண்டு நாட்கள் களிப்புடன் அவர்களை எதிர்பார்த்தனர். மூன்று, நான்குநாட்கள்.... ஒருவாரமாயிற்று. வரவில்லை; கடிதமும் வரவில்லை. அவர்களது கோபத்தைத் தணிக்க லக்ஷ்மியின் பெற்றோர்கள் பல கடிதங்கள் எழுதியும் பதில் இல்லை. தம்மாலான மட்டும் முயன்றும் பயனில்லாது போகவே லக்ஷ்மி வீட்டில் பகவான்மீது பாரத்தைப் போட்டு வருத்தத்துடன் வாளாவிருந்தனள். ஆனால் வதந்தி மாத்திரம் வளர்ந்தது. வம்பர்கள் லக்ஷ்மியின் பெற்றோர்கள் அகம்பாவம் பிடித்தவர்களென்று பலவாறு பேசிய வார்த்தைகள் அப்பெண்ணின் புக்ககத்தார் காதில்விழ, அவர்கள் பெண்வீட்டாரை விடத் தங்களுக்கு அதிக கௌரவமுண்டென்று தம்மைத் தாமே பாராட்டிக் கொண்டனர். ஆகவே இருதிறத்தாரும் தத்தம்

கௌரவத்தை இழக்க மனமில்லாமல் மௌனம் சாதித்து மோசம் போயினர்.

ஆறுமாதங்களுக்குமுன் உலாவிய ஒரு வதந்தியைக் கேட்டு லக்ஷ்மியின் பெற்றோர் திடுக்கிட்டனர். லக்ஷ்மியின் கணவன் வேறு விவாகம் செய்துகொள்ளப் போவதாக ஆதாரமற்ற செய்தியொன்று கிடைத்தது. அதில் உண்மையிருக்காதென்று தெரிந்தும் லக்ஷ்மியின் பெற்றோர் பெருங்கவலைக் காளாயினர். கடிதங்களுக்குப் பதில் கிடைக்காததனால் மீண்டும் வீணாக எழுதத் தயங்கினர். முன்பே லக்ஷ்மியின் சாந்திமுகூர்த்தத்திற்கு ஏற்பாடு செய்வதைப் பற்றி அவர்கள் எழுதியதை மாப்பிள்ளை வீட்டார் காதில் போட்டுக் கொள்ளவில்லை. கடைசியில் அன்றைக்கு முந்திய நாள்தான் அவர்கள் இருதிறத்தாருக்கும் பந்துவான ஒரு பெரியவரை அனுப்பி யிருந்தனர்.

இருள் அதிகரித்தது. விதிசெல்லும் வழியைச் சிந்திக்க லக்ஷ்மிக்குச் சகிக்கவில்லை. மணம் முடிந்தும் மகிழ்ச்சியில்லாது அவள் இவ்வாறு வருந்த நேர்ந்தது. இரண்டுநாட்களுக்குமுன், தான் தன் கணவனுக்கெழுதிய கடிதத்தைப்பற்றி நினைத்துக் கொண்டிருந்தாள். அந்நினைவுடன் அவளது கண்களில் அவளது மனோதிடத்தைக் குறிப்பிடும் ஒளி தோன்றியது. தனது கண்ணீரைத் துடைத்துக்கொண்டு மெதுவாக எழுந்து ஆற்றோரத்திலிருந்த ஒரு தோப்பினுட் சென்றாள்.

* * * *

அன்று காலை லக்ஷ்மியின் கணவன் ராஜகோபாலன் வீட்டில் அவனது தந்தை மத்தியஸ்தத்திற்காக வந்தவரை நோக்கிப் பின்வருமாறு கர்ஜித்தார்.

"என்ன ஐயா! எங்களுடைய மரியாதையையும் மதிப்பையும் விட்டுவிட்டு நாங்கள் இவர்களோடு பேசவேண்டுமென்று சொல்கிறீர்? நாங்கள் அழைத்தபோது பெண்ணை அனுப்பாமல் அவமதித்ததற்கு மன்னிப்புக் கேட்கவேண்டுமென்ற எண்ணம் அவர்களுக்குக் கொஞ்சமு மில்லை. எங்களை உதாசீனப்படுத்தலாமென்று அவர்கள் நினைத்துக்கொண்டிருக்கிறார்கள்!"

"ஆனால் இந்தமாதிரி இப்பொழுது ஒருவருக்கொருவர் பேச்சில்லாமலிருப்பதற்கு அவர்கள் ஜவாப்தாரிகளல்லவே? அவர்களுக்காகப் பரிந்து பேசுகிறேனென்று நினைக்கவேண்டாம். இந்த மனஸ்தாபம் தீரவேண்டுமென்பதுதான் எனது விருப்பம். இரண்டு வீட்டாரும் எனக்கு வேண்டியவர்களே. உங்களுடைய பையனுக்கு இரண்டாவது விவாகம் செய்யப் போவ

தாகச் சொல்லிக் கொள்கிறார்கள். இது நியாயமா? உங்களுடைய பெயரையாவது காப்பாற்றிக் கொள்ளவேண்டாமா?" என்று அப்பெரியவர் சாந்தமாகவே மறுமொழி கூறினார்.

உடனே அங்கிருந்த ராஜகோபாலன் கடுஞ்சினத்தால் முகம் சிவக்க, "அது முழுப்பொய்! நான் இரண்டாவது கலியாணம் செய்துகொள்ளப்போகிறேனென்று உமக்கு யார் சொன்னது? இதோபாருங்கள்! இதுவரை நான் என் பெற்றோர்மேல் கோபமாயிருந்தேன். இப்பொழுதுதான் உண்மை தெரிகிறது. இந்த வதந்தியை என் மாமனாரே வேண்டுமென்று பரப்பியிருக்கிறார். அவர் இன்னும் என்ன வேண்டுமானாலும் செய்வார் போலிருக்கிறது" என்று உரக்கக் கூறினான்.

"என்ன ராஜு! நீகூட இப்படிப் பேசுகிறாய்! வாஸ்தவத்தில் ........" அப்பெரியவர் மேலும் கூறுமுன் தபால்காரன் ஒரு கடிதம் கொண்டுவந்து கொடுக்க, ராஜு அதைத் திறந்து பார்த்தான். அவன் அதைப் படிக்கும்போது அவன் முகத்தில் அடங்காக் கோபமும் ஏமாற்றமும் கலவரமும் மாறி மாறித் தோன்றின. கடிதம் லக்ஷ்மியிடத்திலிருந்து வந்ததென்று மாத்திரம் சொல்லிவிட்டு, அவன் மேலும் படித்துக்கொண்டிருக்கும்போது,

"என்ன தைரியமடி அந்தப் பெண்ணுக்கு!" என்றாள் ஒரு பாட்டி.

"ஐயோ கடவுளே!" என்று அலறிக் கொண்டே ராஜகோபாலன் கடிதத்தைக் கீழே எறிந்து விட்டு வெளியே விரைந்தோடினான். பெரியவர் கடிதத்தை எடுத்துப்பார்த்தார். உடனே "ஈச்வரா இதென்ன விபரீதமாயிருக்கிறது"! என்று சொல்லிக் கொண்டே கடிதத்தைப் பின்வருமாறு படித்தார்:

"........நான் இவ்வளவு சொல்லியும் எங்களுடைய நிரபராதத்தன்மையில் உங்களுக்கு நம்பிக்கை ஏற்படாவிட்டால் எனக்கு ஒரே வழிதான் தோன்றுகிறது. உங்களுடைய மனக் கவலைக்குக் காரணமாக இருக்க எனக்குச் சகிக்கவில்லை. நான் உங்களுக்குச் சந்தோஷ மளிப்பதற்குப் பதிலாக துக்கமும் மனஸ் தாபமுமே கொண்டுவந்தது இப்பொழுதுதான் தெரிகிறது. நான் எனக்காக வருத்தப்படவில்லை. என் தலைவிதி என்னை விடாது. என்னுடைய பெற்றோர்களின் துயரத்தையும் உங்களுடைய பெற்றோர்களின் அதிருப்தியையும்பற்றி நினைக்க என்னால் பொறுக்க முடியவில்லை. நீங்கள் இந்தக்கடிதத்தைப் பார்க்கும் சமயத்தில் நான் துயரம் மிகுந்த இவ்வாழ்க்கையை விட்டு நீங்கிவிட்டால் உங்களுக்கு நம்பிக்கை ஏற்படவேண்டுமென்ற எண்ணத்தினாலும்,

உங்களுக்கு இனிமேலாவது சுகம் கிடைக்கட்டுமென்ற நினைவினாலும் அப்படிச் செய்திருப்பேனேயன்றி என்னுடைய விவாகத்தினால் எனக்குச் சந்தோஷம் கிடைக்காமல் போனதற்காகவல்ல.

இருந்தாலும் இறந்தாலும் உங்களன்புள்ள,

லக்ஷ்மி.''

இதைக்கேட்டதும் அங்கிருந்தவர்களெல்லோரும் உயிரற்றவர்போலாயினர். சிறிது நேரம் ஒரே நிச்சப்தமாயிருந்தது. அப் பெரியவர் கையிலிருந்த கடிதம் நழுவிக் கீழே விழுந்தது.

* * * *

ராஜகோபாலன் சிரமத்துடன் தன்னை மீறிக்கொண்டு வந்த அழுகையை அடக்க முயன்றான். தன்மனைவியின் ஊரை நோக்கி ரயில்வண்டி பறந்தோட அவன் இருதயம் 'படபட' வென்று அடித்துக்கொண்டது. எதிர் முகம் நோக்கி விரைந்து மறையும் சுற்றுப்புறக் காட்சிகளை அவன் சிறிதும் கருதவில்லை. தான் ஊர் போய்ச் சேருமுன் என்ன விபரீதம் நேர்ந்திருக்குமோ என்ற எண்ணத்தை அவனால் மறக்கமுடியவில்லை. ஒரு தனி மனிதனின் துயரத்தைச் சிறிதும் உணராத வண்டித்தொடர் வழக்கம்போல் சென்றது.

* * * *

பாத்திரங்கள் கழுவப்படும் ஓசையின் நடுவே பதினெட்டாம் பெருக்குக் கொண்டாடிய பெண்கள் ஒவ்வொருவராய் ஆற்றை விட்டுக் கரையேறினர். விரைவுடன் இருள்கவிழ்ந்தது. வான வெளியில் விண்மீன்கள் மின்னின. ஒருவரையொருவர் கூப்பிடும் குரல்களுக்கிடையில் ஒருகுரல் மாத்திரம் கவலையுற்ற தொனியுடன் மீண்டும் மீண்டும் ஒலித்தது.

"லக்ஷ்மி! லக்ஷ்மி! எங்கே யம்மா இருக்கே?'' என்று அவளுடைய தாயார் கூவினாள்.

"அவள் வண்டியிலேறிவிட்டாள் போலிருக்கே'' என்றாள் ஒருத்தி.

"அவளை வண்டியில் காணோமே!'' என்று திடீரென மற்றொருத்தி கூறினாள்.

"ஆனால் எங்கேதான் போயிருப்பாள்? அதுக்குள்ளே ஆத்துக்குப் போயிருப்பாளா என்ன?'' என்றாள் வேறொருத்தி.

பயத்துடன் எல்லோரும் சுற்றுமுற்றும் தேடினர். நதிக்கரைத் தோப்பிற்குள் ஒரு ஒற்றையடிப்பாதை சென்றது. லக்ஷ்மியின் தாயாரும் மற்றும் சிலரும் லக்ஷ்மியைக் கூப்பிட்டுக் கொண்டே

அவ்வழி சென்றனர். சிறிது தூரத்தில் ஒரு மூங்கில் மரத்தின் வேர்களில் ஏதோ சிக்கிக்கொண்டிருப்பதை அவர்கள் பார்த்தனர். அது லக்ஷ்மியின் புடைவைத்தலைப்பென்று தெரிந்ததும் அந்த ஸ்திரீகள் ஓடிச் சென்று நோக்கினர். அந்தோ! லக்ஷ்மி தண்ணீரில் மூழ்கியவண்ணமிருந்ததைக் கண்டனர். அவளது முகத்தில் புன் முறுவல் புலப்பட்டது. லக்ஷ்மியின் தாயார் "ஐயோ!" என்று அலறத்தொடங்கினாள்.

இதற்குள் லக்ஷ்மி மறைந்த செய்தி பரவ அருகே கோயிலி லிருந்த சிலபுருஷர்கள் வந்து சேர்ந்தனர். அவர்களுடைய உதவி யால் லக்ஷ்மி கோயிலுக்குள் எடுத்துச் செல்லப்பட்டாள். அவள் மூர்ச்சை யடைந்தாள் என்னும் செய்தியைக் கேட்டு அவளுடைய தாயாருக்குத் தேறுதலுண்டாகவில்லை. அவளுடைய பிரலாபத் துடன் மற்றும் சிலரும் சேர்ந்து கொண்டனர். சிறிது நேரத் திற்குமுன் சந்தோஷம் நிறைந்து விளங்கிய அவ்விடத்தில் அப் பொழுது அழுகைக்குரலே கேட்டது. இரண்டொரு மாதர்கள் லக்ஷ்மியின் மூர்ச்சையை மீட்க முயன்றனர். அவளுடைய அழகிய தோளில் மூங்கில் முள்ளினால் ஏற்பட்ட சிறிய காயம் தோன் றியது. புடைவையும் சிறிது கிழிந்து அவளுடைய வனப்புமிக்க தேகத்தைத் தோற்றுவித்தது. எல்லோரும் அதிகபயத்துடனும் ஏக்கத்துடனும் அவளையே உற்று நோக்கிக்கொண்டிருந்தனர்.

லக்ஷ்மி மெதுவாகத் தன்கண்களைத் திறந்தாள். உடனே "லக்ஷ்மி! லக்ஷ்மி! இங்கே பாரம்மா! நான்தான் அம்மா! என் கண்ணே! ஏனப்படிச் செய்தாய்? லக்ஷ்மி! பேசமாட்டாயா?" என்று அவள் தாயார் அன்பும் துக்கமும் மேலிடக் கூறினாள்.

திடீரென அவ்விடத்தில் அதிர்ச்சி மிகுந்த ஒரு குரல் கிளம்பி யது. மறுநிமிஷம், "எங்கே லக்ஷ்மி? உயிருடனிருக்கிறாளா? ஆ! தெய்வமே! நல்லவேளை!" என்று கூவிக்கொண்டே ராஜகோபா லன் வெளுத்து வியர்வை நிரம்பிய முகத்துடன் அக்கூட்டத் திடைதோன்றினான். சுற்றிலும் கூடியிருந்த ஸ்திரீகளைச் சற்றுங் கவனியாது அவன் விரைந்து லக்ஷ்மியின் அருகடைந்து அவளது கைகளைப்பற்றினான். லக்ஷ்மி மெதுவாய்த் திரும்பி அவனை நோக்கி னாள். உடனே நாணத்தால் அவள் முகம் சிவந்தது. எழ முயன் றாள். முடியவில்லை. ராஜகோபாலன் அவளைத் தன்மீது சார்த்தி அணைத்தவண்ணம் வண்டியை நோக்கி மெல்ல நடத்திச் சென்றான்.

"இதென்ன அதிசயமடி?" என்றாள் ஒரு கிழவி.

இரண்டு நாட்களுக்குப் பிறகு லக்ஷ்மி ஊஞ்சலில் படுத்துக் கொண்டிருந்தாள். ராஜகோபாலன் அவ்விடம் வரவும் விரைந்து எழுந்தாள்.

"லக்ஷ்மி! வேண்டாம். உன்னால் முடியாது. பேசாமல்படுத்துக் கொள்" என்று அவன் கூறியும் லக்ஷ்மி எழுந்து உட்கார்ந்தாள். ராஜகோபாலன் அவளருகில் அமர்ந்து அவளது கைகளைப் பிடித்துக்கொண்டு ஒரு கடிதத்தை அவளுக்குக் காண்பித்து, "இது என்ன தெரியுமா? அப்பாவிடமிருந்து வந்திருக்கிறது. இன்றைக்குச் சாயங்காலம் எல்லாரும் இங்கே வருகிறார்களாம்" என்று களிப்புடன் தெரிவித்தான்.

தன்னுடைய சந்தோஷத்தை அறிவிப்பதுபோன்று ஊஞ்சலும் 'கீச்'சென ஒலித்தது. பலகை அசையவும் லக்ஷ்மியின் கண்களிலிருந்து ஆனந்தக்கண்ணீர் ததும்பிப் பாய்ந்தது.

---

## ருஷ்யாவும் புத்தகாலயமும்

'இராஜ்ய அமைப்பும் புத்தகாலய இயக்கமும்' என்னும் தலைப்பின்கீழ் 'தென்னிந்திய உபாத்தியாயர்' (*South Indian Teacher*) என்னும் ஆங்கிலப்பத்திரிகையின் ஜூன் மாதத்திய இதழில் சென்னைச்சருவகலா சாலைப்புத்தகசாலைத்தலைவர் ஸ்ரீமான் எஸ். ஆர். ரங்கநாதனவர்கள். எம். ஏ., எல். டி., எப். எல். ஏ. ஒருகட்டுரை எழுதியுள்ளார். அதிற்காணப்படும் சிலசெய்திகள் வருமாறு:

ருஷ்யாவில் புத்தகாலய இயக்கம் 1919-இல் தொடங்கப்பட்டது. அப்பொழுது நூற்றுக்கு 80 பேர்கள் எழுதப்படிக்கத் தெரியாதவர்களாக இருந்தனர். 1933-34க்குள் ஒவ்வொருவரும் வாசித்திருக்கும் நிலையை உண்டாக்க வேண்டுமென்று அரசியலார் உறுதிகொண்டனர். அந்நிலையை உண்டாகுதற்கு முக்கிய உதவியாகப் புத்தகாலயங்கள் மேற்கொள்ளப் பட்டன. பொதுமக்களுக்குப் பயன்படும் புத்தகாலயங்கள் இப்பொழுது பல்கிவருகின்றன. 1911-ஆம் வருஷத்தில் 90-லட்சம் புத்தகங்கள் பொதுப் புத்தகசாலைகளில் இருந்தன; 1934-இல் பன்னிரண்டுகோடியே நாற்பது லட்சம் புத்தகங்களாயின. 1926-இல் புத்தகம் வாசிப்போர் தொகை லட்சத்து இருபதினாயிரமாக இருந்தது. 1932-ஆம் வருஷத்தில் அத்தொகை ஒன்றரைக் கோடியாக உயர்ந்தது. இவ்வளவு உயர்வுக்கும் காரணம் ருஷ்யாவில் உள்ள ஊக்கமேயாகும். ஆயினும் இவ்வளவோடு ருஷ்யாவின் தலைவர்கள் திருப்தியுறவில்லை. இன்னும் கிராமப்புத்தக சாலைகளிற் பலவகையான குறைகளிருப்பதாகவும் அவற்றை நீக்கமுற்படவேண்டுமென்றும் அவர்கள் தீர்மானித்துள்ளார்கள். அக்குறைகளை நீக்குவதற்குப் பலமுறைகளை அவர்கள் மேற்கொண்டுள்ளார்கள். குடியானவர்களுக்கும் வயல்வேலை செய்பவர்களுக்கும் கைத்தொழிலாளிக்கும் புத்தகசாலைகள் அமைக்கப்படுகின்றன. குழந்தைகளுக்காகப் பலபுத்தகாலயங்கள் ஏற்பட்டிருக்கின்றன. புத்தகாலயத்தைப் பற்றிய கல்வியைக் கற்பிக்கத் தனிப்பள்ளிக்கூடங்கள் இருக்கின்றன. புத்தக பரிபாலகர்களுக்காகப் பரீட்சைகளும் உயர்தரக் கலாசாலைகளும் உள்ளன.

# வைகுண்ட பஸ் சர்விஸ்

ஜனரத்னம்

---

அன்று வீட்டில் பெரிய சமாராதனை நடந்தது. ஸர் சாம்ப சிவம் தம்முடைய நண்பர் ஒருவருக்குத் திவான்பகதூர் பட்டம் கிடைத்ததற்காக விருந்து நடத்தினர். பிரதம விருந்தாளியாகிய திவான்பகதூர் ராமசேஷ பந்துலுவைச் சுற்றிலும் பலர் உட்கார்ந் தார்கள். ஆகாய விமானத்தில் பறந்து செல்வதைப் பற்றிச் சம்பாஷணை திரும்பியது. ராவ்சாஹிப் சுப்ரமணியம், "என் ஆயுஸ்காலத்திற்குள் ஒருதடவையாவது ஏறிவிடவேண்டும் என்று ஆசையாக இருக்கிறது. ஆனல் பயமாக இருக்கிறது. வயசு ஆகிவிட்டது அல்லவா?" என்ருர். "இது என்ன இப்படிப் பயப் படுகிறீர்களே! நேற்று நான் பத்து ரூபாய் கொடுத்து ஒரு சுற்றுச் சுற்றிவந்தேன். அதெல்லாம் ஒன்றும் பயமில்லை" என்ருர் கவி சிகாமணியான வக்கீல் கோதண்டராம். அச்சமயம் ராமசாமி, "பெரியப்பா!" என்று கூப்பிட்டுக்கொண்டு வந்தான். உடனே ஸர் சாம்பசிவம், "ஏன் ராமசாமி? இங்கே வா; ஸார்! இவன் கோச் வண்டியிலேயே வானவில்மீது சவாரி செய்து அமராவதி, அளகா புரி, பிருமலோகம் எல்லாம் போய்ப் பார்த்து வந்து விட்டான்" என்று அவனை எல்லார் முன்னிலும் பரிகாசம் செய்தார். உடனே ராவ்சாஹிப், "என்ன ஸார்! சிறுவன் ஏதோ மனே ராஜ்யக்கோட்டை கட்டினல் அதைப் பிரமாதப்படுத்தி அப் போதும் பரிகாசம் செய்வதுதானு உமக்கு! உமக்குக் கல்பனுசக் தியே கொஞ்சமும் கிடையாதா?" என்று சிரித்தார். ஸர் சாம்ப சிவம் முகத்தைச் சுளித்துக்கொண்டு, "இவனைத் திருச்சிராப்பள் ளிக்கு அனுப்பிவிடுகிறேன். அங்கே கல்பனுசக்தியைக் காட்டட் டும். எங்கே ராமசாமி நீ கட்டிய கவியைச் சொல். உன் கல்பனு சக்தியை இவர் பரீட்சை செய்யட்டும்" என்ருர். உடனே ராம சாமியும் ஏதோ ஒரு நோட் புத்தகத்தைக் கொணர்ந்து தான் எழுதியிருந்ததை வாசித்தான்.

"பேஷ் நன்ருக இருக்கிறது. ஏன் அழுகிருய்?"

"அங்கே அளகாபுரியில் நான் சொன்னபோது ஒருவரும் பரிகாசம் செய்யவில்லை. இப்போது இது நன்றாக இல்லை."

"என்ன! இந்தப்பாட்டு நீ உண்டாக்கியதா?"

"ஆம். அங்கே எல்லாரும் பாட்டாகவேதான் பேசினார்கள்."

"வாஸ்தவம்! நான் நம்புகிறேன்."

"நம்புகிறீர்களா? மாமா! நிசமாகவா? நாம் புறப்பட்டு அவர்களைப் போய்ப்பார்க்கலாம்" என்று ராமசாமி குதித்தான்.

"சீச்சீ! நான் அப்படி சொல்லவில்லை" என்று ராவ்சாஹிப் தயங்கினார்.

"மாமா! நான் சொல்வது உண்மை. இருட்டான மலை மீது ஜோதியான வெளிச்சம் காணப்பட்டது. நான் பார்த்தேன். அந்த அரண்மனையில் கம்பர், காளிதாசர் எல்லாரும் என்னை இருக்கும்படி சொன்னார்கள் ஆனால்...."

"எனக்குக் கொஞ்சம் சிரமமாக இருக்கிறது. வெளியே தாழ்வாரத்தில் சோபாவில் சாய்ந்து கொள்கிறேன். இவர்கள் எல்லாரும் உனது பேச்சைக் கவனிக்கவில்லை. சீட்டு ஆட்டத்தில் புகுந்து விட்டார்கள். உன்கதையை அவ்விடம் சொல்" என்று ராவ்சாஹிப் எழுந்து ராமசாமியை அழைத்துக்கொண்டு வெளித் தாழ்வாரத்துக்கு வந்து சோபாவில் உட்கார்ந்தார்.

"கேளுங்கள். மாமா! அங்கே இருந்து விடுவேன். ஆனால் உங்கள் எல்லாரையும் பற்றிய நினைவுவந்தது. உங்களையும் இட்டுக்கொண்டு போகவேண்டும் என்ற ஆசை உண்டாகியது. ஆனால் அவர்கள் 'அடபைத்தியமே! உன் பேச்சை ஒருவரும் நம்பமாட்டார்கள்; வீணாகப் பரிகாசத்திற் காளாகாதே' என்று சொன்னார்கள். 'இல்லை, ராவ்சாஹிப் ஒருவராவது என்பேச்சை நம்புவார்' என்று சொன்னேன். அது வாஸ்தவமாகவே முடிந்தது" என்றான் ராமசாமி.

"அப்படியா சொன்னாய்!" என்று அவர் மகிழ்ச்சியுடன் ராமசாமியைக் கட்டி அணைத்துக்கொண்டார்; "நாளைக்காலை நாமிருவரும் போவோம்" என்றார். ராமசாமிக்கு வெகுசந்தோஷம்; குதித்துக் கொண்டு தோட்டத்திற்கு ஓடினான். ராவ்சாஹிப் நன்றாக நித்திரையிலமர்ந்தார்.

* * * *

காலை சூரிய உதய சமயம். சாலையில் கைகாட்டி மரத்தண்டை ராவ்சாஹிப் வந்து காத்திருந்தார். ராமசாமியைக் கூப்பிடவில்லை. ஆனாலும் அவன் அதோ ஓடிவருகிறான். என்ன ஆச்சரியம். 12 குதிரைகள் பூட்டிய கோச்சுவண்டி தயாராக இருந்தது.

"மந்திரமா! ஜாலவித்தையா! மாயமா!" என்று முணுமுணுத்தார் அவர். உடனே கோச் டிரைவர் திரும்பிப் பார்த்தார். அவர் முகத்தைப் பார்த்ததும் ராவ்சாஹிப் உடல் கிடுகிடுத்தது. "நீங்கள் இங்கே எப்போது வந்தீர்கள்?" என்று மெதுவாகக் கேட்டார். ராமசாமி ஓடோடியும் வந்து வண்டியில் ஏறிக்கொண் டான்; "வாருங்கள் மாமா! நாழிகையாயிற்று. உள்ளே ஏறிக் கொள்ளுங்கள்" என்று கையைப் பிடித்து இழுத்தான். "நம்ப முடியாததை எப்படி நம்புவது?" என்றார் ராவ்சாஹிப். பிறகு வண்டியில் உட்கார்ந்தார். உடனே கோச்சுவண்டிக் கதவு மூடப் பட்டது. இன்று ஒரு கண்டக்டரும் காணோம். வண்டியும் நகர்ந் தது. ராவ் சாஹிப் வண்டியைத் தொட்டுப்பார்த்தார்; "என்ன! வண்டி ஓடுகிறதா?" என்றார்.

"ஆஹா! ஹை! ஹை!" என்று ராமசாமி கூவினன். ராவ்சாஹிபுக்குப் பயம் பிடித்துக் கொண்டது. மெதுவாக இறங்கிவிடலாமா என்று கதவைத் தடவிப் பார்த்தார். உள்ளே இருட்டாயிருந்தது. "என் ஆயுஸ் காலத்தில் அநேக ஆச்சரியமான சம்பவங்களை அனுபவித்தேன். இது பெரிய விந்தையாக இருக்கிறது" என்று நினைத்தார். இதற்குள் ராம சாமி டிரைவரைக் கூப்பிட்டு இரண்டு 'ரிட்டர்ன் டிக்கட்கள்' கேட் டான். ஜன்னல்வழியாக அவைகளைப் பெற்றுக் கொண்டான். டிரைவர் திரும்பியதைப்பார்த்தவுடன் ராவ்சாஹிப் மறுபடியும் அவர் முகத்தைக் கவனித்தார். உடனே ராவ்சாஹிப் உடல் நடுங் கியது. "அவர்யார் தெரியுமா? இவ்விதம் இயலாதசெய்கை உண் டாகுமா?" என்றார் ராவ்சாஹிப்.

"இந்த டிரைவரை எனக்குத் தெரியவில்லை; நேற்று என் னுடன் வேறு ஒருவர் பேசிக்கொண்டுவந்தார்."

"தெரியவில்லையா! ஏதோ உன் அதிர்ஷ்டம் எனவேண்டும். என் பூஜை அலமாரியில் வெல்வெட் பயிண்டுசெய்து வைத்திருக் கிறேனல்லவா அழகான சிறுபுத்தகங்கள்?"

"ஆம்! வாணிவிலாச பிரசில் வாங்கிவந்தீர்கள். என்னமோ சம்புடம் என்றுபெயர்."

"அட! அசடே! அப்புத்தகங்களை எழுதிய சங்கராசாரியார் தான் இவர்."

ராமசாமிக்கு ஒன்றும் விளங்கவில்லை; சற்றுநேரம் சும்மா இருந்தான். பிறகு, "இன்றைக்கு மங்கம்மாளைப் பார்க்கச் சௌகரி யப்படுமோ என்னவோ! நேற்று நாங்கள் இருவரும் புஷ்பமாலை களைஎறிந்து விளையாடினேம். அப்போது...."

"முழுமூடா! வெல்வெட் புத்தகம் எழுதிய ஆசாரியார் வெளியே உட்கார்ந்து அதோ வண்டி ஓட்டுகிறார். நீ உன் மங்கம்மாளையும் குப்பம்மாளையும் பற்றிப் பிதற்றுகிறாய்!" என்று கடிந்தார்.

"இல்லை, நீங்கள் பார்த்தீர்களானால் இப்படிப் பேசுவீர்களா?"

"இன்னும் யாருடன் ஓடி விளையாடினாய்?"

"ஒருவன் பீமன்.... இல்லை.... அவனுக்கு முந்தி ஒருவனுடன் விளையாடினேன்; அவன் இரணியன்."

ராவ்சாஹிப் பெருமூச்சுவிட்டார். "ஐயோ! நீ உன் நேரத்தை வீணாகக் கழித்துவிட்டாய். இவ்வளவு அதிருஷ்டமாக உனக்கு ஒரு சந்தர்ப்பம் ஏற்பட்டபோது முழுமூடனாகப் பூக்கள் பறித்தும் மாலை எறிந்தும் ஓடியும் விளையாடினாய். படித்த அறிஞன் சந்தர்ப்பத்திற் கேற்றவாறு அவரவர்களிடம் சரியானபடி பேசி ஞானமார்க்கத்தை அடைந்து தத்துவத்தைக் கற்றுக்கொள்வான். ஒரு கம்பர், தாயுமானவர், ஷேக்ஸ்பியர், இதோ வண்டி ஓட்டுகிறாரே இவர் முதலியவர்களைப் பார்க்கும் அதிர்ஷ்டம்வந்தால் ஓடி விளையாடினேன் என்கிறாயே. ஐயோ! அடிமுட்டாளே!" என்று கண்ணீர் உதிர்த்தார்.

"மாமா! நான் அவர்களிடம் சொல்லியிருக்கிறேன், நீங்கள் பெரிய அறிஞர் என்று. அவர்களுடன் நீங்கள் திறமையாகச் சம்பாஷணை செய்வீர்கள் என்று எச்சரிக்கை செய்திருக்கிறேன்."

"அவ்வளவு புத்தி இருந்ததே உனக்கு, போகட்டும்! அவ்விடம்போனவிடம் ஏதேனும் அசட்டுத்தனமாகப் பேசி என்னை அவமானத்துக்கு உள்ளாக்காதே. என் கிட்ட நெருங்கி இரு. இந்த உன்னத புருஷர்களிடமும் ஸ்திரீகளிடமும் நீயாகப் பேசாதே. அந்த 'டிக்கட்டுகளை' என்னிடம் கொடு. நீ சிறுவன்; கெட்டுப் போக்கிவிடுவாய்."

ராமசாமி டிக்கட்டுகளைக் கொடுத்துவிட்டான். ஆனால் அவனுக்கு வருத்தம் உண்டாகியது. 'முதலில் நான் சொன்னதை இவர்கள் ஒருவரும் நம்பவில்லை, பிறகு இப்போது என்னையே விரட்டுகிறார்; இந்த இடத்திற்கு வழியே இல்லை என்றார்; இப்போது வந்தபிறகு பேசாதே, விளையாடாதே என்று கண்டிப்புச் செய்கிறார்; வீட்டில் பெரியப்பாவும், பள்ளிக்கூடத்தில் வாத்தியாரும் மிரட்டுவது போதும் என்று ஆயிற்று. இங்கேயும் இவர் மிரட்டல்வந்து விட்டதே' என்று எண்ணினான்.

"அதோ மாமா! வானவில் ஆரம்பிக்கிறது" என்று கூவினான். "தொந்தரவு செய்யாதே, நான் இந்தக் காட்சியை அனுப

வித்துக் கொண்டிருக்கிறேன். அடடா! உன்னுடன் வந்தேனே. பக்தி சிரத்தையும் மதாபிமானமும் உள்ள ஒருநல்லவருடன் நான் வந்திருக்கலாகாதா?" என்று கோபித்தார் ராவ்சாஹிப். ராமசாமி கண்களில் நீர்பெருகியது. உதடுகளைக் கடித்துக்கொண்டான். வெளியே இருள் மிகுந்து கரியமேகங்கள் சூழ்ந்துகொண் டன. வானவில் காணப்படவில்லை. வண்டியைச் சுற்றிலும் சோவென்று மழை கொட்டியது. டிரைவர் ஒன்றையும் லட்சியம் செய்யாமல் ஓட்டிக்கொண்டுபோனார். ஒருமின்னல் வெளிச்சத்தில் தூரத்தில் அரண்மனை புலப்பட்டது. சிறிதுநேரத்திற்கெல்லாம் மழைநின்றது; ஆனால் நல்ல வெளிச்சம் இல்லை. மலை உயரத்தில் கோச்சுநின்றது.

"மாமா! அதோ அரண்மனை; இருட்டுமேல் சூரிய வெளிச்சம்; அதோ எல்லாரும் நிர்த்தனம் செய்கிறார்கள். சிலர் ஓடி விளையாடுகிறார்கள். இறங்குங்கள்; நாமும் போவோம்"

"என்ன மறுபடியும் புரளிசெய்ய ஆரம்பித்துவிட்டாய்? ஒன்றையும் காணோமே."

ராமசாமி தாளம்போட்டுக்கொண்டு தூரத்தில் தான் கண்ட வர்கள் பாடுவதுபோல அவனும் பாடினான்.

"இந்தப்பாட்டு யார் சொல்லிக்கொடுத்தது?"

"அதோ பாருங்கள்! எவ்வளவுபேர் குதித்துக்கொண்டு பாடு கிறார்கள்!"

ராவ்சாஹிப் எட்டிப்பார்த்தார். உடனே தலை கிறுகிறு என்று சுற்றியது. "ராமசாமி! வண்டியைத் திருப்பு" என்று கூவிக் கொண்டு வண்டியில் சாய்ந்தார்.

"இதோ அரண்மனைவாசல் வந்துவிட்டது. இவ்வளவுதூரம் வந்தபிறகு உள்ளே போகாமல் திரும்புவதா?" என்று ராமசாமி எட்டிப் பார்த்தான். வாயிலில் காவல்வீரன் நின்று கொண்டிருந் தான். கையில் பெரிய கதாயுதம் தாங்கியிருந்தான். "பீமா! இதோ வந்துவிட்டேன். என்னுடன் ராவ்சாஹிப்பை அழைத்து வந்தேன். நேற்று விளையாட்டில் பாதி இருக்கிறதல்லவா?" என்று ராமசாமி கூவினான்.

"ராவ்சாஹிப் என்னை இட்டுவந்தார் என்று சொல். என்னை நீயா அழைத்து வந்தாய்?" என்று முணுமுணுத்தார் பெரியவர். "பையன் திரும்பிவந்துவிட்டான்" என்று எல்லாரும் கூவினார்கள். பீமன்வந்து பையனை இறக்கிவிட்டான். "பீமா, எனக்கு ஒன்றும் தெரியாது. நான் முட்டாள். சற்று இரு; இதோ பெரிய அறிஞர்

ராவ்சாஹிப் இருக்கிறார். அவரும் இறங்கட்டும். அவரையும் அழைத்துக் கொண்டால்தான் எனக்கு நல்லது" என்றான் ராமசாமி. பீமன் அப்பையனைத் தூக்கித் தன் தோளில் நிறுத்திக் கொண்டு நடந்தான். ராவ்சாஹிப் விம்மி விம்மி அழுகிறார். பீமனையும் காணோம், ராமசாமியையும் காணோம். டிரைவரைப் பன்முறை கும்பிட்டார்; "ஆசாரியரே! இந்த வண்டியிலேயே நான் இருக்கிறேன். என்னைத் திரும்பிப் பூலோகம்கொண்டுபோய்விட்டு விடும். உம்மைக்கெஞ்சிக் கேட்கிறேன். உங்களைத் தினமும் பூஜை செய்கிறேன். உங்கள் புஸ்தகங்களுக்கு அர்ச்சனை செய்கிறேன். நீங்கள் பிறந்ததினத்தில் சமாராதனை செய்கிறேன்; கோதானம் செய்கிறேன். உங்கள் பாஷ்யக்ரந்தங்களை நெட்டுருப் பண்ணியிருக்கிறேன். தினமும் பாராயணம் செய்துவருகிறேன். என்னைக் காப்பாற்றுங்கள்" என்று குப்புற விழுந்தார். டிரைவரோ இருந்த இடத்தைவிட்டு நகரவில்லை; "நீ சொல்வது வாஸ்தவம். ஆனால் நீ என்னைச் சரியாக அறிந்துகொள்ளவில்லை. மார்க்கத்தின் முடிவு நானல்ல. நான் உணர்வைக் காட்டினதல்லாமல் ஜீவனைக் காட்டவில்லை; நீயே களங்கமின்றித் தைரியமாக எழுந்து நின்று நட. அந்தப் பையன் மனதுபோலச் சந்தேகமேயில்லாமல் நிச்சயமாயிருந்தால் பலம் உண்டு. ஆனந்தம் என்பது ஒரு சக்தி; அதை ஆசிரயிப்பது வேஷத்தினாலன்று; உண்மையில் உணர்வது தான் அந்த அனுபவம்" என்று சொல்லிவிட்டு வண்டியை ஓட்டினார். ராவ்சாஹிப் வண்டியினின்று வழுக்கிக் கீழேவிழுந்தார்.

திடீர் என்று தாழ்வாரத்தில் இருந்த சோபா புரண்டு கீழே சாய்ந்தது; அதில் படுத்திருந்த ராவ்சாஹிப் உருண்டு விழுந்தார். சீட்டு ஆடிக்கொண்டிருந்த எல்லாரும் ஓடிவந்தனர்; ராவ்சாஹிபைத் தூக்கி எடுத்தனர்; ஒருவர் டெலிபோனில் டாக்டருக்குச் சொல்லி அனுப்பினர். ஆனால் என்ன பிரயோசனம்? ராவ்சாஹிப் இறந்துவிட்டார்; மூச்சு நின்றுவிட்டது. ஆனால் அவரை முதலில் தூக்கிய வக்கீல் கோதண்டராம் மட்டும் அவர் ஏதோ பேசியதாகவும் அதில் "ராமா—ஆனந்தம்—உண்மை" என்னும் வார்த்தைகள் கேட்டதாகவும் சொல்கிறார்.

---

# செல்லாக் காசு

வி. அனந்தகிருஷ்ணன், பி. ஏ.

---

இந்தச் செல்லாக்காசுகளைக் காணும்போதெல்லாம், பட்ட மிழந்த அரசர்களின் நினைவு வருகிறது. இத்தனை நாளாக அதற் கிருந்த மதிப்பென்ன? இப்பொழுது அது படும் அவஸ்தை யென்ன? உலகவாழ்வே இப்படித்தான் என்று சப்திக்கிறது; கஞ்சிராவின் சதங்கையாக இருந்துகொண்டு 'தோசைக்கல்' ரூபத்தில் பாலர்கள் தோழனாகப் பரிணமிக்கிறது; ஏழைப் பெருங் காயக்காரனுக்கு நிறுப்பதற்குப் படியாக உதவுகிறது; சிலவீனர் கள் 'வாழைப்பழத்தில் பொதிந்து விழுங்கு' என்று சொல்வதற்கு இலக்கியமாக அமைகிறது. இன்னும் எத்தனையோ சில்லரை உப காரங்கள்!

"சூரியன் ஒளிகுன்றி அஸ்தமிக்கும் சமயத்தில் பூர்ணசந்திரன் ஜோதிமயமாய் வானவீதியில் தோன்றுகிறான். இதுபோலவே, ஒருவன் புகழ், செல்வாக்கு இவைகள் மறையும்போது மற்றொரு வன் இவைகள் ஓங்க, எழுகிறான்" என்பதாகக் காளிதாஸன் ஓரிடத்தில் பாடியிருக்கிறான். இந்தச் செல்லாக்காசு இப்படி அல்லல்படும்போது புது நாணயங்கள் மனிதனையே ஆள்கின்றன.

இவ்விதம் கேவலமாகச் செல்லாக்காசுகளைப்பற்றிச் சொல் வதும் நினைப்பதும் நமது அறிவீனம் என்பது என்னுடைய கொள்கை. முன்பு அவைகள் ஆற்றிய தொண்டை நினைக்கும் போது, அவற்றைப்பற்றி அகௌரதையாக நினைப்பது தவறு என்று நிதர்சனமாகிறது. அப்படி, 'செல்லாக்காசு' என்று முகத் தில் விட்டெறியப் பட்டாலும், அது நமது சாமர்த்தியக் குறை வினாலேயே தவிர வேறில்லை.

உதாரணமாக ரங்கநாதன் கலியாணத்திற்குப் போயிருந்தோம். நாங்கள் நாலுபேர்—மணி, நாகபூஷணம், கிட்டு, நான். போகும் போது 'ரயில்சார்ஜ்' செலவழித்துக்கொண்டுதான் போனோம்.

கலியாணம் எங்கள் நாலுபேரால்தான் சோபித்தது. இல்லை என்கிறீர்களா? எங்கே, ரங்கனைக்கேளுங்கள்; அவன் இல்லை என்று சொல்லட்டும்! உம், நல்லது.

முகூர்த்தம் எப்பொழுது முடியப்போகிறது என்று காத்துக் கொண்டிருந்து, உடனே ஆரம்பித்துவிட்டோம், 6-கைகள் மூன்று சீட்டு ஆட்டம். சாப்பாடாவது, கூப்பாடாவது!

கிட்டுவுடைய அப்பா புரோஹிதர்; பின் செல்லாக்காசுகளுக்குப் பஞ்சமா அவரிடம்? ஆனால் அவருக்கு அவைகளைச் செலவழிக்கத் தெரியவில்லை. "இங்கே கொடு அப்பா, அத்தனை செல்லாக்காசையும்; நானச்சு செல்ல வைத்துட்டால் எனக்கு; இல்லாவிட்டால் உனக்கு" என்று ஒப்பந்தம் பேசி அவ்வளவு செல்லாக் காசுகளையும் கொண்டுவந்திருந்தான். பொய்சொல்வது போலிருக்கும்: அவ்வளவு காசையும் எண்ணி எண்ணிச் செல்லவைத்தான் கிட்டு! அவ்வளவையும் பின்பு விளையாடி இழந்தான் என்று வைத்துக் கொள்ளுங்கள். ஆனாலும் செல்லவைத்து விட்டானா இல்லையா?

இரண்டாவது தினத்தன்றே அவ்வூர் சலித்துப் போய்விட்டது. ஊருக்குச் செல்லவேண்டுமென்ற கிளர்ச்சி எங்களுக்கு ஏற்பட்டது. ஆனால் கையில் பைசாக் கிடையாது. நாங்கள் சென்றுவிட்டால் பந்தலின் கதி என்னவாகுமென்று நினைக்கும் போது ஒரு சொட்டுக் கண்ணீர் தோன்றி மறையத்தான் செய்தது.

ரங்கநாதனைக் கேட்டோம்:

"ஏண்டா ரங்கா, ஏதாவது பணம் இருந்தால் கொடு. ரயில் செலவுக்கு வேணும்; கையில் தம்பிடி கிடையாது" என்றான் எங்களில் ஒருவன்.

"போங்கடா! இப்போது வந்து கேட்கிறீர்களே. என்னிடம் ஐசா பைசா நை. ஏன், எல்லாரும் ஒன்றாய்ப்போனால்?"

"அடபோடா! வந்தாச்சு, இருந்தாய்விட்டது. கொஞ்சம் அவசரமாக ஊரில் அலுவல்."

"பணமில்லையே!"

"அப்பாவிடம்" என்று சொல்லிக் கண்ணைச் சிமிட்டினான் கிட்டு; அது எங்களுக்குள் ஒரு ஸமிஞ்ஞை. உடனே ரங்கன் மச்சுப்படியேறிச் சென்றான்.

நாங்கள் காப்பி குடித்துவிட்டுவரும் பாதையில் ரங்கன் குறுக்கிட்டான்; ரகசியமாக என்கையில் ஏதோ ஒன்றைக் கொடுத்து இறுக மூடிவிட்டுப் பின்னே சென்று, "அவசரமானால் போய் வாருங்கள்" என்றான்.

ரங்கநாதனுடைய அப்பாவிடம் சொல்லிக்கொண்டு ரயில் ஸ்டேஷனை நோக்கிச்சென்றோம்.

கிட்டு (என்னிடம்) :—ஏண்டா சாமா? அந்தப்பயல் உன்னிடம் எவ்வளவு கொடுத்தான்?

நான் :—ஒரு ரூபாய்.

கிட்டு :—திருடினது, திருடியதிலே கூட ஒரு ரூபாய் அதிகம் எடுத்திருக்கக்கூடாதா? தரித்திரப்பயல்!

ரயில் பிளாட்பாரத்தில் பிரவேசித்ததும் என்னைக் கொண்டு டிக்கட் வாங்கச்சொன்னார்கள். ஜன்னலண்டைபோய் "நாலு டிக்கட்கள்" என்று கத்தினேன். கிணீர் என்று ரூபாய் திரும்ப வந்து விழுந்தது. செல்லாக்காசாம்! ஆனமட்டும் தகரார்செய்து பார்த்தேன். அவர், "போகிறாயா, இல்லையா?" என்று கேட்டு விட்டார்.

இதற்குள் எதையோ பறிகொடுத்தாற்போல் சத்திக்கொண்டு கிளம்பிவிட்டது ரயில்.

நாங்கள் சிறிதுநேரம் அங்கேயே நின்றோம். அதிலிருந்து இரண்டாவது ஸ்டேஷன்தான் எங்கள் ஊர்.

"வாங்கடா எல்லோரும்" என்று அட்டகாசமாய்க் கிட்டு எல்லோரையும் அழைத்துக்கொண்டு ரயில் தண்டவாளத்தின் மேலே அடுத்த ஸ்டேஷனுக்கு நடக்கலானான்.

"இந்த ரூபாயைச் செல்லவைக்காவிட்டால் நான் ஒரு ஆண்பிள்ளையா?" என்று மார்தட்டினான்.

அடுத்த ஸ்டேஷனில் உட்கார்ந்திருந்தோம். அடுத்த ரயிலும் வந்து சேர்ந்தது.

கிட்டு 'புக்கிங் ஆபீஸ்' அறைக்குள் கம்பீரமாய் நடந்து சென்றான். அங்கிருந்த நாற்காலியில் கால்மேல் கால்போட்டுக்கொண்டு உட்கார்ந்தான். எங்கள் ஊருக்கு நான்கு இரண்டாவது வகுப்பு டிக்கட்டுகள் கேட்டான். பதினைந்தணாவாயிற்று. டிக்கட் கையில் வந்ததோ இல்லையோ, வெளியேவந்து எல்லோரையும் தள்ளிக் கொண்டு வண்டியில் ஏறிவிட்டான். நாங்களும் அவனைப் பின்பற்றினோம். வண்டியும் புறப்பட்டுவிட்டது.

"மீதி ஓரணாவிற்காகக் காத்துக்கொண்டிருந்தால் ரூபாய் செல்லாதென்று பார்த்துவிடுவான்! பதினைந்தணாத்தான் கிடைத்தது என்று நினைத்துக்கொள்வோமே!" என்றான் கிட்டு.

செல்லாக்காசு விஷயமாய் நான் சொன்னதென்ன, சரிதானா?

---

# உபாத்தியாயர் பகுதி

## குழந்தைகளின் கல்வி

பி. எஸ். நாராயணசாமி

### 1. இந்திரியப் பயிற்சி

இவ்வுலகத்தில் வஸ்துக்களைப் பற்றிய விஷயங்களை யெல்லாம் பஞ்சேந்திரியங்களின் மூலமாகவே நாம் அறிகிறபடியால், போதிய பயிற்சியினால் குழந்தைகளின் பஞ்சேந்திரியங்களைக் கூர்மைப்படுத்தல் அவசியமாகிறது.

கண்களால் அறியக்கூடியவை பரிமாணம், உருவம், நிறம் இம் மூன்றுமாம்; காதால் அறியக்கூடியவை சப்த பேதங்கள்; நாவால் அறியக்கூடியது ருசி; தோலால் அறியக்கூடியவை சீதோஷ்ணம், சுரசுரப்பு இவ்விரண்டுமாம். தசை நாரால் அறியக்கூடியது பளு.

(1) பரிமாணம் (2) உருவம் (3) நிறம் (4) ஓசை (5) ருசி (6) சீதோஷ்ணம் (7) சுரசுரப்பு (8) பளு ஆகிய இவைகளில் தாரதம்யத்தை இலகுவில் கண்டறியும் ஆற்றலைக் கூடிய வரையில் விருத்திசெய்து கொள்ளப் பயிற்சி அவசியமாகிறது. மனிதர் பெரியவர்களான பிறகுகூடக் கற்கும் விஷயங்களை அலசிப்பார்க்குமிடத்து மேலே சொல்லப்பட்ட விஷயங்களே அவைகளுக்கு அடிப்படையாக இருப்பது வெளிப்படை. பெரியவர்கள், அவர்கள் அன்றன்று செய்யும் வேலைகளில் ஸாதகம் அடைவதோ அல்லது பாதகம் அடைவதோ மேற்சொல்லப்பட்ட எட்டு விஷயங்கள் ஸம்பந்தமாகத் தாரதம்யம் அறிவதில் அவர்களடைந்திருக்கும் ஆற்றலைப் பொறுத்து நிற்கின்றன. இவ்வாற்றல் ஒவ்வொருவருக்கும் பிறவியிலேயே கடவுளாற் கொடுக்கப் பட்டதெனினும், கொடுக்கப்பட்ட வித்துப்போன்ற இவ்வாற்றலை மனிதப்பிரயத்தனத்தால் அதாவது தக்கபயிற்சியால் கூர்மைப்படுத்த முடியு மென்பதே கல்விமுறை நிபுணர்களின் துணிபு. ஆகையால் இந்திரியப்பயிற்சி இன்றியமை யாததாகிறது.

ஒருவனுக்கு ஒரு கை ஊனம் என்றால் அவனது மற்றொருகை அதிகமாக வன்மையுற்றிருப்பதை நாம் காண்கிறோம். ஏன்? ஊனமான கையால் செய்யப்படவேண்டிய காரியங்களையும் சேர்த்து மற்றொருகை செய்துவருவதுதான் அதற்குக் காரணம்.

இதுபோலவே கண் தெரியாத ஒருவன் எதையும் தன் கைகளால் தடவிப் பார்த்தே அதனுடைய விஷயங்களில் பலவற்றையறிகிறுன். இவன் இந்த சாதனத்தா லறிந்துகொள்ளுமளவு, கண் தெரிந்தவன்கூடச் சில சமயங்களில் தெரிந்துகொள்ளத் தவறுவது கண்கூடு. என்? வஸ்துக்களைத் தடவிப்பார்க்கும் சாதனம் ஒன்றே குருடனுக்கு உளதாதலாலும், அதைக்கொண்டே அவன் பல காரியங்களைச் சாதித்துக்கொள்ள வேண்டி இருப்பதாலும், அந்த ஆற்றல் அவனிடத்தில் மிகுதியும் விருத்தியடைந்திருக்கிறது. இப்படிப்பட்ட உதாரணங்களினுல் ஸ்பர்சத்தால் அறியும் சக்தி அளவிடற்பாலதன்றென்று நாம் அறிகிறேம். சாமானிய ஜனங்கள் இச்சக்தி இத்தகையதென்று அறியாராதலாலும், இது குருடருக்கே அவசியமென்றெண்ணி இருப்பதாலும், அவர்கள் பெரும்பாலும் கண்கள் மூலமாகவும் அதற்கடுத்தாற் போல் காதுகள் மூலமாகவும் குழந்தைகளுக்கு விஷயங்களைப் புகட்டுவதில் திருப்தி அடைகிறுர்கள். ஆகையினுல் குழந்தைகளின் கண்களும் காதுகளும் மட்டுமே தக்கபயிற்சி அடைகின்றனவேயன்றி மற்றச்சக்திகள் கவனிக்கப்படாமலே போகின்றன.

இந்திரியப் பயிற்சி மிகஅவசியமென்றும் அவைகளுக்குள் வஸ்துக்களைத் தொட்டும் தடவியும் பார்த்தறியும் சக்தியை விருத்தி செய்வது மிக்க நன்மையைப் பயக்கக்கூடியதென்றும் உலகத்திற்கு வெகு தீவிரமாக எடுத்துச் சொல்ல ஆரம்பித்தவர் டாக்டர் மாண்டிஸோரி என்னும் மாதுசிரோமணியாவர். இம் மாது இப்போதும் இத்தாலி தேசத்துத் தலைநகராகிய ரோமாபுரியில் இருந்து வருகிறுர். இவர் அதிக ஊக்கத்தோடு கல்விமுறைகளில் ஆராய்ச்சிகள் பலவும் நிகழ்த்திவருகிறுர். இவர் குழந்தைப்பயிற்சிக்காக நிறுவியமுறை ‘மாண்டிஸோரிமுறை’ என்று வழங்கிவருகிறது. இம் மாது வைத்தியத் தொழிலில் பெரியதொரு பரீக்ஷையில் தேர்ச்சி பெற்று ஒரு வைத்தியசாலையில் வேலைக்கு அமர்ந்தாள். அங்கே செவிடு, ஊமை, குருடு முதலான குழந்தைகளைக் கவனிக்க வேண்டியவேலை இவருக்கு ஏற்பட்டது. அக்குழந்தைகளோடு பழகிவரும் நாட்களில் இந்திரியப் பயிற்சி மிக்க பயனளிப்பதாகக் கண்டார். பிறகு அப்பயிற்சி முறைகள் சாமானியக் குழந்தைகட்கும் ஏற்றனவாக இருக்கக்கண்டு அம்முறையை அவர்களுக்கும் வழங்க ஆரம்பித்தார்.

வஸ்துக்களின் உருவமும் பரிமாணமும் கண்களாலும் அறியப் படுகின்றன; ஸ்பர்சத்தினுலும் அறியப்படுகின்றன. கண்களில்லாதவர்கள் தாம் அவைகளை ஸ்பர்சத்தால் அறிய வேண்டுமென்ற

தப்பான அபிப்பிராயத்தைவிட்டுக் கண் தெரிந்தவர்களும் தங்கள் ஸ்பர்ச சக்தியை விருத்திசெய்துகொள்ள வேண்டுமென்பது டாக்டர் மாண்டிஸோரியின் தீர்மானம். இவ்வபிப்பிராயத்தை மேற்கொண்டே, குழந்தைகட்கு எழுத்துக்களைக் கற்பிக்கும் காலத்தில் கீழ்க்கண்ட முறையை டாக்டர் மாண்டிஸோரி கை யாண்டுவருகிறார்.

எழுத்துக்களின் வடிவத்தைக் குழந்தைகள் தங்கள் கண்களால் பார்க்கும்படி செய்கிறார். பிறகு குழந்தைகளின் கண்களை ஒரு சிறு துணியால் கட்டிவிடுகிறார். சுரசுரப்பான காகிதத்திலோ (*Sandpaper*) அல்லது வெல்வெட் போன்ற மிருதுவான துணியிலோ எழுத்துக்களின் வடிவம் அமையக் கத்தரித்து அவைகள் ஒவ்வொன்றையும் ஒவ்வொரு சதுர அட்டைத்துண்டில் ஒட்டி அவைகளைக் குழந்தைகளின் முன் வைக்கிறார். கண்கள் கட்டப்பட்டிருக்கும் அக்குழந்தைகள் தங்கள்முன் வைக்கப்பட்டிருக்கும் எழுத்துக்களின் வடிவத்தைத் தடவிப்பார்த்து அறிகிறார்கள். இப்படிச் செய்வதனால் எழுத்துக்களின் வடிவம் குழந்தைகளின் மனதில் எளிதில் பதிந்து நிலைபெற்று நிற்கிறதென்கிறார்.

இந்த இந்திரியப்பயிற்சி குழந்தைகளுக்கு சுமார் மூன்று வயது முதல் $4\frac{1}{2}$ வயது அல்லது 5 வயது வரையில் கொடுக்கலாம். பிறகுதான் பள்ளிக்கூடத்துப் பாடங்களைத் தொடங்க வேண்டும்.

## (2) மனவியல்

மானிடரது மனம் மிகுந்த சஞ்சல சுபாவமுடையது. அதுபற்றியே நம் பெரியோர் மனத்தைக் குரங்குக்கு ஒப்பிட்டிருக்கிறார்கள். அதிலும் சிறு குழந்தைகளின் மனது பெரியவர்களது மனதைக் காட்டிலும் அதிகமான சஞ்சல சுபாவமுடையதாக இருக்கிறது. ஆகையால் குழந்தைகளை, ஒரே வஸ்துவை நீண்டகாலம் பார்த்திருக்கச் செய்வதோ அல்லது ஒரே சத்தத்தை நீண்டகாலம் கேட்டுக் கொண்டிருக்கச் செய்வதோ அல்லது ஒரே வேலையைச் செய்து கொண்டிருக்கச் செய்வதோ, அவர்களை ஹிம்ஸிக்கும் வழிகளே யல்லாமல் அவர்களுக்குக் கல்வி புகட்டும் முறைகளாகா. ஆகையால் குழந்தைகள் பார்க்கும் வஸ்துக்களும் கேட்கும் சத்தங்களும் செய்யும் வேலைகளும் அடிக்கடி மாறிக்கொண்டே இருந்தால்தான் அவைகளால் குழந்தைகட்கு நன்மையுண்டாகும்.

உதாரணமாகக் குழந்தைகளுக்குக் கணிதம் கற்பிக்கும் விஷயத்தைப்பற்றி ஆராய்வோம்: ஒன்றிலிருந்து நூறுவரையிலும் சொல்லக் குழந்தைகளைப் பழக்குவது உபாத்தியாயரின் நோக்க

மென்று கொள்வோம். அப்போது செய்யப்படுவதென்ன? உபாத்தியாயரோ அல்லது சட்டாம்பிள்ளை என்று சொல்லப் படும் ஒரு பிள்ளையோ எண்களை ஒவ்வொன்றாக முதலில் சொல்ல மற்றக் குழந்தைகள் எல்லோரும் ஏககாலத்தில் அவர் பின்னால் அந்த எண்களைச் சொல்லிவருவதே பண்டைய முறையாம். இம்முறையைக் குழந்தைகள் எத்துணை வெறுக்கிறார்களென்பது அனுபவத்தில் தெரியும். இதைவிடச் சற்றுச் சிறந்த முறையாகக் கருதப்படுவது, குழந்தைகட்குப் பலநிறக் கண்ணாடி மணிகளைக் கொடுத்து அவைகளை எண்ணிக்கொண்டே எண்களையும் சொல்லும்படி செய்வதேயாம். ஒன்றிலிருந்து நூறுவரையில் சொல்லக் கற்குமுன் ஒரு குழந்தை பலமுறை அப்படிச் சொல்லி யாகவேண்டி யிருக்கும். இத்தகைய சந்தர்ப்பத்தில் உபாத்தியாயர் மணிகளை உபயோகித்த போதிலும், நீண்ட காலமாக அவைகளையே பார்த்துக்கொண்டிருக்கும் காரணத்தினால் மணிகளிடத்தில் குழந்தைக்கு ஒருவித வெறுப்புத் தோன்றுதல் நிச்சயம். ஆகையால் உபாத்தியாயர் சொல்லிக்கொடுக்க முயலும் விஷயம் ஒன்றேயாயினும் அதைச் சொல்லிக்கொடுக்க உபயோகிக்கும் ஸந்தர்ப்பங்களும், உபகரணங்களும் பல வகைப்பட்டனவாக இருத்தல் அவசியம்.

ஒன்றிலிருந்து நூறுவரையில் சொல்லக் குழந்தைகளைப் பழக்கக் கீழ்கண்டவாறெல்லாம் செய்யலாம்:

(1) உபாத்தியாயர் குழந்தைகளைத் தோட்டத்திற்கு அழைத்துச் சென்று அவர்களைப் பூக்கொய்யும்படி தூண்டவேண்டும். பிறகு அவர்களை வட்டமாக உட்காரச் செய்து அவர்கள் கொணர்ந்த பூக்களை வட்டத்தின் நடுவில் சேமித்து வைத்துக்கொண்டு, உபாத்தியாயர் அங்கிருந்து சிறு கல்லொன்றை விக்ரகமாக நினைத்துப் பூக்களால் அர்ச்சிக்கவேண்டும். இப்படிச் செய்யும்போது உபாத்தியாயர், பூக்களை எண்ணிக் கொண்டேவரக் குழந்தைகளெல்லோரும் அவர் சொல்லும் எண்களைச் சொல்ல வேண்டும்.

(2) உபாத்தியாயர் குழந்தைகளின் வட்டத்தின் நடுவிலிருந்து ஒரு மணியை அடிக்கவேண்டும். அப்படிச் செய்யும் போது உபாத்தியாயர், "ஒன்று, இரண்டு, மூன்று" என்று மணியோசையை எண்ணப் பிள்ளைகளும் எண்களைச் சொல்லிக் கொண்டே வரவேண்டும்.

(3) உபாத்தியாயர் சுமார் நான்கு அல்லது ஐந்து குழந்தைகளுடன் பள்ளிக்கூடத்து மாடிப்படிகளை ஒன்று ஒன்றாகக் கடந்து

செல்லும்போது உபாத்தியாயர் முன்னும் குழந்தைகள் பின்னுமாகப் படிகளை எண்ணவேண்டும். இதுபோன்று போதிக்கப் புகும் விஷயம் நீண்டகாலத்திற்கு மாறாமல் ஒன்றாகவே இருப்பினும், அதற்காக உபயோகிக்கப்படும் சந்தர்ப்பங்களும், வஸ்துக்களும் அடிக்கடி மாறிக்கொண்டே இருக்கவேண்டும்.

## (3) மூன்று அனுபவங்கள்

சிறுகுழந்தைகட்கு மிக அவசியமாக உபாத்தியாயரும் பெற்றோரும் தரவேண்டிய அனுபவங்கள் மூன்றாகும். அவை (1) இனம் பிரித்தல் (*Sorting*), (2) ஜோடி சேர்த்தல் (*Matching*), (3) மாற்றுதல் (*Exchanging.*)

(1) இனம் பிரித்தலென்பது, சிவப்பு அட்டைகளை ஒரு புறமாகவும், பச்சை அட்டைகளை மற்றோர் புறமாகவும், கறுப்பு அட்டைகளை வேறொரு புறமாகவும் பிரித்துப் போடுதல்; அல்லது சதுர அட்டைகளை ஒரு புறமாகவும், முக்கோணவடிவமுள்ள அட்டைகளை மற்றோர் புறமாகவும், வட்ட வடிவமுள்ளவைகளை வேறோர் பக்கமாகவும் பிரித்துப் போடுதலாம்.

(2) ஜோடி சேர்த்தலென்பது பச்சை அட்டையோடு பச்சை அட்டையையும், வட்டவடிவமான அட்டையோடு வட்ட வடிவமான அட்டையையும், முக்கோணவடிவமுள்ளதோடு முக்கோண வடிவமுள்ளதையும் பொருத்தம்கண்டு ஜோடியாக வைத்தலாம்.

(3) மாற்றுதலென்பது குழந்தைகளுக்கிடையே பெரிதும் இருப்பதை நாம் காணலாம். உதாரணமாக மிகச் சிறுகுழந்தைகளும் தின்பண்டங்கள் வைத்திருந்தால் ஒரு குழந்தை ஒரு வடையைக் கொடுத்து ஒரு முறுக்கு வாங்கிக்கொள்வதை நாம் பார்க்கிறோம். இவ்வளவு பெரிய வடைக்கு இவ்வளவு சிறிய முறுக்குத்தானா வென்று கேட்பதையும் நாம் கவனிக்கலாம். ஆகையால் இத்தொழில் குழந்தைகளின் மனதிற்கு ஒத்திருப்பதாகவே நமக்கு விளங்குகிறது. இத்தொழிலை உபாத்தியாயர்கள் உபயோகப் படுத்திக் கொள்ளலாம். இத்தொழிலில் பள்ளிச் சிறார்களுக்குக் கீழ்க்கண்ட வகைகளில் அனுபவம் உண்டாக்கலாம்:

(1) ஏதாவதொரு நிறமுள்ள (கம்பளி) நூலைக் கொடுத்து அதே நிறமுள்ள ஒருகாகிதத்தை வாங்கிக் கொள்ளலாம்.

(2) ஒரு நூல் பந்தைக் கொடுத்து அதே பரிமாணமுள்ள ஒரு ரப்பர்ப்பந்தை வாங்கிக் கொள்ளலாம்.

(3) முப்பட்டையையுடைய ஒரு நீலநிறக் கண்ணாடித்துண்டைக் கொடுத்து அதே வடிவமுள்ள வெள்ளைக் கண்ணாடித் துண்டொன்றைப் பெறலாம்.

இம்மூன்றனுள்ளும் குழந்தைகளுக்குத் தோன்றியபடி மாற்றிக் கொள்ளுதல் ஒருவிதம். உதாரணமாக: ஒரு குழந்தை பச்சைப் பந்தொன்று கொடுத்து சிவப்புப் பந்து ஒன்று வாங்கிக் கொள்ளலாம். அல்லது பெரிய நூல்பந்து ஒன்றைக் கொடுத்து ஒரு சிறிய ரப்பர்ப்பந்து வாங்கிக் கொள்ளலாம். உபாத்தியாயர் நிர்ணயித்தபடி அதாவது எதை எதற்கு ஈடாக நினைத்துக் கொள்ள வேண்டுமென்று சொல்லுகிறாரோ அதன்படி மாற்றிக் கொள்ளுதல் மற்றொரு விதம்.

(4) ஒரு நீளக் குச்சியைக் கொடுத்து அந்த நீளத்திற்கு ஈடு செய்யத்தக்க இரண்டு குட்டைக் குச்சிகளைப் பெற்றுக் கொள்ளுதல்.

(5) ஸமநிறையுடைய வஸ்துக்களை மாற்றிக்கொள்ளுதல்.

(6) ஓர் எண் எழுதப்பட்ட அட்டைத்துண்டொன்றைக் கொடுத்து அதற்கு ஸமமாகும்படியான இரண்டு எண்கள் எழுதப்பட்ட இரண்டு அட்டைத்துண்டுகளைப் பெறுதல். உதாரணமாக: ஐந்தைக் கொடுத்து இரண்டையும் மூன்றையும் பெறுதல்.

(7) நாணயங்களுக்குச் சில்லரை மாற்றுதலும் பத்து அல்லது நூறுரூபாய் நோட்டுகளுக்குச் சில்லரைமாற்றுதலும். இதற்குப் போலிநாணயங்களையும் போலி நோட்டுகளையும் உபயோகப்படுத்தலாம்.

(8) 325 என்ற எண் எழுதப்பட்ட அட்டைத்துண்டைக் கொடுத்து 300 எழுதப்பட்ட ஓர் அட்டையையும் 20 எழுதப்பட்ட ஓர் அட்டையையும் 5 எழுதப்பட்ட ஓர் அட்டையையும் பெற்றுக் கொள்ளுதல்.

(9) ஒரு கோழியின் படத்தைக் கொடுத்து அதனுடன் மூன்று ரூபாய் போலிநாணயமும் கொடுத்து அதற்குப் பதிலாக ஓர் ஆட்டின்படத்தைப் பெறுதல்.

கூர்ந்து நோக்குமிடத்து இம்மூன்று அனுபவங்களுமே மற்றெந்த மேம்பட்ட அனுபவங்களுக்கும் அறிவிற்கும் அடிப்படையாகவும் அஸ்திவாரமாகவும் காணப்படுதலால் இத்துறைகளில் பயிற்சிபெறும் சிறுர்கள் பிற்காலத்தில் கல்வியபிவிருத்தியில் தலைசிறந்து விளங்குவது திண்ணம்.




## சில பலஹாரங்கள்

வி. விசாலாக்ஷி அம்மாள்

நம்முடைய முன்னோர்களுக்கு 'டிபன்' சாப்பிடும் வழக்கம் இருந்ததாகத் தெரியவில்லை. காலையில் குழந்தைகள் பழைய சாதமும் தயிருமாகச் சாப்பிடுவார்கள். சற்று வயதானவர்கள் தோசை சாப்பிடுவார்கள். பிறகு மத்தியான்ன போஜனம் நேரங்கழித்தே நடை பெறும். இரவில் சீக்கிரமாகவே போஜனத்தை முடித்துக்கொள்ளுவார்கள். இடை வேளைக்கு முறுக்கு சீடை முதலிய பக்ஷணங்களைச் சாப்பிட்டு மோர்த்தீர்த்தத்தை வேண்டியவர்கள் பருகுவார்கள்.

நவீன வாழ்க்கையில் இந்த வழக்கங்கள் முற்றிலும் மாறி விட்டன. காலையில் காபி, கோகோ, ஓவல்டின், காந்திகாபி முதலிய பானங்களை அருந்துகிறோம். ஒன்பது மணிக்குள், சுடச்சுட ஆனதும் ஆகாததுமாகச் சாப்பிட்டுவிட்டுக் குழந்தைகள் பள்ளிகளுக்கும், காலேஜ்களுக்கும் சென்று விடுகிறார்கள்; பெரியவர்களும் தங்கள் தங்கள் கச்சேரிகளுக்குச் சென்று விடுகிறார்கள். மாலை நேரத்தில் அலுத்துச் சலித்து வீடு திரும்பும் இவர்களுக்கு வீட்டில் ஏதாவது ஒரு பலஹாரம் செய்து வைக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது. கீழே சில பலஹார வகைகளை எழுதி இருக்கிறேன்.

### தயிர்வடை

இது சாதாரணமாக, வடை செய்து தயிரில் ஊற வைத்துச் செய்யும் வடை யன்று; தயிரினாலும், ரவையினாலும் செய்யப்படும். பலஹாரம் கெட்டியானதும், சுத்தமானதுமான

ஒரு சவுக்கத்தில், அரைப்படி தயிரைக் காலையிலேயே கொட்டி அதன் மூலைகளைச் சேர்த்துத் தூக்கிக் கட்டி ஓர் இடத்தில் தொங்கவிட வேண்டும். மத்தியான்னமாக எடுத்துப் பார்த்தால் இதன் ஈரமெல்லாம் வடிந்து, தயிர்நல்ல கெட்டியாக, மொத்தை போலிருக்கும். தொங்க விட்டிருக்கும் தயிருக்கு அடியில் ஒரு வாயகலமான பாத்திரத்தையோ அல்லது தாம்பாளத்தையோ வைத்திருந்தால், ஜலம் கீழே சொட்டாமல் இருக்கும். இறுகலான தயிர் மொத்தையில் இரண்டு பலம் நிறுத்து எடுத்து ஓர் ஈயம் பூசின பாத்திரத்தில் போட்டுக் கொள்ள வேண்டும், வேண்டிய அளவ உப்பு, நறுக்கின இஞ்சி, பச்சை மிளகாய், கொத்துமல்லி இவைகளைத் தயிர் மொத்தையில் போட வேண்டும். பிறகு, ஒன்றரைப் பலம் சுத்தம் செய்த ரவையை இதில் போட்டு நன்ருகப் பிசைந்து கொள்ள வேண்டியது. அடுப்பில் நெய்யை வைத்து மொத்தையில் ஒரு சிறிய எலுமிச்சம்பழ அளவு எடுத்து மெல்லியதாகத் தட்டிப்போட்டுச் சுட்டு எடுத்துக் கொள்ள வேண்டியது. தயிர் சேர்ந்திருப்பதினல் இதைச் சற்றுச் சூடாகச் சாப்பிட்டால் ருசியாக இருக்கும்.

## நுரைவடை

சுமார் ஒரு படி ஜலத்தை ஒரு பாத்திரத்தில் விட்டுக் காய்ச்ச வேண்டும். ஜலம் கொதிக்கத் துவக்கினதும் கால்படி உளுத்தம்பருப்பை அதில் கொட்டி ஒரு கொதி வந்ததும் இறக்கி, மூடி வைத்துக் கொள்ள வேண்டும். பருப்பு ஏறக் குறைய அரைமணி நேரம் ஊறின பிறகு, கொஞ்சம் தேங்காய்த் துருவல், பெருங்காயம், பச்சைக் கொத்துமல்லி, வேண்டிய அளவு உப்பு, பச்சை மிளகாய் இவைகளை உரலில் போட்டு, வேகவைத்திருக்கும் பருப்பை வடித்துப் போட்டு, வெண்ணெய்போல் அரைத்துக் கொள்ள வேண்டும். வீசம்படி அரிசி மாவை இந்த மொத்தையில் கலந்து, நெய்யும் எண்ணெயுமாகக் கலந்துவைத்து, வடைகளாகத் தட்டிப் போட்டுச் சுட்டு எடுத்துக் கொள்ள வேண்டும் வடை மெதுவாக இருக்க வேண்டும் என்று பிரியப்படுகிறவர்கள், ஓர் எலுமிச்சங்காய் அளவு வெண்ணெயை மாவில் கலந்து கொள்ளலாம்.

## மைதாமாப் பக்ஷணங்கள்

மைதாமாவைக்கொஞ்சம் ஜலம்விட்டு இறுகலாகப் பிசைந்து, அப்பளம் இட்டுப் பலஹாரங்கள் செய்யலாம். மாவைப் பிசையும்

பொழுது இறுகலான நெய்யையும் சேர்த்துக் கொண்டால், மா கையில் ஒட்டிக் கொள்ளாமல் இருக்கும். அரைக்கால்படி மாவை நன்ருகப் பிசைந்து கொள்ள வேண்டும். இதை ஆறு உருண்டைகளாக உருட்டி கனமான அப்பளங்களாக இட்டுக் கொள்ள வேண்டும். கொஞ்சம் கெட்டி நெய்யையும், குங்குமம் போல் சலித்த அரிசிமாவையும் ஒரு தாம்பாளத்தில் போட்டு நன்ருகத் தேய்த்துக் கொள்ளவேண்டும். இதை இட்டு வைத்திருக்கும் அப்பளங்கள் மேல் தடவி, மூன்று அப்பளங்களைச் சேர்த்துச் சுருட்டிக் கொள்ள வேண்டும். மற்ற மூன்று அப்பளங்களையும் இவ்விதமே செய்ய வேண்டும். இதில் கொஞ்சம் மாவை எடுத்துச் சற்று கனமான சிறிய அப்பளமாக இட்டு, நெய்யில் பொரித்துச் சர்க்கரைப் பாகில் தோய்த்து எடுத்துக் கொள்ள வேண்டும். இது பாகு மேல் தோய்ந்துகொண்டு வெகு ருசியாக இருக்கும். இதே மாதிரியில் மாவைத் தயாரித்து, அதில் நெய்க்குப் பதிலாக ஒரு பெரிய எலுமிச்சம் பழ அளவு வெண்ணெயையும், நன்ருகப் பொடி செய்யப்பட்ட மிளகுத் தூளையும், வேண்டிய அளவு உப்பையும் சேர்த்து, பதிர் போட்டு இட்டுப் பொரித்தால் கரகரப்பாகவும் வாய்க்கு ஆரோக்கியமாகவும் இருக்கும். மைதாமா அப்பளம் இட்டுப் பொரித்து, பாலில் சக்கரை கலந்து நனைத்து வைத்தால் பால் போளி ஆகிவிடும். ரவையை இடிப்பது போல் சிரமப்பட வேண்டியது இல்லை. வாதாங்கொட்டையை ஊற வைத்து உரித்த பருப்புக்களை இரண்டாகப் பிளந்து நீள வாட்டத்தில் மெல்லிய துண்டுகளாக நறுக்கிப் பொரித்து எடுத்துக் கொள்ள வேண்டும் குங்குமப்பூ, ஏலப்பொடி முதலியவைகள் போட்டு நன்ருகப் பாலைக் காய்ச்சிப் பக்குவமாகச் சர்க்கரை போட்டு மைதாமா அப்பளங்கள் இட்டுப் பொரித்துப் பாலில் நனைத்துக் கொள்ள வேண்டும். நனைத்த அப்பளத்தை அப்படியே ஒரு தாம்பாளத்தில் போட்டு வறுத்துத் தயாராக வைத்திருக்கும் வாதுமைப் பருப்பை அதில் தாராளமாகத் தூவி மடித்துக் கொள்ள வேண்டும். இந்தப் போளி மிகவும் ருசியாக இருக்கும்.

## காகித பர்பி

நாலைந்து பலம் நெய்யில் கொஞ்சம் குங்குமப் பூவைக் கரைத்துக் கொள்ள வேண்டும். இதில் அரைக்கால்படி கோதுமை மாவையும், அரைக்கால் படி சர்க்கரையையும்போட்டு நன்ருகப். பிசைந்து கொள்ள வேண்டும். கொஞ்சம் ஏலப்

பொடியையும் கலந்து கொள்ள வேண்டும். ஒரு தட்டில் ஒரு வெள்ளைக் கடிதாசைப் போட்டு அதன் மேல் இந்த மொத்தையைப் பரப்பவேண்டும். ஒரு விரல் கனமுள்ளதாக ஒரே சீராகப் பரப்பிக் கத்தியினுல் வில்லைகளாக நறுக்கி விட வேண்டும். கும்மட்டியில் தணலைப் போட்டு, அதன் மேல் தாம்பாளத்தை வைத்து மற்ருெரு தாம்பாளத்தினுல் மூடிவிட வேண்டும். கொஞ்ச நேரத்திற்குப் பின் மூடி இருக்கும் தாம்பாளத்தின் மேல் கொஞ்சம் தண்ணீரை விடவேண்டும். அது சுரு சுரு என்று வற்ற ஆரம்பித்தால், தாம்பாளத்தை அடுப்பை விட்டு இறக்கிவிட வேண்டியது. நன்ருக ஆறினதும், பர்பியைக் கடிதாசை விட்டு எடுத்து வைத்துக் கொள்ள வேண்டும்.

---

# பழைய விடுகதைகள்

கே. என். லக்ஷ்மி அம்மாள்

1. வட்ட வட்டச் சிங்கன்ஞ
வாலில்லாத சிங்கன்ஞ
என்னை வந்து எழுப்பன்ஞ. (மூட்டைப்பூச்சி)

2. பத்துவிரல் பந்தாட
ஐந்துவிரல் அமர்ந்திருக்க,
சூரியனுடன் வாதாட
எமனுடன் போராட. (வரட்டி)

3. வண்ணுன் வெளுக்காத வெள்ளை
குயவன் பண்ணுத பாண்டம்
மழைபெய்யாத தண்ணீர். (தேங்காய்)

4. பச்சைப் பசுத்திருக்கும் பாகற்காயுமல்ல
பச்சைமுள்ளுப் படர்ந்திருக்கும் பலாக்காயுமல்ல
உள்ளே வெளுத்திருக்கும் தேங்காயு மல்ல
உருக்கினுல் நெய்காணும் வெண்ணெயு மல்ல.
—(கோட்டைமுத்து)

5. நாலு காலுண்டு வீச வாலில்லை. (நாற்காலி)

# பாலர் வகுப்புப் பாஷைப் பாடமும் விளையாட்டுப் பயிற்சிகளும்

எஸ். ஜகந்நாதன்

(92-ஆம் பக்கத் தொடர்ச்சி)

## ஒரே எழுத்தில் அல்லது சப்தத்தில் முடியும் வார்த்தைகள்



கடை, வடை, குடை, கூடை, சட்டை என்று ஒரே தொனியில் முடியும் வார்த்தைகளைத் திரும்பத் திரும்பப் படிக்கக் குழந்தைகள் ஆசைப்படுகிறார்கள். இங்கே காட்டிய "டை" அட்டையைச் சுற்றி வரப் புதுப்புது வார்த்தைகள் வரும். அதேமாதிரி "ப்பு" என்று அட்டையை எழுதி, பாக்கியுள்ள எழுத்துக்களையும் அட்டையில் எழுதி வைத்தால், "செருப்பு, உப்பு, பருப்பு, வெளுப்பு" என்ற வார்த்தைகள் முறையே கிடைக்கும்.

செரு }
உ } ப்பு
பரு }
வெளு }

## 5. மற்றொரு விதம்




ஒரு நீண்ட அட்டையில் "ந்து" என்று எழுதி அதை மற்றொரு நீண்ட அட்டையில் சுலபமாகத் தள்ளக் கூடியபடி செருகி விட வேண்டும். "சந்து, பந்து, ஐந்து" என்ற பிரகாரம் வார்த்தைகள் வரும்.

அதேமாதிரி,

| | | | |
|---|---|---|---|
| "ன்று" | முதலிய | ஒன்று, கன்று, மூன்று | என்ற வார்த்தைகள் |
| "ண்டு" | வைக | குண்டு, கூண்டு, நண்டு | வரும்படி செய்து |
| "ஞ்சு" | ளுக்கும் | குஞ்சு, பஞ்சு, பிஞ்சு | கொள்க. |
| "ங்கு" | | நுங்கு, தூங்கு, குரங்கு | |

## 6. ஒரே எழுத்தில் ஆரம்பிக்கும் பல வார்த்தைகள்



"பா" என்று நடுவிலுள்ள அட்டையைச் சுற்றிவர, பாய், பாட்டி, பாடம், பாக்கு, பாலம், பால் என்ற வார்த்தைகள் கிடைக்கும்.

## 7. ஒரே இனத்தைச் சேர்ந்த வார்த்தைகள்




படத்தில் காட்டியபடி 'மரம்' என்ற அட்டையை மேலேயும் கீழேயும் தள்ளினால் பற்பல மரங்களின் பெயர்கள் தெரியலாகும்.

இம்மாதிரி, பழம், பூ, இலை, முதலியவைகளின் பெயர்களைக் காட்டக்கூடிய வார்த்தைகளைச் சேர்த்துக் கொள்ளலாம். இப் பலகையைச் சுவரில் தொங்கவிடலாம். பிள்ளைகள் ஒழிந்த நேரங் களில் பலகையை எடுத்து விளையாடலாம்.

## 8. வேறு ஒரு மாதிரி

பின்னே காட்டியபடி ஒரே அறையுள்ள பெட்டி தயார்செய்க. 'வண்டி' என்று எழுதப்பட்டிருப்பதால் இதன் அறையில் பல வண்டிகளின் பெயர்களைக் குறிக்கும் வார்த்தைகள் இருக்கும் என்று அறியலாம்.




| | |
|---|---|
| ரயில் | வண்டி. |
| மோட்டார் | |
| ஜட்கா | |
| குதிரை | |

ரயில் என்ற வார்த்தையை “வண்டி” என்பதற்கு முன் வைத்து ரயில்வண்டி என்று படிக்கவேண்டும். இதேபோல் “கிழமை”, “பெட்டி”, “ஊறுகாய்”, “கிழங்கு” வகைகளில் பல சொற்களைச் சேர்க்கலாம்.

## 9. குறில் நெடில்

இப்படத்தில் குறில், நெடில் தொனிகளின் வித்தியாசத்தைக் காட்டத்தக்கவாறு சில வார்த்தைகள் படமூலமாக விளக்கப்பட்டிருக்கின்றன.

உதாரணம்:




| | |
|---|---|
| பனை | பானை |
| குடை | கூடை |
| மலை | மாலை |
| சட்டை | சாட்டை |

இம்மாதிரியே பல அப்பியாசங்கள் கொடுக்கப்படவேண்டுவது அவ்சியமாகும். மேல்வகுப்புக் குழந்தைகள் இந்தவிஷயத்தில் பெரும் பிழை செய்கிறார்கள் என்று கண்டறிந்திருக்கிறோம். இவைகளை நீக்க ஆரம்ப வகுப்பு முதற்கொண்டே பயிற்சி அளிக்கவேண்டியது முக்கியம்.

## 10. ல ள வித்தியாசங்கள்




உச்சரிப்புப் பிழை என்று ஒன்று உளது, முக்கியமாக ல, ள - ர, ற - ந, ன, ண - இம், மூன்று வகைகளில் உச்சரிப்புப்பிழை, எழுத்துப் பிழை இவ்விரண்டும் காணப்படுகின்றன. இப்பிழைகளினால் பதங்களின் அர்த்தமே மாறிவிடுகிறதைக் கவனிக்கச் செய்வது நமது கடமையாகும்.

இப்படத்தில் { வலை வளை, தவலை தவளை, புலி புளி, வால் வாள் } என்ற வார்த்தைகள் படத்தின் மூலமாக விளக்கப்பட் டிருக்கின்றன.

மேல் வகுப்புக்களில் (ர, ற; ந, ன, ண) இவைகளின் வித்தியாசங்களைக் காட்டத் தக்கவாறு வார்த்தைகளைப் பொறுக்கிக் கொள்ளவேண்டும்.

## 11. குழந்தைகளின் அச்சுக்கூடம்

இங்கே காட்டிய பிரகாரம் 16 அறைகள் உள்ள ஒரு பெட்டி தயார்செய்து கொள்க. 2 அங்குல சதுரமுள்ள அட்டைத்துண்டுகளில் தமிழ்ப் பாஷையிலுள்ள எழுத்துக்களை அட்டை ஒன்றுக்கு ஒவ்வோரெழுத்தாக எழுதுக. 'அ' என்ற அறைக்குள் க, ங, ச, ஞ முதலிய 18 எழுத்துக்களும், 'ஆ' என்றஅறைக்குள் கா, ஙா, சா, ஞா முதலிய எழுத்துக்களும் அம்மாதிரியே பாக்கி அறைகளில் பாக்கி எழுத்துக்களும் முறையே வைக்கப்பட்டிருக்கின்றன.

| | | | |
|---|---|---|---|
| அ | ஆ | இ | ஈ |
| உ | ஊ | எ | ஏ |
| ஐ | ஒ | ஓ | ஔ |
| ஃ | ஜ ஸ | ஷ க்ஷ ஹ | |

(i) குழந்தைகளுக்கு ஆரம்பத்தில் சிறு சிறு வார்த்தை யாகச் சொல்லிக் கொடுக்கும் பொழுது வார்த்தைகளை எழுதி அவைகளில் அடங்கிய எழுத்துக்களை வரிசைப்படப் பொறுக்கி வைக்கச்சொல்லலாம்.

(ii) தினசரி சமாசாரப் பத்திரிகைகளில் பெரிய எழுத் துக்களில் காணப்படும் சில சுலபமான வார்த்தைகளைக் கத்தரித்து வைத்துக்கொண்டு அவற்றைப்போல் குழந்தைகள் எழுத்துக்கள் அமைத்துக்காட்டச் சொல்லுவது சரியான பயிற்சியாகும்.

குறிப்பு

ஒரே எழுத்தில் 2, 3-ஆவது வேண்டியிருக்கும்; ம், க், ப், போன்ற ஒற்றுக்களில் பல எழுத்துக்களும் வேண்டியிருப்பதை அறிந்து இவைகளில் அதிக எழுத்துக்கள் தயார் செய்துவைப்பது நன்மையாகவிருக்கும்.

## 12. விளம்பரங்கள்

தெருக்களில் விளம்பரக்காகிதங்கள் கொடுத்துக் கொண்டு போகிற காலத்தில் நமது குழந்தைகள் அந்தக் காகிதங்கள் வாங்கி வர ஆசைப்படுவதை நாம் பார்த்திருக்கிறோம். அம்மாதிரி சுலப மான விளம்பரங்களைப் பாலர் வகுப்புக் குழந்தைகளுக்கு எழுதிக் கொடுத்து அவர்களைப் படிக்கச்செய்ய வேண்டுமென்பது எனது ஆசை. அதில் குழந்தைகளும் சந்தோஷிக்கிறார்கள். அந்த விளம்பரங்களில் ஏதாவது படங்கள் இருப்பின் போற்றத் தக்கதாகும்.



தேள்கடி மருந்து

கொட்டுவலி உடனே நீங்கும்

இரண்டு புட்டி: நான்கு அணா.

## 13. ரயில்வே ஸ்டேஷன்களின் பெயர்கள்

சற்றே படிக்கத்தெரிந்த குழந்தைகள் ரயில்வேஸ்டேஷனில் காணப்படும் ஸ்டேஷன் பெயரைப் படிக்க ஆசைப்படுகிறார்கள். பள்ளிக்கூடத்திலும் இவ் விஷயத்தில் தக்க பயிற்சிகொடுக்கலாம்.



ஸ்டேஷன்கள் பெயர்களைத் தூண் அல்லது மரத்திற்கு ஒன்றாகத் தொங்கவிடுக. கொஞ்சம் படிக்கத் தெரிந்த குழந்தைகளுக்கும் டிக்கட்டுகள் எழுதிக் கொடுக்கலாம்.

| | | |
|---|---|---|
| கிண்டி | பறங்கிமலை | பல்லாவரம் |

சிறுகுழந்தைகள் ரயில்வண்டிகளாக இருந்து, டிக்கட்டு உள்ளவர்கள் பிரயாணிகளாகவுமிருந்து இந்த ஆட்டத்தை நடத்துகிறார்கள். டிக்கட்டுஉள்ளவர்கள் சரியான இடத்தில் நின்றுவிடுகிறார்களா என்று கவனிக்க வேண்டும்.

## 14. பிள்ளைகளின் பெயர்கள்

உபாத்தியாயர் வகுப்பிலுள்ள குழந்தைகளின் பெயர்களை ஒன்று ஒன்றாக எழுதுகிறார். பிள்ளைகள் அவற்றை மனதினுள் படிக்கவேண்டும்; எந்தக் குழந்தையின் பெயர் எழுதப்பட்டிருக்கிறதோ அக்குழந்தைமாத்திரம் எழுந்து நிற்கவேண்டும்.

கோபாலன் ஆல்பர்ட்
முருகன் முனிசாமி
கந்தசாமி காதர் பாச்சா
கமலம் தனசிங்.

## 15. குறித்த காரியங்களைச் செய்யச்சொல்லுதல்

(i) 'கந்தா கதவைச் சாத்து' என்று எழுதினவுடன் கந்தன் எழுந்துவந்து கதவைச் சாத்தவேண்டும். அவனே மனதில் படித்து அக்காரியத்தைச் செய்வானானால் அவனுக்குப் படிக்கத் தெரியுமென்றும், படித்த விஷயத்தை நன்றாய் அறிந்து கொண்டானென்றும் நாம் தெரிந்து கொள்ளலாம்.

(ii) தலை குனி, தலை நிமிர், தலை சாய், தலை அசை.

என்று ஒன்று ஒன்றாக எழுதக் குழந்தைகள் அம்மாதிரி செய்கிறார்களா என்று கவனிக்கலாம்; யார் முதலில் செய்கிறார்கள்; யார் பிறரைப் பார்த்துச் செய்கிறார்கள் என்றும் உபாத்தியாயர் கவனிக்கலாம்.

## 16. பழைய பாட்டுக்களைப் படித்தல்

உதாரணம்:

காக்கா கண்ணுக்கு மை கொண்டுவா,
குருவி கொண்டைக்குப் பூ கொண்டுவா,
கொக்கே குழந்தைக்குத் தேன் கொண்டுவா,
கிளியே கிண்ணத்தில் பால்கொண்டுவா.

## 17. படமும் வாக்கியங்களும்

ஓர் அட்டையில் ஒருபடம் ஒட்டி அதைக்குறித்து எளிய நடையில் சில சிறுவாக்கியங்கள் எழுதிக்கொடுக்கவேண்டும். ஒவ்வொரு குழந்தைக்கும் வெவ்வேறு அட்டைகள் கொடுப்பதுதான் நல்லது.



1. இது ஒரு தேர்.
2. தேரில் சுவாமி இருக்கிறார்.
3. தேர் பார்க்க ஜனங்கள் வருகிறார்கள்.
4. தேரில் கொடி பறக்கிறது.
5. தேர் வெகு அழகாய் இருக்கிறது.
6. தேர்த் திருநாள் வெகு நன்றாய் இருக்கும்.

இதேபோல் சுவரில் தொங்கவிடக்கூடிய படங்கள் "கலைமகள்" ஆபீஸில் படம் ஒன்றுக்கு முக்காலணாவீதம் ஒன்பது படங்கள் கிடைக்கும்; அவற்றை உபாத்தியாயர்கள் வாங்கிப் பாஷைப் பாடம், கதை, படங்கள், சம்பாஷணை, மனதிலுள்ள கருத்தைப் பாஷைமூலமாக வெளியாக்குதல், என்பவை போன்ற பாடங்களில் உபயோகிப்பது பொருத்தமாகும்.



# நிலாவை அழைத்தல்

## 1

நிலா நிலா வாவா! நில்லாமல் ஓடிவா!
மலைமேலே ஏறிவா! மல்லிகைப்பூக் கொண்டுவா!
நடுவீட்டில் வையே, நல்லதுதி செய்யே;
வெள்ளிக்கிண்ணத்தில் பாலும் சோறும்
எடுத்தெடுத்து அப்பன் வாயில்
கொஞ்சிக் கொஞ்சி ஊட்டு!
குழந்தைக்குச் சிரிப்புக் காட்டு!

## 2

அம்மா! அம்மா! வாவா!
அதோ பார் சந்தமாமா!
அழகிய நல்ல சந்தமாமா!
வாவா வா சந்தமாமா!
அம்மா மடியில் ஓடிவா!
அப்பா தோளில் ஏறிவா!
அங்கும் இங்கும் திரிந்துவா!
ஆறும் மலையும் தாண்டிவா!
நல்ல நல்ல கதைசொல்ல
நன்றாய்ச் சிரித்து ஓடிவா!

[சூடாமணி.]

காலஞ்சென்ற ஸ்ரீமான்

# டி. எஸ். இராமச்சந்திர ஐயரவர்கள்

கலைமகள் பத்திரிகையின் நிர்வாக ஆசிரியராக இருந்த ஸ்ரீமான் டி. எஸ். இராமச்சந்திர ஐயர் அவர்கள் சென்றமாதத்தில் திடீரென்று காலமானதை நமது நேயர்களுக்கு மிகவும் வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம். இவர்களையே பெருந்துணையாகக் கொண்டு ஸ்ரீமான் நாராயணஸ்வாமி ஐயரவர்கள் இப்பத்திரிகையைத் தொடங்கினார்கள். இவர்களும் அந்தப் பொறுப்பை உற்சாகமாக மேற்கொண்டு தமது சிறந்த அறிவையும் அரிய அனுபவத்தையும் இதை நடத்துவதில் செவ்வனே உபயோகித்து வந்தார்கள். இவர்களுடைய மேற்பார்வையில் பத்திரிகை மேன்மேலும் அபிவிருத்தியாய்க்கொண்டு வந்தது. இந்நிலையில் இவர்களை இழக்க நேரிட்டது பத்திரிகையின் துரதிர்ஷ்டம் என்றே சொல்லவேண்டும்.

இராமச்சந்திர ஐயரவர்கள் தமிழிலும், வடமொழியிலும், ஆங்கிலத்திலும் திறமை உள்ளவர்கள். 'கலைமகள்' தோன்றுவதற்கு ஐயரவர்களே முக்கியகாரணராக இருந்தார்கள். தமிழ்மொழியின் மேல் இவர்கள்கொண்ட அன்பே இவர்களை இம் முயற்சியில் தூண்டியது. இவர்கள் எளிய வாழ்க்கையையும் உயர்ந்த லக்ஷியங்களையும் அரிய கல்வித் திறமையையும் உடையவர்கள்; அரசியல் விஷயங்களை உருவகித்து மிகவும் அழகாகக் கதைபோல எழுதும் ஆச்சரியமான வன்மை பெரிதும் வாய்ந்தவர்கள். இத்தகைய விசேஷமான திறமை வாய்ந்தவர் ஒருவர் மேலைநாடுகளில் பிறந்திருப்பாரானால் அவர் பத்திரிகை யுலகத்திலே பெரும்பதவியையும் பெயரையும் பெற்றிருப்பாரென்பது திண்ணம்.

இவர்களுடைய மரணம் காரணமாக 29-7-34-ல் கூடிய அனுதாபக் கூட்டத்திலே தலைமைவகித்த மகாமகோபாத்தியாய ஸ்ரீமான் எஸ். குப்புஸ்வாமி சாஸ்திரிகள் அவர்களும், 'கலைமகள்' பத்திராதிபர்களின் சார்பாக ஸ்ரீமான் டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்களும், தமிழ்ப்பத்திராதிபர்களின் சார்பாக ஸ்ரீமான் ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களும் இவ்விஷயங்களைப்பற்றி விரிவாக எடுத்துக் கூறினார்கள். ஸ்ரீமான் இராமச்சந்திர ஐயரவர்களின் எதிர்பாராத மரணத்தால் நாங்கள் அடைந்துள்ள பெருந்துயரத்தை இதன்மூலம் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

**கலைமகள் பத்திரிகாசிரியர்கள்**

# யார்தான் அறியக்கூடும்?

வித்துவான் கி. வா. ஜகந்நாதன்

“தலைவலி யென்று பற்றிப் போட்டதைக்கூட நான்பார்த்த தில்லையே” என்றேன் நான்.

“ஆமாம்! எப்பொழுதும் ஜாக்கிரதையாகவேதான் இருப்பது வழக்கம். பிரமாதம் ஒன்றும் இல்லை. 102 டிகிரிதான் இருக்கிறது. படுக்கை போட்டுப் படுத்தது வழக்கமில்லை யாகையால் எனக்குக் கொஞ்சம் சிரமாயிருக்கிறது” என்றார் அவர்.

அன்று திங்கட்கிழமை. ‘கலைமகள்’ நிருவாகப்பத்திரிகாசிரியர் ஸ்ரீமான் டி. எஸ். இராமச்சந்திரையரவர்கள் சிறிது ஜ்வரமென்று படுத்துக்கொண்டிருந்தார்.

அடுத்த திங்கட்கிழமை (23-7-34) யன்று அவர் நம்மை விட்டுப் பிரிந்துவிடுவாரென்று யார்தான் முன் அறியக்கூடும்? ஆனால், நம்முடைய ஊகத்திற்கு எட்டாத காலம், அவருடைய வாழ்வுக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டது.

இராமச்சந்திரையர் ‘கலைமகள்’ நிருவாகப்பத்திரிகாசிரியராக உழைத்த இளைஞர்; வயதினாலன்று, ஊக்கத்தினால். அவர் வளர்த்த ‘கலைமகள்’ பச்சிளமையில் உலவுகிறாள். உபகாரச் சம்பளம் பெற்ற உத்தியோகஸ்தரென்று அவரை அவர் எழுத்தைக் கொண்டு சொல்லிவிடமுடியாது. குதூகலமுள்ள இளைஞர்களுடைய எண்ணங்களும் பரிஹாஸமும் அவருடைய பேச்சிலும் எழுத்திலும் விளங்கின.

அறுபத்துமூன்று வருஷங்கள் ஆனவர் என்று அவருடைய ஜாதகம் சொல்லுகின்றது. அவர் திருவிடைமருதூரில் 1871-ஆம் வருஷம் பிறந்தவர். இளமையிலேயே தந்தையை இழந்தார். இளமைக்கல்வியை ஒழுங்காகக் கற்றபின்பு 1880-ஆம் வருஷம் சென்னைக்கு வந்து கல்விபயின்றார். பச்சையப்பன் கலாசாலையிலும் பிறகு கிறிஸ்தவக்கலாசாலையிலும் படித்தார். அவருடைய திறமையைக்கண்டு அவரைச் சம்பளமில்லா மாணவராகக் கலாசாலை அதிகாரிகள் சேர்த்துக்கொண்டார்கள்.

1891-ஆம் வருஷம் பி.ஏ. பரீட்சையில் அவர் தேர்ச்சிபெற்றார். படிக்கும்பொழுதே நூல்களில் ஒருதனிச்சுவையையுடையவராக இருந்தார். தமிழ்ப்பாடங்களை மிகக்கருத்துடன் வாசித்து வந்தார். பிற்காலத்தில் அவர் அடிக்கடி, தமக்குத் தமிழ்ப்பாடஞ்

சொல்லிய பண்டிதர் சின்னசாமிபிள்ளையைப்பற்றிப் பாராட்டு வதுண்டு. தமக்கு இருந்த தமிழபிமானத்தினால், கிறிஸ்தவக் கலாசாலையில், சிறந்த வியாசம் எழுதும் கலாசாலைமாணவ னொரு வனுக்கு வருஷந்தோறும் பரிசு ஒன்றை அளிப்பதற்குரிய நிதியாக ரூ. 500 வழங்கியிருக்கிறார்.

பிறகு அவர் 'ரிஜிஸ்ட்ரேஷன் இலாகா'வில் உத்தியோகத்தில் அமர்ந்தார். குமாஸ்தாமுதலாகக் காரியதரிசி வரையிலுள்ள உத்தியோகங்களை அவர் முறையே பார்த்தார். அக்காலங்களில் மேலதிகாரிகள் அவருடைய வேலைத்திறமையையும் அறிவின்வன்மையையும் கண்டுவியந்தார்கள். உத்தியோகவேலைகளை மிகவும் விரைவாகச்செய்துமுடிப்பதில் சிறந்தவரென்ற புகழை அவர் பெற்றார். 1913-ஆம் வருஷம் அவர் ஜில்லா ரிஜிஸ்ட்ராராக ஆனார். 1910-ஆம் வருஷம் முதல் 1924-ஆம் வருஷம் வரையில் இன்ஸ்பெக்டர் ஜனரலிடம் உதவி உத்யோகஸ்தராக (*Personal assistant*) இருந்தார். 1926-ஆம் வருஷம் வேலையிலிருந்து நீங்கி உபகாரச் சம்பளம் பெற்றுவந்தார். அவர் தம்சொந்த முயற்சியினாலேயே முன்னுக்குவந்தவரென்று அவருடைய நண்பர்கள் சொல்வார்கள்.

பிற்காலமெல்லாம் ஸ்ரீமான் இராமச்சந்திரையர் ஒருரிஷியைப் போல வாழ்ந்துவந்தார். நூல்களைப்படிப்பதும் வித்துவான்களுடன் ஸல்லாபம் செய்வதும் அவருடைய பொழுதுபோக்காக இருந்தன. உத்தியோக காலங்களிலேயே ஓய்வு நேரத்திலெல்லாம் கம்பராமாயணம், தேவாரம் முதலிய நூல்களைப்படித்து இன்புற்று வருவது அவர் வழக்கம். ஆங்கிலம், வடமொழி, தமிழ் என்னும் மூன்றிலும் அவருக்கிருந்த சிறந்த பயிற்சி அவருடைய வாழ்க்கைக்கு இன்பமூட்டுவதாக அமைந்தது. கம்பராமாயணத்தில் பெரும்பாலான செய்யுட்கள் அவருக்கு மனப்பாடம். ஏதாவது ஓரிடத்தைச்சொன்னால் முன்னும் பின்னும் உள்ள பாடல்களையும் அந்த இடத்திலுள்ள அபிப்பிராயங்களமைந்த வேறுபல செய்யுட்களையும் தங்குதடையின்றிச் சொல்லுவார். 'பென்ஷன்' பெற்ற உத்தியோகஸ்தரொருவர் அத்தகைய ஞாபகசக்தியும் அறிவும் வாய்ந்தவராக இருந்தாரென்பதை அறிந்த யாவருக்கும் அவர் இயல்பு ஆச்சரியத்தை உண்டாக்கிற்று. அவர் வால்மீகி ராமாயணத்திற்கும் கம்பராமாயணத்திற்கும் உள்ள வேறுபாடுகளையும் ஒற்றுமைகளையும் நன்றாக ஆராய்ந்துவைத்திருந்தார். 'கம்பராமாயணந்தான் சிறந்தது' என்றும், 'வால்மீகி ராமாயணந்தான் சிறந்தது' என்றும் கூறுபவர்களை அவர் விரும்பார். ஒவ்வொன்றும்

ஒவ்வொருவகையிற் சிறந்ததென்பது அவருடைய அபிப்பிராயம். 'வால்மீகி உண்மைவாழ்க்கையை (*Realistic life*) அநுசரித்துப் பாடினார்; கம்பர் லட்சியவாழ்க்கையை (*Ideal life*) அநுசரித்துப் பாடினார்' என்பதே அவருடைய கருத்து. ஒரு நூலை முற்றும் ஆராயாமல் அங்கங்கே கண்ட சிலவற்றைக்கொண்டு அபிப்பிராயம் சொல்லுதலை அவர் சிறிதேனும் போற்றார். குற்றத்தைக் குற்றமென்று கூறுவதற்கு அஞ்சார்.

உலகஸ்வபாவத்தை அவர் நன்றாக அறிந்திருந்தார். நாள்தோறும் தவறாமல் சாமாசாரப் பத்திரிகை படிப்பார். ஹிட்லருடைய நாஜி இயக்கத்தின் நுணுக்கம்முதல் அடுப்பங்கரைப் பாட்டியின் பேச்சுஸ்வாரஸ்யம்வரையிலுள்ள விஷயங்களில் அவருடைய வேடிக்கைப் பேச்சு விரவும். கூடார்த்தக்கதைகளை எழுதும் ஆற்றல் அவர்பால் இருந்தது. பல வருஷங்களுக்குமுன் அவர் 'தமிழ் உலகு' என்னும் பத்திரிகையில் தென் ஆப்பிரிக்காவில் இருந்த இந்தியரின் நிலை முதலிய விஷயங்களைக் கூடார்த்தக் கதைகளாகவும் புராணப்பாட்டாகவும் அமைத்து வெளியிட்டிருக்கிறார். 'கலைமகள்' பத்திரிகையிலும் அத்தகைய கதைகள் சில வெளிவந்துள்ளன. உலகத்திலுள்ள சில அசட்டுவாதங்களையும் உலகத்தை ஏமாற்றிவரும் பேர்வழிகளின் நடத்தைகளையும் பரிஹஸித்து எழுதிய பல கட்டுரைகள் 'சோதிடப்புலி சோணாசலம்' என்ற தலைப்பில் 'தமிழ்உலகி' லும் 'கலைமகளி' லும் வெளி வந்திருக்கின்றன.

அவருடைய பேச்சில் எப்போதும் ஹாஸ்யம் கலந்து இருக்கும்: ப்ரம்மசூத்திரத்தைப் பற்றிப் பலவித்துவான்கள் விசாரித்துக்கொண்டிருப்பார்கள்; அவர்களோடு அவரும் இருப்பார்; அந்த வேதாந்தத்தோடு வேடிக்கையும் கலக்கும்படி அவர் செய்வார். இது பொய்யல்ல.

மயிலாப்பூர் ஸம்ஸ்கிருதகாலேஜ் தெருவில் உள்ளது அவர் வீடு. அங்கே வாசலில் ஒரு சாய்வான நாற்காலியில் அவர் அமர்ந்திருப்பார். சுற்றுத்திண்ணைகளில் ப்ரம்மஸ்ரீ மஹாமஹோபாத்தியாய கருங்குளம் கிருஷ்ணசாஸ்திரிகள் முதலிய பண்டிதர்களும் வேறு சில நண்பர்களும் உட்கார்ந்திருப்பார்கள். ஏதாவது உபயோகமுள்ள விஷயத்தைப்பற்றிப் பேச்சு நடந்துகொண்டிருக்கும். தூரத்திலிருந்து கவனிக்கும் ஒருவனுடையகாதில் இரண்டு நிமிஷத்துக்கு ஒரு முறை சிரிப்புக்கோஷம் அவ்விடத்திலிருந்து வந்துவிழும். பேச்சு வேதாந்தமோ, சித்தாந்தமோ, லோக வியவஹாரமோ, இராமாயணமோ ஏதானாலும் சரி, அதற்கிடையில் அடிக்கடி

சிரிப்பில்லாமல் இராது. அதற்குக் காரணம் இராமச்சந்திரையருடைய ஹாஸ்யப்பேச்சுக்களே.

உயர்ந்த உத்தியோகத்தில் இருந்தவரென்று, அவரைப்பார்த்த மாத்திரத்தில் கண்டு பிடிக்க முடியாது. பழுப்பேறிய கதராடையும் நெற்றியிற் கீற்றுச் சந்தனமும் உடைய அவருடைய எளிய கோலம் அவரது குதூகலஸ்வபாவத்தோடு கலந்து அவரை ஒரு ப்ரம்மவித்தைப்போல நினைக்கச்செய்தது; இது நான் சொல்வது மாத்திரமன்று; அவருடைய மரணத்தைப்பற்றிய இரங்கற்கூட்டத்திற் பேசிய ப்ரம்மஸ்ரீ மஹாமஹோபாத்தியாய சருங்குளம் கிருஷ்ணசாஸ்திரிகள், "அவர் இறக்கும்பொழுதும் தைரியமாகவே இருந்தார். 'எல்லோரும் பயப்படுகிறார்கள், என்ன செய்கிறது?' என்று நான் கேட்டபொழுது, 'பைத்தியம்'! என்று அசட்டையாகப் பதில் கூறினார். அப்பொழுது அவர் ஒரு ப்ரம்ம வித்தைப் போலத் தோற்றினார்" என்று சொன்னார்.

அவருடைய பொழுதுபோக்கு, பண்டிதர்களுடன் ஸல்லாபம், ராட்டை நூற்றல், புஸ்தகம் வாசித்தல் இவ்வளவிலே அடங்கி நின்றது. அவர் வீட்டுவாயிலுண்டு; அவருண்டு; வேறு எங்கும் போவதில்லை. அவர் இருந்தவிடத்தில் கலைமகளின் ஜோதி வீசிக் கொண்டேயிருந்தது.

"ஸஹ்ருதயர்களுடைய மத்தியில் அவர் ஹ்ருதயம்போல இருந்தார்" என்று பிரம்மஸ்ரீ மஹாமஹோபாத்தியாய குப்புஸ்வாமி சாஸ்திரிகள் அநுதாபக் கூட்டத்திற் பேசினார்; அவருடைய கூர்ந்த அறிவை மிகப்புகழ்ந்தார். அவருடைய பத்திரிகையின் நிருவாகத் திறமையைக் 'கலைமகள்' நண்பர்கள் நன்கு அறிவார்கள். அவருடைய ஒழுக்கமும் மேதையும் நல்லோரையும் பண்டிதர்களையும் வசியமாக்கின.

'கலைமகள்' ஆடிமாதப் பத்திரிகையில் அவர் எழுதிய 'நாடி வைத்தியர்' என்ற கதை வெளிவந்திருக்கிறது. "அடுத்தமாதம் என்ன எழுதப்போகிறீர்கள்?" என்றேன் நான்.

"அழுகையைப்பற்றி எழுதப் போகிறேன். எல்லாம் அழுகையில் முடிகின்றன. எல்லா ரஸங்களுக்கும் அதுவே பிரதானம். சிருங்காரத்தில்கூட விப்ரலம்ப சிருங்காரத்தைத்தான் உயர்வாகக் கருதுகிறார்கள். கொஞ்சம் வேடிக்கையாக இரண்டு சூத்திரங்கள் செய்து போடப்போகிறேன்" என்றார்.

இந்த ஆவணி இதழில் அவர் எழுதிய அழுகையைப்பற்றிய கட்டுரை இல்லை; அவரைப்பற்றிய அழுகைக்குரிய வரலாறுதான் இருக்கிறது. இதை யார்தான் முன்னே அறியக்கூடும்?

# இரங்கற் செய்திகள்

'கலைமகள்' ஆசிரியர் மரணத்தைப்பற்றி, 'கலைமகள்' அதிபர் ஸ்ரீமான் நாராயணசாமி ஐயரவர்களுக்கு ப்ரம்மஸ்ரீ மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்யகலாநிதி டாக்டர், உ. வே. சாமிநாதையரவர்கள் விடுத்த செய்தி வருமாறு:

"அன்பரும் சுகுணசிரோமணியும் தமிழ்க்கல்விமானுமாகிய ஸ்ரீ. டி. எஸ். இராமசந்திர ஐயரவர்களுடைய தேகவியோகம் மிகுந்த வருத்தத்தை உண்டுபண்ணிக்கொண்டேயிருக்கிறது. அவர்கள் இறந்துபோவதற்கு இரண்டுதினத்திற்கு முந்திக்கூட அவர்களுடன் பேசிக்கொண்டிருந்தேன். தமிழ் நூல்களைப்பற்றிப் பேருக்கத்துடன் பேசிக்கொண்டிருந்தார்கள்.

ஊழ்வினையை வெல்ல யாரால் முடியும்?"

ஸ்ரீமான் அப்புஸ்வாமி ஐயரவர்கள், பி.ஏ., பி.எல்:

"ஸ்ரீமான் டி. எஸ். ராமச்சந்திரையரவர்கள் திடீரென்று காலமானது கேட்டுத் திடுக்கிட்டு வருந்தினேன். என்னுடைய ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்."

ஸ்ரீமான் ஜே. எஸ். பொன்னையா, எம். ஏ:

"..அவருடைய பிரிவால் கலைமகள் பெரிய நஷ்டமடைந்தது. அவருடைய கதைகள் மிக்க கவர்ச்சியுடையனவாக இருந்தன. நான் அவருடைய கட்டுரைகளில் எதையும் ஊக்கத்துடன் வாசிக்கத் தவறியதில்லை. சென்றதடவை அவர் எழுதிய கதையும் ஹாஸ்யம் நிறைந்திருந்தது. அவ்வளவு ஊக்கமும், எழுதுவதில் இளமையும் உடைய அவர் காலனாற் பிரிக்கப்பட்டாரென்பது மிக இரங்கற்குரியதாகும்."

ஸ்ரீமான் ஒ. ப. தேசிகன்:

"......அவர்களுடைய அபாரமான பாண்டித்தியமும் நூலார்வமும் இனி, கலைமகளின் வாசகர்களுக்கும் ஏனையோருக்கும் பயன்படாதொழிவது தமிழ்நாட்டின் துர்ப்பாக்கியமேயாகும்."

'கூட்டுறவு' என்றபத்திரிகை 1-8-34 ஆம் தேதியில் எழுதியது:

"இந்த உயர்தரசஞ்சிகையின் நிர்வாக ஆசிரியர் திரு. டி. எஸ். இராமச்சந்திர ஐயர் அவர்கள் பி.ஏ., காலமடைந்துவிட்டது பத்திரிகை உலகத்திற்கு ஓர் பெரியநஷ்டம்."




## படித்தவர்களும் வியாபாரிகளும்

திருச்சிஜில்லா வியாபாரிகள் சங்கத்தின் முதல் ஆண்டுவிழாவில் தலைமைவகித்த, திருச்சி நகர சபைத்தலைவர் ஸ்ரீமான் பி. ஆர். தேவர் அவர்கள் பேசியபிரசங்கம் 'வர்த்தக ஊழியன்' ஜூலை இதழில் வெளிவந்துள்ளது. நம்நாட்டுவியாபாரிகளுடைய முன்னேற்றத்தைக்குறித்து அவர் பேசிய பின்வரும்பகுதி எல்லோரும் கவனித்தற்குரியதாகும்:

'வியாபாரத்தில் ஒரு பகுதியாகிய நாணயமாற்றம் என்பது சிக்கலான விஷயம். பொருள்ஆதாரநூலை வாசிக்கும்போது, மேதாவிகள் எல்லாம் சில சமயங்களில் திகைத்துவிடுகிறார்கள். இந்நூல்வல்லாரைக் கொண்டு நாணயமாற்றத்தின் நுணுக்கங்களை நீங்கள் தெளிவுற அறிந்துகொள்வது அவசியமாயிருக்கிறது. வெளிநாடுகளில், படித்தவர்கள் எல்லாம் வியாபாரத் துறையில் இறங்கித் தீவிரமாக உழைத்துவருகிறார்கள். நம் நாட்டிலோ வியாபாரம் என்பது படிக்காதவர்களுக்குத்தான் என்றும், படித்தவர்கள் உத்தியோகத்திற்குத்தான் போகவேண்டும் என்றும் மனப்பான்மை யிருக்கிறது. இதை உடனே யகற்றவேண்டும். நம்தேசமும் சர்வதேசங்களோடு சமமான உரிமையைப் பெறவேண்டுமானால் வியாபாரத்தில் முன்னுக்கு வந்தால்தான் முடியும். ஆங்காங்கே சங்கங்கள் ஸ்தாபனமாகி மாகாண சங்கங்கள், தேசீயசங்கங்கள் இவைகளோடு இணைக்கப்பட்டு, நல்ல பிரதிநிதியாய் நமது முடிவான அபிப்பிராயங்களைத் தெளிவாகவும், அழுத்தமாகவும் சொல்லவேண்டும். வியாபாரிகளுக்குள் அதிதீவிர ஒற்றுமை மிகவும் அத்தியாவசியமானது.'

## ஜப்பானியரின் ஒழுங்கு

நவீன நாகரிகயுகத்தில் முன்னணியில் நிற்கும் தேசங்களுள் ஜப்பானும் ஒன்று. அந்நாட்டாருடைய பெருமுயற்சிகளும் ஒழுங்கான செயல் முறைகளும் பெரும்பயன் விளைப்பனவாகும். சுருங்கிய காலத்திற்குள் பெரிய வளர்ச்சியை உற்றுத் திகழும் அந்நாட்டின் தீவிரமுன்னேற்றத்தை நோக்கி அகில லோகமும் மூக்குநுனியில் விரல்வைத்து வியக்கின்றது. கைத்தொழில், வியாபாரம் முதலியவற்றில் அது வேறு எந்தநாட்டிற்கும் தாழ்ந்ததன்று. ஜப்பானியர்கள் எந்தப்பொருளையும் வீண்செய்வதில்லை. வீட்டிற் பெருக்கித்தள்ளப்படும் வஸ்துக்களை அவர்கள் பத்திரமாகப் காப்பாற்றி வைக்கிறார்கள். கூடியவரையில் அவற்றைப் பயன்படுத்த முயல்கின்றனர். ஓர் அரிசிமணியைச் சிந்தக் கூட அவர்கள் சம்மதியார்கள். ஜப்பானியச் சிறுவர்கள் தாய்தந்தையர்களிடம் ஒழுங்கையும் பள்ளிக்கூடத்தில் இராணுவப் பயிற்சியையும் கற்கின்றனர். ஜப்பானியர் கூடும் கூட்டத்தில் எந்தவிதமான குழப்பமும் நிகழாது; இரைச்சலும் இராது. ஐயாயிரம் ஜனங்கள் கூடிய கூட்டமாக இருந்தாலும் அங்கே அமைதியே நிலவும். யாவரும் காதோடுகாதாகத்தான் பேசிக்கொள்வார்கள்.

—டைம்ஸ் ஆப் அஸ்ஸாம்.




**ஸ்ரீ**மத் பாகவதம், தசமஸ்கந்தம்: [தேவநாகர எழுத்தில் மூலமும், தமிழுரையுமுள்ளது. பூர்வார்த்தம், விலை ரூ. 5 8 0; உத்தரார்த்தம் விலை ரூ. 4 8 0. கிடைக்குமிடம்: ஸ்ரீமான் கடலங்குடி நடேச சாஸ்திரிகள், 72 பெரிய தெரு. திருவல்லிக் கேணி சென்னை.]

திருமாலின் அவதாரங்களில் சிறந்ததெனவும், பூர்ணமான தெனவும் கருதப்படும் கிருஷ்ணாவதார மகிமையை நன்கு விளக் கும் ஸ்ரீமத்பாகவதம் பக்தி ஞானங்களுக்கு முக்கிய சாதனமென்று யாவராலும் கருதப்படுகிறது. அதிலுள்ள அரியவிஷயங்களைத் தமிழர்கள் அறிந்து ஆனந்திக்கும்படி தமிழுரையோடு ஸ்ரீமான் நடேச சாஸ்திரிகள் வெளியிட்டிருப்பது மிகவும் பாராட்டத் தக்கது. இஃதன்றியும் ஒவ்வோரத்தியாயத்திற்குப் பின்பும் நாராயணீயமென்னும் நூலிலுள்ள சுலோகங்கள் பதவுரையுடன் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அந்நூல் மலையாளத்தில் குருவா யூரிலுள்ள கிருஷ்ணபரமாத்மாவின் சந்நிதியில் நாராயண பட்டாத் திரியென்பாரால் இயற்றப்பட்டதென்றும் அவ்வாறியற்றி முடிந்த பின் அவருக்கு நேர்ந்திருந்த தீராதநோய் தீர்ந்ததென்றும் கூறுவர். சாஸ்திரிகளவர்கள் ஸ்ரீமத்பாகவத்தின் இதர ஸ்கந்தங் களையும் இவ்வாறே வெளியிட்டுத் தமிழுலகுக்கு உதவிபுரிவார்க ளென நம்புகிறோம்.

—டி. எஸ். ராமச்சந்திரையர்.

**தி**ருக்குறள் மூலமும்உரையும் ஆங்கிலமொழிபெயர்ப்பும்: [இயற் றியவர்: ஸ்ரீமான் ஆ. அரங்கநாத முதலியார் அவர்கள்; கிடைக்குமிடம்: சுவர்ணவிலாஸ் 13, பெரியதெரு, திருவல்லிக்கேணி; விலை ரூ. 2 8 0.]

திருவள்ளுவரால் உலகினுக்கே தரப்பட்ட திருக்குறளென்னும் தமிழ் மறையை இதுகாறும் சிலர் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தமைத்துள்ளனர். எனினும் நமது பார்வைக்குவந்துள்ள இப்புத்தகம் திருக்குறள் மூலம்,

எளியநடையில் சுருக்கமாக உள்ள பொழிப்புரை, அழகிய ஆங்கிலமொழி பெயர்ப்பு முதலியன அமைந்து விளங்குகின்றது. திருவள்ளுவரைப் பற்றியும் குறளைப்பற்றியும் பல அறிஞர்கள் தமிழில் எழுதியுள்ள அரிய செய்திகள் பல இப்புத்தகத்தில் முகவுரைக்குப் பின் வெளியிடப்பட்டுள்ளன. குறளைப்பற்றி மேனாட்டார் அவ்வப்பொழுது வெளியிட்ட அபிப்பிராயங்களை இப்புத்தக ஆசிரியர் தொகுத்தமைத்தது மிகவும் போற்றற்குரியது. பதிப்பு அழகியதாக அமைந்துள்ளது. ஆங்கிலமறிந்தவர்களுள் திருக்குறளைப் பற்றிச் செவ்வனே அறிந்துகொள்ள இயலாதவர்களுக்கு அந்நூலின் அருமையைத் தெளிவிப்பதற்கு இது கண்ணாக உதவும்.

தாயும் பிள்ளையும்: [எழுதியவர்: ஸ்ரீமான் ச. இராஜரத்தினம் அவர்கள், இலங்கை வைத்தியப்பகுதி; கிடைக்குமிடங்கள்: (1) ஆசிரியர் (2) யாழ்ப்பாணம் சைவப்பிரகாச யந்திரசாலை; விலை சதம் 50 அல்லது அணா 8.]

பெண்கள் தாய்மாராக இருந்து உலகத்துக்குப் புரியும் தொண்டு எவற்றிலும் சிறந்தது. அத்தொண்டைச் செவ்வனே செய்தற்குரிய நல்லாறுகளை இந்நூல் செந்தமிழ் நடையில் விளக்குகின்றது. பெண்கள் பிள்ளைப் பேற்றுக்கு முன்பும் பின்பும் பின்பற்றவேண்டிய பலவிதிகளையும் வேறுபல அரிய செய்திகளையும் .தெரிவிக்கும் இப்புத்தகம் தமிழ்நாட்டாருடைய போாதரவிற்குரியதென்று கருதுகிறோம்.

கல்வளை அந்தாதி: [ஸ்ரீமான் ம. வே. திருஞானசம்பந்தப் பிள்ளையவர்கள் எழுதிய உரையுடன் கூடியது; கிடைக்குமிடம்: யாழ்ப்பாணம் சைவபரிபாலன சபை; விலை சதம் 50 அல்லது அணா 8.]

தமிழ்நூல்களை முறையாகப் படிக்கப்புகுந்த மாணவர்கள் மறைசையந்தாதியை நன்கு அறிவார்கள். அந்நூலின் ஆசிரிராகிய யாழ்ப்பாணத்து நல்லூர்ச் சின்னத்தம்பிப் புலவர் கல்வளையென்னும் தலத்தில் எழுந்தருளியுள்ள விநாயகக்கடவுள்மீது இயற்றியது இக் கல்வளையந்தாதியாகும். மறைசையந்தாதியைப் பயின்றவர்களுக்கு இவ்வந்தாதியும் அதனோடொத்த செம்மையும் பெருமையும் வாய்ந்ததென்பது புலப்படும். இதற்குப் பதவுரை பொழிப்புரை முதலியன எழுதிவெளியிட்ட ஸ்ரீமான் திருஞான சம்பந்தப் பிள்ளையவர்கள் யாழ்ப்பாணம் இந்துக்கல்லூரித் தமிழ்ப்போதகாசிரியராவர். வரன்முறையாகப் பாடங்கேட்டாலன்றி எளிதில் விளங்காத யமக அந்தாதிகளுள் இதனைச் சேர்த்தல் முறையன்று; ஆயினும் தமிழ்ப்புலவர்களுடைய துணைக்கொண்டு அறிந்தால் இதன் நயங்களும் பிறவும் நன்கு விளங்கும். அத்தகைய துணையாக இவ்வுரை விளங்குகிறது. பண்டைத்தமிழ் நூல்களை அழியாமல் வெளிப்படுத்தி விளக்கும் அறம் பெரிதென்பதை யாவரோ அறியார்? இதனைப்போன்ற வேறு நூல்களும் இவ்வாசிரியர்மூலமாக வெளிவருவதை யாம் பெரிதும் விரும்புகின்றோம்.



# பங்கா இழுத்த பாவலர்

மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர்

---

சிலருக்குச் சிலவகையான ஆற்றல்கள் எளிதில் அமைந்து விடுகின்றன. அத்தகைய ஆற்றல்கள் வேறுசிலருக்கு மிகமுயன் றும் சிறிதும் வரமாட்டா. செய்யுளியற்றும் ஆற்றலும் அவ்வகை யானதே. சிலர் யாப்பிலக்கணம் முதலியவற்றை நன்ருக ஆராய்ந்து அறிந்திருந்தாலும், இனிய ஓசையையுடைய செய்யுட்களைப் பிழை யின்றி இயற்றுவதில் தடுமாறுகிருர்கள். பிறர்செய்யுட்களிலுள்ள பிழைகளை எடுத்துக்காட்டும் இயல்புடைய சிலர் பிழையற்ற சில பாடல்களையேனும் இயற்றும் ஆற்றலை அடைந்திலர். வேறு சிலரோ இலக்கண இலக்கிய நூல்கள் பலவற்றை ஆராயாவிடினும் மனத் தில் தோற்றிய கருத்துக்களை அழகுபெற அமைத்துச் செய்யுள் செய்து விடுகிருர்கள்.

தமிழ்நாட்டில் தம்முடைய மனக்கருத்தைச் செய்யுளில் அமைத்து விரைவில் வெளியிடும் ஆற்றல்வாய்ந்த பலபுலவர்கள் இருந்து புகழ்பெற்று விளங்கியதுண்டு. காளமேகத்தைப் போன்ற ஆசுகவிகள் பலர் இவ்வகையில் தலைசிறந்து விளங்கியவர் ஆவர். அவர்களுடைய செயல்களும், பலவகையான செய்யுட்களைப் பாடிய வரலாறுகளும் யாவராலும் விருப்பத்துடன் கேட்டு இன்புறற்குரி யன. அத்தகைய தனிப்பாடல்களும் அவற்றைப்பற்றிய வரலாறு களும் நாட்டில் அங்கங்கே கர்ணபரம்பரையாக வழங்கிவருதல் அறிஞர்கள் அறிந்ததே.

சற்றேறக்குறைய இருபத்தைந்து வருஷங்களுக்குமுன் வேம்பத்தூரில் இருந்துவிளங்கிய சிலேடைப்புலி பிச்சுவையரென்னும் வித்துவானைப் பலர் அறிந்திருத்தல் கூடும். அவர் மிக்க புகழ்பெற்ற கவிராசபண்டிதருடைய பரம்பரையில் தோன்றியவர்; விரைவிற் செய்யுளியற்றும் வன்மையுடையவர்; இராமநாதபுர மன்னராக இருந்துவிளங்கிய ஸ்ரீபாஸ்கரஸேதுபதியவர்கள் விருப்பத்தின்படி ஒருமணி நேரத்தில் பன்னிரண்டு சிலேடைகளைப் பாடி *அம்மன்னரால் வழங்கப்பட்ட ஐயாயிரம்ரூபாய் ஸம்மானத்தைப் பெற்றவர். அவருடைய குமாரர்களுள் மூத்தவர் மகாதேவபாரதி என்பவர்; அவரும் விரைவிற் செய்யுள் இயற்றுவார். இப்பொழுது மதுரையில் இவர் சௌக்கியமாக வாழ்ந்துகொண்டிருக்கிறார். இவரைப்பற்றிய வரலாறு ஒன்று வருமாறு:—

காலஞ்சென்ற ஸ்ரீ பா. இராஜராஜேசுவர ஸேதுபதி மன்னரவர்கள் ஏறக்குறைய 22 வருஷங்களுக்கு முன்பு இராமநாதபுரத்தில் மிகவும் சிறப்பாக நவராத்திரி விழாவை நடத்தினார்கள். அவர்களுடைய குலதெய்வமாகிய ஸ்ரீ ராஜராஜேசுவரிக்கு நித்திய நைமித்தியங்கள் அலங்காரங்கள் முதலியன மிகமேன்மையாக நடைபெற்றன. மன்னரவர்கள் விருப்பத்தின்படி இந்நாட்டின் பலபாகங்களிலிருந்த ஸம்ஸ்கிருத பண்டிதர்களும் தென்மொழிப்புலவர்களும் ஸங்கீத வித்துவான்களும் வந்திருந்தார்கள். நானும் சென்றிருந்தேன். நாள்தோறும் தமிழ்வித்துவான்கள் அம்பிகைவிஷயமாகப் பல செய்யுட்களை இயற்றிக் கூறிச் செவிக்குணவை அளித்தார்கள். வடமொழி வித்துவான்கள் தேவிவிஷயமாகவுள்ள வடமொழி ஸ்தோத்திரங்களையும் வேறு சுலோகங்களையும் எடுத்துச் சொல்லிப் பிரசங்கம் செய்தார்கள். வாய்ப்பாட்டிலும் மிருதங்கம் முதலிய வாத்தியங்களிலும் வல்ல ஸங்கீத வித்துவான்கள் ஊக்கத்தோடு தங்கள் தங்கள் ஆற்றலை வெளிப்படுத்தி யாவரையும் மகிழ்வித்து வந்தார்கள்.

அந்த விழாநாட்களிலெல்லாம் வித்துவான்களுடைய பேச்சுக்களையும் பாட்டுக்களையும் இனிய ஸங்கீதத்தையும் கேட்பதிலேயே மற்ற ஜனங்களுக்குப் பொழுதுபோயிற்று. மன்னரவர்

---

*அம் மன்னரவர்கள்செய்த நன்றியை மறவாமைக்கு அடையாளமாகப் பிச்சுவையர் தம் குமாரர் ஒருவருக்குப் பாஸ்கரையரென்ற பெயரையும், அந்த நிதியைக்கொண்டு வாங்கிய நிலத்திற்குப் பாஸ்கரன்செய் என்ற பெயரையும் இட்டனர்.

களும் அவ்வித்துவான்களுக்கு ஏற்ற வசதிகளை அமைத்து ஆதரித்து வந்தனர்.

அப்போது ஒருநாள் பாஸ்கரஸேதுபதியவர்களின் மாப்பிள்ளையவர்களது மாளிகையில் பலவித்துவான்கள் கூடிப் பேசிக் கொண்டிருந்தார்கள். நானும் இருந்தேன். ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் அநுபவத்தை மகிழ்ச்சியுடன் எடுத்துக்கூறினர். அப்பொழுது காலை 9 மணியிருக்கும். இயல்பாகக் காற்று இல்லாமையால் வெப்பமாக இருந்தது. அம்மாளிகையில் பெரிய பங்காக்கள் இருந்ததைக்கண்ட நான், "பங்கா இழுப்பவன் இல்லையோ?" என்று கேட்டேன். உடனே அக்கூட்டத்திலிருந்த மகாதேவ பாரதியார் திடீரென்றெழுந்து அங்கிருந்த பங்காவின் கயிறுகட்டியிருந்த நிலைக்கு அப்புறம் விரைந்துசென்றார். நிலையின்மேலுள்ள துவாரத்தின் வழியாக வெளியில் விடப்பட்டிருந்த கயிறு முடியப்பட்டிருந்தது. சென்றபாரதியார் எழும்பி அந்த முடிச்சை எட்டிப் பிடித்துக் கொண்டார். பங்காக்காற்றை அநுபவிக்க அறிந்த அவர் அதனை இழுக்கும் முறையை அறியாமல், எப்படியாவது பங்காவை இழுத்து விரைவில் வெப்பத்தைப் போக்கவேண்டுமென்பதை எண்ணி அவசரமாக அந்தக் கயிற்று முடிச்சைக் கையில் பிடித்து இழுத்தார். அது கீழேவந்தது; பின்பு மேலேபோயிற்று. அதைப் பிடித்துக்கொண்டிருந்த பாரதியார் அதைவிட்டுவிட்டால், மறுபடியும் பிடித்து இழுக்க நேரமாகுமென்றெண்ணி அதுமேலே போகும்பொழுது அதைப் பிடித்துத்தொங்கிக்கொண்டே தாமும் மேலே எழும்பிப்போனார். நிலை உயரமானது; அவரோ மெல்லிய தேகத்தையுடையவர். இப்படிக் கீழே வருகையில் இழுத்தும் மேலே போகையில் உடன் மேலே சென்றும் தம்மையே மறந்து பங்காவை இழுத்துக்கொண்டிருந்த அவரது நிலைமையை யாவரும்கண்டு வியப்புற்றனர். உடனே பங்காக்காரன் வந்துவிட்டான். அவன் கயிற்றை அவரிடமிருந்து வாங்கிக்கொண்டு வழக்கம்போல் முடிச்சை அவிழ்த்துக் கயிற்றை நெடுகவிட்டு இழுக்க ஆரம்பித்தான். மகாதேவபாரதியார் அவனுடைய செயலைச் சிறிதுநேரம் கூர்ந்து கவனித்துவிட்டு எங்களை நோக்கிவந்தார்; "உயர்குலத்தோன்றலும் கவிஞருமாகிய நீர் இப்படிச் செய்யலாமா? உமக்கு முன்பு பழக்கம் இல்லையே!" என்று சொன்னேன். அவர் உற்சாகத்தோடும் உவகையோடும், "பங்கா இழுப்பதென் முன்னோர்கள் செய்திட்ட பாக்கியமே" என்று பாட்டாக விடையளித்தார். அது ஒரு கட்டளைக்கலித்

துறையின் ஈற்றடியாவதற்கு ஏற்றதாக இருத்தலை யறிந்து, "பாட்டைமுடித்துச் சொல்லவேண்டும்" என்றேன். உடனே அவர் சற்றும் தயங்காமல்,

"கோங்கார் பொழில்புடை சூழ்மூக வாபுரிக் கோற்றவனும்
மங்காத சீர்த்தி வளர்பாற் கரமுகில் மாப்பிளையின்
சிங்கார மாளிகை யிற்புல வோர்க்குச் சிரத்தையுடன்
பங்கா விழுப்பதென் முன்னோர்கள் செய்திட்ட பாக்கியமே"

என்ற கட்டளைக்கலித்துறையைச் சொல்லித் தமது பரம்பரைப் பெருமையை விளக்கினர். அங்கிருந்த யாவரும் அவருடைய ஆற்றலையும் வித்துவான்களிடத்தில் அவருக்கிருந்த அன்பையும் வியந்து பாராட்டினர்கள். அன்று மாலை ஸ்ரீ இராஜராஜேசுவர ஸேதுபதியவர்கள் வீற்றிருந்த சபையில் இந்த நிகழ்ச்சியை நான் தெரிவித்தபோது அவர்கள்கேட்டு மகிழ்ந்தார்கள். மகாதேவ பாரதியார் பங்கா இழுக்கும்பொழுது கீழேவருவதும் கயிறு மேலே செல்கையில் தாமும் மேலேசெல்வதுமாகிய அந்தக்காட்சி இன்றும் என்கண்முன் நிற்கின்றது.

---

## ஸோவியத் ருஷியாவில் நூல்கள்

**ஸோவியத்** ருஷியாவில் வெளியிடப்பட்டிருக்கும் நூல்கள் பிரிட்டனில் வெளியிடப்பட்டிருக்கும் நூல்களைக் காட்டினும் அதிகமாயிருக்கின்றன. 1931-ம் ஆண்டில் ஜெர்மனி, பிரிட்டன், ஐக்கிய நாடுகள், பிரான்ஸ் ஆகிய நாடுகளிலெல்லாம் எவ்வளவு நூல்கள் வெளியிட்டார்களோ அவ்வளவுக்கும் சமமாக ருஷியா புதுப்புது நூல்கள் வெளியிட்டது. அநேக ருஷிய நூல்கள் சாமானிய மக்களுக்காக எழுதப்பட்ட சாதாரண நூல்களாகவும் அங்குள்ள மக்களுக்குள்ளாகவே வழங்குவதற்காகச் சிறிதளவே வெளியிடப் பட்டவைகளாகவும் இருக்கின்றன. அவற்றுள் பெரும்பாலானவை சமூகாசார சம்பந்தமான விஷயங்கள் கொண்டவைக ளாகவும், விஞ்ஞான நுணுக்கங்களைப் பற்றி எழுப்பட்டவைகளாகவும், ஸோவியத் ருஷியாவின் ஐந்தாண்டுத் திட்டங்களைப் பற்றி எழுதப்பட்டவைகளாகவுமே இருக்கின்றன.

—தா. இ.




# சில தமிழ் நூல்களின் காலக்குறிப்புக்கள்

எஸ். அனவரதவிநாயகம் பிள்ளை, எம். ஏ. எல்., டி.

## 1. தாயுமானவர் பாடல்

கர்ணபரம்பரையாய் வழங்கித் தாயுமானவர் வரலாறென நான்முகப்பிற் பொறிக்கப்பட்டுள்ள வரலாறுகளில் சுவாமிகள் திரிசிரபுரத்திலிருந்து தென்னாட்டை யாண்ட விசயரங்கசொக்க நாத நாயக்கர் காலத்தவரென்றும் அவர் மனைவியார் மீனாட்சியம்மையார் காலத்தும் அவர் திகழ்ந்தனரென்றும் எழுதப்பட்டுளது. விசயரங்கசொக்கநாத நாயகர் காலம் கி. பி. 1704-1731. அவர் மனைவியார் காலம் கி.பி. 1731-ம் அதனையடுத்த சில ஆண்டுகளும்.

கோடிக்கரைஞானிகள் பாடியதாகக் காணப்படும் பாட்டு,

துகளறு சாலி வருடமா யிரத்தைஞ்
　ஞூற்றெண்டெண் பத்தொன்று தொடரு
மிகுசுப கிருதாம் வருடந்தை மாதம்
　வெண்மதி வாரநாள் விசாகம்
மகிமைசேர் பூர்ணத் திதியினி லருத்த
　மண்டல சமயத்திற் கங்கை
திகழ்கரை யதனிற் றாயுமா னவனார்
　சிவத்தினிற் கலந்தநற் றினமே

எனச் சுவாமிகள் சமாதியடைந்த ஆண்டுமுதலியவற்றை விளக்கமாகக் கூறியதோடு தலத்தையுஞ் சுட்டியது. சாலிவாகன சகம் 1581 சுபகிருதுவருடம் தைமாசம் திங்கட்கிழமை விசாக நட்சத்திரம் பூரணைத்திதி அர்த்தமண்டல சமயம் பாட்டிற் குறித்த ஆண்டு முதலியவை. கங்கைக்கரையென்பது எந்தத் தலத்தைக் குறித்ததென்பது விளங்கவில்லை. ஒரு பதிப்பிற்காணும் கர்ண பரம்பரை வரலாற்றில் சுவாமிகள் கி. பி. 1742-ல் இராமநாத புரத்திற் கருகிலுள்ள தேவைநகரில் சமாதியி லமர்ந்தனர் எனக் கூறப்

பட்டுள்ளது. சகம் 1581 சுபகிருதுவருடமன்று. சுபகிருதுவருடம் சகம் 1583, கி. பி. 1661.

திரிசிரபுரத்தில் ஸ்ரீமலைக்கோவில் சைவத்தெருவில் அமைந்துள்ள திருமடாலயத்தில் பிரதிஷ்டிக்கப் பெற்றிருக்கிற ஸ்ரீ தாயுமானசுவாமிகளுக்குக் குருபூஜை நடத்தும் ஸ்ரீ தாயுமான சுவாமிகள் பக்த ஜனசபையார் 15-1-34-ல் பிரசுரித்த துண்டுப் பத்திரிகை இவ்வாண்டு பெப்ருவரி 7௳ [ஸ்ரீமுகஹூ தைமீ 25௳] சுவாமிகளின் 273-வது திருநக்ஷத்திரம் எனக் குறிப்பிட்டது. இப்பத்திரிகை கோடிக்கரைஞானிகள் பாட்டையே தழுவிற்றாயினும் சகவெண்ணைக் கவனியாது சுபகிருது வருடத்தைமட்டும் எடுத்துக்கொண்டது. இன்னும் அப் பத்திரிகையில் தாயுமானசுவாமிகள்

சைவ சமயஞ் சமயமெனி லச்சமயத்
தெய்வம் பிறைசூடுந் தெய்வமெனி—லைவரைவென்
றானந்த வெள்ளத் தழுந்துவது முத்தியெனில்
வானங்காள் பெய்ம்மின் மழை

யென்னும் வெண்பாவின் வழியாகத் தமது ஜீவகாருண்யத்தை வெளிப்படுத்தியதாகக் கூறிற்று. இவ் வெண்பாவைப் பேரியர் அற்புதத்திரட்டு என்னும் நூலெழுதிய திருநெல்வேலித் தமிழறிஞர் ஆரியன்காவுப் பிள்ளை தருமபுரத்து முனிவரொருவர் சொற்றதாக எழுதினர்.

இனி, திருச்சி மலைக்கோயில் மௌனசுவாமிமடத்து விவரங்களுள் [செந்தமிழ்ச்செல்வி, சிலம்பு கஉ, பரல் உ] காணப்படுவன: முதலாவது மவுனத்தம்பிரான் சுவாமிகள் பட்டம் சகம் 1501-1566. இரண்டாவது தாயுமானத் தம்பிரான் சுவாமிகள் பட்டம் சகம் 1566-1584. தெளிவாக சகம் 1566 பார்த்திபஹூ ஆனிமீ முதல் 1584 சோபகிருதுஹூ வைகாசிமீ வரை ஹூ 18. தாயுமான சுவாமிகள் மவுன சுவாமிகளிடத்து உபதேசம் பெற்றனர் என்று கர்ணபரம்பரை கூறுகிறது. சுவாமிகள் பாடலில் ஒரு பகுதியாகிய 'மவுனகுருவணக்கம்' அதற்குச் சிறந்த ஆதாரமாகும். மௌனசுவாமி மடத்து மூலபுருஷராகிய மவுனத் தம்பிரான் சுவாமிகளே அம் மவுனசுவாமிகளாதல் வேண்டும். கோடிக்கரை ஞானிகள் பாட்டு சுவாமிகளது பரிபூர்ணகாலமாகக் குறித்ததற்கும் இங்குக் குறித்த ஆண்டிற்கும் சிறிது பேதங் காணப்படுதல் நோக்கத்தக்கது. இங்குக் குறித்த சோபகிருது வைகாசியே சுவாமிகளது பரிபூர்ணகாலம் என்பதற்கு ஒரு நியாயமுண்டு. அச் சோபகிருது வைகாசி 5௳ வியாழக்கிழமை பௌர்ணிமையும்

விசாகநட்சத்திரமுங் கூடியதினம். தைமாசத்து விசாகம் வராது, பூசமே வரும்.

இன்னும் இவ் வரலாற்றில் தளவாய் முதலியார் பிரஸ்தாபம் வருகிறதேயன்றி நாயக்கர் பிரஸ்தாபம் வரவில்லை. சுவாமிகளது காலம் இதுவாயின் நாயக்கர் காலம் மிகப் பிற்பட்டதாகும்.

இனி, தற்காலத்து மவுனசுவாமிகள் மடம் தருமபுரவாதீனத்தின் ஆட்சியிலிருத்தலை ஆதாரமாகக் கொண்டு தாயுமான சுவாமிகளுக்கு உபதேசித்த குருமூர்த்திகளாகிய மவுனசுவாமிகள் தருமபுரவாதீனத்து முனிவர் என்றாருமுண்டு*. சாலிவாகன சகம் 1748 முதல் 1763 வரை பதினாறுண்டு பத்தாவது பட்டம் வகித்த சிதம்பரநாத தம்பிரான் தமது இறுதிக் காலத்தில் தமக்குப் பின் ஒருவரைக் குறிப்பிட்டு அவரை யனுப்பித் தரும்படி தருமபுரம் பண்டாரசந்நிதிக்கும் காசி மடத்துக்கும் விண்ணப்பப் பத்திரம் எழுதியதாக மவுனசுவாமிகள் மடத்து வரலாறு கூறுதலால் அக்காலத்தேயே தருமபுரவாதீனசம்பந்தம் இம் மடத்துக்கு ஏற்பட்டிருத்தல் வேண்டும். ஆதலால் மடத்து முதற்றலைவராகிய மவுன சுவாமிகள் தருமபுரத்தைச் சார்ந்த முனிவர் என்றல் தவறு.

மற்று, தாயுமானவர் பாடல் முதற்பதிப்பில் அன்னப்பன் பேட்டையில் தாயுமானசுவாமிகள் மடத்திலிருந்து கிடைத்த பிரதியை ஆதாரமாகக் கொண்டு நூல் வெளிப்பட்டதென்று உரைக்கப்பட்டது. சில நூல்களுக்குச் சாற்றுக்கவி கொடுத்தோருள் அன்னப்பன்பேட்டை தாயுமானசுவாமிகளும் ஒருவராகக் காட்டப்பட்டுளது. அதனால் தாயுமான சுவாமிகள் சிறிதுநாள் வீற்றிருந்து அடைந்த ஸ்தலம் அன்னப்பன்பேட்டை என்றும், சுவாமிகள் பரம்பரையோர் அவ்விடத்திலேயே காணப்படுகின்றனர் என்றும் எண்ணுதற் கிடம் உண்டாயிற்று. இதனைப்பற்றித் தெளிந்துகொள்ளும் நோக்கத்தோடு திருவையாற்றில் இராஜா கல்லூரியில் தமிழ்ப்பேராசிரியராயிருக்கும் உலகநாத பிள்ளையவர்களை உசாவியபொழுது அவர்கள் விசாரணைசெய்து, 'அன்னப்பன்பேட்டையில் மடம் ஏற்படுத்தியவர் தாயுமான சுவாமிகளின் பேரரும் சீடருமாகிய அகூபலிங்க சுவாமிகளாவார். இவரது சமாதிதான் இங்கிருக்கிறது. இதற்கு இரண்டுகால பூசை நடைபெறுகின்றது. இங்கிருந்தாருள் இவரே முதற்பட்டம் எய்தியவர். இவர் முதற்கொண்டு ஒன்பது பெயர் பட்டத்திருந்தனர்

*கா. சுப்பிரமணிய பிள்ளை: தாயுமானவர் வரலாறும் நூலாராய்ச்சியும், பக்கம் 10.

என்பர். இம் மடத்திற் கடைசியாக இருந்தவர் சபாபதிசுவாமிகள். யாதுகாரணம் பற்றியோ இவர் இம் மடத்தை இப்போது சூரியனார் கோயில் ஆதீனத்தார் அதிகாரத்தின்கீழ் விடுத்திட்டு விலகியிருக்கின்றனர். இப்போது அன்னப்பன்பேட்டை மடத்திலிருப்பவர் அம்பலவாண சுவாமிகள். ஒவ்வொருவர் பெயரை யடுத்துத் தாயுமானவர் என்ற பெயரை எழுதிக்கொள்வது வழக்குப்போலும். சைவாதீனம் பதினெட்டனுள் தாயுமானர் ஆதீனமும் ஒன்று என்கின்றனர். இம்மடத்திற்குப் பத்துக்காணி நிலம் இருக்கிறது' என்று விவரமாக விஷயத்தைத் தெரிவித்தனர்.

## 2. திருமழுவாடிப் புராணம்

இப்புராணம் இயற்றிய காலமும் இயற்றிய ஆசிரியர் பெயரும் நூலகத்துக் காணும்,

தழுவிய கலியு கஞ்சேர் சகாத்தமா யிரத்து நானூற்
றுழிதரு மெண்பத் தேழாண் டொழிந்தவின் குரோத னாண்டின்
மொழிதரு மாசித் திங்கள் முற்பக்க முதனா டன்னின்
மழுவையம் புராணந் தன்னை வகுத்தனன் றமிழி னாலே

மாசிலா வயிரத் தூணர் மழுவையம் புராணந் தன்னை
யாசில்செந் தமிழி னாலே யணிபெற வகுத்த மைத்தான்
பேசரும் புகழ்சேர் ஞானப் பிரகாசன் கமலை வாழுந்
தேசிக னறிஞர் போற்றுஞ் செங்கம லப்பொற் பாதன்

என்னும் இரண்டு செய்யுளால் விளங்குகின்றன. காலம் சாலிவாகனசகம் 1488-ம் ஆண்டு குரோதன வருடம் மாசிமாசம் சுக்கில பக்ஷம் ஞாயிற்றுக் கிழமை யென்று புலப்படுகிறது. ஆசிரியர் பெயர் கமலை ஞானப்பிரகாசதேசிகர். இவரே தருமபுரவாதீனத்து முதற்றலைவராகிய ஸ்ரீ ஞானசம்பந்ததேசிகர்க்கு ஞானகுரவர்.

## 3. பிரபுலிங்கலீலை

துறைமங்கலம் சிவப்பிரகாசசுவாமிகள் இயற்றிய இந்நூலில் இறுதிக் கதியாகிய மான்மிய கதியில் உங-ம் செய்யுளாகிய,

பார்கெழு சகாத்த மூவைஞ் ஞூற்றெழு பானன் காவ
தாகிய கரநா மங்கொ ளாண்டுறு விடைஞா யிற்றிற்
சீர்கெழு மல்ல மன்றன் றிருவிளை யாடற் காதை
கார்கெழு மிடற்றெங் கோமான் கருணைகொண் டியம்பி னானே

என்பது இந்நூல் செய்த காலம் சாலிவாகனசகம் 1574 ஆகிய கர வருஷம் வைகாசிமாசம் ஞாயிற்றுக்கிழமை யென்று குறித்தது. இவ்வாண்டுக்குச் சமமான கிறிஸ்தவ ஆண்டு 1652 ஆகும்.

சித்தாந்த சிகாமணி யுரைப்பதிப்பில் காணப்படும் சிவப்பிரகாச சுவாமிகள் வரலாற்றில் சாலிவாகன சகம் 1545 ஆகிய உருத்திரோற்காரி வைகாசிமாசம் திருவெங்கையில் சிவாலயப் பிரதிஷ்டை நடந்ததாகச் சிலாசாசன முளதென்றும், அவ்வாலயப் பணியை முடித்துக் கும்பாபிஷேகம் நடத்திய அண்ணுமலை ரெட்டியார் பின் சிவப்பிரகாச சுவாமிகளை ஆதரித்தாரென்றும் கூறப்பட்டுளது.

'பின் சுவாமிகள் திருநெல்வேலியை யடைந்து சிந்துபூந்துறையில் தருமபுரவாதீனத்து வெள்ளியம்பலவாண சுவாமிகளிடத்திலே இலக்கணங் கற்று'ரென்று அவ் வரலாறு உரைத்தலால் வெள்ளியம்பலவாண சுவாமிகள் எக்காலத்தவ ரென்பதும் ஆராயற்பாலது. இச் சுவாமிகள் வெள்ளியம்பலத் தம்பிராணு யிருப்பராயின் அவர் தருமபுரவாதீனமுதல்வர் ஸ்ரீ ஞானசம்பந்த தேசிகர் காலத்தவராதல் வேண்டும். தருமபுர வாதீனம் எற்பட்டது கி. பி. 1566-ஐ அடுத்தாகலின் வெள்ளியம்பலத்தம்பிரான் வேறு என்பதே உறுதி. [திருமழுவாடிப்புராணத்தைப் பற்றிய குறிப்பைப் பார்க்க.]

இன்னும், அவ் வரலாற்றில் 'அகராதிசெய்த வீரமாமுனிவர் என்பவர் எதிர்ப்பட்டு ஏசு மதமாகிய தங்கொள்கையை நாட்டு தற்பொருட்டுத் தருக்கஞ்செய்ய, உடனே அக் கொள்கையை மறுத்து, ஏசுமத நிராகரணம் எனப் பெயரிய ஓர் நூலை அருளிச் செய்தார்' என்றுரைக்கப்பட்டுளது. வீரமாமுனிவர்காலம் கி.பி. 1680-1742. அவர் இந்தியாவுக்கு வந்தது கி. பி. 1707-ம் ஆண்டில். சிவப்பிரகாச சுவாமிகள் முப்பத்திரண்டாம் ஆண்டில் பரசிவத்தில் கலந்தருளினுர் என்னும் வரலாற்ருேடு இதனைப் பொருத்துவது சிரமம். ஆதலால் சுவாமிகள் வீரமாமுனிவரோடு வாதித்தவருமல்லர்; எசுமத நிராகரணமும் அவர் செய்தநூ லன்று.

---

## முட்டைக்கோசிலிருந்து பருத்தி

பிரட் பிரன்ட் என்னும் இரசாயன சாஸ்திரி இங்கிலாந்தில் முட்டைக்கோசிலிருந்தும் மரச்சோற்றிலிருந்தும் பருத்தி செய்திருப்பதாகச் சொல்லுகிருர். இப்படிச் செய்வதால் அமெரிக்காவிலிருந்தும் எகிப்திலிருந்தும் இறக்குமதி செய்யும் பருத்தியை அரைவாசி விலைக்கு அதிகமாக நாம் பெற்றுக்கொள்ள முடியும் என்கிருர். சமீபத்தில் மிகுந்த தேர்ச்சிபெற்ற பருத்தி நிபுணர் இப்படிச் செய்த பருத்தியை எகிப்து பருத்திதான் என்று சொன்னுர். அவர் மரச்சோற்றிலிருந்து செய்து காட்டினபிறகுதான் நம்பினுர். —வ. ஊ.

# எங்கள் நாட்டு ஆடை

வித்துவான் ச. தண்டபாணி தேசிகர்

---

மக்களுக்கு வேண்டிய அவசியத் தேவைகளில் உணவும் உடையும் மிகச்சிறந்தவை. உடலை நன்குவளர்க்க உணவு வேண்டும். உடலில் குளிர்தாக்காது போக்கி வேண்டிய வெப்பத்தைக் கொடுக்கவும் அலங்காரஞ் செய்துகொள்ளவும் ஆடை இன்றியமையாதது. உணவு, உடல் நிலைதளர்ந்து உயிர் நீங்காதவாறு பாதுகாப்பது;உடை உயிரினும் பதின்மடங்கு சிறந்த மானத்தைக் காப்பது. ஆடையில்லா மனிதன் அரைமனிதனல்லவா? பழமொழி நானூற்றிலும் 'அலங்காரஞ் செய்வதில் ஆடையாபரணங்கள் சிறந்தன ஆயினும் ஆபரணங்கள் ஆடையைப் போலின்றியமையாதன அல்ல' என்னும் கருத்துப்பட "அணியெல்லாம் ஆடையின் பின்" என்ற பழமொழி காணப்பெறுகின்றது. இரக்கப்போனாலும் சிறக்கப்போகவேண்டிய தவசியம். ஆதலால் இவ்வளவு சிறப்புவாய்ந்த ஆடையைத் தயாரிப்பதில் நம் தமிழ்நாட்டுப் பண்டைய மக்கள் எவ்வளவு கைதேர்ந்திருந்தனர் என்பதை யறிந்துகொள்ள, நூல், ஆடைதயாரித்தலும் அதன் வகைகளும், ஆடையியல்பு, அதன் கரையமைப்பு, உடுத்து முறையும் வெளுத்தலும் என்ற தலைப்புக்களின் கீழ் ஆராய்தலே இக்கட்டுரையின் நோக்கமாம்.

## நூல்

பஞ்சை முதலில் அரைமணையில் இட்டு அரைத்துப் பஞ்சையும் கொட்டையையும் வேறாகப் பிரிப்பார்கள். பிறகு அப்பஞ்சை வில்லால் கொட்டித் தூசில்லாதுபோக்கி நூற்பதற்கேற்ற நிலையில் சிறு திரிகளாக ஆக்குவார்கள். அங்ஙனம் ஆக்கப் பெற்ற பஞ்சிற்குக் 'கொட்டை' என்று பெயர். கொட்டை என்பதற்கு வில்லால் கொட்டப்பெற்றது என்பது பொருள். பஞ்சின் மெல்லிய பகுதிக்கு (*Fibre*) பஞ்சுத்துய் என்றும் பஞ்சியடர் என்றும் பெயர். பஞ்சுத்துய்யின் பண்புக்கேற்ப நூல் நயம்பட இருக்கும்.கைத்தொழிலைப் பிழைப்புத்தொழில்.என்றும்

துணைத்தொழில் என்றும் இருவகையாகப் பிரிக்கலாம். நூற்றல் தொழில் பெரும்பாலும் பெண்மக்கள் மேற்கொண்ட தொழிலே யாகும்; அதிலும் சமையல் வேலையும் வீட்டுவேலையும் செய்து ஒழிந்த நேரங்களிலே செய்யப்பெற்ற தொழிலாகும்.

நன்னூல் பொதுப்பாயிரத்து "பஞ்சி தன்சொல்லா" என்னும் செய்யுளால் அறிவு நூலுக்கும் ஆடைநூலுக்கும் ஒப்புமை கூறப்பெற்றுள்ளது. அதில் 'செஞ்சொற் புலவனே சேயிழையா' எனக்கூறியதை உற்றுநோக்கும்போது நூற்கும் தொழிலை மேற்கொண்டவர்கள் பெண்களே என்பது தெளிவாகும்.

இன்னும், நற்றிணையில்,

"ஆளில் பெண்டிர் தாளிற் செய்த
நுணங்குநுண் பனுவல் போல"

என்ற செய்யுட்பகுதியால் அக்காலத்து வழக்கம் ஒன்று அறியலாகும். பொருள் தேடிப் பாதுகாக்கும் கணவனை யிழந்து கைம்மைவிரதங் காக்கும் மகளிர் முயற்சியோடு நயமான நூலை நூற்கின்றனர் என்ற உண்மை புலப்படுகின்றது. நூல்நூற்றலால் வரும் ஆதாயம் அவ்வப்போது வயிறு வளர்ப்பதற்கும் ஆடையின் தேவையை நிறைவிப்பதற்கும் ஆனதன்றி மிச்சப் படக்கூடிய நிலையில் வாராதென்பது தேற்றம். 'கப்பல் உடைந்து பட்ட கடனைக் கொட்டை நூற்று கொடுக்கப்போகிறாய்?' என்ற பழமொழி சிறுவரவைக்கொண்டு பெரிய காரியத்தை நிர்வகிப்பதாகக் கூறுபவனைப் பரிகசிக்கும் பொருளில் வழங்குகின்றது. இதிலிருந்து கொட்டை நூற்ற ஆதாயம் மிகக் குறைவானது என்பது குறிக்கப்பெறுகிறதல்லவா?.

## தயாரிக்கும் முறை

அங்ஙனம் நூற்றநூலைத் தேய்த்துப் பதஞ்செய்து பாவாற்றி என்னுங்கருவியால் பசையிட்டு உலரச்செய்து நெசவுக்குக் கொண்டுவருவார்கள். அந்த நூலுக்குப் 'பாவு' என்றுபெயர். குறுக்குநூலுக்கு உண்டை யென்றுபெயர். குறுக்கு நூலிடும் கருவிக்கு 'நூல்நாழிகை' எனவும், 'குழல்' எனவும் பெயர் வழங்கிவந்தது. அக்கருவி இக்காலத்து 'நாடா' என வழங்குகிறது. இது "நெய்கை நுண்ணூல் நாழிகையின் நிரம்பாநின்று சுழல்வோரே" என்னும் சிந்தாமணிச் செய்யுளாலும், "பாவாடு குழல்போல" என்னும் நளவெண்பாவாலும் அறியக்கிடக்கின்றது. இராமபிரானும் இளையபெருமாளும் இளமைக்காலத்து

நதி, பொழில், வாவி இவற்றினிடங்களில் திரிந்தனர் எனக் கூறவந்த கம்பர், "நெய்குழலுறு மிழையென நிலைதிரிவார்" என உவமையுடன் கூறினர். இதில் குழல் சென்றவழி நூல்பிரிந்து உடன் செல்லுதலும் குழலைவிட்டு நூல் நீங்காதுபோய்ப் போய்த் திரும்புதலுமாகிய நெசவு இயல் கூறப்பெற்றுள்ளது.

அவ்வாறு நெய்யப்பெற்ற ஆடை நூல் நெருக்கத்தால் கண் பார்வை நுழையாத நிலையில் இருந்தது என்பது, "நோக்குநுழை கல்லா நுண்பூக்கனிந்த அரவுரியன்ன அறுவை" என்ற பொருநராற்றுப்படையால் அறியப் பெறுகின்றது. ஆடையினியல்பு 'அரவுரியன்னதுகில்' 'ஆவியந்துகில்' 'புகை முகந்தன்ன மாசில்தூவுடை' என்ற உவமைகளாற் பல விடங்களிலும் விளக்கப் பெறுகின்றது. புறநானூற்றில் ஆடை பளபளப்பாலும் மேன்மையாலும் பாம்பின்தோலையும், நெசவுச்சிறப்பால் மூங்கில் மரத்துள் இருக்கும் வெள்ளிய தொலியையும் ஒத்திருத்தது எனக் குறிப்பிக்கப்பெறுகின்றது. இதனல் அக்காலத்திய ஆடையின் மேன்மையும் நெசவின் நயமும் எவ்வாறு இருந்தன என்பதை மனக்கண்ணாற்கண்டு மகிழாமலிருக்க முடியாது.

## ஆடையின் வகைகள்

ஆடையில் பலவகையுண்டு. அவ்வகைகள் நிறம்பற்றியும், நெசவுத்தொழிற் சிறப்புப்பற்றியும் பிரிக்கப்பெற்றுள்ளன. சிலப்பதிகாரத்து, கோசிகம் பீதகம் பச்சிலை அரத்தம் நுண்டுகில் சுண்ணம் முதலாக முப்பத்தாறு வகைகள் கூறப்பெற்றுள்ளன. அவைகளில் பலவற்றை முற்கூறிய இருவகையுள் அடக்கலாம். ஏனையன காரணம் விளங்காதன. அம்முப்பத்தாறனுள் பீதகம் என்பது பொன்னிறமான ஆடை. பச்சிலை என்பது இலைப் பச்சை நிறமுள்ள ஆடை. அரத்தம் என்பது சிவந்த ஆடை; ஆனல் சாயந்தோய்க்கப் பெருது இயற்கையாகவே சிவந்த நூலைக்கொண்டு நெய்யப் பெறுவது. 'கோபம்' என்பது இந்திரகோபப் பூச்சிபோலச் சிவந்த ஆடை; 'கோபத் தன்ன தோயாப் பூந்துகில்' என்பது இவ்வாடையினியல்பை நன்கு விளக்கும் பகுதியாகும். இவ்வாறு நிறம்பற்றிய ஆடைகளும், நுண்டுகில், இரட்டு முதலிய நெசவுவேறுபட்ட ஆடைகளும் விளங்கின. அன்றியும் சிறப்பாக, அநேக வடிவங்கள் எழுதப்பெற்ற ஆடைகளும் இருந்தன. அவற்றிற்குச் 'சித்திரக்கம்பி' என்று பெயர். கரைகளில் எழுத்துருவங்கள்வர, 'பேட்' தூக்கி நெய்யப்பெற்ற ஆடைகளும், கரை வேறுநிறம், உடல் வேறுநிறமாகப் பாவோடி

உண்டை மறித்துக் கோத்துவாங்கிய ஆடைகளும் இருந்தன என்பது 'பொன்னெழுத்து' 'நூல்யாப்பு' என்ற பெயரானே அறியப்பெறும். 'கோசிகம்' என்ற ஆடை மலரும் பருவத்துள்ள பாதிரிப்பூவை விரித்தாலொத்த நிறமுள்ளது என்றும், கலிங்கம் என்பது கோங்கம்பூவைப்போன்றது என்றும் பெருங்கதையில் கூறப்பெற்றுள்ளது.

## கரை

அருகில் கரையில்லாத எந்த ஆடையும் அழகு மிகப் பெறுவதில்லை. இதுபற்றியேபோலும் கரையில்லாத ஆடையைக் கட்டுதல் கூடாது எனச் சிலர் விதிப்பாராயினர். கரைகளில் கோட்டுக்கரையும், முடியிட்ட கொட்டைக்கரையும், பாம்பினுரி போன்ற சரிகைக்கரையமைந்த பணிப்போத்தியும் வழக்காற்றி லிருந்தனவாக, "கொட்டைக்கரைய பட்டுடை" என்ற பொரு நராற்றுப்படையாலும், 'நேர்கரை நூண்ணூற் கலிங்கம்' என்ற புறப்பகுதியாலும் "பணிப்போத்தி" என்பதனாலும் அறியக்கிடக் கின்றது. கல்விச் சிறப்பைக்கூறும் நாலடியாரில் "கொடுந்தானைக் கோட்டழகும்........அழகல்ல" என எதிர்மறுப்பதனாலேயே அக்காலத்து மக்களால் ஆடையிலுள்ள அருகு அழகு செய் வனவற்றுள் ஒன்றாகக் கருதப்பெற்றது என்பது நன்கு புலனும். "பூந்துகில்", "ஒண்பூங்கலிங்கம்" எனவரும் பிரயோகங்கள் ஆடையின் அருகில் பூத்தொழில்செய்தலுண்டு என்பதையும், "வள்ளிக்கலிங்கம்" "வள்ளிப்போர்வை" என்பவை ஆடை முழுதுமே கொடியுருவங்கள் அமைக்கப்பெற்றிருக்கும் என்பதை யும் விளக்குவனவாம்.

## நெய்யப்பெற்ற இடங்கள்

கலிங்கம் என்பது ஒருதேசம். அங்கு நெய்யப்பெற்ற ஆடை சிறந்திருந்த காரணம்பற்றி அவ்வாடை கலிங்கம் எனவே வழங்கப்பெற்றது. இக்காலத்துச் சில ஆடைகள் சேலம் திரு நாகேசுவரம் துயிலி என வழங்குதலைப்போல மிகுதியாகவும் நயமாகவும் நெய்யப்பெற்ற காரணத்தால் கலிங்கம் எனவே பெயர்பெற்றது எனலாம். தொண்டி என்னுந் துறைமுகத்தி லிருந்து கப்பல்களில் ஆடை முதலியவை ஏற்றிவந்ததாகச் சிலப்பதிகாரம் கூறும். 'காஞ்சிபுரஞ்சென்றால் காலாட்டிப் பிழைக்க லாம்' என்பது இக்காலத்துப் பழமொழி. 'நெசவுத்தொழில் மேற்கொண்டு பிழைக்கலாம்' என்பது இதன் பொருளாம். அதுபோலக் காஞ்சிநகரம் முற்காலத்திலும் இத்தொழிலில்

மிக மேம்பட்டு விளங்கியது என்பது "கண்ணுழை கல்லா நுண் ணூற் கைவினை, வண்ண அறுவையர் வளந்திகழ் மறுகு" என்று மணிமேகலை கச்சிநகர் புக்கபோது கூறிய பகுதியால் அறியலாம். பெருங்கதையில் 'வங்கச்சாதரும்' எனவருவதை உற்றுநோக்க வங்கதேசத்தில் 'சாதர்' என்ற ஒருவகையாடை நெய்யப்பெற் றமை புலனாகின்றது. சாதர் என்பது இக்காலத்துச் சாதரா எனவழங்கும் உயர்தர ஆடைபோலும். இலக்கணஉரைகளில் 'இப்பட்டுச் சீனம்' என வருவதிலிருந்து பட்டுத்தொழில் சீனத்தில் மிகுதியாக நடந்தது என்பது அறியப்பெறும்.

இவ்வாறு பஞ்சால் ஆடை ஆக்குதலேயன்றி மயிராலும் ஆக்கி வந்தனர் எனச் சிலப்பதிகாரம் கூறும். நாரினாலும் ஆக்கப்பெற்ற தாகப் பெருங்கதையால் அறியப்பெறுகின்றது. இவற்றுள் மயிர் என்பது "எலிமயிர்ப் போர்வைவைத்து" என்பனபோன்ற பல பகுதிகளிற் சிந்தாமணியிற் கூறப்பெறுகின்றது.

## உடுத்தும் முறை

நம் நாட்டில் ஆடைகளை உடுத்தும்முறையில் பெரும் பாலான வேறுபாடுகள் காணப்பெறுகின்றன. நம் நாட்டுப் பெண்கள் ஒரேயாடையை வளையக்கட்டுகின்றனர். மலையாள நாட்டுப்பெண்கள் இரண்டாடை உடுத்துகின்றனர். திருமுரு காற்றுப்படையில் குறமகள் வெறியாட்டுக் கூறுமிடத்து "முரண் கொள் உருவின் இரண்டுடன் உடீஇ" எனவரும் பகுதி நிறம் மாறுபட்ட இரண்டாடைகளை மலைவாழ்மகளாகிய குறமகள் உடுத்தினாள் என்பதை அறிவுறுத்துகின்றது. ஆடவர்கள் நான்கு முழ ஆடையைப் பெரும்பாலும் உடுத்தனர் என்பது "உடுப்பவை நான்கே" என்ற செய்யுள் விளக்கும். சிறுவர்கள் ஆடை எதற் காக அணியப் பெறுகின்றதோ அந்நோக்கந் தவறி ஆடை முழு வதையும் தம் அரையிலேயே சுற்றிக்கொண்டு திரிந்தனர் என்னும் இயற்கைச்செவ்வி "அற்றங் காவாச் சுற்றுடைப் பூந்துகில்" என்ற மணிமேகலையால் அணியுறுத்தப் பெறுகின்றது.

நமது பண்டைமக்கள் அந்தஅந்தப் பருவங்களுக்கு ஏற்ற ஆடைகளையே உடுத்தினர் என்பது பின்வரும் ஆதாரங்களால் அறியலாகும்.

சிலப்பதிகாரத்து "அரத்தம் பூம்பட்டு அரைமிசை யுடீஇ" எனவரும் அடிக்குறிப்பில் அரும்பத வுரையாசிரியர் 'அரத்தம்பூம் பட்டு முதலாகத் துகிர்க்கோவை யீறுகச் சொன்னவை கார்காலத் துப் பரக்க அணிவன' எனக் கூறுவதால் செம்பட்டாடை கார்

காலத்தில் உடுத்தக் கூடியது என்பது பெறப்படும். சிவந்த நிற ஆடையை வேனிற்காலத்து உடுத்தின் வெயில் வெப்பத்தை வாங்கி உடலுக்குள் செலுத்துவதால் உடல் வெப்பமுற்று நலங் குன்றும். கார்காலத்தில் உடுத்தினுல் சூரிய ஒளியிலுள்ள வெப் பத்தை உடலுக்கு ஏற்பித்துக் குளிர் தாக்காதபடி பாதுகாக்கும்.

செந்நிற ஆடை சூரியஒளியிலுள்ள செந்நிறத்தைமட்டும் திருப்பியனுப்பும் தன்மை வாய்ந்தது; மற்றநிறங்களையும் வெப் பத்தையும் இழுத்து உடலுக்குக் கொடுக்கும் என்பது இயற்கைத் தத்துவ நூற்கொள்கை. அதற்கு ஏற்பக் கார்காலத்துச் செந்நிற ஆடை உடுத்தினர் என்பது எவ்வளவு ஆழ்ந்த நாகரிகத்தைக் காட்டுகின்றது! பருத்தியாடை வேனிற்காலத்து உடம்பின் உஷ்ணத்தை வெளிப்போக்கி நீரை உரிஞ்சுந் தன்மையது. பட்டாடை வெளியிலுள்ள சீதோஷ்ணத்தை உடலுக்குள் சேர்ப் பிக்காது; உடலிலுள்ள உஷ்ணத்தை வெளிப்போகவும் விடாது. ஆதலால் கூதிர்காலத்துப் பட்டாடை யுடுத்தினர் என்பதும் அறிந்து இன்புறற்பாலனவற்றுள் ஒன்ரும். பின்பனிக்காலத்து எலிமயிர்ப்போர்வைகளை உடுத்தனர். எலிமயிர்ப் போர்வையின் வெம்மை "செந்நெருப்புணும் செவ்வெலிம்மயிர், அந்நெருப்பள வாய பொற்கம்பலம்" என்ற சிந்தாமணிச் செய்யுளால் விளக்கப் பெறுகின்றது. இன்னும் சட்டைகளாகவும், சித்திரத்திரைக ளாகவும், படமாடங்களாகவும் ஆடைகளை உபயோகித்தனர்.

## வெளுத்தல்

ஆடை உயர்ந்ததாக இல்லாவிடினும் தூய்மையாக இருக்க வேண்டிய தவசியம். அதற்காக அவ்வாடைகளை வெளுத்து உடுத்தல் வேண்டும். சித்தாந்த சாஸ்திரத்தில், 'வண்ணன் ஆடைகளின் மாசுபோக்குதற்குச் சாணி உவர்மண் முதலிய அழுக்கையேற்றிப் புது அழுக்கோடு பழைய அழுக்கையும் மாற்றுதல்போல' என்ற உவமை காணப்பெறுகிறது. இதனுல் ஆடையைத் தூய்மை யுறுத்தும் முறை நன்கு விளங்குகிறது. பிறகு கஞ்சி யிட்டு மடித்துவைத்தல் மரபென்பதைக் 'கழுமடிக் கலிங்கம்' என்னும் சொற்ருெடர் காட்டும்.

"அறனில் புலத்தி யெல்லித் தோய்த்த
புகாப்புகர் கொண்ட புன்பூங் கலிங்கம்"

என்பது ஆடை வெளுப்பவள் ஆடையை, வடித்த கஞ்சியில் நனைத் துக் காயவைத்தனள் என்பதைக் குறிக்கும். வெளுத்த ஆடை

நறுமணங் கமழுதற்காக வாசனைப் புகைகளை ஊட்டி அணிந்தனர் என்பதும் நம்முன்னோரது சிறந்த நாகரிக மிகுதியை நவிலும் பகுதிகளாம்.

இதுகாறுங் கூறியவாற்றால் நந்தமிழ் மக்களது நாகரிகத்திற்கு முன்னறிகுறியான கைத்தொழிற் சிறப்பும், சுகாநுபவத்திறங் களும், ஆடையியல்பும் கால நிலையும் அறிந்து அணிந்துகொள்ளும் தன்மையும் விளங்கிநிற்கின்றன.

---

## நாளந்தா ஸர்வகலாசாலை

ஒவ்வொரு மாணவனும் ஆசிரியருடைய விசேஷ கவனிப்பின்கீழ் இருந்து கல்வி பயின்றுவரவேண்டுமென்பது பழைய கால இந்து ஆசிரியர் களின்கொள்கையாகும். அக்கொள்கையின்படி அக்காலத்தில் ஆசிரியரின் வீடுகள் பள்ளிக்கூடங்களாக இருந்தன. இந்த முறையானது குடிசைத்தொழி லால் சிறிதளவில் பொருள்களை உண்டாக்கும் முறையைப் போன்றது. தற் கால ஸர்வகலாசாலைக் கல்வியானது இயந்திர சகாயத்தால் தேவைக்கு அதிகமான பொருள்களை உண்டுபண்ணும் முறையைப் போன்றது.

இக்காலத்து ஸர்வகலாசாலைகள் கையாண்டு வரும் முறையை இந்துக் கள் அக்காலத்திலே சோதித்த சந்தர்ப்பங்களும் உண்டு. பழைய காலத்து நாளந்தா ஸர்வகலாசாலை இத்தகையது. நம் ஸர்வகலாசாலைகளுக்குச் சில சௌகரியக்குறைவுகள் இருந்து வருகின்றன; இதற்கு ஓர் அசௌகரியமும் இருந்ததில்லை. இதில் 10,000 மாணவர் படித்து வந்தனர். இம்மாணவர் கள் எல்லாம் குறிப்பிட்ட ஓரளவு கற்றுத்தேறியபின் இதில் இடம் பெற்ற வர்கள். இதில் மாணவராகச் சேருவோருக்கு வாய்மொழியாகக் கடின மான பரீக்ஷைகள் இருந்து வந்தன. 7-ஆம் நூற்றாண்டின் மத்தியில் இவன் சுவங் என்னும் சீன பௌத்த யாத்திரிகர் இந்த ஸர்வ கலாசாலையில் சேர்ந்து 7 வருஷம் படித்து வந்தார். இந்த 7 வருஷங்களில் 1510 ஆசிரி யர்கள் பலவகையான விஷயங்களைக் குறித்து 100 பிரஸங்கங்கள் செய்தி ருக்கிறார்களாம். மச்சுக்கட்டடங்களிலும் வெட்டவெளிகளிலும் வகுப்புக் கள் நடந்துவந்தன. இந்தக் கட்டடங்கள் அரசர்களாலும், பொது ஜனங்க ளாலும் ஸர்வகலாசாலைக்குத் தர்மமாக அளிக்கப் பட்டவையாகும்.

இந்த ஸர்வகலாசாலை செவ்வனே நடைபெறுவதற்கும் இதில் படித்து வரும் மாணவரின் உணவு, உடை, உறைவிடம் முதலியவற்றிற்கும் உத்தேசமாக 100 கிராமங்களுக்கு மேல் மானியம் விடப்பட்டிருந்தன. அக்காலத்தில் இதில் பயின்றுவந்த மாணவர்களும் ஆசிரியர்களும் உண்மைப் பொருளை அறிவதையே தங்களுடைய வாழ்நாளின் லக்ஷியமாகக்கொண்டு வாழ்ந்தனரே ஒழிய வயிற்றுப்பிழைப்புக்குத் தங்கள் கல்வியை ஒரு சாதன மாகக் கொள்ளவில்லை. —டாக்டர் ராதா குமுத முகர்ஜி.




# பூச்சியின்மேல் மோகங்கொண்ட சிறுவன்

பி. என். அப்புஸ்வாமி, பி. ஏ., பி. எல்.

---

[குறிப்பு:—இது ஹென்ரி பாபர் என்னும் மகாப்பிரக்கியாதிபெற்ற இயற்கை நூல் விற்பன்னரின் சுயசரிதை. மகாகவியாகிய மேடெர்லிங்க் என்பார் இவருக்கு, 'பூச்சிகளின் ஹோமர்' என்ற பட்டத்தை அளித்திருக்கிறார். அதாவது, பூச்சியைப்பற்றி இராமாயணம் எழுதியவர், பூச்சிகளின் கம்பர், என்று நமதுநாட்டில் சொல்லலாம். இவர் மிகவும் அற்புதமான ஆராய்ச்சிகளை நிகழ்த்தியிருக்கிறார். அவற்றின் சாராம்சத்தைப் பாமரரும் அறியும்படியான எளிய நடையில் மிகவும் அழகாக வருணித்து அநேக நூல்கள் இயற்றியிருக்கிறார். பிற ஆராய்ச்சிக்காரர்களின் நூல்களிற் காணுவதுபோல இவருடைய நூலிலே பல்லை உடைக்கும் கடினமான பதம் ஒன்றும் இராது; பொருள் விளங்காமல், மயங்கச் செய்யும், டாம்பீகமான வாக்கியமும் இராது. இவர் பிரான்ஸ் நாட்டினர்.]

இந்தக் காலத்திலே எல்லாப் பாரத்தையும் பரம்பரையின் மேல் போட்டுவிடுகிறார்கள். ஒரு மனுஷ்யனிடத்திலே ஏதாவதொரு விசேஷமான குணமோ அல்லது தோஷமோ காணப்பட்டாலும் சரி, அல்லது ஒருபிராணியினிடத்திலே ஏதாவது அசாதாரணமான குணதோஷங்கள் காணப்பட்டாலும் சரி; "இந்த விசேஷத்தன்மைகள் எல்லாம் முன்னோர்களிடமிருந்து வமிசக்கிரமத்தில் பெறப்பட்ட தன்மைகள். அந்தப் பரம்பரையானது இத்தகைய தன்மைகளைப் பல தலைமுறைகளாக வளர்த்துப் பெருக்கி வந்திருக்கவேண்டும். அதனால்தான் இத் தன்மைகள் இந்த அளவில் தோன்றுகின்றன" என்று சிலர் சொல்லிவருகிறார்கள். இது ஓரளவு உண்மையாயினும், முற்றிலும் உண்மையென்று நான் ஒப்புக்கொள்ளவில்லை. என்னுடைய சொந்தக் கதையைச் சொல்லுகிறேன். சொன்னால், எனக்குப் பூச்சிகளின்

மேலுள்ள மோகத்தில் ஒரு லவலேசமேனும் என்னுடைய முன்னோர்களிடமிருந்து நான் பெறவில்லை என்பது உங்களுக்கே தெரிய வரும்.

என்னுடைய தாய்வழியில் என் பாட்டனுக்காவது பாட்டிக்காவது பூச்சிகளைப்பற்றித் துளிகூடச் சிரத்தை கிடையாது. என்னுடைய பாட்டனுரை நான் நேரில் பார்த்ததில்லை. ஆயினும் அவரைப்பற்றிக்கேள்விப்பட்டிருக்கிறேன். அவருக்குப் பிழைப்பே திண்டாட்டத்திலிருந்தது. அப்படி யிருக்கும்போது அவர் பூச்சிகளைக் கவனிப்பதெங்கே? அவர் பூச்சியைப்பற்றிக் கவனித்துவந்ததெல்லாம் எந்தமாதிரி என்றால், எப்பொழுதாவது ஏதாவது ஒரு பூச்சியைக் கண்டால் அதைத் தன் ஜோட்டுக்காலால் மிதித்து நசுக்கிவிடுவார். இதைத்தவிர அவர்வேறுமாதிரியில் பூச்சிகளைக் கவனித்தது இல்லை. என் பாட்டிக்கு எழுத்துவாசனை என்பதே கிடையாது; விஞ்ஞானசாஸ்திரம் என்னவானாலென்ன? பூச்சிகள் என்னவானால் தானென்ன? அவைகளைப்பற்றி யாதொரு விதமான கவலையும் அவளுக்குக் கிடையாது. எப்பொழுதாவது சமைப்பதற்காகக் கீரையைக் கழுவும்போதோ அல்லது நறுக்கும்போதோ அதில் ஏதாவது புழுவாவது கம்பளிப்பூச்சியாவது ஒட்டிக்கொண்டிருக்கக் கண்டுவிட்டால் அவள் பயந்து நடுநடுங்கி, மிகவும் அருவருப்புடன் அதை ஒரே வீச்சாகத் தூரத்தில் எறிந்துவிடுவாள்.

என் தகப்பனுரைப்பெற்ற பாட்டனுர் பாட்டியாரை எனக்கு நன்றாகத் தெரியும். என் தாய்தகப்பன்மார் மிகவும் ஏழைகளாக இருந்தார்கள். என்னைச் சரியாகப் பேணிப் பாதுகாத்து வரமுடியாதவர்களாக அவர்கள் இருந்தபடியால், எனக்கு ஐந்து அல்லது ஆறுவயதாக இருக்கும்போது நான் அவர்களை விட்டுப் பிரிந்துவிட்டேன். பிறகு என் பாட்டன் பாட்டிகளோடு அவர்கள் வீட்டிலேயே வளர்ந்து வந்தேன். அவர்களும் பரம ஏழைகள் தான். ஆனாலும் அவர்கள் நாட்டுப்புறத்திலே கொஞ்சம் பூமியைக் குத்தகைக்கு எடுத்துக்கொண்டு ஏழைக் குடித்தனம் செய்துவந்தார்கள். அவர்களுக்கு ஓர் எழுத்துக்கூடப் படிக்கத்தெரியாது. அவர்கள் ஆயுளில் புத்தகம் என்பதையே அவர்கள் திறந்துபார்த்தது கிடையாது. என் பாட்டனுருக்கு ஆடுகளைப்பற்றியும் மாடுகளைப்பற்றியும் எவ்வளவோ விஷயங்கள் தெரியும். வேறெந்த விஷயத்தைப்பற்றியும் அவருக்கு யாதொன்றும் தெரியாது. “உன்னுடைய வமிசத்தில் பிறந்தவன் ஒருவன் ஒன்றுக்கும் உதவாத சின்னஞ்சிறு பூச்சிகளைக் கவனிப்பதில் பொழுதுபோக்கு

வான்" என்று யாராவது அவரிடம் சொல்லி யிருந்தால் அவர் பரமாச்சரியமுற்று அப்படியே பேச நாவெழாமல் ஸ்தம்பித்துப் போயிருப்பார். அப்பேர்ப்பட்ட பயித்தியக்காரன் நான்தான் என்ற சந்தேகம் அப்போது அவருக்குத் தோன்றி யிருக்குமானல், நன்ருக எனக்குக் கன்னத்தில் கிடைத்திருக்கும் என்பதில் சந்தேக மில்லை.

"ஏண்டா! மடப்பயலே! அப்படி முட்டாள்தனமாகவா பொழுது போக்கலாமென்று எண்ணுகிருய்? மடையா! யோசனை யைப் பார், யோசனையை!" என்று ஒரே பெருங்கூச்சல் போட் டிருப்பார். என்பாட்டி—அவள் பரமசாது, மிகவும் அப்பாவி, அவள் அழுக்குத் துணிகளைத் துவைப்பாளா, குழந்தைகளைப் பார்த்துக்கொள்ளுவாளா, வீட்டுச் சமையல்வேலையைச் செய் வாளா, நூல் நூற்பாளா, ஆடு மாடு கோழிகளைக் கவனிப்பாளா, மோர், பால், தயிர், நெய், வெண்ணெய் முதலிய பண்டங்களைப் பத்திரப்படுத்திவைப்பாளா, ஊறுகாய்ச் சாடிகளைத் துடைத்துக் காற்ருடவைத்து மூடியெடுத்துவைப்பாளா, அவள் என்னதான் செய்வாள் பாவம்? இந்தக் காரியங்களுக்கே அவளுக்கு நேரம் அகப்படாமலிருக்கும்பொழுது, வேறு சங்கதிகளைப்பற்றி நினைப் பதற்கு அவளுக்கு நேரமேது? சிற்சில நாட்களில், சாயங்கால நேரத்தில், வீட்டுவேலைகளெல்லாம் முடிந்தபிறகு, நாங்கள் எல் லாருமாக நெருப்பின் முன் உட்கார்ந்துகொண்டு குளிர்காய்ந்து கொண்டிருக்கும்பொழுது, மனமிருந்தால் ஏதாவது எங்களுக்குக் கதை சொல்லுவாள்; பக்கத்திலே நாணல் காட்டிலே உள்ள ஓநா யைப்பற்றி எத்தனையோ கதைகள் சொல்லியிருக்கிருள். அந்தக் கதைகள் கேட்பதற்கு மிகவும் பயமாயிருக்கும். எங்களுக்கு மயிர்க்கூச்செறியும்; நாங்கள் பயத்தால் ஒருவரையொருவர் கட் டிக்கொள்ளுவோம். அந்த ஓநாயை நேராகக் கண்ணுல் பார்த்து விடவேண்டுமென்ற ஆசை எங்களுக்கு நிரம்ப இருந்தது.

ஆனல் அதைப் பார்க்கும் அதிர்ஷ்டம் எனக்குக் கொடுத்து வைக்கவில்லை. பாட்டியம்மா! நீ எனக்கு எவ்வளவு செய்திருக் கிருய்! நான் உனக்குக் கடன்பட்டிருப்பது அல்ப சொல்ப மான அளவில் அல்லவே. என் குழந்தைவயதிலே நான் மிகப் பெரியதுக்கமென்று எண்ணிப் பாராட்டிய துக்கத்தை யெல்லாம் உன் மடியில் தலைவைத்து அல்லவோ ஆற்றியிருக்கிறேன்! எத்தனை தடவை நீ என்னைத் தேற்றிச் சமாதானம் செய்திருக்கிருய்! உன்னிடமிருந்து உன்தேக புஷ்டியில் சிறிது எனக்குக் கிடைத் திருக்கலாம். ஊக்கத்துடன் வேலைசெய்வதில் உனக்குள்ள ஆசை

யையும் நீ எனக்குச் சிறிது கொடுத்திருக்கலாம். ஆனால் எனக்குப் பூச்சிகளின்மேலுள்ள மோகத்தை நீ எனக்குத் தரவில்லை என்பது திண்ணம். உன்னிடம் இருந்தாலல்லவோ எனக்கு நீ தருவதற்கு?

இந்த மோகத்தை எனக்கு அளித்தவர்கள் என் தாய் தந்தையர்களுமில்லை. தாய் எழுதப்படிக்கத் தெரியாதவள். என் தகப்பனார் தம்முடைய சிறுவயதில் ஏதோ ஒரு பள்ளிக்கூடத்துக்குப் போய்வந்துகொண்டிருந்தாராம். அதனால் அவருக்குக் கொஞ்சம் எழுத்து வாசனை உண்டு. கொஞ்சம் படிக்கத்தெரியும்; கொஞ்சம் எழுதவும் தெரியும். ஆனால் அவருக்கு வீட்டுக் கவலையே பெருங்கவலையாகிவிட்டது. குடித்தனத்தை நடத்துவதிலேயே தம் முழுக் கருத்தையும் அவர் செலுத்தவேண்டி வந்துவிட்டதால், மற்றப் பூலோக விஷயங்களைக் கவனிப்பதற்கு அவருக்கு ஒழிவுமில்லை, மனமுமில்லை. குடும்பக்கவலையே அவர் முழு மனத்தையும் கவர்ந்துகொண்டது. பூச்சிகளைப் பிடித்து, நானாகத் தனியே கவனித்துவரும்போதாவது என்னிடம் ஏதாவது ஒன்றிரண்டு உற்சாக வார்த்தைகளைச் சொல்லி எனக்கு ஊக்கம் அளித்தாவது வந்தாரா? அதுவும் கிடையாது. நான் ஏதாவது ஒரு பூச்சியைப் பிடித்து அட்டையில் குத்திவைத்துக் கொண்டிருக்கும்போது பார்த்துவிட்டாரானால் செம்மையாக ஒன்றிரண்டு அறை கிடைக்கும். அவரிடமிருந்து எனக்குக் கிடைத்த தூண்டுதல் எல்லாம் இந்த மட்டே தவிர வேறல்ல.

இப்படியிருந்தும் கூட, நான் மிகச் சின்னஞ்சிறு வயது முதலே 'இது என்?', 'அது எப்படி?' என்று விசாரிக்கத் தொடங்கிவிட்டேன். இந்த மாதிரியாக நான் முதன்முதலில் செய்துவந்த ஆராய்ச்சி ஒன்று என் நினைவிற்கு வருகிறது. அதைக் கேட்டால் உங்களுக்கு வேடிக்கையாயிருக்கும். எனக்கு ஐந்தாறு வயதிருக்கும். அப்பொழுது ஒரு நாள் காலையில் எங்கள் வீட்டுவாயிலில் ஓர் அழுக்குச் சட்டையைப் போட்டுக்கொண்டு நின்றுகொண்டிருந்தேன். காற்று வலவலவென்று அடித்துக்கொண்டிருந்தது. சூரியன் மிகவும் ஜாஜ்வல்லியமாகப் பிரகாசித்துக்கொண்டிருந்தது. அதனுடைய காந்தியானது என்மனதைக் கொள்ளைகொண்டுவிட்டது. விளக்கைக்கண்டு மயங்கி உயிரைவிடும் விட்டிலுங்கூட நான் அன்று இளஞ்சூரியனைக்கண்டு மயங்கியதைப்போல் மயங்காது. நான் அங்கே நின்று, ஆநந்தத்தைப் பருகிக்கொண்டிக்கும்போதே என் மனமானது என்னைப்பார்த்து ஒருகேள்வி கேட்டுக்கொண்டேயிருந்தது: "இந்தப் பெரும் பிரகாசத்தை, இந்தச் செக்கச் சிவந்த சோதியை, இவ்வழகிய ஒளியை, இவ்வினிய

காந்தியை, இந்த ஆநந்த ஒளியின் வெள்ளத்தை நீ எதன்வழியாக அனுபவிக்கிறாய்? உன்வாயின் வழியாகவோ?" என்பதுதான் அந்தக் கேள்வி. இதைப் படிக்கும் நண்பனே, இதைப்பார்த்துச் சிரியாதே. இது உண்மையான ஆராய்ச்சிக் குறுகுறுப்பே தவிர, வேறல்ல. நான் என் வாயை நன்றாகப் பிளந்துகொண்டேன். என் கண்களை மூடினேன். என் எதிரில் தோன்றிய சோதி மறைந்து விட்டது. என் கண்களைத் திறந்தேன். வாயைக் கெட்டியாக மூடினேன். அச்சோதியானது என் கண்ணெதிரே நின்று தாண்டவமாடிக்கொண்டிருந்தது! இந்தச் சோதனையை நான் அப்பொழுதே பலமுறை செய்து பார்த்தேன். ஒவ்வொரு முறையும் பயன் ஒரே விதமாகத்தான் இருந்தது. சூரியனைக் கண்ணால் தான் பார்க்கிறோம் என்பதை அறிந்துகொண்டேன். ஆகா! என்ன அருமையான ஆராய்ச்சி! அன்று சாயங்காலம் இந்த ஆராய்ச்சியைப்பற்றி வீட்டிலுள்ளோர் அனைவரோடும் பெருமையடித்துக்கொண்டு பேசினேன். என்னுடைய அப்பாவித்தனத்தைக் கண்ட என் பாட்டி, அன்பு ததும்பும் கண்களோடு என்னைப் பார்த்துப் புன்சிரிப்புக்கொண்டாள். மற்றவர் அனைவரும் சிறிதேனும் இரக்கமின்றிப் பரிகாசமாய்ச் சிரித்தார்கள்.

வேறோர் ஆராய்ச்சி: சாயங்காலம், அஸ்தமிக்கும் தருவாயில் மாலைப்பொழுதில் எங்கும் நிச்சப்தமா யிருந்தது. அப்பொழுது, அதனிடையே மெதுவான மெல்லிய ஓசை ஒன்று இடை இடையே உண்டாகிக் கொண்டிருந்தது. அவ்வினிய மெல்லிய பாட்டோசை என் காதுக்கு வந்து எட்டியதை நான் பல நாட்களாகக் கவனித்துவந்தேன். 'இந்த ஓசை இனிமையாயிருக்கிறது. இந்த ஓசைக்குக் காரணம் என்ன? இதை உண்டாகச் செய்கிறது எது? பகல் முழுதும் சிறகு விரித்துப் பறந்தோடி, மாலைநேரத்தில் தன் கூட்டில் வந்து தங்கிக் களைப்பாறும் சிறு குருவியா இப்படிக் கத்துகிறது? இல்லையானால், வேறு எது? இதன் உண்மை என்னவென்று பார்க்கவேண்டும்; தாமதிக்கலாகாது' என்று எண்ணினேன். 'இந்த மாலை வேளையில் காட்டுக்குள்ளிருந்து கொடிய ஓநாய் ஒன்று அங்கேவந்து உலாவிவருகிறது என்று சொல்லுகிறார்களே. போகலாமா? அதனால் என்ன? போவோம். ஆனால் அதிகதூரம் போகவேண்டாம். அதோ இருக்கிறதே அந்த இருண்ட புதர்; அதற்கு அப்புறம் இருக்கிறதே ஓர் இருட்டிடம். அதுவரை போய்ப்பார்ப்போம். அதற்கப்புறம் ஒரு அடிகூட எடுத்து வைக்கவேண்டாம்!' என்று பல வாறாக யோசித்தேன்.

நான் அங்கேபோய் நின்றுகொண்டு வெகு நேரம் கவனித்துப் பார்த்தேன். ஓசை ஒருபுறமிருந்து கேட்கும். கிட்டப்போகலா மென்று அசைவேன். என் காலடிபட்டுப் புதர் சிறிது சலசலக்கும். ஓசை உடனே நின்றுவிடும். சிறிது நேரம்கழித்து மற்றொரு திக்கிலிருந்து அவ்வோசை கேட்கும். இப்படி இரண்டு மூன்று நாட்கள் கவனித்துப் பார்த்தும் ஒன்றும் பயனில்லை. நானும் விடுவதில்லை என்று கவனித்துவந்தேன். மறுநாளே எனக்குப் பயன்கிடைத்தது. நான் புதரிடையில் பதுங்கி நின்றுகொண்டிருந்தேன். என்பக்கத்தில் ஓசை; என் கையை வீசி ஒருபிடி; அகப்பட்டுக்கொண்டார் விட்டிலாபட்டர்! அது என்னவென்று வெகு சாக்கிரதையாய்க் கவனித்தேன். அது ஒரு பக்ஷிஅல்ல என்பதை உடனே தெரிந்துகொண்டேன். அது நான் முன்பே மிகவும் நன்றாக அறிந்துள்ள ஒரு அல்பப்பிராணி. அதன் பின் கால்கள் சுவையாயிருக்கும் என்று என் நண்பர்கள் சொல்லக்கேட்டு, நான் அதுபோன்ற எத்தனையோ பிராணிகளைப் பிடித்து, அதன் பின் கால்களைப் பிய்த்துச் சுட்டுத்தின்றிருக்கிறேன். அது ஒரு சாமானியமான தத்துக்கிளி; வேறொன்றுமில்லை. இருந்திருந்து இதைத்தானா கண்டுபிடித்தேன் என்ற அவமானம் எனக்கு ஏற்பட்ட போதிலும், 'நான் இதுவரை அறியாத புதியவிஷயம் ஒன்றை, அதாவது இந்தத் தத்துக்கிளிதான் அந்த இனிமையான பாட்டைப் பாடிற்று என்பதை, நான் அறிந்துகொண்டேனல்லவா?' என்று எண்ணி மகிழ்ந்தேன். இந்த ஆராய்ச்சியைப் பற்றி நான் வீட்டில் ஒருவருக்கும் சொல்லவில்லை. ஏனென்றால், என் முதல் ஆராய்ச்சியை அவர்களிடம் தெரிவித்தபோது அவர்கள் மிகவும் பரிகாசமாகச் சிரித்ததை எண்ணி எண்ணி என் மனமானது இன்னும் புண்பட்டுக் கொண்டுதானிருந்தது.

எங்கள் வீட்டுக்குப் பக்கத்திலுள்ள வயலில் என்ன அழகழகான புஷ்பங்கள்! கொத்துக் கொத்தாய் அவை பூத்திருக்கும் அழகைக்கண்டு என் மனமானது ஆநந்தத்தை அடைந்துகொண்டே யிருந்தது. அவற்றைப் பார்க்கும் போதெல்லாம் அவை தங்களுடைய கருநீல விழிகளைத் திறந்து என்னைப்பார்த்து முகமலர்ந்து புன்சிரிப்புக்கொள்ளுவதுபோல் எனக்குத் தோன்றிற்று. அவற்றின் அழகை நான் சிலகாலம் பருகினேன். சில காலத்துக்குப்பின்பு, அந்தப் பூக்கள் இருந்த இடத்தில் அவைகளைக் காணவில்லை. அவற்றுக்குப் பதிலாகக் கொத்துக் கொத்தாகச் சிறுபழங்கள் இருப்பதைக் கண்டேன். அந்தப்பழம் ஒன்றைப் பறித்துத் தின்று பார்த்தேன். நன்றாகவே இல்லை. அவற்

றுக்குள்ளே கொட்டையோ விதையோ ஒன்றும் காணப்படவில்லை. அது என்ன பழங்களாயிருக்கலாமென்று தெரியவில்லை. திகைத்துக்கொண்டிருந்தேன். கோடைக்காலம் முடிந்த சமயம். என் பாட்டனார் ஒரு மண்வெட்டியைக் கையில் எடுத்துக்கொண்டு வந்தார். என்னுடைய வயலை வெட்டி வெட்டித் தலைகீழாகப் புரட்டினார். பூமிக்கு அடியிலிருந்து கூடைகூடையாக, சாக்குச் சாக்காக ஒருவகை உருண்டைக் கிழங்கு அகப்பட்டது 'ஆகா! இதுவா? இந்தக்கிழங்கை நாம் பார்த்திருக்கிறோமே. வீட்டில் நிறைய இந்தக் கிழங்கு இருக்கிறதே; நானே இதை வேகவைத்தும் சுட்டும் தின்றிருக்கிறேனே. இது உருளைக்கிழங்கல்லவோ?' என்று எண்ணினேன். அதன் கருநீல நிறமுள்ள பூக்களும், சிவப்பு நிறமுள்ள பழங்களும் என்றென்றைக்கும் மாறாமல் என்மனதில் ஆழமாகப் பதிந்துவிட்டன.

இவ்வாறாகக் குரங்குச் சுபாவமுள்ள நான் எனது ஆறுவது வயதிலேயே, என்னை யறியாமல் பலவிதமான ஆராய்ச்சிகளைச் செய்துவந்தேன். செடிகளையும், கொடிகளையும், புஷ்பங்களையும், பூச்சிகளையும், பிராணிகளையும் நான் மிகவும் கூர்மையாகக் கவனிக்கும் பழக்கத்தை அடைந்துவந்தேன். வெண்ணிறமான வண்ணாத்திப்பூச்சி முட்டைக்கோசுச் செடிகளையே எப்படித் தேடிச்செல்லுகிறதோ, செந்நிறமான வண்ணாத்திப் பூச்சி முட்செடிகளையே எப்படித் தேடிப்போகிறதோ, அதைப்போலவே என்னுடைய மனமும் பூவையும் பூச்சியையுமே நாடிச்சென்றது. நான் அவற்றை நுணுகி நுணுகி நோக்கினேன்; துருவித் துருவி ஆராய்ந்தேன். அதனால் சிருஷ்டிதத்துவமென்னும் பெருங்கடலின் ஓரத்தில் சிறிது அறிந்துகொண்டேன். எனக்கு இந்தக் குறுகுறுப்பும் ஆராய்ச்சிக் குணமும், கூரிய கவனமும் எங்கிருந்து வந்தன? யாருக்குத் தெரியும்? என்னுடைய பரம்பரையைக் கேட்டுப் பார்த்தேன்! அதற்கே சொல்லத் தெரியவில்லை.

---

## தலை அசைந்தால் ஏடு திரும்புகிறது

போட்டோ எலக்ட்ரிக் ஸெல் சக்தியின் உதவியைக் கொண்டு நமது தலை அசைப்பினால் புஸ்தகங்களில் ஏடுகளைத் திருப்பவும் ஆகாயவசனிக் கம்பிப் பூட்டுகளைத் (ஸ்விட்ச்) திருப்பவும் விளக்குக்களை அணைக்கவும் ஒரு நூதனப் பொறியை ஓர் அமெரிக்கர் புதிதாய்க் கண்டுபிடித்திருக்கின்றார்.

—வ. ஊ.

# மோட்டார் வண்டி

எம். சி. எஸ். அநந்தபத்மநாப ராவ், எம். ஏ.

---

இந்த வண்டி சென்ற 25 வருஷங்களுக்குள்ளாக அதிக பிரபலத்துக்கு வந்திருக்கிறது. இதற்கு முன் தானே செல்லும் வண்டிகளில் நீராவியின் உபயோகத்தாலும், மின்சாரத்தின் உதவியாலுந்தான் ரயில்வண்டியாகவும் டிராம்வண்டியுமாக நாம் அநேக நாள் கண்டிருந்தோம். அநேகம் பேரையும் அவர்கள் சாமான்களையும் ஏற்றி வேகமாய்ச் செல்லும் 'பஸ்' என்னும் வண்டியும் அதிக பாரமான சாமான்களையும் இழுத்துச் செல்லும் 'லாரி' என்னும் வண்டியும் இப்போது உபயோகிக்கப்பட்டு வருகின்றன.

இந்த மோட்டார் வண்டிகள் உபயோகத்திற்கு வந்தது முதல் ரயில் ஸ்டேஷன்களுக்கு 20,30 மைல் தூரத்திலுள்ளவர்கள் வண்டிகளின் கஷ்டங்களும் காலச்சேதமும் இல்லாமல் அதிக சுகமாகப் பிரயாணம் செய்கிறார்கள்.

மோட்டார் என்னும் பதத்திற்குத் தானே தள்ளக்கூடியது அல்லது செல்லக்கூடியது என்று பொருள். இது அதிக வேகமாக வேலைசெய்யும். நீராவியந்திரம் தானே சென்றாலும் அதைமோட்டார் என்று சொல்வதில்லை. மோட்டார் என்பவையெல்லாம் புகை வண்டியைவிட அதிக இலேசானவையும், பருமனில் சிறியவையாகவும் இருக்கும். பளுகுறைந்ததாகையால் திடீரென்று வேகமாய்ச் செலுத்தவும் அதிசீக்கிரத்தில் நிறுத்தவும் கூடும். ஆதலால் ஜனங்கள் நடக்கும் ரஸ்தாக்களிலும் பிராண பயம் இல்லாமல் இவைகளை ஓட்டமுடியும்.

பஸ்ஸுக்களின் முன் பக்கத்தில் உள்ள தகரக்கூண்டில் மோட்டார் என்னும் யந்திரம் வைக்கப்பட்டிருக்கிறது. பெட்ரோல் என்னும் எண்ணெயின் ஆவியும் சாதாரணக்காற்றும் கலந்து ஜ்வாலை பட்டவுடன் வெடிக்க அதனால் உண்டாகும் சக்தியினால் இந்த மோட்டார் வேலை செய்கிறது. எண்ணெய் மிகவும் எளிதில் ஆவியாகக்கூடிய எண்ணெய், அது தானே ஆவியாகப் மாறிப்போவதால் அதைத் திருகுசுரையுள்ள அடைப்பானையுடைய பாத்திரங்களில் ஜாக்கிரதையாக வைத்திருப்பார்கள். அதை அதிகமாகச்

சேகரித்து வீடுகளில் பழகும் இடங்களில் வைப்பது அபாயகரமானதல்லவா?

இந்த யந்திரத்தில் ஒரு குழாய் உண்டு. அதில் ஒருபக்கம் அடைபட்டிருக்க மற்றப் பக்கத்தில் உள்ளே பக்கங்களில் சந்து விடாமல் முன் பின் செல்லக்கூடிய தகடு ஒன்று அடைத்துக் கொண்டிருக்கும். குழாய்க்கு 'ஸிலிண்டர்' என்றும் தகட்டுக்கு, 'பிஸ்டன்' என்றும் பெயர். பிஸ்டனுடன் இணைக்கப்பட்ட கம்பி முன்னும் பின்னும் தள்ள வண்டியும் செல்லும். இந்த ஸிலிண்டரில் வேண்டிய பெட்ரோல் எண்ணெயும் அதற்குத் தக்க காற்றும் முறையே சென்று ஒரு கலப்புக்காற்றாக மாறிச் சமயத்தில் நெருப்புப்பொறிபட்டதும் வெடிக்கிறது. அப்போது உஷ்ணம் அதிகரித்துக் காற்றும் அதிக இடத்தை அடைத்துக்கொள்ளுதற்கு எத்தனிக்கிறது. அதனால் பிஸ்டன் திடீரென்று முன் தள்ளுகிறது. எண்ணெய் உள் செல்லாவிட்டாலும் காற்றுக் குறைந்தாலும் வெடிப்பின் பலம் குறைந்து ஓட்டம் நின்றுவிடும். தீப்பொறி பிறப்பதற்காக 'பாட்டரி' என்னும் மின்சாரம் உண்டாக்கும் யந்திரத்தைப்பாவது, காந்த சக்தியினால் மின்சாரத்தையும் தீப்பொறியையும் உண்டு பண்ணும் 'மேக்னீடோ' என்னும் யந்திரத்தையாவது மோடாரில் உபயோகப்படுத்துவார்கள். வெடிப்பு உண்டாகும் காலத்தில் உஷ்ணமும் அதிகமாக வெளியிடுவதால் மோட்டார் யந்திரம் அதிக சூடாகிக் கெட்டுப்போகுமாகையால் அது அவ்வாறு உஷ்ணமாகாதபடி ஜலத்தினால் குளிரவைப்பதும் உண்டு. குளிர்ந்த காற்று இதைச் சுற்றிலும் சுலபமாக எப்போதும் சஞ்சரித்துக் கொண்டிருப்பதற்குத் தக்க விசிறியைவைத்துக் காற்றை ஓடச்செய்தும் வண்டியின் முன் பாகத்தில் நன்றாய்க் காற்றுப்படும் இடத்தில் வைத்தும் குளிரச்செய்வார்கள். அநேக சன்னத்தகடுகளை மோட்டார்ப் பக்கத்தில் அமைத்து அதன் உதவியால் குளிரும்படிச் செய்யும் உபாயமும் உண்டு. தகுந்த காலத்தில் தீப்பொறி தோன்றாமல் சமயந் தப்பித்தோன்றினால் வெடிக்கும் சக்தி தவறி, மாறாகப் பிஸ்டன் உதைத்து வண்டியைச் செல்லவொட்டாமல் செய்துவிடும்.

மோட்டார் யந்திரத்திற்கு வேண்டிய எண்ணெய் சேகரித்த பாத்திரமும், யந்திரமும் மற்ற உதவிக்கருவிகளும், அதிக கனமில்லாததாலும் மிகக் குறைந்த இடத்தை அடைத்துக்கொள்வதாலும் இதைப் பறக்கும் ஏரோப்ளேன் என்னும் விமானங்களிலும் உபயோகிக்கிறார்கள். மோட்டார் என்னும் யந்திரத்தைக் கண்டுபிடித்த பிறகு ஆகாயத்தில் பறக்கச்செய்த உபாயங்கள் பலித்தன.

# செவ்வாயில் மனிதருண்டா?

எஸ். சுப்பிரமணியன், பி. ஏ. (ஆனர்ஸ்)

---

சுமார் மூன்று நூற்றாண்டுகளாக வான சாஸ்திரிகள் தங்கள் தங்கள் தூரதிருஷ்டிக் கண்ணாடிகளால் செவ்வாய்க்கிரகத்தை விடாமல் பரிசீலனை பண்ணிக்கொண்டிருக்கின்றனர். ஆனால், நாம் பூமியில் வசிப்பது போலவே செவ்வாயிலும் நம்மைப் போன்றவர்கள் இருக்கிறார்களா என்ற விஷயத்தில் மாத்திரம் இன்னும் அவர்கள் ஒரு முடிவுக்கு வரவில்லை. வானசாஸ்திர ஆராய்ச்சியில் புகழ் பெற்ற பெரியோர் பலர், "நிச்சயமாக அங்கே மனிதர்கள் இருக்கிறார்கள்" என்று சொல்லுகிறார்கள். அவர்களுக்கு எல்லா விதத்திலும் சமானமான வேறு பலர், "அங்கேதான் மனிதருக்கு இன்றியமையாத காற்று, உஷ்ணம், நீர் முதலியவை இல்லையே; எப்படி மனிதர் வாழமுடியும்?" என்று ஆக்ஷேபிக்கிறார்கள். இந்த விவாதத்தில் எல்லோரும் தலையிடுதல் முடியாத காரியம். ஆகையால் இவ்விருசாராரும் சொல்லுவது என்ன என்பதைமாத்திரம் இங்கே கவனிப்போம்.

சுமார் 150 வருஷங்களுக்கு முன் ஸர் வில்லியம் ஹார்ஷல் (*Sir William Herschel*) என்ற ஆங்கிலேயர் செவ்வாய்க்கிரக கோளத்தின் துருவங்களில் அடிக்கடி ஏதோ வெள்ளையாகத் தோன்றிச் சிறிது சிறிதாக மறைவதைக் கவனித்தார். வேறுகாரணம் ஒன்றும் சொல்லக் கூடாமையால் அவை பனிக்கட்டிகளாகத்தான் இருக்கவேண்டுமெனத் தீர்மானித்தார். மேலும் அக்கோளத்தின்மேல் பல இடங்களில் பெரிய கறுப்புப் புள்ளிகள் தெரிவதையும் அவர் கண்டார். அவைகளைச் சமுத்திரங்களென்று எண்ணினர். கி. பி. 1877-ல் இதாலி தேசத்தில் மிலான் நகரத்திலுள்ள வான ஆராய்ச்சிச் சாலையைச் சேர்ந்த ஷியாபரல்லி (*Schiaparelli*) என்ற ஆசிரியர் செவ்வாய்க்கிரக கோளத்தின்மேல் வெளிச்சமான இடங்களில் அதிக நீளமும் குறைந்த அகலமுமுள்ள அநேகம் கோடுகள் இந்த 'சமுத்திரங்களை' ஒன்றோடொன்று இணைப்பதைக்கண்டு 'அவைகள் கால்வாய்கள்' என்று கூறினர். ஐந்துவருஷம் சென்றபின் இந்தக்கால்வாய்களில் சில இரட்டையாக இருப்பதும் இவருக்குத் தெரிந்தது.

ஆனல் அதன் காரணம் ஒருவருக்கும் தெரியவில்லை. இன்றைக்கும் அவை நமக்குத் தென்படும். அச்சமுத்திரங்களிலும் கால்வாய்களிலும் அடிக்கடி நிறமாறுதல்கள் ஏற்படுவதைப் பலர் கவனித்திருக்கிருர்கள். அவைகளில் தண்ணீர் இருப்பதும் வற்றுவதும்தான் அதன் காரணம் என்று அவர்கள் அபிப்பிராயப்படுகிருர்கள். அக்கால்வாய்களில் தண்ணீர் இருக்கும்போது அவைகளுக்கு இருபக்கத்திலும் நிலம் பச்சையாகக் காணப்படுகிறது; நீர் வற்றினவுடன் பச்சைவர்ணம் மறைகிறது. இக்காரணத்தால் அங்கேயும் பயிர், புல் பூண்டுகள் உண்டென்றுதானே அனுமானிக்கவேண்டும்? பூமிக்குச் சூரிய உஷ்ணம் கிடைப்பதைப் போல் அங்கேயும் கிடைக்கிறது. இங்கே சுவாசிக்கக் காற்று இருப்பதுபோல் அங்கேயும் இருக்கிறது. ஆகையால் செவ்வாயிலும் மனிதர் வாசத்துக் கேற்ற வசதிகள் இருக்கின்றன. மேலும் அங்கே புத்திமான்களான பல எஞ்சினீயர்கள் இருக்கிருர்களென்பது லவல் (*Lowell*) என்ற பிரசித்திபெற்ற அமெரிக்க வான சாஸ்திரியின் நம்பிக்கை. ஏனென்ருல் அப்படியில்லாவிடில் எப்படி அங்கே நீர்ப்பாசனத்துக்காக இவ்வளவு நேரான சால்வாய்கள் வெட்டமுடியும்?

எதிர்க்கட்சியைச் சேர்ந்தவர்கள் மேற்சொன்ன ஒவ்வொன்றுக்கும் வேறு சமாதானம் கூறுகின்றனர்; "துருவங்களில் தெரிவன பனிக்கட்டிகளாக இருந்தால் அவை உருகும் பொழுது மேகங்கள் தோன்ற வேண்டுமே; ஆனல் அப்படி யொன்றும் காணேமே" என்கிருர்கள். லிக் (*Lick*) ஆராய்ச்சிச் சாலையைச் சேர்ந்த க்ஷேபர்லி (*Sehaeberle*) என்பவர் மேற்சொன்ன கோடுகளைக் கால்வாய்களென்று சொல்லுவது பிசகென்றும், அவைகள் உண்மையில் மலைகளென்றும் சொல்லுகிருர். சிலர், "செவ்வாயில் சமுத்திரங்களும் கால்வாய்களும் இருந்தால் அவைகளிலுள்ள தண்ணீரில் சூரியனுடைய பிரதிபிம்பம் தோன்ற வேண்டுமே; ஆனல் இல்லையே" என்கிருர்கள். மற்றும் சிலர் அங்குக் காற்றே கிடையாது என்றுசொல்லுகிருர்கள். ஆங்கிலேய வானசாஸ்திரிகள் இரண்டொருவர் அங்கே சீதோஷ்ணஸ்திதி சரியில்லை என்பர். கணக்கில் வல்லவர் 'அங்கே ஆகர்ஷண சக்தி மிகவும் குறைவு; ஆகையால் மனிதன் நேராக நிற்கமுடியாது' எனவும் 'தண்ணீர் இருக்கமுடியாது' எனவும் சொல்லுகிருர்கள். சமீபத்தில் செவ்வாய்க்கிரகத்தைப் பற்றிப் புஸ்தகம் ஒன்றெழுதிய அந்தோனியதி (*Antoniadi*) என்ற பிரெஞ்சுதேசக் கனவான் மனிதர் அங்கே வசிக்க முடியாதென்று சாதிக்கிருர். இவர்களிடமிருந்து கொஞ்

சம் மாறுபட்ட வாலஸ் (*Wallace*) என்ற ஆங்கிலேயர், மனிதர் செவ்வாயிலிருந்தாலும் அவர்கள் புத்தியற்றவர்களென்கிறார். காரணம் என்னவென்றால் "புத்தியிருந்தால் இவ்வளவு நீளமான கால்வாய்கள் வெட்டுவார்களா; இவ்வளவு தூரம் போவதற்குள் தண்ணீர் ஆவியாக மாறிவிடாதா?" என்பது தான். இவ்வித ஆக்ஷேபணைகள் இன்னும் பல உண்டு.

இனி, யாவருக்கும் தோன்றக்கூடிய சில விஷயங்களைப் பார்ப்போம். நமக்கு இந்த உலகத்தில் பிறந்து, இருந்து, இறக்க உரிமையுண்டானால் ஏன் அவ்வித நியதி செவ்வாயிலும் பலருக்கு இருக்கக் கூடாது? மேலும் ஸ்விப்ட் (*Swift*) என்ற பண்டை ஆங்கிலப் பெரியாரெழுதிய 'கலிவரின் யாத்திரை' (*Gulliver's Travels*) என்ற புத்தகத்தில் செவ்வாய்க்கு இரண்டு சந்திரன் உண்டென்றும் அவைகள் இவ்வளவு இவ்வளவு காலத்தில் அதைச் சுற்றி வருமென்றும் சொல்லியிருக்கிறார். அதைப் பார்த்து நகைத்தவர் பலர்; ஆனால் அவர்சொன்னது உண்மையெனச் சமீபத்தில் நிரூபிக்கப்பட்டது. ஆகையால் எச். ஜி. வெல்ஸ் (*H. G. Wells*) என்ற அறிஞர் 'உலகங்களின் யுத்தம்" (*The War of the Worlds*) என்ற புஸ்தகத்தில் சொன்னபடி செவ்வாயிலிருந்து மனிதர்கள் பூமிக்கு வந்தாலும் வரலாம்.

---

## வானில் விளையாடும் வெடிகுண்டு

ஒரு புதமாதிரியான வாணகுண்டு பிரிட்டனில் செய்யப்படுகிறது. இவ்வாண குண்டின் அமைப்பும் நாச வேலையும் ஆச்சரியமானவை. வெடிகுண்டு வெடிக்கப்பட்டவுடன் அது ஆகாயத்தில் குறிப்பிட்ட இடத்திற்குச் சென்றுவிடும். அப்பொழுது வெடிகுண்டுடனிருக்கும் வாணவெடிகளில் ஒன்று வெடிக்கும். இவ்வாறு வாணவெடிகள் வெடிப்பதில் வெடிகுண்டுகள் இன்னும் அதிக உயரத்திற்குக் கொண்டுபோகப்படும். எல்லா வாண வெடிகளும் வெடிக்கச் சிறிது நேரமாகுமல்லவா? இந்த நேரத்தில் இயற்கையாகவே பூமி சிறிது தூரம் சுற்றிவிடும். ஆகவே லண்டனிலிருந்து வெடிக்கப்பட்ட வெடிகுண்டு பாரிஸ் நகரிலோ அல்லது பெர்லின் நகரிலோ அல்லது மாஸ்கோ நகரிலோ விழுந்து நாசமாக்கமுடியும். கால அளவுக்கு ஏற்றபடி வாண வெடிகள் சேர்க்கப்படும்.

—வ. ஹ.

# மேட்டூர் அணை

அநுஷம்

---

இதுகாறும் உலகத்திற் கட்டப்பட்டுள்ள அணைகளெல்லா வற்றிலும் பெரிய அணை தமிழ்நாட்டில் இருக்கிறது என்ற ஒரு பெருமை நமக்கு வாய்த்திருக்கிறது. 'ஏழ்தலம்புகழ் காவேரி யால் விளை சோழமண்டலம்' இனி மிக்க வளமுடையதாக ஆவதற்கு மேட்டூர்ப்பேரணை துணை செய்யுமென்று அறிஞர்கூறுகின்றனர். காவிரி நதியின் நீரோட்டத்தை ஒழுங்குபடுத்திப் பழைய விளை நிலங்களுக்குக் குறை வில்லாத பாசனத்தை உண்டாக்குவதோடு புது விளைநிலங்களையும் அமைப்பதே இந்தப் பேரணையின் நோக்க மாகும். இது சென்ற ஆகஸ்டுமாதம் 21-ஆம் தேதி, சென்னை கவர்னர் மேன்மை தங்கிய ஸர் ப்ரடரிக் ஸ்டான்லி அவர்களால் திறந்துவைக்கப்பட்டது.

## காவிரி நதி

மிகப்பழைய நூல்களிலும் காவிரியின் சிறப்புப் பலபடி யாகப் பாராட்டப் படுகிறது. 'தண்ணீருங் காவிரியே, தார்வேந் தன் சோழனே, மண்ணாவ துஞ்சோழ மண்டலமே' என இந்நதி யும் இதன் வளத்தாற் செல்வம் பெறும் சோழனும் அவனுடைய நாடும் சிறப்பிக்கப் பெறுதல் காண்க. என்றும் வற்றாமல் ஓடும் ஜீவநதியாகிய இது 'பொய்யாத பொன்னிநதி' 'வற்றாத காவிரி' என்று புலவர்களாற் போற்றப்படுகிறது. புராணங்கள் இந்நதியின் வரலாற்றையும் இதன்பால் நீராடுதலால் உண்டாகும் புண்ணியத் தையும் விரித்துக் கூறுகின்றன. இதன்கரைகளில் பல சிவாலயங் களும் விஷ்ணுவாலயங்களும் மிகச் சிறப்பாக விளங்குகின்றன. இதில் பொன் அணுக்கள் இருத்தலால் நீராடுவோருக்கும் உட் கொள்ளுவோருக்கும் இதன் நீர் நன்மையை உண்டாக்கும் என் றும் பொன் அணுக்கள் இருத்தல்பற்றியே 'பொன்னி' என்னும் பெயர் இதற்கு அமைந்துள தென்றும் அறிஞர் கூறுவர். 'சோழ வளநாடு சோறுடைத்து' என்று கூறுவதற்கேற்ற நிலவளத்தை அந்நாட்டில் உண்டாக்கும் இந்நதியின் சிறப்பு இங்கே கூறி அடங் குவதன்று.

இந்த ஆறு மேற்கு மலைத்தொடர்களிலுள்ள குடகுராஜ்யத்தில் ஸஹ்யமலையில் மெர்க்காரா என்ற இடத்தில் தோன்றுகிறது. கடல்மட்டத்திற்கு 4,400 அடி மேலுள்ளது அந்த இடம். சற்றேறக்குறைய 500 மைல்கள் ஓடி இந்நதி கீழ் கடலிற் புகுகிறது. குடகில் ஜூன்மாத முதல் செப்டம்பர் மாதம் வரையில் பெய்யும் பருவமழை அதிகமாக இருப்பதால் அக்காலத்தில் இந்நதி பெருக்கெடுத்தோடுகிறது. மைசூர்ப் பிரதேசங்களில் ஆகஸ்டிலிருந்து நவம்பர் மாதத்திற்குள் பருவமழை பெய்கிறது. அக்காலங்களில் அங்கேயுள்ள நீர் ஹேமவதி, லக்ஷ்மண தீர்த்தம், கபினி, சிம்ஷா, அர்க்காவதி என்னும் சிற்றாறுகளால் காவிரியிற் சேர்க்கப்படுகிறது. மைசூர்ப் பிரதேசத்தின் பின்னும் காவிரி மலைப்பிரதேசங்களின் வழியாகவே வந்து மேட்டூருக்கருகில் சமவெளியிற் புகுகிறது. அதற்கப்புறம் உள்ள இடங்களில் அக்டோபர் முதல் ஜனவரி மாதத்திற்குள் ஏற்படும் பருவமழையால் காவிரியில் வெள்ளம் பெருகுகிறது. பெரும்பாலும் நவம்பர்மாதத்தில் இந்தவெள்ளம் உண்டாகிறது. பவானி, நொய்யல், அமராவதி என்னும் ஆறுகள் இவ்விடங்களில் காவிரியில் வந்து சேருகின்றன. இங்ஙனம் பயிர்த்தொழிலுக்குரிய பருவங்களில் தொடர்ச்சியாக அங்கங்கே மழைபெய்வதனால் காவிரி இடையறாத நீர்ப்பெருக்கை உடையதாக இருக்கிறது.

ஆடிப்பட்டத்தில் குடகில் பெய்யும் மழை எப்போதும் தவறுவதில்லை. ஐப்பசி கார்த்திகை மாதங்களில் பெய்யும் மழை சரியானபடி சில வருஷங்களில் பெய்வதில்லை. அதனால் அக்காலத்தில் காவிரி எதிர்பார்த்த பயனைத் தருவதில்லை. தஞ்சாவூர் ஜில்லாவிலுள்ள விளைநிலங்கள் அதனால் பாசனம் பெறுவதில்லை. இந்தத் தடையைப் போக்குதற்கு ஏதாவது ஒருபாயம் வேண்டுமல்லவா?

காவிரிநதியானது திருச்சிராப்பள்ளிக்கு மேற்கே 10-மைல் தூரத்தில் இரண்டாகப் பிரிகிறது. அப்படிப் பிரியும் வடபகுதிக்குக் கொள்ளிடமென்னும் பெயர் வழங்குகின்றது. தென்பகுதி காவிரி யென்னும் பெயரோடு செல்கிறது. அவ்விடத்தில் கொள்ளிடத்துக்கு ஒரு குரம்பு அமைக்கப்பட்டிருக்கிறது. காவிரியும் கொள்ளிடமும், 20-மைலுக்குப் பிறகு மிக நெருங்கி ஓடுகின்றன. அவ்விடத்திற் காவிரியில் கல்லணை (*Grand Anicut*) கட்டப்பட்டிருக்கிறது. இவ்வணையின் வடிகால் கொள்ளிடத்தில் விழுகிறது. இங்கே காவிரிநதி காவிரி, வெண்ணாறு, கல்லணைக்கால்வாயென்னும் மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. கல்லணைக்கால்வாயென்பது மேட்டூர் அணையினால் ஏற்பட்டதாகும். காவிரியும்



மேட்டூரில் 1924-ஆம் வருஷத்தில் காவிரியின் தோற்றம்.



1927-இல் மேட்டூர் அணை வேலை தொடங்கப்பட்ட சமயத்தில் எடுத்த படம்.

வெண்ணாறும் தஞ்சாவூர் ஜில்லாவின் முக்காற்பகுதியை வளப் படுத்துகின்றன. கல்லணைக்கால்வாய் (*Grand Anicut Canal*) மிகுதியுள்ள பகுதிக்குப் பயன்படுகிறது.

## பழைய நிலை

ஐப்பசி கார்த்திகை மாதங்களில் மழையின்மையால் உண்டாகிய தடையையல்லாமல் வேறு பலவிதமான குறைகள் தஞ்சாவூர் விளைநிலங்களுக்கு இருந்தன. அதிகவெள்ளத்தால் கரைகள் உடைதல், வயல்கள் எக்கரடித்துப் பயனில்லாமல் போதல் முதலிய பலவகையான குறைகளும் இருந்தன. இவற்றை நீக்கவேண்டுமென்ற எண்ணம் இந்நாட்டினர்க்குப் பழையகால முதற்கொண்டு இருந்துவந்தது. காவிரிக்குக் கரிகாலன் கரைகட்டினான் என்று சரித்திரத்தால் அறிகிறோம். நிலங்களிலுள்ள மணலை நீக்குவதும் இடிந்த கரைகளைச் செப்பனிடுவதுமாகிய செயல்கள் வருடந்தோறும் நிகழ்ந்து வந்தன. குறைகள் நீங்கி நிலையான அமைதி உண்டாகவில்லை. இற்றைக்குச் சற்றேறக்குறைய நூறுவருஷங்களுக்குமுன், இத்தகைய குறைகளை ஸர் ஆர்தர்காட்டன் என்பவர் உணர்ந்தார். காவிரி நீரோட்டத்தை ஒழுங்குபடுத்துவதற்கேற்ற ஓரணை இருந்தாலன்றி நற்பயன் விளையாதென்பதை அவர் ஆராய்ந்தறிந்தார். அவர் 1836-ஆம் வருஷத்தில் கொள்ளிடத்தில் மேலணைக்கட்டை (*Upper Anicut*) க்கட்டினார். அதனால் அதிக நீர் காவிரியில் திருப்பப்பட்டது. ஆயினும் வெள்ளகாலங்களில் காவிரியில் அதிக நீர் பெருகிக் கரைகளை உடைத்ததனால் மிக்கதுன்பம் உண்டாயிற்று. அத்தகைய குறையை நீக்க மீண்டும், 1845-ஆம் வருஷத்தில் மேலணைக்கட்டில் காவிரியின் குறுக்கே ஓர் அணை கட்டப்பட்டது. நீரோட்டத்தை ஒழுங்குபடுத்துவதற்காக அவ்வணை அமைக்கப்பட்டது. கொள்ளிடநதிப் பாசனத்துக்கு உபயோகமாக மேலணைக்கு 70 மைல் கிழே ஓரணை 1836-இல் கட்டப்பட்டது. அணைக்கரையென அது வழங்கிவருகிறது.

## மேட்டூர் அணையின் ஆரம்பம்

இங்ஙனம் நாளடைவில் உண்டான அமைப்புக்களால் கொள்ளிடக்குரம்பில் வரும் நீர் ஒழுங்காகச் செலுத்தப்பட்டுவந்தது. ஆனாலும் அந்தக்குரம்பிற்கு வரும் நீரோட்டம் ஒழுங்குபட வேண்டுமாயின் காவிரியின் மேற்பகுதியில் ஒருபெரிய தேக்கம் அவசியமென்பதைப் பலவருஷங்களாக அறிஞர்கள் உணர்ந்து வந்தார்கள். அந்தத் தேக்கத்தைப் பவானியில் அமைப்பதென்

றும் காவிரியிலேயே அமைப்பதென்றும் இரண்டுவித யோசனைகள் இருந்துவந்தன. இரண்டினாலும் உண்டாகும் பயன்கள் நன்றாக ஆராயப்பட்டன. இறுதியாகக் காவிரியில் அமைக்கப்படும் தேக்கமே அதிகப் பயனை விளைக்குமென்ற முடிவு ஏற்பட்டது. கர்னல் எல்லிஸ் என்பவர் காவிரியில் ஒரு பேரணை கட்டும் திட்டமொன்றைச் சமர்ப்பித்தார்.

இதனிடையில் மைசூர் அரசாங்கத்தார் கிருஷ்ணராஜ சாகர அணையை உயர்த்திக்கொள்வதாகக் கூறினர். அதனால் மேட்டூர்த் திட்டத்திற்குச் சில அசௌகரியங்கள் உண்டாகுமாதலின் சென்னை அரசாங்கத்தார் அவ்விஷயத்தில் ஆலோசனை செய்தனர். இருசாராருக்கும் இடையே விவாதம் நிகழ்ந்தது. அப்பொழுது ஐரோப்பிய மகாயுத்தம் தொடங்கியது. விலைவாசிகள் உயர்ந்தன. இவற்றால் கர்னல் எல்லிஸ் சமர்ப்பித்த திட்டத்தை அநுசரித்து வேலை ஆரம்பிப்பதற்குத் தடைகள் ஏற்பட்டன. அக்காலத்தில் சென்னை நிருவாக சபை அங்கத்தினராக இருந்த ஸர் ஸி. பி. இராமஸ்வாமி ஐயரவர்கள் மைசூர் அரசாங்கத்தாரோடு கலந்து ஆலோசித்தார். அவருடைய பெருமுயற்சியின் பயனாக இரு தரத்தினருக்கும் பாதகமில்லாத முடிவு உண்டாயிற்று. விலைவாசியின் உயர்வினால் பழைய திட்டம் மீண்டும் ஆலோசித்துத் திருத்தப்பட வேண்டியதாயிற்று. இந்தியாமந்திரியின் அனுமதியைப் பெறும் விஷயத்திலும் ஸர். ஸி. பி. இராமஸ்வாமி ஐயரவர்கள் மிகவும் சிரமப்பட்டார். மேட்டூர்அணை திறக்கப்பட்டபோது அவருடைய பெருமுயற்சியினாலும் உழைப்பினாலும் இவ்வணை நிறைவேறிய தென்பதைச் சிலர் எடுத்துக் கூறினார்கள். 1924-ஆம் வருஷம், திருத்தப்பெற்றதிட்டம் இந்தியா மந்திரியின் அங்கீகாரத்தைப் பெற்றது; 1925-ஆம் ௵ ஜூலை௴ 20-ஆம் தேதி வேலை தொடங்கப்பட்டது. அப்பொழுது சென்னைக் கவர்னராக விருந்த மேன்மைதங்கிய வைகவுண்ட் கோஷன் அவர்கள் அதனை ஆரம்பம் செய்து வைத்தார். 1928-இல் முதன்முதலாகக் 'காங்கிரீட்கல்' பரப்பினமையின் 1928-இலேயே அணைவேலை உண்மையில் தொடங்கப்பட்டது.

கோஷன்துரையவர்கள் வேலையை ஆரம்பித்து வைத்தபிறகு அணையில் வேலை செய்பவர்களுக்குரிய இடங்களும் பல உத்தியோக சாலைகளும் அமைக்கப்பட்டன. மேட்டூர் ஒரு நகரமாக்கப்பட்டது. சிவசமுத்திரம் நீர்வீழ்ச்சி மின்சார நிலயத்திலிருந்து மின்சாரம் கொணரப்பட்டது. மேட்டூர் நகரத்துக்குரிய விளக்குகள் நீர்ப்போக்குகள் முதலியன சிறப்பாக அமைக்கப்பட்



மேட்டூர் அணையின் தோற்றம்
(மதகுகளின் அமைப்பு.)



மேட்டூர் அணையின் முழுத்தோற்றம்.
(இரண்டு குன்றுகளுக்கிடையில் அணைகட்டப்பட்டுள்ளது).

டன. இதுகாறும் வேறெங்கும் பயன்படுத்தப்படாத பெரிய எந்திரங்கள் வருவிக்கப்பட்டன. அங்கங்கே பலவகையான போக்கு வரத்துச் சாதனங்களும் உற்பத்தி சாலைகளும் அமைக்கப்பட்டன. இங்ஙனம் தொடங்கப்பட்ட பேரணை ஆறுவருடங்களில் முற்றுப் பெற்றது. ஆறுகோடியே எண்பது லக்ஷம் ரூபாய்ச் செலவில் கட்டப்பட்ட இவ்வணை உலகமுழுவதும் உள்ளவர்களுடைய கருத்தை ஈர்த்து விளங்குகின்றது.

## அணையின் அமைப்பு

இந்த அணையினால் உண்டாக்கப்பட்ட நீர்த் தேக்கம் 60 சதுரமைல் பரப்புடையது. 93,5000 லக்ஷம் கனஅடி ஜலத்தைத் தேக்கிக்கொண்டிருப்பது. இந்த அணை ஒருமைல் 20 அடி (5,300) நீளமுடையது.

| | | அடிகள் |
|---|---|---|
| அணையுள்ள இடத்தில் ஆற்றின் அகலம் | .. | 1,100 |
| அணையில் அதிகமான உயரம் | .. | 214 |
| உச்சியில் அணையின் அகலம் | .. | $20\frac{1}{2}$ |
| இரண்டு கைபிடிச் சுவரின் இடையிலுள்ள சாலையின் அகலம் | | 16 |
| கடல் மட்டத்திற்கு மேல் அணை உச்சியின் உயரம் | .. | 801 |
| அதிக ஆழமான இடத்தில் அணையின் அடிப்பாகத்தின் அகலம் | .. | 171 |
| நீர்த்தேக்கத்தில் அதிகமான ஆழம் | .. | 165 |
| நீர் தேங்கியிருக்கும் இடத்தின் நீளம் | மைல் | 33 |
| கடல் மட்டத்திலிருந்து தேக்கத்தின் நீர்மட்ட உயரம் | அடி | 790 |
| அதிகமான நீர்மட்டம் .. | .. | 796 |

இந்த அணையினால் தேக்கப்பட்ட ஜலமானது நதிக்கு 33 மைல் எதிர்த்துப் பரவியிருக்கிறது.

இந்த அணை கருங்கற்பாறைகளை உடைத்துச் சிமிட்டுச் சுண்ணத்தைக்கலந்து செய்யப்பட்ட பெரிய பெரிய பாறை அச்சுக்களால் கட்டப்பட்டது. இதில் 546 லக்ஷம் கனஅடிக் கட்டடப் பொருள்கள் உபயோகிக்கப்பட்டுள்ளன.

இந்த அணையில் நீரோட்டத்தை ஒழுங்குபடுத்துவதற்குப் பலவகையான அமைப்புக்கள் உள்ளன. ஏரி நிரம்பி வழியும் பொழுது பக்கத்தில் ஓடுவதற்குரிய வடிமடையொன்று 810 அடி நீளத்தில் கடல் மட்டத்திற்குமேல் 791 அடிஉயரத்தில் உள்ளது. அதிகமான ஜலத்தை வெளிவிடும் மதகுகள் (*Surplus sluices*) கடல் மட்டத்திற்கு 770 அடி உயரத்தில் 16 இருக்கின்றன.

சமுத்திரமட்டத்திற்கு 720 அடி உயரத்தில் மேல் மதகுகள் (*High level sluices*) 8 உள்ளன. 670 அடி உயரத்தில் கீழ்மதகுகள் (*Low level sluices*) 5 இருக்கின்றன.

### நீரோட்டத்தை ஒழுங்குபடுத்தும் முறை

ஜூன் மாதமுதல் ஸெப்டம்பர் வரையிலும், மேல்மழையால் உண்டாகும் வெள்ளகாலத்தில் அதிக ஜலத்தை வெளிவிடும் மதகுகளின் வழியாக ஜலம் பாயும். 774 அடிக்குக் கீழ் நீர்மட்டம் தாழ்ந்தால் தஞ்சாவூர்ஜில்லா விளை நிலங்களின் பொருட்டு மேல்மதகுகள் திறந்துவிடப்படும். 730 அடிக்குக் கீழ்இறங்கினுல் கீழ்மதகுகளும் திறக்கப்படும். ஆனுல் சாதாரணமாக 735 அடிக்குக் கீழ் நீர்மட்டம் இறங்காது என்று கருதுகிருர்கள். 10 அல்லது 11 வருஷங்களுக்கு ஒரு முறை மிகவும் கஷ்டமான சமயம் நேரலாம்; அப்பொழுது 730 அடிக்குக் கீழ் ஜலமட்டம் இறங்கினுல் கீழ்மதகுகளைத் திறந்து விடவேண்டியிருக்கும். மேல் மதகுகள் மூலம் ஒருஸெகண்டிற்கு 25000கன அடி ஜலம் வெளி விடக் கூடுமென்றும், பெருவெள்ளம் வந்த காலங்களில் 30,000 கன அடி ஜலம் கூடச் செல்லுமென்றும் கணக்கிட்டிருக்கிருர்கள். அதிக ஜலத்தை வெளிவிடும் மதகுகள் (*Surplus sluices*) ஒரு ஸெகண்டில் 456,000 கன அடி ஜலத்தை வெளிவிடும்.

எல்வா மதகுகளிலுள்ள அடைப்புப்பலகைகளும் மின்சார விசையினுல் இயக்கப்படும்.

### கருவிகள்

இந்தப் பெரிய அணையைக் கட்டுவதற்குப் பலவகையான யந்திரக்கருவிகள் உபயோகிக்கப்பட்டன. கல்லை உடைத்துக் கொடுக்கும் யந்திரங்களுள் மிகப் பிரமாண்டமான இரண்டு ஒருமணிக்கு 120 டன் கற்களை உடைத்துக் கொடுத்துக் கொண்டே யிருந்தன. உடைத்த கற்களையும் சிமிட்டுச் சுண்ணத்தையும் கலந்து மிக உயரத்துக்குத் தூக்கிச்சென்று அங்கிருந்து அணையில் உரிய இடத்தில் அமைப்பதற்குரிய இரண்டு பெரிய யந்திரக் கூம்புகள் (*Cancreating Towers*) இந்த அணைக்குப் பயன்பட்டவற்றுள் மிகச் சிறப்புடையனவாகும். இதுகாறும் இவ்வளவு பெரிய யந்திரங்கள் உலகத்தில் எங்கும் உபயோகப்படுத்தப் படவில்லை. இந்தக் கூம்புகளில் ஒவ்வொன்றும் 306 அடி உயரமுடையது; 64 சக்கரங்களை உடையது; 80 அடி அகலமுள்ள தண்டவாளத்தில் இயங்கும் தன்மையுடையது; ஒவ்வொன்றும் ஒருநாளைக்கு 12,000 கன அடி கல்லும் சுண்ணமும் சேர்ந்த கலவையை அணையில்



கல்லையும் சிமிட்டுச் சுண்ணத்தையும் கலந்து அணையில் அமைக்க
உதவிய யந்திரக் கூம்புகள்.



கல்லணைக்கால்வாய் (தஞ்சைக்கருகிலுள்ள தோற்றம்.)

அமைத்தன. அணைக்குவேண்டிய பலபொருள்களையும் கொண்டு வருவதற்குப் புகைவண்டிகள் உபயோகிக்கப்பட்டன. யந்திரங்கள் மின்சாரத்தால் இயக்கப்பட்டன. அதற்குரிய மின்சாரம் சிவசமுத்திரம் மின்சார நிலயத்திலிருந்து வழங்கப்பட்டது. அது மேட்டூரிலிருந்து 66 மைல் தூரத்திலிருக்கிறது. இந்த அணைகட்டும் வேலையில் லக்ஷக்கணக்கான யூனிட்டுகள் மின்சாரசக்தி பயன் பட்டது.

### கசிவுச் சுரங்கம்

இந்த அணை மிகப்பெரியதாக இருத்தலினால் இதன் நடுவில் ஒரு சுரங்கவழி (*Drainage gallery*) அமைக்கப்பட்டுள்ளது. அணையை அடிக்கடி சோதனை செய்வதற்கும் கசிவு ஜலம் வெளியில் போவதற்கும் இந்தவழி பயன்படும்.

உலகில் மற்ற அணைகளின் அமைப்போடும், அவற்றிற்கான செலவு முதலியவற்றோடும் இந்த அணையின் அமைப்பையும் செலவு முதலியவற்றையும் ஒப்பிட்டுப்பார்த்தால் இதன் பெருமை விளங்கும்.

| அணையின் பெயர் | செலவு (லக்ஷ ரூபாய்க் கணக்கில்) | (லக்ஷம் கன அடிக்கணக்கில்) | தேக்கும் ஜலத்தின் அளவு (லக்ஷம் கன அடிக்கணக்கில்) | கட்டிய கால அளவு (வருஷங்கள்) |
|---|---|---|---|---|
| அஸ்ஸுவன் (எகிப்து) ... | 367·50 | 188 | 376000 | 4 |
| டென்ஸா (இந்தியா) ... | 30·80 | 110 | 6910 | 5 |
| பெரியாறு ( ஷை ) ... | 50·00 | 50 | 93000 | 9 |
| நியூக்ரோடன் (அமெரிக்கா) | 212·12 | 231 | 51200 | 14 |
| க்ராஸ் நதி ( ஷை ) ... | 38·30 | 43 | 17600 | 3 |
| ஸென்னார் (ஆபிரிக்கா) ... | 847·00 | 148 | 225600 | 7 |
| கிருஷ்ணராஜ ஸாகரம் (மைசூர்) | 250·00 | 299 | 439340 | 16 |
| பந்தர் (இந்தியா) ... | 84·00 | 120 | 100860 | 16 |
| நிஜாம் ஸாகரம் (ஹைதராபாத்) | 365·70 | 301 | 254460 | ... |
| லாயிட் அணை (இந்தியா) ... | 172·00 | 215 | 241980 | 6 |
| மேட்டூர் அணை ... | 478·10 | 546 | 935000 | 6 |

### கால்வாய்கள்

இந்த அணையில்தேக்கப்படும் ஜலம் தஞ்சாவூர் ஜில்லாவில் புதிய விளைநிலங்களுக்குப் பயன்படுவதற்குச் சாதனமாக இருப்

பவை கால்வாய்களாகும். கல்லணையிலிருந்து பிரியும் கல்லணைக் கால்வாய்தான் இவற்றுள் தலைமையுடையது. அதிலிருந்து பல கிளைவாய்க்கால்கள் வெட்டப்பட்டுப் பட்டுக்கோட்டைத் தாலுக்கா நிலங்களை வளப்படுத்தும். வடவாற்றிலிருந்து செல்லும் வாய்க்காலொன்றும் அத்தாலுக்காவின் ஒரு பகுதிக்குப் பாயும்.

| | | மைல். |
|---|---|---|
| கல்லணைக் கால் வாயின் நீளம் | .. | 106 |
| கிளைக்கால்வாய்களின் மொத்த நீளம் | .. | 694 |
| நிலங்களிற் பாயும் கண்ணி வாய்க்கால்கள் | .. | 1904 |

இந்தக் கால்வாய் வேலையானது 1926-ஆம் வருஷம் தொடங்கப்பட்டது. 1935-ஆம் வருஷம் பூர்த்தியடையும். கல்லணைக் கால்வாயின் சில பகுதிகள் இரண்டுபெரிய மின்சாரவிசையந்திரங்களால் தோண்டப்பட்டன. அப்படித் தோண்டப்பட்ட இடத்தின் மொத்த நீளம் சற்றேறச்குறைய 26 மைலிருக்கும்.

### சாகுபடிசெய்யப்படும் நிலங்கள்

| முன்புள்ள நிலங்கள் | | ஏகர்கள் |
|---|---|---|
| ஒரு போகம் | .. | 8,73,000 |
| இருபோகம் (பழையவை) | .. | 95,000 |
| ஷை (புதியவை) | .. | 70,000 |
| பின்னும் எதிர்பார்ப்பவை | .. | 13,000 |
| மொத்தம் | .. | 10,51,000. |

| புதுநிலங்கள். | | |
|---|---|---|
| ஒரு போகம் | .. | 1,95,000 |
| இரு போகம் | .. | 1,05,000 |
| மொத்தம் | .. | 3,001,000. |

### மின்சார சக்தி உற்பத்தி

உலகத்திலுள்ள மற்ற சில அணைகளிற் போலவே இங்கும் நீரோட்டத்தால் மின்சார சக்தி உண்டாக்கப்படும். அந்தச் சக்தியினால் அணையிலுள்ள மதகுப் பலகைகள் இயக்கப்படும். இன்னும் பலவிதமான கைத்தொழில்களுக்கும் அது சாதனமாக இருக்கும். நீரோட்டத்திலிருந்து மின்சாரசக்தியை உண்டாக்கும்



மின்சாரசக்தி உண்டாக்கும்துழாய்கள் அமைப்பதற்காக விடப்பட்ட இடம்.




கசிவுநீர்ச் சுரங்கம்.

பொருட்டு 102 அங்குலம் குறுக்களவுள்ள 4 பெரிய குழாய்கள் வைக்கப்பட்டுள்ளன.

### நந்தவனம்

அணைக்குக்கீழ் மேல்மதகுக் கால்வாய்க்கும் கீழ்மதகுக் கால்வாய்க்கும் நடுவில் 35 ஏகர் அளவுள்ள நந்தவனமொன்று அமைக்கப்பட்டிருக்கிறது. அதன் நடுவில் ஊற்றென்று உள்ளது. அந்த நந்தவனம் சென்னைக் கவர்னரின் மனைவியார் பெயரால் வழங்கப்படும்.

### மற்றவசதிகள்

இந்த அணையினால் எதிர்பார்க்கப்படும் பயன்கள் பல. சேலம் நகரத்திற்கு நன்னீர் வழங்குவதற்கும், மேட்டூருக்கும் சென்னைக்கும் இடையே பல ஊர்களுக்கு மின்சார விளக்குப் போடுவதற்கும் தக்க முயற்சிகள் நடைபெறுகின்றன. மேட்டூருக்குச் சேலம் ஜங்ஷனிலிருந்து 26 மைல் நீளமுள்ள ரயில்பாதையிருக்கிறது. ஈரோட்டிலிருந்து 35 மைலுள்ள மோட்டார் பாதையுண்டு. இங்கே உண்டாக்கும் மின்சாரசக்தியாலும் இங்கே உள்ள போக்குவரத்து வசதியாலும் பலவகையான கைத்தொழில்களைத் தொடங்கி விருத்தி செய்யலாமென்று அறிஞர் கூறுகின்றனர். பஞ்சு ஆலைகளும், பட்டு உற்பத்திச்சாலைகளும், சாயநிலயங்களும், காகித உற்பத்திச் சாலைகளும் அமைப்பதற்குரிய வசதிகள் இங்கே உள்ளனவாம். சேலம் ஜில்லாவில் சில இடங்களில் உள்ள உயர்தரமான இரும்புச் சன்னங்களைப் பண்படுத்துவதற்கு மேட்டூரிலுண்டாகும் மின்சாரம் உபயோகப்படும்.

### தீர்வை

இந்த அணைக்கு ஆகிய செலவைத் துரைத்தனத்தார் அதிகத் தீர்வை மூலமாக ஈடு செய்ய எண்ணியிருக்கின்றார்கள். இது, தாங்கள் பெறும்பயனைவிட அதிகமாக உள்ளதென்று மிராசுதார்கள் குறை கூறுகின்றனர். தங்கள் நிலங்களில் வண்டல்படிவதனால் எரு விடும் செலவு இல்லாமலிருந்ததென்றும் இனி வண்டல்படிவதற்கு வழியில்லையென்றும் சிலர் கூறுகின்றனர். தங்களுக்கு விதித்துள்ள வரி தங்களால் தாங்கமுடியாதென்றும் தங்களுக்குப் பாசனவசதி வேண்டுவதில்லையென்றும் சிலர் கூறுகின்றனர்.

எந்த முயற்சியும் விளையும் பயனால் மதிப்பிடப்படும். மேட்டூர்ப் பேரணையின் மகிமை அதனால் பிரத்தியட்சத்தில் உண்டாகப் போகும் பயனால்தான் விளங்க வேண்டும். நாளடைவில் அது தெரியுமல்லவா?

# சரித்திரம்

## முசோலினி

மா. இராசமாணிக்கம்

முசோலினி! முசோலினி!! எந்த நாட்டு அரசியல் நிபுணரும் இப்பெயரையே கூறுகின்றனர். ஒவ்வொரு நாட்டு அரசியல் நிபுணரும் தம் நாடு சீர்பெற வேண்டுமாயின், 'ஒரு முசோலினி வேண்டும்' எனக்கூறுவதைப் பத்திரிகைகளிற் காணலாம். 'ஐரோப்பாவில் சமாதானத்தை நிலைநிறுத்த முசோலினியே ஏற்றவர்' எனப் பிரிட்டிஷ் பிரதம மந்திரியாரான ராம்ஸே மாக்டொனல்டும் பாராளுமன்றத்தில் வாய்விட்டுக் கூறுகின்றனர். "இங்ஙனம் யாவரும் ஒருங்கே புகழும் இவ்வதிசய மனிதர் யாவர்? இவர் ஆற்றல் யாது?" என்ற விவரங்களைக் காணின் நாம், முசோலினி வரலாற்றை உள்ளவாறு உணர்ந்தவராவோம்.

முசோலினி இத்தாலி நாட்டினர்; ஓர் ஏழைக் கொல்லரின் புத்திரர். இவர் கி. பி. 1883-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 29-ஆந் தேதி, ஞாயிற்றுக் கிழமை பகல் இரண்டு மணிக்கு இத்தாலியின் இரட்சகர் எனத் தோன்றியருளினர்.

இவர் தமது இளமைப் பருவத்தைப் பிறகுழந்தைகளைப் போலவே கழித்து வந்தார்; சிறுவயதில் தம் தாயினிடமே ஆரம்பக்கல்வி கற்றார்; பின்னர்ப் போர்டிங் பாடசாலையிற் சேர்ந்து உயர்தரக் கல்வி கற்றார்; விடுமுறை நாட்களில் தம் தாயுடன் அழகிய மலைச் சாரலை யடுத்த நகரங்கட்குச் சென்று இயற்கை யழகை இனிதாக விளக்கும் தோற்றங்களைக் கண்டார். தாய் நாட்டுப் பற்று இவர்தம் உள்ளத்தே தோன்றி வளரவாரம்பித்தது.

கலாசாலைக் கல்விக்குப்பின் இவர் தம் தந்தையாருடன் கொல்லவேலை செய்து வந்தார்; அப்பொழுது தந்தையார் பேசி வந்த அரசியல் விஷயங்களில் கவனஞ் செலுத்தலானார்; தமது நாட்டுநிலைமையையும் அப்போதைய அரசியல் விஷயங்களையும் கண்டறிந்தார். பின்னர், முசோலினி, தந்தையாரின் விருப்பப்படி ஆசிரியத் தொழில் தேர்ச்சிக்காக ஒரு பள்ளியில் சேர்க்கப்பட்டு,

ஆறு ஆண்டுகள் படித்துப் பட்டம் பெற்ருர்; பிறகு, ஆசிரியர் வேலைக்காகப் பல இடங்களில் அலைந்து திரிந்து, முடிவில் ஒரு பள்ளியில் ஆசிரியரானர்.

அப்பள்ளிக்கூட விடுமுறையில் இவர் இத்தாலிக்கு வடக்கே யுள்ள நாடுகளைக் காண விரும்பினர்; கையிற் காசில்லாமையையும் பொருட்படுத்தாமல் சுவிட்ஜர்லாண்டு சென்ருர். அங்கே இவர் காசின்றி அடைந்த இன்னல்கள் பல. இவர் அவற்றைப் பொறுமையோடு சகித்துக் கொண்டார். "நான் பட்ட துன்பங்கள் என் வாழ்க்கையை நல்வழியில் மக்களுக்குப் பயன் படுத்தும்படி செய்தன. அவை ஏற்படாவிடின், எனது வாழ்வு இன்றைய சர்வாதிகார வாழ்வாயிருந்திராது" என முசோலினியே தாம் அடைந்த துன்பங்களைப் பற்றிப் புகன்றுள்ளார்.

கையிற் காசின்றித் தவித்த முசோலினி சுவிட்ஜர்லாண்டில் ஒரு கொத்தராக (*Mason*) வேலை பார்த்தார்; சில நூல்களை இத்தாலிய மொழியிலிருந்து பிரஞ்சு மொழியிலும், சில நூல்களைப் பிரஞ்சு மொழியிலிருந்து இத்தாலி மொழியிலும் மொழி பெயர்த்தார், சுருங்கக்கூறின், இவர் சோற்றுக்கு வேலை செய்தார் எனல் பொருந்தும். எனினும், அக்கேவல நிலையில், இவர் பொதுநிலைக் கழகங்கட்குச் சென்று, பத்திரிகைகளையும் அரசியல் சம்பந்தமான நூல்களையும் விடாமற் படித்து வந்தார்; பொருளாதார சாத்திரத்தைப் படித்து நிபுணர் ஆனர்; சுவிட்ஜர்லாண்டில் பல மேடைகளில் அரசியல் சம்பந்தமான பிரசங்கங்கள் செய்தார். அதனல், இவர் சுவிட்ஜர் லாண்டு அரசாங்கத்தால் வெளியேற்றப்பட்டார்.

வெளி யேற்றப்பட்ட முசோலினி அங்கிருந்து பிரான்சுக்குச் சென்ருர்; அங்கே நடந்த வேலை நிறுத்தம் ஒன்றிற் கலந்துகொண்டு பிரசங்கம் செய்தார். இதையறிந்த பிரஞ்சு அதிகாரிகள் இவரைப் பிரான்சு நின்றும் வெளியேற்றினர்கள், பின்னர், இவர் தம் தாய் நாடு மீண்டார்.

தாய்நாடு மீண்ட முசோலினி இத்தாலியப் படையிற்சேர்ந்தார்; விரைவில் சிறந்த போர்வீரரானர். அவ்வமயம் இவருடைய அருமைத் தாயார் உயிர் துறந்தார். அதனுடன் முசோலினி சேனையை விட்டுப் பத்திரிகைத் தொழிலில் பழக்கம் பெறலானர்; 'போர்லி' என்றநகரில் நடைபெற்று வந்த சமதருமப் பத்திரிகையின் ஆசிரியர் ஆனர். இவ்வேலையே இவரது வாழ்க்கையாகிய மாளிகைக்கு அசைக்கமுடியாத அஸ்திவாரமாக அமைந்தது எனலாம். உறங்கிக்கொண்டிருந்த இத்தாலிய மக்களை உறக்கத்தினின்

றெழுப்ப இப்பத்திரிகையில் வீரம் ததும்பப்பெற்ற கட்டுரைகள் பலவற்றை முசோலினி வரைந்தார். அக்கட்டுரைகளால் இத்தாலிய மக்கள் புத்துயிர் பெற்று எழுந்தார்கள்.

இத்தாலிய அரசாங்கம் ஒட்டாமன் ஏகாதிபத்தியத்தின் மீது (*Ottaman Empire*) படையெடுக்கத் துணிந்தபோது முசோலினி அதற்கு எதிர்ப் பிரசாரம் செய்தார். அரசாங்கம் இவரைச் சிறையில் ஓராண்டு அடைத்தது. ஓராண்டு கழிந்ததும் முசோலினி பெரிய வீரராக இத்தாலிய மக்களால் வரவேற்கப் பட்டார். 'அவன்டி' என்னும் சமதருமத் தினசரிப் பத்திரிகைக் குத் தலைவராக்கினார்கள்.

இச்சமயம் முசோலினி தம் தந்தையாரை இழந்தார். இவர் பத்திரிகாசிரியர் ஆனதும் லட்சம் பேர் அப்பத்திரிகையின் சந்தாதாரராயினர். அப்பத்திரிகையால் இவர் சமதருமக் கட்சி யில் சிறந்த வீரராக விளங்கினர். அத்தகைய உயர்ந்தநிலையிலும் இவர் மிகவும் எளிய வாழ்க்கையை நேர்மையாக நடத்திவந்தார். இவர் ஆருயிர் மனைவியார் 'ரகேல்' (*Rachale*) என்பவர்; அப் பெண்மணியார் கணவற் கிசைந்தகாரிகை. அதனால் முசோலி னிக்கு இல்லறம் நல்லறமாக இலங்கிற்று.

இத்தாலி உள்நாட்டுக் குழப்பங்களால் அல்லலுற்ற சமயம் ஐரோப்பியப் பெரும்போர் மூண்டது. அப்போரில் பிரிட்ட னுடன் இத்தாலி சேரவேண்டுமென முசோலினி பிரசாரம் செய் தார். அரசாங்கம் ஒருவருடனும் சேரலாகாதென முடிவு செய் தது. முசோலினிக்குச் சாதகமாகக் குடிகள் இருந்தமையால், அரசர் போரில் கலப்பதாக முடிவு செய்தார்; போரை விரும்பாச் சமதருமக் கட்சியினர் தம் கட்சியினின்றும் முசோலினியை நீக்கி விட்டனர். உடனே இவர் 'பாஸிஸ்ட் இயக்கம்' (*Fasist*) *Movement*) என்பதைத் தோற்றுவித்துத் தம் கொள்கைகளைப் பரப்ப 'இத்தாலிய மக்கள்' (பொபோலோ-டி- இத்தாலியா *-Popolo—d' Italia*) என்னும் பத்திரிகையை ஆரம்பித்தார்.

போர் தொடங்கியது. போரில் முசோலினி வீரராகச் சேர்ந்தார்; பல துன்பங்களை யடைந்தார்; அந்நிலையிலும் இவர் தமது பத்திரிகைக்கு அரிய கட்டுரைகளை வரைந்தார்; இத்தாலிய மக்களை வீரமக்களாக மாற்றினர். இவரது ஊக்கத்தால் விழிப் புற்ற சேனைவீரர் ஆஸ்திரியப் படையைத் தோல்வியுறச்செய்தனர்.

போர் முடிந்தது; சமாதானம் ஏற்பட்டது. பிரிட்டனோடு சேர்ந்ததால் இத்தாலி பெற்ற நன்மை ஒன்றும் இல்லை. இதனால் இத்தாலியில் உள்நாட்டுக் குழப்பம் அதிகரித்தது. மக்கள்

பொதுவுடைமைக் கொள்கையைப் பரப்ப வேலை செய்தார்கள். சமதருமக்கட்சி வலுப்பட்டது. அப்பொழுதிருந்த இத்தாலி அரசாங்கம் வலியற்றிருந்ததால், அது சமதருமக் கட்சியினர் விஷமப் பிரசாரத்தை அடக்காது வாளாவிருந்தது.

அந்நிலையில் பொதுத்தேர்தல் நடைபெற்றது. முசோலினிக்கு அத்தேர்தலில் வெற்றி கிடைக்கவில்லை. வெற்றிபெற்ற சமதருமக் கட்சியினர் முசோலினியை அவமானப் படுத்த இவரைப் போன்ற உருச்செய்து, அதனைத் தெருக்களில் இழுத்துச் சென்றனர். அவர்கள் தூண்டுதலால் அரசாங்கம் முசோலினியைச் சிறைப்படுத்தியது; ஆனால், இவர் மறுநாள் விடுதலை அடைந்தார். இத்தாலியில் சமதருமக் கட்சியினர் ஆரவாரம் பெருத்திருந்தது. பல இடங்களில் வேலை நிறுத்தங்கள் செய்யப் பெற்றன. இத்தாலி பெருங்குழப்பமுற்றது. ஒவ்வோர் உத்தியோக நிலையமும் சமதருமக் கட்சியினரையே உத்தியோகஸ்தராகக் கொண்டிருந்தது. அரசாங்கம் சமதருமக் கட்சியினர் உள்ளங்கையில் நெல்லிக்கனிபோல் உருண்டு கொண்டிருந்தது. அதனால், வெளிநாட்டு விஷயங்களிலும் இத்தாலி தனது மதிப்பை இழந்தது; நான்காந்தர வல்லாசாக (*Fourth Rate Power*) மாறியது; பணப் பஞ்சம் ஏற்பட்டது.

முசோலினியின் பாஸிஸ்ட் இயக்கம் வரவர வலுப்பெற்றது. தன்னலங் கருதாத் தனிப்பெருந் தலைவராக முசோலினி விளங்கினார்; இவர் செய்த உருக்கமான சொற்பொழிவுகள் நாட்டின் மீது இவருக்கிருந்த அளவிலாப்பற்று, இவரது கண்யமான முகத் தோற்றம் இவையாவும் இத்தாலி மக்கள் மனத்தைக் கவர்ந்தன. தொழிலாளர் இவரை ஆதரித்தனர்; முசோலினியை இத்தாலியின் இரட்சகராக மதித்துப் பின்பற்றினர்;இவர் அடியால் இட்ட வேலையை முடியால் செய்து முடித்தனர்; சமதருமக் கட்சியினர் தமக்கிழைத்த இன்னல்களைப் பொறுமையோடு ஏற்றுக்கொண்டனர். இளைஞர்களும் பாஸிஸ்ட் இயக்கத்திற் சேர்ந்தார்கள். அவர்கள் சமதருமக் கட்சியினர் குழப்பஞ் செய்த போதெல்லாம் அமைதியை நிலைநாட்டினார்கள். இச்செயல்களால் இவ்வியக்கம் பொதுமக்களின் அனுதாபத்தையும் ஆதரவையும் பெற்றது. முசோலினி தம் வீரர்களைப் போர் வீரர்களாக மாற்றினார். அவ்வீரர்கள் தங்கள் தலைவர் கட்டளைப்படி நடந்துவந்தமையே முசோலினியின் பெரும் வெற்றிக்குக் காரணமாகும்.

1921-ஆம் ஆண்டு புதிய தேர்தல் நடைபெற்றது. அதில் முசோலினியும் இவர் கட்சியினர் முப்பத்து நான்கு பேரும் தேர்ந்

தெடுக்கப்பட்டனர். அன்றே சட்டசபைக் கூட்டத்தில் முசோலினி அரசாங்கத்தைக் கடுமையாகத் தாக்கிப் பேசினார்; அதன் பயனாக, கயோலிட்டி அரசாங்கம் வீழ்ந்தது; 'பொனேமி' அரசாங்கம் ஏற்பட்டது. அதே ஆண்டு அந்த மந்திரி சபையும் வீழ்ந்து, 'பாக்டா' என்பவர் பிரதம மந்திரியார் ஆனார். அவர் சமதருமக் கட்சியினரோடு சேர்ந்துகொண்டு தம் பதவியை மட்டும் காத்துக்கொள்ள விரும்பினார். அம்முறையை முசோலினி மிகவும் அழுத்தமாகக் கண்டித்துப் பேசினார்; அன்றே பாக்டா மந்திரி சபை ஒழிந்து, 'பேடா' என்பவர் பிரதம மந்திரியார் ஆனார்.

இச்சந்தர்ப்பத்தில் பகைவர் நாடெங்கும் பொது வேலை நிறுத்தம் செய்தனர். அப்போது முசோலினி, தம் வீரர்களை ஏவி அமைதியை நிறுவும்படி கட்டளையிட்டார். அப்போதுண்டான குழப்பத்தில் பாஸிஸ்ட் வீரர்கள் பகைவரைக் கண்ட கண்ட இடத்தெல்லாம் முறியடித்தார்கள். முசோலினியால் நாட்டில் அமைதி நிறுவப்படுவதை இத்தாலி அரசர் உணர்ந்தார் எனினும், அப்போது முசோலினியைப் பிரதம மந்திரியாராக்க ஏனையோர் அரசரை விடவில்லை.

அதே சந்தர்ப்பத்தில் முசோலினி புறப்பட்டு, ஒவ்வொரு நகரமாகச் சென்று தமது கட்சியின் உண்மை நிலைமையை உணர்ந்தார். இவர் சென்ற இடமெல்லாம் மக்கள் இவரைப் பேராரவாரத்துடன் 'இத்தாலியின் இரட்சகர் இவரே' எனக்கூறி வரவேற்றார்கள். தமக்கு ஆதரவு இருப்பதை யறிந்த முசோலினி தம் வீரரை ரோமாபுரியைப் பிடிக்குமாறு ஏவினர். அவர்கள் வழியில் இருக்கும் நகரங்களை ஒன்றன்பின் ஒன்றாகப் பிடித்து, இறுதியில் ரோமாபுரியை அடைந்தார்கள். நாட்டு நிலைமையை உள்ளபடி உணர்ந்த இத்தாலி அரசர் 'முசோலினியே பிரதம மந்திரியாராக இருக்கத்தக்கவர்; இவராற்றான் இத்தாலி மேனிலையடையும்' என்றெண்ணி, இவரை வருமாறு தந்தியடித்தார். முசோலினி உடனே மிலான் நகரை விட்டுப் புறப்பட்டு ரோமாபுரியடைந்து, பிரதம மந்திரியார் பதவியை ஏற்றுக்கொண்டார். அரசர் எல்லா அதிகாரங்களையும் இவரிடமே ஒப்புவித்துவிட்டார். முசோலினி—கொல்லர் புத்திரர்—பிரதம மந்திரியார் ஆனார்! பாஸிஸ்ட் இயக்கம் வெற்றி பெற்றது!!

1922-ஆம் ஆண்டு முசோலினி இத்தாலியின் அரசுரிமையை ஏற்றுக்கொண்டார். இவர் அரசியலை ஏற்றுக்கொண்ட போது நெருக்கடி அதிகமாக இருந்தது. எனினும், சிறந்த அரசியல் ஞானமுடைய இப் பெரியார் வெகுவிரைவில் தமது தாய் நாட்

டைப் பொன்னுடாக்கி விட்டார்; நான்காந்தர வல்லரசாக இருந்த இத்தாலியை முதல்தர வல்லரசாக மாற்றி விட்டார்; கப்பற்படை, தரைப்படை, ஆகாயப்படை இவற்றை மிகுதியாகப் பெருக்கிவிட்டார்; சிறந்த வல்லரசான பிரான்ஸும் கண்டு நடுங்கத்தக்க முறையில் இன்று இத்தாலி இருக்கின்றது.

முசோலினி தம் பகைவரான சமதருமக் கட்சியினரைத் தக்கபடி தண்டித்து, அவர்கள் வலிமையை அடியோடு ஒழித்துவிட்டார் வேறுபல கட்சியினர் பாஸிஸ்ட் இயக்கத்தில் சேர்ந்து விட்டனர். பாஸிஸ்ட் இயக்க வீரர்கள் இத்தாலி அரசாங்கச் செலவில் பெருஞ் சேனு வீரராகக் காப்பாற்றப்படுகிறுர்கள். அவர்களே இன்று அரசாங்கத்தின் முதுகெலும்பாக இருக்கிறுர்கள். அவர்கள் முசோலினியைத் தெய்வமாக வழிபடுகிறவர்கள்.

முசோலினி உள்நாட்டில் அமைதியை நிறுவிய பிறகு, அரசியலில் கவனஞ் செலுத்தினுர்; இரயில்வே, தந்தி—தபால் முதலிய நிருவாகங்களில் தேர்ந்த அதிகாரிகளே நியமித்து வியக்கத்தக்க மாறுதல்களைச் செய்தார். அதன் பயனுக, இன்று இத்தாலிய குமஸ்தா முதல் உயர்தர உத்தியோகஸ்தன் வரையில் யாவரும் இத்தாலியின் முன்னேற்றத்தைக் கருத்திற் கொண்டவராக இருக்கின்றனர். வியவசாயம் பெருகிவருகின்றது. முசோலினியே வியவசாய அறுவடை செய்தார்; வியவசாயிகள் கடன்களை நீக்கினுர்; இயந்திர முறைப்படி வியவசாயத்தை விருத்தி செய்தார்; கைத்தொழில்கள் பெருகி வருகின்றன. தொழிலாளர் வேலே செய்யும் நேரம் குறைக்கப்பட்டது. தொழிலாளர் வசிக்கும் இடங்கள் சுகாதாரமுடையனவாய்ச் சகல வசதிகளோடும் இருக்கின்றன. வெளிநாட்டு விவகாரங்களில் முசோலினி வெகு ஒழுங்காக நடந்து வருகிறுர். அமெரிக்காவுக்குக் கொடுக்க வேண்டிய கடன் தொகையை ஆண்டு தோறும் கட்டி வருகிறுர். பிரான்ஸ், ஆஸ்திரியா, ஹங்கேரி முதலிய பக்கத்து நாடுகளோடு நேசப்பான்மையில் நடந்து வருகிறுர். உருப்படாக் கல்வித்திட்டத்தை அடியோடு ஒழித்து, 'இத்தாலிய இளைஞரை உண்மை மனிதராக்கும் கல்வி'யைப் புகட்ட ஏற்பாடு செய்துள்ளார்; இளைஞர்கட்குப் படைக்கலப் பயிற்சி இளமை முதலே அளித்துவர ஏற்பாடு செய்துள்ளார்; 'ஒவ்வோர் ஆணும் பெண்ணும் தாய் நாட்டின் பொருட்டுப் போர்புரிய எந்நிமிடத்திலும் தயாராக இருக்க வேண்டும்' என்று தம் நாட்டு மக்களுக்கு எப்போதும் உபதேசித்து வருகின்றுர்.

ஜெர்மனி தேசச் சர்வாதிகாரியாக ஹிட்லர் வந்தபோது பிரான்ஸ் நடுக்கங் கொண்டது. உடனே ஐரோப்பாவில் போர்

தொடங்கும் என்று அரசியல் நிபுணர் பலர் அறைந்தனர். வல்லரசுகளோடு ஒப்பந்தம் செய்துகொண்டு ஐரோப்பாவில் அமைதியை நிலைநாட்ட மாக்டொனால்ட் முயன்றார். அவர் முயன்றும் பயனில்லை. இறுதியில் எல்லா அரசியல் நிபுணரும் சிறந்த இராஜதந்திரியாரான முசோலினியையே பார்த்தனர். ஆம்; இவரே ஐரோப்பிய அமைதியை நிலைநாட்டத் தக்கவர். இவர் உடனே 'பத்து வருடங்கள் ஐரோப்பாவில் அமைதியை நிலைநாட்டுவோம்' என்றார்; உடனே ஹிட்லர் உடன்பட்டார். பிரான்ஸ், பிரிட்டன், ஜெர்மனி, இத்தாலி இந்நான்கு வல்லரசுகளும் ஒப்பந்தம் செய்துகொண்டன. அப்போது ஐரோப்பிய இராஜ தந்திரிகள் முசோலினியைப் புகழ்ந்து கொண்டாடினர்; உலகெலாம் அவரை வாழ்த்திற்று.

முசோலினி ஆஸ்திரியாவை ஆதரிப்பதைக்கண்டே இன்று ஹிட்லர் ஆஸ்திரியாவின் சுதந்திரத்தைத் தாமும் விரும்புவதாகக் கூறினர். இன்றேல், இன்றளவும் ஆஸ்திரியா தனிநாடாக இருந்திருக்காது; சென்ற வருடத்திலேயே அது ஜெர்மனியோடு சேர்க்கப்பட்டிருக்கலாம். இவ்வாறு இன்று ஐரோப்பிய சமாதானத்தை நிறுவிவருபவர் மஹா வீரராகிய முசோலினியே யாவர்.

'அவர் தம் ஓய்வு நேரங்களில் ரோமாபுரி—மிருகக் காட்சிச் சாலையில் உள்ள சிங்கக் குட்டிகளோடு விளையாடுகின்றார். அவரது மேஜைமீது காகிதங்களின்மேல் வைக்கும் கனம் (*Paper weight*) அவரது உடைவாள் ஆகும். அவர் எழுதுவதற்கு உள்ள மை மண்டை ஓட்டில் இருக்கிறது' என ஜி. ஏ. கார்டினர் கூறியுள்ளார். 'உலகில் வேறெந்தத் தலைவரது காரியாலயமும் இவரது காரியாலயம்போல் அவ்வளவு பெரியது அன்று' என சிஸிலி ஹாமில்டன் என்பவர் கூறுகின்றார்.

உண்மையில் இவரது வரலாறு பெரும்வியப்பைத் தருவதாகும். இவர் தூய வாழ்க்கையை நடத்துபவர்; அரசாங்கப் பணத்தைப் பாதுகாப்பவர். இவர் சர்வாதிகாரியாக இருந்தும், இப்பொழுதுள்ள பொருளாதாரக் கஷ்டத்தில் தமது சம்பளத்திலேயே பெரும்பாகத்தைக் குறைத்துக் கொண்டார். இவர் இரவிலும் பகலிலும் இத்தாலியின் நன்மையிலேயே நாட்டம் உடையவர்; இத்தாலிய மக்கள் பழைய ரோம ராஜ்ஜிய மக்களாகச் சிறந்த நாகரிகம் பெற்று விளங்க வேண்டும் என்பதே இவரது பேராவல். ரோமாபுரி உலக நாகரிகத்துக்குப் பிறப்பிடமாக இருத்தல் வேண்டும் என்பது இவரது பெருவேட்கை. இப்பெரியார் நீடூழி வாழ்வாராக.



# *லலிதை

ஜி. ஹரிஹர சாஸ்திரி

நாடக பாத்திரங்கள்.

மான ஸிம்ஹன்:—அக்பர் சக்கரவர்த்தியின் கீழ் உத்யோகஸ்தரில் ஒருவன்.

தேசபதி:—மணிபுர நகரத்து அதிபதி.

ரத்நாகரன்:—டில்லி நகரில் ஒருவியாபாரி.

மதனஸேனை:—டில்லி நகரில் ஒரு தேவதாஸி.

லலிதை:—மதனஸேனையின் மகள்.

சதுரிகை:—லலிதையின் வேலைக்காரி.

மூன்று சேவசர்.

## முதற் காட்சி

[காலம்:—அக்பர் சக்கரவர்த்தி அரசு புரிந்த காலம்.

இடம்:—மணிபுரநகர், மதன ஸேனையின் மாளிகை, வாசற் புஞ்சோலை.]

(வீதியில் ஒரு சேவகன் வருகிறான்.)

சேவகன்:—(இடையிடையே முரசடித்து வீதியில் உலாவிக் கொண்டு) இதனால் ஸகலமான நகரவாசிகளுக்கும் தெரிவிப்பது என்னவென்றால்:—"வேசையரிற்சிறந்த மதனஸேனையென்பவள் நகரிலுள்ள வர்த்தகர் பலரிடம் கடன் பட்டிருப்பதால் அந்தக் கடனைத் தீர்ப்பதற்குக் கலைகளில் தேர்ச்சிபெற்றவளும், தன்புதல்வியுமான ஸ்திரீரத்நத்தை அவள் ஏலத்தில் விற்கப்போகிறாள்."

(நகரத்தார் பலர் கூட்டம் கூட்டமாய் வந்து பேசி நிற்கின்றனர். வேறொரு சேவகன் வருகிறான்.)

சேவகன்:—விலகுங்கள் ஐயா! விலகுங்கள். இதோ ரத்நாகரச்செட்டியார், வர்த்தகவரசர் வருகிறார். (ரத்நாகரன் தனது பருத்தகைகளால் கூடியிருப்பவர்களைப் பலாத்காரமாய்த் தள்ளிக் கொண்டு வருகிறான்.)

---

*ஆங்கிலத்தினின்று மொழிபெயர்த்தது.

ரத்நாகரன் :—(முதற்சேவகனை நோக்கி) என்னடா, பிதற்று கிறாய்? (முரசடித்துக்கூறும் விளம்பரத்தைக் காதுகொடுத்துக் கேட்டுத் தனக்குள்) மதனஸேனையா! அவளைப் பார்த்து வெகுநா ளாய்விட்டது. ஆனாலும் ஞாபகமிருக்கிறது; கஷ்டம். எல்லாம் காலத்தின் மாறுபாடேயாம். அவளுக்கும் இந்த நிலைமை வந்து விட்டதே! இருக்கட்டும். செய்தி இன்னதென்று அறிகி றேன். (வெளிப்படை) அடே! ரத்நங்களுக்கெல்லாம் இருப்பிட மான என்னிடமும் ஒரு ரத்நத்தைப்பற்றிப் பேசுகிறாயே. அதை நான் பார்க்கலாமா?

சேவகன் :—ஸ்வாமி! உத்தரவு; உள்ளே போகலாம். (செட்டியார் வாசற் பூஞ்சோலையில் பிரவேசிக்க, அங்கு வேறொரு சேவகன் வருகிறான்.)

சேவகன் :—(பணிந்து தொழுது) ஸ்வாமி! என்ன உத்தர வாகிறது?

ரத்நாகரன் :—மதனஸேனையின் மகளைப்பற்றிச் சிலசெய்தி அறியவேண்டியிருக்கிறது.

சேவகன் :—வேண்டுவதெல்லாம் தெரிந்துகொள்ளலாம். பாருங்கள், இந்த ஏலப்பத்திரிகையில் எல்லா விவரங்களும் இருக் கின்றன. (வாசிக்கிறான்.) உத்தேசம் பதினாறு வயது. அங்கம் ஒவ்வொன்றிலும் பொங்கி யொழுகும் அழகு. குதிக்கால் வரைத் தழைத்துக் கொஞ்சும் கரியகூந்தல்.

ரத்நாகரன் :—அடே! பத்திரிகையை என்னிடம் கொடு. (வலியப்பிடுங்கி வாசிக்கிறான்.) செந்தாமரை இதழ்போல் நீண்ட கண்கள். கண்ணாடிபோன்ற கன்னங்கள். (பத்திரிகையைக் கீழே எறிந்து விட்டு) எவருக்கு வேண்டும் இப்பத்திரிகை. வேண்டுவது அம்பெண்மணியே யன்றோ.

சேவகன் :—(பத்திரிகையை எடுத்து) ஸ்வாமி! நிரம்ப அனுக்கிரகம்; நூறு பொற்காசு மாத்திரம் கொடுங்கள்; எங்கள் எஜமானி ஜன்னல் திறந்து தங்களுக்கு ஒருமுறை தரிசனம் கொடுப்பாள்.

ரத்நாகரன் :—(வாதாடி, வருத்தத்துடன் கொடுத்து) சரி, இனி அரை நிமிஷமும் தாமதிக்கக்கூடாது.

சேவகன் :—(விலகி நின்று மாளிகையை நோக்கி) சதுரிகே! சதுரிகே! (மாளிகையின் ஜன்னல் திறக்க, அங்குச் சதுரிகை தோன்றுகிறாள்.)

சதுரிகை :—என்னவேண்டும்?

**சேவகன்:**—ஸ்ரீமான் ரத்நாகரச் செட்டியார் யஜமானியைப் பார்ப்பதற்குள்ள கட்டணம் கொடுத்து ஆவலுடன் காத்திருக்கிறார்.

(சதுரிகை உள்ளே சென்று திரும்பவும் லலிதையுடன் வந்து ஜன்னல் அருகில் நிற்கிறாள்.)

**லலிதை:**—(சிந்தாகுலமான தோற்றத்துடன்) சதுரிகே! என் தாயின் பாதுகாப்பிலும் விசாரணையிலும் இருந்து நான் இன்னும் எத்தனை நாள் வருந்தி வாடுவேன்? இவ் அந்தகாரத்தினின்று எப்போது வெளியேறுவேன்? சூரியகிரணங்கள் என்மேல் பட்டு எந்நாள் என்னுள்ளம் மலரப்போகின்றது?

**சதுரிகை:**—அம்ம! இந்த விஷயத்தில் தவறு தங்களிடத்திலேதானுள்ளது. பாருங்கள். இவ்வூருக்குக் குபேரன் போன்ற ரத்நாகரச் செட்டியார் இதோவந்திருக்கிறார்; இவரை நேசிக்கின்றீர்களா?

**லலிதை:**—(ரத்நாகரனை நோக்கி அருவருப்புடன்) நேசத்துக்கு அளவேகிடையாது. இது என் தாயின் ஒருபுதிய விளையாட்டுக் குரங்கு.

**சேவகன்:**—ஸ்வாமி! அதோ அந்த ஜன்னலுச்கு அருகே பாருங்கள்.

**ரத்நாகரன்:**—(பார்த்து, வியப்புற்று) ஆ! அது ஜன்னலன்று, கீழ்த்திசை; அங்குத்தோன்றுவது முகமன்று, உதித்தெழும் பூரண சந்திரன். (இமை கொட்டாது நோக்கி நிற்கிறான்.)

**சேவகன்:**—(தனக்குள்) இந்த முட்டாளுக்கு மேற்றிசை கீழ்த்திசையாம்; பகல் இரவாம்; சூரியன் சந்திரனும்; இனிப் பொன்னும் வெள்ளியும் கல்லும் மண்ணுமாய் விடும்போலிருக்கிறது. (வெளிப்படை) ஸ்வாமி! இவள் வடிவழகு ஏலப்பத்திரிகையில் கூறியபடியிருக்கிறதா? படித்துப் பாருங்கள். (பத்திரிகையை ரத்நாகரன்முகத்திற் கெதிராகக் காட்டுகிறான்.)

**ரத்நாகரன்:**—(கண் அசையாமல் லலிதையையே நோக்கி நின்று, கோபத்துடன்) சீ! முட்டாள். என்கண்களுக்கு வேறு வேலையிருக்கிறது.

**லலிதை:**—போதும் பார்த்தது. (மறைகிறாள், சதுரிகை கதவைச் சாத்துகிறாள்.)

ரத்நாகரன்:—ஆ! சந்திரன் மறைந்தான். உலகெங்கும் இருள் சூழ்ந்து விட்டது. இனிநான் என்ன செய்வேன்? (துக்கத்துடன் ஒரு பெஞ்சி மீது உட்காருகிருன்.)

(வீதியில் மான ஸிம்ஹனும் தேசபதியும் வருகிருர்கள்.)

மானஸிம்ஹன்:—தேசபதி! என்ன கூட்டம் இது? (சேவகன் முன்போல் முரசடித்துக் கூறுவது கேட்டு) என்ன! ஒருகன்னிகையை ஏலத்தில் விற்கவா! அது ஒழுங்கல்லவே!

தேசபதி:—ஒழுங்கல்லவென்று சொல்வதற்கில்லை. கன்னிகைக்காயினும் அவள் உறவினருக்காயினும் பொருள் கொடுத்து மணம் புரிதல் சாஸ்திரம் சம்மதித்ததுதான். மேலும் வேசையருக்குள் பெண்ணை விற்பது பண்டைக்காலமுதலே ஏற்பட்டுள்ள வழக்கமேயாம்.

மானஸிம்ஹன்:—(சற்றுயோசித்து) இதற்குக் கன்னிகையும் இணங்குவாளா?

தேசபதி:—இப்போது விற்பனைக்கு விஷயமான லலிதையென்ற பெண் வேசையர் குலத்தில் பிறந்தவளாயினும் உயர்ந்த நோக்கங்கள் உடையவள் என்று கேள்வி. அவள் தாயின் அமுலுக்கும் தன் சாதியொழுக்கத்துக்கும் இணங்காது ஒரு குலமகளின் கௌரவமான வாழ்க்கையை விரும்புகிருள்.

மானஸிம்ஹன்:—நான் இந்தப் பெண்ணைக்குறித்து எல்லா விவரங்களையும் அறிய விரும்புகிறேன்.

தேசபதி:—அவ்விதம் ஆகலாமே, நாம் உள்ளே செல்வோம்.

(இருவரும் வாசற் பூஞ்சோலையில் பிரவேசிக்கின்றனர்.)

ரத்நாகரன்:—ஆ! போட்டிக்கு மனிதர் வருகின்றனரே! அதற்கு நான் இடம் கொடேன். (சேவகனைநோக்கி) டேய்! இங்குவந்திருப்பவரில் யார் என்ன விலைகொடுப்பாரோ, அதைவிட ஆயிரம் அதிகமாகக் கொடுத்து நான் பெண்ணை வாங்கச் சித்தமாயிருக்கிறேன் என்று மதனஸேனை யிடம் சொல், தெரிந்ததா? போ, விரைவில்.

(சேவகன் பரபரப்புடன் புறப்படுகிருன்.)

தேசபதி:—யார் இங்கே?

சேவகன்:—(திரும்பிப்பார்த்து, தனக்குள்) இவர் யார்! தேசபதியன்ருே! (தாழ்ந்து தொழுது, வெளிப்படை) தேசபதிக்கு ஜயமுண்டாகட்டும். ஸ்வாமி! என்ன உத்தரவாகிறது?

தேசபதி:—நான் வந்திருக்கிறேன் என்று மதனஸேனை யிடம் சீக்கிரம் போய்ச்சொல்.

சேவகன் :—உத்தரவு. (உள்ளே சென்று மதனஸேனையுடன் திரும்ப வருகிறான்.)

தேசபதி :—(மானஸிம்ஹனை நோக்கி) இவள்தான் மதன ஸேனை யென்பவள், லலிதையின் தாய்.

மானஸிம்ஹன் :—நீர் ஏன் உமது கன்னிகையை விற்கத் துணிந்திருக்கிறீர்?

மதனஸேனை :—இந்தக்கேள்வி கேட்பதற்குக் காரணம் என்ன? அவள் என்மகள். என்கடன் தீர்ப்பதற்காக விற்கப் போகிறேன்.

மானஸிம்ஹன்:—அரண்மனைபோல் மாளிகை, ஏராளமான ஆடுமாடுகள், எண்ணிறந்த வேலைக்காரர்—இவை யெல்லாம் இருக்க மகளை விற்பதேன்?

மதனஸேனை :—சொல்லுகிறேன்; எனக்குச் சொத்திருக்கிறது. அது நானே சம்பாதித்தது. அளவற்ற பணத்தைச் செலவிட்டு ஆடல்பாடல் முதலான நற்கலைகளில் இவளைத் தேர்ச்சிபெறச்செய் ததினாலும், இவளுக்கு விலை உயர்ந்த ஆடையாபரணங்களை வாங்கினதினாலும் நான் இப்பொழுது கடன்பட்டிருக்கிறேன். இவள் நிமித்தம் ஏற்பட்ட கடனை இவளே தீர்ப்பதன்றோ நியாயம்? ஆனால் இவள் சாதிமுறைப்படி நடவாமல் எனக்குப் பெரும் பார மாயிருக்கிறாள். பசுக்கள் எனக்குப் பால் தருகின்றன. இந்த மாளிகை தங்களைப் போன்ற பெரியோர்களை இங்கு வரச்செய் கிறது. இவள் மட்டும் நான் பாடுபட்டுத் தேடிய பொருளை யெல்லாம் வீட்டில் சும்மாவிருந்து உண்டுடுத்துத் தொலைத்து வருகிறாள். இப்படிப்பட்டவர்களை விற்கக்கூடாதென்கிறீர்களே. இதுவா எனக்குத் தாங்கள் போதிக்கும் தருமம்?

மானஸிம்ஹன் :—அதிருக்கட்டும். கடன் தீர்ப்பதற்கு வேண் டும் பொருளைப் பெற்றுக் கொண்டு, மகளை அவள் விரும்பும் வர னுக்குக் கொடுக்கத் தடையில்லையே!

மதனஸேனை :—ஸ்வாமி! விருப்பம் பொருத்தம் முதலியன வெல்லாம் எங்களுக்கேது? பொருளுடன் எங்களிடம் எவர் வந் தாலும், நல்லார் பொல்லார் என்ற பேதம் பாராட்டாது, அவரது ஆசையைத் தீர்ப்பதுதான் எங்கள் குலதருமம். எங்களுக்குப் பெரியோர் விதித்த முத்திநெறியும் அதுவேயாகும்.

மானஸிம்ஹன் :—(வெறுப்புத் தோன்ற) பொருளுடன் வருபவர் என்றா?

மதனஸேனை :—ஆமாம். அதில் என்ன சந்தேகம்? பொருளை யடிப்படையாக்கிக் கொண்டிருக்கும் இன்பமே எங்களுக்கு விதிக்

கப்பட்டுள்ளது. (ஏளனமாய்ச் சிரித்து) தாங்கள் தர்மசாஸ்திரம் என்பதையே கண்டறியீர் போலும். காலத்தின் கொடுமை! அருமறை நூல்களைக் கனவிலும் காணாத முழுமூடரும் இப்போது உயர்ந்த உத்யோகஸ்தர் ஆகின்றனர்!

மானஸிம்ஹன்:—உமது தூஷணங்களை நான் சிரமேற் கொண்டேன். ஆகட்டும். உமக்கும் புதல்வியின்மீது வாஞ்சை தோன்றுவது சகஜம் தானே! அவள் சாதிமுறைப்படி நடக்க விரும்பவில்லை யானால், அவள் மனப்போக்கின்படி அவளை விடுவதன்றோ நலம்.

மதனஸேனை:—தங்கள் யோசனை ஒன்றை விட ஒன்று நன்றாயிருக்கிறது. இருக்கட்டும். நான் தங்களிடம் ஒன்று கேட்கிறேன். தங்களுக்கு ஒரு புதல்வியுண்டென்று வைத்துக்கொள்வோம். அவள் எங்கள் சாதிமுறைப்படி நடந்தால், அவளைத் தாங்கள் என்ன செய்வீர்கள்?

மானஸிம்ஹன்:—(கோபக்குறியுடன்) அவள் உயிர்தரித்திருப்பது சில நிமிஷங்கள் தான்.

மதனஸேனை:—தங்களுக்கு ஒரு மகன் உண்டென்று நினைப்போம். அவன் போர்க்களத்தில் பயங்கொள்ளியாய்த் திரும்பிவந்தால், தாங்கள் அவனை என்ன செய்வீர்கள்.

மானஸிம்ஹன்:—அவனை நரகத்திற்கு உடனே அனுப்பி விடுவேன்.

மதனஸேனை:—சரி, நல்லது. அபோது ஒவ்வொருவரும் அவரவர் குலவொழுக்கப்படி நடவாத சந்ததிகளை வெறுத்துத் தள்ளுகிறார்கள் என்பது தெளிவாம். (துக்கத்துடன்) ஆனால் நானோ, நெறியிற் பிறழ்ந்த இப்பாதகியைக் கொல்லாது விற்கத்தான் செய்கிறேன். மகள் வாஞ்சையால் மதியிழந்தவள் என்ற தீராப்பழி என்மேல் விழுந்தது. (பெருமூச்செறிந்து) என்ன செய்வேன்!

தேசபதி:—(மானஸிம்ஹனைப் பார்த்து) இவளுடன் வாதம் செய்வது சரியாகாது. வேசையரின் தந்திரங்கள் யாவும் தங்கும் கற்கோட்டை போன்றவள் இவள்.

மானஸிம்ஹன்:—(மனத்துள்) அனாதிகாலம் தொட்டு மாமூல் சேற்றில் மூழ்கித் தத்தளிக்கும் பாமரர்களைச் சுதந்திர யுக்தி காட்டிச் சீர்திருத்த முயல்வது, இடி விழுந்த மரத்தைத் தண்ணீர் வார்த்துத் தழைப்பிக்க முயல்வதை ஒக்கும். (சற்று யோசித்து) அந்நிய மதஸ்தரான விதேசியர் அரசு புரிவதால் நமது

பாரதநாடு அடிமைப் பட்டுள்ளதென்று ஜனங்கள் பிதற்றுகிறார்கள். ஆனால் யானறிந்த மட்டிலும், ராஜீய விஷயமான இவ்விலங்கானது நாமாகப் பூட்டிக் கொண்ட பல்வேறு விலங்குகளினின்றும் விடுதலை பெறுதற்கு முக்கிய நிமித்தமாகும் என்பது நிச்சயம். திண்ணிய அறிவின்மையின் உருவங்களான மூடாசாரங்களால் கட்டுண்ட அடிமைகளுக்குச் சுதந்திரம் என்ற புனிதமான சொல்லை உச்சரிக்க நாவு முண்டா? சக்கரவர்த்தி யளித்த உத்யோகத்தை நான் மனமார ஏற்றுக்கொண்டதற்கு இதுவே காரணம். விதவைகள் தீப்பாய்ந்து ஆத்மவதை செய்யும் 'ஸதி' என்ற பயங்கரமான வழக்கத்தைச் சக்கரவர்த்தி விலக்கிவிட்டார். அதுபோல் வேசையரது கொடிய வழக்கத்தையும் நாட்டைவிட்டுத் துரத்துவாரோ! (யோசித்து) ஆகட்டும். இப்போது இவளிடம் இப்படிச் சொல்கிறேன் (வெளிப்படை) பதினாயிரம் பொற்காசு தந்து உமது மகளை நான் விலைக்கு வாங்குகிறேன்.

மதனஸேனை:—(மனம் பூரித்துச் சிரித்த முகத்துடன்) இப்போதுதான் வேடிக்கையை விட்டுக் காரியமாகப் பேசுகிறீர்கள்.

ரத்நாகரன்:—பதினோராயிரம் நான் கொடுக்கிறேன்.

மதனஸேனை:—நல்லது, செட்டியாரே! நிரம்ப நல்லது.

தேசபதி:—(மானஸிம்ஹனை நோக்கி) ஸ்வாமி! சாவதானம். இவன் ஒரு கோடீசுவரன், மேலும் பிடித்த பிடி விடாத குரங்கு.

மானஸிம்ஹன்:—அவன் எப்படியாவது ஆகட்டும். நான் அந்தக் கன்னிகையை விடுதலை செய்யத் தீர்மானித்திருக்கிறேன்.

தேசபதி:—(மனத்துள்) அசாத்யமான ஒருகாரியத்தில் அன்றோ இவர் தலையிட்டுக்கொள்கிறார். இருக்கட்டும். இந்தச் செட்டியாரிடம் பேசிப்பார்ப்போம். (வெளிப்படை) ஓய் செட்டியாரே! இவர் யாரென்று தெரியுமா? சக்கரவர்த்தியின் பிரதிநிதி, டில்லியினின்று வந்திருக்கிறார்.

ரத்நாகரன்:—ஆகட்டுமே! அதனால் எனக்கென்ன? நான் இந்தப்பெண்ணை எப்படியாவது விலைக்குவாங்குவேன். அது நிச்சயம்.

தேசபதி:—(ரத்நாகரனிடம்.) செட்டியாரே! சாக்கிரதை. வேறு துறைகளைப்போல் வியாபாரத்தையும் அவர் விசாரணை செய்யப் போகிறார். வாணிகத்தில் கள்ளம் கபடுகாணு மிடத்துக் கடும் தண்டம் அவர் விதிப்பதுண்டு. உமது வியாபாரம் ஏற்கெனவே களங்கமுற்றதென்பது நாமறிந்த விஷயம். வஞ்சனை செய்யும் வியாபாரிக்குக் குறைந்த சிக்ஷை அவன் விரலைத்துண்டித்

தல் என்பதையும் நீர் தெரிந்து கொள்ளும். (ரத்நாகரனது மனோபாவங்கள் மாறுபடுகின்றன. முகத்தில் காமக்குறிச்குப் பதிலாக அச்சக்குறி தோன்றுகிறது. விரல்கள் துண்டிக்கப் பட்டனவோ என்று தடவிப்பார்த்தல், விரல்களை ஆடையால் மறைத்தல் முதலான சேஷ்டைகள் காட்டுகிறான்.)

மதனஸேனை:—(மானவஸிம்ஹனை நோக்கி) ஸ்வாமி! என்ன சொல்லுகிறீர்கள்? பெருமைவாய்ந்த செட்டியார் பதினாயிரம் கூறியிருக்கிறார்.

மானஸிம்ஹன்:—நான் இன்னும் ஆயிரம் கூட்டுகிறேன்.

மதனஸேனை:—(மிகக்களிப்புடன்) பெயர்பெற்ற வர்த்தகரே!

ரத்நாகரன்:—(மனம்கலங்கி, நிலைநடுங்கி) இக்காரியத்தில் எனக்குப் பிடிவாதம் இல்லை. நான் தரித்திரன்; சாது; ஒரு பிச்சைக்காரன். (மெல்லமெல்லப் பின்நடந்து நழுவுகிறான்.)

தேசபதி:—இப்போது லலிதை ஸ்வாமியைச் சார்ந்தவள் ஆனாள்.

மதனஸேனை:—(சோர்வுற்று) என்ன செய்யலாம்? வேறு சதியில்லை. ஆகட்டும். (மாளிகையை நோக்கி) லலிதே! லலிதே! இப்பெரியாரிடம் செல். நீ இவருக்குச் சொந்தமாய்விட்டாய்.

(எல்லோரும் போகிறார்கள்.)

---

## இரண்டாம் காட்சி.

[இடம்:—முற்கூறிய பூஞ்சோலையின் ஒரு பக்கம்.]

(லலிதையும் சதுரிகையும் மாளிகையின்று இறங்கி வருகின்றனர்.)

லலிதை:—சதுரிகே! விரைவில் என்னை அவரிடம் அழைத்துச்செல்.

சதுரிகை:—அம்மணீ! தாங்கள் புருஷரைக் கண்டால் பயந்து நடுங்குவது வழக்கமாயிற்றே! இப்பொழுது ஏன் இவ்வளவு உற்சாகம்?

லலிதை:—அடி பேதாய்! அவர் அன்னிய புருஷ ரல்லர்.

சதுரிகை:—தாங்கள் இதற்குமுன் அவரைக் கண்டதுண்டா?

லலிதை:—(புருவம் நெரித்து) அடி அசடே! உனக்கு நான் எப்படிப் போதிப்பது! நான் அவரைப் பார்த்திருக்கிறேன் என்றே

வைத்துக்கொள். உண்மை உரைப்பதானல், நான் அவரைப் பாராத நிமிஷமே இல்லை.

சதுரிகை:—யஜமானிக்குச் சற்று மயக்கம் உண்டா? ஆகட்டும். எங்கே பார்த்தீர்கள், சொல்லுங்கள்?

லலிதை:—வீரச்செயல்களைப் போதிக்கும் அற்புதக் கதைகளிலும், கனவிலும், நனவிலும், எல்லாவிடத்தும் கண்டிருக்கிறேன். கண்கூடாகக் கண்டது மட்டும் இன்றைக்கு. அவரைக் கண்டமாத்திரத்தில் என் மனோராஜ்யங்களுக் கெல்லாம் அவரே தனிநாயகர் என்று தெரிந்து சொண்டேன்.

(இருவரும் அங்கும் இங்கும் உலாவுகையில்
மானஸிம்ஹனும் தேசபதியும் வருகிருர்கள்.)

சதுரிகை:—அம்மணி! ஸ்வாமி இதோ இருக்கிருர்.

லலிதை:—(அணுகி) ஸ்வாமி! வணங்குகிறேன். (தாழ்ந்து தொழுகிருள்.)

மானஸிம்ஹன்:—(கருணை கலந்த புன்னகையுடன்) குழந்தாய்! உனக்கு எல்லாநன்மைகளும் உண்டாகுக.

லலிதை:—(மனமிடிந்த தோற்றத்துடன் சதுரிகையை நோக்கி) என்னைப்போல் பாக்கியம் கெட்டவள் இவ்வுலகில் வேறொருவரும் இல்லை.

சதுரிகை:—அப்பொழுது அவ்வளவு மேன்மையாகப் பேசிவிட்டு இப்பொழுது ஏன் வெட்கப்படுகிறீர்கள்?

லலிதை:—(சோர்வுதோன்ற) எனக்கு வெட்கமொன்றுமில்லை. ஆனல், இவ்விதமல்ல நான் அவரைக் காணவிரும்பியது.

சதுரிகை:—அவர் பார்வைக்கு நல்ல அழகுடையவர், தயாளுவாகவும் இருக்கிருர். அவர் வேறு எவ்விதம் இருக்கவேண்டுமென்று விரும்புகிறீர்கள்?

லலிதை:—நான் வேறொரு தாயைத் தேடிப் புறப்படவில்லை. நான் எவ்விதம் அவர்மீது காதல் கொண்டு கலக்கமுற்றிருக்கிறேனே, அதுபோல் அவரும் என்காதலில் வசப்பட்டவராயிருக்க விரும்புகிறேன். அவர் ‘குழந்தாய்’ என்று என்னை அழைத்தது பழுக்கக் காய்ச்சின நாராசம்போல் என்காதில் பாய்ந்தது.

சதுரிகை:—அம்மணீ! தங்கள் விருப்பங்கள் தக்க காலத்தில் கைகூடும். சற்று மனவுறுதியோ டிருங்கள்.

மானஸிம்ஹன்:—(லலிதையை நோக்கி) குழந்தாய்! இனி உனக்குப் பயம் ஒன்றும் வேண்டாம். நீ சுதந்திரை யானவள்

என்று தெரிந்துகொள். பரிசுத்தமான உன்மனதுக் கிசைந்தபடி சுகமாக வாழலாம்.

லலிதை:—பாதுகாக்கத் தாங்கள் இருக்கும்போது எனக்குக் கவலையேது? ஆனல் என்போன்றவர்களுக்குச் சுதந்திரம் என்பது அவசியமன்று; நான் அதை விரும்பவுமில்லை. எவ்விதத்தாலும் நான் தங்களுக்கு உரியவளாய் விட்டேன். தங்களுடன் எங்கும் வரத் தயாராயிருக்கிறேன்.

மானஸிம்ஹன்:—விலைக்கு வாங்கினேன் என்பதால் நீ என் அடிமை என்று நினைக்கவேண்டாம். இந்த நிமிஷத்திலேயே உன்னை நான் விடுதலை செய்திருக்கிறேன். நான் சக்கரவர்த்திக்குக் கடமைப்பட்டவன், பராதீனன். அதனல் நீ என்னுடன் வருவது சரியன்று.

லலிதை:—தங்களுடைய எண்ணிறந்த வேலையாட்களுள் நானும் ஒருத்தி யாவேன். அதில் தங்களுக்குக் கெடுதியென்ன?

மானஸிம்ஹன்:—(சந்தேகித்து) அதுவும் நன்ருயிராது.

லலிதை:—இஷ்டமில்லாத காரியத்தினின்று நீங்கிக் கொள்வதற்குச் சொல்லும் வார்த்தையிது. உண்மை இன்னதென்று தெரிந்தது. ஒரு வேசையின் கணவன் என்ற பழிவருமென்று அஞ்சுகிறீர்கள்.

மானஸிம்ஹன்:—அது போன்ற அபவாதம் உனக்கு வரும் என்றல்லவா பயப்படுகிறேன்.

லலிதை:—அப்படியா! ஒரு வேசையின் பெயரைக் காக்கவா யோசிக்கிறீர்கள்? அது கானலில் இறங்கி நீராடுவதுபோலாகும்.

மானஸிம்ஹன்:—(புருவம்நெரித்து) நீ இவ்விதம் எல்லாம் பேசுவது சரியன்று. தக்க காலத்தில் உனக்கிசைந்த வரன் வருவான். நீ கற்புக்கரசியாயிருந்து உன்கணவனுடன் இல்வாழ்க்கையில் இன்புற்று வெகுகாலம் வாழலாம்.

லலிதை:—(துக்கம் தோன்றச் சதுரிகையை நோக்கி) அப்படிப்பட்ட வரன் எனக்கு இன்னும் வரவேண்டுமா? (மானஸிம்ஹனைப் பார்த்து) கருணை புரிந்து என்னைத் தங்களுடன் அழைத்துச் செல்லுங்கள். அது கூடாதாயின், என்னை ஏன் விலைக்கு வங்கினீர்கள்?

மானஸிம்ஹன்:—நீ அந்த வியாபாரிக்குரங்கின் வாயில் விழ வேண்டாமென்றுதான்.

லலிதை:—(மனத்துள்) இதற்காகவா விலைக்கு வாங்கினீர்கள்! ஆ! என் மனக்கோட்டைகள் எல்லாம் அரைநொடியில்

நொறுங்கிவிழுந்து மண்ணுயிற்றே! (பொங்கிவரும் துக்கத்தை யடக்கி, கோபக்குறியுடன், வெளிப்படை) எத்தனையுயர்ந்த நோக்கத்துடன் என்னை விடுதலைசெய்தீர்கள்! ஒருவன் இழைக்கும் தீங்கு வேறொருவன் இழைக்கும் தீங்கை வெல்வதால் யாருக்கு என்ன பயன்? அந்த வர்த்தகன் என்மீது மோகம் கொண்டான்; அவனுக்கு நான் அவசியமென்று தோன்றிற்று. அம்மட்டிலும் அவன் செய்கை நியாயம் தான். அவன் தன் இச்சைப்படி நடக்கும் வீரன். ஆனல், தாங்கள் தங்களுக்கு விருப்பமும் அவசியமும் இல்லாத கருமத்தில் தலையிட்டுப் பணத் திமிரால் ஏற்பட்ட உதாரத்தை நடித்துக்காட்டி உலகத்தாரை வியப்புறச் செய்வதற்குத்தக்க ஒருவினோத அரங்கமாக மட்டும் என்னைக் கருதினீர்கள். நன் இப்போது கண்டோர் இரங்கும்படியான—அற்பமான—விளையாட்டுக் குரங்காய்விட்டேன்.

தேசபதி:—(மனத்துள்) இவரது அடக்கமுடைமை ஆச்சரியமானது! அழகே வடிவெடுத்தாற்போன்ற இப்பெண்மணி முன்வந்து கெஞ்சி இரந்தும் இவர்மனம் சற்றும் சலிக்கவில்லையே!

மானஸிம்ஹன்:—(தேசபதியை நோக்கி) இது ஒரு தர்மசங்கடமாயிற்று. இப்போது என்ன செய்யலாம்?

தேசபதி:—இவளோடும் நாம் யோசித்தே பேசவேண்டும். வழிவேருயினும், வாதம் செய்வதில் இச்சிறுமி தன்தாயைப் போன்றவளே. இவள்பேசுவதில் நியாயம் இல்லையென்று சொல்வதற்கில்லை.

மானஸிம்ஹன்:—இவள் பேசுவது நியாயமானல், அந்த நியாயத்தைச் சுடவேண்டியதுதான். (லலிதையைநோக்கி) நீ சொல்வது தவறு. நீ என்மீது குறை கூறுவதற்குக் காரணம் ஒன்றுமில்லை.

லலிதை:—என்ன தவறு? ஏன் காரணமில்லை? கூட்டில் அருமையாய் வளர்ந்துவந்த ஒரு கிளியை விலைகொடுத்து வாங்கி, அதைக் கோரமான காட்டில் அனாதையாய் விட்டு விடுவது கிளிக்கு உபகாரமா? அபகாரமா? (வாய்விட்டழுது, சதுரிகையை நோக்கி) சதுரிகே! நான் என்ன செய்வேன்? யாரை என்மனம் நாடுகின்றதோ, அவர் என்னை உதறித் தள்ளுகிருர். இனி நான் உயிர்தரிக்க விரும்பவில்லை.

சதுரிகை:—(லலிதையை நோக்கி) அம்மணீ! மனதைப் புண்படுத்தாதேயுங்கள். தாங்கள் இவ்வளவு கோழை மனத்தினராயிருப்பது தகாது; அவர் சக்கரவர்த்தியின் கீழ் ஓர் உத்தியோகஸ்தர். அவர்போன்ற நாகரிக புருஷர் சாதாரண மனிதரைப்

போல் தம் உள்ளமுழுதையும் கண்டவுடன் எளிதில் வெளியிடார். மேலும், ஒரு வேசையின் விஷயத்தில் சொல்லவே வேண்டாம். தங்களுக்காக இத்தனை பொருளை வாரி இறைத்த அவர் தங்கள் மீது நேசமற்றவர் என்று எப்படிச் சொல்லமுடியும்? ஒரு வேளை இப்போது பற்றில்லாவிடினும், விரைவில் அவர்மனதில் காதல் தோன்றி வளர்வது நிச்சயம். தன் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட கள்வனைப் பிடித்துத் தன் வயப்படுத்தி யடக்கியாளும் திறமறியாத பெண்—அதிலும் ஒருகணிகை—தன் வாழ்நாளை வீணுளாக்குகிருள் என்று சொல்லவும் வேண்டுமோ! (தன் ஆடையால் லலிதையின் கண்ணீரைத் துடைக்கிருள்.

லலிதை:—(மனத்துள்) ஆமாம். சதுரிகை சொல்லுவது உண்மைதான். எனக்குத் தைரியம் வேண்டும்; அமைதி வேண்டும். என் காதல் பயனற்றதாகாது. என் ஆசையாகிய புஷ்பம் காய்த்துக்கனியாகாது வாடிக் கீழே விழாது. இதோ நான் சபதம் செய்கிறேன். இவரை நான் இழப்பேனுயின் என் உயிருடன் இழப்பேன்.

மானஸிம்ஹன்:—(மனத்துள்) கஷ்டம்! பெற்ற தாயாலும் வெளியே துரத்தப்பட்டு, வேறு கதியில்லாமல் தத்தளிக்கும் இச் சிறுமி கண்ணீர்விடுவதில் ஆச்சரியமில்லை. தேசபதி கூறுவது நியாயம்தான். இப்போது சற்றுக் கருணைகாட்டுவதுதான் உபாயம். (யோசித்து) ஆகட்டும், இப்படிச்சொல்லுகிறேன். (சந்தேகித்து) ஆனுல், ஸௌதாமினி இதையறிந்தால் என்ன சொல்வாள்............வருவதெல்லாம் வரட்டும்; வேறு கதியில்லை. (வெளிப்படை) லலிதே! நீ வருந்தாதே. உன் விருப்பப்படி உன்னை ஒரு தனிஇடத்தில் இருக்கச் செய்கிறேன். நான் சக்கரவர்த்திக்குக் கடமைப்பட்டவனுயினும் ஆண்டில் ஒருமுறைவந்து உன்னைப் பார்த்துக்கொள்கிறேன். மற்ற வேளையில் தேசபதி வேண்டுவனவெல்லாம் செய்து உன்னைக் கவனித்துக் கொள்வார்.

லலிதை:—ஆகட்டும்; இப்பொழுது இதனுல் திருப்தியடைகிறேன். ஒரு விலையடிமை விரும்பியதெல்லாம் பெறமுடியுமா?

மானஸிம்ஹன்:—இவ்விதமான எண்ணம் இனி உன்மனதில் தோன்றக்கூடாது. ஆகட்டும், நீ எங்கே வசிக்க விரும்புகிருய்; அதைப்பற்றி யோசித்தாயா?

லலிதை:—(சந்தோஷத்துடன்) அதைப்பற்றி நான் வெகு காலத்துக்கு முன்னமே நிச்சயித்தாய்விட்டது. நான் என் சுற்றுமுள்ள நிலைமையைக்கண்டு, அருவருப்புடன் பின்வாங்கி, என் மனம் இயற்றிய ஒரு உலகத்தில் வாழ்ந்து வருகிறேன். அதுவே

நான் வெகுநாளாகப் பழகியதும், இப்போது என் கண்முன்னே நிற்பதும். அதுயாதென்று சொல்லட்டுமா? (போலித் துக்கம் பாவித்து) என்நிமித்தம் தங்களுக்கு எவ்வளவோ கிலேசம் ஏற் படுகிறது.

மானஸிம்ஹறன்:—இருக்கட்டும், அந்தக்கிலேசம் நான் விரும் பத் தக்கதுதான், சொல்.

லலிதை:—வாசமெழு மிலவங்க மளவளா வித்தென்றல்
வந்துலவு சோலையதனில்
மாங்குயில் பாடவரி வண்டுமது வுண்டுமூரல்
வல்லியம் பந்தரிடையில்
நேசமுறு காதலன் பிரிவால் வருந்துமவள்
நெஞ்சுபுண் செய்யுமதனன்
நீண்டநக மேயுமல ரேந்துபல கிஞ்சுகம்
நெருங்கிவளர் பொழிலகத்தில்
ஆசைமிகு மாதவி படர்ந்துமண முல்லையை
அணைந்து மகிழ் தருவனத்தில்
அருமுனிவ ருள்ளமு மழுந்திமயல் கொள்ளுமா
றழகுநட மாடுநிழலில்
தேசுபெறு மிளைஞருக் கானந்த மூறியெழு
சிங்காரத் தோப்பினடுவில்
சேருமொரு குடிசையில் வாழ்வதற் கேஎனது
சிந்தைவிழை கின்றதையா!

மானஸிம்ஹறன்:—(புன்னகையுடன்) தேசபதி! இதுபோன்ற இடம் ஒன்று தேடவேண்டி யிருக்கிறதே!

தேசபதி:—இதுபோன்ற இடம் ஒன்று நான் பார்த்தது ஞாபகமிருக்கிறது; ஸ்வாமிக்கு ஸௌகரியமானல் இப்பொழுதே நாம் அதைச்சென்று பார்க்கலாம்.

மானஸிம்ஹறன்:—அவ்விதமே செய்வோம்; எல்லோரும் கூடவேசெல்வோம்.

(எல்லோரும் போகிறார்கள்.)

(தொடரும்)

# கபட சந்நியாசி கதை

ராவ்ஸாகிப் வே. ப. சுப்பிரமணிய முதலியார், ஜி. பி. வி. ஸி.

---

ஒரு சிறிய ஊரிலே ஒருபெரிய வீட்டுக்கு ஒரு பாலிய சந்நியாசி வந்தான். அவனைக் கண்ட அந்தவீட்டு எசமானி எழுந்து நின்று அஞ்சலிசெய்து, 'சுவாமிகள் இங்கேவந்தது என் பாக்கியம்' என்று உபசாரவார்த்தை கூறி வீட்டுக்குள்ளே அழைத்துச்சென்று ஆசனமிட்டு இருக்கச்செய்து, 'சுவாமிகள் இங்கே வந்து நெடுங்காலமாய் விட்டதே. எங்கேபோயிருந் தீர்கள்?' என்றாள்.

சந்நியாசி, 'நான் பலதேசயாத்திரை செய்து வந்தேன். முன் நான் இந்தப் பிராந்தியத்தில் தங்கியிருந்தபோது, மழைக்கால மாயிருந்தது. இப்போது வசந்தகாலமாயிருக்கிறது. இந்தப் பிரதேசம், அப்போதுபோலில்லாமல் இப்போது சுவர்க்கம் போலிருக்கிறது' என்றான். அங்கே விளையாடிக்கொண்டிருந்த குழந்தை 'சுவர்க்கம்' என்றதைக் கேட்டவுடன் 'சாமி, நீ சொர்க் கம் பார்த்தையா? அது எப்படியிருக்கும்?' என்றது.

சந்நியாசி:—ஆ! அது மிக அழகாயிருக்கும். அங்கே எல்லா ரும் சந்தோஷமாயிருக்கிறார்கள். அவர்களில் நமக்குத் தெரிந்த வர்களும் சிலர் இருக்கிறார்கள்.

குழந்தை:—அப்படியா! அங்கே என் அக்காளைப் பார்த் தையா?

சந்நியாசி:—ஆம், பார்த்தேன்; அவள்மட்டும் சந்தோஷமா யில்லை.

குழந்தை:—ஏன் சந்தோஷமா யில்லையென்று கேட்டையா?

சந்நியாசி:—கேளாதிருப்பேனோ? கேட்டேன். அவள் 'என் னோடொத்த பெண்களெல்லாம் பட்டுச்சேலைகளும் இரத்தினாபர ணங்களும் அணிந்திருக்கிறார்கள். நான்மட்டும் நகையொன்று மில்லாமல் இந்தச் சாதாரணமான சேலையோடிருக்கிறேன். அப் படியிருக்கும்போது எப்படிச் சந்தோஷமாயிருப்பேன். என் தாய்,

---

கெட்டில்ட்ரம் (*Kettle-drum*) என்ற இங்கிலீஷ் புஸ்தகத்தில் உள்ள ஒரு கதைக் கருத்தைத் தழுவிப் பல வேறுபாடுகளுடன் எழுதியது.

நான் நோயாய்க் கிடந்தபோது, என் மெலிந்த உடம்பில் அழுந்தி நோய் செய்யுமென்று என் நகைகளையும் நோய்பட்ட தேகக் கழிவுகள்பட்டு அசுத்தமாய் விடுமென்று என் பட்டுச் சேலையையும் களைந்துவைத்தாள். நான் நோயாய்க்கிடந்தபோது உடுத்திருந்த சேலைதான் இது. என் தாய் என் நகைகளையும் சேலைகளையும் அனுப்புவாளென்றிருந்தேன். அவள் பேராசைக்காரி; இன்னும் அனுப்பவில்லை’ என்று வருத்தப்பட்டாள்.

குழந்தை:—ஐயோ! அக்காள் வருத்தப் படுகிறாளாமே. அம்மா! அக்காள் நகைகளையும் சேலைகளையும் அவளுக்கு அனுப்பிவிடு.

எசமானி:—சாமி, நீங்கள் விளையாட்டாகக் குழந்தையோடு பேசுகிறீர்களா? உண்மையாகவே என் மகளைப் பார்த்தீர்களா?

சந்நியாசி:—உண்மையாகவே பார்த்தேன்; அவளை நான் இங்கே பலதடவை பார்த்தபோது இருந்தபடி அவள் சந்தோஷமாயில்லை.

எசமானி:—அவள் தங்களிடம் ஏதேனும் சொன்னாளா?

சந்நியாசி:—‘நீங்கள் என் தாயிடம் என் சேலைகளையும் நகைகளையும் வாங்கிவந்து கொடுப்பீர்களானால், உங்களுக்குக் கோடி புண்ணியம். அவைகளில்லாமலிருப்பதால், இங்கே ஒருவரும் என்னை மதிக்கிறார்களில்லை. எனக்கு நாணமாயிருக்கிறது’ என்றாள்.

எசமானி:—(கண்களில் நீர்ததும்பப் பெருமூச்சுடன்) அவள் எங்கேயிருந்தாலும் சந்தோஷமாயிருக்கவேண்டுமென்பது தான் என் பிரார்த்தனை. சுவாமிகளே, கிருபைசெய்து நான் கொடுப்பவைகளை அவளிடம் கொண்டுபோய்ச் சேர்ப்பீர்களா?

சந்நியாசி:—சுவர்க்கலோக முழுதும் சுற்றிப்பார்த்துவிட்டேன். இனி அங்கே போகவேண்டியதில்லை. ஆயினும் தங்கள் சொல்லைத் தட்ட மனமில்லாததாலும் தங்கள் மகளைச் சந்தோஷம் அடையச் செய்யவேண்டுமென்ற விருப்பம் இருப்பதாலும் உங்கள் கருத்துப்படி செய்வேன்.

இதைக் கேட்ட எசமானி, இறந்துபோன மகளின் நகைகள் சேலைகள் அடங்கிய பொர்க்கணத்தை எடுத்துக்கொண்டு வந்து, ‘சீக்கிரம்போய் அவளிடம் கொடுங்கள்’ என்று கொடுக்க, வாங்கிக்கொண்டு சந்நியாசி புறப்பட்டுப் போனான்.

அவன் போனவுடனே குதிரையேறி வெளியே போயிருந்த எசமானன் திரும்பிவந்தான். அவனிடம் எசமானி அப்போது

அங்கே நடந்ததைச் சொன்னாள். அவன், மோசம்நேர்ந்ததென்று தெரிந்து, சந்நியாசி எந்த வழியே போனானென்று கேட்டான். குழந்தை, 'இதோ, இந்த வழியேதான் சொர்க்கத்துக்குப் போனான்' என்று கையை நீட்டிக் காட்டியது.

எசமானன், உடனே வாசலில் நிறுத்தியிருந்த குதிரைமேலேறி விரைந்துபோனான். குதிரைக் காலடிச் சத்தம்கேட்ட சந்நியாசி திரும்பிப்பார்த்துத் தன்னைத் தொடர்ந்துவருபவன் தன்னைப் பிடிக்க வருகிறானென்று தெரிந்து ஓடலானான். குதிரை கிட்டவந்துவிடவே, ஒருமரத்திலேறினான். குதிரையிலிருந்திறங்கி எசமானனும் மரமேறிச் சந்நியாசியிருந்த கிளைக்குப்போக, அவன் அதன் நுனிக்குப்போய் அதைப் பிடித்துக்கொண்டு தொங்கிக் கீழே குதித்துக் குதிரைமேலேறி வேகமாக ஓட்டலானான். எசமானன், 'அம்மை சேலை நகை கொடுத்தாள். அப்பன் குதிரை கொடுத்தான்' என்று சொல்லென்று ஓத்துச் சொல்லச் சந்நியாசி, 'சொல்லுவேன், சொல்லுவேன்' என்று சத்தமிட்டுச் சொல்லிக் கொண்டு தப்பிப்போனான்.

எசமானன், 'அணிலேறவிட்ட நாய்'போல ஏமாறித் தலை கவிழ்ந்து நடந்துவரக்கண்ட குழந்தை, 'குதிரை எங்கே?' என, 'உன் அக்காளுக்கு உன் அம்மை சேலை நகை அனுப்பினாள்; நான் குதிரை அனுப்பினேன்' என்றான்.

குழந்தை, 'நானும் சொர்க்கம்போகவேணும். போனால், எனக்கும் எல்லாம் அனுப்புவீர்கள்' என்றது.

---

## போலி இருதயம்

ரஷியாவில் மாஸ்கோ நகரில் உள்ள டாக்டர் மாக்டா சரோவ் என்பவரது ரசாயன சாலையில் சில டாக்டர்கள் ஒருவிதப் போலி இருதயத்தைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். இருதய நோயால் பீடித்தவர்களின் இருதயத்தை ஆப்பரேஷன் செய்யவேண்டி ஏற்பட்டால் மேற்கூறிய போலி இருதயத்தை உண்மை இருதயத்திற்குப் பதிலாகவைத்து, உண்மையான இருதயத்தை எடுத்துப் பழுதுபார்க்க முடிகிறது. போலி இருதயம் உண்மையான இருதயத்தைப் போலவே வேலை செய்கிறது. —லோ.

# விஜய தசமி

ந. பிச்சமூர்த்தி, பி. ஏ.

---

ஏழை எச்சுமு (லக்ஷ்மி) என்னசெய்வாள்! அவள் தாயார் சின்னம்மாதான் என்ன செய்வாள்! கணவன் கிளப் வைத்துக் கடனாளியாகி இருந்த இடம் தெரியாமல் ஓடிப்போனதிலிருந்து அவல் இடித்து விற்பதும், மா அரைப்பதும், காலைக் காரியம், சமையல் முதலியவை செய்வதும் ஜீவனோபாயமாகி விட்டன. பிரஸ்தாபிக்கும் காலத்தில், வக்கீல் வேதாந்தமையர் வீட்டில் சொல்ப சம்பளத்திற்குச் சின்னம்மா சமையல் செய்து வந்தாள். மாதச்சம்பளம் ஐந்துரூபாய்; சாப்பாட்டிற்கே போதாது. அதில் வீட்டுவாடகை ஒன்றரை ரூபாய் கொடுத்தாக வேண்டும்.

இப்படிப்பட்ட நிலைமையில் நவராத்திரி வராவிட்டால் நல்லது என்று சின்னம்மா என்னுவதில் பிசகென்ன? ஆனால் அதற்காக நவராத்திரி வராமல் நின்று விடுமா?

நவராத்திரி பொம்மைக்கடைகளைப் பார்த்து விட்டுத் திரும்பி வந்த எச்சுமு தாயாரைக் கேட்டாள்: "எம்மா! இந்தவிசை நான் கொலு வெக்கப்போறேனே. வீட்டிலெ நெறைய ஆறுதட்டு வெக்கப்போறேன், சுண்டல் பண்ணித்தறயா நேவேத்யத்துக்கு?"

"பொம்மை ஏதுடி உனக்கு? உங்கப்பனுக்கு வீடுவேறே கட்டிவச்சு வாழறதோ? அதிலெவேறெ ஆறுதட்டு வெக்கப்போாளாம். பேச்சைப்பாரு—டில்லிபாச்சா பொண்ணுட்டமா!" என்று சீறினாள் தாயார் மனமுடைந்து.

பாவம்! எச்சுமுவுக்கு இந்த இழவு வித்யாஸங்களெல்லாம் எப்படித்தெரியும்!

"ஆனால் பொம்மை நேக்கு ஏன் இல்லெ? அப்பொன்னு நீ வாங்கிக்குடு" என்று எச்சுமு தாயின் முழங்காலைக் கட்டிக் கொண்டு கெஞ்சினாள்.

சின்னம்மா திரும்பத் தாயாகிவிட்டாள்: "அடி அசடு! அதுக்குப் பணம் வேண்டாமா? தாலிதானே இருக்கு; என்ன பண்ணச்சொல்றே?"

"ஒன் கிட்டெ ஏன் பணமில்லெ? எல்லார் கிட்டெயும் ரொம்பரொம்ப இருக்கே. வக்கீல் வீட்டு அம்மாமி கிட்டே நோட்நோட்டா, பணம் பணமா இருக்கே. நீகொஞ்சம் கேட்டு வாங்கேன்."

தாயாருக்குப் பதில் சொல்லத்தெரியவில்லை. கண்களைக் கசக்கிக்கொண்டாள். "பார்ப்போண்டி" என்று தட்டிக்கழிக்கும் பல்லவியைக் கையாண்டுவிட்டு வெளியே போய்விட்டாள்.

தாய் வெளியே போன அடியோடு எச்சுமு வீட்டை விட்டுக் கிளம்பினாள். குதித்துக் குதித்துத் தன்சிநேகிதி வீடு ஒவ்வொன்றிற்குள்ளும் நுழைந்து, மார்பைத்தட்டிக்கொண்டு குதூஹலமாய்த் தான் அந்தத்தடவை நவராத்திரிக்கு ஆறு தட்டுப் பொம்மை வைக்கப்போவதாகப் பீத்திக்கொண்டாள்.

நவராத்திரி முதல் நாள் அந்திப்பொழுதாகியும் வீட்டில் கொலு வைத்தபாடில்லை. எச்சுமுவுக்குத் துக்கம் குமுறிக்கொண்டிருந்தது. தாயுடன் சண்டை பிடித்தாள்; அழுதாள்; பிடிவாதம் செய்தாள். பெண்ணை உடலுடன் சேர்த்து அணைத்துக் கொண்டு, தலைமயிரைத் தடவிக்கொடுப்பதைத்தவிர தாய்க்கு வேறு ஒன்றும் செய்யமுடியவில்லை. அன்றையதினம் இரவு சாப்பிடாமல் வெறும்தரையில் அழுதபடியே எச்சுமு தூங்கிவிட்டாள்.

சின்னம்மா வெகுநேரம் வரையில் கிணற்றங்கரையில் சோர்வடைந்து உட்கார்ந்திருந்தாள். "வக்கீல் வீட்டில் ஏதாவது பணம் கேட்டு வாங்குவோமென்றால், நவராத்திரியும் அதுவுமாய்க் கொடுக்க மறுத்துவிடலாம். அல்லது 'வேலைக்கு வந்து அரை மாதம் கூட ஆகவில்லை. இப்பொழுது முதல் பணத்திற்குப் பிடுங்கித் தின்கிறாள்' என்று அவர்கள் நினைத்துவிடலாம். ஒரு வேளை சொல்லியும்விடலாம். அப்பொழுது இந்த அரைவயிறு கஞ்சிக்குக் கூடத்திண்டாட்டம் வந்துவிட்டால்?" இப்படிப் பலவாறு எண்ணி எண்ணி . . முடிவுகாணாமல் தூங்கிப்போய்விட்டாள்.

மறுநாள் காலை வழக்கம்போல் வானில் பொற்கோழி கூவவே உலகம் விழித்தெழுந்தது. எச்சுமுவும் சின்னம்மாவும எழுந்தார்கள். ஆனால் தாயினிடம் பொம்மைகளைப்பற்றிக் குழந்தை மூச்சே விடவில்லை; பகல்முழுதும் முகத்தை 'உம்' மென்று தூக்கிவைத்துக்கொண்டிருந்தாள்.

மாலைப்பொழுதில் பெண்ணும் தாயுமாக வக்கீல் வீட்டுக்கு மஞ்சள்குங்குமத்திற்குச் சென்றார்கள். கண்ணிமை கொட்டாமல் ஒவ்வொரு பொம்மையையும் விழுங்கிவிடுபவள் போல் எச்சுமு உற்று உற்று நோக்கினாள். பொம்மைகளைப்

பார்க்கப் பார்க்க ஒரு புறம் துக்கம்; மற்ருெரு புறம் தாயாரிடம் கொலு வைக்கப் பணமில்லையே என்ற ஏக்கம்......

இரவு. தாயும் பெண்ணும் இன்னும் சிலரும் கோவிலுக்குக்கிளம்பினுர்கள். போகும்வழியெல்லாம் கடைமயம். கடையெல்லாம் பொம்மை மயம். கோவில்! அங்கேயும் அப்படித்தான். தேவேந்திர சபை, துரோபதை துகிலுரிதல், செட்டிப்பொம்மை, நரித்தொம்பச்சி, கல்லடிமங்கன், இன்னும் எவ்வளவோ பொம்மைகள்.

எச்சுமுவின் கண்கள் சுழன்றன. ஒருநொடி பொம்மைகளையெல்லாம் ஆவலுடன் பார்த்தாள். அடுத்த க்ஷணம் சீயென்று அவைகளை முற்றிலும் வெறுத்துக் கண்களை மூடிக்கொண்டு, கண்ணில்லாக் கபோதி பிறர்கையைப்பிடித்துச் செல்வதுபோல் தாயின் கையைப் பிடித்துச்சென்ருள்.

கடைசியாகச் சுவாமி சன்னதிக்கு வந்துசேர்ந்தார்கள். எச்சுமு கண்ணைத்திறந்தாள். யாரோ ஒரு பாட்டி, சுவாமிக்கு அர்ச்சனை செய்துவிட்டுக் குருக்கள் கொடுத்த விபூதிமுதலிய பிரஸாதங்களை வாங்கிக்கொண்டிருந்தாள். தட்டிலிருந்த பாதி தேங்காய்மூடியைமட்டும் சிவன்சொத்தென்று சொல்லியபடியே யாரோ ஒருபிராமணனுக்குக் கொடுத்து விட்டாள். எச்சுமு இதையெல்லாம் கவனித்து வந்தாள்.

பிறகு எல்லோருமாக அம்மன் சன்னதிக்குச் சென்ருர்கள். சுவாமிசன்னதியில் அர்ச்சனைநடத்திய கிழவி, அம்மன் சன்னதியிலும் ஒன்று நடத்தினுள். ஆனுல் குருக்கள் கொடுத்த பிரசாதத்தை அப்படியே தேங்காய் மூடி உள்பட கிழவி எடுத்துக் கொண்டது எச்சுமுவுக்குச் சற்று ஆச்சர்யமாயிருந்தது. தாயைப் பார்த்து, "ஸ்வாமி சன்னதியிலே வாண்டாம்ன்னுட்டு இங்கே அம்மன் சன்னதியிலே மாத்ரம் தேங்காமூடி வாங்கிக்கலாமா அந்தப் பாட்டி?" என்றுகேட்டாள்.

"அம்மன் தான் வரப்பிரஸாதி. லோகமெல்லாம் அவளுது தான். சிவனுக்கு விபூதிதான் சொந்தம். நமக்கு அஷ்ட ஐஸ்வர்யமும் அவள்தான் குடுக்கணும். அதனுலேதான் பாட்டி இங்கே தேங்காமூடி வாங்கிக்கிண்டா" என்று ஏதோ சமாதானம் சொன்னுள்.

எச்சுமுவுக்கு விஷயம் விளங்கிவிட்டது போல் தலையை ஆட்டினுள். அப்படியே அம்மன் சன்னதியில் உட்கார்ந்து கண்களை மூடிக்கொண்டு பிரார்த்தனை செய்தாள்.

நவராத்திரி மூன்றுவது நாள்மாலை வக்கீல் வேதாந்தமைய்யர் மனைவி ராஜாமணி அம்மாள் வீட்டிற்கு வருவோர்களையெல்லாம் வரவேற்றுக்கொண்டிருந்தாள். எச்சுமுவந்து ஓர் ஓரமாய் உட்கார்ந்து கொண்டாள்.

சிறிதுநேரம் சென்றது. ராஜாமணி அம்மாளைப்பார்த்து, "ஏன் அம்மாமி; என்னத்துக்காகக் கொலுவெக்கறது?" என்முள்.

ராஜாமணியம்மாள் ஸ்ரீவித்யோபாசனை செய்வதாக ஊர்முழுதும் பேச்சாய் இருந்தது. "நல்லகேள்வி கேக்கறயே, எச்சுமு! அந்த நாளிலெ ஒரு போக்கிரி அசுரனிருந்தான். ஜகத்தெல்லாம் அவனைப்பார்த்து நடுங்கித்து. எல்லாருமாய்ப்போய் அம்பாளிடத்திலெ குறை சொல்லிக்கொண்டா. அம்பாள் மொதல்லெ தன் ஸைன்யத்தை அனுப்பி அந்த அசுரன், அவன் ஸைன்யம் எல்லாத்தோடெ சண்டைசெய்யச் சொன்னு. தான்மாத்திரம் ஓம்பது நாளும் அப்படியே உக்காந்திருந்தா. கடைசியாக, தெசமி அன்னிக்கு அம்பாளே நேரேபோய் மஹிஷாசுரனைக் கொன்னுட்டா. அதுக்காகத்தான் கொலுவெக்கறோம். ஜெயிச்சத்துக்காகத்தான் விஜயதெசமி அன்னிக்கு சுவாமிகளெல்லாம் அம்பு போடப் போறது; தெரிஞ்சுதா?"

"கொலு வீட்டுலெ வெக்காட்டா என்ன, அம்மாமி?"

"கொலுவெக்காட்டா வீட்டிலெ தரித்திரம் பிடிங்கித் திங்கும். காரியமெல்லாம் தோத்துப் போகும். அபசகுனமாயிருக்கும்."

"அப்படின்னு எங்காத்துலெ கொலு வெக்கல்லியே. என்ன பண்றது?"

அதற்கு ராஜாமணி அம்மாளுக்குப் பதில் சொல்லத் தெரியவில்லை; "உம்" என்முள். எச்சுமு விட்டபாடில்லை,

"அப்பொன்னுக்கே எனக்குக்கொஞ்சம் பொம்மை குடுங்கோ; நான் கொலுவெக்கறேன்."

"ஆகட்டும்" என்று பட்டுக்கொள்ளாமல் சொன்னுள் வக்கீலின் மனைவி.

அதற்குள் யாரோ பணக்கார ஸ்திரீகள் ஐந்தாறுபேர் வந்தார்கள். ஏதேதோ பேசிக்கொண்டிருந்து விட்டு ராஜாமணி அம்மாளைத் தங்கள் வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போய்விட்டார்கள்—மஞ்சள்குங்குமத்திற்கு.

ராஜாமணி அம்மாள் போனபிறகு எச்சுமு கொலுவுக்குமுன் வெகுநேரம் வரையில் கைகட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

வக்கீலின் மனைவி திரும்பி வருவதாகத் தெரியவில்லை. கூடத்தில் ஒருவரையும் காணோம். அம்பாள் பிரஸாதம் கிடைத்தது! எச்சுமு எழுந்திருந்து பொம்மைகளில் ஐந்தாறை எடுத்து மடியில் கட்டிக்கொண்டாள். குனிந்து பொம்மைகளை எடுத்ததில் தலை பின்னல் சரிந்து விழுந்து சில பொம்மைகளைத் தள்ளிவிட்டது. அந்த ஸப்தத்தைக்கேட்டுப் பயந்துபோய் எச்சுமு வீட்டுக்குக் கிளம்பி விட்டாள்.

நவராத்திரி நான்காம் நாள் காலை. ராஜாமணி அம்மாள் கொலு வைத்திருக்கும் அங்கணத்திற்கு எதிரே வழக்கம்போல் தன்கையால் மெழுகிக் கோலமிட்டுக்கொண்டிருந்தாள். கோலம் முடிந்ததும் மெதுவாக நிமிர்ந்தாள். நடுத்தட்டிலிருந்த துர்க்கை, லக்ஷ்மி, ஸரஸ்வதி முதலிய விக்ரஹங்கள் உருண்டு கிடந்தது கண்ணில்பட்டது. சமீபத்தில் போய்க் கவனித்தாள். சில பீங்கான் பொம்மைகளைக் காணவில்லை. பின்னும் சோதித்தாள். நெஞ்சு 'பக்' கென்று தீப்பிடித்துக்கொண்டது. லக்ஷ்மி விக்ரஹத்தின் கழுத்தில் போடப்பட்டிருந்த தங்கச்சங்கிலியும் பதக்கமும் காணப்படவில்லை! ராஜாமணி அம்மாளின் உள்ளம் பதறிற்று. நவராத்திரியில் நகைகெட்டுப் போவதென்றால், தன் கணவருக்கு—ஏன்? தன் குடும்பத்திற்கே—ஏதாவது மஹத்தான ஆபத்து வருவதன் அறிகுறியோ என்ற பீதி உண்டாயிற்று.

சற்றுநேரம் சென்றதும் மனக்குழப்பம் தணிந்தது. முதல் நாள் எச்சுமு வந்திருந்ததும் அவளுடைய கேள்விகளும் ஞாபகத்திற்கு வந்தன. அவள்மீது இயல்பாய்ச்சந்தேகம் பிறந்தது. அன்று காலைக்காரியம் செய்ய சின்னம்மா வராததால் சந்தேகம் நிச்சயமாகிவிட்டது.

சின்னம்மா வீட்டிற்கு ராஜாமணி அம்மாள் வந்தபொழுது சின்னம்மா உடலெங்கும் போர்த்துக்கொண்டு ஒரு கிழிந்த கித்தான்மீது படுத்துக் கொண்டிருந்தாள். எஜமானி வரப் பார்த்ததும் எழுந்து உட்கார்ந்தாள்.

"என்ன உடம்பு திடீரென்று?"

"அதான் எனக்கும் தெரியல்லே. ராத்ரி படுத்துக்கிண்டதே புடிச்சுத் தலை கனத்துக்கிண்டு பொணமாட்டமாயிருக்கு. அதோடு ஜொரம்வேறெ. ஒடம்பை அனத்தறது. அதான். காலம்பர காரியம்கூடச் செய்யவரல்லெ."

"சரிதான்."

"ஏதாவது விசேஷமுண்டா—காலெ வேளையிலே வந்திருக்கேளே?"

"விசேஷ மொண்ணுமில்லெ. ஒன் பொண் சாயங்காலமா வீட்டுக்கு வந்திருந்தா. நான் அப்பறம் வெளியே போயிட்டேன். காலம்பர பாக்கறப்போ பொம்மையிலெ கொஞ்சம் கொறை யறது."

"ஹூம். அப்பறம்?"

"வேறொருத்தரும் வல்லெ. லக்ஷ்மி விக்ரஹத்தின் கழுத்திலே இருந்த 'செயினும்' பதக்கமும் காணும். வேறு ஒருவார்த்தை எச்சுமுவைக் கேட்டுப் பாக்கலாம்ன்னு வந்தேன்."

"அந்தச் சனியனைக்காணுமே இங்கே. மூதேவி எங்கே தொலைஞ்சுதோ......இருந்தாலும் அவளுக்குக் கைநீளம்னு சொல்றத்துக்கில்லெ. என்னமோ!"

சின்னம்மாவின் வார்த்தை எஜமானிக்குச் சமாதானமளிக்க வில்லை. பேச்சுப்பராக்கில் அங்குமிங்கும் சலித்துக்கொண்டிருந்த எஜமானி அம்மாளின் கண் துளசி மாடத்திற்குப் பின்னால் போயிற்று. "அதென்னவோ மின்னறதே" என்று இரண்டடி எடுத்துவைத்தாள். துளசி மாடத்துக்குப் பின்னால் ஒருசெங்கல் லுக்கு ஒரு பொம்மையாக ஆறு அடுக்குக் கொலு வைக்கப்பட் டிருந்தது. "சின்னம்மா! எச்சுமு கொலுவெச்சிருக்கற அழகைப் பாரேன்!" என்றாள். சின்னம்மாவின் முகம் அவமானத்தால் பட்டுப்போய்விட்டது. ராஜாமணி அம்மாளோ கல்களை யெல்லாம் புரட்டி நகையைத்தேடினாள். காணவில்லை.

"சமயலறைமாடத்தில் கிடத்தில் அவள் நகையை வச்சிருக் கப்போறாளே, பாரேன்" என்று சொல்லிவிட்டு எஜமானியும் காரியக்காரியும் அங்குமிங்கும் தேடினார்கள். பயன்படவில்லை. எஜமானி வீட்டுக்குக் கிளம்பினாள்.

வாயிற்படிக்கு வந்தசமயம் எச்சுமு தெருவிலிருந்து வீட்டிற் குள் நுழைந்தாள். அதன்மேல் ராஜாமணி அம்மாள் எச்சுமு வின் பின்னோடு மறுபடி வீட்டிற்குள் சென்றாள். எச்சுமுவைக் கண்டதும் சின்னம்மாவுக்குத் தலைகால் தெரியவில்லை. குழந்தை யைப் பிசாசுபோல் அறைந்தாள். குழந்தை அலறிற்று. எஜமானிக் குக் கூட ஏன் சொன்னோமென்றாகிவிட்டது. சற்றுநேரம் அப் படியே நின்றுகொண்டிருந்தாள். போகட்டுமென்றால் மனதுகேட் கிறதா? "துளசி மாடத்துக்குப்பின்னாலே இருக்கறபொம்மையை நீயே எடுத்துக்கோ. செயினையும் பதக்கத்தையும் குடுத்துடு" என் றாள் எஜமானி. எச்சுமு பதில் சொல்லாமல், கதவு இடுக்கில் போய்த் தேம்பித்தேம்பி அழுதாள். பின்னொரு சமயம் ஆகட்டு மென்று எஜமானி போய்விட்டாள்.

மறுநாள் மத்யானம் வந்தாள்; "எச்சுமு! பொம்மையை வச்சுக்கோ; நகையைக்குடுத்துடு" என்றாள்.

"நகையை எடுக்கல்லே, அம்மாமி. கொலுவக்காட்டா அஷ்ட தரித்திரம் வரும்னேளே. ஒங்களை பொம்மை கேட்டேன், ஆகட்டும் இன்னேள். அப்பறம் வெளியே போயிட்டேள். நான் ஒங்களுக்காகக் காத்துண்டிருந்தேன். நீங்க வரல்லெ. நானு பொம்மை கொஞ்சம் எடுத்துக்கிண்டேன். நகை எனக்கென்னத் துக்கு? கொலு வெச்சால் அம்பாள் தானே கொடுக்கறாள்" என்று எச்சுமு சொன்னதோடு "இந்தாங்கோ பொம்மை" என்று பொம்மைகளைக் காலடியில் கொண்டுவந்து வைத்தாள்.

"ரெண்டுங் கட்டான்!" என்று சொல்லிக்கொண்டே எஜமானி அம்மாள் திரும்பினாள்.

"அம்மாமி! எனக்கு ஒடம்பு சரியாயிடுத்து. ஆனால் இனிமேல் ஒங்காத்திலெ வேலைசெய்ய யோக்யதை கிடையாது. இந்தப் பொண்ணைப்பெத்ததற்கு நாக்கைப் பிடுங்கிக்கிண்டு சாகலாம்" என்றாள் சின்னம்மா.

"அழகாயிருக்கு—உன்பேச்சு" என்று சொல்லிக்கொண்டே ராஜாமணியம்மாள் வீட்டிற்குக் கிளம்பினாள். அத்துடன் சங்கிலி விஷயத்தை விட்டு விட்டாள்.

விஜய தசமி தினம். வக்கீல்வேதாந்தமையர் வீட்டில் 'திமிலோகப்' பட்டது. விஷயமென்னவென்றால்: அம்பாளுக்குப் பிரீதியாக ஐந்து ஸ்திரீகளுக்குப் புடைவையும், ஐந்து கன்னிகளுக்குப் பாவாடையும் பூஜைசெய்து கொடுக்கும் மும்மரம். அன்று முழுதும் ஊரெங்கிலும் ராஜாமணியம்மாளின் பேச்சுத்தான்

இரவு வந்தது. கொலுவைக் கலைத்து, பொம்மைகளைப்பெட்டியில் அடுக்கும் நேரம். வக்கீலும் அவர் மனைவியும் பொம்மைகளை எடுத்தும் துணிகளை மடித்தும் சுருட்டியும் பலகைகளை அடுக்கிக் கொண்டுமிருந்தார்கள். கீல்போட்ட இரட்டைப் பலகை இடுக்கில் ஏதோ பளிச்சென்று மின்னிற்று. இருவரும் பார்த்தார்கள் - செயினும் பதக்கமும்!

ராஜாமணி அம்மாளின் தலை சுழன்றது. அவள் செவியில் சிம்மத்தின் வெறிகொண்ட கர்ஜனைகேட்டது; காளியின் வாள் வீச்சு விர்விர்ரென்று விழுந்தது. அகக்கண்முன் மஹிஷாசுரனுடைய தலை பனங்காய்போல் உருண்டுவிழும் காட்சி எழுந்தது. உள்ளத்தில் பீதி உண்டாயிற்று. மயிர்க் கூச்செறிந்தது. உடல்

முழுதும் நனைந்து போயிற்று. அப்படியே கீழே விழுந்து நமஸ்காரம் செய்தாள். மனது அமைதியுறவில்லை. நேரே சின்னம்மா வீட்டிற்குச் சென்றாள்.

அந்த நேரத்தில் எஜமானியைப் பார்த்ததும் சின்னம்மாவுக்கு வயிற்றில் புளியைக்கரைத்தது. எச்சுமு இடுப்பில் கைவைத்துக் கொண்டு, "இன்னும் ஏதாவது அடிவாங்கி வெக்கப்போறேளா என்ன? ஒங்க பொம்மையைத்தான் அன்னிக்கி நீங்க எடுத்துக்கிண்டு போகல்லென்னாட்டு ஒடனே கொண்டுவந்து நானே வெச்சுட்டேனே!" என்றாள்.

ராஜாமணி அம்மாளின் கண்களில் நீர் கரகரவென்று கிளம்பிற்று. "என் அல்பபுத்தியை என்னன்னுசொல்றது? சின்னம்மா! படாப் பழியைக் குழந்தைமேலே சுமத்தினேன். பலகை இடுக்கிலே இருந்து அந்தநகை இப்பொ அம்புட்டுது. என்னை மஹிஷாசுரமர்த்தனிதான் காப்பாத்தணும்" என்று சொல்லிக் கைகுவித்தாள்.

சின்னம்மாவுக்கு நா எழவில்லை. குழந்தை எச்சுமுவைக் கட்டியணைத்துக்கொண்டு மௌனமாய்க் கண்ணீர்விட்டாள்.

---

## கடல் நீரிலிருந்து தங்கம்

கடல் நீரிலிருந்து தங்கம் எடுப்பதற்கான புதிய முறை யொன்று அமெரிக்காவில் கண்டு பிடிக்கப்பட்டு, அந்த முறை பரீட்சிக்கப்பட்டு வருகிறது. இந்தப் பரீட்சார்த்தம் வெற்றிகரமாக முடியுமாயின், இந்தப் பூமியிலுள்ள ஒவ்வோர் ஆணும் பெண்ணும் குழந்தையும் 700 அவுன்ஸ் தங்கத்தைச் சமமாய் அடைய முடியுமாம். வடக்குக் கரோலினாவைச் சேர்ந்த கடற்கரையில் கடல் நீரிலிருந்து 'புரோமைன்' எடுக்கும் முறையைத் திட்டப்படுத்தும் வேலை செய்யப்பட்டு வருகிறது. அவ்வாறு புரோமைன் எடுப்பதைக் காட்டிலும் தங்கம் எடுப்பது கஷ்டமில்லையாம். எனவே, இனிக் கடல் நீர் மகா ஜாக்கிரதையாகக் கையாளப்பட வேண்டியிருக்கும் என்று இரசாயன சாஸ்திரிகள் கூறுகின்றார்கள்.

# முதல் தாமரை

## இளங்கோவன்

---

பிரம்மாண்டமான ஓர் காடு; காலை நேரம்; காட்டைச்சுற்றிக் கூடாரம்போல் தொங்கும் பனிப்படலங்களை இன்னும் சூரியனால் துருவி உட்செல்ல முடியவில்லை. உலர்ந்துபோன இலைகள் மரங்களினின்றும் கீழே உதிர்ந்துகொண்டிருந்தன. மேல்காற்று ஆயிரம் பேய்களின் இரைச்சலுடன் மொட்டை மரங்களைக் குடைந்துகொண்டே ஓடியது. குளிரினால் உலகம் நடுங்கிக் கொண்டிருந்தது. பசுமையும் அழகும் பனிக்குப் பயந்து மண்ணுள் பதுங்கிக்கொண்டனபோல் தோன்றியது. இத்தகைய பாழ்பட்ட பனிக்காலத்தில், அடர்ந்து விளங்கும் அந்தக் காட்டில் வேடச்சி ஒருத்திக்கு ஓர் பெண்குழந்தை பிறந்தது. இருண்டு கிடந்த அக்கானகத்தில் குழந்தையின் முகம் கருக்கிருட்டில் தோன்றும் உதயதாரகையைப்போல் ஜ்வலித்தது.

கட்டிக்கொண்டிருந்த ஒரே தோலாடையைக் கொண்டு அவள் தன் குழந்தையை மூடினாள். காற்றோ அவள் உடம்பைச் 'சுரீர் சுரீர்' என்று குத்தி அவள் சதையைப் பிய்த்துப் பிடுங்குகிறது. அவள் கூந்தலெல்லாம் பனித்துளிகள் ஒட்டிக்கொண்டன. ஆனால் குழந்தைமட்டும் சுகமாய்ச் சூட்டுடன் இருந்தது. கிடுகிடுவென்று குளிரால் ஆடிக்கொண்டிருந்த அவள் உடல் மெல்ல மெல்ல மரத்துக்கொண்டே வந்தது. அவளால் மூச்சுக்கூட விட முடியவில்லை. ஆனால் அப்போதும் அவள் கருத்து, குழந்தையைக் காப்பதினின்றும் பிறழவில்லை. குளிர் மிஞ்சிப் போயிற்று. அவள் கண்களும் மூடிப்போய்விட்டன. எங்கோ இருக்கிறதென்று சொல்லப்படுகிற அந்த 'இன்ப உலகத்திற்கு' அவள் போய்விட்டாள். குழந்தையோ தனது ஆபத்தான நிலைமையைத் தெரிந்து கொள்ளாமலேயே தன்னுடைய மலர்மொக்குக் கைவிரல்களை வாயில்வைத்துச் சப்பிய வண்ணம் சிரித்துக்கொண்டிருந்தது. அந்தச் சிரிப்பில் உதயத்தின் புனிதமும் லாவண்யமும் பிரதிபலித்தன.

அத்தருணம் சில மான்கள் அவ்வழியே சென்று கொண்டிருந்தன. தாயின் சவத்துடன் கிடக்கும் குழந்தையைக் கண்டதும் அவைகள் அங்கேயே நின்று விட்டன. அவற்றின் விழிகளில் நீர்த்துளிகள் தோன்றின. அப்போதுதான் தனது குட்டியைப் பறிகொடுத்த ஓர் பெண்மான் அந்தக் குழந்தையைத் தன் வீட்டுக்கு எடுத்துக்கொண்டு போய்விட்டது. அக் குழந்தை பிறந்தபொழுது எங்கும் ஓரே இருளா யிருந்தது. அதன் முகம்மட்டும் ஒளிவீசியதால் அப்பெண்மான் அதற்கு 'ஜோதி' என்று பெயரிட்டது.

பனிப்பருவமும் மறைந்துபோய் விட்டது. அதுவரையிலும் பனிக்குப் பயந்து பதுங்கியிருந்த பச்சிலைகளும் பசும்புல்லும் பூமியினின்றும் மெதுவாக எட்டிப்பார்த்தன. 'வசந்தன் வந்துவிட்டான். எல்லாரும் வாருங்கள், வாருங்கள்' என்று கருங்குருவிகளும் அன்றிற்பறவைகளும் காடுமுழுவதும் பறைசாற்றலாயின. களிப்பு மிகுதியினால் வனதேவதைகள் பச்சை உடையணிந்து, பசும் பொன்னாபரணங்களுடன் காட்டில் புகுந்தன. அவைகளுடைய இளைய பாதங்கள் பட்ட இடங்களெல்லாம் பச்சைப் புல் தளிர்த்தது. கதிரவன் கலகலவென்று சிரித்தான்; ருத்ரனது நகைப்பை யொத்த அவனது சிரிப்பில் பனி மாய்ந்துவிட்டது. உறங்கிப்போயிருந்த காட்டில் இப்போது உற்சாகமும் சிரிப்பும் ஒளியும் தோன்றின. வசந்தகாலத்தின் வருகையைக்கண்டு பறவைகள் ஆனந்த பரவசமடைந்து ஆரவாரித்தன.

* * * *

பத்துவருடங்கள் சென்றன. ஜோதி அழகான ஓர் கன்னிகையாக வளர்ந்துவிட்டாள். அவளது சர்மம் வெண்முத்தம்போல் மினுமினுத்தது. கூந்தற் சுருள்கள் அவளது அழகிய முகத்தின் மீது தழுவி விளையாடிக்கொண்டிருந்தன. மஹா தேஜஸோடு கூடிய வதனம், கருநீலக் கண்கள், பட்டுப்போன்ற மிருதுவான கன்னங்கள் இவற்றுடன் மணமிகுந்த மல்லிகை அவள் தலையில் கிரீடம்போல் விளங்க, மல்லிகையின் நடுவில் ரோஜா ஒன்று கெம்பைப்போல் ஜோதி வீச, முழங்கைகளிலும் கால்களிலும் புஷ்பச் சங்கிலிகள் மின்ன, பச்சிலை அரையாடை காற்றில் அசைய, ஜோதி தேவமகள்போல் மான்கூட்டங்களிடையே இப்போது விளங்கினாள். புஷ்பங்கள் வேண்டுமானால் முன்மாதிரி அவள் குருவிகளைக் கெஞ்ச வேண்டியதில்லை. பெரிய மரங்களிலிருந்துகூட அவளே இப்போது மலர்களையும் கனிகளையும் பறித்துவிடுவாள். ஆனால் மான்குட்டிகளிடையே வளர்ந்து, அவை

களின் மருட்சிகளையெல்லாம் கற்றுக்கொண்ட ஜோதி ஓர் சிறு சப்தம் கேட்டால்கூட, க்ஷணத்தில் ஓர் புதரிலேயோ அல்லது ஓர் பெரிய மரத்திலேயோ ஓடி ஒளிந்துவிடும் வழக்கம் மட்டும் இப்போதும் போகவில்லை.

மழைகாலம் வந்துவிட்டது. வானவீதியில் எங்கும் மேகங்கள் உருண்டன. 'ஜோ' வென்று மழை தாரை தாரையாகக் கொட்டியது. ஏரிகளும் நதிகளும் நிறைந்து வழிந்தன. அடிக்கடி உருண்டோடும் இடிகளால் காடே அதிர்ந்து கொண்டிருந்தது. சிறு சப்தத்திற்கும் பயப்படும் சுபாவமுடைய மான்குட்டிகள் இடியோசையைக் கேட்டதும் வெளிவந்து, நடனமாடிக் களிப்புடன் குதித்தன. அவைகளுடைய கண்கள் நெருப்பைப்போல் பிரகாசித்தன. கருமேகம் போன்ற மலைகளிலிருந்து மழைநீரால் வீங்கி விம்மிய நீர்வீழ்ச்சிகள் உருகிய வெள்ளிபோல் விழுந்துகொண் டிருந்தன. வெண் நுரைகள் நுரைத்தன. 'ஜோ' என்ற ஒலி காட்டில் நிறைந்து ஒலித்தது. நீர்வீழ்ச்சிகளைக் கடக்கமுடியாமல் தவித்த ஜோதியைப் பெரிய கடமை மான்கள் தங்கள் முதுகின்மேலேற்றிச் சென்றன. புற்களைக் கடித்துத் தின்ன முடியாமல் கஷ்டப்பட்ட மான்குட்டிகளுக்கு ஜோதி தன் கையால் புற்பறித்துக் கொடுத்து உதவினாள்.

மழைபெய்து ஓய்ந்துவிட்ட ஒரு நாள் காலை; வானம் இன்னும் இருண்டுதான் கிடக்கிறது. இலைகளினின்றும் மழைத்துளிகள் தரையில் விழுந்துகொண் டிருந்தன. ஓர்விதமான அமைதி எங்கும் நிலவியது. தனியாக ஓர் மரத்தடியில் உட்கார்ந்தவண்ணமாய் ஜோதி மலர்மாலை தொடுத்துக் கொண்டிருந்தாள். இளமான் ஒன்று—அதன் பெயர் கஜ்வா—அவள் மடிமீது தலையை வைத்துக் கொண்டு படுத்திருந்தது.

அச்சமயம் ஓர் மெல்லிய சப்தம் கேட்டது. ஜோதிமுகம் நிமிர்ந்து பார்த்தாள். யாரோ ஓர் அழகி! அவளெதிரில் நின்று கொண்டிருந்தாள். ஜோதி தனது முகத்தை அடிக்கடி நீரில் பிரதிபலிக்கும்போது பார்த்திருக்கிறாளாதலின், அப்புதியவளைக் கண்டு அவள் திகைப்படையவில்லை. அதுவரையிலும் காட்டு மிருகங்களிடையே வசித்துவந்த அவள் இப்போது தன்னைப் போலவே ஓர் ஸ்திரீயுடன் நிற்பதைக் கண்டதும் சந்தோஷப் பட்டாள்.

"நீ யாரம்மா? தயவுசெய்து சொல்" என்றாள் ஜோதி.

"அன்பே, நான் யாரா? நான் யாரென்று சொன்னால் உனக்கு என்ன விளங்கப்போகிறது? நீ இதற்குமுன் என்னைப் பார்த்த

அத்தருணம் சில டிமான்கள் அவ்வழியே சென்று கொண்டிருந்தன. தாயின் சவத்துடன் கிடக்கும் குழந்தையைக் கண்டதும் அவைகள் அங்கேயே நின்று விட்டன. அவற்றின் விழிகளில் நீர்த்துளிகள் தோன்றின. அப்போதுதான் தனது குட்டியைப் பறிகொடுத்த ஓர் பெண்மான் அந்தக் குழந்தையைத் தன் வீட்டுக்கு எடுத்துக்கொண்டு போய்விட்டது. அக் குழந்தை பிறந்தபொழுது எங்கும் ஒரே இருளா யிருந்தது. அதன் முகம்மட்டும் ஒளிவீசியதால் அப்பெண்மான் அதற்கு 'ஜோதி' என்று பெயரிட்டது.

பனிப்பருவமும் மறைந்துபோய் விட்டது. அதுவரையிலும் பனிக்குப் பயந்து பதுங்கியிருந்த பச்சிலைகளும் பசும்புல்லும் பூமியினின்றும் மெதுவாக எட்டிப்பார்த்தன. 'வசந்தன் வந்துவிட்டான். எல்லாரும் வாருங்கள், வாருங்கள்' என்று கருங்குருவிகளும் அன்றிற்பறவைகளும் காடுமுழுவதும் பறைசாற்றலாயின. களிப்பு மிகுதியினால் வனதேவதைகள் பச்சை உடையணிந்து, பசும் பொன்னாபரணங்களுடன் காட்டில் புகுந்தன. அவைகளுடைய இளைய பாதங்கள் பட்ட இடங்களெல்லாம் பச்சைப் புல் தளிர்த்தது. கதிரவன் கலகலவென்று சிரித்தான்; ருத்ரனது நகைப்பை யொத்த அவனது சிரிப்பில் பனி மாய்ந்துவிட்டது. உறங்கிப்போயிருந்த காட்டில் இப்போது உற்சாகமும் சிரிப்பும் ஒளியும் தோன்றின. வசந்தகாலத்தின் வருகையைக்கண்டு பறவைகள் ஆனந்த பரவசமடைந்து ஆரவாரித்தன.

* * * *

பத்துவருடங்கள் சென்றன. ஜோதி அழகான ஓர் கன்னிகையாக வளர்ந்துவிட்டாள். அவளது சர்மம் வெண்முத்தம்போல் மினுமினுத்தது. கூந்தற் சுருள்கள் அவளது அழகிய முகத்தின் மீது தழுவி விளையாடிக்கொண்டிருந்தன. மஹா தேஜஸோடு கூடிய வதனம், கருநீலக் கண்கள், பட்டுப்போன்ற மிருதுவான கன்னங்கள் இவற்றுடன் மணமிகுந்த மல்லிகை அவள் தலையில் கிரீடம்போல் விளங்க, மல்லிகையின் நடுவில் ரோஜா ஒன்று கெம்பைப்போல் ஜோதி வீச, முழங்கைகளிலும் கால்களிலும் புஷ்பச் சங்கிலிகள் மின்ன, பச்சிலை அரையாடை காற்றில் அசைய, ஜோதி தேவமகள்போல் மான்கூட்டங்களிடையே இப்போது விளங்கினாள். புஷ்பங்கள் வேண்டுமானால் முன்மாதிரி அவள் குருவிகளைக் கெஞ்ச வேண்டியதில்லை. பெரிய மரங்களிலிருந்துகூட அவளே இப்போது மலர்களையும் கனிகளையும் பறித்துவிடுவாள். ஆனால் மான்குட்டிகளிடையே வளர்ந்து, அவை

களின் மருட்சிகளையெல்லாம் கற்றுக்கொண்ட ஜோதி ஓர் சிறு சப்தம் கேட்டால்கூட, க்ஷணத்தில் ஓர் புதரிலேயோ அல்லது ஓர் பெரிய மரத்திலேயோ ஓடி ஒளிந்துவிடும் வழக்கம் மட்டும் இப்போதும் போகவில்லை.

மழைகாலம் வந்துவிட்டது. வானவீதியில் எங்கும் மேகங்கள் உருண்டன. 'ஜோ' வென்று மழை தாரைதாரையாகக் கொட்டியது. ஏரிகளும் நதிகளும் நிறைந்து வழிந்தன. அடிக்கடி உருண்டோடும் இடிகளால் காடே அதிர்ந்து கொண்டிருந்தது. சிறு சப்தத்திற்கும் பயப்படும் சுபாவமுடைய மான்குட்டிகள் இடியோசையைக் கேட்டதும் வெளிவந்து நடனமாடிக் களிப்புடன் குதித்தன. அவைகளுடைய கண்கள் நெருப்பைப்போல் பிரகாசித்தன. கருமேகம் போன்ற மலைகளிலிருந்து மழைநீரால் வீங்கி விம்மிய நீர்வீழ்ச்சிகள் உருகிய வெள்ளிபோல் விழுந்துகொண் டிருந்தன. வெண் நுரைகள் நுரைத்தன. 'ஜோ' என்ற ஒலி காட்டில் நிறைந்து ஒலித்தது. நீர்வீழ்ச்சிகளைக் கடக்கமுடியாமல் தவித்த ஜோதியைப் பெரிய கடமை மான்கள் தங்கள் முதுகின்மேலேற்றிச் சென்றன. புற்களைக் கடித்துத் தின்ன முடியாமல் கஷ்டப்பட்ட மான்குட்டிகளுக்கு ஜோதி தன் கையால் புற்பறித்துக் கொடுத்து உதவினாள்.

மழைபெய்து ஓய்ந்துவிட்ட ஒரு நாள் காலை; வானம் இன்னும் இருண்டுதான் கிடக்கிறது. இலைகளினின்றும் மழைத்துளிகள் தரையில் விழுந்துகொண் டிருந்தன. ஓர்விதமான அமைதி எங்கும் நிலவியது. தனியாக ஓர் மரத்தடியில் உட்கார்ந்தவண்ணமாய் ஜோதி மலர்மாலை தொடுத்துக் கொண்டிருந்தாள். இளமான் ஒன்று—அதன் பெயர் கஜ்வா—அவள் மடிமீது தலையை வைத்துக் கொண்டு படுத்திருந்தது.

அச்சமயம் ஓர் மெல்லிய சப்தம் கேட்டது. ஜோதிமுகம் நிமிர்ந்து பார்த்தாள். யாரோ ஓர் அழகி! அவளெதிரில் நின்று கொண்டிருந்தாள். ஜோதி தனது முகத்தை அடிக்கடி நீரில் பிரதிபலிக்கும்போது பார்த்திருக்கிறாளாதலின், அப்புதியவளைக் கண்டு அவள் திகைப்படையவில்லை. அதுவரையிலும் காட்டு மிருகங்களிடையே வசித்துவந்த அவள் இப்போது தன்னைப் போலவே ஓர் ஸ்திரீயுடன் நிற்பதைக் கண்டதும் சந்தோஷப் பட்டாள்.

"நீ யாரம்மா? தயவுசெய்து சொல்" என்றாள் ஜோதி.

"அன்பே, நான் யாரா? நான் யாரென்று சொன்னால் உனக்கு என்ன விளங்கப்போகிறது? நீ இதற்குமுன் என்னைப் பார்த்த

தில்லை. உன்னைக் கண்டுபோகவே நான் இங்கு வந்தேன்'' என்று சிரித்த வண்ணமாய் விடையளித்தாள் புதியவள்.

"என்னுடனே இருந்துவிடேன்! என்ன சொல்லுகிறாய்?" என்று ஆவலுடன் கேட்டாள் ஜோதி.

"இல்லை, ஜோதி! அது முடியாது. நான் எப்போதும் உன் அருகில்தா னிருப்பேன், பயப்படாதே" என்று சாந்தமாகச் சொன்னாள் அவள்.

ஜோதியின் முகத்தில் தகதகவென்று எரிந்துகொண்டிருந்த புன்னகை அப்போது அவிந்துவிட்டது. "இவ்வளவு சீக்கிரத்தில் போகவேண்டியிருந்தால் நீ எதற்காக இங்கு வரவேண்டும்?" என்று சற்று எரிச்சலுடன் கேட்டாள் ஜோதி.

"கண்ணே! அது கிடக்கிட்டும். இதோ இந்த இரண்டு மலர்களில் ஒன்றை உனக்குத் தரப்போகின்றேன்; உனக்கு எது வேண்டும்?"

ஜோதி ஏறிட்டு நோக்கினாள்.

அப் புதியவள் வலக்கையில் ஓர் பெரிய வெள்ளைப் பூவை வைத்திருந்தாள்; சங்கின் ஹிருதயத்தைப்போல் அதன் உட்பாகம் சிவந்திருந்தது. அதனுடைய சுகந்தம் காட்டிலுள்ள தேனீக்களையெல்லாம் கவர்ந்தது. அதன் அடிப்புறத்தில் பச்சைத் தண்டும் இருந்தது. அவள் இடதுகையில் வைத்திருந்த மற்றொரு மலர் முற்றிலும் வேறுவிதமாயிருந்தது. அது ரத்தம்போன்ற சிவப்பு நிறமுடையது. அப்போதுதான் ஓடிவரும் பச்சை உதிரம் போலிருந்த அம்மலர் கண்ணைப் பறித்துவிடுகிறமாதிரி இருந்தது. அதனுடைய மணமும் இனிமையாய்த்தா னிருந்தது. ஆனால் அது தாங்கமுடியாத மணம்—இனிமை, கருநெருப்புப்போல் விளங்கும் அக்கானகத்தில் அது ஓர் செந்நெருப்புப்போல் விளங்கியது. அதிலிருந்து விழுந்துகொண்டிருந்த பூந்தாதுக்கள் தழல் மணிகளைப்போல் மிளிர்ந்தன. அதனுடைய தண்டு பழுக்கக் காய்ந்த இரும்பைப்போல் இருந்தது. ஜோதியின் கண்கள் அச்சிவந்த புஷ்பத்தின்மீதே பதிந்துவிட்டன. அவள் பதில்கூடச் சொல்லாமல் அதையே பார்த்துக்கொண்டிருந்தாள். "என் கண்ணே! நீ எதை எடுத்துக் கொள்கிறாய்?" என்று மீண்டும் கேட்டாள் புதியவள்.

தயக்கமின்றி ஜோதியும் கரங்களை நீட்டிச் சிவந்தபூவையே எடுத்துக்கொண்டாள். புதியவள் முகம் வாடிப்போய்விட்டது. "ஜோதி, உனக்கு நான் தேவையாயிருக்கும்போது நான் வரு

கிறேன்" என்று கூறிக்கொண்டே மரங்களிடையே புகுந்து மறைந்துவிட்டாள். 'புதியவள்' போனதுகூட ஜோதிக்குத் தெரியாது.

கையில் மலருடன் ஜோதி அங்கேயே உட்கார்ந்துவிட்டாள். அதனுடைய அளவுமீறிய சுகந்தத்தால் மருண்டுபோன கஜ்லா எழுந்து எங்கோ ஓடிப்போய்விட்டது. ஜோதியோ அதையெல்லாம் கவனித்தவளல்ல. அச்சமயம் அவளுக்குக் கண்களிருந்தனவென்றால்—அவைகள் அம்மலருக்காகத்தா னிருந்தன, மற்றெதற்கும் அல்ல; எனினும் கையில் பூவை வைத்திருந்த ஜோதியிடம் வேறு எதுவும் நெருங்கவில்லை.

அன்றைத் தினத்திலிருந்து ஜோதி தனியாகவே வசித்துவரலானாள். அவளது பழைய நண்பர்கள் யாரும் இப்போது அவளருகில் வருவதில்லை. ஆனால் ஜோதி இதைப்பற்றிக் கவலைப்பட்டாளா? இல்லவே இல்லை. அவளுடைய கருத்து, கவனம், உடல், உயிர் எல்லாம் அம்மலர் கொள்ளைகொண்டு விட்டது. நாளேற ஏற அப்பூவின் சிவப்பும் ஏறிக்கொண்டே வந்தது. வாடலின் சிறு குறிகூட அப்பூவினிடம் காணப்படவில்லை. ஜோதி அதைக் கையில் வைத்துக்கொண்டு காடுமுழுவதும் உலாவினாள்.

மழைக் காலமும் முடிந்துவிட்டது. ஒருநாள் திடீரென்று சூரியனது வெண்கதிர்கள் நீலவானத்திரையைக் கிழித்துக்கொண்டு, கருங்காட்டில் குதித்துப் பூமியைத் தழுவின. எல்லா உயிர்களும் இன்பத்திலாழ்ந்தன. அந்தச் சமயத்தில் குறுகிய பாதையொன்றின் வழியாகப் போய்க்கொண்டிருந்த ஜோதியின் மலரைக் கதிரவன் பொற்கிரணமொன்று தாக்கியது. ஆ! பொற்கிண்ணத்திலுள்ள செந்தீக்குழம்பென அம்மலர் மின்னிய காட்சியைக் கண்ட ஜோதி பரவசமடைந்து விட்டாள்.

அதுசமயம் மிகவும் லேசான இனிய கானமொன்று காற்றில் மிதந்து வந்து ஜோதியின் செவியில் புகுந்தது. அது என்ன? ஜோதியும் சப்தம் வந்த திக்கை நோக்கிச் சென்றாள். 'சலசல' வென்ற சப்தத்துடன் சிற்றாறொன்று ஓடிக்கொண்டிருந்தது. அதன் கரைமீது, ஓர் பெரும்பாறையின்மேல் சுந்தரமான வாலிபன் ஒருவன் உட்கார்ந்து பாடிக்கொண்டிருப்பதை ஜோதி கண்டாள். ஜோதி, மற்ற ஜீவன்களைப்போலன்றி, தன்னைப்போலவே அவன் இருப்பதை உணர்ந்தாள், என்றாலும் அவனிடம் ஏதோ வித்தியாசமிருக்கிறது என்பதுமட்டும் அவளுக்குத் தெரிந்தது. ஆனால் 'என்ன வித்தியாசம்' என்பதைமட்டும் உணர அவளுக்குச்

சக்தியில்லை. மான்கூட்டங்கள் அவனைச் சுற்றியிருந்துகொண்டு அவனது பாட்டில் லயித்துப்போயிருந்தன. கஜ்லா அவனது காலருகில் படுத்துக்கொண்டிருந்தது. ஜோதியின் உள்ளத்தை அவளையும் அறியாமல் எழுந்த பொறாமை உறுத்தியது.

ஜோதி அவன் அருகிற் சென்று நின்றாள். அவன் அவளைக் கண்டதும் பாட்டுக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டு அவளை உற்று நோக்கினான். பூவை ஜோதி தனது மடியில் மறைத்துவைத்திருந்த போதிலும், அதன் மணத்தால் மான்களெல்லாம் மருண்டு ஓடிப் போய்விட்டன.

"நீ யார்! நீ இங்கு எப்படி வந்தாய்?" என்று கேட்டாள் ஜோதி.

"நான் ரொம்ப நாட்களாகப் பிரயாணம் செய்து வருகிறேன். எனக்கே நான் யாரென்று தெரியாது; நான் யாரென்று எனக்கு ஒருவரும் சொல்லவுமில்லை" என்றான் அவன்.

ஜோதி ஆச்சர்யமடைந்தவளாய், "நீ ஏன் எப்போதும் பிரயாணத்திலிருக்கிறாய்?" என்று கேட்டாள்.

"? நான் ஓர் அழகான பூவைத் தேடிக்கொண்டிருக்கிறேன். இன்னும் அது கிடைக்கவில்லை. அதனால்தான்...."

"ஓஹோ! அப்படியா செய்தி! அது எனது பூவாகத்தானிருக்க வேண்டும். இதில் சந்தேகமா? இதைவிட வேறு அழகான பூ எங்கிருக்கிறது? இவன் எவ்வளவு அழகாயிருக்கிறான்? என் பூவைக் காட்டலாமா?" என்று தனக்குள்ளேயே எண்ணமிட்டு ஒரு முடிவுக்கும் வந்துவிட்டாள் ஜோதி.

"இதோ பார்! உனக்கு அதிர்ஷ்டம் வந்துவிட்டது. நீ தேடும் பூ இதுதானே? நீ 'தினந்தோறும் பாடுகிறேன்' என்று சத்தியம் செய்தால், நீ இந்தப் பூவைத் தொடுவதற்கும் பார்ப்பதற்கும் அனுமதியளிக்கிறேன்" என்று கம்பீரமான குரலில் சொன்னாள் ஜோதி.

யுவகன் ஆவலுடன் நிமிர்ந்து பார்த்தான். அவ்வளவுதான் தாமதம்! அவன் தனது கைகளால் கண்களை மூடிக்கொண்டு "போ, போ, இந்தப் பூ அல்ல அல்ல! உன்னுடைய பூவுடன் நீ எங்கேயாவது போய்விடு" என்று கத்தினான்.

ஒரு கணம் ஜோதி ஸ்தம்பித்துப் போய்விட்டாள். கலையறியாத ஒருவன் மீட்டிய வீணைக் கம்பிகளைப்போல் அவளது நரம்புகள் துடித்தன. ஆனாலும் அவன்மேல் கோபிக்க ஜோதிக்கு மனம் வரவில்லை.

"இல்லை, நீ சரியாகத் தெரிந்துகொள்ளாமல் பேசுகிறாய்? இதைவிட கோமளமான மலர் உனக்கு எங்கே கிடைக்கப் போகிறது? கண்ணைத்திறந்து நன்றாய்த்தான் பாரேன்" என்று மீண்டும் வற்புறுத்தினாள் ஜோதி.

வாலிபனது கண்கள் பூத்துப்போய்விட்டன. "போ! போ! அந்தப் பூவை எங்கேயாவது போட்டுத்தொலை" என்று கூவிக் கொண்டே வாலிபன் எழுந்து காட்டினுள் ஓடிக் கண்மறைந்து விட்டான். ஜோதியின் முகத்தில் கண்ணீர் புரண்டது. அவளும் அவன் போனவழியே ஓடினாள். காட்டில் ஓடினாள்; கானாற்று வழியே ஓடினாள்; பள்ளத்தாக்கிலும், பாறைகள்மீதும் ஓடினாள். அதற்குள் இரவும் தனது பயங்கரமான இருட்போர்வையுடன் தோன்றியது. இருட்டில் வழிதெரியாமல் மோதுண்டாள்; விழுந் தாள். முட்கள் அவளுடைய பாதங்களைக் குத்தின. ஆனால் இளைஞனது முகவசீகரத்தால் தூண்டப்பெற்ற ஜோதி அவன் சென்ற வழியே இன்னும் ஓடிக்கொண்டிருந்தாள்.

வெள்ளிவானத்தில் சூரியன் தோன்றிவிட்டான். ஓடிக் கொண்டேயிருந்த ஜோதிக்கு அந்த இளைஞன் ஓர் பாறை யின் மீது படுத்துறங்கும் காட்சி தென்பட்டது. தட்டென்று நின்று, அவன் அருகிற் சென்று அதனை நோக்கினாள். அவனது முகத்தில் துயரத்திரை விழுந்திருந்ததைக் கண்ட ஜோதி துடித்தாள்.

அவளது காலடிச் சப்தத்தால் அவன் கண்விழித்துக்கொண் டான். 'பூவைக் கண்டதும் ஓடிப்போய்விடுவானே' என்று ஜோதி அஞ்சினாள். ஆனால் அவன் இம்முறை அப்படியொன்றும் செய்ய வில்லை. இது அவளுக்கு ஆச்சர்யமாயிருந்தது. அப்படியானால் இப்போது அவனுக்கு அம்மலர்மேலிருந்த அர்த்தமில்லா பயம் ஒழிந்துவிட்டதா? இல்லை, விஷயம் வேறு. சென்ற இரவு முழு வதும் ஜோதி பூவைப்பற்றி மறந்தேவிட்டாள்.

இப்போது அதைப் பார்த்தாள். அடடா! என்னமாயம்? இந்தச் சொற்ப நேரத்திற்குள் பூ எவ்வளவு வாடிக் கருகிப்போய் விட்டது! இதழ்கள் கருகி உதிர்ந்துகொண்டே வந்தன. அதனு டைய மணம் மறைந்து விட்டது. 'தனது கண்ணீரால் நனைக்கப் பட்டதினாலேயே அப்பூ இப்படியானது' என்பதை ஜோதி அறியாள். அவள் மலரைத் தரையில் வீசி யெறிந்தாள். இப்போது அவள் அதற்காகக் கவலைப்படவில்லை; காரணம் அவளுக்கு வாலிபன் அகப்பட்டுவிட்டான்.

அவன் இன்னும் அவளுடன் பேசவில்லை; அவனது கண்கள் திறந்து கொண்டுதானிருந்தன. ஆனால் யோகபுருடன் மாதிரி அவன் ஏதோ கனவுகண்டுகொண்டிருந்தான். ஜோதிக்கும் என்ன பேசுவதென்று தெரியவில்லை. பேச்சுமூச்சில்லாமல் ஜோதி அவன் முன் நிற்கலானாள். துக்கம் அவள் தொண்டையை அடைத்தது.

வாலிபன் பெருமூச்சுவிட்டுக்கொண்டே அங்கிருந்து எழுந்து அப்பாற் செல்லக் காலடியெடுத்தான். இதைக்கண்டு ஜோதிக்குப் பொறுக்கமுடியாமற் போய்விட்டது. ஜோதி அவன் இடையில் குறுக்கே விழுந்து, அவனைத் தடுத்து, "நீ எங்கேபோகிறாய்? நான்தான் அந்தப் பூவை எறிந்துவிட்டேனே ?" என்று பரிதாபமும் ஆத்திரமும் கலந்த தோரணையில் கேட்டாள்.

"நான் இங்கிருப்பதால் என்ன லாபம்? இன்னும் என் பூவை நான் கண்டுபிடிக்கவேண்டுமே?"

"அது என்ன பூ? எப்படியிருக்கும்? அதைத்தான் சொல்லேன். உனக்காக நான் அதைக் கண்டுபிடிக்கிறேன். தயவு செய்து நீமட்டும் போகக்கூடாது."

"அதுதானே? அது ஓர் பெரிய வெள்ளைப் பூ. அதனது ஹிருதயம் ரோஜாப்போல் சிவந்திருக்கும். அதனுடைய மெல்லிய தண்டு பச்சையாயிருக்கும்......."

"ஆ! அந்தப் பூ! 'புதியவள்' வைத்திருந்தாள். ஐயோ; இப்போது என்ன செய்வேன்?" என்று கூறியவண்ணமே ஜோதி மயக்கம்போட்டுக் கீழே விழுந்துவிட்டாள். வாலிபனோ ஒன்றையும் கவனியாதவனாய்க் காட்டினுள் புகுந்து எங்கோ போய் விட்டான்.

எவ்வளவு நாழி ஜோதி இந்த நிலையில் இருந்தாளென்பது அவளுக்குத் தெரியவராது. பகலும் மறைந்துவிட்டது. முற்றிய மாலையும் வந்தது; அதன்கூடவே முழுமதியமும் தோன்றியது.

"ஜோதி! இதோ பார், நான் வந்துவிட்டேன்" என்றது ஓர் குரல்.

அக்குரலைக் கேட்டாளோ இல்லையோ ஜோதி சடக்கென்று எழுந்து நின்றாள். அவள் முன்பு அந்தப் 'புதியவள்' வெறுங் கையுடன் நின்றுகொண்டிருந்தாள்.

"நீ என் அந்த வெள்ளைப் பூவை எடுத்துவரவில்லை?" என்று ஆத்திரத்துடன் கேட்டாள் ஜோதி.

"அந்தப் பூ இப்போது என்னிடமில்லையே? நீதானே அது வேண்டாமென்று சொன்னாய்? அதனால் நான் வேறொரு பெண்ணுக்குக் கொடுத்துவிட்டேன்."

"உம்....அப்புறம்....ஐயையோ! நான் என்ன செய்வது? எனக்கு அது இப்போது வேண்டுமே? கட்டாயம் வேண்டும், வேண்டும்" என்று படபடத்தாள் ஜோதி.

"வேண்டுமானால் நீதான் அதைச் சிருஷ்டித்துக்கொள்ள வேண்டும்; வேறு வழியில்லை."

"எப்படி! எப்படி?....சீக்கிரம் சொல்....எப்படிச்செய்வது? எனக்கு வழி தெரியவில்லையே?"

"சொல்லுகிறேன்....உன்னால் அது முடியுமா? தைரியமிருக்கிறதா? அது ரொம்பவும் கஷ்டம்."

"எவ்வளவு கஷ்டமானாலென்ன! நிச்சயமாய்ச் செய்து முடிக்கிறேன்"

'புதியவள்' அப்போது ஜோதியின் காதில் 'கிசுகிசு' வென்று ஏதோ ஓதினாள். ஜோதியின் முகம் அப்போது சவம்போல் வெளுத்தது. அதரங்கள் சில்லிட்டு ஆடின; ஆனாலும் "நான் செய்கிறேன்" என்ற வார்த்தைகள் அவள் ஹிருதயத்தை மீறிக்கொண்டு வெளிவந்தன.

அப்படியானால் "சரி என்னுடன் வா" என்று 'புதியவள்' கூறி, ஜோதியை அழைத்துக்கொண்டு காட்டினுள் புகுந்தாள். ஓர் ஏரிகரையண்டை இருவரும் வந்து சேர்ந்தனர்.

"ஜோதி! நேரம் வந்துவிட்டது. உன்னால் அது முடியுமென்று நினைக்கிறாயா?"

ஜோதி குனிந்தவண்ணமாய் அவள் முகத்தை நீரில் பார்த்தாள். அவள் உடல் நடுங்கியது. "முடியும், நன்றாக முடியும்; நான் செய்கிறேன்" என்று கூறிக்கொண்டே அவள் தன் கண்களை மூடிக்கொண்டாள். அவள் முன்பு அந்த வாலிபனின் முகம் தோன்றுவது போலிருந்தது.

"விழிகளைத் திறந்து தண்ணீரில் நன்றாகப் பார்" என்று கட்டளையிட்டாள் 'புதியவள்'.

ஜோதி அவளது விழிகளைத் திறந்தாள். சந்திர வெளிச்சம் உருகியோடும் வெள்ளியைப்போல் எங்கும் பெருக்கெடுத்து ஓடிக்கொண்டிருந்தது. ஏரியின் அடியிலிருந்து அவள் முகம் அவளை நோக்கிப் புன்முறுவல் செய்தது. ஆ! அதோ? ஓர் கருமேகம்

அப்போது மதியப்பெண்ணுக்கு 'பர்தா' போட்டுவிட்டது. அதே நிமிஷத்தில் ஜோதியும் ஸ்மரணையற்றாள்.

கங்குல் கழிந்து காலையும் தோன்றிவிட்டது. அவள் அப்போதும் ஏரியினோரத்தில் விழுந்துகிடந்தாள்.

ஆ! என்ன அற்புதமான காட்சி! ஓர் பெரிய வெள்ளைப் பூ, இளம்பச்சைத் தண்டுடன், நீர்ப்பரப்பின்மீது கம்பீரமாக நின்றுகொண்டு, செங்கதிர்ச் செல்வன் அழகிலும் 'குளுகுளு'க் காற்றின் லாஹிரி வெறியிலும் மனதைப் பறிகொடுத்துவிட்டுத் தலையாட்டிக்கொண்டிருந்தது. உஷையின் கன்னக் குமிழின் சிவப்பைப்போலிருந்தது அப்பூவின் ஹிருதயம்.

அப்பூ எப்போது, எங்கே தோன்றியது தெரியுமா? ஜோதியினது அழகிய முகம் எங்கு எப்போது பிரதிபலித்ததோ அங்கு அப்போதுதான் தோன்றியது. ஜோதியின் ஹிருதயத்தில் சேமித்து வைக்கப்பட்டிருந்த அந்தப் பிம்பத்தை, பளிங்குபோன்ற ஜலம் அப்படியே ஆகர்ஷித்துக்கொண்டது. ஜோதியின் ஹிருதயத்தில் பதிந்துவிட்டிருந்த உருவமே இப்போது நீரில் ஓர் மலராக மலர்ந்துவிட்டது.

ஜோதிக்கு ஸ்மரணை வந்துவிட்டது. மெதுவாக எழுந்து நீரில் தன் முகத்தைப் பார்த்தாள். அவள் முகத்திலிருந்த களை, அழகு, யௌவனம் எல்லாம் போய்விட்டிருந்தது. அவள் மஹா குரூபியாகத் தோன்றினாள். அவள் அழகெல்லாம் மலரைச் சிருஷ்டிக்கப்போய்விட்டது. அங்கிருந்து எழுந்து ஓர் மரத்தடிக்குச் சென்றதும் ஜோதி களைப்பினால் மீண்டும் விழுந்துவிட்டாள்.

எதிர்பாராத இந்த சமயத்தில் வாலிபன் அங்குத் தோன்றினான். மலர் அவன் கண்களில் பட்டது, கண்டான். களித்தான். மறுகணம் நீரில் குதித்து மலரைப் பறித்துக்கொண்டு கரையேறினான். வெறிப்பாட்டுக்கள் அவன் உள்ளத்தினின்றும் எழுந்தன. பூவை மார்பில் அணைத்தவாறே அங்கிருந்து நகர்ந்தான். ஜோதி எல்லாவற்றையும்தான் பார்த்துக்கொண்டிருக்கிறாள். ஆனால் வாய்திறக்கவில்லை. வாலிபனும் போயேபோய்விட்டான்.

ஆனால் அவன் அதைப் பறித்தானோ இல்லையோ, அதே மாதிரி மற்றொரு மலர் அதே தண்டில் தோன்றியது. அம்மலர்களுக்கு அழிவில்லை—முடிவுகிடையாது; காலை வந்ததும் அவைகள் மலரும்; ஒளி மங்கியதும் அவைகளின் இதழ்களும் மூடிக்கொள்ளும். ஜோதியில்லாமல் அவைகள் வாய்திறந்து நகைக்க முடியாது. ஏனெனில் ஜோதிதானே அவைகளை ஸ்ருஷ்டி செய்தாள்?

அச்சமயம், "ஜோதி! என் அன்பே! உனக்குத் திருப்தி தானா?" என்றது ஓர் குரல்.

ஜோதி திரும்பிப் பார்த்தாள்; அங்கு ஒருவரும் இல்லை. ஆனாலும் அவளுக்கு அக்குரல் யாருடையதென்று நன்றாகத் தெரியும். "ஆ! ஹா! திருப்திதான்" என்று பதில் சொன்னாள். ஜோதி. அச்சொற்களில் சாந்தமும், வெற்றியும், உறுதியும் கலந்திருந்தன.

"உன் உயிரிலும் சிறந்த அழகைத் தியாகம் செய்து பெற்ற சொத்தை மற்றொருவன் உனக்கு வந்தனம்கூட அளிக்காமல் எடுத்துச் செல்கிறானே? உனக்கு ஆத்திரமாயில்லையா?" என்றது அவ்வொலி.

அதற்கு அழகு குலைந்த ஜோதி சொன்னதாவது:—

"நெஞ்சிலுள்ள காதல் பெரிதெனக்கு, கமலம் பெரிதில்லை."

---

## இந்திய கிராமங்களின் க்ஷீணதசை

கிராம வாசிகள் வியாதிகளுக்கும் மரணங்களுக்கும் ஆளாகிவருகின்றனர். ஒரு கிராமவாசி தன்னைப் பொறுத்தவரையில் சுத்தமாகவே இருக்கிறான்; அடிக்கடி குளித்து வருகிறான். இருந்தபோதிலும் அவன் குப்பை கூளங்களுக்கு இடையில் வசித்து வருகிறான். அவன் தன் வீட்டைச் சுத்தமாகவே வைத்திருக்கிறான் என்றாலும் வீட்டின் சுற்றுப்புறங்களில் குப்பை குவியலும் எருக் குழிகளும் பெருக இடம் கொடுத்து வருகிறான். அதிர்ஷ்டவசமாக, இந்நாட்டில் சூரியன் தலைக்கு நேராக வந்து நோய்ப் புழுக்களைக் கோடிக்கணக்கில் கொன்று அவனுக்கு உதவிசெய்கிறது; இந்த உதவியும் நம் சகோதரனுக்கு இல்லாமற்போமானால் மரணவிகிதம் இன்னும் அதிகமாகிவிடும்..........பலவிதமான தொத்துநோய்களால் கிராமத்தார்கள் க்ஷீணித்து வருகின்றனர். வறுமைப்பேய் அவர்கள் வீடுகளில் ஸ்திரமாகக் குடிகொண்டிருக்கின்றன. போதிய உணவில்லாமைக்கும், ஜலாதாரங்களும் குடியிருப்புக்களும் சுகாதாரமற்றவைகளாக இருப்பதற்கும் கிராமவாசிகளின் வறுமையும் அறியாமையுமே காரணங்களாகும். இவ்விரண்டுடன் மூட நம்பிக்கைகளும் பாலிய விவாகங்களும் சேர்ந்துகொண்டு கிராமங்களில் நோய்களையும் மரணங்களையும் இன்னும் பெருகச் செய்கின்றன. மருத்துவ உதவி கிராமங்களில் பூஜ்யமாக இருக்கிறது. மருத்துவ உதவியோடு கிராம புனருத்தாரணத்திற்குரிய திட்டங்கள் நாட்டுப்புறங்களில் புகுத்தப்படுமானால் பல உயிர்கள் காப்பாற்றப் பெறும். —மைசூர் எகனமிக் ஜர்னல்.

# ராத்ஸ்சைல்டுகள்

ஸி. வி. சுப்பிரமணியன், பி. ஏ., (ஆனர்ஸ்)

---

[சென்ற மாதம் ஹெட்டிக்ரீன் என்ற பெண்மணியின் சரித்திரத்தினால் செல்வத்தின் மதிப்பு அதனை ஈட்டும் முயற்சிகளிலேனும் அதன் தொகையிலேனும் இல்லை யென்பது புலனாகும். பாம்பரையாகச் செல்வம் படைத்து வரும் பல குடும்பங்கள் எல்லா நாட்டிலும் இருக்கின்றன. ஆயினும் செல்வத்தால் உண்டாகும் பயனை அவர்கள் எவ்வளவு தூரம் அறிந்து அச்செல்வத்தால் புகழையும் மக்களின் நன்றியறிவையும் பெற்றார்கள் என்பதை ஆராய்ந்து பார்க்கும்போது அவர்களுடைய பெருமையும் சிறுமையும் விளங்கும். செல்வப் பெருக்கினால் முடி மன்னர்களையும் தம் வசத்துக்குள் அடக்கி அவர்களாற் பெரும் பயனும் கௌரவமும் அடைய முயன்றவர்கள் கூடச் செல்வத்தின பயனைப் பெற்றவர்களாகார். சரித்திரங்களில் வழங்கும் செல்வக் குடும்பங்களுட் சிறந்த ராத்ஸ்சைல்டுகளைப் பற்றிய வரலாறு இங்கே கூறப்பட்டுள்ளது. ராத்ஸ்சைல்டுகள் செல்வத்தாற் பெற்ற பயன் எத்தகையதென்பதை நேயர்கள் அறிந்து கொள்ளலாம்.]

ராத்ஸ்சைல்டுகள் 'பிராங் பர்டில்' (*Frankfort*) கடை வைத்து ஜீவித்துவந்த ஒரு யூதகுடும்பத்தைச் சேர்ந்தவர்கள். அக்குடும்பம் கௌரவமானதாயினும் அவ்வளவு பணக்காரக் குடும்பம் அல்ல. பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வசித்த மேயர் ஆன்ஸ்லெம் ராத்ஸ்சைல்டு (*Meyer Anselm Rothschild*) என்பவர் அப்பொழுது வசித்த 'ஹானவ் நூஸன் பர்க்' (*Count Hanau Nezenburg*) என்ற பிரபுவிற்கு நாணயம், நாணய மாற்றம் முதலிய விஷயங்களில் மிகவும் உதவி புரிந்திருக்கிறார். அந்தப் பிரபு மனிதர்களை அந்நிய நாடுகளுக்கு விற்றுப் பணம் சம்பாதித்து வந்தார். அவ்விஷயத்திலும் ராத்ஸ்சைல்டு அப்பிரபுவின் நண்பராகவும் கூட்டாளியாகவும் இருந்தார். பக்கலிலிருந்த 'பேடன்' (*Baden*), 'டென்மார்க்' (*Denmark*) முதலிய சிறு ராஜ்யங்களுக்குக் கடன் கொடுத்து உதவி அதிக லாபத்தைச் சம்பாதித்தார். 1806-ம் வருஷம், அப்பிரபு நெப்போலிய

னுக்கு முன் நிற்கமாட்டாமல் முதுகுகாட்டி ஓடும்போது, ராத்ஸ்சைல்டு அதுதான் சமயமென்றறிந்து அவருடைய செல்வத்தில் பெரும்பாகத்தைத் தந்திரமாக அபகரித்துக் கொண்டார்.

ஆன்ஸ்லெம் ராத்ஸ்சைல்டு, 1812-ம் வருஷம் இறக்கும்போது தம் சொத்தைத் தம் குழந்தைகளுக்கும், தம் மனைவிக்கும் வைத்துவிட்டுப் போனர்; தம் வியாபாரத்தையும் தம் பிள்ளைகளுக்கே விற்றுவிட்டார்.

தகப்பனர் காலத்திற்குப் பிறகு அவர் பிள்ளைகளெல்லாம் ஐரோப்பாவின் பல பாகங்களிலும் பரவித் தங்கள் வியாபாரத்தை விருத்தி செய்து பணக்காரர்களாகத் தலைப்பட்டனர். அவர்களில் மிக்க அறிவாளியான 'நாதன் மேயர் ராத்ஸ்சைல்டு' இங்கிலாந்திலும், ஜேம்ஸ் என்பவர் பாரீஸிலும் சென்று குடியேறினர். அவர்களுடைய குடும்ப பாந்தவ்யமும், பல நாடுகளுக்கும் பயமில்லாது சென்று உழைக்கும் தைரியமும் அவர்களின் முன்னேற்றத்திற்கு அதிக அனுகூலமாயிருந்தன. ஐரோப்பாவில் மிக்கபுரட்சி உண்டான காலங்களிலும் அக்குடும்பத்திலுள்ள ஒருவித ஒற்றுமையால், மிக்க நம்பிக்கையும் நாணயமுமாகவே அவர்கள் தங்கள் காரியங்களை நடத்தினர். சமாசாரங்கள் சேகரம் செய்வதிலும் அவைகளை ஒருவருக்கொருவர் உபயோகப்படுத்திக் கொள்வதிலும் அவர்களைப்போல் திறமைவாய்ந்தவர்கள் ஒருவருமே இருக்கவில்லை.

அக்குடும்பத்தினர் மிக்க இரகசியத்துடனும் அன்னியோன்னியத்துடனும் அதிகக் கடுமையெனக் கருதப்பட்ட காரியங்களையும் செய்து வந்ததால், அக்காலத்து அரசாங்கங்கள் அவர்களை நம்பத்தகாத காரியங்களிலும் நம்பலாயின. தங்களுக்கு யாதொரு கெடுதலும் இல்லாதவரையில் ஒவ்வொரு ராத்ஸ்சைல்டும் அவரவர் தங்கியிருந்த நாட்டின் பிரஜைகளாகவே ஆகி அவ்விராஜ்யங்களுக்கே தம் முழுமனதுடன் உழைக்கலாயினர். அவர்கள் எக்காலத்திலும் ஒருவருக்கொருவர் முரண்பட்டு நடக்கவில்லை. கால சக்கரம் மாறுபட்டபொழுதும் அவர்கள் ஒற்றுமை சிறிதும் மாறவில்லை. பகைமை பாராட்டிய இரண்டு நாடுகளில் இருந்தும் 'நாதனும் ஜேம்சும்' வெல்லிங்டனுக்கு (*Duke of Wellington*) பணங் கொடுத்து உதவியதே இதற்குத் திருஷ்டாந்தம். நெப்போலியனின் உத்தரவைக் கொண்டே ஜேம்ஸ் இங்கிலாந்திலிருந்து தங்கமும் வெள்ளியும் திருட்டுத்தனமாக ஏற்றுமதி இறக்குமதி செய்து அளவற்ற பணம் சம்பாதித்தது வியக்கத்தக்கதல்லவா! நாதன், பிரான்ஸ் இங்கிலாந்து ஸ்பெயின் முதலிய நாடுகளின் அரசாங்

கங்களுக்கு முடையான காலங்களில் தங்கம் வெள்ளிகளை அதிக விலைக்கு விற்று அதிக ஊதியம் அடைந்தார். அக்காலத்து ஆங்கில பொக்கிஷ மந்திரியும் நாதனின் உதவியைக் கொண்டே ஆஸ்திரியா முதலிய நாடுகளுக்கு யுத்ததளவாடங்களையும், பணத்தையும் செலுத்தினர். குழப்பம் மிக்க அக்காலத்தில் பெருந்தொகை களைப் பாங்குகளின் மூலமாய் அனுப்புவது கடினமாகவும் நம்பிக்கையற்றதாகவும் இருந்தது. ராத்ஸ்சைல்டுகளே அவ்வளவு பெருந்தொகைகளையும் ஒரு நாட்டிலிருந்து வேறொரு நாட்டிற்கு அனுப்ப முன்வந்தனர். இச்செய்கையும் அக்குடும்பத்தினரை முன்னுக்குக் கொண்டுவரக் காரண பூதமாயிருந்தது. ஆஸ்திரியா இவர்கள்பால் நம்பிக்கை கொள்ளாவிடினும் இவர்கள் உதவியை மெடர்னிச் முற்றும் மறுத்துவிட்ட போதிலும் இவர்கள் நாணய மும், கௌரவமும் நாளாக ஆக அதிகரிக்கலாயின. நாதனுக் கிருந்த கௌரவமும் மதிப்பும் சொல்லத்தரமன்று. ஆங்கிலேயர் வாடர்லூவில் ஜயமடைந்தது அரசாங்கத்திற்குத் தெரிவதற்கு முதல்நாளே நாதனுக்குத்தெரியும். அந்த ஜயபேரிகையை அடிப் படையாகக் கொண்டு, 'ஸ்டாக் எக்சேஞ்சில்' (*Stock Exchange*) அதிகலாபம் சம்பாதித்தார்.

பாரீஸ் உடன்படிக்கைக்கப்புறம் (1815) உண்டான குழப்பத் தில் நாதன் ஒருவரே, பிரான்ஸ் மற்ற நாடுகளுக்குச் செலுத்த வேண்டிய கப்பத்தை நம்பிக்கையுடன் மற்றநாடுகளுக்கு அனுப்ப முடிந்தது. பிரான்ஸிற்கும் ஒரு சமயம் இரண்டுகோடி பவுன் கடனுகக் கொடுத்தார். இங்கிலாந்திலும் ஆஸ்திரியாவிலும் நாதனுக்குப் புகழ்வரக் காரணம் அவருடைய நாணயமே. அவர் லாப நஷ்டங்களைக் கூட ஒரு பொருட்டாகப் பாவிக்கவில்லை. ஆஸ்திரியச் சக்கரவர்த்தியும் இதனுண்மையை ஒருவாறு அறிந்து, நாதனிடமிருந்து கடனுக ஒரு தொகையையும் பெற்றுக் கொண் டார். அச்சக்கரவர்த்தியும் ராத்ஸ்சைல்டு வம்ஸத்தோர்க்குப் பிருதுகளும், சன்னதுகளும் பலவழங்கினர். இம்மட்டோ டல்லாமல் சாலமன் ராத்ஸ்சைல்டிற்கு ஆஸ்திரியாவிலேயே தங்க வும், வியன்னவிலேயே ஒரு கோடி பவுனுக்குக் 'கடன் சீட்டு' ஒன்று ஏற்படுத்தவும் அனுமதி கிடைத்தது. ருஷிய அரசாங் கத்தாரும் அவனிடம் 60 லக்ஷம் பவுன் கடன் வாங்கினர். மேயர் ஆன்ஸ்லெம் *II* என்னும் பெரியவரும் பிரஷ்யாவிற்கு அநேக லக்ஷம் பவுன்கள் கடன் கொடுக்க முன்வந்தார். மெடர்னிச்சின் உதவியால் 'கார்ல்ராத்ஸ்சைல்டு' இத்தாலியிலுள்ள நேபிள் ஸூக்குச் சென்றபோது ராத்ஸ்சைல்டுகளின் செல்வாக்கு

ஐரோப்பா முழுதும் பரவிற்று. இத்தாலியும் அவர்கள் ஐக்ய மாயிற்று. முதலில் ஆஸ்திரியாவின் ஏஜண்டாயிருந்தபோதிலும் பின்னல் நேபிள்ஸ் ஜனங்களின் சார்பாகவே அதிக பணத்தைக் கடனாக அளித்ததோடு, இங்கிலாந்தின் உதவியால் அவ்விராஜ்யத்தின் நாணயத்தையும் செல்வாக்கையும் சீர்திருத்தினர். தங்கள் மனிதன் ஒருவனையே பொக்கிஷ மந்திரியாகவும் ஏற்படுத்தினர். கத்தோலிக்க மதத்தலைவரான போப்பிற்கும் பாங்கராக முன்வந்த போதுதான் அக்குடும்பத்தாரின் செல்வாக்கு மஹோன்னத நிலையை அடைந்தது.

இங்கே இவர்கள் சிறப்புற்று ஓங்குகையில் பிரான்ஸில் ஜேம்ஸ் ஓர் பாங்கை ஸ்தாபித்து அதன் மூலமாக அந்நாட்டின் அரசருக்கே அடுத்தபடியான பணக்காரரானர். மெடர்னிச் கூறிய பிரகாரம் 1815-ம் வருஷத்திலிருந்து ஒரு கால் நூற்றாண்டு அவர்களே பண உலகிற்கு அரசர்களாக விளங்கினர்.

வருடங்கள் பல கழியினும் அக்குடும்பத்தினர் தங்கள் கொள்கைகளைச் சிறிதும் கைவிட வில்லை. மூன்று, நான்காவது தலைமுறைகளில் அக்குடும்பத்தில் ஒருவரும் தலைசிறந்து விளங்க வில்லை. ஐரோப்பாவில் உண்டான கைத்தொழில் விருத்தியிலும் அவர்கள் கலந்துகொள்ளவில்லை. சாலமன், வியன்னவிலிருந்து கொண்டு ஆஸ்திரியன் ரயில்வேக்களுக்கு வேண்டிய பண உதவி புரிந்தனர். ருஷியாவிலுள்ள மண்ணெண்ணெய்ச் சுரங்கங்களையும் அவர்களே வாங்கினர்கள். ஆனல் 1911-ல் அவற்றை விற்று விட்டனர். இவைகளே ராத்ஸ்சைல்டு வம்சத்தார் ஜன சமூகத்திற்குச் செய்த நன்மைகள்.

ஒவ்வொரு ராஜ்ஜியத்திலும் அவர்கள் பிரபுப்பட்டம் அநேகம் வகித்தனர். அன்றி அவர்கள் எவ்வாறு அரசர்களுடன் ஸல்லாபமாய் இருந்திருக்க முடியும்? பணத்தில் முழுகி எழுந்த அவர்களுக்குப் பணம் சேகரிக்கும் வழிகள்தான் ஏராளமாய்த் தெரிந்திருந்தனவே ஒழிய அவர்கள் பணத்தை நல் வழிகளில் மனிதருக்குப் பயன்படுமாறு செலவிடுதலில் தங்கள் புத்தியைச் செலுத்தவில்லை. அக்காலத்து மனிதரின் மனவியல்பும் அத்தன்மையதே.

பிற்காலத்தில் ராத்ஸ்சைல்டுகளின் செல்வாக்குக் குறைந்தொழிந்ததற்குக் காரணம் அவர்கள் வீழ்ச்சியல்ல; அவர்கள் நாணயம் சிறிதும் மாறுபாடு அடையவில்லை. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் உண்டான மாறுதல்களே அவர்கள் செல்வாக்குக் குறைந்ததற்குக் காரணம். பாங்குகள் அதிகமாக ஏற்படலாயின. நம்பிக்கையும் உத்தரவாதமுமுள்ள 'கூட்டுறவு நிதிகள்' உண்டான பிறகு அவர்கள் உதவி எதற்காக? புதிதாகக்

கண்டு பிடிக்கப்பட்ட தங்கக்குவியல்களின் முன் அவர்கள் செல்வம் எம்மாத்திரம்! அக்குடும்பத்தாரும் ஒரு காலத்தில் மெடர்னிச்சுக்குப் பண உதவி செய்ய மறுத்து, பெல்ஜியத்தின்மேல் அவர் ஆரம்பிக்க விருந்த யுத்தத்தை நிறுத்தினர்களென்றால், அவர்களுக்கிருந்த பெருமைதான் என்னே!

எல்லாவற்றிலும் மேன்மையுற்ற குணம் ஒன்று அவர்களிடம் பிறந்ததுமுதல் குடிகொண்டிருந்தது. அது அக்குடும்பத்தினரின் மதாபிமானமே. ஜாதி விசுவாஸம் என்றும் அவர்களைவிட்டு நீங்கவில்லை. அவர்கள் யூதர்களல்லவா?

அவர்கள் உலகத்திற்கு என்ன நன்மையைச் செய்தார்கள்? சுயநலமும் பெருமையையுந்தானே பெரிதாகக் கருதினர்? தம் மதத்தின் பேரிலும், மதத்தினர் பேரிலும் அபிமானமுள்ளவராயிருந்தனரே ஒழியப் பிறர்க்கு என்ன உதவி புரிந்தனர்? செய்த காரியங்களையும் முறைப்படி சாஸ்த்ரீயமாகச் செய்தனரல்லர். 1919-இல் உலகயுத்தம் முடிந்து குழப்பம் நிறைந்திருந்தபோது உலகத்திற்கு உதவிசெய்ய ஒருவரும் முன்வந்தாரில்லை. அக் குடும்பத்தில் எவராவது அவ்வாறு முன்வந்திருப்பின் உலகத்தின் பொருளாதாரநிலை தற்போது அடைந்திருக்கும் இக்கதி யடைய நியாயமில்லை.

குற்றங்கள் பல அவர்களிடம் இருந்தனவெனினும் அவர்கள் என்றும் நாணயம் தவறி நடந்தவரல்லர். அக்குடும்பத்தினர் உண்மையைக் கடைப்பிடித்து நம்பிக்கையுடன் நடந்துகொண்டது மிகவும் போற்றத்தக்கதே. குழப்பமும், சூதும், வாதும் நிறைந்திருந்த உலகத்தில் அவர்கள் உண்மையையும், உத்தரவாதத்தையும் தங்கள் ஊன்று கோலாகக் கொண்டது அதிசயமே. மோசம் நிறைந்த உலகிற்கு ஒரு தீபம் போல் பிரகாசித்தனர். பண உலகிற்கு இன்றும் ஓர் நன்னெறியைப் போதிக்கின்றனர். சத்தியமே செல்வம், நம்பிக்கையே நாணயம், நம்பிக்கையற்ற உலகம் நாசம் அடையும் என்பதையும் நன்கு விளக்கிக்காட்டுகின்றனர்.

---

## 270 ரூபாய்க்கு மோட்டார்

ஜப்பானியர் 700 ரூபாய்க்கு மோட்டார் கிடைக்கும்படி செய்கின்றனர். ஜர்மனி 500 பவுனுக்கு விற்கும்படியான மோட்டார்களை உண்டுபண்ண முயன்று வருகின்றது. ஆனால் ஜேக்கோஸ்லோவேகியா வென்னும் ஒரு சிறிய நாட்டினர் மிகவும் மலிவாக மோட்டார் விற்பனைசெய்ய முயன்றிருக்கின்றனர். 270 ரூபாய் அடங்கும்படியாக ஒரு மோட்டார் செய்யவேண்டுமென்று கருதி வலிவான கருவிகளையும் பொருள்களையும் அறிஞர்கள் அந்நாட்டில் ஆராய்ந்து வருகின்றார்களாம்.

# பாலர் வகுப்புப் பாஷைப் பாடமும் விளையாட்டுப் பயிற்சிகளும்

எஸ். ஜகந்நாதன்.

---

(182-ஆம் பக்கத் தொடர்ச்சி)

## 18. சிறுகதைப் புத்தகங்கள்

ஆரம்ப வகுப்புக் கடைசியிலே பாலர்கள் படிக்கத்தக்க சிறு கதைப் புத்தகங்கள் இருப்பின் விசேஷமாகும். தற்காலம் சொல்லப் படுகிற தேக்கமும் குறைவாகும். நான் கையெழுத்திலே சில சிறு கதைப் புத்தகங்கள் தயார்செய்து ஒரு பொருட்காட்சியில் வைத்திருந்தபொழுது பல சிறுவர்கள் அங்கேகூடி ஒவ்வொன்றாக எடுத்துப் படித்ததைக் கவனித்தேன். தற்சமயம் "கலைமகள்" பத்திரிகையில் மாதம் மாதம் ஒரு சிறுகதை படங்களுடன்கூடிப் பெரிய எழுத்தில் அச்சிடப்பட்டு வருகிறது. இக்கதைகள் சிலவற்றைக் குழந்தைகள் மத்தியானம் கூடுமிடத்தில் வைக்க, குழந்தைகள் ஆளுக்கு ஒன்றாக எடுத்துப் படித்து வருகிறதை நான் பார்த்திருக்கிறேன். சுலபமாக வார்த்தைகளும் சிறுசிறு வாக்கியங்களும் கூடின கதையாக இருத்தல் அவசியமாகும்.

## 19. சிறுவர்களுக்கேற்ற புத்தகாலயம்

மேலே சொல்லப்பட்டவை போலப் பற்பல உபகரணங்கள், தொங்கவிடும் படங்கள், படப் புத்தகங்கள், வாசிக்கக்கூடிய அட்டைகள், விளம்பரங்கள் அடங்கிய காகிதத்துண்டுகள் இவைகளையும் சிறுசிறு கதைப் புத்தகங்களையும் சேர்த்து ஒரு புத்தகாலயம் ஏற்படுத்துவது மிகச் சிறந்ததாகும். படிப்பில்லாத பெரியவர்களுக்காக ஏற்பட்டு நடந்துவரும் இரவுப் பாடசாலைகளில் 16, 17, 18-வயதானவர்கள் இளம்பிராயத்தில் 1, 2, 3-வது வகுப்புக்களில் படித்துவிட்டுத் தற்சமயம் எழுத்துக்களை மறந்துவிட்டார்கள் என்பது பிரத்தியக்ஷமாகத் தெரியவருகிறது. அக்காலத்தில் சுலபமான கதைப் புத்தகங்கள், விளையாட்டாகப் படிக்கக்கூடிய உபகரணங்கள், அட்டைகள் இவற்றைக் கொடுத்துப் படிக்கப் பழக்கம் கொடுத்திருப்பின் எல்லாம் மறந்துபோய்த் தவிக்கும்

கேவலமான நிலைமை வந்திருக்காது. இனிமேலாவது ஆரம்பப் பள்ளிக்கூடங்களிலேயே புத்தகாலயம் ஏற்படுத்தவும், சாயங் காலம், விடுமுறை நாட்கள், கோடைக்கால மாதங்கள் இக் காலங்களில் நன்றாய்ப் பொழுதுபோக்கத் தக்கவாறு புத்தகாலயங் களும், குழந்தைகளின் சங்கங்களும் அமைப்பது போற்றத்தக்கதே யாகும்.

## முக்கியக் குறிப்புகள்:

1. நிழலுள்ள இடமும் சரியான பாடசாலை ஆகும்: இவ்வளவு உபகரணங்களை உபயோகித்துப் பாடம் கற்றுக்கொடுக்கப் பள்ளிக்கூடத்தில் போதுமான இடமிராவிடின் குழந்தைகளை நிழலுள்ள மரத்தடியில் அழைத்துச் சென்று அங்கே உப கரணங்களை உபயோகித்துப் பாடங்களை நடத்தலாம். இங்கே காட்டப்பட்ட உபகரணங்கள் "தமிழ்அன்பர் மகாநாட்டுச் சிறுவர் பகுதி"ப் பொருட்காட்சிசாலையில் வைக்கப்பட்டிருந்தன. முக்கியமாக உபாத்தியாயர்கள் இவற்றைக் கையாள வேண்டு மென்று இங்கே அவைகளைக் குறித்துப் படமூலமாக விளக்கி எழுத முன்வந்தேன். இவ்வித உபகரணங்களைக் கூடியவரையில் அதிகச் செலவு இல்லாமல் உபாத்தியாயர்கள் பழைய அட்டை களைக் கொண்டே செய்துகொள்ள முடியும்.

2. இவைகள், "கிண்டர்கார்டன் முறையா, மாண்டிஸாரி முறையா" என்று கேட்கவேண்டாம். இவை தமிழ்நாட்டுக் குழந்தைகளுக்குத் தாய்ப்பாஷையாகிய தமிழ்ப்பாஷையைக் கற்றுக் கொடுத்து அவ்வபிமானம் உண்டுபண்ணக்கூடிய பாஷைப் போதனுமுறையைச் சேர்ந்தனவாகும். மேலும் குழந்தைகளின் தேகமனவளர்ச்சிக்குப் பொருத்தமானவைகளாகவும் ஆகும் என்று நிச்சயமாகச் சொல்லமுடியும்.

3. பாலர் வகுப்பு அறைமுழுவதும் இம்மாதிரி உபகரணங்க ளால் நிறைக்கப்படவேண்டும் என்பதே அடியேனது ஆசை. அதைச் சாதிப்பதே நம்மவர்களது பெருத்த பாக்கியமாகும். குழந்தை கள் அங்கேகூடித் தாங்களே முகமலர்ச்சியுடன் படிப்பது நமக்கும் பெற்றோர்க்கும் குழந்தைகளுக்கும் சந்தோஷத்தைக் கொடுக்கும். படிப்பதில் ஆசை, திரும்பத் திரும்பப் படிக்கத்தக்கபிரகாரம் ஒரு வசதியை எற்படுத்துதல், அங்குவந்து குதூகலமாகப் படிக்கத் தக்க எற்பாடுகளை அமைத்தல் இவை பாலபோதனையை மேன் மேலும் அபிவிருத்திசெய்யக்கூடிய மார்க்கங்கள் ஆகும்.

4. உபாத்தியாயர்கள் குழந்தைகளுக்குக் கற்றுக்கொடுக்கும் பொழுது தாங்களும் பலவிஷயங்களைக் குழந்தைகளிடமிருந்து கற்றுக்கொள்ளுகிறார்கள் என்று நான் நினைக்கிறேன். அது வாஸ்தவமே; அப்பொழுதுதான் குழந்தைகளுக்கேற்ற முறைகள் இன்னவை யென்று நமக்குத்தெரியும். அதன்மூலமாகத்தான் நான் பலவருஷ காலம் ஒவ்வொன்றாகக் கற்றுவந்ததை இங்கே திரட்டிக் காண்பித்திருக்கிறேன். இவைகளையும், இவைகள்போன்ற மற்ற அனுபவங்களையும் உபாத்தியாயர்கள் கையாண்டு ஆரம்ப வகுப்புப் பாடங்களை இன்புறச்செய்து 'பாலர்வகுப்புத் தேக்கம்' என்ற பெருங்குறை நீங்கத் தக்கபடி ஒருவாறு பாடுபடவேண்டும் என்ற கருத்துடன் யான் இவற்றை எழுதலானேன்.

---

## பாம்புக்கடிக்குச் சிகிச்சை

இந்திய மருத்துவ முறையில் பாம்புக்கடிக்குப் பலவிதமான சிகிச்சைகள் கூறப்பட்டிருக்கின்றன. அவற்றுள் சில ஆச்சரியப் படத்தக்க குணத்தைக் காட்டியிருக்கின்றன. ஆனால் இந்த முறைகள் ஒரு சில வைத்தியர்களால் அதிரகஸ்யமாகவே போற்றிவரப்பட்டு, ஒரு குடும்பத்தில் தலைமுறை தலைமுறையாகப் போதிக்கப்பட்டு வருகின்றன. இவர்கள் விஷ வைத்தியர்கள் எனப்படுவார்கள். மலையாள நாட்டில்தான் அதிமாக விஷ வைத்தியர்கள் இருக்கிறார்கள். கொச்சி ஸம்ஸ்தானத்தலைவர்களின் குடும்பத்தாரில் பலர் விஷங்களைச் சொஸ்தப்படுத்துவதில் நிபுணர்களாக இருக்கிறார்கள். விஷ சிகிச்சை செய்கின்றவர்கள் இன்னவர்கள்தாம் என்பது பொது ஜனங்களுக்குச் சரிவரத்தெரியாமலிருப்பதும் அதனால் சமயத்தில் தக்க உதவி கிடையாமற்போவதும் இந்த முறையிலுள்ள குறைகளாகும். 'விஷம் போக்கும் கல்' என்பது கிராமங்களில் பெரும்பாலோர் அறிந்துள்ள ஒரு கருவியாகும். பாம்புகடித்த இடத்தில் இக்கல்லை வைத்தால் விஷத்தை இழுத்துக்கொள்ளத்தக்க ஒரு சக்தி இதனிடம் அமைந்திருக்கிறது. இதைப் பாலினால் கழுவிவிட்டால் இது முன்பு இழுத்துக்கொண்ட விஷத்தை நீக்கிவிட்டு, மறுபடியும் உபயோகத்துக்குத் தகுதிவாய்ந்ததாகிவிடுகின்றதாம். இவ்விதக்கற்கள் எளிதில் அகப்படுவதில்லை. கடைகளில் பல போலிக் கற்கள் விற்பனையாகின்றன. போலிக் கல்லுக்கும் உண்மைக் கல்லுக்குமுள்ள தாரதம்யங்களைத் தகுந்த விஷவைத்திய நிபுணர்கள் தாம் அறிந்துகொள்ள முடியுமாம்.

—இந்தியன் ரிவ்யூ.

# பட்டுவின் பந்து

கே. குருஸ்வாமி, பி.ஏ.

---

பட்டு தோட்டத்தில் பந்து ஆடிக்கொண்டிருந்தாள். பந்து எங்கோ ஓடி ஒளிந்து கொண்டது.

பட்டு அண்ணுவைக் கூப்பிட்டாள்; "அண்ணு! அண்ணு! என் பந்து எங்கே?" என்ருள்.



"எனக்கு என்ன தெரியும்? என் நாய் கிட்டுவைக் கேள்" என்ருன் அண்ணு. பட்டு கிட்டுவைத் தேடிப் பிடித்தாள்; "கிட்டு! கிட்டு! என் பந்தைக் கண்டாயோ?" என்ருள்.

"எனக்கு என்ன தெரியும்? காற்றடிக்கிறதே, அந்தக் காற்றைக் கேள்" என்றது கிட்டு.

காற்று 'ஜில்' என்று வீசிற்று. "காற்றே! காற்றே! என் பந்தைக் கண்டாயோ?" என்ருள் பட்டு.



காற்று, "எனக்கு என்ன தெரியும்? அதோ ஓடுகிறதே சின்ன ஆறு, அந்த ஆற்றைக் கேள்" என்றது.

பட்டு ஓடோடியும் சென்றாள்; "ஏ ஆறே! என் பந்து எங்கே?" என்றாள்.



அந்த ஆறு, "எனக்கு என்ன தெரியும்? அதோ வலை வீசி மீன் பிடிக்கிறானே செம்படவன், அந்தச் செம்படவனைக் கேள்" என்றது.

பட்டு, செம்படவனைத் தேடிப் பிடித்தாள்; "வலை வீசும் செம்படவா! என் பந்து எங்கே?" என்றாள்.

செம்படவன் "உன் பந்தா? என் பறிக்குள் இருக்கிறது" என்றான்.

பட்டுவின் ஆச்சரியத்துக்கு அளவில்லை; "பந்தை நான் தோட்டத்தில் தொலைத்தேன். பந்து எங்கே போயிற்று என்று அண்ணாவைக்கேட்டேன். அண்ணா 'என் நாயைக் கேள்' என்றான். நாய் கிட்டுவைக் கேட்டேன். கிட்டு, 'எனக்குத் தெரியாது, காற்றைக் கேள்' என்றது. காற்றைக் கேட்டேன். காற்று 'நான் பார்க்கவில்லை, ஆற்றைக் கேள்' என்றது. ஆற்றைக் கேட்டேன். அது, உன்னைக்கேள் என்றது. உன்னிடம் பந்து எப்படி வந்தது?" என்றாள்.

செம்படவன் சிரித்தான்; "அப்படியா ஸமாச்சாரம்? இப்போது தெரிந்தது எனக்கு. ஓடிப்போன பந்தைக் கிட்டு கண்டது. அது கௌவிக்கொண்டு போய் ஆற்றங்கரையில் வைத்தது. காற்று வீசி ஆற்றில்போட்டது. ஆறு பந்தை உருட்டி என்வலையில் சேர்த்தது. வலையில் மீன் சிக்கவில்லை; பந்து சிக்கிற்று. பந்தை என்பறிக்குள் போட்டேன். பறிக்குள் இருக்கும் பந்து இந்தா!" என்றான்.

பட்டு பந்தை வாங்கிக்கொண்டு பறந்தோடிப் போனாள்.




# நூல்பிரித்த வேலை

வி. விசாலாக்ஷி அம்மாள்

---

ஓர் ஊரில் ஓர் அரசன் இருந்தானாம். ஒரு தினம் தன் ஊரிலுள்ள பெயர்பெற்ற கோயிலொன்றின் வரவு செலவுக் கணக்குகளை அவன் பார்வை இட்டானாம். அநேக செலவு வகைகளுக்கு நடுவில் 'சும்மா இருக்கும் சந்நியாசிக்கு அரைப்படி அரிசி' என்று எழுதியிருந்ததாம். அரசன், 'வேலை செய்கிறவர்களுக்குக் கூலி கொடுக்க வேண்டியது நியாயந்தான். ஒருவன் சும்மா இருந்தால் அவனுக்கு எதற்காகச் சாப்பாடு போடவேண்டும்?' என்று கேட்டானாம். 'மஹாராஜாவே! சும்மா இருப்பது சுலபமான காரியமே இல்லை; மிகவும் கஷ்டமான செய்கைகளில் ஒன்று இது. இந்தச் சந்நியாசி இதைச் செய்வதில் நல்ல திறமை பெற்றிருக்கிறதனாலேயே, சாப்பாட்டுக்குக் கோவில் அதிகாரிகள் உத்தரவிட்டார்கள்' என்று கோயில் கணக்குப்பிள்ளை பதில் சொன்னானாம். 'வேலை செய்து சம்பாதிப்பது கஷ்டம்; சும்மா சோம்பேறியாக உட்கார்ந்திருப்பது அவ்வளவு சிரமமா என்ன?' என்று ஐயங் கொண்ட அரசன், ஒரு சிறிது நேரம் தான் ஒன்றும் செய்யாமல் சும்மா இருக்கப் பிரயத்தனப்பட்டு, அதன் சிரமத்தை அறிந்து, கணக்குச் சரிதான் என்று ஒப்புக்கொண்டான் என்று ஒரு பழைய நாளைய கதை உண்டு. சும்மா இருப்பது கஷ்டமான காரியமே.

இவ்விதம் சும்மா இருக்க வேண்டும் என்று விரும்புவோரும் அருமைதான். ஓய்வு நேரங்களில் மனதிற்குச் சாந்தியை அளிக்

கக் கூடிய சுலபமான வேலைகளைச் செய்வதே 'ஓய்வு' எடுத்துக் கொள்ளுவதாகும். தையல், பூநூல் இவை போன்ற ஓய்வு நேர வேலைகளில் நூல் பிரித்துத்தைக்கும் வேலையும் ஒன்று.

## கைக்குட்டை தைத்தல்

இதற்கு முதலில் இரண்டு ஓரத்துக் கரையையும் கிழித்து விடவேண்டும். முதலில் ஒரு கைக்குட்டை தைக்கும் விதத்தைப் பற்றி எழுதுகிறேன். இது மிகவும் சுலபமானது. மல் துணியை வாங்கி, சதுரமாகக் கிழித்துக் கொள்ளவேண்டும். பிறகு ஓரம் தைப்பதற்கு வேண்டிய அளவு துணியை விட்டுவிட்டு, ஒரு நூலை மெதுவாக உருவிவிட வேண்டும். முதல் நூல் நடுவில் அறுந்துவிடாமல் வெகு சாக்கிரதையாக உருவவேண்டும். பிறகு அதன் பக்கத்தில் உள்ள இரண்டு நூல்களையும் உருவவேண்டும். கைக்குட்டை ஓரம் தைப்பதற்கு மூன்று நூல்கள் உருவினாலே போதுமானது. மற்றை மூன்று பக்கங்களிலிருந்தும் இதே விதம் நூலை உருவிவிட வேண்டும். பிறகு ஓரத்துத் துணியை மடித்து, நூல் பிரித்திருக்கும் இடத்தின் பக்கத்தில் பொருத்தி ஒட்டிக் கொள்ள வேண்டும். நாலு பக்கத்தையும் ஒட்டிக்கொண்டபின், வட்டமான கைச்சட்டத்திலோ, அல்லது சதுரமான சட்டத்திலோ துணியைப் பொருத்திக் கொள்ள வேண்டும். ஓரம் தைக்கும் தையல்போல்தான் தைக்கவேண்டும். ஆனால் முதலில் நூல் பிரித்திருக்கும் இழைகளில் நான்கு அல்லது ஐந்து குறுக்கு நூல்களை ஊசியினால் வகுத்து எடுத்து ஒருதரம் தையல் நூலினால் சுற்றிக்கொண்டு மறுபடியும் ஓரம் தைப்பதுபோல் ஒட்டி வைத்திருக்கும் ஓரத்தைத் தைக்க வேண்டும். இவ்விதம் ஒரே சீராகத் தைத்துக் கொண்டு போனால், ஓரத் தையலின் கீழ்ச் சிறிய துவாரங்களும் ஒன்றுசேர்ந்த நூல் தூண்களும் அழகாக ஏற்படும்.

இந்த நூல் பிரித்த தையலைப் பல விதங்களில் தைக்கலாம். மேஜைத்துணிகள், குழந்தைகள் சட்டைகள், 'பிராக்குகள்', பெரியவர்கள் சட்டைகள், தலையணை உறைகள், விரிப்புக்கள் எல்லாவற்றையும் இவ்விதம் தைத்து அலங்காரம் செய்யலாம். முதலில் இது கஷ்டமான வேலையாகவே தோன்றும். நூல் பிரிப்பதில் திறமை ஏற்பட்டுவிட்டால் பிறகு பல அழகிய தினுசுகளை ஓய்வு நேரங்களில் சுலபமாகத் தைக்கலாம்.

## சிலந்திப்பூச்சித் தையல்

இந்தத் தினுசு 'பிராக்'கின் அடியில் தைக்க அழகாக இருக்கும். 'வாயில்' போன்ற மெல்லியதான கெட்டி இழைகள் உள்ள துணிகளில் இதைச் சுலபமாகத் தைக்கலாம். முதலில் 'பிராக்கு'க்கு வேண்டிய நீளத்துக்குத் துணியைக் கிழித்து எடுத்துக்கொள்ள வேண்டும். ஓரப்பட்டை நன்றாக அகலமாக இருக்கும்படித் துணிவிட்டு, கைக் குட்டைக்கு நூல் பிரித்தது போல் மூன்று அல்லது நான்கு இழைகளை உருவிவிட்டு, ஓரத்தை மடித்து ஒட்டிக்கொண்டு, நூல் பிரித்த ஓரத் தையல் தைத்துக்கொள்ள வேண்டும். பிறகு இரண்டு 'டக்கு'களுக்கு இடம்விட்டு இரண்டுவிரல் அகலத்திற்கு நூலைப் பிரிக்க வேண்டும்; அதாவது ஓரப்பட்டியிலிருந்து சுமார் நாலு விரல் அகலத்துக்குமேல் நூல் பிரிக்கவேண்டும்; நூல் பிரித்த இடம் இரண்டு விரல் அகலம் வரையில் இழைகளை உருவ வேண்டும். முதல், ஒன்று இரண்டு இழைகள் உருவுவதே சிரமமாக இருக்கும். பிறகு இலேசாக உருவிவிடலாம். நடுவில் நூல் அறுந்துவிட்டால், அதற்கு அடுத்த இழையை உருவிவிட்டால், அறுந்துபோன நூலை எளிதில் உருவி விடலாம். இரண்டு விரல் அகலத்திற்கு உருவிக்கொண்டபின், கீழ்ப்பக்கம் மேல்பக்கம் இரண்டையும் நாலைந்து இழைகளைச் சேர்த்துச் சேர்த்துத் தைக்க வேண்டும்.

ஒருபக்கம் தைத்து விட்டால், ஏற்கனவே சேர்ந்திருக்கும் இதழ்களானதனால் மற்றைய பக்கம் தைப்பது சுலபமாகவே இருக்கும். தையல் ஒரே நிதானமாக இருக்கவேண்டும். இழைகளைக் கணக்கில்லாமல் சேர்த்துவிட்டால் நூல் தூண்கள் சிறிதும் பெரிதுமாகப் பார்வைக்கு அழகாக இருக்கமாட்டா. மேலும் ஒரு பக்கம் தைத்தபின் மேல் பக்கத்தை ்தைக்கும்பொழுது அதே இழைகளை ஊசியில் எடுத்துக் கொள்ளவேண்டும். இல்லாவிட்டால் இழைபிரித்துத் தூண்கள் சீர்குலைந்து விடும். கைக்குட்டைக்கு அதிக நூல் பிரிக்காததினால் ஒரு பக்கம் தைப்பதே போதுமானது. அதிக நூல் பிரித்த இந்தத் தினுசில் இரண்டு பக்கமும் தைக்காவிட்டால் மேலே உள்ள இழைகள் கீழுக்கு இறங்கித் தையலைக் கெடுத்து விடும். இவ்விதம் தூண்களைத் தைத்துக்கொண்டு பிறகு ஊசியில் சற்று நீளமாக நூலைக் கோத்துக் கொள்ளவேண்டும். துணியின் ஓர் ஓரத்தில் நூலை முடிபோட்டுக் கொண்டு, மூன்று தூண்களை நடுவில் ஒன்றுசேர்த்து முடித்

தையல் போடவேண்டும். இப்படி எல்லாத் தூண்களையும் முடி போடவேண்டும். இப்பொழுது நடுவில் ஒன்று சேர்ந்து, இரண்டு ஓரங்களிலும் பிரிந்து நிற்கும் மும்மூன்று தூண்களும் இவை களின் நடு மையத்தில் தூலமாகத் தெரியும். பிறகு ஊசியில் மறுபடியும் நூலைக் கோத்துக்கொண்டு, கீழ்த்தூண்கள் ஒன்றி லிருந்து ஒன்றுக்கு முடிபோட்டு, பிறகு நடுவில் இருக்கும் நூலில் முடிபோட்டு மேலே உள்ள மூன்று தூண்களிலும் ஒவ்வொன் ருக முடிபோட்டு நடுவில் நூலுக்கு வந்து கீழே சென்று முடி போட்டு இவ்விதம் கீழும் மேலுமாக முடிபோட்டுத் தைத்துக் கொண்டே போகவேண்டும். பிறகு அந்த ஓரத்தில் இருந்து ஆரம்பித்து இதே விதம் மேலுங் கீழுமாகத் தைக்கவேண்டும். தைக்கும்பொழுது, ஒன்று சட்டத்தை உபயோகிக்க வேண்டும்; அல்லது, துணி சுருங்காமல் வேண்டிய அளவு ஊசியில் உள்ள நூலைத் தாராளமாக விட்டு வெகு சாக்கிரதையாகத் தைக்கவேண் டும். முடிந்த வேலை சிலந்தியின் கூடு. மேலும், சில கீழும் மேலும் செல்லும் நூல்களும், முடிச்சுக்களும், தூண்களுமாக வெகு அழ காக இருக்கும். இந்த முடிச்சுக்கள் போடுவதற்கு சாதாரணமாக முடி போடுவதுபோல் ஊசிமேல் நூலை ஒருதரம் சுற்றித் தைக்க வேண்டியதுதான்.

---

## இறகுகளின் உபயோகம்

பட்சிக்குஞ்சுகளின் மெல்லிய இறகுகளைத் தலையணை முதலியவற் றிற்கு உபயோகப்படுத்துகிறார்கள். ஆனாலும் பெரும்பாலான இறகுகள் வீணாகப்போகின்றன. அவற்றை எந்தவகையிலாவது உபயோகப்படச் செய்யலாமா என்று ஐயோ வாஸ்டேட் காலேஜில் ஆராய்ச்சிசெய்து வரு கிறார்கள். அந்த மெல்லிய தூவிகளை ஸோடாவில் கரைத்து ஒருவித அமிலத்தினால் குழம்பாக்கி இறுகச்செய்கிறார்கள். அதனால் பேனாக்கட்டை பொத்தான்கள் முதலியவை செய்யலாமாம்.

—ஸயன்ஸ் ஸர்விஸ்




## கவிதைப் பரிசு

தமிழ்நாட்டில் பாஷையின் வளர்ச்சிக்குரிய துறைகள் பலவற்றிலும் தமிழர் முன்னேறி வரவேண்டுமென்பது கலைமகளின் நோக்கமாகும். இக்காலத்தில் தமிழ்படிப்பவர்களால் புறக்கணிக்கப்படுபவைகளுள் கவிதையும் ஒன்றாகும். செய்யுட்களை ரஸம் தெரிந்து அநுபவிக்கும் தன்மை மிகக்குறைவாக இருக்கிறது. சிலர் செய்யுளென்றால் வேம்பென்று கருதுகின்றனர். வேறு சிலர் தமக்குச் செய்யுளை அநுபவிக்கும் ஆற்றலுண்டென்றும் தாம் அநுபவித்தற்குரிய செய்யுட்கள்தாம் இல்லையென்றும் சொல்லுகின்றனர்.

எல்லாச்செய்யுளும் அழகுடையனவல்லவாயினும் நாம் அறிந்து அநுபவித்தற்குத் தமிழ்மொழியில் எவ்வளவோ சிறந்த நூல்கள் உள்ளன. பழஞ்செய்யுள் நூல்கள் போகப் புதுச்செய்யுள் நூல்கள் இப்பொழுது தமிழ்நாட்டில் வெளிவருதல் மிக அருமையாக இருக்கிறது.

இலக்கணத்தையே பிரதானமாகக் கருதும் ஒருசாரார் வெறும் சொல்லடுக்குக்களையும் பல்லையுடைக்கும் யமகந்திரிபுகளையும் பாடுகின்றனர். இலக்கணமென்பது மருந்துக்குக்கூடத் தெரியாத சிலர் தங்களுக்குள்ளே உயர்ந்த கவிகளாகக்கருதிப் பாட்டு இது, வசனம் இது என்று வேறுபிரித்தறியமுடியாதவைகளைப் பாட்டென்று எழுதுகின்றனர். இந்த இரண்டுகூட்டத்துக்கும் நடுவிலே கருத்தும் கவித்துவமும் கலந்து கவியெழுதுவோரும் அங்கங்கே இலைமறை காய்போல் இருந்துவருகின்றனர். அவர்களுடைய ஆற்றல் வெளிப்படவேண்டும்.

வட இந்தியமொழிகளிலும், தென்னிந்தியாவில், தெலுங்கு, மலையாளம், கன்னடம் முதலிய மொழிகளிலும் கவிதைக்கென்றே தனிப்பத்திரிகைகள் நடத்தப்பெறுகின்றன. தமிழ் நாட்டிலோ முளையிலேயே பாறாங்கல்லைத் தூக்கிப்போட்டு அமிழ்த்திவிடும் நிலைதான் இருக்கிறது.

அழகிய காட்சிகளை எளிய நடையில் கவிதையில் சொல்லி விளக்குவதுபோல ஒருபடத்தினுல் விளக்கமுடியாது. ஒரு கருத்தைக் கவிதையில் பொருத்திச் சொன்னுல் அதனுடைய அழகே வேறு. மனவுணர்ச்சிகளைக் கவிஞன் ஒருவன்தான் படம் பிடித்துக்காட்டுவான்; பிரமாவால்கூட முடியாது. கவிஞர்கள் உள்ள நாட்டில் கருத்தும் அழகுணர்ச்சியும் களிப்பும் நிரம்பி யிருக்கும்.

தமிழ் நாட்டுக் கவிஞர்களைக் 'கலைமகள்' பயன்படுத்திக் கொள்ள எண்ணியிருக்கிருள். எளிய நடையில் ஓர் இயற்கைக் காட்சியைப்பற்றியோ அல்லது ஒரு சம்பவத்தைப்பற்றியோ ஒரு கவிதை எழுதுங்கள். தங்கப் பதக்கம் ஒன்று சிறந்த கவிதைக் குப் பரிசாக அளிக்கப்படும். ஆற்றலுடைய அன்பர்கள் யாவரும் முயலும்படி வேண்டுகிருேம். சொந்தக்கற்பனையாகவோ பிறமொழி களிலிருப்பதைத் தழுவி எழுதியதாகவோ இருக்கலாம்; சொந்தக் கற்பனையே மேலாகக் கருதப்படும். மற்ற நிபந்தனைகள் அடுத்த மாதம் பத்திரிகையில் வெளியிடப்படும்.

---

## ஒரு திருத்தம்

'கலைமகள்' பத்திரிகையின் நிர்வாக ஆசிரியராக இருந்த ஸ்ரீமான் டி. எஸ். இராமச்சந்திர ஐயர் அவர்கள் தமக்கிருந்த தமிழபிமானத்தினுல் சிறந்தவியாசம் எழுதும் கலாசாலை மாணவரொருவருக்கு வருஷந்தோறும் பரிசுஒன்றை அளிப்பதற்குரிய நிதியாக ரூ. 500 வழங்கியிருப்பது பச்சையப் பன் கலாசாலைக்கு என்று தெரியவருகிறது. ஆகையால் தொகுதி ௬ பகுதி ௬௨-இல் 186-ஆம் பக்கத்தில் 2, 3-வது வரிகளில் 'கிறிஸ்தவக் கலாசாலையில்' என்றிருப்பதை, 'பச்சையப்பன் கலாசாலையில்' என்று திருத்திக்கொள்ளு மாறு நேயர்கள் வேண்டிக்கொள்ளப்படுகிருர்கள்.

# மதிப்புரை

அம்பலவாணன் அல்லது நாவாய்க்கைதி: [ஸ்ரீமான் பி. எஸ். சுப்பிரமணியம் அவர்கள், எம். ஏ., எழுதியது; இரண்டுபாகங்கள்; கிடைக்குமிடம்: அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.

முதற்பாகம் விலை, ரூ. 1 8 0; இரண்டாம்பாகம் ரூ. 1 8 0.]

உயர்ந்த நீதிகளை மிகச்சுவைபடக் கதையில் அமைத்தெழுதுவது ஒரு தனி ஆற்றல். மேனாட்டில் இப்பொழுது அளவற்ற கதைகளும் நவீனங்களும் குவிந்துவருகின்றன. ஆயினும் எல்லாம் சிறந்த புத்தகங்களாக மதிக்கப்படுவதில்லை. இலக்கிய வரிசையிற் சேர்க்கப்படும் நவீனங்களும் கதைகளும் பல பாஷைகளில் உள்ளன. சிறந்த கவிதைக்குரிய உயர்நலன்களுட் பல கதைகளுக்கும் இருக்கவேண்டும். மனிதனுக்கு இயல்பாக அமைந்துள்ள இரக்கம், அன்பு, வீரம் முதலியவற்றைக் கிளறுகின்ற தன்மையுடைய கதைகள் எந்நாட்டாராலும் போற்றப்படுகின்றன.

நமது தமிழ்நாட்டில் அத்தகைய கதைகள் அதிகமாக வரவேண்டும். இப்பொழுதுள்ள நவீனங்களில் இலக்கியத்தையொத்த மதிப்பையுடையவை சிலவேயாகும். நடை, கதை, அமைப்பு, லட்சியம் முதலியவற்றில் சிறப்பாக உள்ள கதைப்புத்தகங்கள் மிகமிக அரியனவாக இருக்கின்றன.

மேனாட்டாருடைய கதைகளைத் தமிழில் மொழிபெயர்த்துப் பல நவீனங்கள் ஆக்கப்பட்டுள்ளன. பலமுறை வாசிக்குந் தகுதி உடையனவாக அவற்றைச் சொல்ல முடியாது. மேல்நாட்டுக் கதைகளைத் தழுவிச் சில மாற்றங்களுடன் அமைக்கப்பட்ட கதைகள் நம் நாட்டாருடைய மன இயல்புக்கு ஒத்தவைகளாக இருக்கும். அத்தகையவற்றுள் இந்தப்புத்தகமும் ஒன்று. 'விக்டர் ஹ்யூகோ' என்பவர் எழுதிய 'லெஸ் மிஸரபிள்ஸ்' என்பதைத் தழுவியமைத்தது இது. 'உலகத்தோரால் பல வகையிலும் துன்புறுத்தப்பட்டும் விதியினால் வருத்தப்பட்டும் இறைவனடிகளை மறவாத புண்ணியசாலியான பெரியோன் அம்பலவாணன். அவன் விறகுவெட்டியின் குமாரனாகப் பிறந்து குற்றம்புரிந்து தண்டனையடைந்து நாவாய்க் கைதியாகிப் பிறகு மீண்டும் பலவகைக் குற்றங்கள் செய்கிறான். பின் நல்லறிவுவரப் பெற்று மறைபெயரோடு தொழில் முயற்சியி லீடுபட்டுச் சிறந்த நிலைக்கு வருகிறான். உலகத்தார் அவனை நன்கு மதிக்கின்றார்கள். அப்பொழுது அவன் முன்பு செய்த ஒருகுற்றத்துக்காகத் தேடப்படுகிறான். வேறொருவனை அம்பலவாணனென்று பிடித்துக்கொள்கிறார்கள். அந்த நிலையில் தன் உயர்நிலை மாளிகை முழுதும் வீழும் என்பதை யறிந்தும் தானே குற்றவாளியென்பதை ஒப்புக்கொண்டு தண்டனை அடைகிறான். பிறகு சிறையினின்றும் தப்பி வெளியேறுகிறான். அக்காலத்தில் அவனால் உதவிபுரியப் பட்டவர்கள் அவன் கைதியென்பதை யுணர்ந்து இகழ்கின்றனர். பிறகு அவன் இறக்கும் தருணத்தில் அவர்கள் அவனுடைய குணங்களை உணர்ந்து வருந்தி இரங்குகின்றனர்.

அம்பலவாணன் அவ்வப்போது படும் கஷ்டங்களைப்பற்றிய வரலாறுகள் மனத்தை உருக்குகின்றன. இடையிடையே படிப்பவர்களுக்குத் தெய்வபக்திஉணர்ச்சி வீறும்படியான வாக்கியங்களை ஆசிரியர் அமைத்திருப்பது மிகவும் போற்றத்தக்கது. எளிய இனிய செந்தமிழ் நடையில் அமைந்துள்ள இப்புத்தகம் தமிழ்நாவல்களுள் முதல்வரிசையிற் சேர்தற்குரியதாகும். இந்த அரிய புத்தகம் நல்லதாளில் செவ்வியமுறையில் அழகிய படங்களோடு வெளியிடப்பட்டிருத்தல் இதனுடைய உயர்வைப் பின்னும் அதிகப்படுத்துகிறது. உயர்வகுப்பு மாணவர்களுக்குப் பாடபுத்தகமாதற்குரிய தகுதி இதற்கு எல்லாவகையிலும் அமைந்துள்ளது.



லியோ டால்ஸ்டாய் மகான்.

(340-ம் பக்கம் பார்க்க)




# கனம் கிருஷ்ணையர்

மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர்

## 1

தாமே முயன்று தம்மை நல்லநிலைக்குக் கொண்டுவந்து புகழ்பெற்றவர்களுள் கனம் கிருஷ்ணையர் என்னும் பெரிய ஸங்கீத வித்துவான் ஒருவராவர். ஸங்கீதத்தில் உள்ள கனம், நயம், தேசிகம் என்னும் மூன்றுவகைகளுள் கனம் என்பதில் ஒப்புயர்வற்ற தேர்ச்சி பெற்றதனால் இவருடைய பெயர் கனமென்னும் அடைமொழியோடு கூடி வழங்கி வரலாயிற்று. இவருடைய காலத்தில் தமிழ் நாட்டில் கனமார்க்கத்தில் அப்பியாஸம் சிறிதளவுடையவர்கள்கூட மிகச் சிலரே இருந்தார்கள். இளமையிலிருந்து தொடர்ந்து ஸாதகம் பண்ணிவருபவர்களுக்குத்தான் அது கைகூடிவரும். அவ்வழியில் தனிமுயற்சியை மேற்கொண்டு எண்ணியதை எண்ணியபடியே எய்திய மனத்திண்மையை உடையவர் கனம் கிருஷ்ணையராவார். இவர் இருந்தகாலம் இற்றைக்குச் சற்றேறக் குறைய நூறு வருஷங்களுக்கு முன்பாகும்.

கிருஷ்ணையர் உடையார் பாளையந் தாலூகாவில் உள்ள திருக்குன்றமென்னும் ஊரிற் பிறந்தவர்; ஸ்மார்த்தப் பிராமணர்களுள் அஷ்டஸஹஸ்ர வகுப்பினர்; அந்த வகுப்பிலே அத்தியூர்ப் பிரிவைச் சார்ந்தவர்.

திருக்குன்றமென்பது குன்றைவளநாட்டின் தலைநகராகும். அது மிகப்பழமையானதோர் ஊர். அங்கே ஒருபழைய சிவாலயமும் விஷ்ணு கோயிலொன்றும் உண்டு. திருவிடைமருதூரில் கோயில் கொண்டு எழுந்தருளிய ஸ்ரீமகாலிங்கமூர்த்தியிடத்தும் பிருகத்குசாம்பிகை யிடத்தும் இடையறாத அன்புடைய ஒருவருக்கு அவ்வூரில் ஸ்ரீமகாலிங்கமூர்த்தி அம்பிகையுடன் காட்சி

யளித்தனரென்று கூறுவர்; அதற்கு அறிகுறியாக அங்குள்ள சிவ பெருமான் திருநாமம் ஸ்ரீ மகாலிங்கம் அல்லது மருதீசரென்றும் அம்பிகையின் திருநாமம் பிருகத்குசநாயகி யென்றும் வழங்கும். முன்பு மருத விருட்சம் ஒன்று இருந்ததென்பர்; இப்பொழுது அது காணப்படவில்லை. அவ்வூர் விஷ்ணுவாலயத்திலுள்ள பெருமாளின் திருநாமம் ஸ்ரீ ஸௌந்தரராஜரென்பது. சிவாலயம் விஷ்ணுவாலயம் இரண்டிற்கும் பண்டைக்காலத்தில் இறையிலி நிலங்கள் (ஸர்வமான்யம்) மிகுதியாக இருந்தனவென்றும் நித்திய நைமித்தியங்கள் விமரிசையாக நடந்துவந்தனவென்றும் பெரியோர் சொல்லுவர். மருதீசருக்குத் தைப்பூசத்திலும் வருஷப்பிறப்பிலும் உத்ஸவம் நடைபெறுவதுண்டு.

அவ்வூரின் தென்பால் மருதயாறென்னும் பெயருள்ள நதி யொன்று ஓடுகிறது; தமிழ் இலக்கண நூல்களில் செந்தமிழ் நாட்டிற்கு எல்லையாக வழங்கப்படும் மருதயாறு அதுவேயாகும். அந் நதி மருதீசருக்குரியதென்பர்.

உத்தண்டரென்ற ஐயனார் கோயில் ஒன்று அங்கே இருக்கிறது. அந்த ஐயனார் மிகவரதராக விளங்குகிறார். அவரைக் குலதெய்வமாகக்கொண்ட சைவவணிகர் பல்லாயிரவர் முன் அங்கே வாழ்ந்து வந்தார்கள்; பிற்காலத்தில் வரவர நகரம் வளங்குன்றினமையாலும் தங்கள் தங்கள் தொழிலை விருத்திசெய்துகொள்ள எண்ணினமையாலும் அவர்கள் கும்பகோணம், நாகபட்டினம் முதலிய நகரங்கட்குச்சென்று வாழ்ந்து வருவாராயினர். அவர்களிற் கப்பல் வியாபாரிகளும் உண்டு. அவர்கள் வருஷந்தோறும் தவறாமல் அங்கேவந்து அந்த ஐயனாருக்கு அபிஷேகம் முதலியன செய்வித்துத் தங்கள் பிரார்த்தனைகளை நிறைவேற்றிக்கொண்டு செல்லுவது இப்போதும் வழக்கமாயிருக்கின்றதென்று தெரிகிறது. அவருக்கு உத்தாண்டவரென்றும், ஒத்தாண்டவரென்றும் பெயர்கள் வழங்குகின்றன.

அவ்வூர் மிகப் பழமையுடையதென்பதற்கு அறிகுறியாக அதனைச் சூழ்ந்துள்ள நிலங்களில் வெட்டும்போது முதுமக்கட்டாழிகள் கிடைத்துவந்தன; முதுமக்கட்டாழி யென்பது அந்தப் பக்கங்களில் மதமக்கச் சாடியென வழங்குகின்றது. அங்கே ஒரு கொல்லையில் ஜைன முனிவர் பல்லிங்காஸனத்தோடு இருப்பது போன்ற சிலாவிக்கிரகம் ஒன்று காணப்படுதலால் அப்பக்கங்களில் ஜைனமதத்தினர் இருந்ததாகவும் சொல்லுவர்.

திருக்குன்றம் பெரியதிருக்குன்றமென்றும் சின்னத் திருக்குன்றமென்றும் இரண்டுபகுதியாக உள்ளது. பெரியதிருக்

குன்றம் மேற்கிலும் சின்னத்திருக்குன்றம் கிழக்கிலும் உள்ளன. பெரியதிருக்குன்றத்திலேதான் மேலே கூறியவை அமைந்துள்ளன. வடமொழி தென்மொழிகளிலும் ஸங்கீதத்திலும் பயிற்சியுள்ள பலர் பண்டைக் காலத்தில் அங்கே இருந்துவந்தார்கள்.

கனம் கிருஷ்ணையருடைய தந்தையார் இராமசாமி ஐயரென் பவர். அவருக்குப் பரம்பரைக் கல்வியாகிய ஸங்கீதத்திலும் தமிழி லும் பயிற்சி இருந்தது; புதியகீர்த்தன முதலியவை இயற்றும் பழக்கமுமுடையவர். அக்காலத்தில் கபிஸ்தலத்தில் இருந்த பெருஞ் செல்வராகிய முத்தையமூப்பனுரென்பவர் அவரிடத்தில் அன்பு பூண்டு பலவகையில் ஆதரித்துவந்தார். இராமசாமி ஐயர் அவர் மீதும் கடவுள்ஸ்துதியாகவும் பாடிய கீர்த்தனங்கள் பல.

இராமசாமி ஐயருக்கு ஐந்து குமாரர்களும் ஒரு பெண் ணும் இருந்தனர். சுப்பராமையர், வெங்குவையர், சுந்தரமையர் (சுந்தரண்ணுவெனவும் அவர் சொல்லப்படுவார்), கஸ்தூரிரங் கையர், கிருஷ்ணையரென்னும் ஐவர்களில் கிருஷ்ணையரே ஐந்தாங் குமாரர். பெண்ணின் பெயர் சுப்பலக்ஷ்மி அம்மாளென்பது.

மேற்கூறிய சுப்பராமையர் முதலிய ஐவரும் முதலில் தந்தை யாரிடத்தில் தமிழ்க்கல்வியும் ஸங்கீதமும் கற்றுக்கொண்டனர். பிறகு, அரியிலூரிலிருந்த சண்பகமன்னுரென்னும் ஸ்ரீ வைஷ்ணவப் பெரியாரிடம் பயின்றுவந்தனர். அவர்களுடைய குடும்பத்திற்குப் பண்டையரசர்களால் அளிக்கப்பட்ட நன்செய் புன்செய் நிலங்க ளும் தோட்டங்களும் இருந்தமையின் பொருட்கவலையின்றிக் கல்விபயில்வதற்கு ஏற்ற அநுகூலம் அவர்களுக்கு இருந்தது. அந்த ஐவர்களுள்ளே சுப்பராமையர், சுந்தரமையர், கிருஷ்ணையராகிய மூவரும் ஸங்கீதப் பயிற்சியை விருத்திசெய்யக் கருதித் தஞ்சாவூர் சென்றனர். அங்கே அக்காலத்தில் இருந்த அரசர் சரபோஜி எனக் கேள்வியுற்றிருக்கிறேன். அந்த அரசருடைய ஸபை, வித்துவான்களுக்கு ஒரு பாதுகாப்பாக இருந்தது. பல வகையிலும் ஆற்றலுடையவர்கள் அந்த ஸபையை அலங்கரித்தனர். அக் காலத்தில் அங்கே இருந்த ஸங்கீத வித்துவான்களுள் சிறந்தவ ராகிய பச்சைமிரியன் ஆதிப்பையரென்னும் பெரியாரிடத்தில் சுப்பராமையர் முதலிய மூவரும் ஸங்கீத சிக்ஷை சொல்லிக்கொள் ளத் தொடங்கினர். பரம்பரையாக வந்த வித்தையாதலாலும், குருவாக வாய்த்தவர் சிறந்தவித்துவானுதலாலும், பொருட் கவலை யில்லாமையாலும் அம்மூவரும் ஸங்கீதத்தில் வரவர மேலான பழக்கத்தை அடைந்து வந்தனர்; அரசரும் செவ்வனே பாது காத்தனர். அம்மூவருக்கும் முருகக்கடவுள்உபாஸனை உண்டு.

கிருஷ்ணையர் அழகும் வன்மையும் பொருந்திய மேனியுடையவர்; அஞ்சாதநெஞ்சினர்; மேற்கொண்ட காரியத்தை எவ்வாறேனும் முடித்துவிடும் ஊக்கமுடையவர். அவருடைய முயற்சியை அவரோடு பழகினவர் யாவரும் அறிந்து வியந்தனர்.

சகோதரர்கள் மூவரும் பிறகு அந்த ஸம்ஸ்தானத்திலேயே ஸங்கீத வித்துவான்களாக இருந்தனர்.

அவர்களுடைய ஸங்கீதத்திறமை ஸங்கீதவித்துவான்களாலும் அரசராலும் சிறப்பாகப் பாராட்டப்பட்டது. சுப்பராமையர் தமிழிற் பல கீர்த்தனைகளை இயற்றிப்பாடுவதுண்டு. அவற்றை மற்ற வித்துவான்களும் கற்றுக்கொண்டு பாடி மகிழ்வார்கள். தஞ்சாவூர் ஸம்ஸ்தானத்தில் ஒவ்வொருவகையிலும் சிறந்த வித்துவான்கள் உள்ள ஸபையில் பாடிப் பரிசுபெறுவது அக்காலத்தில் பெருமதிப்பாக இருந்தமையால் அடிக்கடி அயல்நாட்டிலிருந்து உயர்ந்தவித்துவான்கள் பலர் அங்கேவந்து ஸம்மானம் பெற்றுச் செல்வதை ஒரு தனிக்கௌரவமாக நினைத்தனர்.

ஒரு சமயம், பொப்பிலிஸம்ஸ்தானத்து ஸங்கீதவித்துவானாக இருந்த [1]கேசவையா என்பவர் தஞ்சாவூருக்கு வந்தார். அவர் இளமை தொடங்கி ஸங்கீத மார்க்கங்களுள் மிக அருமையாகிய கனத்தில் உழைத்துப் பயின்று தேர்ச்சி பெற்றவர்; மிக்கமதிப்புடையவர். கனமார்க்கமென்பது மூலாதாரத்திலிருந்து கம்பீரமான த்வனியை உண்டாக்கிப் பாடுவதென்றும் தொடங்கப்படும்போது அந்தத்வனி ஹுங்கார சப்தத்தோடு எழுமென்றும் ஆரோகண அவரோகணத்தில் பலவகையான ஸங்கதிகள் வரும்படி பாடுவதென்றும் அங்கசேஷ்டைகளில்லாமற் பாடவேண்டுமென்றும் சொல்வர். இசைத்தமிழில் உள்ள [2]உள்ளாளப்பாட்டு என்னும் வகை இதைப்போன்றதே யாகும்.

---

1. இவர் வைஷ்ணவர்களில் சாத்தாதவர் வகுப்பினரென்று கேள்வி.

2. "உள்ளாளப் பாட்டுப் பாடுங்கால் இடைபிங்கலையை இயக்கமறுத்து மூலாதாரமுதல் பிரமரந்தரமளவும் இயக்கமாக்கி நடுவு தொழில்வரப்பாடுதலென்றறிக;......'கண்ணிமையா கண்டந் துடியா கொடிறசையா பண்ணளவும் வாய்தோன்றா பற்றெரியா-எண்ணினிவை, கள்ளார் நறுந்தெரியற் கைதவனே கந்தருவர், உள்ளாளப் பாட லுணர்' இசைமரபு' (சீவகசிந்தாமணி, 658, நச்சினார்க்கினியருரை); "பன்னொன்று" (சீவக. 735) என்னும் செய்யுளில், "விண்ணின்றியங்கி" என்னும் பகுதிக்கு 'விண்ணென்றது, முற்கூறிய உள்ளாளத்திற்குரிய மூலாதாரந் தொடங்கிப் பிரமரந்திரத்தளவு நின்ற வெளியை' என்று நச்சினார்க்கினியர் எழுதிய விசேடஉரையும் இதனைப் புலப்படுத்தும்,

தஞ்சைக்குவந்த கேசவையா தம்முடைய ஸங்கீதத்தால் அரச ரையும் வித்துவான்களையும் மகிழ்வித்தார்; மன்னருடைய விருப் பத்தின்படி சில மாதங்கள் அங்கே இருந்துவந்தார். கனமார்க்கத் தைத் தனியே விரிவாக அப்பியாஸம் செய்தவித்துவான்கள் அக் காலத்தில் அங்கே இல்லை. ஆதலின் அவரது ஸங்கீதத்தைக் கேட்ட வித்துவான்கள் யாவரும் அவரை மிகவும் மதித்து மரியாதை செய்துவந்தனர். அவருடைய சாரீரம் சிங்ககர்ஜனை போலிருக்கு மென்று சொல்வார்கள். அவரது ஸங்கீதத்தில் ஈடுபட்ட அரசருக்கு, "இவ்வளவு அருமையான மார்க்கத்தைச் சிறப்பாக அப்பியாஸம் செய்தவர்கள் இந்தப் பக்கங்களில் இல்லையே!" என்ற வருத்தம் தோற்றி வளர்ந்துவந்தது.

ஒருநாள் அரசருடைய ஸபையில் பொப்பிலி கேசவையா பாடி னூர். ஸம்ஸ்தானவித்துவான்களும் வெளியூர்களிலிருந்து வந்த வித்துவான்களும் ஸபையில் நிரம்பி யிருந்தனர். சுப்பராமையர் முதலிய மூன்றுசகோதரர்களும் இருந்தார்கள். பாட்டு முடிந்த பிறகு அரசர் அங்கிருந்த வித்துவான்களை நோக்கி, "இவரைப் போலக் கனமார்க்கத்தில் பாடக்கூடியவர்கள் யாராவது இங்கே உண்டா?" என்று கேட்டனர். அவர்கள் தங்களுக்கு அப்பியாஸ மில்லாமையால், பாட முடியாதென்று சொல்லிவிட்டார்கள்; "உழைத்துக் கற்றுக்கொண்டாவது பாடலாமா?" என்று மீண்டும் அரசர் கேட்டார். அவர்களில் முதியவராக இருந்தவர்கள், "இனிமேல் எங்களால் இது முடிவதன்று; இந்த வயதில் அப்பி யாஸம் பண்ணுவது அசாத்தியம்" என்று கூறிவிட்டார்கள். வேறுசிலர், "இவர் எவ்வளவோ காலம் கஷ்டப்பட்டு அப்பிய வித்துப் பாடுகிறுர். இந்தமாதிரி பாடுவதென்றால் ஸாமான்யமா? இது நம்மால் ஆகாதகாரியம்" என்று தமக்குள் நினைந்து பேசாமல் இருந்தனர். மற்றும் சிலர், "இவர் ஒரு ஸம்ஸ்தானத்தில் வேண்டிய சௌகர்யங்களை யெல்லாம் பெற்றவர்; பரம்பரையாக அப்பியாஸம் பண்ணியிருக்கலாம்; திடீரென்று கற்றுக்கொள்வீர்களா என்றால் முடியுமா?" என்று தம்முட் பேசிக்கொண்டனர். இளம்பிராயத் தினராக இருந்தவர்கள் அஞ்சிப் பேசாமல் இருந்தனர்.

அந்தக்கூட்டத்தில் இருந்த கிருஷ்ணையர் இயல்பாகவே தைரியமுடையவர்; அரசர் வினவியதற்கு எவரேனும் விடை அளிக் கின்றார்களா வென்று சிலநேரம் கவனித்தார். இவருக்கு எவ் வாறேனும் முயன்று அந்தமுறையைக் கற்றுக்கொண்டுவிடலா மென்ற நம்பிக்கை ஊழ்வினையின் பலத்தால் உண்டாயிற்று. ஆத லின், யாவரும் மௌனமாக இருத்தலை யறிந்த இவர் உத்ஸாகத்

தோடு எழுந்து, "கேசவையா எனக்குக் கனஜாதியின் லட்சணங் களை விளங்கச் சொல்லித்தந்தால் நான் உழைத்து அப்பியாஸம் செய்து பாடலாமென்று எண்ணுகிறேன்" என்று விநயத்தோடு சொன்னார். அங்கே இருந்த பல்லவி கோபாலையர் முதலிய வித்து வான்கள், "இவர் நிச்சயமாகப் பாடக்கூடியவர்" என்று வியந்து சந்தோஷித்தனர். அரசரும் சந்தோஷித்தார். கேசவையாவும் கற்பிப்பதாக வாக்களித்தார்.

பிறகு வித்துவான்களெல்லாம் கிருஷ்ணையருடைய தைரி யத்தை மிகப் பாராட்டினார்கள். அன்று முதல் அரசருடைய கட்ட ளைப்படி கிருஷ்ணையர் பொப்பிலி கேசவையாவிடம் கனமார்க்கத் தின் விசேஷ லக்ஷணங்களைக் கேட்டுச் சில நாட்களில் தெரிந்து கொண்டார்; அம் மார்க்கத்தில் தானம் பாடும் முறையையும் அதனுட் சிறந்த சக்ரதானம் பாடும் விதத்தையும் நன்றாக அறிந்தார். எவ்வளவுக்கெவ்வளவு அப்பியாசம் அதிகமாகிறதோ அவ்வளவுக்கவ்வளவு திறமை உண்டாகுமென்று உணர்ந்தார்.

கிருஷ்ணையருடைய தந்தையாருக்கு நண்பராகிய கபிஸ்தலம் முத்தையமூப்பனருடைய குமாரரும் சிறந்த தருமவானுமாகிய [1]இராமபத்திரமூப்பனர் ஒருநாள் தஞ்சைக்கு வந்திருந்தார். கிருஷ்ணையர் கனமார்க்கத்தைக் கற்றுப் பாடிக்காட்டுவதாக அரச ருக்குமுன் உறுதிகூறியிருப்பதை வித்துவான்களால் அறிந்தார். அவர் உடனே கிருஷ்ணையரிடம்போய்ச் சந்தோஷமாகப் பேசிக் கொண்டிருந்தார்; இவருடைய தைரியத்தை வியந்தார். தங்கள் குடும்பத்துக்குப் பரம்பரை உபகாரியாக இருக்கும் மூப்பனரிடத் தில் மிகவும் அபிமானத்தோடு இவர் பேசினர்; இடையே, "ஏதோ முருகன் திருவருளால் அப்பியாஸம் பண்ணி ஸாதிக்கலா மென்று நம்புகிறேன். ஆனல் இந்த ஊரிலிருந்து ஸாதகம் பண்ண முடியாது. ஸாதகம் செய்வதால் உஷ்ணம் அதிகமாகும். நாள் தவருமல் வேண்டியபோது பசுவெண்ணெய் சாப்பிட்டுவந்தால் உடம்புக்கு அசௌகரியம் உண்டாகாது" என்று சொன்னர். உடனே இராமபத்திரமூப்பனர், "கபிஸ்தலத்துக்கு நீங்கள் வந்து விடலாம்; அங்கே தனியிடங்கள் இருக்கின்றன; வேண்டிய சௌகரி யங்களைக் கவனித்துக்கொள்ளுகிறேன். உங்களுக்கு உபசாரம் செய் வதற்கு நான் எவ்வளவோ கொடுத்து வைத்திருக்கவேண்டுமே" என்று சொன்னர்; மீண்டும் மீண்டும் வற்புறுத்தினர். அதனல் மனமகிழ்ந்த கிருஷ்ணையர் அங்ஙனமே செய்வதாகக் கூறித்

---

1. இவர் பெரியப்பு மூப்பனரென்றும் இவர் தம்பி சின்னப்பு மூப்பன ரென்றும் கூறப்படுவார்.

தம் தமையனார் முதலியவர்களுடைய ஆசீர்வாதங்களைப் பெற்றுக் கொண்டு கபிஸ்தலம் சென்றார்.

கபிஸ்தலத்தில் வடபாலுள்ள ஆற்றங்கரையில் நாணற்காடு உண்டு. அது ஜனங்கள் அதிகமாகச் சஞ்சாரம் செய்யாத இடம். அவ்விடமே தமக்கு ஏற்றதென்று அறிந்து கிருஷ்ணையர் நாள்தோறும் விடியற்காலையிலும் மாலையிலும் சென்று ஸாதகம் செய்துவரலாயினர். அங்கே மூப்பனாரால் ஒருசிறிய குடிசை அமைக்கப்பட்டது. இவர் மிக்க வன்மை உள்ள சரீர முடையவராதலின் ஸாதகம்பண்ணும்பொழுது அந்தத் தொனி நெடுந்தூரம் கேட்பதுண்டென்பர். ஒருகாட்டில் சிங்கமிருந்து செய்யும் கர்ஜனையைப்போல இவருடைய கம்பீரமான தொனி முழங்கியதென்று சொல்லிக்கொள்வார்கள். கிருஷ்ணையர் ஸாதகம் பண்ணிவந்தபொழுது இராமபத்திரமூப்பனாருடைய வேலைக்காரர்கள் சுத்தமான பசுவெண்ணெயை வைத்துக்கொண்டு அருகில் காத்திருந்து அடிக்கடி வேண்டும்பொழுதெல்லாம் அளித்து வருவார்கள். வேறு யாரும் அங்கே வாராதபடி பார்த்துக் கொள்வார்கள். மற்றவேளைகளிலும் இவருக்கு வேண்டிய எல்லா வித சௌகரியங்களையும் மூப்பனார் அமைத்து உபசரித்து வந்தார்.

கிருஷ்ணையர் நாளுக்குநாள் தம்முடைய அப்பியாஸத்தால் பயனுண்டாவதை அறிந்தார். இவருடைய ஊக்கம் மேன்மேலும் வளர்ந்தது. இவருடைய திருப்தியையே தமக்குத் திருப்தியாக எண்ணி மூப்பனார் ஆதரித்துவந்தார். பரம்பரை ஆற்றல், நல்ல சரீரம், சிறந்த சாரீரம், அஞ்சாமை, நல்லொழுக்கம், பாதுகாப் பவரின்மெய்யன்பு, இடம், பொருள், ஏவல் ஆகிய எல்லா நலங் களும் ஒருங்கே கூடப்பெற்று இறைவன் திருவருளும் வாய்த்த கிருஷ்ணையர் நாணற் காட்டிற் செய்துவந்த அப்பியாஸம் பழுத் தது. ஒரு நல்லநாளில் தாம் உறுதி கூறியபடி தஞ்சாவூர் ஸம்ஸ்தா னத்தில் அரசருடைய முன்னிலையில் பாடிக்காட்டலாமென்ற தைரி யம் இவருக்கு அப்போது உண்டாயிற்று. அதன்பிறகு மூப்பனா ரிடம் விடைபெற்று இவர் தஞ்சை சென்று தம் விருப்பத்தைத் தெரிவித்தார்.

மிகவும் அருமையானதும் மற்றவர்களால் இயலாதென்று கைவிடப்பட்டதுமாகிய ஒருமுறையைக் கருமமே கண்ணாக இருந்து கற்றுக்கொண்ட கிருஷ்ணையருடைய ஸங்கீதத்தைக் கேட்க அரசர் மிக்க ஆவலுடன் இருந்தார். பெரிய ஸபை கூட்டப் பட்டது. பொப்பிலி கேசவையாவும் இருந்தார்.

கிருஷ்ணையருக்கு நன்றியறிவு அதிகம். அவ்வளவு பெரிய ஸபையில் தமக்கு வாழ்நாள் முழுவதும் கௌரவத்தைத்தரும் ஒரு காரியத்தில் தைரியமாக முன்வருவதற்கு முதற்காரணம் தம் தந்தையாருடைய அருளென்பதை இவர் எண்ணினர்; தமக்கு அப்பியாஸம் செய்வதற்கேற்ற சௌகரியங்களை யெல்லாம் செய்துதந்த மூப்பனருடைய உதவியும் இவர் மனத்தே குடி கொண்டிருந்தது. ஆகவே, அந்த ஸபையில் பாடத்தொடங்குகையில் எந்த உருப்படியைப் பாடலாமென்று யோசித்த பொழுது இவருக்கு,

"ஏற்றகைக்கேல் லாங்கொடுக்கும்
எல்லாக்கி முத்தையனைக்
காத்திருந் தழைத்து வாடி - கன்னியே"

என்பது ஞாபகத்துக்கு வந்தது. இவருடைய தந்தையார், இராம பத்திரமூப்பனருடைய தந்தையார்மேற் பாடிய ஒருசிந்தின் முதற் கண்ணி இது; கனராகங்களில் ஒன்றாகிய புன்னாகவராளியில் அமைந்தது அந்தப் பாட்டு. முதலில் அந்தராகத்தை விதிப்படி ஆலாபனம்செய்து அந்த ராகத்தில் தானங்களைப் பாடினர்; பிறகு இந்த ஒரு கண்ணியைப்பாடி அதையே பல்லவியாக வைத்துக் கொண்டு பல ஸங்கதிகளும் நூற்றுக்கணக்கான கற்பனை ஸ்வரங் களும்பாடி ஸங்கீதக்கலையின் விசித்திரங்களையெல்லாம் காட்டிவந் தார். அருகில் இருந்த எல்லாவித்துவான்களும் வேறு ஞாபகமில்லா மல் பரவசமுற்று இருந்தபடியே இருந்து கேட்டனர். அரசருக்கு எல்லையற்ற மகிழ்ச்சி உண்டாயிற்று. கனமார்க்கத்தில் நுணுகிய இடங்களையெல்லாம் அவ்வப்பொழுது மின்னலைப்போலப் பளிச் சுப்பளிச்சென்று கிருஷ்ணையர் காட்டிக்கொண்டு போகப்போகப் பொப்பிலிகேசவையாவுக்கு வியப்பு அதிகமாகிக்கொண்டே வந்தது. மூக்கில் விரலைவைத்துக்கொண்டே கேட்டார். எவ்வளவோ சிரமப் பட்டு அவர் கற்ற வித்தையல்லவா அது? அவருக்கல்லவா அதன் உண்மை மதிப்புத்தெரியும்? இடையிடையே சிரக்கம்பத்தாலும் முகக்குறிப்பினலும் அவருக்கு உண்டான சந்தோஷத்தையறிந்த கிருஷ்ணையர் மிகவும் உத்ஸாகமுடையவராகிப் பாடினர்.

பாட்டு முடிந்தது. அரசர் பொப்பிலி கேசவையாவைப் பார்த்தார். அவர் சிறிதுநேரம் மனமுருகிப் பேசாமல் இருந்தார்; "இந்தமாதிரி அஸகாயசூரர்களை நான் எங்கும் பார்த்ததேயில்லை. காவிரிமகாநதிபாய்கின்ற இந்தமண்ணுக்கும் தஞ்சாவூர் ஸம்ஸ்தா னத்துக்கும் ஒரு தனிப்பெருமை உண்டென்பதை இப்பொழுது தான் நன்ருக அறிந்தேன். சிலகாலமே என்னிடம் விஷயத்தைத்

தெரிந்து தாமே அப்பியாஸம் செய்துகொண்டு ஒழுங்காக இதனை இந்த மகாஸபையில் பாடிய இவர் மிகவும் தீரர். இவருக்கு சர்வேசுவரன் தீர்க்காயுளேயும் அரோக திடகாத்திரத்தை தந்து காப்பாற்றவேண்டும்'' என்றார். தம் நாட்டிலும் சிறந்த கனமார்க்க வித்துவான் ஒருவர் உண்டாகிவிட்டாரென்னும் பெருமையைத் தாம் அடைந்தது குறித்து அரசருக்குப் பெரு மிதம் உண்டாயிற்று. கிருஷ்ணயருக்குச் சிறந்த பரிசுகள் வழங்கப்பட்டன. அன்றுமுதல் கிருஷ்ணயரைக் கனம் கிருஷ்ணயர் என்றே யாவரும் வழங்கிவரலாயினர்.

---

## புத்தரின் செல்வாக்கு

புத்தரைப் போலத் தம் வாழ்நாளிலேயே மனித சமூகத்தாரிடம் அதிகமான செல்வாக்கைப் பெற்றிருந்த வேறொருவரையும் உலக சரித்திரத்திலிருந்து நான் அறியேன். புத்தரைத் தவிர மற்றவர்களுடைய வசீகரசக்தி படிப்படியாக மக்களை இழுத்திருக்கின்றது. அதுவும், அநேகமாக அவர்கள் சித்தியடைந்த பிறகே வேலை செய்திருக்கின்றது என்று கூற வேண்டும். புத்தருடைய வாழ்நாளிலேயே கோடிக்கணக்கான மக்கள் அவர் வசமாகிவிட்டனர். ஒரு பழைய நூலிலிருந்து தெரிவதாவது: 'அவர் பிக்ஷைக்காக ஊர்களிலே புகுந்துவிட்டால் பலர் அவரைத் தரிசிக்கக் கும்பல் கூடிவிடுவார்கள். ஒரு நாள் அவர் ஓர் ஊருக்குப் பிக்ஷைக்குச்சென்றார்; அவர் வருகையை அறிந்த ஆண்களும் பெண்களும் திரள் திரளாக அவரைத் தரிசிக்க விரைந்துசென்றனர். அவரைப்பார்க்கவும் அவருடைய சொற்களைக் கேட்கவும் அவாகள் அதிக ஆவல் கொண்டிருந்தனர். அவர்கள் "குருவே, ஏதாவது இரண்டு வார்த்தைகளைப்பேசுங்கள்; எங்களுக்கு விவேகத்தைப் போதியுங்கள்'' என்றார்கள்.'

—டி. எஸ். வாஸ்வானி.

# இலக்கியம்



## சில தமிழ்நூல்களின் காலக்குறிப்புக்கள்

எஸ். அனவரதவிநாயகம் பிள்ளை, எம். ஏ., எல். டி.

---

(201-ஆம்பக்கத் தொடர்ச்சி)

### 4. அரிச்சந்திர சரித்திரம்

அரிச்சந்திர புராண மெனவும் வழங்கும் இந்நூல் 96 ஆண்டுகளுக்கு முன் ஹேவிளம்பி ௵ பங்குனி ௴ [கி. பி. 1838] திருத்தணிகைச் சரவணப்பெருமாளையர் காஞ்சீபுரம் குமாரசுவாமி தேசிகர் இருவராலும் பரிசோதித்து அச்சிடப்பட்டது.

இந்நூற் பாயிரத்தில் ஆக்கியோன் பெயர் முதலியன உணர்த்தும் செய்யுள்கள் வருமாறு :

தண்கவிகைக் குரிசிலரிச் சந்தி ரன்றன்
சரிதமதைத் தாரணியோர் விருப்ப மெய்த
வண்கவிஞர் வகைவகையே வகுத்து ரைத்த
வடமொழியுந் தென்மொழியின் வழுவி லாத
வெண்கவியுங் கண்டரங்கின் மாத ராடல்
விதங்கேட்டு மழையெனவே வெருண்டு சோலைக்
கண்கவிகள் குதிபாயு (ெ)நல்லூர் வீர
கவிராச னேவிருத்தக் கவிசெய் தானே.

விதியினர சிழந்தவரிச் சந்தி ரன்றன்
வியன்கதையாம் வெண்கவியை விருத்த மாக்கி
அதிவிதமாங் கலியுகத்தில் வருச காத்த
மாயிரத்து நானூற்று நாற்பத் தாறில்
சதுமறைதேர் புல்லாணித் திருமான் முன்னே
சக்கரதீர்த் தக்கரைமேன் மண்ட பத்துள்
கதிதருசீர் (ெ)நல்லூர்வாழ் வீர னாசு
கவிராசன் கவியரங்க மேற்றி னானே.

இச் செய்யுள்களால் வீரகவிராயர்க்கு வடமொழியிலுள்ள ஹரிச்சந்திர சரித்திரமும், தமிழிலுள்ள அரிச்சந்திர வெண்பாவும்,

நாடகமேடைகளில் மாதர் சரித்திரத்தை நடித்த விதமும் ஆதாரங் களாயின வென்பதும், நூல் செய்த காலம் சகம் 1446 [கி. பி. 1524] என்பதும் வெளியாயின.

## 5. அருணகிரி புராணம்

திருவண்ணுமலையின் பெருமையுரைக்கும் அருணகிரி புராணத்தை இயற்றியவர் சிதம்பரம் மறைஞானதேசிகர். பாயிரத்தில் நூல் செய்த காலம் குறிப்பிடப்பட்டது :

ஆண்டுகலி யுகத்தினுக்கு நானூற்று முப்பத்தீ ராயி ரத்து
ளீண்டுறுநா லாயிரமு மறுநூறு மைம்பத்து நான்கு நீங்க
வீண்டுபிர மாதீச வாண்டின்மக ரத்தெழுவா யேகா தேசி
தீண்டிரவி வாரத்தின் மான்மாகேந் திரம்வணிகந் திகழும்போதில்.

தருணமதிச் சடைமுடியா னருணகிரிச் சதாசிவன்சந்
நிதிவா மத்திற்
புரவிகள்பூண் மண்டபத்தி ஞல்வேத மாகமங்கள்
புராணமெல்லாந்
திரிவுமறத் தேர்ந்துணர்ந்த வைதிகருஞ் சைவர்களுந்
திகழ்சங் கத்தி
னருணகிரி வாந்தமிழா லறைகவென வவாருளப்
பகர்வாமன்பால்.

கலியப்தம் 4654 செல்லாநின்ற காலத்தில் பிரமாதீச ஆண்டில் தை 7உ ஏகாதசி ஞாயிற்றுக்கிழமை யன்று இப்புராண மியற்றும் படி ஆசிரியர்க்கு ஆஞ்ஞை வந்தது. பிரமாதீச தை கி.பி. 1555 ஆகும்.

## 6. திருவாரூர்ப் புராணம்

கமலாலயமென்னும் திருவாரூர் மான்மியத்தை ஸ்காந்த மஹாபுராணத்தில் நாகரகண்டத்தி லுள்ளபடி யுரைக்கும் இப் புராணம் பாண்டிநாட்டிலே யுள்ள அளகாபுரியினராகிய சம்பந்த முனிவர் பாடியதென்பது அந்நூலில் பாயிரத்துக் காணப்படும்

நாத ஞர்கம லாலய நாகர கண்டஞ்
சூத மாமுனி சொற்றுள தொன்முறை வழாது
தீது தீர்ந்தமாண் செந்தமிழ்ப் பனுவலிற் செய்தான்
மூது சால்புக ழளகைவாழ் சம்பந்த முனிவன்

என்னுஞ் செய்யுளால் அறியப்படும்.

அந்நூலை அவர் இயற்றிய காலம் மேற் செய்யுளை யடுத்து வரும்

பார்புகழ்ச காப்தமா யிரத்தைஞ் ஞூற்றுப்
 பதினான்கா கியபிங்க லப்பே ராண்டிற்
சீர்பரவு பங்குனியுத் திரத்துத் தேவா
 சிரயனெனுங் காவணத்திற் றேவர் போற்றுங்
கார்பரவு கண்டாா ரூர்ப்பு ராண
 காதைநா கரகண்டங் கலைவல் லோர்மு
னேர்பரவு பேரளகை வணிகர் கோமா
 னிசைவளர்சம் பந்தனரங் கேற்றி னானே

என்னுஞ் செய்யுளால் அறியக்கிடக்கும். இதிற் குறித்த காலம் சகம் 1514 பிங்கல ஆண்டு பங்குனிமாசம். அதற்குச் சமமான கிறிஸ்தவ ஆண்டு கி.பி. 1593 ஆகும்.

இனி, சம்பந்த முனிவர்க்குக் குரு நிரம்ப வழகிய தேசிகர் என்பது நூலில் அவர்க்கு வணக்கம் சொல்லப்பட்டமையால் அறியலாம்:

உருநிரம்பு பவப்பிணிதீர் கடற்சேது புராணமருந்
 துதவி யோவாத்
திருநிரம்பு ஞானமணி மருவிநெடுஞ் சேண்விளங்கித்
 தெய்வக் கல்வித்
தருநிரம்பி யளவொடசை வின்றியரு ளருவிதழீஇத்
 தயங்கு மெங்கள்
குருநிரம்ப வழகனெனுங் குணக்குன்றைத் துதித்திறைஞ்சிக்
 குறித்து வாழ்வாம்.

இதற்கு முன் வந்த செய்யுள் கமலை ஞானப்பிரகாச தேசிகர் துதி:

இருந்தமிழ்ப் புலவ ருய்வா னிபவன மழவை யென்னுந்
திருந்துசீர்த் தலபு ராணத் தெள்ளமு தளித்த செல்வப்
பெரும்புகழ்க் கமலை ஞானப் பிரகாச னெனும்பேர் பெற்ற
வருங்கலைத் திரைய ரூத வருட்கடற் கன்பு செய்வாம்.

## 7. மச்சபுராணம்

வடமொழிப் பதினெண்புராணங்களுள் ஒன்றாகிய மச்சபுராணம் திருநெல்வேலிச் சீமையை யரசுபுரிந்த வடமலையப்பபிள்ளையனால் 5000 விருத்தங்கள் கொண்ட நூலாக இயற்றப்பட்டது. இந்நூலின் காலம் இறுதிச் செய்யுளிற் குறிக்கப்பட்டது:

மைப்புயல் வண்ணன் மச்சமா யுரைத்த
 மச்சமாம் புராணத்தைத் தமிழா
லிப்புவிக் கெண்ணூற் றெண்பத்தி ரண்டாண்
 டிசைந்திடு மவ்விய வருடத்

தைப்பசி மதியி லொப்பிலாத் தினத்தி
லமுதெனக் களியென வார்க்குஞ்
செப்பிய விரசை வடமலை மகிபன்
செல்வமோ டினிதுவா ழியவே.

இதிற் குறிக்கப்பட்ட ஆண்டு 882. திருநெல்வேலியில் வழங்கும் கொல்லமாண்டே இந்த ஆண்டாகல் வேண்டும், வியவருடத்திற் கொத்ததும் அதுவே. கி.பி. 1706-ல் வியவருடம் தொடங்கிற்று. ஐப்பசிமாசம் கி.பி. 1707 ஆகின்றது.

## 8. திருக்குற்றாலத்தலபுராணம்

திருநெல்வேலியை யடுத்துள்ள திருக்குற்றாலத்தலத்தின் பெருமை யுரைக்கும் இப்புராணம் அவ்வூர்க்கருகில் வசித்த திரிகூடராசப்ப கவிராயரால் இயற்றப்பட்டது. அவர் இந்நூலை யியற்றிய காலம் அறிவதற்கு ஏது வில்லையாயினும் அவர்க்கு முத்துவிஜயரங்க சொக்கநாத நாயகர் கொடுத்த குறவஞ்சி மேட்டுத் தாமிர சாஸனத்தால் அவர்காலத்தை ஒருவாறு தெரிந்துகொள்ளலாம். அச் சாஸனம் திருக்குற்றாலக்குறவஞ்சி யென்னும் நாடக நூலை யியற்றியதற்காக அவர்க்குக் கொடுக்கப்பட்டதாகத் தெரிகிறது. அச் சாஸனம் வருமாறு:

சாலிவாகன சகாப்தம் 1640-க்குச் செல்லாநின்ற கொல்லம் 891-ஆு தை மீ 11உ ராஜமானிய ராஜஸ்ரீ முத்துவிஜயரெங்க சொக்கநாத நாயக்கரவர்களோம் திருக்குத்தாலம் ராஜப்பன் கவிராஜருக்குப் பொறுப்புப் பட்டயம் எழுதிக் கொடுத்தபடி சுவாமி திருக்குத்தாலநாத சுவாமிபேரில் குறவஞ்சி நாடகம் பாடி அரங்கேத்தினதற்கு மேலச்செண்பகக்காவில் கருப்புக்கட்டி ஊத்துமேட்டில் கல் உ-ல் சங்கிலி அளவு ஹீ ௩வ-யும் ரூஉ-யும் விட்டுக் கொடுத்தபடியினாலே பொறுப்பு ஆு க-க்கு தீர்வை வீதம் குடுத்து கையாடிக்கொண்டு சன்னதி பிரபந்த வித்துவானாக நடந்து வருவாராகவும். இந்த நிலத்துக்கு வேறே வரி நாட்டுச் சிலவு காவல் கூலி போர் நெல் குடுக்கத் தேவையில்லை யென்று கட்டளை யிட்டபடியினாலே இந்தப்படிக்குக் கையாடிக் கொள்ளவும்.

கையொப்பம் தெலுங்கில் - ஸ்ரீராமசெயம்.

இங்குச் சொல்லிய கொல்லமாண்டிற்குப் பொருந்தும் சக வருஷம் 1636. அது கி.பி. 1716-ஆ யிருக்குமென்பதிற் சந்தேகமில்லை. முத்துவிஜயரெங்க சொக்கநாயக்கர் காலம் கி. பி. 1706-1718.

## 9. சிவரகசியம்

ஸம்ஸ்கிருதத்தில் சிவரகசியமென்னும் பெயரால் இரண்டு நூல்கள் உண்டு. ஸ்காந்தமஹாபுராணத்திலுள்ள சிவரகசியம் ஒன்று; இதிகாசமாகிய சிவரகசியமொன்று. இதிகாசம் பன்னிரண்டு அம்சங்களையுடையது. அவற்றுள் மூன்றாவது அம்சத்தைத் திருவாரூர் ஒப்பிலாமணிதேசிகர் மொழிபெயர்த்து 4090 பாடலாகச் செய்தார். அதன் காலம் கி. பி. 1718 என்பது பின்வரும் செய்யுளால் விளங்கும்:

மன்னர்புகழ் சரபோசி மகாராச ராசன்
  மாநிலங்காத் திடுநாளிற் றஞ்சைமா நகரிற்
றுன்னுமே விளம்பியுற்ற மகரமதி யைந்திற்
  சோதிசிவ ரகசியமொப் பிலாமணிசொற் றமிழை
யிந்நிலத்தி னரங்கேறச் செய்தனர்பொன் மாறை
  யெழில்சேருந் தீராத வினைதீர்த்தான் பாகைப்
புன்னைவன நாதனிவர் சைவநெறி வளர்க்கும்
  பூபால ரவனியெங்கும் புகழினிதோங் கிடவே.

இச் செய்யுளால் சிவரகசியம் தஞ்சையைச் சரபோசியரசர் ஆண்ட நாளில் ஏவிளம்பி ௵ தை ௴ 5 ௳ சுவாதி நட்சத்திரத்தில் அரங்கேற்றப்பட்ட தென்பது வெளியாகின்றது. சரபோசி யரசர் தஞ்சையை யாண்ட காலம் கி. பி. 1711—1727. அக்காலத்தில் ஏவிளம்பிக்கு ஒத்தது கி. பி. 1718.

நூல்செய்தார் பெயரையும் ஒரு செய்யுள் தெளிவாகக் குறித்தது:

திருமருவு கும்பகோ ணத்தில் வாழுஞ்
  செல்வமிகு பலர்சனங்கள் சிவன்பா லன்பர்
பொருவில்சிவ ரகசியபு ராண மாகும்
  பொருந்தும்வட மொழிதமிழாற் புனைவா யென்னத்
தருமமிகு தவவணியாஞ் சைவன் றியாகர்
  சந்நிதியில் வரிசைபெறுந் தலைமை பூண்டோ
னிருமைநல்கா ரூர்ப்பிறந்தோ ஞரு ரன்சே
  யிசைகொளொப்பி லாமணிதா னிசைத்த வாறே.

இதனால் ஒப்பிலாமணிதேசிகர் 'திருவாரூர்ப்பிறந்தோர்களெல்லார்க்கு மடியேன்' என்று சுந்தரமூர்த்திகளாற் புகழப்பெற்றாருள் ஒருவரென்பதும் தியாகேசர் சந்நிதியில் வரிசைபெறுந் 'தமிழ்மொழிப்பண்டார'மென்பதும் விளங்கும். தவவணியென்பது இவர் கோத்திரம். இவர் திருவாரூர்ப்பிறந்தவராயினும் அதனுக்

கணித்தான புதுப்பத்தூரென்னுங் கிராமமே இவருக்குரியது. இன்னும் இவர் கும்பகோணப்புராணம் பாடினர்; இலக்கணவிளக்க ஆசிரியர் வைத்தியநாத தேசிகரிடத்துக் கல்விபயின்றவர். இவ்விவரங்களனைத்தையும் அவ்வாசிரியர் பரம்பரையில்வந்த திருவாரூர் சோமசுந்தரதேசிகர் செந்தமிழ் பதின்மூன்றும் தொகுதியில் 'சிவரகசிய ஆராய்ச்சி'யென்னுந் தலைப்பின்கீழ்த் தெளிவாகக் கூறியுள்ளார்.

## 10. செங்கழுநீர்விநாயகர் பிள்ளைத்தமிழ்

சிவஞானமுனிவர் இயற்றிய இப்பிரபந்தம் மதுரை ஞானசம்பந்தப் பிள்ளையால் முனிவரது ஏனைப்பிரபந்தங்களோடு சேர்த்து கி. பி. 1892-ல் முதல் அச்சிடப்பட்டது. அப்பதிப்பிற் காணும் சிறப்புப்பாயிரச்செய்யுள்கள் சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகத்தார் கி. பி. 1929-ல் வெளியிட்ட பதிப்பில் எக்காரணத்தாலோ விடப்பட்டன. அவை வருமாறு:

இலகுசக னீரெட்டு நூற்றுநாற் பத்தேழி
　　னிற்கரங் கும்பமிருபத்
　தேழிரே வதிவெள்ளி பூர்வபக் கத்துதிகை
　　யேர்க்கவுல வஞ்சுப்பிரம்
கலவியுறு சுபதினங் கன்னிலக் கினமதிற்
　　கலைசைப் பதிக்குள்வாழ்செங்
　கழுநீர் விநாயகர்த மீதுபிள் ளைத்தமிழ்க்
　　கவிபாடி வானேருண
அலைமலிக டற்கடைந் தமிழ்தூட்டு மாலென்ன
　　வவனியிற் புலவர்செவியால்
　ஆர்ந்திடத் துறைசைவாழ் சிவஞான தேசிக
　　னரங்கேற்றி னனுதலால்
நலசுகுண மணிகுவளை யணிபுயன் வீரப்ப
　　னல்குமக ராசயோகன்
　நங்கள்கே சவபூப னநுசர்சேய் சுற்றமு
　　நன்மைதரு வாழ்வுறுகவே.

இன்றிழக்கு மூக்கன்றே யீர்ந்துமா னங்கொடுத்தான்
என்றுசய வீரனையே யேத்துவாள் - மன்றவே
நற்கலைமான் றூயசிவ ஞானமுனி யோதுதமிழ்ச்
சொற்சுவையை நோக்குந் தொறும்.

இவ்விரண்டுள் முதற்செய்யுளில் நூல் அரங்கேற்றிய காலம் குறிக்கப்பட்டது. சகம் 'ஈரெட்டுநூற்று நாற்பத்தேழினில்' என்பது 1647 ஆகும். கரவருஷத்திற்குப் பொருந்துவது 1694

ஆதலால் ஈரெட்டுநூறு இருநாற்பத்தேழு என இரண்டை ஈரிடத்துங்கூட்டிப் பொருள் செய்யவேண்டும். அவ்வாண்டு கி. பி. 1773 ஆகும்.

சிவஞானமுனிவர் சிவபரிபூரணமடைந்த தினத்தைக் குறிக்கும்

மன்னும் விசுவா வசுவருட மேடமதி
யுன்னிரவி நாட்பகலோ தாயிலியம் - பன்னுந்
திருவாள னெங்கோன் சிவஞான தேவன்
றிருமேனி நீங்கு தினம்.

என்னும் வெண்பாவின்படி அவர்காலம் கி. பி. 1785-ல் முடிந்த தென்று தெரிகிறது. அதற்குப் பன்னிரண்டு வருடங்களுக்கு முன் கலைசைச் செங்கழுநீர்விநாயகர் பிள்ளைத்தமிழ் செய்யப்பட்டதாகும்.

## 11. சூதசங்கிதை

ஸ்காந்தமஹாபுராணத்தில் ஒருபகுதியாகிய இது வல்லூர்த் தேவராஜ பிள்ளையால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு மஹா வித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் பார்வையின்பேரில் முதல் அச்சிடப்பட்டது. அவர்களுடைய சிறப்புப்பாயிரமும் இதற்கு உண்டு. இதில் குருவணக்கமாக மீனாட்சிசுந்தரம் பிள்ளை யவர்கள் துதி காணப்படுகிறது. இஃது இயற்றப்பட்ட காலத்தைக் குறிக்குஞ் செய்யுள்

ஏராருஞ் சகாத்தமொரா யிரத்தெழுநூற் றெழுபத்
  தியைமூன்றி னிகழ்சாதா ரணவாண்டிற் றேஎன்
பேராரு மதியிருபத் தைந்தாநாள் பரிதிப்
· பெருவாரம் பஞ்சமிநல் லோணமெழி றிகழு
நீராருங் கடகவிலக் கினமதனிற் சூத
  னிகழ்த்தியசங் கிதையையியற் றமிழ்ப்பாவி னியற்றிச்
சீராரும் புலவர்மகிழ் தரவரங்கேற் றினனாற்
  சிவனடியைப் பணிதேவ ராசநா வலனே

எனச் சகம் 1773 [கி. பி. 1851] சாதாரணவருஷம் கார்த்திகை மாதத்தைச் சுட்டியது. மஹாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை யவர்கள் சரித்திரத்தை யெழுதிய மஹாமஹோபாத்தியாய டாக்டர் சாமிநாதையரவர்கள் முதற்பாகம் பக்கம் 126-ல் சூதசங் கிதை இயற்றிய வரலாறு கூறுங்கால் பிள்ளையவர்களே அதனை யியற்றியதாக உரைத்தனர்.

# திருக்குற்றாலக் குறவஞ்சி

ராவ்சாகிப் வே. ப. சுப்பிரமணிய முதலியார், ஜி.பி.வி.ஸி.

---

## முன்னுரை

காவியங்களுள் கம்பராமாயணமும், உபகாவியங்களெனத் தக்க ஸ்தலபுராணங்களுள் காஞ்சித்தலபுராணமும், கோவைகளுள் திருச்சிற்றம்பலக்கோவையாரும், பரணிகளுள் கலிங்கத்துப் பரணியும், பிள்ளைத்தமிழ்களுள் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழும், கலம்பகங்களுள் திருவரங்கக் கலம்பகமும், அந்தாதிகளுள் மதுரைப் பதிற்றுப்பத் தந்தாதியும், காதல்களுள் கூளப்பநாயகன் காதலும், மடல்களுள் வருணகுலாதித்தன் மடலும், பள்ளுகளுள் முக்கூடற் பள்ளும், சிந்துகளுள் அண்ணாமலை ரெட்டியார் காவடிச்சிந்தும், தேசிய கீதங்களுள் சுப்பிரமணிய பாரதியார் கீதங்களும், குறவஞ்சிகளுள் குற்றாலக்குறவஞ்சியும் முதலில்வைத்து எண்ணத் தக்கவையென நன்கு மதிக்கப்பெற்றவை.

குற்றாலக்குறவஞ்சியை இயற்றியவர் திரிகூடராசப்பகவிராச மூர்த்தியெனப் பேர்பெற்றவர். செம்பாகக்கவிகள் எங்கும் திகழ்வதாயும், திரிபு யமகம் மடக்கு சிலேடை கற்பனை சமத்காரம் அலங்காரம் ஆகிய பலவகைச் சுவைபொருந்திய கவிகளெல்லாவற்றுக்கும் சிறந்த மாதிரிக்கவிகள் காணப்படுவதாயும் உள்ள ஒருநூல் உளதோ? உளதேல், அந்நூல் எந்நூலெனின், இந்நூலே யெனத் தக்க குற்றாலத்தலபுராணம் முதலிய பல இனியநூல்களுக்கு அவர் ஆசிரியர் ஆவர். அவர் பாட்டுக்களுள் எதுவும் யாதாயினும் ஒருவகை நயம் அமைக்கப்படாததைக் காண்பதரிது. அவர், தென்னிந்திய சுகவாசத்தலங்களுள் ஒன்றாயும், பார்க்கமட்டும் பயன்படும் மிகப் பலவான நீர்வீழ்ச்சிகள் போலன்றிக் குளிக்கவும் உதவும் மிகச் சிலவேயான நீர்வீழ்ச்சிகளுள் ஒப்புயர்வற்றதெனப் போற்றப்பெற்ற வடஅருவியென்ற சிறந்த அருவியை யுடையதாயும், அவ்வருவி வீழும் மலைக்காட்சிமுதலிய அழகிய இயற்கைப் பொருட்காட்சிகள் நிரம்ப அமைந்ததாயுமுள்ள குற்றாலத் தலத்துக்குப் பக்கத்திலிருக்கும் மேலகரமென்னும் ஊரிலே சைவ வேளாளர் மரபிலே பிறந்து வளர்ந்தவர்.

ஆரியதிராவிட இலக்கண இலக்கிய [1]பாராவார பாரங்கதராக வும், சைவ சித்தாந்த ஞான போதகாசிரிய திலகராகவும், சங்கீத ரசிகசிகாமணியாகவும், சாகித்திய சார்வபௌமரான மகாவித்து வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை முதலிய சாகித்யவித்துவான்களுக் கும் சங்கீதவித்துவ சிரேஷ்டரான மகாவைத்தியநாதையர் முதலிய சங்கீத வித்துவான்களுக்கும் வடமொழி வாணருக்கும் அவரவர் வித்தைத் திறமைக்குத் தக்க பரிசுகள் வழங்கி ஆதரித்துவந்தவராக வும், சைவசமயத்துடன் தமிழ் ஆரியம் சங்கீதம் ஆகிய நான்கையும் தமது அருமை மக்களாகக்கொண்டு தாய்போற் பேணிவளர்த்த பெருங் கருணைவள்ளலாகவும் விளங்கிய திருவாவடுதுறை ஆதீன கர்த்தர் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிகமூர்த்தியின் பூர்வாச்சிரம குலமுதல்வராம் தனிப்பெருமைவாய்ந்த இந்நூலாசிரியரது சிறப்பு, ‘தக்கார் தகவில ரென்ப தவரவர், [2]எச்சத்தாற் காணப் படும்’ என் பதனால் நன்கு விளங்கும்.

இந்நூலாசிரியர்காலத்தில் பாண்டிநாட்டை அரசாட்சிசெய்த முத்துவிசயரங்க சொக்கலிங்க நாயக்கர் இந்நூலின் அருமை பெருமைகளை நன்கறிந்து பாராட்டி ஆசிரியருக்குக் **குற்றாலநாதர் கோயில் வித்துவான்** என்னும் கௌரவப் பட்டப்பெயரும் அக் கோயிலுக்குச் சிறிது தூரத்திலேயுள்ள **குறவஞ்சிமேடு** எனவழங் கும் நெல்வயல் மானியமும் அளித்திருப்பதனால், கற்றோரேயன்றி மற்றோரும் இந்நூலின் மேன்மையை அறிவார். இந்நூல் சிலகாலத் துக்குமுன்வரையும் பள்ளிக்கூடப்பாடமாகப் பிள்ளைகள் இசை யோடு பாடும்படி கற்பிக்கப்பட்டுவந்தது.

இந்நூல் மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான் திருவாளர் **மு. ரா. அருணாசலக் கவிராயரால்** குறிப்புரையுடன் இரண்டுமுறை பதிப்பிக்கப்பட்டிருக்கிறது. இரண்டாம் பதிப்பு மதுரைத் தமிழ்ச் சங்க அச்சியந்திரசாலையில் 1927-ஆம் வருஷம் பதிப்பிக்கப் பட்டது.

சில சமயங்களில், இந்நூலின் சில பகுதிகளைப்படித்து அவற் றில் யான்கண்ட நயங்களை எடுத்துக் கூறக்கேட்டு இன்புற்ற சிலர் குறவஞ்சியின் இனியபகுதிகளையும் அவற்றின் நயங்களையும் வெளியிட வேண்டுமென்று விரும்பினராதலின் இதனை யெழுத லானேன்.

---

1. பாராவாரம் பாரம் கதர் - கடல் (களைக்கடந்தஅவை) களின் கரை களை அடைந்தவர்.

2. எச்சம் - சந்ததி.

இதனிற் காணப்படுங் குற்றங்களை நீக்கிக் குறைகளை நிரப்பிக் கொள்ளும்படி 'கலைமகள்' வாசகரை வேண்டிக்கொள்கின்றேன்.

## கவிநயம்

### விநாயகர் துதி

பூமலி இதழி மாலை புனைந்தகுற் றாலத் தீசர்
கோமலர்ப் பாதம் போற்றிக் குறவஞ்சித் தமிழைப் பாட
மாமதத் தருவி பாயும் மலையென வளர்ந்த மேனிக்
காமலி தருப்போல் ஐந்து கைவலான் காவ லானே.

[மலி - நிறைந்த. இதழி - கொன்றை. கோ - மேன்மை. மா - பெருமை. கா - சோலை. காமலி தரு - (இந்திரனது) சோலையில் (கொடைத்தன்மை) நிறைந்த (ஐந்து) மரங்கள்.]

குற்றால நாதர்மீது குறவஞ்சி பாடுதற்கு விநாயகர் காப்பாவார் என்பது கருத்து.

குற்றாலநாதர் திருமேனிக்கு மலையும் அவர் கன்னத்துவாரங் களினின்றுவழியும் மதநீருக்கு அருவியும் உவமை.

'காத்தற்குரிய உறுப்புக் கையென்பதை அம்மொழி விளக்கி நிற்பதுடன் கைவலான் காவலானென்ற அடுக்குமொழியணி' அமைந்திருப்பது காண்க.

வள்ளல்களின் கைகளுக்குத் தேவதருக்களை உவமித்தல் மரபு. மற்றவள்ளல்களுக்குக் கை இரண்டு. விநாயக வள்ளலுக்கோ, ஐந்துகைகள் உண்டு. தேவலோகத்துப் பஞ்ச தருக்கள் (ஐந்து மரங்கள்) மற்ற வள்ளல்கள் கைகளுக்குக் கொடைத்தன்மைமட்டில் ஒப்பாக, அத்தருக்கள் விநாயக வள்ளல் கைகளுக்குக் கொடைத்தன்மையோடு எண்ணிலும் ஒப்பாகுதல் குறிக்க, 'தருப்போற் கைவலான்' என்னாது, 'தருப்போல் ஐந்து கைவலான்' என்றார்.

'ஐந்துதருப்போல் ஐந்து கைவலான்' என்னலாமே யென்றால், அது, (தொகை ஒப்புமை, கொடை ஒப்புமை என்னும் இரட்டை ஒப்புமை காரணமாக) நயமுடையதாயினும், 'தருப்போல் ஐந்து கைவலான்' என்பதுபோல, ஊன்றி யுணர்ந்து உவக்கும் விசேட நயமுடையதாகாதென்க.

### குழல்வாய்மொழியம்மை துதி

(2) தவளமதி தவழ்குடுமிப் பனிவரையில் முளைத்தெழுந்து
தகைசேர் முக்கட்
பவளமலை தனில்ஆசை படர்ந்தேறிக் கொழுந்துவிட்டுப்
பருவ மாகி

அவிழும்நறைப் பூங்கடப்பந் தாமரையும் ஈன்றொருகோட்
டாம்பல் ஈன்று
குவலயம்பூத் தருள்கொடியைக் கோதைகுழல் வாய்மொழியைக்
கூறு வோமே.

[தவளமதி - வெண்மையான சந்திரன். குடுமி - உச்சி. பனி வரை - இமயமலை. தகை - அழகு. பவளமலை - சிவன்; உவம ஆகுபெயர். பருவம் - பக்குவம். அவிழ்தல் - மலர்தல். நறை - தேன். தாமம் - மாலை. கடப்பந் தாமரை - கடப்பமாலையணிந்த முருகக்கடவுளை. கோடு - கொம்பு, குளக்கரை. ஆம்பல் - யானை, அல்லி. ஒருகோட்டாம்பலை - ஒரு கொம்பையுடைய யானையை, ஒருகுளத்தில் உண்டாகிய அல்லிப்பூவை. குவலயம் - உலகு. கருங்குவளை - நீலோற்பலம். பூத்தல் - பெற்றெடுத்தல், மலர்தல்.]

இமயமலையிலே பிறந்து பவளமலைபோலும் சிவபிரானைத் தழுவி ஒரு கொம்புள்ள யானை முகத்தையுடைய விநாயக மூர்த்தியையும் கடப்பமாலை யணிந்த முருகக்கடவுளையும் பெற்றெடுத்தவளும் உலகம் ஈன்றவளுமான குழல்வாய்மொழியம்மையைத் துதிசெய்வோமென்பது கருத்து.

'இதில் கொடியென்றதற்கேற்பத் தாமரை, ஆம்பல், குவலயம் (நீலோற்பலம்) ஆகிய மலர்களைப் பூத்தெனக்கூறிய சிலேடை நயம்காண்க'.

ஒரு பசுங்கொடி ஒருமலைமேலுள்ள நிலத்தில் உண்டாகியது (இயல்பு); அது, (தான் உண்டாகிய மலையில் வளர்ந்தமையால் அம்மலையினின்று தாவி) மற்றொருமலைமேற் படர்ந்தது (ஆச்சரியம்); நிலத்தில் உண்டாகிய கொடி, நீரில் உண்டாம் பூவைப் பூத்தது (ஆச்சரியத்துக்குமேல் ஆச்சரியம்); நீர்ப்பூவிலும் ஒரு சாதிப் பூவைப் பூத்ததோடு நில்லாமல், தாமரை அல்லி குவளையாகிய மூன்றுசாதிப் பூக்களைப் பூத்தது (பரமாச்சரியம்) என்ற விசேடப் பொருளுக்கிடமாக இப்பாட்டு இயற்றப்பட்டிருப்பது பாராட்டத்தக்கது.

அப்பர் சம்பந்தர் சுந்தரர் துதி

(3) தலையிலே ஆறிருக்க மாமிக் காகத்
தாங்குகடல் எழ்அழைத்த திருக்குற் றாலர்
சிலையிலே தடித்ததடம் புயத்தை வாழ்த்திச்
செழித்தகுற வஞ்சிநா டகத்தைப் பாட
அலையிலே மலைமிதக்க ஏறி னானும்
அத்தியிலே பூவைஅந்நாள் அழைப்பித் தானும்
கலையிலே கிடைத்தபொருள் ஆற்றில் போட்டுக்
கனகுளத்தில் எடுத்தானும் காப்ப தாமே.

[ஆறு - கங்காநதி, அஞ்சுக்கடுத்த எண். மாமி: காஞ்சன மாலை. சிலையில் - மலையைக் காட்டிலும். தடம் - விசாலம். அலை - கடல். மலை - கல் (ஆகுபெயர்). அத்தி - எலும்பு, அத்தி மரம். பூவை - பெண் (ஊ), மலரை. கலையிலே - தேவாரப் பதிகத்தால். ஆறு: விருத்தாசலத்து மணிமுத்தாநதி. கனம் - மேன்மை. குளம்: திருவாரூர்க் கமலாலயமென்னும் தெப்பக்குளம்.]

ஆறு இருக்க ஏழு அழைத்த என எண்கள் பற்றிய விநோதப் பொருள் தொனித்தல் காண்க. மூவரையும் அவர்கள் பேர்களாலன்றிச் செயல்களால் தெரிவித்திருக்கும் நயத்தையும் கண்டு கொள்க.

அத்திமரம் பூவாமற்காய்க்கும் மரமென்பது மரபு. ஆதலால், 'அத்தியிலே பூவை அந்நாள் அழைப்பித்தான்' என்பதில் பூவாத மரத்தைப் பூக்கச்செய்தானென்ற தொனிப்பொருள் புலப்படல் கவனிக்கத்தக்கது.

### அகத்தியர் மாணிக்கவாசகர் துதி

(4) நித்தர்திரி கூடலிங்கர் குறவஞ்சி நாடகத்தை
நிகழ்த்த வேண்டி
முத்தர்திரு மேனியெல்லாம் உருகவே தமிழ்உரைத்த
முனியைப் பாடி
இத்தரையில் ஆத்துமம்விட் டிறக்கும்நாள் சிலேட்டுமம்வந்
தேறு வண்ணம்
பித்தன்அடித் துணைசேர்ந்த வாதவூ ரானடிகள்
பேணு வோமே.

[நித்தர் - சிவன். நிகழ்த்தல் - சொல்லல். முத்தர் - விட்டவர்; இயல்பாகவே பாசங்களால் விடப்பட்டவர்; சிவன். தமிழ் உரைத்த - (தோத்திரமாகத்) தமிழ் (ப்பாட்டுக்களைக்) கூறிய. முனி: அகத்தியமுனி. தரை - பூமி. ஆத்துமம் - உயிர். பித்தன் - சிவன். வாதவூர்: மாணிக்கவாசகரது ஊர்.]

குற்றாலக்குறவஞ்சியைக் கூறுதற்கு உதவும்படி அகத்தியமுனிவரையும் மாணிக்கவாசகரையும் வழிபடுவோமென்பது கருத்து.

'இக் கவியில் வாதவூரானென்றதற்கேற்ப வாதத்துக்கினமாகிய பித்த சிலேட்டுமங்களையும் அவற்றால் வரும் பிணிகளைப் போக்கும் வைத்தியத்தலைமையாசிரியராகிய அகத்திய முனிவரையும் கூறிய நயங் காண்க.'

'முத்தர் திருமேனியெலாம் உருகவே தமிழுரைத்த' என்றது குற்றாலத்துக்கோவிலிலிருந்த நெடிய விட்டுணுவிக்கிரகம் உருகிக்

குறிய சிவவிக்கிரகமாம்படி அகத்தியமுனி தமிழ்ப்பாடலால் துதித்ததைக் குறித்தது. 'சித்திரைற் கரும்பொன் மேனி செம் பொனும் 'படிபோற் கும்பன், பத்தியால் உருகி மாலாம் படிவமே பரமன் ஆனன்' எனக் குற்ருலத்தலபுராணத்தில் வருதல் காண்க. (கரும்பொன் - இரும்பு. கும்பன் - அகத்தியமுனி.)

## நூல்

### திரிகூடநாதர் பவனிவருதலைக் கட்டியக்காரன் கூறுதல்

(5) மூக்கெழுந்த முத்துடையார் அணிவகுக்கும் நன்னகர
மூதூர் வீதி
வாக்கெழுந்த குறுமுனிக்கா மறிஎழுந்த கரம்காட்டும்
வள்ள லார்சீர்த்
தேக்கெழுந்த மறைநான்கும் சிலம்பெழுந்த பாதர்விடைச்
சிலம்பி லேறி
மேக்கெழுந்த மதிசூடிக் கிழக்கெழுந்த ஞாயிறுபோல்
மேவி னரே.

[நன்னகரம் - குற்ருலம். மூதூர் - பழமையான ஊர். வாக்கு - வார்த்தை; வார்த்தைகளாலாகிய பாட்டைக்குறித்தது. மறி - மான். கரம் - கை. சீர் - புகழ். தேக்கு - நிறைவு. மறை - வேதம். சிலம்பு - காற்சிலம்பு, மலை. விடை - எருது. மேக்கு - மேற்கு. ஞாயிறு - சூரியன்.

மூக்குஎழுந்தமுத்து - மூக்கில் (அணியப்பட்டுத்) தோன் றும் முத்து (மூக்குத்தி), உடையார் அணிவகுக்கும் - உடையா ராகிய மாதர் (ஆகிய மன்மதன் சேனை) அணிவகுக்கப்பட்டாற் போல வரிசையாக நிற்கின்ற. வாக்கு எழுந்த குறுமுனிக்கா மறி எழுந்த கரம்காட்டும் வள்ளலார் - (திருமாலாயிருந்த தாம் சிவனும்படி) பாட்டுப்பாடிய அகத்தியமுனிக்காக (ச்சங்கேந்திய கையை மறைத்து) மானேந்திய கையைக்காட்டிய வள்ளன்மை யுடைய சிவன். சீர்த்தேக்கு எழுந்த மறைநான்கும் சிலம்பு (ஆக) எழுந்த பாதர் - (தமது) புகழ்கள் நிறைந்த நான்கு வேதங் களையும் சிலம்புகளாக அணிந்த பாதங்களையுடைய சிவன். விடைச் சிலம்பு - இடபமாகிய மலை; மலை போலப் பெரிய உருவமுடைய இடபவாகனம்.]

வாக்கு எழுந்த குறுமுனி என்பதற்குச் சிவபெருமான் வார்த்தை (யாகிய ஆணை) ப்படி இமயமலையிலிருந்து தென்திசைக் கெழுந்தருளிய அகத்தியமுனிவரென்றும் பொருள்கூறுவர்.

திரிகூடநாதரென்ற குற்றுலநாதர் (தாம் பவனிவருதலைப் பார்க்க விரும்பி) மாதர்கள் வரிசை வரிசையாகக் கூடிநிற்கும் நன்னகர வீதிகளூடே இடபவாகனரூடாய் ஊர்வலம் வருவா ரானுரென்பது கருத்து.

'சந்திரன், மிகுந்த கலைகளோடு கிழக்கிலும், குறைந்த கலைக ளோடு மேற்கிலும் உதயமாவது யாரும் அறிந்தது'. சிவன் சூடு வது கலைகுறைந்த பிறைச்சந்திரனென்பது இனிது விளங்க, 'மேக்கெழுந்தமதி' என்ருர். சிவபிரானது சிவந்த திருமேனிக் குச் சிவந்து தோன்றும் உதயசூரியனை உவமித்தது பாராட்டத் தக்கது.

இப்பாட்டில் 'மூக்கெழுந்த முத்துடையார்' என்ற தொட ரும் 'மேக்கெழுந்த மதிசூடிக் கிழக்கெழுந்த ஞாயிறுபோல் மேவி னுரே' என்ற வாக்கியமும் விநோதமும் சமத்காரமும் ஒருங்கு பொருந்தி உவகைவிளைத்தல் காண்க.

---

## பள்ளிப்படிப்பும் நாடகமேடையும்

சிறுவர்களின் கல்வியில் நாடகம் நடித்தலும் ஒருபகுதியாகும். ஒரு சம்பவத்தை ஆசிரியர் வாய்மொழியாக விளக்குவதைக் காட்டிலும் மாணவர் களே நடித்து அதன் சாராம்சத்தை நுகரும்படி செய்வதே மேலானது. மாணவர்கள் யாவரும் நடிகராக வேண்டுமென்பதில்லை. நடிப்பதில் விருப்ப முள்ளவர்களையும் நடிப்பதற்கேற்ற தகுதிவாய்ந்தவர்களையும் கொண்டு நடிக்கச்செய்யலாம். பள்ளிக்கூட வருஷாந்தக் கொண்டாட்டங்களிலும் வேறு விசேஷநாட்களிலும் நடிக்கும் சந்தர்ப்பத்தை மாணவர்கள் இழந்து விடாதபடி ஆசிரியர் பார்த்துக்கொள்ளவேண்டும். மாணவரின் வயதின்தரா தரத்துக்குத்தக்கவாறு நடித்தற்குரிய விஷயம் மாறுபடும். சிறுவர்களுக்கு ஹாஸ்யச்சுவை நிரம்பியனவும் சிறிதுநேரத்தில் முடியத்தக்கனவுமானகதை களில் விருப்பம் செல்லும். சரித்திரவீரர்களைப்பற்றியும் சமூகச்சீர்திருத்த விஷயங்களைப்பற்றியும் போதிக்கும் சிறுபகுதிகளை நடிதுக்காட்டுவதிலும் அவர்கள் விருப்பம் கொள்வார்கள். பெரிய மாணவர்களுக்கு மங்கல முடிவுகொண்ட பெரிய நாடகங்களிலும் சிறந்த நீதிகளைப் புகட்டுவதிலும் விருப்பம் செல்லும்.

எஜுகேஷனல் ரிவ்யூ.

# ம து

காலஞ்சென்ற ஸ்ரீ ஸி. சுப்பிரமணிய பாரதியார்

---

## போகி

பச்சை முந்திரித் தேம்பழங் கொன்று
   பாட்டுப் பாடிநற் சாறு பிழிந்தே
இச்சை தீர மதுவடித் துண்போம்
   இஃது தீதென் றிடையர்கள் சொல்லும்
கொச்சைப் பேச்சிற்கை கொட்டி நகைப்போம்
   கொஞ்சு மாதருங் கூட்டுணுங் கள்ளும்
இச்ச கத்தினில் இன்பங்க ளன்றே?
   இவற்றி னல்லின்பம் வேறென்று முண்டோ? (1)

## யோகி

பச்சை முந்திரி யன்ன துலகம்
   பாட்டுப் பாடல் சிவக்களி எய்தல்
இச்சை தீர உலகினைக் கொல்வோம்
   இனிய சாறு சிவமதை உண்போம்
கொச்சை மாக்களுக் கிஃதெளி தாமோ?
   கொஞ்சு மாதொரு குண்டலி சக்தி
இச்ச கத்திலி வையின்ப மன்றே?
   இவற்றி னல்லின்பம் வேறுள தாமோ? (2)

## போகி

வெற்றி கொள்ளும் படைகள் நடத்தி
   வேந்தர் தம்முட் பெரும்புகழ் எய்தி
ஒற்றை வெள்ளைக் கவிகை உயர்த்தே
   உலகம் அஞ்சிப் பணிந்திட வாழ்வோம்
சுற்று தேங்கமழ் மென்மலர் மாலை
   தோளின் மீதுறப் பெண்கள் குலாவச்
சற்றும் நெஞ்சம் கவலுத லின்றித்
   தரணி மீதில் மதுவுண்டு வாழ்வோம். (3)

யோகி

வெற்றி ஐந்து புலன்மிசைக் கொள்வோம்
　வீழ்ந்து தாளிடை வையகம் போற்றும்
ஒற்றை வெள்ளைக் கவிகைமெய்ஞ் ஞானம்
　உண்மை வேந்தர் சிவநிலை கண்டார்
மற்ற வர்தமுட் சீர்பெற வாழ்வோம்
　வண்ம லர்நறு மாலை தெளிவாம்
சுற்றி மார்பில் அருள்மது வுண்டே
　தோகை சக்தியோ டின்புற்று வாழ்வோம். (4)

போகி

நல்ல கீதத் தொழிலுணர் பாணர்
　நடனம் வல்ல நகைமுக மாதர்
அல்லல் போக இவருடன் கூடி
　ஆடி யாடிக் களித்தின்பங் கொள்வோம்
சொல்ல நாவு கனியுத டாநற்
　சுதியி லொத்துத் துணையொடும் பாடி
புல்லும் மார்பினொ டாடிக் குதிக்கும்
　போகம் போலொரு போகமிங் குண்டோ? (5)

யோகி

நல்ல கீதஞ் சிவத்தனி நாதம்
　நடன ஞானியர் சிற்சபை யாட்டம்
அல்லல் போக இவருடன் சேர்ந்தே
　ஆடி யாடிப் பெருங்களி கொள்வோம்
சொல்ல நாவில் இனிக்குத டாவான்
　சுழலு மண்டபத் திரளின் சுதியிற்
செல்லும் பண்ணொடு சிற்சபை யாடும்
　செல்வம் போலொரு செல்வமிங் குண்டோ? (6)

ஞானி

மாத ரோடு மயங்கிக் களித்தும்
　மதுர நல்லிசை பாடிக் குதித்தும்
காதல் செய்தும் பெறும்பல இன்பம்
　கள்ளில் இன்பங் கலைகளின் இன்பம்

பூத லத்தினை ஆள்வதில் இன்பம்
போய்மை யல்லவிவ் வின்பங்க ளேல்லாம்
யாதுஞ் சக்தி இயல்பெனக் கண்டோம்
இனிய துய்ப்பர் இதய மகிழ்ந்தே. (7)

இன்பந் துன்பம் அனைத்தும் கலந்தே
இச்ச கத்தின் இயல்வலி யாகி
முன்பு பின்பல தாகியெந் நாளும்
மூண்டு செல்லும் பராசக்தி யோடே
அன்பில் ஒன்றிப் பெருஞ்சிவ யோகத்
தறிவு தன்னில் ஒருப்பட்டு நிற்பார்
துன்பு நேரினும் இன்பெனக் கோள்வார்
துய்ப்பர் இன்பம் மிகச்சுவை கோண்டே. (8)

இச்ச கத்தோர் போருளையுந் தீரர்
இல்லை யென்று வருந்துவ தில்லை
நச்சி நச்சி உளத்தோண்டு கோண்டு
நானி லத்தின்பம் நாடுவ தில்லை
பிச்சை கேட்பதும் இல்லையின் பத்திற்
பித்துக் சோண்டு மயங்குவ தில்லை
துச்ச மேன்று சுகங்களைக் கோள்ளச்
சோல்லு மூடர்சோற் கேட்பதும் இல்லை. (9)

தீது நேர்ந்திடின் அஞ்சுவ தில்லை
தேறு நேஞ்சினோ டேசிவங் கண்டோர்
மாதர் இன்பம் முதலிய வேல்லாம்
வைய கத்துச் சிவன்வைத்த வேன்றே
ஆத ரித்தவை முற்றிலுங் கோள்வார்
அங்கும் இங்குமோன் றுமேனத் தேர்வார்
யாதுமேங்கள் சிவன்றிருக் கேளி
இன்பம் யாவும் அவனிடை இன்பம். (10)

வேத மந்திர நாதம் ஒருபால்
வேயி னின்குழல் மேல்லோலி ஓர்பால்
காதன் மாதரோ டாடல் ஒருபால்
களவேம் போரிடை வேன்றிடல் ஓர்பால்

போத நல்வெறி துய்த்திடல் ஓர்பால்
போலியுங் கள்வெறி துய்த்தல்மற் றோர்பால்
ஏதே லாநமக் கின்புற நிற்கும்
எங்கள் தாய்அருட் பாலது வன்றே. (11)

## ஸங்கீர்த்தனம்

### (மூவரும் சேர்ந்து பாடுவது)

மதுநமக்கு மதுநமக்கு மதுநமக்கு விண்ணெலாம்
மதுரமிக்க ஹரிநமக்கு மதுவெனக் கதித்தலால்
மதுநமக்கு மதியுநாளும் மதுநமக்கு வானமீன்
மதுநமக்கு மண்ணுநீரும் மதுநமக்கு மலையெலாம்
மதுநமக்சோர் தோல்விவெற்றி மதுநமக்கு வினையெலாம்
மதுநமக்கு மாதரின்பம் மதுநமக்கு மதுவகை
மதுநமக்கு மதிநமக்கு மதுமனத்தோ டாவியும்
மதுரமிக்க சிவநமக்கு மதுவெனக் சதித்தலால்.

---

## பாற்பண்ணைகள்

பால் சம்பந்தமான தொழில்களில் மேல் நாட்டார் தீவிர முன்னேற்றமடைந்திருக்கின்றார்கள். அதற்குக் காரணம் அவர்கள் பாற்பண்ணை ஸ்தாபனங்களை அமைத்து வருவதே. பாற்பசுக்கள் எருமைகள் முதலியவற்றில் இந்தியா மற்ற நாடுகளுக்கு இளைத்துப்போகவில்லை. இங்கே சுமார் 10 கோடிப்பசுக்களும் பால் எருமைகளும் இருந்து வருகின்றன. இருந்தபோதிலும் அவை கொடுக்கும் பாலின் அளவும், அப்பிராணிகளைப் போஷிப்போருக்குள்ள திறமையும் மற்ற நாடுகளைக்காட்டிலும் இங்கே மிகவும் குறைந்திருக்கின்றன. இவ்விதக் குறைகளைப்போக்க நம்முடைய கிராமங்கள்தோறும் பாற்பண்ணைகள் அவசியம் ஸ்தாபிக்கப் படவேண்டும். அவற்றின்மூலமாக, பால்வியாபாரத்தில் அதிக லாபம் கிடைக்கும்விதத்தையும், நல்ல ஜாதிப்பசுக்களையும் எருமைகளையும் உண்டாக்கும் விதத்தையும், அவற்றை நல்லமேய்ச்சலுக்குவிட்டுப் போஷிக்கும் விதத்தையும், தயாரித்த பாலை நகரங்களுக்குக்கொண்டுபோய் விற்பனைசெய்யும் முறைகளையும், பால் சம்பந்தமான பிற கைத்தொழில்களை விருத்தியாக்கும் வழியையும் பசு எருமை சொந்தக்காரர்களுக்குக் கற்பிக்க வேண்டியது அவசியமாகின்றது.

—டபள்யூ ஸ்மித்.




## நோய்க்கு இடங்கொடேல்

பி. என். அப்புஸ்வாமி, பி. ஏ., பி. எல்.

---

**பொ**துவாக, ஆரோக்கியமாய் இருக்கும் பொழுது, நம்முடைய உடலைப் பற்றி நாம் நினைப்பதில்லை. நமது உடலுக்குள் நெஞ்சு எங்கே இருக்கிறது, வயிறு எங்கே யிருக்கிறது, குடல் எங்கே இருக்கிறது, கல்லீரல் (லிவர்) எங்கே இருக்கிறது, குடல் அநுபந்தம் எங்கே இருக்கிறது என்பவற்றில் ஒன்றையும் நாம் கவனிப்பதே இல்லை. ஆரோக்கியமான நன்னிலையில் இருப்பவனுக்குத் தலைபோன இடம் கால்போன இடம் தெரியாது என்று கூடச் சொல்லலாம். அந்நிலையிலே உடலுறுப்புக்கள் எல்லாம் தத்தம் வேலையைச் செவ்வனே செய்துவருகின்றன. ஓர் உறுப்பினால் மற்றெந்த உறுப்புக்காவது, அனைத்திற்கும் மேலாய் நின்று அதிகாரம் செலுத்திவரும் மூளைக்காவது, ஒரு விதமான தொந்தரவும் ஏற்படுவதில்லை. உடலுறுப்புக்கள் யாவும் எண்ணெயிட்டுச் சீராய் வேலைசெய்யும் யந்திரத்தைப் போலச் சிக்கலின்றித் தத்தம் வேலையை ஒழுங்காகச் செய்துவருகின்றன. அதனால் அப்பொழுது தனித் தனியான உறுப்புக்களையும் அவயவங்களையும் பற்றிச் சிந்திக்க வேண்டிய அவசியமே கிடையாது; சாதாரணமாக ஒருவரும் சிந்திப்பதும் இல்லை.

ஆனால் ஒருவனுக்கு ஏதாவது ஒரு சிறுநோய் வந்துவிடட்டும்; அல்லது சிறுமுள்ளோ கல்லோ ஒன்று ஒருவன் காலில் தைத்துவிடட்டும்; அல்லது ஒருவன் கையில் அற்பமாய் ஓர் அடி பட்டுவிடட்டும்; அப்பொழுது ஆளுக்கு ஆள் வித்தியாசம் காண்கிறது. சிற்சிலர் தமது தேகத்தின் வலிமையில் பூரண நம்பிக்கை உள்ளவர்களாய் இவை ஒன்றையும் பொருட்படுத்துவதில்லை. சிலர் அவ்வாறு பொருட்படுத்துவது கௌரவக்குறைவு, தம்முடைய அஞ்சாத்தன்மையை அது பங்கப்படுத்துவதாகும் என்று எண்ணி வீண் ஜம்பத்தினால் அதைக் கவனிப்பதில்லை. சிலர் கேவலம் அஜாக்கிரதையாலும் சோம்பேறித்தனத்தாலும் கவனிப்பதில்லை. இது ஒரு சாரார் செய்வது. வேறு சிலர் குய்யோ

முறையோ என்று கத்திக் கதறிக்கொண்டு, ஊரிலுள்ள பெரிய டாக்டரையோ அல்லது டாக்டர் கூட்டத்தையோ கூப்பிட்டுப் பிரமாதமாக வைத்தியத்துக்குத் தொடங்கிவிடுகின்றனர். இவ் விருவகையினருக்கும் இடையாக உள்ளவர் அறிவுடையோர். அவர்கள் தம் உடலின் வளத்தை உணர்ந்து, நோயின் காரணத்தை யும் தன்மையையும் அறிந்து, அதற்கேற்றபடி ஒழுங்கான சிகிச்சை யை, அணைகடக்கு முன்னே செய்துகொண்டு, தம் உடலை மீண்டும் ஆரோக்கியமான நன்னிலையில் நிலைநிறுத்த முயலுகின்றனர்.

சாதாரணமாக, ஜனங்கள் எல்லாருமே நோய்வாய்ப்படும்போது தத்தமக்கு வந்துள்ள நோயைப் பற்றிப் பேசுவது இயல்பு. அந்த வேளைகளில் அவர்கள் தாம் ஒரு விசேஷமான சிருஷ்டி அல்ல என் பதையும், தமக்கு ஏற்பட்ட நோயும் தமக்கு என்று ஏற்பட்ட ஒரு விசேஷமான கற்பனை அல்ல என்பதையும் மறந்துவிடுகிறார்கள்; தமக்கு உண்டாகிய நோய் மிகவும் பிரத்தியேகமானது என்று எண்ணத் தொடங்கிவிடுகிறார்கள்; அந்நோயைப் பற்றித் தம் மனைவி மக்களுடனும் நண்பர்களுடனும் விவரமாய்ப் பேசி வழக் காடத் தொடங்குகிறார்கள்.

"என்ன? இன்றைக்கு உடம்பு எப்படி இருக்கிறது?" என்று சொல்லிக் கொண்டே வருகிறான் ஒரு நண்பன்.

"கொஞ்சம் குணந்தான். ஆனால் ஜுரம் விடவில்லை. வயிற்று வலியும் இருக்கிறது" என்கிறான் நோயாளி.

"இன்னும் இரண்டு நாளில் உடம்பு சரியாகிவிடும். ராம ஸ்வாமிக்கு இப்படித்தான் இருந்தது: ஆறுநாள் ஜுரம் அடித்தது; ஏழாம்நாள் ஜுரம் விட்டுவிட்டது" என்கிறான் நண்பன்.

"ஆனால் என்னைப்போல அவனுக்குத் தலைவலி இல்லையே; கைகால் உளைச்சல் இல்லையே" என்கிறான் நோயாளி. "நேற்று அவ்வளவு உடம்பு வலி இல்லை. இன்று இடுப்பெல்லாம் வலிக் கிறதே!"

இவ்வாறு நோயுற்றவர்கள் தமது வியாதியைப்பற்றி விசேஷ மாக நினைத்து நினைத்து மயங்குவது வழக்கம். தமக்குள்ள நோய்க் குறிகளை எல்லாம் ஒவ்வொன்றாகத் தேடித் துருவி ஆராய்ந்து சீர்தூக்கி ஒப்பிட்டுப் பார்ப்பதும் வழக்கம். அவற்றைப் பற்றிப் பிறரோடும், ஏகாந்தத்தில் தம் மனத்தோடும் வழக்காடுவதும் இயல்பு. அவர்கள் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வேளையும் நோய்க்கு அறிகுறி என்று கருதத்தகும் அடையாளங்களைக் கூர்ந்து கவனிக்கிறார்கள். 'இன்றைக்கு அப்படி இல்லை: காலையில் அப்படி இருந்தது: இப்பொழுது வேறுமாதிரியாக இருக்கிறது' என்று எண்ணி எண்ணிக் கவலைப்படுவதுதான் நோயாளியின்

ஸ்வபாவம். நோய்க்குறி மிகுந்தோ வலுத்தோ காணப்பட்டால் மனச் சோர்வு அடைவதும், நோய்க்குறி குறைந்தோ வலி குன்றியோ காணப்பட்டால் சற்றே தைரியம் அடைவதும் நாம் சாதாரணமாகக் காணும் விஷயங்கள்.

இவ்வாறு சாதாரண ஜனங்களுள் யௌவனதசையிலுள்ளவர்கள் கூட இருப்பார்களென்றால், அவர்களை விடச்சற்று வயதாகி நடுவயது அடைந்தவர்களைப் பற்றிக் கேட்பானேன்? சாதாரணமாக இவ்வயதில்தான் ஆரோக்கியம் குறைந்து நோயானது உடலின் உட்புகுந்து குடிகொள்ளத் தொடங்கும். இவ் வயதிலேதான் வாதம், பித்தம், கபம் என்று சொல்லிக் கொண்டு புறப்படும். இரத்த ஓட்டத்தை ஒட்டிய நோய்களும் ஜீரணத்தை ஒட்டிய நோய்களும் இவ்வயதிலே முதல்முதலில் விசேஷமாகத் தோன்றத் தொடங்கும். இவ்வயதினர்களே சாதாரணமாக வைத்தியர்களைப் போஷித்துப் பராமரிப்பவர்கள்.

இவர்களுக்கு நோய் கண்டுவிட்டால்போதும்: நோயின் பாடு கொண்டாட்டம் தான். அதற்கு விசேஷ ஆகாரம் என்ன, பத்தியம் என்ன, பலவகை ஸ்நாநங்கள் என்ன, பலவகைப் பானங்கள் மருந்துகள் என்ன, ஆயுதவகைகள் எத்தனை! இவர்களுடைய உடலில் தோன்றும் நோய்க்குறிகளோடு போராடுவதற்குத்தான் இத்தனை விமரிசைகளும்!

முன் நாளில் வாதந்தான் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வந்த நோய். இப்பொழுது அதனுடைய சிறப்பு முற்றிலும் குறைந்து போய்விட்டது. சிலநாட்களுக்கு முன்பு மிகவும் மேன்மை ஸ்தானத்தை அடைந்திருந்தது குடல் அநுபந்தநோய். எங்கே பார்த்தாலும் வயிற்றுவலி. வைத்தியம்—வயிற்றைக் கிற வேண்டியது, குடலை ஒட்டியுள்ள அநுபந்தத்தை (அப்பெண்டிக்ஸ்) வெட்டி எறிந்துவிட வேண்டியது. இம் மாதிரியாகக் குடலை ஒட்டிய அநுபந்தத்தை வெட்டிக் கொண்டவர்களுக்குத் தனி மரியாதையும் உபசரணையுங்கூட உண்டென்று நினைக்கும்படி இருந்தது. இப்பொழுது அதன் ஆட்சி அவ்வளவு சிறப்பாக இல்லை. குடலை ஒட்டிய அநுபந்தத்தை எடுப்பதினால் தொந்தரவு உண்டு. அதைச் சாதாரணமாக எடுப்பது அநாவசியம் என்று கூட ஒரு டாக்டர் கூறத் தொடங்கிவிட்டார். இப்பொழுது தலைசிறந்து விளங்கும் நோய்க்கு இரத்த அழுத்தம் என்று பெயர். இதை அளவிடுவதற்கென்று விசேஷமான கருவிகளை உண்டாக்கியிருக்கிறார்கள். அவற்றின் பேர்கூட ஒருமுழ நீளமிருக்கும். பேரைக் கேட்டாலே கடபுடவென்றிருக்கும்.

ஒன்றிற்கு 'ஸ்பிக்கோமானே மீட்டர்' என்று பெயர். இந்த வியாதி ஒருவனுக்கு இருப்பதாகத் தெரிந்துவிட்டால் போதும்: ஒருபுறம் அவனுக்கு ஒரு விசேஷச் சிறப்பும் இன்னொரு புறம் விசேஷ வியாகூலமும் வந்து சேர்ந்துவிடுகின்றன. இந்த வியாதியென்று கேட்ட மாத்திரத்திலே அவனுக்கு நடுக்கம் எடுத்து விடுகிறது. எனக்குத் தெரிந்த ஒருவர் ஆஸ்பத்திரிக்கு நடந்து போனார். அங்கே அவரைச் சோதித்த டாக்டர் அவருக்கு இரத்த அழுத்தம் அதிகம் இருப்பதாகச் சொல்லிவிட்டார். உடனே 'ஹா' என்று பெருமூச்செறிந்தார். கைகால்கள் வலவலத்துவிட்டன. உட்கார்ந்த நாற்காலியிலே அப்படியே சாய்ந்து விட்டார். எழுந்து நடக்கக் கூட அப்புறம் திறமை இல்லாமல் போய்விட்டது. அவரைக் கைத்தாங்கலாக வண்டியில் ஏற்றித்தான் வீட்டுக்கு அழைத்து வரும்படி ஆய்விட்டது. வீட்டுக்கு வந்ததும் சிலகாலம் படுத்த படுக்கையாக இருந்தார். இந்நோயின் பெயரே அவருக்கு அவ்வளவு பீதியை உண்டாக்கிவிட்டது.

இந்த வியாதி உள்ள ஒருவன் இரத்த அழுத்தத்தைக் குறைப்பதற்குப் படும் பாடுகளைப் பார்த்தாலல்லவோ! எந்தத் துன்பத்தையும் அவன் சகிப்பதற்குத் தயார். எல்லாம் பத்தியந்தான். எந்தக் கசப்பு மருந்தையும் உட்கொள்ளத் தயார். அந்நோயைத் தவிர வேறு விஷயம் ஒன்றுக்கும் அவன் மனத்தில் இடம் இருப்பதே இல்லை. அவ்வளவு பரிபூர்ணமாக மனோ வாக்குக் காயங்களைக் கவர்ந்து கொள்ளுகிறது இவ்வியாதி. இரத்த அழுத்தத்தைப் பற்றி அவன் ஏதோ சிறிது தெரிந்துகொண்டிருக்கிறான். 'நாளுக்கு நாள் மிகுந்துவரும் இரத்த அழுத்தமானது ஒருநாள் மிகவும் அதிகமாகிவிடும்; அப்பொழுது அழுத்தத்தைத் தாங்கமாட்டாமல் உடலுக்குள் ஏதாவது ஓர் இரத்தக் குழாய் வெடித்துவிடும்; பக்ஷபாதம் ஏற்பட்டாலும் ஏற்படும்; அல்லது ஒருவேளை மரணமே சம்பவித்தாலும் சம்பவிக்கும்' என்று எண்ணிப் பயந்து சாகிறான்.

நோயாளிக்கு இவ்வளவு பிரத்தியக்ஷமாய்த் தோன்றும் விஷயங்கள் இன்னும் வைத்தியர்களுக்கு அவ்வளவு தெளிவாகவில்லை. அவர்கள் இரத்த அழுத்தத்தைப் பற்றிப் பல விஷயங்களை அறிந்து கொண்டிருக்கிறார்கள் எனினும் அதைப்பற்றிய விஷயங்களை எல்லாம் இன்னும் பூரணமாக அவர்கள் அறிந்துகொள்ளவில்லை. பாமர ஜனங்கள் எண்ணித் தயங்கும் எண்ணங்களுக்கு வைத்திய சாஸ்திரத்தில் ஆதாரம் அவ்வளவு இல்லையென்றுதான் சொல்லவேண்டும்.

ஓர் உதாரணமாகத்தான் இதை எடுத்துக் காட்டினேன். மூப்பும் பிணியும் இந்த உலகில் உள்ளன. அவற்றை ஓர் அளவு ஒதுக்கலாமே தவிர முற்றிலும் விலக்குவது நம்மால் இயலாத காரியந்தான். ஆதலால் நோய்வாய்ப்படுவது சகஜமே. ஆயினும் ஏதாவது ஒரு வியாதி வந்து விட்டால் அப்பொழுது அதையே மீண்டும் மீண்டும் நினைத்து நினைத்து ஏங்கி உருகி மனமுடைந்து போவது முழு அறியாமை. எப்பொழுதும் அதன் அடையாளங் களையே கணக்கிட்டுக் கொண்டிருப்பது முற்றிலும் மதியீனம். அவ்வாறு நோய்க்குறிகளில் ஈடுபட்டுக் கிடந்தால் நமக்கு உள்ள மற்றக் காரியங்களில் ஒன்றும் செவ்வனே நடைபெறுதென்பது திண்ணம். நமது உயிர் வாழ்க்கை சிறுமையை அடையும். நோயும் குறைவு படாது. அநேகமாக மிகவே செய்யும்.

இதற்குக் காரணம் வேறொன்றுமில்லை. ஒவ்வொரு நோய்க்கும் அவசியமாக இரண்டு அமிசங்கள் இருந்து ஆகவேண்டும். நோய் என்பது ஒன்று; நோய்வாய்ப்படும் மனிதன் என்பது மற்றொன்று. 'நோய் என்பது தனியான தொன்று. அது பொருளாகவோ உயிர்ப்பிராணியாகவோ, ஸத்துவமாகவோ இருக்கலாம். ஏதா னாலும் அதற்கு ஒரு தனிவாழ்வு உண்டு. பேன் உண்ணி முதலிய ஒட்டுப்பிராணிகளைப் போல் அது உடலில் தொத்திக்கொண்டு வாழ்கின்றது' என்றமாதிரியாகச் சிலர் எண்ணிவருகிறார்கள். அவர் களுக்கு இந்த எண்ணம் நான் சொல்லியபடி அவ்வளவு தெளிவாக இருப்பதில்லை. அவர்கள் இவ்விஷயத்தைப் பற்றி அவ்வளவு சிந்திப்பதில்லை. நோய் என்னும் ஏதோ ஒன்று ஏறி உடலில் உட் கார்ந்துகொண்டிருக்கிறதென்று அவர்கள் எண்ணுவதாகவே அவர்கள் நோயைப்பற்றிப் பேசுவதினின்றும் நினைப்பதினின் றும் தெரியவரும். இவ்வாறு நினைப்பவர்கள் அதன் அடையா ளங்களையும் குறிகளையும் தோற்றங்களையும் பற்றி ஓயாமல் நினைத் துக்கொண்டே இருப்பது ஒரு விந்தையல்ல. தம்மை எதிர்த்துப் போராடும் ஒரு சத்துருவாகவே நோயைப் பற்றி எண்ணங் கொண்டிருக்கிறார்கள். 'இன்று மும்மரமாகத் தாக்கிற்று, இன்று இலேசாக எதிர்த்தது' என்று எண்ணிக் கவலையுற்று அதன் பலா பலத்தைக் கண் கொட்டாது கவனித்து வருகிறார்கள். இது தவறான எண்ணம்; பிசகான முறை.

நோயென்பது வேறான பொருளல்ல; நம்மேல் உட்காரும் ஒட்டுவாழ் பிராணியுமல்ல; உள்ளே புகும் பேய் பிசாசும் அல்ல. அதற்குத் தனியான வடிவமும் கைகால்களும் கிடையா. நம் முடைய ஆரோக்கியத்தில் உண்டாகும் குறைவையே நாம் நோய்

என்கிறேமே தவிர வேறென்றையு மன்று. இவ்வாறன, சரியான எண்ணத்தை நாம் கொள்ளுவோமானல் நோயைப் பற்றி நாம் கவலைகொள்வதை அறவே விட்டுவிட்டு, நமது உடலைச் சரிவரப் பாதுகாத்து நன்னிலையில் வைத்துக்கொள்வதில் சிறிதளவாவது சிரத்தை காட்டுவோம். அப்பொழுது நோயின் போக்குவரவையும், அதன் பலக்குறைவு மிகுதிகளையும் நாம் கவனிக்கமாட்டோம். வந்த நோய் தானே போகட்டும் என்று சும்மா இருக்கவும் மாட்டோம். நோயைத் துரத்தும் உண்மையான வழி எதுவென்று தேடத் தொடங்குவோம்.

'இதைப் பற்றி என்ன சந்தேகம்? இதைத்தானே நாம் எல்லோரும் செய்கிறேம்? இது பிரத்தியக்ஷமாயிற்றே' என்று நீங்கள் சொல்லலாம். வாஸ்தவத்தில் நாம் எல்லாரும் அப்படிச் செய்வதே இல்லை. நோய்க்குறிகளோடும் அடையாளங்களோடும் போராடுகிறேமே யொழிய நோயோடு நேராகப் போராடுவதில்லை. பொருளை விட்டுவிட்டு நிழலைத்தான் நாம் எதிர்க்கிறேம். இந்த விஷயத்தின் உண்மை தெரியாததால் வருஷந்தோறும் அநாவசியமாக எத்தனையோ உயிர்கள் யமன்வாய்ப்படுகின்றன.

ஒருவனுக்குச் சிறுவயதிலே க்ஷயநோய் காணப்பட்டது; பல தடவைகளில் இரத்தம் விழுந்தது. டாக்டர்கள் அவன் பிழைப்பது அரிது என்று சொல்லிவிட்டார்கள். அவன் வேலையை எல்லாம் தூரக் கட்டிவைத்து விட்டு, 'இனிமேல் செய்யக் கூடியது ஒன்றுமில்லை. எப்போழுது இந்தக் கஷ்டம் நிவிர்த்தியாகும்' என்று எண்ணி யமன் வருகையை எதிர்பார்த்தவண்ணமாகவே இருந்தான். ஒவ்வொரு நாளும் க்ஷயம் என்னும் சத்துரு செய்யும் அட்டூழியங்களை யெல்லாம் கூர்ந்து கவனித்துக் கோட்டைக்குள் அடைபட்டு ஒன்றும் செய்ய இயலாதவனைப்போலத் தவித்துக் கொண்டிருந்தான்.

'யமன் இன்று வருவான் நாளைவருவான்' என்று கொஞ்சநாள் கணக்கிட்டுக்கூடப் பார்த்தான். ஒரு நாள் அவனுக்குத் திடீரென்று ஓர் எண்ணம் புதிதாக உண்டாயிற்று. 'எனக்கு நோயிருப்பது மெய்தான். ஆனல் ஓர் அளவு ஆரோக்கியமும் இருக்கிறதல்லவா? சிறு அளவில் உள்ளதாகவே அது இருக்கட்டும். என்ன இருந்தாலும் ஆரோக்கியம் ஆரோக்கியந்தானே. இத்தனை நாளாகியும் நான் இன்னும் சாகவில்லையே. கைகட்டிச் சும்மா இருப்பதை விட்டுவிட்டு எதிரியோடு போட்டிபோடத் துணிந்தாலென்ன? தகர்ந்து போன கோட்டை கொத்தளங்களைச் செப்பனிடுவது போல உடலின் ஆரோக்கியத்தைச் சிறிது சிறிதாகப்

பெருக்கி வளர்த்தா லென்ன? என்னுடைய தேகத்தின் வலிமையை அதிகப்படுத்த முயன்றாலென்ன? அதுதான் சரி. அப்படியே செய்வேன்' என்று அவன் எண்ணினான்.

இந்த எண்ணம் அவன் மனதில் உதித்தவுடனே அவன் வேறு மனிதனாகிவிட்டான். உலகத்தைப் பற்றி அவன் எண்ணி யிருந்த எண்ணங்கள் யாவும் மாறிப்போயின. 'இந்நோயைத் தொலைத்து விடுவேன்' என்று சபதம் கூறிக்கொண்டு, தேகத்தை நன்னிலையில் வைக்கும்பொருட்டுத் தேகப்பயிற்சி செய்யத் தொடங்கினான். பண்டைக்காலம் தொட்டே அநுசரிக்கப்பட்டு வந்த முறைகளையே அவன் மேற்கொள்ளத் தொடங்கினான். தேகப்பயிற்சி, சரியானவேளையில் போதுமளவேயுள்ள சரியான ஆகாரம், வெல்ல வேண்டுமென்னும் மனோதிடம், என்னும் இவை கள் மட்டுந்தான் அவன் துணையாகக் கொண்டவை.

அவனைத் தெரிந்தவர்கள் எல்லாரும் ஆச்சரியப்படும்படியா யிருந்தது, இவற்றினால் அவன் அடைந்த பயன். அவனது தேகம் வரவர ஆரோக்கியம் அடையத் தொடங்கிற்று. வெகு சீக்கிரம் அவன் குணமடைந்து நோயற்றவனானான். இது சாதாரண சம்பவ மாயிருக்கலாம், அல்லது விசேஷ நிகழ்ச்சியாயிருக்கலாம். விசேஷ நிகழ்ச்சியென்று வைத்துக் கொண்டாலுங் கூட, இம் முறைக ளால் பிரயோஜனம் நிறைய உண்டு என்பதற்கு இது ஓர் எடுத் துக்காட்டு ஆகும் அல்லவா? உண்மையில், நோயை எதிர்க்கும் நேர்வழி—சுகாதாரவழி—என்னவென்றால் உடலின் வலிமையைச் செம்மையான முறைகளால் அதிகப்படுத்தி வளர்த்து அதன் வலிமைத் திறத்தை நன்றாக உணர்ந்து பயன்படுத்துவதே யாகும்.

நாம் எவ்வளவுக்கெவ்வளவு ஆரோக்கிய நிலையில் உடம்பைச் சீராக வைத்துக் கொண்டிருக்கிறோமோ, அவ்வளவுக் கவ்வளவு நோயானது நம்மை அணுகுவதும் குறைவுபடும். நாம் நோய்க் குறிகளையே ஓயாது சிந்தித்துக் கொண்டிருப்போமானால் நமது உடலின் வலிமையை உணர்ந்துகொள்ளப் போதிய அவகாசமும் அமைதியும் நமக்கு இராமல் போய்விடும். நம்முடைய உட லின் பாதுகாப்பை மட்டிலுமே நாம் நன்கு கவனித்து வருவோ மானால் எந்த வியாதியைப் பற்றியும் நாம் நினைக்கவேண்டிய அவசியமே இராது.

'அது சரிதான். ஆரோக்கியமாய் இருக்கும்போது நமது உடலின் வலிமையை உணர்ந்துகொள்வது எளிதுதான். நோயுற்ற போது அதைப் பற்றி எப்படிக் கவனிப்பது? உடல் வலிமையை அக்காலத்திலே உணருவது எப்படிச் சாத்தியமாகும்?' என்று

கேட்கலாம். நோயற்றவன் தன் வலிமையை எப்படி உணருகிருனே அதே முறையில்தான் நோயுற்றவனும் தன் வலிமையை உணரவேண்டும். நோயை அணுகாது தடுக்கும்பொருட்டு ஒவ்வொருவனும் தன்னுடைய உடலைத் திடகாத்திரமாய்ச் செய்து கொள்ளவேண்டும்.

'கான்செர்' போன்ற சிற்சில வியாதிகள் நாம் என்ன முயன்ருலும் போகா. அவை தீராவியாதிகள் என்பதும் ஓரளவில் மெய்தான். அவற்றுக்கும் சிற்சில பரிகாரங்களைக் கண்டு பிடித்திருக்கிருர்கள்; இன்னும் தேடிக் கொண்டு வருகிருர்கள். நெஞ்சானது நோய்வாய்ப்பட்டு பலவீனமாகி விட்டால் நாம் நன்ருகத் தேகப்பயிற்சி செய்து உடலைத் தேற்றிக்கொள்ளுகிறது என்பதும் முடியாமல் போய்விடும் என்பதும் மெய்தான். என்ன இருந்தாலும், நாம் நமது உயிர்வாழ்க்கையை ஒழுங்குபடுத்திச் சீராக்கிச் செவ்வனே நடத்திவருவோமானல் நாளுக்குநாள் நமது ஆரோக்கியச் செல்வம் கூடிவரும். நமக்கு உள்ள ஆரோக்கியத்தின் அளவு மிகச் சிறிதேயாயினும் அதுவும் போற்றிப் பாராட்டுதற்கு உரியதுதான். நாம் சாகுமட்டும் நமக்கு ஒரு கடுகளவாவது ஆரோக்கியம் இருந்து கொண்டுதான் இருக்கிறது. செத்தவன் ஒருவன்தான் ஆரோக்கியம் அற்றவன்.

'உடம்பு ஒரு மாதிரி' இருப்பவர்கள் அனைவரும் தமது உடலைச் சரிப்படுத்திக் கொள்வார்களாக. தத்தமக்கு இருக்கும் ஆரோக்கியச் செல்வத்தைக் கணக்கிட்டுப் பார்ப்பார்களாக. கவலைக் கடலில், துக்க வெள்ளத்தில், ஏக்கம் என்னும் சேற்றில் அது மூழ்கிப்போகாதபடி அதைக் காத்துவருவார்களாக. அவர்கள் செய்யும் தொழிலானது, வேலையாகட்டும் விளையாட்டே யாகட்டும், அதைத் தம் முழுமனத்துடனும் ஊக்கத்துடனும் செய்து பார்ப்பார்களாக. இவ்வளவுதான் சாத்தியம் என்று அவர்கள் எண்ணிய அளவுக்குமேல் அது நடந்தேறுவதைக் கண்டு அவர்கள் வியப்படைவார்கள்; மகிழ்ச்சியுறுவார்கள்; பிறகு நம்பிக்கை பெறுவார்கள்; மனேதிடத்தை வரவரப்பெற்றவர்களாய்த் திறமை வர வர மிகுகின்றவர்களாய் நாளடைவில் பூரணசுகம் பெறுவார்கள்.

நாம் மேலே சொல்லியவற்றினின்று 'டாக்டர்கள் சொல்லுகிறதைச் சொல்லட்டும்; அவர்கள் அப்படித்தான் சாகுருவிகள் போலச் சொல்வார்கள். நாம் நமது இஷ்டம்போல நடந்து ஆரோக்கியத்தைப் பெறுவோம்' என்று எண்ணிவிடவே கூடாது. நாம் ஒருவிதமாகப் பங்கு போட்டுக் கொள்ள வேண்டும். டாக்டருடைய பங்கு நோய். அவர் அதைப் பார்த்துக்

கொள்வார். அதைப்பற்றிய கவலை அவருக்கு. நமக்கு அது வேண்டாம். அதன் குறிகளையும் அடையாளங்களையும் பலாபலங் களையும் பக்ஷபாதமின்றி ஓரவஞ்சகமின்றிச் செவ்வனே சீர்தூக்கு வதற்கு வேண்டிய புத்தியும் அறிவும் நடுநிலையும் மன அமைதியும் அவருக்குத் தான் உண்டு. ஆகவே நோய் டாக்டரின் பொறுப்பு என்று விட்டுவிடவேண்டும்.

நோயாளியின் பொறுப்பு அவனுடைய ஆரோக்கியநிலையே யன்றி வேறல்ல. எந்நோயின் வாய்ப்படினும் எத்தனை வயதாய் விடினும் ஒழுங்காகத் தெரிந்து உரிய முறையில் முயன்றால் நாம் ஆரோக்கியச் செல்வத்தைச் சிறிது சிறிதாகத் தேடிக்கொள்ள முடியும் என்பது உறுதி. இதற்கு வேண்டியவையெல்லாம் ஒழுங் கான வாழ்க்கையும் தெரிந்து இயற்றும் செயல்களும் தீவிரமான விடாமுயற்சியுமே. நமது மனத்தின் அரிய திறமைக்கு அளவே இல்லை. நமது உடலை எண்ணரிய முறைகளில், வியப்பைத்தரும் வகைகளில், அது பாதித்துவருகிறதென்பதற்கு ஐயமில்லை.

இக்கொள்கையை அடிப்படியாகக் கொண்ட கூயி என்னும் பிரான்ஸ்தேச நிபுணர் ஒருவர், "ஒவ்வொருவனும் ஒவ்வொரு நாளும் 'நான் ஆரோக்கியமாயிருக்கிறேன்' என்று பன்முறை ஜபிக்கவேண்டும். அப்படி ஜபித்தால் உடலில் அவனறிய உள்ள நோய்கள் அகன்றுவிடும்; அதோடு அவனும் அறியாமல் உள்ளே பதுங்கிக் கிடக்கும் நோய்களும் அகன்று விடும்" என்னும் ஆரோக் கியமதம் ஒன்றை ஸ்தாபித்தார். இதற்குக்கூயியின் கோட்பாடு என்று பெயர். இவருடைய சீடர்கள் இன்றும் பலர் இருக்கின்றனர்.

ஆகவே நோயை அணுகாதபடி தடுத்துவிட முயலுவோனும், அது வந்து உற்றபின்பு அது மேன்மேலும் தொந்தரை செய் யாதபடி அதை அகற்ற முயலுவோனும் அதைப் பற்றியே ஒரு க்ஷணமாவது சிந்திக்கலாகாது. தேகத்தை நன்னிலையில் வைத்துக் கொள்ளுவதற்கும் அந்நிலைக்குக் கொண்டுவருவதற்கும் வேண்டிய முறைகள் யாவை என்பதைத் தேர்ந்தெடுத்து அவற்றை ஒழுங்கு படுத்திப் பின்பற்றிவரவேண்டும். என்றென்றும் அமைதியுள்ள மனத்தினனாய், கவலைக்குச் சிறிதும் இடங்கொடாதவனாய், 'நான் நோய்வாய்ப்படேன்' என்ற உறுதியை நெஞ்சத்தில் நன்கு கொண்டவனாய் உள்ளவன் என்றும் நோய்வாய்ப்படுதல் அரிது.

நெஞ்சத்துணிவோடு, மனத்திடத்தோடு தோன்றும் இச் சக்தியே உடலெங்கும் பெருகி வளர்ந்து பூரித்து உடலை நோயுறாது காக்கும் அரிய பெரிய ரக்ஷையாகும்; நோயுற்றபோது அதனைத் துரத்தும் படையும் அதுவே ஆகும்.

# மிருகங்களின் வயது

சக்சரவர்த்தி ஸ்ரீநிவாசன்

---

அளவிலும் வன்மையிலும் பருமனிலும் மனிதன் மிருகங்களுக் கிணைநிற்க முடியாதென்பது வாஸ்தவமே. ஆனாலும் அதிக காலம் வாழ்ந்திருப்பதில் மனிதன் பிராணிகளினும் விஞ்சுகிறான். மனிதர்கள் ஜீவித்திருக்கக்கூடிய அதிகமான காலம் நூறுவருஷங்கள் எனக் கணக்கிடப்பட்டிருக்கிறது. ஆனால் மிருகங்களில் யானையைத்தவிர வேறெவையும் சாதாரணமாக மனித ஆயுளில் காற்பங்கைவிட அதிகமான காலம் உயிருடனிருப்பதில்லை.

முக்கியமான சில மிருகங்களின் வயதை ஆராய்வோம். மிருகராசியில் பலவற்றின் வயது, பற்களைக்கொண்டே கணக்கிடப்படுகின்றன. வண்டிமாடுகள் வாங்குவதில் அனுபவமுள்ளவர்களுக்கு இதன் உண்மைதெரியும். மாட்டைவாங்குபவர் முதலில் அதன் வாயைப்பிடித்துப் பற்களை எண்ணிப் பார்ப்பார். இரண்டுபற்கள் பெரியனவாக இருந்தால் அது காளைக்கு முன்னுள்ள கன்றுப்பருவத்தைக் குறிக்கும். நான்கு பற்கள் இருந்தால் நல்ல காளைப்பருவம். இதுதான் சரியானவயது. ஆறுபற்கள் என்பது காளைக்கும், கிழத்தன்மைக்கும் இடையே உள்ள பருவத்தை உணர்த்துவது. எட்டுப்பற்களேற்பட்டுக் கடைகூடிவிட்டால் மாடு முதுமையை அடைந்துவிடுகின்றது. இதேமாதிரி இன்னும் சில பிராணிகளின் வயதும் பற்களைக்கொண்டே நிதானிக்கப்படுகின்றது.

கல்கத்தாவில் உள்ள மிருகக்காட்சிசாலையில் சமீபத்தில் பிராணிவர்க்கங்களின் வயது சம்பந்தமான ஆராய்ச்சியொன்று நடைபெற்றது. மிருகராசியில் எலிவர்க்கங்களே மிகக்குறைந்த காலம் வாழ்வனவாகக் கணக்கிடப்பட்டன. எலி, சுண்டெலிகள் மூன்று வருஷங்களுக்குமேல் ஜீவித்திருப்பதில்லையாம்.

குள்ளநரிகள் இதைவிட அதிககாலத்திற்கு உயிருடனிருக்கின்றன. அந்த மிருகக்காட்சிசாலையைச் சேர்ந்த குள்ளநரி ஒன்று 15 வயதுவரையில் ஜீவித்திருந்தது. திருவனந்தபுரம்

மிருகக்காட்சிசாலையிலிருந்த ஒரு நரி பன்னிரண்டு வயதுவரையில் தானிருந்தது. குள்ளநரியின் சராசரி வயது 10 என்று கணக்கிடப்பட்டுள்ளது.

சிறிய பிராணிகளாகவிருந்தும் அதிகநாள் வாழும் தன்மை படைத்திருப்பவை கீரிப்பிள்ளையும், புனுகு பூனையும் என்று கூறலாம். கீரிப்பிள்ளை சுமார் 13 வருஷங்கள் ஜீவித்திருக்கிறது; புனுகுபூனைகள் 15 வயதிற்குமேல் இருப்பதில்லை.

குரங்குகளின் வயதைமட்டும் திட்டமாக நிர்ணயிக்கமுடியவில்லை. ஆனால் அவற்றின் குறைந்த வயது எட்டு என்றுமட்டும் நிச்சயமாகக் கூறலாம். திருவனந்தபுரம் மிருகக்காட்சிசாலையில் நீலகிரியைச் சேர்ந்த குரங்கொன்று 15 வருஷங்கள் உயிருடனிருந்ததாம். தென்னாப்பிரிக்காவிலுள்ள ஒரு மிருகக்காட்சிசாலையில் 27 வயதான ஒருகுரங்கு இன்னும் ஜீவித்திருக்கிறதாம்.

பன்றி, மான்வர்க்கங்கள் அதிக வயதை அனுபவிப்பதில்லை. முள்ளம்பன்றி, காட்டுப்பன்றி இவற்றின் சராசரி வயது எட்டு. புள்ளிமான்களோ பத்து வருஷங்களுக்குமேல் இருப்பதில்லை. ஸாம்பூர் என்னும் ஒருவகையான மான்மட்டும் சுமார் 20 வருஷங்கள்வரையில் உயிருடனிருக்கிறது; ஆனால் இது மிகவும் துர்லபம்.

காடி இனங்கள் சராசரி 16 வயதுவரையில் உயிருடன் வாழ்கின்றன. நன்கு கொழுத்து வளர்ந்துள்ள காட்டு எருமைகள் முப்பது வயதிற்கு அதிகமாக ஜீவித்திருப்பதாகக் கூறப்படுகின்றது.

சிவிங்கிகள் பிறந்து எட்டு அல்லது பத்துவருஷங்களுக்குள் இறந்துவிடுகின்றன. புலிகள் சாதாரணமாகப் பதினைந்து வருஷங்களுக்குமேல் வாழ்ந்திருக்கவில்லை.

மிருகங்களில் நீண்டகாலத்துக்கு வாழ்ந்து மனிதனுக்குப் பெரிதும் பயன்பட்டு விசேஷமதிப்புடனும் மகிமையுடனும் விளங்கிவருவது யானை. நூறுவயதுவரையில் ஜீவித்திருந்த யானைகளின் கதைகளைப் பலர் சொல்ல நாம் கேட்கிறோம். ஆனால் அவற்றிற்குத் தக்க சான்றுகளில்லாமையால் அவற்றை நாம் நம்ப முடிவதில்லை. ஆள்வார் மகாராஜாவினிடமிருக்கும் ஓர் ஆண்யானைக்கு இப்பொழுது சுமார் எழுபதுவயதாகிறதாம். இது அதிக வயதென்றே சொல்லலாம். 50 வயது வரையில் அவை வாழ்ந்திருப்பதே அபூர்வமாக இருக்கிறது.

மற்றப் பிராணிகளைப்போல், யானையின் வயதைக்கண்டுபிடிக்கப் பெரும் கஷ்டப்படவேண்டியதில்லை. வயது ஆக ஆக, யானையின் காதின் மேல்பாகம் வளைந்துகொண்டே வருகின்றது. பிறந்தது

முதல் 12 அல்லது 15 வருஷங்கள்வரையில் அப்பாகம் நேராகவே இருக்கிறது. அதற்குப் பிறகு சுமார் ஓர் அங்குலம் வளைந்திருந்தால் சுமார் 25 வயது என நாம் கணக்கிடுகிறோம்; $1\frac{1}{2}$ அங்குலம் வளைந்திருக்குமாயின் 30 வயது என்னலாம்; 2 அங்குல வளைவு 40 முதல் 50 வரையிலுள்ள வயதை உணர்த்துகின்றது.

மிருகராஜனாக விளங்கும் சிங்கம், பாலைவனக் கப்பலான ஒட்டகம் இவ்விரண்டின் வயதும் சுமார் 40 எனத் தெரியவருகின்றது.

குதிரை, பன்றி, பசு இவை சராசரி 25 வருஷங்களுக்கு வாழ்கின்றன. நாய்களும், வெள்ளாடுகளும் 15 வயதுவரையில் ஜீவித்திருக்கின்றன. பூனை பத்துவருஷங்களுக்குமேல் இருப்பதில்லை. 10 முதல் 12 வருஷங்கள்வரையில்தான் செம்மறியாடு உயிருடனிருக்கிறது. முயல் 5 வருஷங்கள்வரையில் வாழ்வது அபூர்வமாக இருக்கிறது.

---

## நம்பிக்கையால் குணம்

யோகிகள் செத்தவர்களைப் பிழைப்பிக்கக் கூடும் என்ற நம்பிக்கை இந்தியாவில் இருந்துவருகிறது. நோய்வாய்ப்பட்ட ஒருவன் தனக்கு வந்த வியாதி சொஸ்தமாகாது என்று வைத்தியர்களால் கைவிடப்பட்டவுடன் அவ்வியாதியைப் போக்கிக் கொள்வதற்காக தனக்கு நம்பிக்கையுள்ள ஒரு புண்ணிய க்ஷேத்திரத்திற்கு யாத்திரை போகிறான். அவனது இச்செயலைச் சிலர் மூடநம்பிக்கை என்று கூறலாம். இவ்விதயாத்திரையினால் அந்நோயாளி சிலசமயங்களில் குணமடைகின்றதனால் அவன் செயலை மூடநம்பிக்கை என இகழ்வது சரியாகாது. அப்புண்ணிய க்ஷேத்திரம் அவ்வியாதியைச் சொஸ்தப்படுத்துவதில்லை. அந்தக்ஷேத்திரத்தினிடத்து அவன்கொண்ட உறுதியான நம்பிக்கையே சிறந்த மருந்தாகிறது நம்பிக்கையால் வியாதிகள் குணப்படுவதற்குக் கிறிஸ்துவேதத்திலும் ஆதாரம் காணப்படுகிறது. சிலநோயாளிகள் ஏசுநாதரிடம்வந்து தங்கள் வியாதிகளைச் சொஸ்தப்படுத்தும்படி கேட்டுக் கொண்டார்கள். அதற்கு அவர் அவர்களைநோக்கி, "நான் வியாதியைச் சொஸ்தப்படுத்துவேன் என்ற நம்பிக்கை உங்களுக்கு உண்டா?" என்று கேட்டார். அவர்கள் உண்டு என்றார்கள். "ஆனால் அப்படியே ஆகட்டும்" என்றார் கிறிஸ்து. இதனால் நம்பிக்கை ஒரு சிறந்த ஔஷதம் என்று நமக்குத் தெரிகிறது.

—சுவாமி பரமானந்தர்.

# என் விளக்குப் பக்கம்

என். ஆர். இரகுநாதாசாரியார், எம்.ஏ.

---

**நா**ன்குபக்கங்களிலும் காலி மனையினால் சூழப்பட்ட ஒரு சிறிய பங்களாவில் நான் வசிக்கிறேன். கல்லுக்கட்டடம்; வீட்டின் முன்னே ஒரு சிறிய பூந்தோட்டத்தில், ரோஜா, செவ்வந்தி, மல்லிகை, 'க்ரோடன்ஸ்' முதலிய செடிகள் இருக்கின்றன. நான் இருக்கும் ஊர் செம்மண்பூமி; கவனிக்காவிட்டால் கறையான் எல்லாவற்றையும் தின்றுவிடும். வருஷத்தில் சுமார் 16 அங்குலமழை; வெயில் காலத்தில் அதிகவெயில்; குளிர்காலத்தில் அதிகக்குளிர். நான்கு பக்கமும் மலைகள். சிறிய காட்டாறுகளைத் தவிர, பெரிய நதிகள் ஒன்றும் இல்லை. ஏரி, குளங்களே பாசனத்திற்கு ஆதரவு.

அஸ்தமிக்கும்போது, 'பெட்ரோமேக்ஸ்' விளக்கு என் வீட்டின் முன்பக்கத்தில் எரிகிறது. அந்த விளக்கைச் சுற்றிவந்து விளையாடும் சிலபிராணிகளைப்பற்றிக் கொஞ்சம் கூறுகிறேன். வருஷம் முழுவதும் தவறாமல் காணப்படக்கூடிய ஜந்துக்கள் சில; அவைகளில் முக்கியமாகத் தவளை, பல்லி, சுவர்க்கோழி அல்லது பாச்சை, தத்துக்கிளி, சிலந்தி, கொசு. வெயிற் காலங்களில் பூரான் (சாதாரணப் பூரான், சடைப்பூரான், பெரிய சங்கிலிப் பூரான்) ஜலமண்டலி, செவிப்பூரான், தேள்முதலியவை விசேஷமாகக் காணப்படுகின்றன. மழைக்காலத்தில் பிள்ளைப்பூச்சி (*Grillotalpa*), ஈசல், இலைப்பூச்சி (*Leaf-insect*) பச்சைக்கொசு (*Gnats*), ஊசித்தட்டான், மரவட்டை, கம்பளிப்பூச்சிமுதலியவை விளக்கை நாடுகின்றன. குளிர்காலத்தில் அநேகவிதமான விளக்குப்பூச்சிகள் (*Moths*) விளக்கைச்சுற்றிப் பறக்கின்றன. ஆகவே, பருவங்களுக்கேற்ப விளக்கை நாடும் பிராணிகள் அநேகம் மாறுகின்றன. பிரகாசமான விளக்கு இருக்கும் இடங்களில் பலவிதப் பாம்புகள் நாடுகிறது சகஜம். நான் இந்தப் பங்களாவுக்கு வந்து ஒருவருஷகாலத்தில் ஒருபெரிய நல்லபாம்பும், சுமார் 3 அடி நீளமுள்ள கட்டுவிரியனும் வந்தன. விளக்கை அநேகவிதமான பூச்சிகள் நாடுவதால், அவைகளைப் பிடித்துத்தின்பதற்குத் தவளைசேருகிறது. அதன்பின் பாம்பும் தொடருகிறது. சூரியனைக் கிரஹங்கள் சுற்றுவதுபோல், விளக்கைச் சில ஜந்துகள் சுற்றிச்சுற்றி வருகின்றன.

பூரான், கம்பளிப்பூச்சி, மரவட்டை, விளக்குப்பூச்சி முதலானவை பிரதக்ஷிணம் செய்துகொண்டே இருக்கும். கட்டெறும்பும் அப்படியேதான். இவை இவ்வாறு பிரதக்ஷிணம் செய்வதின் காரணம் என்னவென்று நன்கு விளங்கவில்லை.

## கோசுகும் ஈயும்

விளக்கை நாடுவதினால் நாசமே ஜாஸ்தியாகக் காணப்படுகிறது. அநேகவிதப் பிராணிகளைத் தின்று சில பிழைக்கின்றன. என்விளக்கு எரியும் அறையில் நான்கு மூலைகளிலும், 10 அடி உயரத்திற்கு மேல், மேற்கூரைமட்டும் சிலந்திப்பூச்சி ஏராளமாக வலைகட்டியிருக்கிறது. அதில் ஆயிரக்கணக்கான கொசுக்கள் அகப்பட்டுக் கொண்டு உயிர்மாய்ந்தன. கொசுவின் மூலமாய் மலேரியா என்னும் ஜுரம் பரவுவதால், கொசுவைத்தொலைக்க அநேகமுயற்சிகள் நடக்கின்றன. (1) கொசுவின் முட்டைகள் குஞ்சுபொரிக்காவண்ணம் சிறிய சிறிய குட்டைகளில் நீர் சேராமலும், (2) சாக்கடைத்தண்ணீர் எங்கும் நில்லாமல் ஓடும்படியாகவும், (3) குளம், கிணறுகளில் கொசுவின் குஞ்சுப் புழுவை (*Larva*)த் தின்னும் ஒருவிதமீனைவிட்டும், (அல்லது குளங்களில் 'சேரா' (*Chara*) என்று சொல்லப்படும் ஒரு பூண்டை உற்பத்திசெய்து தண்ணீரின் மேல் ஒருதைலப்பொறையால், கொசுவின் குஞ்சுப்புழு சுவாஸம் பண்ண முடியாமலும், எவ்வளவோ விதங்களில் பிராயத்தனங்கள் நடக்கின்றன. நாம் கொசுவை விரட்டினதும், அது மேலே பறந்து செல்லுகிறது. அங்கே ஒரு சிலந்திக்கூடு இருந்தால், அதில்போய் ஓடமுடியாமலும், இறக்கைகளை அடிக்கமுடியாமலும் கட்டாயம் கைகால் மாட்டிக்கொள்ளுகிறது. நாகரிகம் என்னும் பேரவாவினால் வீட்டை மாதம் மாதம் பூராவாக ஒட்டடை அடிக்காமல் சுவர்களில் கீழ்ப்பாகங்களைச் சுத்தமாய் வைத்துக்கொண்டு, மேல் பாகங்களைச் சிலந்திக்கு ஆறுமாஸசாஸநம் செய்துகொடுத்தால், மலேரியா பெரும்பான்மையும் நம்தேசத்தைவிட்டுச் சென்றுவிடும் என்பது என்னுடைய கொள்கை. காலராவை (*Cholara*) பரவச்செய்யும் ஈக்கும் இதேஸாத்தியம்தான். சிலந்தியின் கூட்டில் அகப்பட்ட ஈயின் அவஸ்தையை நீங்கள் பார்த்திருப்பீர்கள். கொல்லைகளிலும், மண்முற்றங்களிலும், மூலைகளிலும் சிலந்திக் கூட்டில் அநேக ஈப்பிணங்களை நான் பலதடவைகளிற் பார்த்திருக்கிறேன். ஆகையால், தாழ்வாரம் முற்றம், சாப்பிடும் உள்முதலிய இடங்களில் கீழே மூலைகள் ஓரமாகக் கொஞ்சம்இடம் சிலந்திக்கு விட்டால், ஈயின்பாதை மட்டுப்படும் என்று உறுதியாய் நம்புகிறேன்.

## பாம்பு வகைகள்

என் பங்களாவில் நான்வந்தபிறகு, தண்ணீர்ப்பாம்பு, பில்லுப் பாம்பு (*Grass-snake*), சாரைப்பாம்பு (*Ratsnake*), மலைப் பாம்பு, கண்ணாடிவிரியன் (*Russel's viper*), கட்டுவிரியன் (*Krait*) நல்லபாம்பு முதலிய பாம்பு இனத்தைச்சேர்ந்த பிராணிகள் அனேகம் காணப்பட்டன. ஜாதிக்கு ஒன்ருய்ப் பிடித்துக் கண்ணாடி ஜாடிகளில் திராவகங்களில் போட்டுவைத்திருக்கிறேன். சுமார் 8 விஷப்பாம்புகளை அடித்துப்போட்டேன். சுமார் 4 விஷமற்ற பாம்புகளைச் சுயேச்சையாகத் தோட்டத்தில் திரியும்படி பிடித்து விட்டுவிட்டேன். நான் பார்த்தமட்டில், ஒரு பாம்பாவது ஆளை எதிர்த்து வரவில்லை. கூடியமட்டில், ஓடிப்போகவே பிரயத்தனம் செய்தனவே ஒழிய, கடிக்கச் சற்றேனும் முயற்சி செய்யவில்லை. என்தோட்டத்தில் ஒருபெரிய கிணறு இருக்கிறது. அதனருகில் பாம்புப்புற்று ஒன்று இருக்கிறது. அதில் ஒரு பெரிய ஸர்ப்பம் இருக்கிறது. அதனருகில் புல் அறுப்பவர்கள் அனேகர், அதைப் பார்த்ததாகச் சொல்லுகிருர்கள். மனிதரைக் கண்டதும், ஓசைப் படாமல், புற்றுக்குள் சென்றுவிடுகிறதாம். என்வீட்டினுள் வந்த இரண்டுபாம்புகளும் தடியினுல் அடிபடும்போதுகூட, ஓடிப் போகவே முயன்றன. ஆகவே, தானே வலுவாகவந்து கடிக்கும் பாம்பு இனம் நமது தென்னிந்தியாவில் இல்லை. பரநாகம் என்னும் ஸர்பராஜா (*King-cobra*) ஒன்றுதான் ஆளைத்துரத்தும். அது நமது தேசத்தில், ஆஸாமிலும் (*Assam*) திருநெல்வேலி ஜில்லாவிலும்தான் உண்டு. நமது தேசத்தில் சுமார் 20,000 மனிதர்கள் பாம்புக்கடியினுல் ஒவ்வொருவருஷமும் மாண்டு போகின்றனர். காலம் சென்ற ஸ்ரீமான் எஸ். சந்திரசேகர முதலியார் விசாகப்பட்டணம் ஜில்லா மெடிகல் ஆபீஸராக (D. M. & S. O.) இருந்தபோது, "பெரும்பான்மையும் ஜனங்கள் விஷத்தினுலன்று, பயத்தினுல் உயிரை இழக்கிருர்க"ளென்று எனக்குச் சொன்னுர். தைரியத்தைக் கைவிடாமலிருந்தால், கொடியபாம்பினுல் கடிபட்டபோதிலும்கூட, உயிரைத்தப்பித்துக் கொள்ளுவதற்கு மார்க்கங்கள் அனேகம் இருக்கின்றன.

## பல்லி இனம்

சுவர்ப்பல்லி, மரப்பல்லி, ஓணன், சிகப்புவால் அரணை, பாம்பு அரணை முதலிய பல்லி இனத்தைச்சார்ந்த ஜந்துக்கள் என்விளக்கை நாடுகின்றன. இவைகளில் சுவர்ப்பல்லிதான் எப்போதும் தவருமல் காணப்படக்கூடியது. சுவரின்மேல் செங்குத்தாக ஏறுவதற்கு அதன் விரல்களின் உட்பாகத்தில் தொட்டாற்சுருங்கி

இலைகள் வரிசைபோல, காற்றை உரிஞ்சும் கருவிகள் (*Suckess*) இருக்கின்றன. வேகமாய்ச் செல்லும்போது, இக்கருவிகள் சரியாய் உரிஞ்சமுடியாமல், பல்லி, தொப்பென்று கீழேவிழுகிறது. ஓடியாடித் திரியும்போதும், பூச்சியைப்பிடித்துத் தின்னும்போதும் அகஸ்மாத்தாய் விழும் பல்லிக்கு நம்முன்னோர் சாஸ்திரம் கற்பித்து, பஞ்சாங்கம் தவருமல், உடனே காணக்கூடிய இடங்களில் "பல்லி விழுதலின் பலன்" கூறுகிருர்கள். பல்லிசொல்லுக்குப் பலன், பல்லிவிழுதலின் பலன் எந்தக்காரணத்தினுல் உண்டானவையென்று நான்வெகுநாளாய் ஆலோசித்தேன். ஒருவேளை பூலோகத்தில் பிராணிசிருஷ்டிமுறையில் (*Evolution*) முதல்முதலில்பேச்சுபோன்றசப்தம்செய்யக்கூடியது பல்லியன்றோ எனக்கருதி அதன் சொல்லுச்கு மஹிமை ஏற்பட்டதா? மேற்கூரையில் தலைகீழாகச் செல்லும் சக்தியைவாய்த்த பல்லிவிழுந்தால், அதற்கு ஏதாகிலும் விசேஷம் இருக்கவேண்டும் என்று எண்ணி. சாஸ்திரம் கல்பித்தார்களா? இக்கேள்விகளுக்குச் சரியான பதில் உண்டானுல், அதை எனச்குத் தெரிவிக்கும்படி 'கலைமகளை'ப்படிக்கும் பெரியோர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

ஈ, கொசு, தட்டாரப்பூச்சி, சுவர்க்கோழி, கரப்பான்பூச்சி, தேள், வெட்டுக்கிளி, ஈசல், முதலியவைகளைப் பல்லிபிடித்துத் தின்னும். சிறிய ஜந்துக்களாயிருந்தால், உடனே கரகரவென்று கடித்து மென்றுதின்னும். கொஞ்சம் பெரியவைகளாயிருந்தால், அவைகளைவாயினுல் கௌவிக்கொண்டு, பலதடவை "பட், பட்" என்று கீழே அடித்துப் பிறகு கொஞ்சம் கொஞ்சமாகத் தின்னும் தென் இந்தியாவில் அகப்படக்கூடிய பல்லி இனத்தைச் சார்ந்த, ஜந்துக்களில் ஒன்றுக்காவது விஷம்கிடையாது. அரணை நக்கினுல் உடனே மரணமென்று பழமொழி ஒன்று இருக்கிறது. அது மிகவும் தப்பான அபிப்பிராயம். என்வீட்டிற்குள் வரும் பல்லி, அரணை, ஓணான் முதலியவைகளை நான் சற்றுக் கவனமாகப் பார்த்து வந்தேன். பல்லி, அரணை இரண்டும், நாம் கிட்டவரும் போது ஓடிப்போகின்றன. அவைகளுக்குப் பயம் அதிகம் என்று காணப்படுகிறது. ஓணான் பயந்து ஓடுகிறதில்லை. வெருட்டினுல் கூட, கொஞ்சதூரம்போய், அங்கே நிற்கிறது. இது ஒருசமயம் புத்திக்குறைவினுலோ என்று சம்சயித்தேன். நான் இரண்டு கூடுகளில் குழிமுயல் குட்டிகளை வளர்த்து வருகிறேன். அந்தக் குட்டிகள் விளையாடும்போது ஒருபெரிய ஓணான், கூட்டின் அருகில்வந்து, அவைகளைப் பார்த்துக்கொண்டே, காலைமுதல் சாயங்காலம்வரையில் தலையைத் தூக்கிக்கொண்டு படுத்துக்கிடக்கிறது. நான்கிட்டே சென்ருலும், ஓணான் நகருகிறது இல்லை. நான்

சமீபிக்கும்போது, அது என்னை உற்றுப்பார்க்கிறது. ஒருவேளை அதற்குப் பேச்சுவந்தால், "நீ ஏன் என்னைத் துரத்துகிறாய்? நீ முயற்குட்டிகள் விளையாடுவதைப் பார்த்து ஆனந்திப்பதுபோல் நானும் சந்தோஷமடையக்கூடாதா?" என்று அது என்னைப் பின் வருமாறு கேட்குமோ என்னமோவென்று எனக்குதோன்றுகிறது. மொத்தத்தில் ஓணான் புத்திசாலி ஜந்துவென்றும் நாய் பூனை கிளி முதலியவை களைப்போல், மனிதனுடன் சினேகம் செய்து கொண்டு, அவன் ஆதரவில் இருக்கவேண்டுமென்று எண்ணுகிற ஜந்துக்களில் ஒன்று என்றும் எனக்குத் தோன்றுகிறது*.

## தவளை இனம்

அஸ்தமித்து, விளக்கு ஏற்றினதும், தவளை இனத்தைச் சேர்ந்த மூன்று ஜாதியார், என் அறையில் ப்ரத்யக்ஷமாகின்றனர்; தவளை, தேரை, சுண்ணாம்புத்தேரை. இம்மூவகைப் பிராணிகளும் சுவர் ஓரங்களில் உட்கார்ந்துகொண்டு தத்தித்தத்தி, பூச்சிகளைப் பிடித்துத் தின்னுகின்றன. நான் கிட்டே செல்லும்போது, மரியாதைக்குக் கொஞ்சம் நகருவதைத் தவிர, ஓடிப்போகும் வழக்கம் இல்லை. நான் பார்த்தமட்டில், தவளை இனத்துக்குப் புத்திக்குறைவு என்றே உறுதியாய்ச் சொல்லவேண்டும். ஏனென்றால், எத்தனை தடவை தடியினால் வெளியே தள்ளினபோதிலும், உடனே பின்னுடன் உள்ளே வருகிறது. மொத்தமாகப் பாம்பு, தேள் இந்த இரண்டையும் தவிர, மற்ற ஜந்துக்களை, நான் கொல்லுவது இல்லை. கடினமாக அடிப்பதும் கிடையாது. நான் கொல்லமாட்டேன் என்னும் விஷயம் ஓணானுக்கு நன்றாய்த்தெரியும். கொன்றாலும், தவளை தப்பித்துக்கொண்டு ஓடிப்போக முயலுவதில்லை. மேற்கூறிய மூவினங்களில், சுண்ணாம்புத்தேரைக்குக் கொஞ்சம் சண்டித்தனம் ஜாஸ்தி. இது தவளைபோல், கொஞ்சம் சிறியதாகவும் வெளுத்தும் மெலிந்தும் இருக்கும். கண்கள் விசாலமானவை. கைகால்களில் விரல்கள் வெகுநீளம். கையில் நாலு விரல்களும், காலில் ஐந்து விரல்களும் உண்டு. விரல்களில் நுனியில் வட்டமாக ஒரு சிறிய தட்டு இருக்கிறது. இத்தட்டுக்கு உறிஞ்சும் சக்தி உண்டு. இவைகளின் உதவியினால் இந்தத்தேரை சுவர்களிலும், நாற்காலிகளிலும், கம்பங்களிலும், இரும்புக்கம்பிகளிலும் ஒட்டிக்கொண்டிருக்கும். பிரதிதினமும் பெரியதும் சின்னதுமாகச் சுமார் நான்கு சுண்ணாம்புத்தேரைகள் என் அறையில் வருகின்றன.

---

* "ஓணானைக்கொன்றால் உழக்குப்புண்ணியம்" என்று ஒரு பழமொழி வழங்குகிறது; அது மிகவும் அக்கிரமமானது.

தடியினல் வெருட்டிப்பார்த்தேன். உள்ளுக்குள்ளேயே அங்குமிங்கும் தத்தியும் ஓட்டியும் பாய்ச்சல்காட்டுமே ஒழிய வெளியேபோவதில்லை. ஒருவேளை பிடித்து வெளியேவிட்டால், அடுத்தநிமிஷம் உட்கார்ந்திருக்கும் நாற்காலியின் காலில் விளக்குப்புறமாக ஒட்டிக்கொண்டிருக்கும். "நீகொன்றாலும் சரி, நான் உன்னை விடமாட்டேன்" என்னும் சண்டிஇனங்களில் இது ஒன்று என்று நினைக்கிறேன். இதன் சண்டித்தனத்தினல், நான் அலுத்துப்போய், வெருட்டுவதை நிறுத்திவிட்டேன். சுமார் நான்குமாஸகாலமாக இவைகளுக்காகப் பாம்பு உள்ளே வராததனல், தவளை தேரை முதலியவைகளை என் மித்திரர்களாகக் கொண்டாடுகிறேன். என் வீட்டு வாசலில், இரைப்பை ஒட்டி ஒருசிறிய ஓலைப்பந்தல் போட்டிருக்கிறேன். பகலில், சுண்ணும்புத்தேரை கூரையின்மேல் ஏறி, ஓலையின் இடுக்குக்களில் பதுங்கிக்கிடக்கிறது; அஸ்தமித்ததும், கூரையிலிருந்து 'தொப்' என்று கீழே சுமார் 4, 5 அடிதூரத்திலிருக்கும் செடிகளின்பேரில் விழும்; செடிகளில், கிளைக்குக்கிளை தாவுவதையும், நான் பலதடவை பார்த்திருக்கிறேன். இதற்கு 'அணில் தவளை' என்று பேரிட்டால் தகுமென்பது என் எண்ணம்.

### கரப்பான்

தேள், கரப்பான்பூச்சி, சிலந்தி இவைகளைப்பற்றி அதிகம் விஸ்தரிக்கவேண்டியதில்லை. கரப்பான் வீட்டிலிருந்தால், ஐஸ்வரியம்[1] என்று பெரியோர் சொல்லக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஸ்ரீரங்கத்தில் சுவாமியின்மேல் நூற்றுக்கணக்காய் ஊருவதையும் பலதடவைபார்த்திருக்கிறேன். அவை வேறு இடங்களுக்கும் செல்லாமல் பொக்கிஷ அறைகளிலும், கோவில் மூலஸ்தானங்களிலும் திருமடைப்பள்ளிகளிலும் கிடங்குகளிலும் மட்டும் இருந்தால் குற்றம் ஒன்றும் இல்லை. ஆனல், ஈயானது அசுத்தத்தில் புரண்டு, குழந்தையின் வாயில் உட்காருவதுபோல் கரப்பான்பூச்சி கக்கூஸ்களில் திரிந்து, சமயலறை படுக்கையறையையும் நாடுகிறது. காப்பான்பூச்சியினல், க்ஷயம் பரவுகிறது என்று ஆரோக்கிய சாஸ்திரிகள் சொல்லுகிறார்கள். மேலும் சிலசமயங்களில் கரப்பானுக்கு உற்சாகம்மேலிட்டு, தகவல் புரியாமல் அங்குமிங்கும் பறக்கும். அச்சமயங்களில், அது நம் தேகத்தின்மேல் முட்கள் வாய்ந்த தன்கால்களால் 'பட்' என்று அடிக்கின்ற மிகவும் அசுத்தப்பிராணி. அது கால்வைக்காத வஸ்து கிடையாது. அதற்குப் பிடிக்காத பண்டம் இல்லை. அது

1. இது நிஜமோ, பொய்யோ!.

போதாமல், உப்பிலும் பருப்பிலும் புளியிலும் முட்டையை வைக்கிறது. இக்காரணங்களினால் பல்லி மூலமாகவோ அல்லது தடியின் மூலமாகவே, கரப்பானை வீட்டினின்றுங் கட்டாயம் ஒழிக்க வேண்டும். ஐஸ்வரியத்தைவிட, ஆரோக்கியம் மேலானது.

## சிலந்தி

சிலந்தி உபகாரி என்று முன்பே கூறியிருக்கிறேன். சிலந்தியினால் அபகாரம் ஏற்படுகிறது என்று இதுவரையில் கண்டுபிடிக்கப்படவில்லை. சிலந்தியினத்தைச்சார்ந்த விஷமுள்ள பிராணி ஒன்று நம் தேள். சிலந்தி இந்தியாவில் காணப்படுகிறது. இதன் கால்களில் மயிர் பட்டைபட்டையாக வெளுப்பு, கறுப்பு மாறி மாறி யிருக்கிறது. இதன்விஷம் பக்ஷிகளைக் கொல்லும் சக்தி உடையது என்று புஸ்தகங்களில் கூறப்படுகிறது. இவ்வகைச் சிலந்தியைப் பலதடவை என் வீட்டில் பகலிலும் இரவிலும் பார்த்திருக்கிறேன். இது ஆளைக் கண்டதும் ஓட்டம் பிடிக்கிறது. இதுவரையிலும் ஒருவரையும் கடித்ததாகக் கேள்விப்படவில்லை.

## தேள்

தேளைப்பற்றி ஒருவிஷயம்மட்டில் சொல்கிறேன். தேள் கொட்டினால், கொட்டின இடத்தில் 4 சொட்டுக் 'குளோரோபாம்' (*Chloroform*) விட்டால், உடனே வலி கட்டிவிடுகிறது. இந்த வைத்தியத்தை என் சேவகன் தற்செயலாய் ஒருநாள் கண்டுபிடித்தான். பிறகு, குளோரோபாம், சமீபத்தில் இல்லாதகாலத்தில் இரண்டு சமயங்களில் நான் தேள்கடிக்கு சாதாரண ஸ்பிரிட்டை (*Methylated spirit*) போட்டேன்; குணம் உண்டாயிற்றென்று கொட்டுப்பட்டவர் சொன்னர்.

## பூரான் வகைகள்

சாதாரண சிறியபூரான், பெரிய சங்கிலிப்பூரான், செவிப்பூரான், ஜலமண்டலி அல்லது ரக்தமண்டலி என்று சொல்லப்படும் நாலுவகைப் பூரான்கள் என் விளக்குக் காந்தியில் அடிக்கடி காணப்படுகின்றன. ஒன்றாவது எங்களில் ஒருவரையாவது ஒரு விதமான தொந்தரவும் செய்ததில்லை. நான்மட்டில், கண்டவைகளை அடித்துக்கொல்வதோ, அல்லது பிடித்துப் புட்டியில் திராவகத்தில் போடுவதோ வழக்கம்; ஏனென்றால் பூரானுக்குக் கொஞ்சம் விஷமுண்டு. அதற்கு வாயண்டை இரண்டு சிறிய கூர்மையான பற்கள் உண்டு. அவைகளின் நுனியில் சிறிய துவாரம் இருக்கிறது. அத்துவாரத்தின் வழியே விஷப்பையினின்றும் விஷமானது மற்றப் பிராணிகளின் தேகத்தினுள்ளே

செலுத்தப்படுகிறது. பெரிய சங்கிலிப்பூரானின் விஷம் சிறிய பக்ஷி களைக் கொல்லும் சக்திவாய்ந்தது. மனிதர்களுக்குத் தேகத்தில் தடிப்பு முதலிய சிறிய வியாதிகளைத்தவிர, கொடிய தீமைகளை உண்டாக்கும் சக்தியற்றது. தென்இந்தியாவில் பூரான் 'ஒரு தாய்க்கு ஒரு பிள்ளை' யானதால் அதை அடிக்கக்கூடாதென்ற ஒரு ஆசாரம் இருக்கிறது. தாய் எது, அதற்குக் குட்டி ஒன்றே என்று யார் எப்போது கண்டுபிடித்தனரோ என்னும் விஷயங்கள் ஆராய்ச்சி செய்யத்தகுந்தவைகளே. பூரானுக்கு 'நூற்றுக்கால்' பிராணி என்று இங்லீஷ்பெயர். அதன் கால்கள் வயலில் பயிரின் மேல் காற்றுவீசுவதுபோல், ரயில்வண்டி சக்கரங்கள் உருளுவது போல் ஒன்றன்பின் ஒன்று வெகு அழகாகச்செல்லும். பூரானின் கால்களையும் அதன் கமனத்தையும்பற்றி ஸர் ரே லெங்காஸ்டர் (*Sir Ray Lankester*) என்னும் மேல்நாட்டுச் சாஸ்திர அறிஞர் ஒரு சிறிய வேடிக்கையான செய்யுள் செய்தனர். "ஒரு பூரான் ஒரு சாக்கடையின் ஓரமாக ஒருநாள் சற்று உட்கார்ந்து இருந்தது. அருகிலிருந்த ஒருதவளை அதைப்பார்த்து 'ஐயா, பூரானே! உமக்கு இத்தனை கால்கள் இருக்கின்றனவே; தயை செய்து, எந்தக்கால் முன், எது பின் நடக்கின்றது என்று சொல்ல வேண்டும்' என்று வெகுவணக்கமாகக் கேட்டது. இதைக்கேட்ட பூரானுக்கு உடனே சந்தேகம் உண்டாக, அது மேலும் கீழுமாக விழுந்து ஓடியாடிக் கடைசியாக ஒன்றும்புரியாமல் களைத்துப் போய்ச் சாக்கடையில் விழுந்து உயிரை மாய்த்துக்கொண்டது" என்பது அச்செய்யுளின் பொருள்.

பெரிய சங்கிலிப்பூரான், சாதாரணமாய் மலைப்பிரதேசங்களில் காணப்படும். பகலில் அது பாறைகளின் கீழ் உறங்கிக்கிடக்கும். அதன் தேகத்தில் பட்டைப் பட்டையாக மஞ்சளும் கறுப்பும் மாறி மாறி இருக்கின்றன.

செவியான் அல்லது செவிப்பூரான் வெகுநீளமாக மெலிந்து நூல்போலிருக்கும். அதன் கால்கள் மிகவும் சிறியவையானதால் கண்ணுக்குச் சுலபமாகக் காணப்படமாட்டா. இரவில் செவியான் நெளியும்போது பார்க்க வெகு அழகாயிருக்கும். அதுபோகும் போது பின்னால் சிறிதுதூரத்திற்கு ஓர் ஒளி உண்டு. எத்தனை அடித்தாலும் சுலபமாகச் சவாது.

## ஜலமண்டலி

ஜலமண்டலி வெகு விரைவாக ஓடும் சிறியஜந்து. பந்தயக் குதிரைபோல் அதிகவேகமாகவும் நிதானமற்றவனைப்போல் இப்படி யும் அப்படியும் ஓடும். இவ்வகையில் ஒன்று ஜலமண்டலியென்றும்,

அதுகடித்தால் உடம்பெல்லாம் ஒரே ஜலமாகக் கொட்டி மூர்ச்சை போடுமென்றும், மற்றொருவகை ரத்தமண்டலியென்றும் அது கடித்தால், கண், மூக்கு, வாய்முதலிய துவாரங்களிலிருந்து ரத்தம் கொட்டுமென்றும் பெரும் அபகீர்த்தி உண்டு. ஜலமண்டலிக்கு விஷம் இல்லையென்று சாவதானமாகப் பரீக்ஷைசெய்த ஒரு சாஸ்திர அறிஞர் எழுதியிருக்கிறார். ஜலமண்டலி கடித்ததாகவும் அதனால் ஒருவர் உபத்திரவப்பட்டதாகவும் இதுவரையில் நான் கண்டதில்லை.

## மரவட்டை

மரவட்டை மழைக்காலங்களில்தான் காணப்படும். இருவகை மரவட்டை நம் தேசத்தில் சாதாரணமாய்க் காணப்படுகின்றன. ஒன்று கறுப்பாகவும் சிறியதாகவும் இருக்கும். மற்றொருவகை பெரியதாகவும் செங்கலின் சிவப்பாகவும் இருக்கும். இவை இரண்டுக்கும் மத்தியில் மற்றொருவகையும் உண்டு. அது சிறியதாகவும் சிவப்பாகவும், தேகத்தில் நீளமாகத் தலையிலிருந்து கடைசிவரைக்கும் இரண்டு பச்சைக்கோடுகளை உடையதாகவும் இருக்கும். இரவில் மரவட்டை தீபத்தைநாடி அதற்குக் கொஞ்சதூரத்தில் சுற்றிச் சுற்றிவரும். மரவட்டை மிகவும் அற்பப்பிராணி. அதனால் ஒரு தீமையும் கிடையாது. அது மண்கொல்லைகளில் நூற்றுக் கணக்காய் முட்டையிடும். முட்டைகள் குஞ்சு பொரித்து ஒவ்வோர் இடத்திலும் சுமார் 150 அல்லது 200 சிறிய புழுக்கள் போல் சிவந்த குட்டிகள் மொத்தமாகச் சேர்ந்து இருக்கும். இந்தக் கூட்டம் அடிக்கடி இடம்விட்டு இடம் மாறும். அவ்வாறு மாறும்போது ஒரு சிறிய தலைமை மரவட்டை முன்னே செல்லும். அதன் பின்னே மற்றவைகள் வரிசையாக ஒன்றுக்குள் ஒன்றுபுகுந்து கொண்டுபோவதைப்பார்க்க வெகு அழகாயிருக்கும். சில கொஞ்ச தூரம் சிதறிப்போனாலும், எப்படியாவது மந்தை இருக்கும் இடத்தைக் கண்டுபிடித்து உடனே வந்து சேர்ந்துவிடும். 'ஒற்றுமையே பலம்' (*Union is strength*) என்னும் தத்துவத்தை இக்குஞ்சுகளிடமிருந்து நாம் கற்றுக்கொள்ளலாம்.

## பிள்ளைப்பூச்சி.

மழைக்காலத்தில், என்னை இரவில் வெகு ஹிம்ஸைசெய்தது பிள்ளைப்பூச்சி. இது பார்வைக்கு ஒரு பெரிய சுவர்க்கோழிபோலிருக்கும். இதற்கு உடல் மெலிந்தது; அதிநுட்பமான மண்ணில் குழி பறிப்பதற்காகவும், உணவுப்பொருளைக் கொரித்துத் தின்பதற்காகவும் இதற்கு வாயண்டை ரம்பம்போன்ற இரண்டு பற்கள் உண்டு. முன்இரண்டு கால்களிலும் குழிபறிப்பதற்காக நுனியில்

கூர்மையான உறுப்புக்கள் இருக்கின்றன. இதற்கு இரண்டு சிறிய இறக்கைகள் உண்டு. அவைகளைக்கொண்டு, அது வெறிபிடித்தாற் போல் திடீர்திடீரென்று அங்குமிங்கும் பறக்கும். ஒவ்வொரு நாளும் இரண்டுமூன்று பூச்சிகள் என் அறையை நாடும். ஒன்றுவது பல்லியின் வாயிலிருந்து தப்பியது இல்லை. பல்லி இந்தப்பூச்சியை அதிக விநோதமாகப் பாய்ந்து பிடித்துத்தின்னும்.

ஈசல்

பிள்ளை பூச்சியைப்போல் இறக்கைபடைத்திருப்பதைப் பெரிய தனமாக, அற்பனுக்கு ஐஸ்வரியம் கிடைத்ததுபோல் கண் மூஞ்சி தெரியாமல் கொண்டாடி யமன்வாயில் புகும் மற்ெருரு ஜந்து ஈசல். ஈசல் ஒருவகை எறும்பு. அதற்கு ஒருபருவத்தில் இறக்கைகள் முளைக்கின்றன. ஈசல் ஆயிரக்கணக்காக விளக்கை நாடிச் சற்றுநேரம் அங்குமிங்கும் பறந்து பிறகு பல்லிக்கு ஆகாரம் ஆகும் விதத்தைக் காணுதவர் இருக்கமாட்டார்.

இலைப்பூச்சி

என் வீட்டிற்குள் இரவில் மூன்றுவித இலைப்பூச்சிகள் நாடு கின்றன. இவைகளுக்கு இறக்கைகள் பச்சை இலைபோல நரம்புக ளுடன் கூடியிருக்கும். இவைகள் செடிகளின் இலைமொட்டு பூமொட்டுகளுக்குக் கொஞ்சம் தீங்கை விளைவிக்கக்கூடியவை. பல்லிக்கும் சிலந்திக்கும் இவை மிகவும் இன்பமான உணவு. சிலந்தியின் கூட்டில் அகப்பட்டுக்கொண்ட அனேகம் இலைப்பூச்சி களில் ஒன்றுவது தப்பவில்லை. தப்புதற்கு முயற்சியும் இவைகளிடத் தில் காணப்படவில்லை. சிலந்தியின் வலையில் அகப்பட்டுக்கொண்ட தட்டாரப்பூச்சி தன்னுல் வாய்ந்தமட்டும் இறக்கைகளை அடித்துக் கொள்ளும். ஆனல் என்னபயன்? சிலந்தி, சற்றுதூரத்தினின் றும் தட்டாரப்பூச்சியின் பயனற்ற முயற்சிகளைப் புன்னகையுடன் பார்த்துக்கொண்டு, மெல்லமெல்ல அதனருகே நாடும். சிலசமயங் களில், சிலந்தி தட்டாரப்பூச்சியின்மேல் மூலைக்குமூலைபாய்ந்து புதியநூல்களை நூற்றுத் தன்வலையைப் பலப்படுத்தும்.

ஆகவே, எளியோரைவலியோர் அடித்துக்கொல்வதற்கு என் விளக்கே சாட்சி. மனிதன் மற்ற ஜீவராசிகளைவிட மிகவும் உயர்ந் தவன். மனிதனுக்குத் துன்பங்கள் அநேகம். மற்றப்பிராணிகளிட மிருந்து மனிதனுக்கு நேரிடும்தீங்கு ஒருபங்கு; ஒருஜாதியாரால் மற்ெருருஜாதியாருக்கு நேரிடும் தீங்கு பத்துப்பங்கு. ஒருவரைஒரு வர் ஹிம்ஸித்தால், இருவருக்கும் சுகம் இல்லை. ஆகையால், நாம் இவ்விஷயங்களை நன்கு உணர்ந்து பூலோகத்தில் எல்லோரும் சுகமாய் ஜீவிக்கவேண்டிய வழிகளைத் தேடவேண்டும்.

# கெப்ளர்

எஸ். முத்து, பி.ஏ., (ஆனர்ஸ்.)

---

**வா**னத்தில் இயங்கும் கிரகங்களின் சலனம் ஓர் ஒழுங்குடன் கூடியிருப்பதைப் பண்டைக் காலந்தொட்டே மக்கள் கவனித்து வந்தனர். ஆயினும் இவ்வொழுங்கின் அடிப்படையான விதியைக் கண்டுபிடித்த பெருமை நியூடனுக்கே உரியது. பொருளாகர்ஷணவிதியை (*Law of Gravitation*) நியூடன் கண்டுபிடிப்பதற்கு, அவருக்கு முற்றோன்றிய பல விஞ்ஞான சாஸ்திரிகளின் ஆராய்ச்சிகள் மிக்க உதவியாயிருந்தன. அன்னோர்களில் மிகச்சிறந்த பெருமைக்குரியோர் கலிலியோவும் கெப்ளருமாவர்.

ஜோஹானஸ் கெப்ளர் (*Johannes Kepler*) கலிலியோவின் சமகாலத்தவர். ஒருவரையொருவர் சந்திக்கவில்லையாயினும் இவர்களுக்குள் கடிதப்போக்கு வரத்துண்டு. ஒருவர் பெருமையை ஒருவர் உணர்ந்து போற்றிவந்தனர். தாலமியின் தவறுநிறைந்த வானஅமைப்பையே அக்காலத்தில் பெரும்பாலோர் நம்பிவந்தனர். பூமியேமையமாக வானகோளங்கள் சுற்றி வருகின்றன வென்று தாலமி போதித்தார். அதுவே கிறிஸ்தவமதத்திற்குப் பொருந்தியதாக அக்காலத்திய கிறிஸ்தவக் குருமார்கள் நினைத்துவந்தனர். அவ்வமைப்புக்கு விரோதமான கொள்கையை ஆதரித்தவர்களில் பலர் மிகவும் துன்புறுத்தப்பட்டனர். காப்பர்னிகஸ் என்ற விஞ்ஞான சாஸ்திரி சூரியனே மையத்திலிருப்பதாகவும் பூமி ஏனைய கிரகங்களில் ஒன்றாகச் சூரியனைச் சுற்றுகிறதென்றும் போதித்துச் சென்றார். கலிலியோ தமது தூரதரிசனியால் பல புதிய விஷயங்களைக் கண்டுபிடித்தது இக்கொள்கைக்கு ஆதாரமாயிற்று. இம்மகத்தான நன்மைக்காகக் கலிலியோ சிறைவாசமும் குற்றவிசாரணைத் துன்பமும் சம்மானமாக அடைந்ததை அவருடைய வாழ்க்கைச் சரிதையில் படித்தோம்.

ஜர்மனி நாட்டில் உர்டெம்பர்கு மாகாணத்தில் வீல் (*Weil*) என்னும் நகரில் 1571-ஆம் வருஷம் டிசம்பர் மாதத்தில் கெப்ளர் பிறந்தார். அவர் துர்ப்பலமான உடலோடு கூடியவராயிருந்தும் கல்வியின்மீதுள்ள அவாமிகுதியில் நன்கு படித்துவந்தார். பதினாறும்

வயதில் டியூபிங்கன் சர்வகலாசாலையிற் சேர்ந்து படித்துப் பரீக்ஷை களில் முதல்தரத்தில் தேறிப் பட்டம் பெற்றார். அதன் பிறகு கிராஸ் நகரத்துக் கிறிஸ்தவப் பள்ளியில் கணிதப் பேராசிரியராக நியமிக்கப்பட்டார். இப்பதவியை ஏற்கும் பொழுது இவருக்கு வயது இருபத்துமூன்று. ஒருமாதை மணம்புரிந்து கொண்டு குடும்ப வாழ்க்கையை நடத்தினாராயினும் இவருக்கு அமைதியான வாழ்க்கை வாய்க்கவில்லை. லூத்தர் (*Luther*) ஏற்படுத்திய திருந்திய கிறிஸ்தவமதக்கொள்கையினராக இருந்ததால் கத்தோலிக்கப் பாதிரிகள் இவரைத் துன்புறுத்தினர். வறுமையாலும் உதவியின்மையாலும் இவர் அனுபவித்த இன்னல்கள் பல. அக் காலத்தில் ஆஸ்திரியா சக்கரவர்த்தியான ருடோல்புக்கு ஸமஸ் தான வானசாஸ்திரியாகவும் ரஸவாதியாகவும் விளங்கிய டைக்கோ பிராகி (*Tycho Brahe*) என்பவரிடம் கெப்ளர் மாணவராகச் சேர்ந்தார். பிராகியின் கணிதசாலை (*Observatory*) பிரேகு (*Prague*) நகரிலிருந்தது. தாலமியின் அமைப்புச் சிறந்ததா அல்லது காப்பர்னிகஸ்ஸின் அமைப்புச் சிறந்ததா வென்பதைப் பற்றிப் பிராகி ஆராயப்புகவில்லை. தக்க கருவிகளைக் கொண்டு கிரகங்களின் சலனவேகங்களைப் பலவருடங்கள் நிர்ணயித்து அவற்றின் உதவியால் அக்கிரகங்களின் வருங்கால நிலைகளைக் கணிப்பதே பிராகியின் முக்கிய நோக்கமாயிருந்தது. அவர் தம்முடைய ஆயுட் கால முற்றும்அத்தொழிலில் செலவிட்டு இன்றும் யாவரும் மெச்சும் படி துல்யமான கிரகசார அட்டவணையைத் தயாரித்தார். கி. பி. 1601-ல் பிராகி இறந்தபின் அந்த அட்டவணைகளெல்லாம் கெப்ளருக்குக் கிடைத்தன.

பிராகியின் அட்டவணைகளைக் கொண்டு கிரகங்கள் செல்லும் பாதைகளின் உருவ அமைப்பை ஆராய்வதில் கெப்ளரின் கவனஞ் சென்றது. செவ்வாய்க் கிரகத்தின் பாதையைத் தம் ஆராய்ச் சிக்கு முக்கிய விஷயமாக அவர் கொண்டார். சூரியனையோ, பூமியையோ மையமாகக் கொண்ட வட்டவடிவம் அக்கிரகத்தின் பாதையாகாதென்பதைக் கெப்ளருக்கு முன்னிருந்த வானசாஸ்திரிகளே அறிந்திருந்தனர். விஷம மைய (*Eccentric*) வட்டவடிவமும் டைக்கோவின் அட்டவணைகளில் கண்ட கிரகநிலைகளுக்கு ஒத்து வரவில்லை. இதுவரை அக்கிரகம் சமவேகத்துடன் (*Uniform motion*) தன் பாதையில் செல்வதாக வைத்துக் கொண்டிருப்பதை மாற்றி அசமவேகத்துடன் (*Non-uniform motion*) செல்வதாக வைத்துக்கொண்டு கணக்கிட்டதில் அட்டவணைக்குச் சிறிது பொருத்தமேற்பட்டது. ஆயினும் பொருத்தம் முற்றிலும்

அமையவில்லை. விஷம மைய வட்டவடிவத்தை ஒதுக்கிவிட்டு வேறுபல வடிவங்கள் இயைகின்றனவா வென்பதை ஆராய்ந்தார். முடிவில் எல்லிப்ஸ் (*Ellipse*) என்ற வடிவம் செவ்வாய் கிரகத்தின் பாதைக்கு முற்றிலும் இயைந்தது. இவ் வடிவம் முன்பே தமக்குத் தோன்ருததைக் குறித்து மிகவும் ஆச்சரியமுற்ருர். செவ்வாய்க் கிரகத்தைப் போலவே மற்றக் கிரகங்களும் வெவ்வேறு பரிமாணமுள்ள எலிப்ஸ் வடிவங்களில் சஞ்சரிப்பதை எளிதாக நிரூபித்து, எல்லாக்கிரகங்களுடைய சலனத்தைக் குறித்த மூன்று பெயர்பெற்ற விதிகளை உலகிற்கு அளித்தார். இவ்வாராய்ச்சிகளில் ஆறுவருடங்கள் சென்றன.

கெப்ளரிர் கண்டறிந்த கிரகசாரவிதிகள் பின் வருமாறு:—

விதி 1.—சூரியனை ஒரு கேந்திரத்தில் (*Focus*) கொண்ட எல்லிப்ஸ்களில் கிரகங்கள் சஞ்சரிக்கின்றன.*

விதி 2.—சூரியனையும் ஒருகிரகத்தையும் சேர்க்கும் நேர் கோடு, சமகாலங்களில் சமமான பரப்புக்களைத் துடைக்கின்றது.†

விதி 3.—கிரகங்கள் சூரியனைச் சுற்றிவரும் கால அளவுகளின் வர்க்கங்கள் சூரியனுக்கும் கிரகங்களுக்குமுள்ள சராசரி தூரங்களின் கனங்களுக்கு நேர் ஒத்திருக்கின்றன.‡

இம் மூன்று விதிகளுக்கும் அடிப்படையான பொருளாகர்ஷண விதியை நியூடன் கண்டு பிடிப்பதற்கு இவை பெரிதும் உதவியாக விருந்தன.

பௌதிகத்தின் ஒரு பிரிவாகிய ஒளியிலும் கெப்ளர் சில ஆராய்ச்சிகள் செய்திருக்கின்ருர். கண்ணுடிகளில் பிம்பங்கள் தோன்றுவதின் தத்துவத்தையும் பார்வையின் தத்துவத்தையும் முதன் முதலாக விளக்கினுர். இரண்டு கண்களிருப்பதாலேதான் பொருள்களின் கனவடிவம் நமக்குத் தோற்றுகிறதென்றும், இல்லையேல் சுவரில் எழுதிய படத்தைப் போலத் தட்டையாகத் தோன்றுமென்றும் நிரூபித்தார். கலிலியோ ஆக்கிய தூரதரிசனியில் உட்கவிந்த லென்சு (*concave lens*) ஒன்றும் புறங்கவிந்த லென்சு

---

**Planets move in ellipses with the sun in one Focus.*

*†The Radius Vector or the line joining the sun and the planets sweeps out equal areas in equal times.*

*‡The squares of the periodic times of the planets round the sun are directly proportional to the cubes of their mean distances from the sun.*

ஒன்றும் (*convex lens*) உபயோகிக்கப் பட்டுவந்தன. இரண்டும் புறங்கவிந்த லென்சுகளாக வைக்கப்பட்ட தூரதரிசனியைக் கெப்ளர் முதலில் செய்தார்; அதை 'கெப்ளர் தூரதரிசனி' என்று இன்றும் வழங்குகின்றனர்.

மதக்கொள்கைகளில் அரசாங்க அதிகாரிகளுக்கும் இவருக்கும் வேறுபாடு ஏற்பட்டதால் பிரேகுவில் நிலைத்திருக்க முடியவில்லை. ஆகவே அவ்விடத்தை விட்டு லின்சு (*Linz*) என்ற ஊர் சென்று பதினான்கு வருடங்கள் தங்கினர். வறுமையால் குடும்ப பாரம் சகிக்க வொண்ணாததாயிற்று. இவருடைய குழந்தைகளில் ஐந்து அவ்வூரில் இறந்தன. இவருடைய சம்பளம் கொடுக்கப்படவில்லை. வறுமைப் பிணிக்கு இரையாக 1630-ஆம் வருடம் நவம்பர் மாதம் இவர் உயிர் நீத்தார். மேனாட்டு வானசாஸ்திரம் பயிலும் மாணவர்கள் கெப்ளர் விதிகளை நன்கு கற்ற பின்பே மேற் கற்கவேண்டியவர்களாயிருக்கின்றனர்.

---

## பௌத்தமதமும் கிறிஸ்துமதமும்

1300 வருஷங்களுக்குமுன் ரோமன்காதலிக்கிறிஸ்துமதம் இங்கிலாந்தில் புகுத்தப்பட்டது. ஏறக்குறைய அதேகாலத்தில் தான் முகம்மதிய மதமும் ஏற்பட்டது. கொரியர்களிடமிருந்து ஜப்பானியர் புத்தமதத்தை ஏற்றுக்கொண்டதும் அப்பொழுதுதான். ஆயிரம் ஆண்டுகளுக்குமுன்பு துருக்கிஸ்தானத்தின் மத்ய பாகத்திலிருந்தபௌத்தமதம் முகம்மதியர்களால் அழிக்கப்பட்டது. இந்தியாவிலிருந்த மதமும், இந்நாட்டின்மேல் படையெடுத்துவந்த பலமுகம்மதியபிரிவினர்களால் குலைக்கப்பட்டது. காஷ்மீரமும் ஆப்கானிஸ்தானமும் ஒருகாலத்தில் புத்தமத மயமாக இருந்தன. துருக்கிஸ்தான புத்தர்களைப் பார்த்து ரோமன்காதலிக்கிறிஸ்துவர்கள் பல வழிபாட்டுச் சம்பிரதாயங்களைமேற்கொண்டனர். ஆல்டர் என்னும் மூலஸ்தானம், விளக்கேற்றல், தூபம் போடல், பூச்சூடல் முதலியன அவற்றுள் சிலவாம். பௌத்தபிக்ஷுணிகளைப்பார்த்துக் காதலிக்கர்கள் பெண்களைத் துறவிகளாகச் சேர்த்துக்கொண்டார். ஏசுநாதர் கூறியுள்ள நன்மொழிகளில் பல புத்ததேவரின் பொன்மொழிகளின் எதிரொலியாகத்தோன்றுகின்றன. எனினும் ஏசுநாதரின் மொழிகளுக்கு ஆதாரம் இன்னும் தெளிவாகக்கண்டு பிடிக்கப்படவில்லை. **தி பிரட்டிஷ் புட்டிஸ்ட்**

# சரித்திரம்

## டால்ஸ்டாய் மகான்

தே. வீரராகவ ஐயங்கார்

---

### பிறப்பு வளர்ப்பு

சென்ற நூற்றுண்டின் முற்பகுதியில் தோன்றிய முதுமக்களுள் தலைசிறந்தவரும், பிறர் நலத்தையே தம் நலமாகக் கொண்ட பெருமக்களுள் ஒருவரும், உலகம் போற்றும் உத்தமராகிய காந்தி மகானுல் குருவாகக் கொள்ளப்பட்டவரும், ருஷிய மக்களின் ஞானம் கல்வி பொருள் இவைகளின் பெருக்குக்குக் காரணராயிருந்தவருமான கவுண்ட் லியோ டால்ஸ்டாய் 1828-ம் ஆண்டு ஸெப்டம்பர் மாதம் 9-ம் தேதி இரவு 12-30 மணிக்கு மத்திய ருஷ்யாவில், மாஸ்கோ என்னும் பட்டணத்திற்கு 120 மைல் தெற்கிலுள்ள தூலா (Tula) என்னும் ஊருக்கருகிலிருக்கும் யாஸ்னுயா போல்யானு என்ற ஒரு சிறு கிராமத்திற் பிறந்தார். இவருடைய அன்னையார் ருஷிய அரசவமிசத்தைச் சேர்ந்தவர். அவர் பெயர் மார்யாவர் கோன்ஸ்கி என்பது; கல்வி யறிவு நிரம்பியவர். மூன்று நான்கு மொழிகளில் அவருக்குத் தேர்ந்த அறிவு இருந்து வந்தது. வீரம், ஆச்சரியம், நகைப்பு முதலிய சுவைகளைக் கேட்போர் மனத்திடையே உண்டாக்கக் கூடிய கதைகளைத் தாமே புனைந்து சொல்லக்கூடிய சக்தி வாய்ந்தவர்; அன்றியும் மனதை உருக்கக்கூடிய கீதங்களை இனிய பண்ணுடன் பாடுவதில் மிக்க வல்லமையுடையவர். எப்பொழுதும் அவர் முகத்தில் புன்னகை தவழ்ந்து கொண்டே யிருக்கும். தமக்கு எத்தகைய தீங்கு நேரினும் பிறரைப் பழிகூறச்சம்மதியார்; உண்மை நெறியினின்றும் வழுவிடார். இத்தகைய அரிய குணங்களெல்லாம் வாய்ந்தவோர் அம்மையைத் தமது அன்னையாகப் பெற்றதாற்றுன் டால்ஸ்டாய் உலகிற் சிறந்த உத்தமராக விளங்கினர்.

இவரது தந்தையாரின் பெயர் நிகோலஸ் டால்ஸ்டாய் என்பது. அவர் அக்காலத்துப் பெருமை பெற்றுத் திகழ்ந்த உயர்

த்ரக் குடும்பத்திற் பிறந்தவர். இவருக்கும் மார்யாவர் கோன்ஸ்கிக் குமாக ஐந்து குழந்தைகள் பிறந்தன. அப்படிப் பிறந்த குழந்தைகள் ஐந்தனுள் நான்காமவர் டால்ஸ்டாய். டால்ஸ்டாயின் மூன்ருவது வயதில் இவர் அன்னையும் ஆருவது வயதில் தகப்பனரும் விண்ணுலகெய்தினர். மிகச்சிறுவயதிலேயே இவர் தம் பெற்ருேர்களை இழக்கும்படி நேரிட்டதால் இவரது பிள்ளைப் பருவம் பெரிதும் துக்கம் வாய்ந்திருந்ததுடன் தனிமைப் பட்டதாயுமிருந்ததென்றே சொல்லலாம். அக்காலத்தில் இவர் மனதில் எப்பொழுதும் நிலைத்து நின்று இவரைத் துன்பப்படுத்தி வந்த ஓர் எண்ணம் மரணத்தைப் பற்றியதேயாம். இவருடைய தாய் தந்தையரைத் தனக்கிரையாக்கிக் கொண்ட இறப்பானது இவர் முன் ஒரு பெரிய கரிய உருவத்துடனின்று இவரைப் பயமுறுத்தி வந்ததாக இளம்பிராயத்தில் இவர் அடிக்கடி சொல்லிவருவாராம். இவ்வாறு இவரது பிள்ளைப் பிராயமானது இறப்பைப் பற்றி நினைந்து வருந்துவதிற்கழிந்து வந்ததாக, ஒருநாள் இவர் மனதில் ஓர் எண்ணம் உதித்தது. அதன் பயனுக இறப்பைப் பற்றியும் வாழ்க்கையைப் பற்றியும் பயந்து கொண்டிருத்தலை நீத்து, புத்தகங்களை யெல்லாம் வாரி ஒருபுறம் எறிந்து விட்டு, கடைக்குச் சென்று இனிய தின்பண்டங்களையும் இனிய கதைப் புத்தகங்களையும் வாங்கிக் கொண்டு தமது வீடு சேர்ந்து, தின்பண்டங்களைத் தின்று விட்டுப் படுக்கையை விரித்துப் போட்டுக் கொண்டு கதைகளைப் படித்துக்கொண்டே துயின்ருராம். அன்று முதல் வாழ்க்கையின் இன்பங்களை நுகரத் தீர்மானங் கொண்டார். இளமையிலேயே பெற்ருேர்களை இழந்து விட்டமையால், இவரும் இவர் சகோதரர்களும் தங்கள் கிளைஞரது ஆதரவின் கீழ் வளர்ந்து வந்தனர். அதிர்ஷ்ட வசமாக, அக்கிளைஞரது ஊழியக்காரர்கள் தாய்தகப்பனற்ற டால்ஸ்டாயிடமும் இவருடைய சகோதரர்களிடமும் மிகுந்த அன்புடையவர்களாக இருந்தனர். பரஸ்பரம் அவ்வூழியர்களிடம் டால்ஸ்டாயும் அன்புடையாராகவே இருந்தார். டால்ஸ்டாய் பெரியவரானபின்னரும் தம்மைச் சிறுவயதில் அன்புடன் வளர்த்துவந்த ஏழை ஊழியர்களைப் பற்றி அடிக்கடி குறிப்பிடுவாராம்.

## கல்வி

டால்ஸ்டாய் தமது பன்னிரண்டாவது வயதில் கல்விகற்க மாஸ்கோவிற்குச் சென்ருர். அங்கே சில வருடங்கள் படித்தபிறகு பதினைந்தாவது வயதில் காஸன் பல்கலைக் கழகத்திற் சேர்ந்து உயர்தரக்கல்வி படிக்கத் தொடங்கினர். அப்பல்கலைக் கழகத்தில்

செல்வர்களுடைய மக்களே நிறைந்திருந்தனர். அவர்கள் தங்கள் பணத்தையும் காலத்தையும் பயனற்ற வழிகளிற் செலவுசெய்து வந்தனர். டால்ஸ்டாயும் அவர்களது வலையிற் சிக்குண்டார். அதன் பயனாக, ஆடல் பாடல் குடி முதலிய கெட்ட விஷயங்களில் தமது மனதைச் செலுத்தி விரைவில் கடன்காரரானார். கோயிலுக்குச் சென்று கடவுளைத் தொழுவதையும் விட்டுவிட்டார். இவ்விதமாக ஒருவித லட்சியமுமின்றித் தமது வாழ்க்கைக் கடத்தி வரும்பொழுது, டால்ஸ்டாய் திடீரெனத் தமது வாழ்க்கையைப்பற்றி ஆராயத் தொடங்கினார். அவ்வாராய்ச்சியின் பயனாகத் தமது காலத்தை அதன்பின்னர் வீணாகச் செலவிடக்கூடாதெனத் தீர்மானங்கொண்டு ஒழுங்காகப் படிக்கத் தொடங்கினார். இவரது பண்டைய நிநட்பினர்கள் இவரைத் தமது வேலைகளைச் செய்யவிடுவதில்லை. தமது முயற்சிகள் பலிக்காமற்போகவே டால்ஸ்டாய் பல்கலைக் கழகத்தை விட்டு நீங்கித் தமது சொந்த ஊரடைந்தார். அங்கே தமது நிலங்களையும், அந்நிலங்களில் வேலை செய்யும் ஏழைக்குடியானவர்களின் நிலைமையையும் திருத்தம் செய்யவேண்டுமென உறுதி கொண்டார். தமது வாழ்க்கையையும் அதே சமயத்தில் எளியதாகச் செய்து கொண்டு, ஓர் எளிய குடியானவனுடன் தம்மையும் ஒன்றுபடுத்திக்கொண்டார்.

## போர் வீரர்

ஆனால் குடியானவர்கள் இவரது கருத்துக்களையும் நன் முயற்சிகளையும் அறிந்துகொள்ளவில்லை; ஆகையால் அவர்களுக்காக இவர் செய்து வந்த முயற்சிகள் சற்றும் பயனிலவாயின. தமது முயற்சிகள் அங்கும் பயனற்றுப் போகவே, குடியானவர் வாழ்க்கையில் வெறுப்படைந்து சேனையில் ஒரு போர் வீரராகச் சேர்ந்தார். இவர் போர்வீரராகச் சேர்ந்ததற்கு இரு காரணங்கள் உள. முதலில் இவருடைய மூத்த சகோதரரும் மாமனும் சேனையில் பெரிய உத்தியோகத்திலிருந்தார்கள். அவர்களைப் போன்று தாமும் ஒரு பெரிய உத்தியோகஸ்தராக வரவேண்டுமென்பது இவரது விருப்பம். இரண்டாவதாக: தமது தேசத்திற்கு உழைக்கவேண்டுமென்ற பேரவா இவரிடம் வெகு காலமாக இருந்து வந்தது. இவருக்கு வயது 24 ஆகும்பொழுது கிரிமியா என்னு மிடத்தில் சண்டை ஏற்பட்டது. அச்சந்தர்ப்பத்தை இவர் இழக்காது கிரிமியன் போரில் ஒரு போர்வீரராகச் சேர்ந்து சண்டை செய்ய ஆரம்பித்தார். இடையே ஓய்வேற்பட்ட வேளைகளில் நூல்கள் எழுதிவெளியிட்டார். கிரிமியாப் போரிற்

ருன் இவரது போர்த்திறமையும் தைரியமும் மக்களுக்கு மிகுதியும் வெளியாயின. கேவலம் சண்டை செய்வதுட னில்லாது, மற்றைய போர் வீரர்களிருக்கும் இடங்களுக்குச் சென்று அவர்களுக்கு ரஸமான கதைகளைச் சொல்லி அவர்களை உற்சாகப் படுத்தியும் வந்தார். இச்சமயத்தில்தான் இவர் "செபஸ்டபூல் கதைகள்" என்னும் நூலை எழுதினர். இந்நூல்தான் இவரது பெருமையை முதன் முதலில் ருஷியர்களுக்கு எடுத்துக் காட்டியது. இவரது போர்த்திறமையையும் நூலெழுதும் வன்மையையும் கண்ட ருஷிய அரசன், இத்தகைய நுண்ணறிவு படைத்த ஒருவர் சண்டையிற் சென்று வறிதே இறந்து பட்டொழிதல் தேசத்திற்கே பெருநஷ்டமாகுமென்று அறிந்து அவரைச் சேனையினின்றும் விலகிக்கொள்ளும்படி கேட்டுக்கொண்டான். தமக்கு அவ்வாறு செய்ய இஷ்டமில்லாதிருந்தும் டால்ஸ்டாய் ருஷிய அரசன் கட்டளையை மீறமாட்டாதவராய்ச் சேனையை விட்டுவிலகி, பீட்டர்ஸ்பர்க் என்னு மிடத்தை அடைந்தார். அங்குள்ள சமுதாயப் பெரியோர்களும் தேசத்தலைவர்களும் இவரை அன்புடன் வரவேற்று உபசரித்தனர். அங்குச் சிலகாலம் தங்கி, அப்பட்டணத்தி லுள்ள இன்பங்களையெல்லாம் நுகர்ந்தார். ஆயினும் அவர் போரினின்றும் அறிந்து கொண்ட அநுபவங்கள் அவரிடம், முன்பு எழுந்து அடங்கிய ஆசையை, அதாவது ஏழைக்குடியானவர்களின் நிலையை எவ்வாற்றானும் உயர்த்தவேண்டுமென்னும் ஆசையை மறுபடியும் தூண்டிவிட்டன. அது முதல் தமது செல்வம், உடல்வன்மை, நூலெழுதுந்திறமை இவைகள் யாவற்றையும் ஏழைக்குடியானவர்களுக்குத் தொண்டுசெய்வதன் பொருட்டுச் செலவிடத் தீர்மானங்கொண்டார். இத்தொழிலில் வல்லுநராயிருத்தற்பொருட்டு அக்காலத்தில் மேனடுகளில் வசித்த பெரியார்களைக் காண்பதற்காக ஜெர்மனி, இத்தலி, இங்கிலாந்து, பிரான்சு முதலிய தேசங்களில் பிரயாணம் செய்தபின்னர் டால்ஸ்டாய் தமது சொந்தவூர் போய்ச் சேர்ந்தார்.

1861-ம் வருடத்தில் ருஷிய அரசாங்கம் தன்நாட்டிலுள்ள குடியானவர்களுக்கு உரிமை கொடுக்கச் சட்டம் ஏற்படுத்தும் முன்பே டால்ஸ்டாய் தம் கீழிருந்த குடியானவர்களுக்குப் பூரண உரிமை கொடுத்துவிட்டார். பின்னும் குடியானவர்களது நிலையை உயர்த்த எண்ணங்கொண்டவராய்த் தமது சொந்தவூரிலுள்ள ஏழைக்குடியானவர்களின் குழந்தைகளுக்காக ஒரு கல்விச்சாலை ஏற்படுத்தினர். அதற்குக் குழந்தைகள் தங்கள் இஷ்டப்பட்ட போது வரலாமெனவும், தங்களுக்குப் பிரியமான பாடங்களைத்

தேர்ந்தெடுத்துக்கொள்ளலாமெனவும், பள்ளிக்கூடத்தில் தண்டனை விதிக்கப்படமாட்டாதெனவும்போன்ற சிலசட்டங்களை ஏற்படுத்தினர். அப்பள்ளிக்கூடத்திலுள்ள பிள்ளைகளிடம் காணப்படும் குறைபாடுகளுக்கு உபாத்தியாயர்களைக் காரணமாக்கினர். தாமும் இப்பள்ளிக்கூடத்திலேயே ஓர் ஆசிரியராக இருந்துவந்தார். பிள்ளைகளுக்கு இவர் போதித்துவந்த பாடங்கள், விவிலியநூல் (பைபிள்) சரித்திரம் பாட்டு முதலியவைகளாம். தாம் ஒரு பள்ளிக்கூடத்தை ஆரம்பித்ததுடனில்லாது, தம் மூரிலுள்ள பல செல்வர்களையும் ஏழைமக்களுக்காகக் கல்விச்சாலைகளை நிறுவும்படி தூண்டினர். அவரது வேண்டுகோளுக்கிணங்கிச் சிலர் சில பள்ளிக்கூடங்களைத் தோற்றுவித்தனர். ஆயினும், இறுதியில் இப்பள்ளிக்கூடங்கள் பயனிலவாயின. அதற்குக்காரணம் அதிகாரிகள் டால்ஸ்டாய் அவர்களுடன் ஒத்துழைக்க முன்வாராததும் பிள்ளைகளுக்கு விசேஷ சுதந்திரம் கொடுக்கப்பட்டதுமேயாம்.

## திருமணம்

இஃது இவ்வாறிருக்கையில் இவரது நிலங்களை உழுது பயிரிட்டுவந்த குடியானவர்களுக்குள் சண்டை சச்சரவுகள் உண்டாயின. அவைகளை இவரே நேரிற்சென்று தீர்க்கும்படி நேர்ந்தது. இவரால் எழுதப்பட்ட கதைக்கொத்தில் அடங்கியிருக்கும் கதைகள் இவர் காலத்தில், இவரது நிலங்களின் பொருட்டு எழுந்தவைகளேயன்றி வெறுங்கட்டுக்கதைகள் அல்ல. இச்சமயத்தில் இவருக்கு வயது 34. அப்போது மணம்புரிந்துகொள்ளவேண்டுமென்ற எண்ணம் இவருள் எழவும், 1862-ம் வருஷம் ஸெப்டம்பர் மாதம் 13-ந்தேதி ஸோன்யா என்னும் பெயர்கொண்ட 18 வயதுடைய ஓர் அழகிய மங்கையை மணம்புரிந்துகொண்டார். ஸோன்யா, தன் கணவரின் கொள்கைகளுக்குச் சற்றுமுரண்பாடான கொள்கைகளை உடையவள். தன் கணவர் தங்களது உயர்ந்த செல்வத்திற்கும் மதிப்பிற்கும் தக்கார்போன்று நடந்துகொள்ளாது வறிய ஏழைமக்களுடன் கலந்து குடியானவ வாழ்க்கையை மேற்கொண்டது அவளுக்குப் பிடிக்கவில்லை. எனினும் தன் பதியினிடம் ஸோன்யா அன்புடனும் மரியாதையுடனு மிருந்துவந்தாள். மணமாகி இருபத்தைந்து வருடங்களுக்குள்ளாக இவருக்குப் பதின்மூன்று குழந்தைகள் பிறந்தன. அவைகளில் ஐந்து குழந்தைகள் சிறுபிராயத்திலேயே மாண்டன. டால்ஸ்டாய்க்குக் குழந்தையென்றால் மிகப்பிரீதி. தமது குழந்தைகளுக்குத் தகப்பனாயிருந்ததுடனில்லாது அவர்களுடைய விளையாட்டுத் தோழராகவு

மிருந்துவந்தார். குழந்தைகளை இவர் ஒருநாளும் அடித்ததே இல்லை. அவர்களில் யாரேனும் ஒருவன் குற்றம்செய்தால் குற்றஞ் செய்தவன் சீர்திருத்தச்சாலைக்கு அனுப்பப்படுவான். அங்கிருந்து அவன் குற்றத்தை ஒப்புக்கொண்டபின்னரேவீட்டிற்கு அழைத்துக் கொண்டு வரப்படுவான்,

## குடியானவன்

இதற்கிடையே, டால்ஸ்டாய் அநேக சிறந்த நூல்களை எழுதி வெளியிட்டுவந்தார். அவை ஜனங்களால் மிகவும் மதித்துப் போற்றப்பட்டன. இவரது புறவாழ்க்கை தினந்தினமும் விருத்தியடைந்து வந்ததேபோல் அகவாழ்க்கையும் மாறுதல் அடைந்துவந்தது. 1880-ம் ஆண்டில் உயர்தரவாழ்க்கையை நீத்து ஓர் எளிய குடியானவ வாழ்க்கையை மேற்கொண்டார். தினமும் ஆதவனுதயத்திற்கு முன்பே படுக்கையை விட்டெழுந்து வயலுக்குச் சென்று ஏர் உழுதல், களைபிடுங்குதல், நீர்பாய்ச்சுதல் போன்ற வேலைகளை மிகவும் உற்சாகத்துடன் செய்வார். ஏழை, மெய்தளர்ந்தோர், உறப்பிலிகள், சிறுவர்கள் இவர்கள் நிலங்களில் வேலைசெய்துவந்தால் அவர்களுக்கும் உதவிசெய்வார். இக்காலத்திற்றான் இவர் செருப்புத் தைக்கும் தொழிலைக் கற்றுக் கொண்டார். இத்தொழிலில் வெகுவிரைவில் இவர் கைதேர்ந்தவராக ஆனதால், மக்கள்யாவரும் இவரது கைத்தொழில் திறத்தைப் பற்றிப் போற்றத் தலைப்பட்டனர். இவர் இரவில் வெகுநேரம் வரை விழித்துக்கொண்டு ஏதேனும் உபயோகமானதொருவேலை செய்வார். ஆயினும் அதிகாலையிலெழுந்து வயலுக்குச்செல்லத் தவறுவதில்லை.

## தூய உணவு

நாளாக நாளக, தாம் இதற்குமுன் உட்கொண்டுவந்த உயர்தர உணவையும், மதுபான வகைகளையும் இன்பப்பொழுதுபோக்குக்களையும் குறைத்துக்கொண்டார். ஊன்உணவு கொள்வதைத் தவிர்த்துச் 'சைவ உணவு' கொள்ளத் தலைப்பட்டார். வேட்டையாடுவதை விட்டார். எளியவர்களால் உபயோகப்படுத்தப் பட்டுவந்த புகையிலையையும் அனுவசியமானதென்று நீத்தார். இவர் எவ்வளவு முயன்றும் தம்மை எளிய குடியானவர்களுடன் ஒன்றுபடுத்திக்கொள்ள முடியாதவரானர். இவர் பிறந்து வளர்ந்த குடும்பத்தின் பழக்கவழக்கங்களே இவரது இரத்தத்தில் ஊறியிருந்தன ஆகையால் அப்பழக்கங்கள் இவருக்கு இடர்கொடுத்து

வந்தன. மேலும் அன்புமிகுந்த மனைவியினது கூட்டுறவும், அடக்கமும் அன்பும் ஒழுக்கமும் வாய்ந்த மக்களது சங்கமும் தனி வாழ்க்கையைச் செலுத்தமுடியாது இவரைத் தடுத்துவந்தன. தாம் ஓர் எளிய குடியானவனது வாழ்க்கையைச் சற்றும் ஏற்றக் குறைவின்றிக் கொள்ளவேண்டுமானல், தமது மனைவி மக்களிட மிருந்தும் சொத்தினிடமிருந்தும் விலகிநிற்க வேண்டுமென்று உறுதி கொண்டார்.

## குடும்பத்திலிருந்து துறவு

அவ்வுறுதிப்படியே 1888-ம் ஆண்டில் தமக்கும் தம் சொத்துக்களுக்கும் யாதொரு தொடர்புமில்லையென்றும், தம் மனைவியே அவைகளுக்கு உரியவளென்றும் விடுதலைச் சீட்டு எழுதி மனைவியிடம் கொடுத்துவிட்டார். அதுமுதல் சொத்துக்களைப் பரிபாலிக்கும் விஷயத்தில் தலையிடாது ஒரு துறவிபோலிருந்து வந்தார்.

## பஞ்சத்தில் உதவி

இவ்வாறு இவர் வாழ்ந்துவருகையில் 1891-92-ம் ஆண்டில் ருஷியாவில் கொடியதொரு பஞ்சம் உண்டாயிற்று. அப்பஞ்சத் துன்பத்திலிருந்து ஏழைக் குடியானவர்களைப் பாதுகாப்பதற்காக, டால்ஸ்டாயும் அவரது குடும்பத்தார்களும் தங்கள் உடல், பொருள், ஆவி மூன்றையும் பெரிதும் உவந்துதவினர். தாம் நேரிற் கண்ட பஞ்சக் காட்சிகளையெல்லாம் டால்ஸ்டாய் சிறுகதை களாக வெளியிட்டார்.

## மரணம்

இவ்விதமாகத் தம் வாழ்நாளை ஏழைக்குடியானவர்களின் பொருட்டுச் செலவுசெய்துவந்த இந்த ருஷிய ஞானியும் உலகப் பெரியாரில் ஒருவருமான லியோ டால்ஸ்டாய் 1910-ம் வருஷம் நவம்பர் மாதம் இவ்வுலகவாழ்வை நீத்தார்.

ருஷியாதேசம் இப்பொழுதிருக்கும் உயர்நிலைக்கு வந்த தற்கு டால்ஸ்டாய் அவர்களின் பெருமுயற்சியே காரணமா யிருந்ததென்று உலகினர் யாவரும் சற்றும் ஐயமின்றி ஒப்புக் கொள்வார்கள். அவரது கொள்கைகளைப்பற்றியும் உபதேசங் களைப்பற்றியும் பலர் பலவிதமாகக் கருதிய போதிலும் சென்ற நூற்றாண்டில் வசித்த உலக ஞானிகளில் டால்ஸ்டாய் முதன்மை

யானவர் என்பதையும், தேவதாம்சம் பெற்றவர் என்பதையும் யாவரும் ஒப்புக்கொள்வார்கள்.

இவரால் எழுதப்பட்ட "தேவஉலகம் உன்னுள்ளே யிருக்கிறது" (*The kingdom of God is within you*) என்ற நூலை ஒருமுறை படித்தவர்களும் இவர் மக்களிடம் கொண்டிருந்த அன்பையும், கடவுளிடம் கொண்டிருந்த பக்தியையும் அஹிம்சையிடம் கொண்டிருந்த பற்றையும் அறிவர்.

சில உபதேசிகளைப்பபோ லன்றித் தாம் எதை உலகினருக்குப் போதித்தாரோ, அதைச் சற்றும் தாழாது இவர் பின்பற்றிவந்தார். தமது கொள்கைகளைப் பின்பற்றுங்கால் எத்தகைய இடையூறுகள் ஏற்படினும் அவற்றைச் சற்றும் பொருட்படுத்தார்.

அவரது எளிய தன்மையை ஆராய்வோமாயின் அது ஓர் அற்புதச்சுரங்கம்போற் காணப்படும். செல்வச்சிறப்பையும் மற்றைய நலன்களையும் மிகுந்த அளவிற்பெற்றிருந்தும் யௌவன காலத்திலேயே அவற்றையெல்லாம் நஞ்சென நீத்தார். இழிந்தன வென்று நீத்தவைகளைப் பின்பு ஒரு முறையும் இவர் திரும்பிப் பார்த்தாரில்லை.

சென்ற நூற்றாண்டில் இருந்த உலகப்பெருமக்களுள் உண்மை பேசுவதிற் பற்றுடையவராயிருந்தவர்களில் இவரைவிடப் பெரியவர் வேறு ஒருவரும் இருந்திரார் என்று உறுதியாகக் கூறலாம். சுருங்கச் சொல்லின் இவரது வாழ்க்கை முழுதும் உண்மையின் ஆராய்ச்சியேயாகும். தாம் கண்ட உண்மைகளை உள்ளவாறே சற்றும் ஒளிக்காமலும், குறைவுபடுத்திக் கூறாமலும் அப்படியே வெளியிடுவார். உண்மையை வெளியிடுவதில் உலகினருக்கும் அதிகாரவர்க்கத்தினருக்கும் இவர் அஞ்சியவரல்லர்.

## அஹிம்ஸா வீரர்

சென்றநூற்றாண்டில் தோன்றிய அஹிம்சா வீரர்களில் டால்ஸ்டாய் முதன்மையானவர். தீயஎண்ணங்கள், கோபம், விரோதம் முதலியவைகளினின்றும் நீங்கி, யாவரிடத்தும் ஒருதன்மையான அன்புகொண்டிருத்தலே அஹிம்சையாகும். இத்தகைய அஹிம்சைக்கு டால்ஸ்டாய் நிலைக்களனாக இருந்துவந்தார்.



# லலிதை

ஜி. ஹரிஹர சாஸ்திரி

(249-ஆம் பக்கத் தொடர்ச்சி)

---

## மூன்றும் காட்சி

[காலம்:—முற்காட்சியிற் கூறியசெய்திகள் நடந்து ஓராண்டு நிறைகின்றநாள்.

இடம்:—மணிபுரநகரில் லலிதையின் வீடு.]

(தோரணவாயிலும் தோட்டமும் பூக்களால் அலங்காரமாகக் காணப்படுகின்றன. சற்றப்பின் பக்கத்தில் தொங்கும் தொட்டிலில் லலிதை குழந்தையைத் தாலாட்டி உறங்கச்செய்கிருள்.

லலிதை:—கண்ணே! உறங்குறங்கு கற்பகமே! நீயுறங்கு
மண்ணுலகை யாளவந்த வாழ்வரசே! நீயுறங்கு.
சீராளா தந்தையுமுன் செல்வ முகம்நோக்கி
மார்போ டணைத்தின்று மகிழவரு வாரையா.
மாணிக்கக் கட்டியுன்னை வடிவழக னுந்தைக்குக்
காணிக்கை வைத்துநான் கழல்பணிவே னிப்போழுது.
நெஞ்சிற் கவலையெல்லாம் நீங்கவொரு முத்தமிட்டுன்
புஞ்சிரிப்பா லுள்ளமலர் பூரித்து நில்லாரோ.

(குழந்தை உறங்கியதைப் பார்த்துத் தொட்டிலை மெல்ல ஆட்டிவிட்டு) சதுரிகே!

(சதுரிகை வருகிருள்)

சதுரிகை:—அம்ம! என்னவேண்டும்?

லலிதை:—என்காதலர் வரும்வேளை வந்துவிட்டது? எங்கும் வாசனைப்பொடி தூவு, பனிநீர்த்தெளி, வத்தி கொளுத்திவை. அவர் வாசலில் வரும்போது நீதான் ஆலத்திசெய்யவேணும். போ, எல்லாம் விரைவில்செய். (சதுரிகை பரபரப்புடன் போகிருள்.) எனக்கும் வேலையிருக்கிறது. கடினமான இந்தச் சலவைக்கற்றரை மீது தாமரையிதழ்களைப் பரப்புகிறேன். என் அன்பர் நடக்கும்

போது அவர்கால்களுக்கு மென்மை புலப்படவேண்டும். (பரபரப்புடன் மீண்டும் மீண்டும் உள்ளேசென்று பூக்குடலை நிறைப் பூக்கொணர்ந்து தரையில் பரப்புகிறாள்.)

(கையில் கடிதத்துடன் தேசபதி வருகிறான்.)

தேசபதி:—ஆ! என்னதுன்பம்! தான் மானஸிம்ஹனது தர்ம்மபத்தினி என்ற எண்ணத்தை உள்ளத்தில் பாதுகாத்து வளர்த்துவரும் இவ்வேசைச்சிறுமியின் ஆசைகள் எட்டாக்கொம்பில் ஏறி நிற்கின்றன. தாட்சிண்ணியமுடைய மானஸிம்ஹன் இவளை விலைக்குவாங்கி விடுதலைசெய்து, மூன்றுநாள் இவளது விருந்தாக விருந்து, டில்லிக்குத்திரும்பினார். அங்குச்சென்ற பிறகு, அவருக்கு இவளைப்பற்றிய நினைவே கிடையாது. வருஷம் ஒன்று சென்று விட்டது. இப்போதுதான் ஒருகடிதம் எழுதியிருக்கிறார். இதை இன்னும் ஒருதரம் படித்து இதில் இவள் அறியக்கூடாத செய்திகள் இன்னவையென்று முன்னதாகவே தெரிந்து கொள்கிறேன். இல்லாவிடின், அன்னம் தாமரைத்தண்டினின்று நூலைக்கொத்தி எடுப்பதுபோல், சமர்த்தியான இச்சிறுமி என் உள்ளத்தினின்று எல்லாவற்றையும் ஒவ்வொன்றாய் அறிந்துவிடுவாள், சந்தேகம் இல்லை. (கடிதத்தைப் படிக்கிறான்.)

"மணிபுரத்துத் தேசபதிக்கு, உபயகுசலோபரி. முதலாவது, தங்களிடம் ஒரு சந்தோஷச்செய்தி தெரிவித்துக்கொள்கிறேன். என் முன்னேற்றத்தில் கருத்தில் கருத்துடன் இருப்பவரும் கருணைக்கடலுமான சக்கரவர்த்திப்பெருமான், என் அளவற்ற காதலுக்குப்பாத்திரமான வீரஸிம்ஹன் புதல்விஸௌதாமினியை எனக்கு அக்நி சாக்ஷியாக மணம்புரிவித்தார். இதில் ஒரு விநோதம் என்னவென்றால், நாங்கள் ஸதிபதிகளாகச் சக்கரவர்த்தியைத் தரிசித்த பொழுது, அவர் ஸௌதாமினியிடம் பின்வருமாறு அருளிச்செய்தார்:—'குழந்தாய்! ஸௌதாமினி! நீஜாக்கிரதையாயிரு. இவ் இராசதானியில் ஒரு சாதுவைப்போல் நடித்துவரும் இந்தத்தூர்த்தன் வெளிநகர் ஒவ்வொன்றிலும் வேசைகளை வைத்துக்கொண்டிருக்கிறான் என்று நமக்குச் செய்தி கிடைத்திருக்கிறது?' பிறகு ஸௌதாமினி என்னிடம் இதைப்பற்றிக் கேட்டபொழுதுதான் உமது நகரிலிருக்கும் அந்த வேசைச்சிறுமியைப்பற்றியே சக்கரவர்த்தி எப்படியோ கேள்விபட்டு இவ்விதம் கூறியிருக்கலாம் என்று நினைத்தேன். ஆயிரம் கண்ணுடைய தேவேந்திரன்தான் நமது சக்கரவர்த்தி; ஆச்சரியம்! பிறகு அப்பெண்ணின் நற்குணங்களையும் ஆண்டில் ஒருமுறைவந்து பார்த்துக்கொள்கிறேன் என்று நான் அவளுக்கு வாக்களித்திருப்பதையும் அறிந்த ஸௌதாமினி,

அவளிடம் மிகுந்த வாஞ்சையுற்று 'வாக்களித்தபடி, தாங்கள் கட்டாயமாகச் செல்லவேண்டும். நானும் தங்களுடன் வந்து அவளைக்காண்பேன்,' என்று கேட்டுக்கொண்டனள். அதனால் நான் முன்குறித்தநாளில் நாங்கள் மணிபுரம்வந்து சேருவோம். இச்செய்தியை அச்சிறுமியிடம் தெரிவிக்க வேண்டுகிறேன். இப்படிக்கு, மானஸிம்ஹன்."

ஆ! என்னதுன்பம்! மானஸிம்ஹனுக்கு இதுவெறும் விளையாட்டு. இந்த வேசைப்பெண்ணோவென்றால் அவர் அளித்த வாக்கை நம்பி நாள் எண்ணி உயிர்தரித்து வருஷம் ஒன்று கழித்திருக்கிறாள். (வாசல் எங்கும் சிங்காரித்திருப்பதைக் கவனித்து) இதோ அவர் வரவை விழாவாகவும் கொண்டாட எத்தனித்திருக்கிறாள். அவர் அக்னி சாக்ஷியாக வேறொருத்தியை மணந்த செய்தி அறிந்தால் இவள் எப்படிச்சகிப்பாள்? இதை இவளுக்கு எப்படித் தெரிவிப்பது! எதற்கும் உள்ளே செல்கிறேன். (உள்ளேசென்று குழந்தையைக் கண்டு வியப்புற்று) ஏது குழந்தை இங்கே! (அருகேசென்று உற்றுநோக்கி) ஆச்சரியம்! மானஸிம்ஹனே வேறுருவம் எடுத்தாற்போலிருக்கிறது.

லலிதை:—(பூக்குடலையுடன் வந்து, தேசபதியைக்கண்டு) தேசபதிக்கு ஜயமுண்டாகட்டும். தேசபதி! என் அன்பர் வந்தாரா?

தேசபதி:—இப்பொழுது வந்துவிடுவார், கடிதம் அனுப்பியிருக்கிறார்.

லலிதை:—அப்படியா! கடிதம் எழுதியிருக்கிறாரா! ஆ! எவ்வளவு தயவுடையவர் என் நாதர்! (சற்றுயோசித்துப் புருவம் நெரித்து) அவர் ஏன் எனக்கு நேராகக் கடிதம் எழுதவில்லை? (சந்தோஷத்துடன்) சரி, தெரிந்தது. கார்தோன்றாமல் ஆகாயம் தண்ணீர்பெய்தாற்போல் அவர் இங்கே சடிதியில்வந்து என் உள்ளமாகிற கொடியைத்தளிர்ப்பிக்கக் கருதுகிறார். தேசபதி! கேளுங்கள். அதுபோல் நானும் மேகமில்லாப்பெயல் ஒன்றை அவருக்குத் தயார் செய்திருக்கிறேன். அன்போடும் நாணத்தோடும் பூக்குடலையை நோக்குகிறாள்.)

தேசபதி:—இது எனக்குப் புதுமையா யிருக்கிறது. இது ஏது குழந்தை?

லலிதை:—(வெட்கத்துடன்) பாருங்கள்; அவன் உருவமே இந்தக் கேள்விக்குப் பதில்சொல்லும்; அதை உறுதிப்படுத்துகின்றவரும் விரைவில் இங்கு வருவார்.

தேசபதி:—(தனக்குள்) கடவுளே! எல்லாம் நன்றாக முடிய வேண்டும். (வெளிப்படை) நான் பலமுறை இங்கு வந்திருக்கிறேன். இக்குழந்தையைக் கண்டதில்லை.

லலிதை:—என் அன்பர் இங்கே தங்கியிருந்தபொழுது நான் அவரிடம் சொன்னேன்.

தேசபதி:—என்ன சொன்னாய்?

லலிதை:—"தாங்கள் எனக்கு அளவற்ற நன்மை செய்திருக்கிறீர்கள். நானும் தக்கசமயத்தில் யாதாயினும் என் சொந்தமானது ஒன்றைத் தங்களுக்கு அடியுறை வைப்பேன்" என்றேன்.

தேசபதி:—பிறகு?

லலிதை:—"நீ எனக்கு என்ன கொடுக்கப்போகிறாய்? நான் கைம்மாறு ஒன்றும் உன்னிடமிருந்து விரும்பவில்லையே" என்றார். ஆனால், அம்பிகை என்னை ஒருபொழுதும் கைவிடுவதில்லை. அவளது திருவருளால் என் இரண்டாவது உயிரான—என் அன்பருக்கிசைந்த பரிசான — இந்தக் குழந்தை கிடைத்தது. காணிக்கைப்பொருளைப் பிறர் அறியக்கூடாதென்பர். தாங்கள் அறிந்தால் என் நாதருக்குத் தெரிவிப்பீர்களென்று கருதித் தங்களிடம் கூறவில்லை. (குழந்தையைத் தழுவிக்கொண்டு) இவன் தன் தந்தையை எவ்வளவு ஒத்திருக்கிறான், பாருங்கள்! இவனைக் காணிக்கை வைக்கும் உரிமைதான் எனக்குண்டோ என்று தோன்றுகிறது.

தேசபதி:—(மனதில்) விதியின் கொடுமையை என்ன சொல்வேன்! உண்மையைப்பற்றிக் கொஞ்சமாவது இவளுக்குத் தெரிவிக்க வேண்டும். இல்லாவிட்டால் துன்பங்களைத் திடீர்என்று கேட்கும்போது அபாயம் நேரிடக்கூடும். (வெளிப்படை) லலிதே! யாதாயினும் ஒருகாரணத்தால் பெருமை வாய்ந்த மானவஸிம்ஹன் .........(பீரங்கிசப்தம் கேட்டு, பரபரப்புடன்) ஆ! ஸ்வாமி நகருக்கருகில் வந்துவிட்டார்.

லலிதை:—(சந்தோஷத்துடன்) வந்துவிட்டார், என்காதலர் வந்துவிட்டார். (உற்சாகத்துடன் துள்ளிக்களித்துக் குழந்தையை முத்தமிடுகிறாள். பிறகு சட் என்று தேசபதியைப் பார்த்து, அவன் முகத்தில் அளவற்ற துக்கம் தோன்றுவதைக் கண்டு பயந்து) தாங்கள் என்னவோ சொல்லத்தொடங்கினீர்களே, முழுவதும் சொல்லவில்லையே!

தேசபதி:—(தனக்குள்) முடியாது, இவளிடம் உண்மையைக் கூற முடியாது. (வெளிப்படை) ஒன்றுமில்லை. நான் விரைவில்

சென்று ஸ்வாமியை எதிரேற்று அழைக்கவேணும். போகிறேன்.
(போகிறான். போகும்போது தன்னை அறியாது கடிதம் நழுவிக் கீழே விழுகிறது.)

**லலிதை:**—(எதையோ சந்தேகித்துப் புருவம் நெரித்து) தேசபதி பேசுவதைக் கேட்டால் என்மீது கனல் வாரிச்சொரிவது போலிருக்கிறது. (சற்று யோசித்து அமைதியுற்று) என் பொருட்டு எத்தனையோ பொருள் செலவுசெய்தவர், மூன்றுநாள் என் விருந்தாயிருந்து என்மீது அளவற்ற அன்புபாராட்டி இன் புற்றவர், இப்பொழுது வருஷம் ஒன்று சென்றும், அன்று சொன்னசொல் மாறாது திரும்பிவருகின்ற என் நாதர் என்னைக் கைவிடார், நிச்சயம்.

(பரபரப்புடன் சதுரிகை வருகிறாள்.)

**சதுரிகை:**—(தனக்குள்) காதுக்குக் கடோரமான இந்தப் பேச்சை எப்படி நான் எஜமானிக்குத் தெரிவிப்பேன். இதை அவள் திடீர் என்று அறிவாளாயின், ஒரு வேளை யாதேனும் அபாயம் நேரிட்டுவிடலாம். அதனால் முன்னதாகவே கொஞ்சமாவது குறிப்பிடுவதுதான் நலம்.

**லலிதை:**—சதுரிகே! நீ ஏன் இப்பொழுது இங்கே வந்தாய்? வாசலில் வரும்பொழுதே ஆலத்தி சுற்றவேண்டுமே. பீரங்கிவெடி கேட்டாயிற்று.

**சதுரிகை:**—வீதியெங்கும் ஜனங்கள் நிறைந்திருப்பதால் அவர் மெல்லவருகிறார். அம்மணி! பலர் பேசுகின்றனர்.....

**லலிதை:**—என்ன பேசுகின்றனர்? சொல்.

**சதுரிகை:**—ஜனங்கள் சொல்லுகிறார்கள்: 'அவருடன் ஒரு பெண்ணும் வருகிறாள்' என்று.

**லலிதை:**—ஒரு பெண்ணுமா? (முகத்தில் திடீர் என்று துக்கம் தோன்றி மறைய) என் அன்பர் தமக்கு ஒரு சிறிய தங்கையுண்டு என்று என்னிடம் கூறியிருக்கிறார். அவருடன் வருபவள் அவளாக இருக்கலாம். நான் ஒருவேசையென்று கருதாமல் என்னிடம் அவர் கொண்ட மதிப்பால் தம் தங்கையோடு இங்கே வருகிறார் போலும். பெரியோர்களுக்குண்டோ அற்பமான வேற்றுமைகள்! ஆகட்டும். நீ சீக்கிரம் வாசலுக்குப் போ.

**சதுரிகை:**—(தனக்குள்) யஜமானியிடம் செய்தி சொல்ல என்னால் இயலாது. (போகிறாள்.)

**லலிதை:**—நெஞ்சமே! பதறாதே. அமைதியுடன் இரு. என் மார்பைப் பிளந்து வெளியே சென்று உண்மை இன்னதென்று

தானே கண்டறியத் துடிப்பதுபோல் தோன்றுகிறுயே! (தேசபதி யறியாது கீழே விழுந்த கடிதம் கண்ணிற்பட அதையெடுத்துப் பார்க்கிருள். அது மானவஸிம்ஹன் எழுதியதென்று அறிந்து மனமுவந்து அதைக் கண்ணேடணைத்து முத்தமிட்டு வாசிக்கிருள். உண்மை இன்னதென்று விளங்கவே, சோகத்தால் முகம் வெளிறி உடல் நடுங்கி மனம் இடிந்து கீழே விழுந்து விடுகிருள். பிறகு கடிதத்தைப் பார்த்து) கண்ணுக்கு அமுதம்போன்றும், உள்ளே காளகூடவிஷத்தை நிறைத்துக்கொண்டும் இருக்கும் கடிதமே! நீ அவருக்கு உற்றதூதனே! (பிறகு சரேல் என்றெழுந்து ஆவேசம் வந்தவள்போல்) பாக்கியம் கெட்ட என் உள்ளம்போல் நீயும் சின்னபின்னமாய் நொறுங்கி அந்தக்கருணையற்ற யமனுடைய புகழையும் ஆண்மையையும் எங்கும் பரவச்செய். ...

(கடிதத்தைத் துண்டுதுண்டாகக் கிழித்தெறிகிருள்.) ஆ! என் ஆருயிரே! துரதிர்ஷ்டத்துச்கு இருப்பிடமான இவ்வுடம்பை விட்டு விலகு. (தளர்ச்சியுற்று மீண்டும் தரையில் விழுந்து,) அந்தப் பெண்ணை அக்நிசாக்ஷியாக மணந்துகொண்டார். அவ் விதம் ஏற்றுக் கொள்ளப்படாத என்னை அவர் வெறுத்துத் தள்ளுவது நியாயந்தான். ஐயோ! அன்று தன்னலம், நாணம், மானம், வேற்றுமை இவற்றை யெல்லாம் அரைநொடியில் நீருக்கி இரண்டு உயிரையும் ஒன்ருயிசைத்த அக்காதற்கனல் சாக்ஷியாய் நிற்கவில்லையா? அல்லது ஒருவேசைக்குப் பேச உரிமையேது? அந்தோ! வழி மரத்தினின்று விளையாட்டாகப் பறித்து ஒருதரம் மோந்து வழிப்போக்கரது கால்மிதிபடும்படி எறியப்பட்ட மலர் போலானேனே! சாதியென்ற கொடிய மிருகம் தன் இரையை ஒரே கௌவாய்க் கௌவுதற்கே சற்றுப் பதுங்கியிருந்தது. சாதியால் ஆரோபிக்கப்பட்ட மாசை மாற்றுவதற்குத் தூயமனமும் பரிசுத்த மான ஒழுக்கமும் போதுமானவையல்ல போலும். ஆதலின், என் உயிரே! பிறிதொருகாலத்தில் பிறிதொருதேசத்தில் மேன்மையான உடம்பைப் பெற்றுக்கொள். இப்பொழுது இவ்விழிய உடலை விட்டுவிடு. (பிரஞ்ஞையற்று விழுகிருள்.)

(தேசபதி பரபரப்புடன் வருகிருன்.)

தேசபதி:—ஆ! என்ன தவறுசெய்து விட்டேன்! கடிதம் நான் அறியாமல் எங்கேயோ விழுந்து விட்டதே! துரதிர்ஷ்டத்தால் அந்த வேசைப்பெண் அதைக் கண்டுவிட்டால், தான் கண்டு கொண்டிருக்கும் இன்பக்கனவினின்று அவளுக்குப் பொறுக்க முடியாத ஓர் உணர்ச்சி ஏற்படும். (சுற்றிநடந்து லலிதை கீழே கிடப்பதைக்கண்டு) ஐயோ! நான் அஞ்சியபடியே நேர்ந்துவிட்ட

தென்று தோன்றுகிறது. (தொட்டுப்பார்த்து) கஷ்டம்! உயிர் போய்விட்டது. (அங்கு மிங்கும் நடந்துயோசித்து) ஒருவேளை இதுவே தக்கமுடிவாக இருக்கலாம். ஏனென்னின், வளையாதன வெல்லாம் இவ்வுலகில் முறிகின்றன. எவரது மனோபாவங்கள், தமது சாதியொழுக்கங்களோடு முரணுகின்றனவோ, அவரது முடிவும் இதுபோன்றதேயாகும். பேதையான இந்த வேசைப்பெண் ஒரு குலமகளைப் போல் எவ்வளவு நடந்தால் என்ன? உலகத்தார் பார்வைக்கு இவள் பிறந்தநாள்தொட்டு இறந்த இந்நாள்வரை ஒருவெறும் வேசைதான். லலிதை போன்ற எத்தனை ஆயிரம் மங்கையர் இப்பாரத நாட்டில் தோன்றியிருக்கின்றனர்! இவளைப் போல் மாய்ந்தும் இருக்கின்றனர்! எவர் கவனிக்கின்றனர்? எவரைக் குறை கூறுவது?

ஓதும் பெரியோர் பலரிந்த
உலக வாழ்வாம் யாத்திரையில்
வேதம் விதித்த ஆசார
வீதி வழியே சென்றிடுவர்.
தீதில் எறும்பொன் றவர்காலின்
செருப்பி னடியில் நசுங்கிடுமேல்
யாது பழியாம் எவருக்கிங்
கென்ன குறைபாம் இயம்புவீரே.

(முற்றும்)

---

## இந்து ஐரோப்பிய நாகரிகம்

உயர்தரச்சாஸ்திரக்கல்வியிலும், நல்ல அரசியல்ஞானத்திலும், முன்னபிப்பிராயங்களையும் மூடக்கொள்கைகளையும் களைந்து எங்செங்கோ இருக்கும் எத்தகைய விஷயத்தையும் கிரகித்துக்கொள்ளுதற்கு ஏற்ற கல்வியிலும் இந்துக்கள் ஐரோப்பியரிலும் தாழ்ந்தவர்களாகவே இருக்கின்றனர். ஆனால் நல்ல வியவசாய முறைகளிலும், போட்டியிடமுடியாதகைத்தொழில் சாமர்த்தியத்திலும், அவசியமான பொருள்களையும் ஆடம்பரமான பொருள்களையும் உண்டுபண்ணுவதற்கேற்ற வல்லமையிலும், எழுதப் படிக்க மூலைக்குமூலை பள்ளிக்கூடங்களை ஏற்படுத்துவதிலும், ஒருவருக்கொருவர் உபசாரமும் தருமமும் செய்வதிலும், இவற்றையெல்லாம் காட்டிலும் பெண்களை நடத்துவதிலும், நம்பிக்கை, மரியாதைமுதலியகுணங்களிலும் இந்துக்கள் ஐரோப்பியர்களுக்குத் தாழ்ந்தவர்கள் ஆகமாட்டார்கள். இவையெல்லாம் இந்துக்களின் நாகரிகமேன்மையைப் புலப்படுத்துவன. நாகரிகம் என்பது வியாபாரம் செய்யத்தக்கதாக மாறுமானால்—அப்பொழுது இந்த இரண்டு சமூகத்தாரும் தங்கள் தங்கள் நாகரிகத்தைப் பரிவர்த்தனை செய்துகொள்ளுவார்களானால்—அந்த வியாபாரத்தால் ஐரோப்பியரே அதிக லாபமடைந்தவர்களாவார்கள். —ஸர் தாமஸ் மன்றோ.

# விதியின் செயல்

ஏ. எஸ். பஞ்சாபகேசையர், எம். ஏ., ஐ. ஸி. எஸ்.

## 1

ராமபட்டர், கிருஷ்ணபட்டர், நாகபட்டர் என்னும் மூன்று சகோதரர்கள் எரணுகுளம் என்னும் ஊரில் வசித்து வந்தனர். ராமபட்டர் மூத்தவர். கிருஷ்ணபட்டரும், நாகபட்டரும் அவருடைய இளைய சகோதரர்கள் அவர்கள் வசித்துவந்த வீட்டின் கதவை யாரோ ஒருவர் தட்டும் சப்தம் நாகபட்டருக்குக் கேட்டது. தாம் படித்துக்கொண்டிருந்த சரித்திரப் புத்தகத்தைக் கீழே வைத்து விட்டு, நாகபட்டர் மாடியிலிருந்த ஜன்னலின் வழியாக வெளியே எட்டிப்பார்த்தார். "இதற்குமுன் நாம் பார்த்திராத ஒரு புதிய மனிதர் நம் வீட்டிற்கு வந்திருக்கிறார். அவர் உன்னுடைய ஜாதகத்தையும் என்னுடைய ஜாதகத்தையும் வாங்கிக் கொண்டு போவதற்காகவே வந்திருக்க வேண்டும்" என்று நாகபட்டர் அதிக உற்சாகத்துடன் கிருஷ்ணபட்டரிடம் சொன்னார். அவ்வாறு சொல்லிவிட்டு, அவர் உடனே சென்று வாயிற் கதவைத் திறந்தார். "ராமபட்டர் வீட்டிலிருக்கிறாரா?" என்று, அடர்ந்த புருவங்களுடன் கூடிய நெட்டையான ஒரு மனிதர் கேட்டார். "அவர் வீட்டிலிருக்கிறார். தாங்கள் அவரைப் பார்க்க வேண்டிய விசேஷமென்னவோ?" என்று நாகபட்டர் கேட்டார். "உம்முடைய ஜாதகமும், உம்முடைய சகோதரனுடைய ஜாதகமும் எனக்கு வேண்டும். எனக்கு ஒருமகளும் என்னுடைய சகோதரனுக்கு ஒருமகளும் கலியாணமாகவேண்டிய நிலைமையில் இருக்கின்றனர். உங்களுடைய ஜாதகங்களும், அவர்களுடைய ஜாதகங்களும் பொருந்துமா என்று பார்க்க வேண்டும்" என்று அந்த மனிதர் பதிலளித்தார். அப்புதிய மனிதரை மாடிக்கு அழைத்துச் சென்று கிருஷ்ணபட்டருடன் பேசிக் கொண்டிருக்கும்படி சொல்லிவிட்டு ராமபட்டர் ஸ்நானம் செய்துகொண்டிருந்த இடத்திற்கு நாகபட்டர் சென்றார்.

---

ஆங்கிலத்திலிருந்து ஸ்ரீமான் கே. எஸ். வேங்கட சுப்பையரவர்கள் பி.ஏ., எல்.டி. மொழிபெயர்த்தது.

நாகபட்டருக்கு அப்போதுதான் வயது பதினேழு ஆகி யிருந்தது. சர்வகலாசாலையில் உயர்தரப் படிப்பிற்குச்சென்று சுமார் இரண்டுவருஷங்களாகி யிருந்தன. கிருஷ்ணபட்டர் நாகபட்டரை விட ஒன்றரை வருஷங்கள் பெரியவராயிருந்தார். அவர் நாகபட்ட ருக்கு ஒருவருஷம் முன்பே சர்வகலாசாலைக்குச் சென்று படித்துக் கொண்டிருந்தார். தங்களுடைய பெண்களுக்காக வரன்தேடுபவர் களுடைய ஜாப்தாவில் அவர்களுடைய பெயரும் காணப்படுவதற்கு ஏற்ற வயது அவர்களுக்காகியிருந்தது. தாம் அதற்குமுன்பு பார்த் திராதவளும், தம்முடைய மனதிற்கு அதிக அழகு பொருந்திய வளாகக் காணப்பட்டவளுமான ஒரு பெண்ணுக்கேற்ற கணவ னுகத் தம்மை ஏற்றுக்கொள்ளப் போகிறுர்கள் என்ற எண்ணம் நாகபட்டருக்கு அதிகத் திருப்தியை அளித்தது.

அவருடைய மனத்தில் பல கனவுகள் தோன்றி மறைந்து கொண்டிருந்தன. அநேக கட்டுரைகளையும் வீரச் செயல்கள் நிரம் பிய பல நவீன கதைப்புத்தகங்களையும் அவர் சிறு பிராயத்தில் படித்திருந்ததினுல், அவர் தம்முடைய மனோ ராஜ்யத்தில் முன்பே ஓர் அரச குமாரியை மணம் புரிந்துகொண்டார். அந்த ராஜ கன்னிகைக்குச் சேர்ந்திருந்த பல எல்லையில்லாத ராஜதானிகளை யும் அவர் தம்முடைய மனதில் ஸ்வாதீனப் படுத்திக் கொண்டார். அவருக்கு எதிரிகளாக இருந்த பல அரசர்களையும் அவர் மனதி லேயே அழித்து விட்டார். அவ்வரச குடும்பத்தைச் சேர்ந்த ஆண்சந்ததியாரையும் அவர் அவ்வாறே மனதில் ஒழித்து விட் டார். அக்குடும்பத்தைச் சேர்ந்த மற்றக் கன்னிகைகளையும் தம் சகோதரர்களுக்கே விவாகம் செய்து வைத்துவிட்டதாக மனதில் அவர் எண்ணிக் கொண்டார்.

வயதாக வயதாக, வாழ்க்கையின் உண்மை நிலை அவருக்குத் தெரிய வந்தது. அதிக தூரத்தில் அழகாகக் காணப்பட்ட இந் திரலோக மெல்லாம் மறைந்துபோயின. ஒரு தனவந்தனுடைய வீட்டிற்குள் ஏதோ ஒரு காரணத்தைக் கொண்டு செல்வதாக அவர் எண்ணிஞர். அவ்வாறு கால் நடையாக அதிகதூரம் நடந்து சென்று அதிகக் களைப்படைந்து, அவ் வீட்டிலிருந்த, ஆஸ்திக்கு வார்சான ஒரே ஓர் அழகிய பெண்ணைத் தண்ணீர் கேட்பதாகவும் அவர் நினைத்துக் கொண்டார். அவள் மிக வும் அழகு வாய்ந்தவளாகவும் நற்குணங்கள் நிரம்பியவளாகவும் இருக்கக்கூடுமென்று அவர் மனக் கோட்டை ஒன்று கட்டினுர். அத்தகைய மங்கையைத் தம்மிடம் காதல் கொள்ளுமாறு செய்து விடக் கூடுமென்றும், அவளுடைய பிதுரார்ஜித ஆஸ்தியைக் கைபற்றிவிடக் கூடுமென்றும் அவர் எண்ணினுர்.

வயது பதினேழு ஆகிவிடவே அத்தகைய எண்ணங்கள் கூடக் கைகூடாவென அவர் அறிந்துகொண்டார். அத்தகைய தனவான் தாமாகவே தம்முடைய தமையனிடம் கலியாண விஷயத்திற்காக வருவதுதான் நடக்கக்கூடிய விஷயமே ஒழிய, தாம் அவருடைய மகளின் மனதைக் கவருவது அசாத்தியமான விஷயமாக அவருக்குத் தோன்றியது. அடர்ந்த புருவங்களையுடைய நெட்டையாக வளர்ந்திருந்த அந்த மனிதர் ஒருதனவானுகவே இருக்கவேண்டுமென்றும், அவருடைய ஒரே ஒரு மகளைத் தமக்குக் கலியாணஞ் செய்து கொடுக்க வந்திருக்கிறுரென்றும் நாகபட்டர் தமது மனதில் எண்ணிக் கொண்டார்.

ராமபட்டர் ஸ்நானம் செய்து முடிந்தபிறகு, அந்த மனிதரைப் பிரத்தியேகமான ஓர் அறைக்கு அழைத்துச் சென்றுர். அவர்களுடைய சம்பாஷணையை அந்த இளைஞர்கள் கேட்கக் கூடாதென்பது அவருடைய எண்ணம். கதவுகளைத் திறந்துவைத் திருந்ததினுல் ஒற்றுக்கேட்கவும் முடியாமற்போயிற்று. ஊஹித்தல் மாத்திரந்தான் சாத்தியமா யிருந்தது. "கிருஷ்ணு, இந்தப் புதிய மனிதன் எதற்காக வந்திருக்கக் கூடும்?" என்று நாகபட்டர் கேட்டார். "அவருடைய புருவங்களைப் பார்த்தால் அவர் ஒரு மோசக்காரர்போலத் தோன்றுகிறுர்" என்று கிருஷ்ணபட்டர் பதிலளித்தார்.

"எவ்வாறிருந்த போதிலும், அவர் பணக்காரராய்த்தான் இருக்கவேண்டும். அவர் நல்ல வேஷ்டியைக் கட்டிக் கொண்டிருக்கிறுர். அவருடைய அங்கியும், தலைப்பாகையுங் கூட விலையுயர்ந்தவைகளாகவே காணப்படுகின்றன. நல்ல ஜரிகை போட்ட உத்தரீயம் தரித்துக் கொண்டிருக்கிறுர்."

"அவைகளை எல்லாம் இரவலாக வாங்கித் தரித்துக் கொண்டிருக்கக்கூடும்."

"அவர் ஏன் அவைகளை இரவலாக வாங்கித் தரித்துக்கொண்டிருக்கக்கூடுமென்று நீ நினைக்கிறுய்?"

"அவைகள் அவருக்குச் சொந்தந்தான் என்று நமக்கு எவ்வாறு தெரியும்?"

"பிறகு அவருடைய சகோதரர் அதிகப் பணக்காரராக இருக்கக் கூடுமா?"

"இவர் உடைகளை இரவலாக வாங்கி அணிந்திருந்தால், இவருடைய சகோதரர் பிச்சைக்காரராகத்தானிருக்கவேண்டும்."

"சகோதரர்களுள் ஒருவர் .பணக்காரராகவும் மற்றொருவர் ஏழையாகவும் இருக்கக் கூடாதா?"

"இருக்கலாம், நிச்சயமாகச் சொல்ல முடியாது. இவரைப் பொறுத்தமட்டில், இவருடைய சகோதரரும் இவரைவிட ஏழையென்பதில் சந்தேகமே யில்லை. தம்முடைய மகளுக்கு வரனைத் தேடிக் கண்டுபிடிப்பதற்கு வேண்டிய திரவியமில்லாததனால் இவருடைய சகோதரர் இவரையே வரனைத்தேடும்படி சொல்லியிருக்கிறார்" என்று கிருஷ்ணபட்டர் எடுத்துரைத்தார். நாகபட்டருக்கு அப்புதிய மனிதரிடமும் அவருடைய சகோதரரிடமும் ஏற்பட்டிருந்த பற்றுதல் அறவே ஒழிந்து போயிற்று. அப்புதிய மனிதரை வழியனுப்பிவிட்டு, ராமபட்டர் அவர்களிடம் வந்து, அந்த மனிதர் அவருடைய ஆஸ்தியை யெல்லாம் குடித்துத் தொலைத்து விட்டவர் என்று சொல்லவே, நாகபட்டர் அதிகத் திருப்தியடைந்தார்.

"அவர்குடிகாரராயிருப்பது வெறுக்கத்தக்க விஷயம். ஆனால் அவருடைய மகள் குடிகாரியாயிருக்கமாட்டாள். அவளுடைய தந்தையின் கெட்டகுணத்திற்காக அவளை வெறுப்பது தகாது. அவர் பணத்தையெல்லாம் தாறுமாருகச் செலவுசெய்துவிட்டதனால் அவருடைய சம்பந்தம் நமக்குத் தகாது" என்று நாகபட்டர் விவரித்துக் கூறினர். "அவருடைய மகள் தந்தையைப் போலல்லாமல் கெட்டிக்காரியாயிருக்கக்கூடும். ஆகையால் தந்தையின் கெட்ட நடத்தைக்காக அவள்மீது குற்றங் கூறுவது தகாது" என்ருர் கிருஷ்ணபட்டர்.

"மடையா, அவ்விரண்டு விஷயங்களுக்கும் சம்பந்தமேயில்லையே. அவர் குடிப்பது அவருடைய மகளுக்குக் கெடுதலை உண்டு பண்ணுவதில்லை. ஆனால் அவர் பணத்தைச் செலவு செய்தது அவளுக்குக் கெடுதலை யுண்டுபண்ணியிருக்கிறது. அது அவளைப் பிச்சைக்காரியாக்கிவிட்டது. அவள் அவருடைய ஒரே மகளாயிருக்கக் கூடுமோ என்று நான் சந்தேகிக்கிறேன்."

"அவள் மூத்தவள் என்றும் அவளுக்குப் பத்துச் சகோதரிகள் இருப்பார்கள் என்றும் எனக்குக் கண்டிப்பாகத் தோன்றுகிறது. ஏனெனில் குடிகாரர்களுக்கு எப்போதுமே குழந்தைகள் அதிகமாக இருப்பார்கள்."

அப்புதிய மனிதர் மீதும், அவளுடைய மகள்மீதும் வைத்திருந்த ஆசை மறைந்து போனதால் நாகபட்டர் மறுபடியும் அதைக் குறித்து வாதாடவில்லை.

ஒரு மாதத்திற்குப் பிறகு அடுத்த வீட்டில் ஒருபாட்டுக் கச்சேரி நடக்கப் போவதாகவும், ஒரு பாங்கியின் தலைவராயிருந்தவரின் புதல்வி பாடப்போவதாகவும் நாகபட்டர் கேள்வியுற்ருர்.

அப்பெண்ணின் தந்தை வைத்திருந்த பாங்கி நஷ்டமடைந்ததினுல் மூடப் பட்டுப்போகவே, அப்பெண்ணின் தந்தை மனோவியாகூலத்தினுல் உயிர் துறந்தார். அவர் சத்தியந் தவருதவராயிருந்ததினுல், அப்பெண்ணிற்கு யாதோர் ஆஸ்தியும் வைத்து விட்டுப் போகவில்லே. அப்பெண்ணிற்கு வயது பதின்மூன்று ஆகியிருந்த போதிலும், மாப்பிள்ளேக்குக் கொடுப்பதற்கு வேண்டிய வரதக்ஷிணே தாயாரர்கிய விதவையிடம் இல்லாததனுல், கலியாணம் ஆகாமலிருந்தது. அப்பெண் சாமார்த்தியசாலியாயிருந்தாள். இயற்கையாகவே அப்பெண்ணின் குரல் கேட்பதற்கு இனிமையாயிருந்தது. அவள் தந்தை நல்லதசையி லிருந்தகாலத்து, கற்றறிந்த சங்கீத வித்வான்கள் அவளுக்குப் பாடம் கற்பித்தனர். அதனுல் அவள் சங்கீதத்தில் அதிகத் தேர்ச்சி யடைந்திருந்தாள். ஆகவே, அவள் பாட்டுக்கச்சேரிகள் செய்வற்கு முன்வந்தாள், அக்கச்சேரிகளில் கிடைக்கும் திரவியத்தைக் கொண்டு, கலியர்ணம் செய்து கொள்ள வேண்டும் என்பது அவளுடைய எண்ணம். அத்தகைய காலட்சேபங்கள் நடக்கும் காலத்து, ஒரு வாலிபன் அவள் மீது காதல் கொண்டு, வரதக்ஷிணேயில்லாமல் அவளே மணந்து கொண்டாலும் மணந்துகொள்ளக்கூடும் என்பதையும் அவள் எதிர்பார்த்தாள்.

நாக பட்டரோ அதிக தனவானல்ல. அவர்களுடைய குடும்பம் ஒருகாலத்தில் மேன்மைபெற்றிருந்தது. பல வியாஜ்யங்களிஞல் அவர்களுடைய ஆஸ்தி அழிந்து போயிற்று. ஆகவே, அவர்களுடைய உயர்தரக்கலாசாலேப் படிப்பு முடிவடைவதற்கே, கிருஷ்ணபட்டரும், நாகபட்டரும் அவர்களுடைய வரதக்ஷிணேயையே நம்பவேண்டியவர்களாயிருந்தனர்.

ராமபட்டரோ, மனக்கோட்டை கட்டுவதில் சமர்த்தர். உலகப் போக்கைக் குறித்து அவர் சிந்திப்பவரல்ல. கிருஷ்ணபட்டருக்கு ஆயிரத்து இருநூறு ரூபாயும், நாகபட்டருக்கு இரண்டாயிரம் ரூபாயும் வரதக்ஷிணேயாகக் கொடுக்கப்படவேண்டு மென்பதை அனேவரும் தெளிவாக அறிந்துக்கொள்ளும்படிக்கு, அவர் அறிவித்திருந்தார். அவர்களுள், நாகபட்டர் அதிகப்புத்திசாலியாக இருந்தமையால், அவருக்கு வரதக்ஷிணே அதிகமாக ஏற்படுத்தப் பட்டிருந்தது. தமக்கு அதிகமாக வரதக்ஷிணே கேட்டதனுல் நாகபட்டர் கர்வம் கொண்டிருந்தார். ஒரு பணக்காரப் பெண்ணேக் கலியாணம் செய்து கொள்வதால் ஏற்படக்கூடிய பெருமையைப்போல அவருக்கு இதுவும் ஒரு பெருமையாகத் தோன்றிற்று. சிலசமயங்களில் அவர்மனதில் சில உன்னத எண்ணங்கள் கிளம்பின. உண்மைச் சுபாவத்தின் காரணமாகப் பொங்கி யெழும் உணர்ச்சி,

இந்த வரதக்ஷிணை என்னும் திரவியம் பறிக்கும் முறையைக் கண்டித்து, உண்மையை அறியுமாறு அவரைத் தூண்டிற்று. அதனால் அவருடைய திடபுத்தியும், கட்டுக்கடங்கிய எண்ணங்களும் சில சமயங்களில், நிலைகுலைந்து போகத்தொடங்கின.

பாட்டுக்கச்சேரி மிகவும் ஆடம்பரத்துடன் நடந்தது. நூற்றுக்கணக்கான ஜனங்கள் கூடினர். பணம் அதிகமாகச் சேர்ந்தது. இரண்டுமணி நேரம் பாட்டுக்கச்சேரி நடைபெற்றது. நாகபட்டரும், கிருஷ்ணபட்டரும் அக்கச்சேரிக்குச் சென்றனர். நாகபட்டர் அதிக உற்சாகத்துடன் தோன்றினர். அவருடைய கண்கள் அவ்வழகிய பெண்ணையே பார்த்துக்கொண்டிருந்தன. அவருடைய காதுகளோ இனிமையாயிருந்த சங்கீதத்தையே கேட்டுக்கொண்டிருந்தன. அவள் அழகுடன் கூடிய மெல்லிய தேகத்தையுடையவளா யிருந்தாள். அவளுடைய கண்கள் ஜ்வலித்துக்கொண்டிருந்தன. அவளுடைய முகம் களங்கமற்றிருந்தது. திடமான சுபாவத்தையுடையவளென்று அவளுடைய மோவாய்க்கட்டை விளகிற்று. அவள் மாநிறம் பொருந்தியவளாயிருந்த போதிலும், சிவப்புநிறம் பொருந்திய ரவிக்கையையும், பச்சைவர்ணத்துடன் கூடிய புடைவையையும் அதிக அழகாக அணிந்திருந்ததினால், அவள் நாகபட்டருடைய கண்களுக்கு அதிக வனப்புவாய்ந்தவளாகக் காணப்பட்டாள். சங்கீதத்தைப் பருகவேண்டும் என்னும் அவா அவருக்கு உண்டாயிற்று. அவருடைய வீட்டிலோ, சங்கீதத்தை அவர் எப்போதும் அனுபவித்ததில்லை. ஆகவே, பாட்டுக்கள் அன்றையதினம் அவருடைய மனத்தைக் கொள்ளை கொண்டன. அவர் சங்கீத ஆனந்தத்தில் மூழ்கிவிட்டார்.

அவர் அம்மாதிற்கு எதிரில் உட்கார்ந்துகொண் டிருந்ததனால், அவளையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தார். அதை வேறு எவரும் கவனிக்க வில்லை. முதலில் அப்பெண்ணின் முகம் மலர்ந்தது; உடனே அவள் வேறு பக்கம் திரும்பிப்பார்க்க முயன்றாள். சில நிமிஷங்கள் கழிந்த பின்னர், அவள் தைரியத்துடன் அவரையே உற்றுப்பார்த்துக் கொண்டிருந்தாள். பாட்டுக்கச்சேரி முடியும் வரையில் அவள் அவ்விதமே அவ்வப்போது அவரைப் பார்த்துக் கொண்டே பாடிவந்தாள். அடிக்கடி செய்யப்பட்டுவந்த கரகோஷங்களில், நாகபட்டர் கலந்து கொள்ளவேயில்லை. இடைவிடாமல் ஏற்பட்டுக் கொண்டிருக்கும் இன்பத்திற்கு, அவைகள் இடையூறுகள் என்றே அவர் கருதினர். இனிமையற்ற கரகோஷத்தையும், சப்தங்களையும் கேட்க அவர் விரும்பவில்லை. அவருடையமுகம் அச்சந்தர்ப்பங்களில் கோபத்துடன் கூடியிருந்தது. பாடிக் கொண்டிருந்த அப்பெண் அக்குறிகளைக்

கவனித்துப் புன் சிரிப்புச் சிரித்து வந்தாள். அவருடைய பரிதாப கரமான நிலைமையையும், அதை உண்டு பண்ணிய மடையர்களின் அறியாமைத்தனத்தையும் அறிந்து கொண்டதாக, அவளுடைய சிரிப்புத் தெரிவித்தது. அந்த இரண்டுமணி நேரங்கள் அவளுக் கருகிலிருந்தமை, பிறந்தது முதல் அப்பெண்ணுடன் பழகியவர் போல அவருக்குத் தோன்றிற்று. அப்பெண்ணிடம் அவருக்கு அவ்வளவு பற்றுதல் ஏற்பட்டுவிட்டது.

"இன்னும் எத்தனை ஜன்மங்கள் நான் எடுக்க வேண்டுமோ, என்தாயே, என்னும் அடியை அவள் பாடியபோது, நாகபட்ட ருடைய மெய்" சிலிர்க்க வாரம்பித்தது. அவருடைய கலாசாலை, அவருடைய சகோதரர்கள், பாட்டுக்கச்சேரி நடந்து கொண்டி ருக்கும் அக்கூடம் முதலியவைகள் எல்லாம் அவருக்கு மாயை யாகத் தோன்றின. பாட்டுப்பாடிக் கொண்டிருந்த அந்த அழகிய பெண்ணுருவமும், ஜன்மங்களைக் குறித்து அவள் பாடிக் கொண்டி ருந்த அந்தப் பாட்டுமே, அவருக்கு உண்மையானவைகளாகத் தோன்றின. கடைசியாக மங்களம் பாடப்பட்டது. "சிருஷ்டி கர்த்தாவாகிய நான்முகப் பிரமனை நான் வணங்குகிறேன்; தசாவ தாரமெடுத்த தாமரைக் கண்ணனை நான் வணங்குகிறேன்; உல கத்தைக்காக்க விஷத்தை விழுங்கிய, நீலகண்டனாகிய பரமசிவனை நான் வணங்குகிறேன்" என்று பாடிக்கொண்டே, அம்மாது ஒவ் வொரு தடவையும் தலைவணங்கினாள். அவள் தம்மைத்தான் வணங்குகிறாள் என்று நாகபட்டர் எண்ணினார்.

கச்சேரியும் முடிந்தது; கூட்டமும் கலைந்தது; நாகபட்டர் அசையாமல் அவ்விடத்திலேயே உட்கார்ந்திருந்தார். "நீ வீட் டிற்கு வரவில்லையா?" என்று அவருடைய இடது தோளைத்தட்டி, கிருஷ்ணபட்டர் கேட்டார். "நீ போ, நான் சிறிது நேரங்கழித்து வருகின்றேன்" என்று நாகபட்டர் சொல்லி அவரை அனுப்பி விட்டார்.

பணம் வசூலிக்க அவ்விடத்தில் வைக்கப்பட்டிருந்த தட்டத் தில், அதுவரையில் ஒன்றும் கொடுக்காதவர்கள் அப்போது அவ ரவர்களுக்குத் தோன்றியவாறு ரூபாய்களையோ, சில்லரைகளையோ போட்டு விட்டுச் சென்றனர். அப்பெண் வீணையை உறைக்குள் போட்டுக் கொண்டிருந்தாள். நாகபட்டர் எழுந்திருந்து, தம்மு டைய சட்டைப் பைக்குள் கையை விட்டுத் தடவிப்பார்த்து ஒரு நாலணா நாணயத்தை எடுத்து, அந்தத் தட்டத்தில் போட்டார். போட்டவுடன் சிறிது அவமான மடைந்தவர்போல நின்றார். "நான் கொடுத்தது ஒரு பெரிய ஸம்மானமல்ல; ஆனால் என்னால்

அவ்வளவுதான் கொடுக்கமுடியும்'' என்று அவர் வெட்கத்துடன் கூறினார். "ஸம்மானத்தை நான் பொருட்படுத்தவில்லை; ஆனால் அதை அளித்தவருடைய நல்ல எண்ணத்தையே நான் பெரிதும் பாராட்டுகிறேன்'' என்று அவருடைய கண்களையே உற்றுப் பார்த்த வண்ணமாய், அன்புடன் கூடிய இனிய புன்முறுவலுடன் அம்மாது சொன்னாள். தனது முழங்கையால் அப்பெண் தன்னுடைய தாயாரை மெல்ல ஓர் இடி இடித்தாள். அவளுடைய தாயார் தன் பெண்ணினுடைய எண்ணங்களை அறிந்து கொண்டவளாய், "தங்களுக்கு சங்கீதத்தில் அதிக விருப்பம் இருப்பது போலத் தோன்றுகிறது என்றாள்.''

எனக்கா! இதுவரையில் எனக்குச் சங்கீத ஞானமே கிடையாது. ஆனால் பாட்டுக்களைக் கேட்க எனக்கு ஆவலாயிருக்கிறது'' என்று அவர் பதில் சொன்னார்.

"என்னுடைய மகள் பாடுவதற்கு அதிக ஆவலுடையவளாயிருக்கிறாள். அவள் மிகவும் நன்றாகப் பாடுகிறாளென்று தாங்கள் கருதவில்லையா?''

"மிகவும் அருமையாகப் பாடுகிறாள். இதுவரையில் நான் இவ்வளவு இனிமையாகப் பாடியவர்களைப் பார்த்ததில்லை; இவ்வளவு இனிமையான பாட்டுக்களைக் கேட்டதுமில்லை''

உண்மையான சந்தோஷத்தைக் காட்டக்கூடிய ஒரு சிரிப்பு அப்பெண்ணின் முகத்தில் தோன்றிற்று. "தங்களுடைய பெயர் என்னவோ?'' என்று அப்பெண்ணின் தாயார் கேட்க, "நாகபட்டர்'' என்று அவர் பதிலளித்தார். என்னுடைய மகளின்பெயர் பங்கஜம்'' என்று அவள் கூறினாள். "பாவம்! அவளுடைய தந்தை இறந்துபோய்விட்டார். அவர் எங்களை அதி பரிதாபகரமான, நெருக்கடியான நிலைமையில் விட்டு விட்டுப் போய்விட்டார். நாங்கள் ஒருகாலத்தில் பெரிய தனவந்தர்களாக இருந்தோம்.''

"நாங்களும் அப்படித் தானிருந்தோம்'' என்றார் நாகபட்டர்.

"ஆனால் இப்பொழுதோ?''

"விஷயத்தை என்னுடைய நான்கணா நாணயம் விளக்கவில்லையா?''

"நாங்கள் ஊர் ஊராகச் சென்று பாட்டுக்கச்சேரிகள் நடத்திக் கொண்டு வருகிறோம். கலியாணச் செலவுகளுக்கும், வரதக்ஷிணைக்கும் இக் கச்சேரிகளில் கிடைக்கும் திரவியத்தை உபயோகப் படுத்திக் கொள்ள வேண்டுமென்று நாங்கள் கருதுகிறோம். இக் காலத்தில் குலம் கோத்திரம் முதலியவைகளையாவது, பெண்களின் மரியாதையான சுபாவம், சங்கீதம், கல்வி, அறிவு முதலியவை

களையாவது யார் பொருட்படுத்துகிறுர்கள்? இளைஞர்களெல்லாம் வரதக்ஷிணையிலேயே நோக்கமுடையவர்களாக இருக்கின்றனர்."

"உம், சிலர் அவ்வாறு செய்துதான் தீரவேண்டியிருக்கிறது. அது உங்களுக்குத் தெரிந்திருக்கும். நியாயமாகவும், பெருந்தன்மையுடனும் நடந்துகொள்வதற்கு அவர்களுடைய தரித்திர தசை இடம் கொடுப்பதில்லை."

"தாங்கள் சொல்வது வாஸ்தவமாயிருந்தாலும் இருக்கக் கூடும். எங்கேபார்த்தாலும் ஜனங்கள் பணநெருக்கடியால் கஷ்டப் பட்டுக்கொண்டிருக்கின்றனர். வாழ்க்கையோ மிகவும் கஷ்டமாக இருக்கின்றது. ஜனங்கள் படுந்துயரம் விவரிக்க முடியாது. வர தக்ஷிணை அதிகமானதற்கு மேற்கூறியவைகளே காரணமாயிருக்க லாம். எங்களுக்குக் கலியாணம் நடந்த காலத்து வரதக்ஷிணை யென்பதே இல்லாமலிருந்தது. என் கணவனுக்கு ஒருதம்பிடிகூட வரதக்ஷிணையாகக் கொடுக்கவில்லை."

"அவர் பள்ளிக்கூடத்தில் படித்துக்கொண்டிருந்த பொழுது நல்ல புத்திசாலியாக இருந்தாரா? அவர் ஒவ்வொன்றிலும் முதல்வ ராக விளங்கினுரா? அவர் சிறந்த பகுத்தறிவுடையவராயிருந் தாரா?"

"அக்காலத்தில் ஆங்கிலக் கல்வி இப்போதிருப்பதைப்போல அவ்வளவு விருத்தியடைந்திருக்கவில்லை. அப்படி யிருப்பினும் அவர் அதிக புத்திசாலியாக விளங்கினுர் என்று சொல்வதற் கில்லை."

"ஆம், வாஸ்தவந்தான். அவர் புத்திசாலியாக இருந்திருக்க முடியாது. அவ்வாறு இருந்திருந்தால் அவருடைய பாங்கி நிலை குலைந்து போயிராதல்லவா?" என்று தம்மை யறியாமல் நாகபட் டர் சொல்லிவிட்டு, பிறகு தாம் செய்தகுற்றத்தை உணர்ந்து, தமது உதட்டைக் கடித்துக்கொண்டார்.

சிலசமயங்களில், நாம் எவ்வளவு ஜாக்கிரதையாக இருந்த போதிலும், நம்மையறியாது சில விஷயங்கள் நேரிடுகின்றன.

"தங்களுடைய அபிப்பிராயம் என்ன?" என்று பங்கஜம் கேட்டாள்."

"ஆம், நீ சொல்வது சரிதான். நான் உன்னுடைய மனதிற்குத் துன்பத்தை யளிக்குமாறு ஏதாவது சொல்லியிருந்தால் என்னை மன்னிக்கவேண்டும்."

"மன்னிக்க வேண்டியது எதற்கு? தாங்கள் என்ன சொல்லி விட்டீர்கள்! இதுபோன்ற அபிப்பிராயத்தையே பலர் கொண் டிருக்கின்றனர்."

“இதுவரையில் எவ்வளவு திரவியம் தாங்கள் சம்பாதித்திருக்கின்றீர்கள்?” என்று நாகபட்டர் பங்கஜத்தின் தாயாரைக் கேட்டார்.

“இதுவரையில் நானூற்றைம்பது ரூபாய்வரையில் சேகரித்து வைத்திருக்கிறோம். அதற்கே அதிக சிரமாய்ப் போய்விட்டது. இதே நாங்கள் நடத்திவந்த கச்சேரிகளுள் பத்தாவதாகும். இனிமேல் அதிகமாகக் கச்சேரிகள் நடத்தமுடியாதென்றும் தோன்றுகிறது. ஊர் ஊராகத்திரிவதினால் பங்கஜத்தின் தேக சௌகியத்திற்குக் கெடுதல் ஏற்படும் என்று தோன்றுகிறது.”

“நல்லது. உங்களுடைய கோரிக்கை நிறைவேறுமாக!” என்று சொல்லிக்கொண்டே நாகபட்டர் எழுந்திருந்தார். அவருடைய உன்னதமான எண்ணங்களெல்லாம் மறைந்து போயின. அவருடைய மனதில் தோன்றியிருந்த பல எண்ணங்களும், மிக அழகாகப் பாடிய அப்பெண்ணின் மீது ஏற்பட்டிருந்த பிரேமையும் மறைந்து போயின. இனி வரப் போகும் பரீக்ஷையும், அதற்குச் செய்ய வேண்டிய முயற்சிகளுமே அவருடைய மனத்தில் புகுந்து கொண்டன. அவர்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்த இரண்டாயிரம் ரூபாய்க்கும், அப்போது பங்கஜத்தின் தாயாரிடமிருந்த நானூற்றைம்பது ரூபாய்க்குமுள்ள வித்தியாசமே, அவருடைய மனோ நிலையின் மாறுதலுக்குக் காரணம்.

திடீரெனத்தோன்றிய அந்தமாறுதலுக்குக் காரணத்தைப் பங்கஜம் ஊகித்து அறிந்துகொண்டாள். அவள் நாகபட்டரை உற்று நோக்கிய வண்ணம், “போய் வாருங்கள்; நமது தேசத்திலுள்ள ஆண்மக்களும், பெண்மக்களும், அவரவர்களுக்கு இஷ்டமானவர்களைப் பணம் என்னும் பேயின் மீது கவனத்தைச் செலுத்தாமல், கலியாணம் செய்து கொள்ளும் காலம் எப்போது வருமோ தெரியாது. அத்தகைய காலம் வந்தால் நமது தேசம் க்ஷேமமடையுமல்லவா?” என்று பங்கஜம் சொன்னாள். “ஆம், நீ சொல்வது உண்மைதான். அத்தகைய விஷயம் நேரிடாதென்றே நான் நினைக்கிறேன்” என்று நாகபட்டர் உளறினார்.

அருமையாகப் பாடிய அவ்வழகிய பெண்ணின் தோற்றம், பல நாட்களுக்கு, நாகபட்டர் முன்பு தோன்றித் தோன்றி மறைந்து கொண்டிருந்தது. நாளடைவில் அத்தோற்றம் மறைந்து போயிற்று. அப்பெண்ணைக் கலியாணம் செய்து கொண்டவன் எவ்வாறிருக்கக்கூடும் என்னும் எண்ணம் அடிக்கடி அவருக்கு ஆச்சர்யத்தை உண்டு பண்ணிக்கொண்டிருந்தது. ‘அவளுக்குக் கலியாணம் நடந்திருக்குமா என்னும்’ விஷயமே அவருக்குச்

சந்தேகமா யிருந்தது. இது, 'சந்திரகுப்த மௌரியன், இராஜ்யத்தை வெறுத்துவிட்டுச் சென்றிருப்பானா? அவ்வாறு சென்றிருந்தால் எப்பொழுது' என்னும் விஷயத்தைக் குறித்து ஆலோசிப்பதைப் போலிருக்கிறது. வீட்டு விஷயங்களும், பள்ளிக்கூட விஷயங்களும் சாதாரணமாகப்போயின. பண நெருக்கடியும், வாழ்க்கையின் அவஸ்தையும், அவருடைய உன்னதமான எண்ணங்களைக் கவிழ்த்து விட்டன. அவருடைய மனத்தை ஒருவாறு தேற்றிக்கொண்டு அவர் பரீக்ஷைக்கு வேண்டிய புத்தகங்களைப் படிப்பதில் தம்முடைய கவனத்தைச் செலுத்தலானார். அப் பாட்டுக் கச்சேரி நடந்த ஒரு வருஷத்திற்குப் பிறகு, கிருஷ்ணபட்டருக்குக் கலியாணம் நடந்தது. அவர்கள் எதிர்பார்த்த வண்ணம் ஆயிரத்து இருநூறு ரூபாய் வரதக்ஷிணையும் அவருக்குக் கிடைத்தது.

நாகபட்டர் அதிக கீர்த்தியுடன் பரீக்ஷையில் தேறினார். செல்வாக்குள்ள ஒரு பள்ளிக்கூட உபாத்தியாயர் அவருடைய பெண்ணை நாகபட்டருக்குக் கலியாணஞ் செய்து வைப்பதற்காக ராமபட்டரிடம் வந்து பேசினார். நாகபட்டர் அதிக புத்திசாலியாக விளங்கினமையால், அவரையே மாப்பிள்ளையாக அடைய வேண்டுமென்று பெண்ணின் தந்தை கருதினார். ஆனால் ரூபாய் ஆயிரத்து அறுநூறுக்குமேல் வரதக்ஷிணையாகக் கொடுப்பதற்கு அவர் ஸித்தராக இல்லை. ராமபட்டரோ, ஒரே பிடிவாதத்துடனிருந்தார். "கொள்ளை யடிக்கவேண்டும் என்னும் எண்ணம் எனக்கில்லை. ஆனால் நான்கு வருஷங்களுக்கு முன்னமேயே, இரண்டாயிரம் ரூபாய் வரதக்ஷிணை வாங்குவதென்று தீர்மானிக்கப் பட்டுவிட்டது. அப்போதிருந்ததை விட மாப்பிள்ளைகளுக்கேற்பட்டிருக்கும் வரதக்ஷிணை இப்போது அதிகமாகிவிட்டது. மேலும் பையனுடைய சட்டகலாசாலைப் படிப்பிற்கும் எங்களுக்குப் பணம் வேண்டியிருக்கின்றது" என்றார் ராமபட்டர். ஆயிரத்து எண்ணூறு ரூபாய் கொடுப்பதாகவும் அதற்கு மேல் ஒரு தம்பிடி கூடத் தம்மால் கொடுக்கமுடியாதென்றும் அப்பள்ளிக்கூட உபாத்தியாயர் சொன்னார். ராமபட்டர் அதற்கிணங்காததால், அப் பேச்சு முடிவடைந்தது. வரதக்ஷிணையைப் பற்றி அப் பெண் கூறிய உண்மை வார்த்தைகள் நாகபட்டருடைய மனதை வாட்டிக் கொண்டிருந்தன. தமக்கு வரக்கூடுமென்று எதிர் பார்க்கப் பட்டுக்கொண்டிருந்த வரதக்ஷிணையைப்பற்றிப் பெருமை பாராட்டிக் கொள்வதை அவர் ஒழித்து விட்டார். அதைக் குறித்து ராமபட்டரிடம் வாதாட வேண்டுமென்று அவர் எண்ணினார்.

(தொடரும்.)

# கைக்கெட்டியது வாய்க்கெட்டவில்லை

பி. எஸ். வரதராஜ ஐயர்

சித்திரம் வரைதல், சங்கீதம் இவ்விரண்டும் அறியாத் வங்காளியர் மிகச் சிலரே. அவர்களில் ஒவ்வொரு குடும்பத்திலும் இவற்றில் ஏதேனும் ஒன்று அல்லது இரண்டும் தெரிந்தவர் ஒருவரேனும் இருப்பார். சித்திரக் கலைமகள் சேவையில் வறுமைவரினும் அதனைப் பொருட்படுத்தாது துறவிகளைப்போலப் பிரமசாரிகளாகக் காலங்கழிப்பவர்கள் அவர்களுள் இன்னும் பலர் உளர். ராமச்சந்திர பானர்ஜி இத் திறத்தாரைச் சேர்ந்தவர்.

குழந்தைப் பருவத்திலிருந்தே அழகிய சித்திரங்களைக் காண்பதில் ராமச்சந்திரருக்கு அதிகப் பிரியமாயிருந்தது. ஒவ்வொரு பொருளையும் காணுந்தோறும் அதை உற்றுப்பார்த்து அதைச் சித்திரத்தில் அமைக்கவும், ஒவ்வொரு சித்திரத்தையும் பார்க்குந்தோறும் அதன் நுட்பங்களை அறியவும் அவர் ஆசைப்பட்டார். அவருடைய பெற்ருேர் அவருக்குத் தக்கவயதில் வித்தியாப்பியாசம் முதலிய சடங்குகளைச் செவ்வனே நடத்தி அவர் விருப்பப்படி அவரைச் சித்திரக் கலாசாலையில் சேர்த்தனர். ராமச்சந்திரர் மாணவர் அனைவரினும் முதல்வராகத் தேறி உயர்தரக் கல்விபயிலச் சீமைக்குச் சென்ருர். அன்னியநாட்டில், அவர் தம் பொருளையும் காலத்தையும் வீணுக்காமல் தம் காரியத்திலேயே கவனமாக இருந்து பல சிறந்த சித்திரங்களை வரைந்தார். வைகறை, அந்திவேளை, மங்கியநிலா முதலிய காட்சிகளும், சிந்தை உலாவிய முகமும், சோகம் செறிந்த கண்களும், கவலைகனிந்த புருவங்களும் இன்னும் இவைபோன்ற தோற்றங்களும் அவர்மனத்தைக் கவர்ந்தன. அந்நாட்டில் நடந்த சில சித்திரப் போட்டிகளில் அவர் தமது படங்களை விளம்பரம் செய்து பரிசுகள் பெற்ருர். ஆனுலும் அவர் உற்சாகங்கொள்ளவில்லை. மானிடர் படுந்துன்பம் அவர் மனதை வாட்டியது. துரதிர்ஷ்ட வசத்தால். அவர் கலாசாலைப் பரீக்ஷையில் தேறவில்லை; கையிலுள்ள பணமும் குறைந்து விட்டது. தாம் சீமையில் பயின்றதன் ஞாபகத்துக்காகச் சில படங்களைமாத்திரம் வைத்துக்கொண்டு மிகுதியானவற்றை விற்றுவிட்டு அவர் தமது ஊருக்குத் திரும்பினர்.

சில நாட்களுக்குப் பிறகு, ராமச்சந்திரர் தம் பெற்றோர்களிடம் விடைபெற்றுக்கொண்டு கல்கத்தாவுக்கு வந்தார். அங்கே ஹாரிஸன் ரோடில் சிறிய அறை ஒன்றை வாடகைக்கு அமர்த்தி அதைச் சித்திரசாலையாக அமைத்துப் படங்களை வரைந்து விற்றுக் காலங்கழித்தார்.

ஒருநாள் காலைவேளையில் ராமச்சந்திரர் வழக்கப்படி தேத்தண்ணீரை அருந்தித் தாம்பூலம் தரித்த பிறகு ஆழ்ந்த சிந்தனையிலிருந்தார். அவர் புதிதாக ஒரு சித்திரம் வரையுமுன் அவ்வாறு நெடுநேரம் ஆலோசிப்பதுண்டு. பிறகு அது அவர் மனத் திரையில் தோன்றும். அதை அவர் புறக்கண்களை மூடிக்கொண்டு அகக்கண்ணால் கண்டு மகிழ்வார்; அதன் அழகை வெகுநேரம் உற்று நோக்குவார்; அதன் பண்பையும், பலதிசைகளிலிருந்து காணத்தெரியும் தோற்றத்தையும் வெகு ஜாக்கிரதையாக உணர்வார். அதன் பிறகே, தம் கைத்திறத்தால் உலகத்தாரும் தம் ஆனந்தத்தை அனுபவிக்கும்பொருட்டு, அதன் விம்பம்போலப் படுத்தாவில் அதை அமைப்பார். இந்த நாள் அவர் வழக்கமான நேரத்திற்கு அதிகமாகச் சிந்தனையிலிருந்து கண்ணைத் திறந்தார். அவருடைய கண்கள் புதிய ஒளி கொண்டு பிரகாசித்தன. 'நாம் இது வரை எழுதியதைவிட அழகிய படம் ஒன்று எழுதப்போகிறோம்' என்னும் ற்சாகம் அவர் நெஞ்சில் நிறைந்தது. அவர் படத்தை வரைய ஆரம்பித்தார்.

வரையுங்கால், எதனையும் ஊடுருவிச்செல்லும் தமது அறிவுக்கிலக்கான இவ்வரிய தோற்றத்தைத் தந்தருளிய கலைமகளைப் பலமுறையும் தொழுது வணங்கினார். அத்தருணம் அவருடைய நண்பர் ஒருவர் அங்கே வந்தார்.

"வாருங்கள்; கோபால்பாபு, உட்காருங்கள்" என்று ராமச்சந்திரர் முகமலர்ச்சியோடு வந்தவரை உபசரித்தார்.

வந்தவர், அறையில் வேறு எதையும் கவனியாது, ராமச்சந்திரரைப்பார்த்து, "ராம்பாபு, நான் உங்களுக்கு ஒரு சந்தோஷச் செய்தி கொண்டுவந்திருக்கிறேன். சித்திரக் கலாசாலையில் ஓர் ஆசிரியர்வேலை விரைவில் காலியாகப் போகிறது. இது ரஹஸியமாக எனக்குத் தெரிந்தது. தாங்கள் பிரயத்தனப்பட்டால் தங்களுக்குக் கிடைக்குமென்று நம்புகிறேன். தெய்வானுக்ரஹத்தால் தங்களுக்குக் கிடைக்கட்டும்" என்றார்.

"ஏதோ, தாங்கள் என்னைப்பற்றி இவ்வளவு நினைத்தது எனக்குச் சந்தோஷத்தைத் தருகிறது. எனக்காகச் சிரமப் பட்டீர்களே, என்ன கைம்மாறு செய்யப்போகிறேன்?" என்றார் ராமச்சந்திரர்,

"தங்களுக்கு அந்தவேலை கிடைத்து, இப்போதிருப்பதைப் போல இல்லாமல், தங்களுக்கு மாதந்தோறும் நிச்சயமான வரும்படியும், தங்களால் இன்னும் அதிகமானவர்கள் மாணவர்களாக நன்மைபெறும் சந்தர்ப்பமும் தங்களுக்கு ஏற்பட்டால், அதைக் கண்டு மகிழ்வதையே கைம்மாருகக் கொள்ளுவேன்" என்று வந்தவர் சொல்லி அகன்றார்.

சித்திரக் கலாசாலையின் பிரதம ஆசிரியரை அன்று சாயங்திரமே கண்டு அவரிடம் தமது விண்ணப்பத்தையும், நற்சாட்சிப் பத்திரங்களின் பிரதிகளையும் ராமச்சந்திரர் கொடுத்தார். அவருக்குத் தெரிந்தவராயினும் பிரதம ஆசிரியர் வேலைமும்முரத்தால் ராமச்சந்திரரை மறந்ததற்காக வருத்தம் பாராட்டினர். அந்த வேலையை அவருக்கு அளிக்கத் தமக்கு இஷ்டம் இருப்பதாகவும், ஆனல் கலாசாலையின் நிர்வாக சபையோர்களுடைய சம்மதமும் அதற்கு வேண்டும் என்றும், அச்சபையோரது தீர்மானத்தைத் தம்மால் கூடியவரையில் ராமச்சந்திரருக்கு அனுகூலமாகத் திருப்ப முயலப் போவதாகவும், இன்னும் ஒரு வாரத்தில் அச்சபை கூடுமென்றும், சொல்லி முடித்தார் பிரதம ஆசிரியர்.

ராமச்சந்திரர் தமது இருப்பிடம் வந்து சேர்ந்து படத்தின் வேலையைத் தொடர்ந்தார்.

ஒருவாரம் சென்றது; ராமச்சந்திரர் சித்திரக் கலாசாலைக்குச் சென்றார்; பிரதம ஆசிரியரைக் கண்டார். அவர் அவருக்கு ஆதனமளித்தார்.

"என்ன, காயா; பழமா?" என்று ராமச்சந்திரர் சிரித்துக் கொண்டு கேட்டார்.

பிரதம ஆசிரியர், "நான் எவ்வளவோ வாதாடியும் பயன் படவில்லையே! என்ன செய்வது?" என்றார்.

"ஏன்?"

"தங்களுடைய விண்ணப்பத்தில் தாங்கள் சீமையில் பரீக்ஷைக்குச் சென்றவிபரத்தைக் கூறியிருக்கிறீர்கள். தங்களுடன் சென்ற திரன்பாபு பரீக்ஷைக்குப் போகவில்லை. அவருக்கு அந்த வேலை கிடைத்திருக்கிறது."

"தாங்கள் சொல்லுவது விளங்கவில்லை."

"நீங்கள் சீமையில் நடந்த பரீக்ஷையில் தேறவில்லையல்லவா? அந்தப் பரீக்ஷை நூதனமானது. அது தேறியவர்களைக் காப்பது போலத் தேருதவர்களைக் கெடுத்துவிடும். திரன்பாபு அதன் வழிக்கே போகவில்லை. தாங்கள் அப்பரீக்ஷையில் தேருத துளர் பாக்கியத்தால் தங்களுக்கு இந்த வேலை கிடைக்கவில்லை."

"எல்லாம் தெய்வச்செயல்" என்று சொல்லிக்கொண்டு ராமச்சந்திரர் ஹாரிஸன் ரோடில் தமது அறைக்குச் சென்றார்.

1922-ஆம் ஷு வசந்தகாலம். கல்கத்தாவில் போராபஜார் என்னும் இடத்தில் ஒரு பொருட்காட்சிசாலை திறக்கப்பட்டது. இவ்விதச் சாலைகள் இப்பட்டணத்தில் அடிக்கடி தோன்றுகின்றன. அச்சாலைகளில் சுதேசச் சிற்பமும் கைத்தொழிலும் அடைந்திருக்கும் மேன்மை எடுத்துக்காட்டப்படுகின்றது. அங்கே அமைக்கப்படும் பலவகைப் பொருள்களையும் கண்டு நமது நாட்டினர் அத்துறைகளில் எவ்வளவுதூரம் விருத்தியடைந்திருக்கின்றனர் என்பதை யாரும் ஒருவாறு அனுமானிக்கலாம். இன்னும் கைத்தொழிலாளருக்கு அவற்றால் வியாபார விளம்பரம் பெறவும், வியாபாரிகளுக்குச் சமாசாரங்களை அறியவும் அவை ஏற்ற சாதனங்களாக இருக்கின்றன.

போரபஜார் சாலையில் சிற்பப் பகுதியில் ஒருபந்தலை நோக்கிச் சித்திராபிமானிகள் திரள் திரளாகச் சென்றுகொண்டிருந்தனர். அப்பந்தலை அலங்கரிப்பதுபோல அதில் அழகிய ஒரு படம் வைக்கப்பட்டிருந்தது. அதன்பெயர் "வெள்ளத்தால் நிகழ்ந்த கேடு." தன் மகனைச் சான்றோன் எனக் கேட்ட தாயைப் போலப் பெரிதும் உவந்த முகத்தினராய், அதன் அருகில் ராமச்சந்திரர் நின்றுகொண்டிருந்தார்.

அது வெள்ளத்தால் உறும் கொடுமையை மாந்தருக்கு எடுத்துக் காட்டி அதனால் இடருற்றவர்களிடம் கண்ணோட்டம் ஏற்படுத்தும் பிரசாரப் படம். ஆனால் அதன் கற்பனையும், கைத்திறமும், ஒளியும் நிழலும் மருவிய தன்மையும், வழுவிலாச் சிறப்பும் காண்பவர்களுடைய கண்ணையும் கருத்தையும் கவர்ந்தன. ஒரு கூரை போட்ட அறையில் வயது சென்ற ஒருவர் சாய்ந்த நாற்காலியில் உட்கார்ந்து ஆலோசிக்கும் பாவனையாக இருந்தது அப்படம். கூரையில் உள்ள ஒரு துவாரத்தின் வழியாக வெயில் அடித்தது. அந்த இருண்ட அறையில் அவரது முகம் வெயிலின் ஒளிபெற்றுப் பிரகாசித்தது. பக்கத்தில், கல்லும் மண்ணும், வெள்ளம் அடித்துக்கொண்டுபோனது போக எஞ்சிய சில பொருட்களும் சிதருண்டு கிடந்தன. அவரது முகத்தில் பரிகொடுத்த பார்வையும், கலங்கிய கண்களும், துக்கத்தால் வளைந்த அதரங்களும், வேதனையால் குறுக்கப்பட்ட புருவங்களும் திகழ்ந்தன. உதவியற்ற நிலைமையும், வயோதிகமும் பலவீனமும் அடைந்த சரீரமுமுடைய அவர் ஓர் உபாயமும் தோன்றாமல் உட்கார்ந்திருந்தது காண்பவர் மனதைக் கரைத்தது.

பர்துவான் மஹாராஜா அந்தப்படத்தை ரூ. 3000-க்கு வாங்குவதாக ஒப்புக்கொண்டார். சீமையில் பரீக்ஷையிலும், கல்கத்தாவில் கலாசாலையிலும் ஜயமும் ஸ்தானமும் அளிக்க மறுத்த பூமகள் இப்பொழுது அவருக்கு வாகைமாலைபோட்டு ஆசி கூற வந்ததுபோலத் தோற்றியது. ஆனால் பொருள் காட்சிசாலை அதிகாரிகள் இன்னும் ஒருதினம் மாத்திரம் படம் அங்கு வைக்கப் பட்டிருக்கவேண்டும் என்றும், பிறகு மஹாராஜா அதை எடுத்துக் கொண்டு போகலாம் என்றும் கேட்டுக்கொண்டனர். படத்தின் புகழ் எங்கும் பரவ, அதைக் காணாதவர்கள் வந்து காண்பதற்காக இன்னும் ஒரு நாள் அதிகமாகச் சாலையில் அது இருக்கவேண்டும் என்பது அதிகாரிகளின் கருத்து. மஹாராஜாவும் ராமச்சந்திரரும் அதற்கிசைந்தனர்.

கடைசிதினம் இரவு நெடுநேரம் வரையில் படத்தைக் காண பலரும் வந்தனர். ராமச்சந்திரர் தமது நண்பர்கள் சிலரோடு சுகாதாரப்பகுதியில் சுற்றிக்கொண்டு வருகையில், திடீரென்று ஜனங்களுக்குள் குழப்பம் ஏற்பட்டு அவர்கள் அங்குமிங்கும் ஓடுவதைக் கண்டார். அவர் மனதில் இடிவிழுந்ததுபோல இருந்தது. "என்ன விபத்து?" என்று கேட்டுக்கொண்டே நாற்புறமும் திரும்பிப்பார்த்தனர் ராமச்சந்திரரும் அவருடைய நண்பர்களும். எங்கும் புகை சூழ்ந்துகொண்டிருந்தது. "ஐயோ!" என்று அலறிக்கொண்டு சிற்பப்பகுதிக்கு அவர்கள் ஓடினார்கள். போரபஜார் பொருள் காட்சிசாலை மிகவும் பெரியதாக அமைக்கப் பட்டிருந்தது. சுகாதாரப் பகுதிக்கும் சிற்பப் பகுதிக்கும் கொஞ்சதூரம் இடை வெளியிருந்தது. ஆனால் அக்கணம் அது ஒருமைல் தூரத்தைப்போலத் தோன்றிற்று ஒருநொடிப்பொழுதில் பறவையைப்போல அங்கே பறந்து செல்லவிரும்பினார் ராமச்சந்திரர்.

தீ சிற்பப்பகுதியைச் சூழ்ந்திருந்த போதிலும் இன்னும் அங்கே செல்லவில்லை. அவர், இளைக்க இளைக்க, மூச்சுத்திணற ஓடினார். ஆனால் அவர் பகுதியில் நுழையுமுன் பந்தலில் தீப்பற்றியது. ஒரேகுதியில் அவர் பந்தலை யடைந்தார். அங்கே கூடியிருந்த ஜனங்களைத் தள்ளினார். அவருக்கும் படத்துக்கும் இடையில் உயரத்திலிருந்து கொள்ளிக்கட்டைகள் விழுந்துகொண்டிருந்தன. ஆயினும் அவர் எட்டிப் படத்தை மீட்க முயன்றார். அத்தருணம் படத்தின்மேல் ஒருபெரிய நெருப்புத்துண்டு வீழ அது பற்றிக் கொண்டது. அதனைக் கண்டோரனைவரும் அரற்றினர். ராமச்சந்திரர் நினைவு இழந்து அங்கிருந்தவர்கள் கரத்தில் சாய்ந்தார்.

# நாட்டுப் பாட்டு

## மூன்று

---

முள்ளு முனையிலே மூன்றுகுளம் வெட்டினேன்
இரண்டுகுளம் பாழ் ஒன்றில் தண்ணியேயில்லை.

தண்ணியில்லாக் குளத்திற்கு மண்ணுடையான் மூன்றுபேர்
இரண்டுபேர் நொண்டி ஒருவனுக்குக் கையேயில்லை.

கையில்லாத் தேவன் செய்த பானை மூன்று பானை
இரண்டு பானை பச்சை ஒன்று சுடவேயில்லை.

சுடாத பானைக்கு விட்டவரிசி மூன்றரிசி
இரண்டரிசி பச்சை ஒன்று வேகவேயில்லை.

வேகாத அரிசிக்கு விருந்துவந்தார் மூன்றுபேர்
இரண்டுபேர் பட்டினி ஒருவன் உண்ணவேயில்லை.

உண்ணாத தேவனுக்கு விட்டகாடு மூன்றுகாடு
இரண்டுகாடு பொட்டல் ஒன்றில் புல்லேயில்லை.

புல்லில்லாக் காட்டிற்கு வரிப்பணம் மூன்று பணம்
இரண்டு பணம் செம்பு ஒன்று செல்லவேயில்லை.

செல்லாத பணத்திற்குத் தோட்டக்காரன் மூன்றுபேர்
இரண்டுபேர் பொட்டை ஒருவனுக்குக்கண்ணே யில்லை.

[தமிழ்த்தீனி.]

# தீபாவளி மத்தாப்பூப் பெட்டி

குழந்தைகளே !

நீங்கள் ஒவ்வொரு வருஷத்திலும் தீபாவளி தினம் மத்தாப்பூப் பெட்டிகள் வாங்குகிறீர்கள். காசு கொடுத்துப் பெட்டிகள் வாங்கி, நெருப்பில் கொளுத்தி எரியவிட்டுச் சந்தோஷப்படுகிறீர்கள். கடைசியில் கரியும் புகையுமே மிச்சம். ஆயினும் காலிப்பெட்டிகளையாவது சேகரித்து ஏதாவது விளையாட்டுச் சாமான்கள் செய்யக்கூடாதா என்று நான் நினைக்கிறேன். போனவருஷம் தீபாவளியில் எனது பிள்ளைகள் சேகரம்செய்த மத்தாப்பூப் பெட்டிகளைக் கொண்டு பலவிளையாட்டுச் சாமான்கள் செய்து வந்தார்கள். அவைகளில் சிலவற்றை இங்கே காட்டியிருக்கிறேன்.

வேண்டிய சாமான்கள்

1. நெருப்புப் பெட்டிகள் அல்லது மத்தாப்பூப் பெட்டிகள்.
2. துண்டு அட்டைகள்.
3. சோப்புப்பெட்டி.
4. வர்ணக்காகிதம், பிசின், வளையம், கயிறு, ஊசி.

இப்பெட்டியின்மீது ஒரு கண்ணாடியைச் சாய்த்து வைத்துக் கொள்ளும்படியும் ஒரு ஏற்பாடு செய்யலாம்.

அவைகளை வெளியே இழுப்பதற்கு ஒரு வளையத்தையாவது, மடக்கு ஊசியையாவது உபயோகப் படுத்தலாம். ஒரு பையன் நூல்முனையில் ஒரு மண் உருண்டையைத் தொங்க



பக்கத்துக்கு ஆறு ஆறு அறைகளாகப் பன்னிரண்டு அறையுள்ள உடுப்புப்பெட்டியைக் காட்டும் படம்.

விட்டதும், மற்ருெருவன் ஓர் ஈர்க்குச்சியைக் கட்டியிருந்ததும் என் ஞாபகத்திற்கு வருகின்றன.

இது செய்வதற்கு மூன்று அட்டைத் துண்டுகளும், எட்டு மத்தாப்பூப் பெட்டிகளும் வேண்டும். இது வெகு சுலபமாகச் செய்யக்கூடியது. அட்டைகளின் மீதும், அறைகளின் வெளிப்பக்கத்திலும் வர்ணக் காகிதங்களை ஒட்டிக்கொள்ளலாம்.



புஸ்தகங்களும், பக்கத்தில் பென்சில், மைக்கூடு முதலிய கருவிகளும் வைக்கக்கூடிய அலமாரி.

ஒரு சோப்புப் பெட்டியினுள் இம்மாதிரி அறைகள் வைத்து ஒரு பெண் கொணர்ந்தது இது. மிகவும் நன்ருயிருந்தது. இருபக்கத்திலும் கதவை வைத்து மூடித் திறக்கும்படி அட்டைகள் வைத்துக் காகிதம் அல்லது துணியினுல் ஒட்டவேண்டும்.



வெளியே இழுக்கக்கூடிய அறைகள் அடங்கிய ஒரு பீரோ. (கதவுகள் தைக்கப்பட்டது.) இது ஒரு சாமர்த்தியமான வேலையாகும்.

### சில குறிப்புக்கள்

நெருப்புப்பெட்டிகள் அல்லது மத்தாப்பூப்பெட்டிகளை ஒன்றின்மீது ஒன்றைவைத்து ஒட்ட நல்ல பிசினை உபயோகப்படுத்த வேண்டும். செய்வதைச் சுத்தமாயும் அழகாயும் செய்யவேண்டும்.

இந்த வருஷம் தீபாவளிதினம் மத்தாப்பூப் பெட்டிகள் சேர்த்து இம்மாதிரிப் பெட்டிகள், அலமாரிகள் பீரோக்கள் செய்வீர்கள் என்று நம்புகிறேன்.

[எஸ். ஜகந்நாதன்.]



# மூன்று பழங்கள்

பி. ஆர். சூடாமணி.

---

புஷ்பபுரி என்றொரு நகரமாம்; அதில் புஷ்பசேனன் என்றொரு அரசனும். அவனுக்கு அழகுள்ள மூன்று பெண்கள் இருந்தார்கள். அவர்களுக்குள் கடைசி ராஜகுமாரியாகிய புஷ்பாவதி தான் மற்றெல்லாரைப் பார்க்கிலும் அதிக அழகும் நல்லகுணங்களும் உடையவள்.

ஒருநாள் புஷ்பசேனன் தேசத்தையெல்லாம் சுற்றிப்பார்த்து வரப் புறப்பட்டான். போவதற்குமுன் அவன் தன் பெண்களிடம் வந்து, "என் கண்மணிகளே! உங்களுக்கு என்னவேண்டும்?" என்று கேட்டான். அதற்கு மூத்த ராஜகுமாரி, "அப்பா! பொன் உடையும், பொன் நகையும் வைரமணியும், மாலைகளும் எனக்கு வேண்டும்" என்றாள். இரண்டாவது மகள் அரசனைப்பார்த்து, "அப்பா! வெள்ளி உடையும், வெள்ளி நகையும், முத்துமணி மாலைகளும் வேண்டும்" என்றாள். மூன்றாவது ராஜகுமாரி ஒன்றும் பேசாதிருந்தாள்.



அரசனுக்கு புஷ்பாவதியின்மேல் அதிகப்பிரியம். ஆகையால் அவள் ஒன்றும் கேளாமல் இருந்ததைக் கண்டு, "கண்மணியே! உனக்கு ஒன்றும் வேண்டாமா?" என்று கேட்டான்.

அதற்கு புஷ்பாவதி, "அப்பா! நான் கேட்கிறதை நீங்கள் கொண்டுவர முடியாது; அதனாலேதான் நான் ஒன்றும் கேட்கவில்லை" என்றாள்.

அதைக்கேட்ட அரசன், கொஞ்சம் கோபத்தோடும், பெருமையோடும் "புஷ்பாவதியே! இந்திரன்முதலிய தேவர்கள்கூட என் பேரைக் கேட்டமாத்திரத்திலே என்உத்தரவுப்படி செய்வார்கள். அப்படிப்பட்ட எனக்கு ஒன்று வேண்டுமென்றால் அது எனக்கு அகப்படாதோ? என் அருமை மகளாகிய உன்னுடைய சிறிய ஆசையைப் பூர்த்திசெய்யமுடியாத அற்ப ராஜாவா நான்?" என்றான்.

தகப்பன் கோபித்ததைக் கண்ட புஷ்பாவதி, "அப்பா! உங்களுக்குக் கோபம் வேண்டாம். நீங்கள் வரும்போது எனக்குப் பேசும் பலாப்பழமும், சிரிக்கும் மாம்பழமும், பாடும் மாதுளம் பழமும் கொண்டுவரவேண்டும்" என்றாள்.

புஷ்பேசன் அப்படியே கொண்டுவந்து கொடுப்பதாகச் சொல்லிவிட்டுத் தேசாந்திரம் போனான். அவன் நாடுநகரங்கள் எங்கும் சுற்றித்திரிந்து, தேசத்தையெல்லாம் பார்த்துவந்தான். தன் குமாரிகள் கேட்டவைகளை யெல்லாம் தேடிச் சேர்த்துக் கொண்டான். தன் முதல் இரண்டுபெண்கள் கேட்ட வஸ்துக்களெல்லாம் கிடைத்தன. ஆனால் கடைசி மகள் கேட்ட பழங்கள் மட்டும் கிடைக்கவில்லை. தனக்கு மிகவும் வேண்டிய மகளுக்கு மட்டும் ஒன்றும் கொண்டுபோக முடியவில்லையே என்று வருத்தப்பட்டான்; பிறகு நகரத்தை நோக்கிப் புறப்பட்டான். அவன் தன்னுடைய நகரத்துக் கோட்டைவாசலுக்குப் பக்கத்தில் வந்த போது, திடீரென்று அவன் ஏறி வந்த ரதத்தின் சக்கரங்கள் நிலத்தில் புதைந்துவிட்டன. ரதசாரதி குதிரைகளை எப்படி அடித்த போதிலும், அவைகளால் ரதத்தை இழுக்க முடியவில்லை. அவன் பஞ்ச கல்யாணிக் குதிரைகள் பூட்டின ரதத்தில் வந்தபோதிலும், அது அசையாததுகண்டு அரசன் கவலைப்பட்டு, "தேர்ப்பாகனே! சீக்கிரம் வேறு குதிரைகள் கொண்டுவா" என்றான். தேர்ப்பாகன், அரசனைத் தொடர்ந்துவந்த குதிரை வீரர்களுடைய குதிரைகளை ரதத்தில் பூட்டி ஓட்டப்பார்த்தான். எத்தனை குதிரைகளைப் பூட்டினாலும் அந்த ரதம் கொஞ்சங்கூட அசையவில்லை. அதைக் கண்ட அரசன், மனம்சோர்ந்து, இனி நகரத்திற்கு நடந்து போவதைத்தவிர வேறே வழியில்லை யென்று எண்ணினான்; ரதத்தை விட்டுக் கீழே இறங்கப் போனான். அப்பொழுது அந்த வழியாக, "உம், உம், உம்" என்று உறுமிக்கொண்டே ஒரு பன்றி வந்தது. அது அரசனைப்பார்த்து, "அரசனே! நான் உன் ரதத்தை எடுத்துவிடுகிறேன். நீ எனக்கு உன் கடைசி மகளைக் கலியாணம்

செய்து தருவாயா?" என்று கேட்டது. அதற்கு அரசன் முன் பின் யோசிக்கவில்லை. எப்படியாவது அந்த இடத்தை விட்டுப் போகவேண்டு மென்ற ஒரே எண்ணத்தோடு இருந்தான்; "அப்படியே என் கடைசி மகளை உனக்கு விவாகம் செய்துகொடுக்கிறேன்" என்று சொல்லிவிட்டான். அந்த வார்த்தையைக் கேட்டவுடனே, அந்தக் காட்டுப் பன்றி ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து, தன் மூக்கினால் ரதத்தை இடித்துத் தள்ளிற்று. அது தள்ளின விசையினாலே ரதம் நிலத்தினின்று எழும்பி உருண்டு ஓடியது.



அரசன் அரண்மனைக்கு வந்தவுடனே, தன் முதல் இரண்டு புத்திரிகளுக்கும் ஆடைகளும், நகைகளும் கொடுத்தான். ஆனாலும் அவனுடைய முகம் துக்கத்தினால் மிகவும் வாடியிருந்தது. "என்மகள் கேட்ட பழங்களைக் கொண்டுவந்து கொடுக்க முடியாமற்போனதோடு, அசுத்தமான பன்றிக்கு விவாகம் செய்து கொடுப்பதாக வாக்களித்தேனே" என்று எண்ணி எண்ணி நெஞ்சம் புண்ணானான்.

சிறிது நேரத்திற்கெல்லாம் அந்தப் பன்றி கழுதை பூட்டிய ஒரு சிறு கட்டைவண்டியில் ஏறிச் சவாரிசெய்து கொண்டு அரண்மனை வாசலில் வந்து நின்றது. அது "உம், உம், உம்" என்று உறுமிக்கொண்டே அரசனைப் பார்த்து, "மன்னா! உன்வார்த்தைப்படியே உன் மகளை எனக்கு விவாகம் செய்து கொடு" என்று கேட்டது.



அரசன் அதைக் கேட்டு, நடுங்கினான். இஞ்சி தின்ற குரங்குபோல விழித்தான். முடிவிலே அரண்மனை வேலைக்காரிகளுள் அழகான ஒரு

பெண்ணைப் பட்டாடைகளினாலும் பலவகை அணிகளாலும், அலங்கரித்து பன்றியிடம் அனுப்பினான். இந்த வஞ்சனையை அறிந்த பன்றி, "உம், உம், உம்" என்று உறுமிக் கொண்டே, "புஷ்பேசனே! இந்த வெள்ளாட்டியா உன் மகள் புஷ்பாவதி? என்னையா ஏமாற்றப் பார்க்கிறாய்? சீக்கிரம் நீ உன் சொல்லைக்காத்து உன்பெண்ணை அனுப்புகிறாயா? அல்லது என்னைப்போல நீயும் ஒரு பன்றியாகிறாயா?" என்று கேட்டது.

அரசன் செய்வது ஏது என்று அறியாமல் மிகவும் துக்கத்தோடு, தன்மகளைக் கந்தைத்துணியும் கரிவேஷமுமாய் அலங்கோலப்படுத்திப் பன்றியின் முன் கொண்டுவந்துவிட்டான். பன்றி மிகவும் சந்தோஷத்தோடு அவளைத் தூக்கித் தன்வண்டியில் வைத்துக்கொண்டு போயிற்று. தன் மகள் பன்றியோடு போகிறதைக் கண்ட அரசன் ஆய்ந்து ஓய்ந்து பாராமல் தான் செய்த காரியத்தை நினைத்து மிகவும் துக்கித்தான்.

புஷ்பாவதி விம்மி விம்மி அழுதுகொண்டே அந்தப் பன்றியோடு போனாள். அவள் மூன்று நாள் பிரயாணம் செய்த பிறகு ஒரு சேற்றுக் குட்டைக்கு வந்தாள். பன்றி அவளைப்பார்த்து, "இராஜகுமாரியே! நீ கீழே இறங்கு; இதுதான் உன்னுடைய புதிய வீடு. நாம் இருவரும் சந்தோஷமாக இந்தச் சேற்றிலே படுத்துப் புரளலாம் வா" என்றது. இராஜகுமாரி அப்படிச் செய்ய மனமில்லாமல் நின்ற இடத்திலேயே அசையாமலிருந்தாள். அதைக் கண்ட பன்றி அவளுடைய கையைப் பிடித்துக் கறகற



என்று இழுத்துச் சேற்றிற்குக் கொண்டு போயிற்று. அதனால் இராஜகுமாரி நடுங்கி, பிரக்ஞை தப்பி, மூர்ச்சையற்றுக் கிடந்தாள். அவள் சற்று நேரத்திற்குப் பிறகு மூர்ச்சைத் தெளிந்து எழுந்தாள். அப்பொழுது பன்றி, அவளைப் பார்த்து, "அழகிற் சிறந்த பெண்ணே! அழ வேண்டாம். என்னை மணந்த பிறகு அரண்மனைக்





குத் திரும்பப் போகலாம் என்ற எண்ணத்தை விட்டுவிடு. இனி என்னோடு சந்தோஷமாய் இரு. இதோ, கொஞ்சம் அவலும் பொரியும் இருக்கிறது. சாப்பிடு என்று ஒரு மரத்தட்டை அவள் முன் வைத்தது. இராஜகுமாரி அதைச் சாப்பிடாமல் அழுது கொண்டே தூங்கிவிட்டாள்.

மறுநாட்காலையில் அவள் எழுந்தாள். சுற்றுமுற்றும் பார்த்தாள். இது என்ன! நான் எங்கே இருக்கிறேன்! இது யாருடைய அரண்மனை! இது யாருடைய நந்தவனம்! சேற்றிலே புரண்டு கிடந்த என் அசுத்தமான உடைகள் எங்கே! இந்த ஆபரணங்கள் எல்லாம் எப்படி வந்தன! என்னை இப்படிச் சிங்காரித்தது யார்?" என்று திகைத்தாள். அப்பொழுது பொன்னாற்செய்த பதுமைகள் போல் அழகு வாய்ந்த அநேகப் பெண்கள் அவள் முன்வந்து, வணங்கினார்கள். "எங்கள் அரசியே! நீ காலால் இட்ட



வேலையைத் தலையாலே செய்யக் காத்திருக்கிறோம்; உன் விருப்பம் என்ன" என்று கேட்டார்கள்.

அதைக்கேட்ட இராஜகுமாரி, "இது கனவோ நினைவோ" என்று கலங்கினாள். அப்பொழுது காலையில் உதித்தெழும் சூரியனைப் பார்க்கிலும் அழகுவாய்ந்த அரசிளங்குமாரன் அங்கே தோன்றினான். அவன் மெதுவாய் இராஜகுமாரியை அணுகி, "புஷ்பாவதியே! நானே உன்கணவன். சொன்ன சொல்தவறினதினாலே 'பன்றியாகக் கடவாய்' என்ற சாபத்தைப் பெற்று அநேக நாட்கள் பன்றியாய்ப் பரிதபித்தேன். என்னைச் சபித்த மகரிஷியிடம் நான் மன்னிப்புக் கேட்டு, 'ஐயா! என்சாபம் எப்பொழுது தீரும்?' என்றேன். அப்பொழுது அவர் 'எந்தப்பெண் பேசும் பலாப்பழமும், சிரிக்கும் மாம்பழமும், பாடும் மாதுளம் பழமும் விரும்புகிறாளோ அவளை நீ மனைவியாகப் பெற்றால் உன் சாபம் தீரும்' என்றார். நான் அப்படிப்பட்ட ஓர் அரசிக்காக நெடுங்காலம் காத்திருந்தேன். முடிவிலே உன்னைக் கண்டடைந்தேன். இப்பொழுது என்னோடு வந்து இந்த நந்தவனத்தையெல்லாம் சுற்றிப்பார்" என்று அவளை அழைத்துக்கொண்டு போனான். போகும்பொழுது அங்கேயிருந்த பலாமரங்களில் தொங்கின இனிமையான கனிகள், "அரசியே வாழ்க! எங்கள் செல்வமே வாழ்க!" என்று இனிமையான குரலில் வாழ்த்துக் கூறின; அதைக்கேட்ட மாங்கனிகள் மரக்கிளைகளிலே கல கல என்று சிரித்து, மகிழ்ந்து கூத்தாடின; அதைக்கண்ட மாதுளங் கனிகள் இனிமையான கீதங்கள் பாடின; இவற்றைக் கண்ட புஷ்பாவதி திகைத்து ஸ்தம்பித்து நின்று விட்டாள். அப்பொழுது இராஜகுமாரன் அவளைப் பார்த்து, "அரசியே? நீ என்னை மணந்து, நாம் இந்நாட்டையும், இம்மனையையும் ஆள்வோம் என்றால் நான் என்றும் உன்விருப்பத்திற்கு இசைந்து நடப்பேன்" என்று சொன்னான். புஷ்பாவதி அடக்கமுடியாத சந்தோஷத்தினால் ஒன்றுமே பேசமுடியாமல் புன்னகைசெய்து தலைகுனிந்து நின்றாள். அப்பொழுது இராஜகுமாரன் தன்கையிலிருந்த மலர் மாலையை



அவள் கழுத்தில் இட்டாள். அப்பொழுது பலாப்பழங்கள் வாழ்த்துக் கூறின. மாங்கனிகள் கல கலத்தன. மாதுளங்கனிகள் தீங்குரலில் இன்னிசை பாடின.



---

## மாய மை

எலுமிச்சம் பழத்தின் சாற்றையாவது வெங்காயத்தின் சாற்றையாவது கொஞ்சம் எடுத்துக்கொள்க. புதியமுள்போட்ட பேனுவினல் அந்த ரசத்தைத் தோய்த்து, பளபளப்பில்லாத காகிதத்தில் இஷ்டமான விஷயத்தை எழுதுக. எழுத்துக் காய்ந்தபிறகு எழுதிய காகிதம் எழுதாததுபோல் தோன்றும். அந்தக் காகிதத்திற்குத் தணலின் சூட்டை உண்டாக்கினல் எழுத்துக்கள் புலப்படும். ஐரோப்பியர்கள் மாய மை செய்ய ஒருபுதிய முறையைக் கண்டறிந்திருக்கிறார்கள் :—ஒருபாகம் லின்ஸீட் எண்ணெயையும், 20பாகம் லிக்வர் அமோனியாவையும், 100 பாகம் ஜலத்தையும் கலந்துவைத்துக்கொண்டு புதிய பேனுவினல் அதில் தொட்டுப் பளபளப்பற்ற காகிதத்தில் எழுதுக. ஒவ்வொரு முறையும் பேனுவைத் தோய்க்கும்பொழுது திராவகப்புட்டியை நன்றாகக் குலுக்கவேண்டும். எழுதின காகிதத்தை ஜலத்தில் நனைத்தால் எழுத்துக்கள் புலப்படும். ஈரம்காய்ந்தால் புலப்படமாட்டா.




# சில நகைகள்

வி. விசாலாக்ஷி அம்மாள்

---

## அட்டிகை

கழுத்தில் சற்று இறுகலாக அட்டிகையை அணிந்து கொள்ளுவதே ஒரு காலத்தில் அழகு என்று கருதப்பட்டது. தற்காலத்தில் இவ்விதம் போட்டுக்கொண்டால், 'மென்னை யைப் பிடிக்கிறாற் போல் எப்படி இவ்வளவு கெட்டியாக இந்த அட்டிகையைப் போட்டுக் கொள்ள அவளால் முடிகிறதோ' என்றும், 'நாய்க்குக் கழுத்துப் பட்டை கட்டினாற் போல் ஏன் இவ்வளவு இறுகலாகப் போட்டுக் கொள்ள வேண்டும்?' என்றும் கூறிப் பரிகசிக்கிறார்கள். அட்டிகையை இறுகலாகப் போட்டுக் கொள்ளுவதனால் பேசும்பொழுது பதக்கம் ஆடுவது கண்ணுக்குத் தெரியும். இது பார்வைக்கு அழகாக இருக்கும் என்ற அபிப்பிரா யம் மாறிவிட்டது. அட்டிகையை நல்ல தளர்ச்சியாகவே நவீன நாகரிகர்கள் அணிந்து கொள்ளுகிறார்கள். மேலும், முன் நாட் களைப்போல் சரட்டு அட்டிகை ஒரு நாசூக்கான நகையாகக் கரு தப் படுவதில்லை. ஜிலேபி மோஸ்தர் என்றும், தளுக்குகள் அடித் தும், கம்பிகள் நெருக்கிப் பின்னப் பட்டும், இன்னும் பல தினுசு களிலும் அட்டிகையைச் செய்து கொள்ளுகிறார்கள். பல அழகிய வர்ணங்களில் செயற்கைக் கற்கள் மலிவான விலைக்கு அகப்படும் இந்த நாட்களில், இந்தக் கற்களை வாங்கிக் கல் அட்டிகைகளையும் செய்து கொள்ளுகிறார்கள். கல் அட்டிகைகளையும் முன்நாட் களைப்போல் நெருங்கக் கோத்துச் செய்துகொள்ளுவதில்லை.

இவ்விதம் கோக்கப்பட்ட சிவப்பு அட்டிகையை நவீன நாகரிகத்தில் முன்னேற்றம் அடைந்த ஒரு மாது 'சடைப்பூராணைக் கழுத்தில் அணிந்து கொண்டது போலிருக்கிறது என்று கூறிவிட்டாள். பூக்களின் இதழ்கள் மாதிரியிலும், கிராம்பு மாதிரியிலும், இன்னும் பல அழகிய தினுசுகளிலும் தங்கத்தில் உருசுகள் செய்து, இதில் கற்களைத் தனித்தனியே பதித்து அட்டிகைகளைச் செய்கிறார்கள். இந்த அட்டிகைகள், முன்காலத்திய அட்டிகைகளைப் போல் விரைப்பாக இல்லாமல், கழுத்துடன் இசைந்தாற்போலவே இருக்கின்றன. மேலும், இவைகள் தளர்ச்சியாக இருப்பதனால் பதக்கத்தின் அழகு வெளிக்குத் தெரியாவிட்டாலும், கழுத்துடன் இசைந்து தொங்கும் அட்டிகை பார்வைக்கு அழகாகவே தோன்றுகிறது.

## ஜிமிக்கி

இது ஒரு பழைய காலத்து நகை. அந்தக் காலத்திலும் இதை எப்பொழுதுமே, கம்மல், காப்பு, கொலுசு இவைகளை அணிந்து கொள்ளுவதைப்போல் அணிந்து கொண்டதாகத் தெரியவில்லை. சின்னக் குழந்தைகளுக்குக் காதில் அலங்காரமாக ஜிமிக்கியைப் போட்டுவைப்பார்கள். பிறகு கலியாணம், சீமந்தம் முதலிய விசேஷங்களின் போது ஒரு ஜோடிப்பு நகையுடன் இதுவும் உபயோகப்படுத்தப்படும். அதாவது, பெண்ணை மணையில் வைத்துப் பாடும்பொழுது பட்டம், சூட்டி, சந்திரப்பிரபை, சூரியப்பிரபை முதலி நகைகளினால் தலை அலங்காரம் செய்யும் வழக்கம் நம்மவருள் இன்னும் சகஜமாகவே வழங்கி வருகிறது. இதில் ஜிமிக்கியும், மாட்டலும் முக்கியமான அம்சங்களாகக் கருதப்படுகின்றன. தற்காலத்தில் முன்னைய ஜிமிக்கியைப் போலவே முத்துக்களினாலும், 'இனாமல்' பூசியும், கற்கள் இழைத்தும் செய்து, லோலக்குக்குப் பதிலாகப் போட்டுக் கொள்ளுகிறார்கள். பழைய வழக்கங்களில் ஒன்று கால சக்கிரத்தின் சுழற்சியின் பயனாகப் புதிய நாகரிகமாகக் கிளம்பி இருக்கிறது. நல்ல வயது வந்த பெண்மணிகள் கூட இதைப் போட்டுக் கொள்ளுகிறார்கள். இது ஓர் அழகிய நாசூக்கான ஆபரணமாகவே கருதப்படுகிறது.

## தங்க மாலைகள்

முத்துக்களும், வைரங்களும், பதித்த 'நெக்லெட்' தினுசுகளில் தங்கத்தில் செய்து விற்கிறார்கள். இலைகள், காய் கொத்துக்கள்,

பூக்கள், இன்னும் பல அழகிய வடிவங்கள் மாதிரிகளில் தங்கத்தில் சிறிய சிறிய தொங்கட்டங்கள் செய்து மெல்லிய தங்கச் சங்கிலியில் இசைத்து விடுகிறார்கள். குழந்தைகள் கழுத்தில் போட இது மிகவும் பார்வையாகவும் நன்றாகவும் இருக்கிறது; கழுத்து நிறைந்தும் இருக்கிறது. இரண்டு பவுன்களிலிருந்து எட்டுப்பவுன்கள் வரையில் இதைக் கெட்டியாகவோ அல்லது மெல்லியதாகவோ அவர் அவர்கள் இஷ்டம்போலச், செய்யலாம். நடுவில் சிறிய சிவப்பு, நீலம், பச்சை முதலிய கற்கள் பதித்த நாகுக்கான தொங்கட்டம் ஒன்றும் கோக்கிறார்கள். மூன்று வயதிலிருந்து பத்துப் பன்னிரண்டு வயதிற்கு உட்பட்ட குழந்தைகளுக்குப் போடுவதற்கு இது மிகவும் பொருத்தமான நகை என்று சொல்லலாம். பெரியவர்கள் அணிந்து கொண்டால் இந்த நகை சோபித்துக் காட்டுவதில்லை.

---

## துருவை எடுத்தல்

இரும்பு அல்லது எஃகு சாமான்களில் துரு ஏறுகிறதல்லவா? துருப் பிடித்த பாகங்களில் கொஞ்சம் எண்ணெயைத்தடவி அப்படியே ஒருநாள் வைத்திருக்கவேண்டும். மறுநாள் ஒருகெட்டித்துண்டினால் (கார்க்கினால்) நன்றாகத் தேய்த்து மெழுகில் நனைத்த ஒரு துணியினால் செவ்வையாகத் துடைத்தால் துரு இருந்த இடம் தெரியாமற் போய்விடும். சாமானும் நல்ல பளபளப்பை அடையும்.




## கவிதைப் பரிசு

சென்றமாதம், சிறந்த கவிதையொன்றுக்கு ஒரு தங்கப் பதக்கம் கொடுப்பதாக எழுதியிருந்ததை நேயர்கள் கவனித்திருக்கக்கூடுமென்றெண்ணுகிறோம். 'கலைமகள்' பத்திரிகையின்பால் அபிமானம் உடைய நண்பர்களும் தமிழன்பர்களும் இதனைப் பெரிதும் ஆதரிக்கிறார்கள்.

கவிதை எழுதுவதற்குரிய கருத்துக்கள்.

(1) இயற்கைக் காட்சி
(2) ஒரு முக்கியமான பண்டிகை
(3) ஒரு சரித்திர நிகழ்ச்சி
(4) ஒரு சிறுகதை
(5) உள்ள உணர்ச்சியைப் புலப்படுத்தும் விஷயம்
(6) அநுபவத்தால் அறிந்த ஓர் உண்மை.

மேலேகண்ட விஷயங்களுள் ஏதேனும் ஒன்றைக் குறித்து எளியநடையில் எழுதவேண்டும். கவிதை 10 வரிகளுக்குக் குறையாமலும் 60 வரிகளுக்கு மேற்படாமலும் இருக்கவேண்டும். பொருட்சிறப்பே முக்கியமாகக் கருதப்படும். உணர்ச்சிகளை நன்றாக வெளியிடுவனவும் எளியநடையில் அழகாக அமைந்துள்ளனவுமாகிய கவிதைகளை எழுதும் பழக்கமுடையவர்கள் தங்கள் ஆற்றலைக் கலைமகள் வாயிலாக வெளியிட வேண்டுமென்று விரும்புகிறோம்.

கவிதைகள் டிஸம்பர்மாதம் 15-ஆம் தேதிக்குள் கலைமகள் காரியாலயத்துக்கு வந்து சேரவேண்டும். சிறந்த கவிதைக்குரிய பரிசாக ஒரு 'தங்கப்பதக்கம்' அளிக்கப்படும்.

பரிசுபெறாத கவிதைகளுள் வெளியிடக்கூடியவற்றை வெளியிடும் உரிமை ஆசிரியருக்கு உண்டு.

கவிதைகளைக் கலைமகள் ஆசிரியர்களும் வேறுசில அறிஞர்களும் கூர்ந்து கவனித்து அவற்றுட் பரிசுக்குரியதைத் தேர்ந்தெடுப்பார்கள்.




**வா**சகக்கோவை: [எழுதியவர், ஸ்ரீ. அ. தேவசகாயம் அவர்கள், சேலம்; விலை அணா 8.]

சிறியோரும் பெரியோரும் சில மாதங்களில் தமிழை வாசிக்கவும் எழுதவும் கற்றுக்கொள்ள உதவும் ஒரு நூதன முறையில் பாலர் வகுப்புக்கென்று ஆசிரியர் இதனை வெளியிட்டுள்ளார். இது சுவரில் மாட்டும் தேதிப்படம் போன்றதாகும். எழுத்துக்கள் பெரிய வடிவில் திகழ்கின்றன. தமிழ் எழுத்துக்களை ட-வில் தொடங்கும் எழுத்துக்களென்றும், ர-வில் தொடங்கும் எழுத்துக்கள் என்றும் உருண்டை எழுத்துக்கள் என்றும் மூன்றுபகுதியாகப் பிரித்துக்கொண்டு எடுத்த எடுப்பிலேயே சொற்களைப் புகுத்தியிருப்பது நல்ல முறையை இவர் பின்பற்றியிருப்பதைக் காட்டுகின்றது. உயிர்மெய்யெழுத்துக்களைப் போதிக்குமிடத்திலும் இவர் ஒரு முறையைக் கொண்டுள்ளார். உதாரணமாக, ஆகாரமேறிய உயிர்மெய்களைப் புகட்டுமிடத்தில் ணா றா னா என்பவற்றை அடியிற்காட்டிக் கால்பெறும் மற்றவற்றை முதலிலே காட்டியுள்ளார். ஒகர ஓகாரமேறிய உயிர்மெய்களைப் போதிக்குமிடத்தில் இம் முறை சிறிது தவறியிருக்கிறது. கூ என்ற எழுத்தை அந்தப் பாடத்தின் ஈற்றில் காட்டியிருக்கலாம். உயிர்மெய்களில் ஒவ்வோருயிரேறிய உயிர்மெய்யெழுத்து வரிசையையும் வேறுவர்ணத்திலாவது தனியே ஒரு கோட்டால் பிரித்தாவது காட்டியிருப்பின் சிறுவர்களுக்கு இப்புத்தகம் இன்னும் தெளிவாக இருக்குமென்று எண்ணுகிறேன். ஜ, ஸ, ஷ முதலிய வடவெழுத்துக்கள் உயிர்மெய்யாக வழங்கும் சமயங்களில்பெறும் மாறுதல்களை விரிவாகக்காட்டியிருப்பின் நன்றாக இருக்கும் இதிற் காணப்பெறும் சொற்கள் முதலியன எளியனவாகவே இருக்கின்றன. பொதுவாக, தமிழைக்கற்றுக்கொள்ள விரும்புகின்றவர்களுக்கு இது தகுந்ததாகவே அமைந்திருக்கின்றது.

அப்பூதியடிகள்: [எழுதியவர்: ஸ்ரீமான் என். விஸ்வநாத ஐயர் அவர்கள், கிடைக்குமிடம்; என். விஸ்வநாதன், ஸ்ரீஸ்கந்த பவனம், தெற்கு அலங்கம், தஞ்சாவூர். விலை அணா 8.]

அறுபத்துமூன்றுநாயன்மார்களுள் ஒருவராகிய அப்பூதியடிகள் என்ற பிராம்மண சிரேஷ்டர் திருநாவுக்கரசு சுவாமிகளை வழிபட்டுச் சிறப்படைந்த

வரலாற்றை நாடகரூபமாக விளக்குவது இந்நூல்; இந்நூலில் இடையிடையே தேவாரப் பாசுரங்களும் வேறு பாட்டுக்களும் இடம்பெற்றுள்ளன. தீக்ஷிதர், காக்ஷி முதலிய சொற்கள் மறுபதிப்பில் திருத்தம் பெறின் நலமாயிருக்கும்.

ஞான இரகசிய சிந்தாமணி: [எழுதியவர்: ஸ்ரீமான் ராமசுப்பிரமணிய நாவலரவர்கள்; விலை அணு 8.]

வேதாந்தத்தைக் கற்கப்புகுவோருக்கு இல்நூல் ஆரம்பப்பாடமாக இருத்தற்கேற்றவாறு எளிய வசனநடையில் அமைந்திருக்கின்றது. ஆன்மா ஜீவாத்ம பரமாத்ம சம்பந்தம், மாயை, பூர்வவாசனை, ஆன்மவிசாரணை, ஆசை அகங்காரம் நிஷ்காமகர்மம், வைராக்யம், ஸ்தூல சூட்சும காரண சரீரங்கள், தாபத்திரயம் முதலிய விஷயங்கள் இதில் சுருக்கமாகவும் விளக்கமாகவும் கூறப்படுகின்றன. தாயுமானவர் பாடல், ஞானவாசிட்டம், கைவல்யம், விவேகசூடாமணி, திருமந்திரம், பட்டினத்தார் பாடல் முதலிய நூல்களிலிருந்து தக்க மேற்கோள் காட்டியிருப்பது இந்நூலுக்கு ஒரு தனிச் சிறப்பைத் தருகின்றது.

நாடகத்தமிழ்:—[ஆக்கியோர்: ராவ்பஹதூர் ப. சம்பந்தமுதலியாரவர்கள், பி.ஏ., பி.எல்.; புத்தகம் வேண்டுவோர் ஆசிரியருக்கு எழுதிப் பெற்றுக் கொள்ளலாம்; விலை அணு 12.]

ஸ்ரீமான் ப. சம்பந்தமுதலியாரை அறியாத தமிழரே இல்லை என்று கூறுவது மிகையாகாது. நாடகத்தமிழ் விஷயமாக இவர் கணக்கற்ற பல நாடகங்களை எழுதி வெளியிட்டுத் தொண்டாற்றி வருவது நேயர்களறிந்த விஷயமேயாகும். நாடகங்கள் எழுதுவதில்மட்டுமென்றி அவற்றை நடித்துக் காட்டுவதிலும் இவர் சிறந்து விளங்குகின்றார். இத்தகைய பெரியார் தமது நீண்டகால அனுபவத்தைக்கொண்டும் இக்காலத்தே கிடைத்துள்ள சிலப்பதிகாரம் முதலிய பழைய தமிழ்நூல்களின் ஆதாரத்தைக்கொண்டும் நாடகத்தமிழ் என்னும் இந்நூலை தமிழ்நாட்டிற்கு உபகரித்துள்ளார். சில காலத்துக்கு முன்பு சென்னை ஸர்வகலாசாலையின் சார்பாக இவர் உபந்யசித்த மூன்று உபந்நியாசங்களே விரிவாக இந்நூலாக வெளிப்போந்துள்ளன. பழையகாலத்திருந்த தமிழ்ச் கூத்துக்களின் இலக்கணங்களையும் தமிழ்நாடக வரலாற்றையும் தெரிந்துகொள்ள விரும்புவார்க்கு இது பயன்படும்.

பாராயணத் திருப்புகழ்:—[கிடைக்குமிடம்: லக்ஷ்மீவிலாச புத்தகசாலை, திருவல்லிக்கேணி, சென்னை; விலை ரூ. 1.]

அருணகிரிநாத சுவாமிகள் முருகப் பெருமான் விஷயமாக அருள் கனிந்துபாடிய திருப்புகழில் 235 செய்யுட்கள் சந்தக்குழிப்புடன் இந்நூலில் அமைந்துள்ளன. செய்யுட்கள் இயன்றமட்டில் சந்திபிரித்து அழகிய தாளில் நல்ல பதிப்பாக வெளியிடப்பட்டுள்ளன. மூன்று சித்திரப்படங்கள் இந்நூலை அழகுபடுத்துகின்றன.



சந்திரன்

(407-ஆம் பக்கம் பார்க்க)




# கனம் கிருஷ்ணையர்

மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர்

---

## 2

கனம் கிருஷ்ணையருடைய திறமை தஞ்சாவூரில் அக்காலத்திலிருந்த வித்துவான்களால் மிகவும் கொண்டாடப்பட்டது. இவர் ராஜஸம்மானங்கள் பெற்றுத் தஞ்சையிலிருந்து தம் ஊருக்குச் சென்று சிலதினம் இருந்தார். பிறகு கபிஸ்தலம் வந்து இராமபத்திர மூப்பனாரிடம் தம்முடைய நன்றியறிவைப் புலப்படுத்தினார்.

அக்காலத்தில் இவர் தமிழில் கீர்த்தனைகள் இயற்றும் பயிற்சியை உடையவராக இருந்தார். தம்முடைய தமையனாராகிய சுப்பராமையர் கீர்த்தனைகள் இயற்றிப் பாடுவதைக் கவனித்தும் அவற்றைத் தாம் பாடி மகிழ்ந்தும் வந்ததனால் இசைக்குரிய ஸாஹித்தியசக்தி இவர்பால் வளர்ந்துவந்தது. முதலில் தாம் பிறந்த ஊராகிய திருக்குன்றத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீசௌந்தர ராஜப்பெருமாள்மீது சில கீர்த்தனங்கள் பாடிப்பழகினார். நாளடைவில் இப்பழக்கம் விருத்தியாயிற்று; மனத்தில் சந்தோஷம் உண்டாகும் பொழுதெல்லாம் புதிய புதிய கீர்த்தனங்களை இயற்றிப் பாடிவந்தார்.

கபிஸ்தலத்துக்கு இவர் சென்றபோது இராமபத்திர மூப்பனார் இவரை மிகவும் உபசரித்து மகிழ்வித்தார். சில்காலம் அவ்வூரில் இருக்கும்படி அவர் கேட்டுக் கொண்டார். அவருடைய விருப்பத்தின்படியே இவர் சில்காலம் அங்கே இருந்துவரலானார்.

அக்காலத்தில் மூப்பனார் கிருஷ்ணையருடைய ஸங்கீதத்தின் மேன்மையையும் அதனால் விளையும் இன்பத்தையும் உணர்ந்தார். அவ்விருவருக்கும் உள்ள அன்பு முதிர்ந்தது. அப்பொழுது கிருஷ்ணையர் மூப்பனார்மீது சிலகீர்த்தனங்கள் பாடி

னர்; அவை தோடிராகத்திலுள்ள "அன்னமேநானென்ன செய்வேன்", "எல்லா அருமையையும் எல்லாப் பெருமையையும்" என்பவையும், பைரவியிலுள்ள "மாதேஅவர் செய்த வஞ்சனை" என்பது முதலியனவுமாம்.

இவர் இயற்றிய கீர்த்தனங்கள் அந்த அந்த ராகத்தின் மூர்ச்சைகளை எடுத்துக்காட்டுவதற்கு ஏற்றபடி அமைந்திருக்கும். கனமார்க்கத்தில் அக்கீர்த்தனங்களைப் பாடும்பொழுது அந்தத் தொனியில் கம்பீரமும் அதற்கேற்ற பத அமைப்புக்களும் மிக அழகாகப் பொருந்தியிருக்கும். கீர்த்தனங்களெல்லாம் எளிய நடையிலேயே அமைந்தவை. இவர் பெரும்பாலும் உலகவழக்குச் சொற்களை அமைத்துப் பாடியுள்ளார். இயற்றமிழிலக்கண அமைதியைக் காட்டிலும் ஸங்கீதப்போக்குக்குத் தக்கபடி அமைப்பதிலேயே இவருடைய கருத்து நாடியது. இயற்றமிழ்த்துறையில் இவருடைய கவனம் செல்லவில்லை. இவருடைய கீர்த்தனங்கள் ராகபாவங்களுக்கு இலக்கியங்களாகச் சிறந்து விளங்கினமையால் அக்காலத்தில் ஸங்கீதமறிந்த பெரும்பாலோர் அவற்றை மனனம் பண்ணிப் பாடிவந்தார்கள். இவர் இயற்றிய கீர்த்தனங்களிற் பல, சிருங்கார ரஸத்தை மிகுதியாகக் கொண்டு இருக்கும். ஒவ்வொன்றன் இறுதியிலும் முருகக்கடவுளின் திருநாமத்தை எவ்வகையாகவேனும் அமைப்பது இவருடைய பெரும்பான்மையான வழக்கம். இவருடைய தமையனாராகிய சுப்பராமையரும் இவ்வழக்கத்தை யுடையவர்.

கபிஸ்தலத்தில் இவர் இருந்தகாலத்தில் அங்கே இவருடைய தமையன்மார்களாகிய சுப்பராமையரும் சுந்தரையரும் அடிக்கடி வந்து செல்வார்கள். சுப்பராமையர் இராமபத்திர மூப்பனாருடைய உயர்குணங்களையும் உபகாரசிந்தையையும் அருமையறியுந் தன்மையையும் அறிந்து மகிழ்ந்து அவர்மீது ஒரு [1]குறவஞ்சி நாடகம் இயற்றி அரங்கேற்றினர். மூப்பனார் அவருக்குத் தக்க ஸம்மானங்களைச் செய்தார். பிறகு அவர் சுந்தரையருடன் தஞ்சைக்குச் சென்றுவிட்டார்.

மூப்பனார் அடிக்கடி கிருஷ்ணையருக்குப் பலவிதமான மரியாதைகளைச் செய்துவந்தார். ஒருமுறை தங்க அரைஞாணும் வைரக் கடுக்கனும் செய்வித்து அணிந்தார். இவர் அவர்மீது சில பதங்களை இயற்றி அணிந்தார்.

---

1. இதிற் சிலபகுதிகளை நான் கேட்டிருக்கிறேன். இப்பொழுது இது கிடைக்கவில்லை.

இப்படி இவர் அங்கே இருந்தகாலத்தில் தஞ்சை மகாராஷ்டிர மன்னர் வம்சத்தைச்சேர்ந்த அமரஸிம்மரென்பவர் திருவிடைமருதூரிலிருந்து வந்தார். கனம் கிருஷ்ணையர் தஞ்சாவூரில் இருந்த காலத்தில் அறிந்து பழகியவர் அவர். அவர் இவரை வரவேண்டுமென்று தக்கவர்கள் மூலம் சொல்லியனுப்பினர்; இருக்கும் அவரைப்பார்க்கவேண்டுமென்ற விருப்பம் இருந்தது. அதனால் இராமபத்திர மூப்பனரிடம் விடைபெற்றுக் கொண்டு இவர் திருவிடைமருதூர் சென்றார்.

இவருடைய வரவினால் அமரஸிம்மர் மிக்க சந்தோஷத்தை அடைந்தார். அவர் ஸங்கீதப்பயிற்சியும் அதில் அளவற்ற அன்பும் உடையவர். சிவபக்தி மிக்கவர். திருவிடைமருதூர் ஸ்ரீ மகாலிங்க மூர்த்திக்கு [1]வெள்ளிரதமும் மஹாரதத்தின் முன்பு சட்டும் நான்கு குதிரையுருவங்களும் செய்வித்தளித்தவர்; அவர்செய்த பணிவிடைகள் வேறு பலவுண்டு.

கனம் கிருஷ்ணையருடைய ஸங்கீதத்தைக் கேட்டு அதன் சுவையை நன்றாக அநுபவித்த அவருக்கு, 'இந்த வித்துவானை இங்கேயே இருக்கும்படி செய்யவேண்டும்' என்ற எண்ணம் உண்டாயிற்று. கிருஷ்ணையரைப் பலவகையாக உபசரித்துத் தம் விருப்பத்தை அறிவித்தார். அருமையறிபவர்களைக் கண்டால் வித்துவான்களுடைய அன்பு பெருகுவதற்குத் தடையேது? ஸ்ரீ மகாலிங்கமூர்த்தியின் தரிசனமும் உபசாரங்களும் கனம் கிருஷ்ணையரை அங்கேயே இருக்கும்படி தூண்டின.

நாள்தோறும் அமரஸிம்மருடைய சமுகத்தில் இருந்து உரியகாலங்களில் ஸல்லாபம் செய்வதிலும் தம்முடைய ஸங்கீதத் திறமையைக் காட்டி மகிழ்வித்தலினும் கனம் கிருஷ்ணையர் காலங் கழித்துக்கொண்டு சுகமாக இருந்துவந்தார். 'இவரால் தமிழ் நாட்டில் கனமார்க்கம் நன்றாகத் தழைத்தோங்கும்' என்று எண்ணிய அமரஸிம்மர் இவருடைய மனங்கோணாமல் நடந்து வரும்படி தமது ஏவலாளர்களுக்கெல்லாம் கட்டளையிட்டிருந்தார்.

அக்காலத்தில் அமரஸிம்மரிடம் ஆஸ்தான வித்துவானாக ஸ்ரீராமதாஸர் என்னும் ஒருபெரியவர் இருந்துவந்தார். அவர் ஹிந்துஸ்தான ஸங்கீதத்தில் மிகச் சிறந்த பயிற்சியுடையவர்;

---

1. அந்த வெள்ளி ரதமும் குதிரையுருவங்களும் இப்பொழுதும் உள்ளன.

நிராசை கொண்ட உள்ளத்தினர்; அமரஸிம்மராலே வலிந்து அழைத்து உபசரித்துப் பாதுகாக்கப்பெற்ற பெருமையுடையவர். நந்தனர் சரித்திரக்கீர்த்தனத்தை இயற்றிய ஸ்ரீகோபால கிருஷ்ண பாரதியாருடைய முதல்குரு அவரே. கனம் கிருஷ்ணையர் திருவிடைமருதூரில் இருந்த காலத்தில் கோபாலகிருஷ்ண பாரதியார் ராமதாஸரிடம் ஹிந்துஸ்தான மார்க்கத்தை அப்பியாஸம் செய்துவந்தார். அவர் கிருஷ்ணையரிடமும் அவ்வப்போது கர்நாடக ஸங்கீதத்தையும் சில கீர்த்தனங்களையும் கற்றுக்கொண்டார். இச் செய்தியை அந்தப்பாரதியாரே என்னிடம் கூறியதுண்டு.

அமரஸிம்மர்மீது கனம் கிருஷ்ணையர் பாடிய கீர்த்தனங்கள் சில உண்டு. அவற்றுள் ஒரு கீர்த்தனத்தின் ஒரு பகுதியாகிய "இந்திரசபை மாடியில்" என்பதுமட்டும் இப்பொழுது என் ஞாபகத்தில் இருக்கிறது. ஸ்ரீ மகாலிங்க மூர்த்தியின்மீது ஆனந்தபைரவிராகத்தில் [1] "மருதப்பா" என ஒரு கீர்த்தனமும் வேறு சிலகீர்த்தனங்களும் இவர் இயற்றினர்.

இடையிடையே தம்முடைய ஊராகிய திருக்குன்றத்திற்கும் தம்முடைய உறவினர்கள் இருக்கும் ஊர்களாகிய கும்பகோணம், பொன்வேய்ந்த நல்லூர், உடையாளூர், திருப்பழனம், கார்குடி, திருவையாறு, மன்னர்குடி, திருப்பூந்துருத்தி, ஸ்வாமிமலை, திருச்சேறை, உத்தமதானபுரம் முதலிய இடங்களுக்கும் இவர் சென்று வருவதுண்டு. அன்றியும் இவரிடத்தில் சிறந்த அன்பு பூண்ட பிரபுக்கள் பலர் இவரைத் தங்கள் தங்கள் ஊர்களுக்கு வந்து செல்லவேண்டுமென்று வற்புறுத்தி அழைக்கும்பொழுது அங்கங்கே சென்று தம்முடைய பாட்டால் அவர்களை மகிழ்வித்து அவர்களுடைய உபசாரங்களைப் பெற்று வருவார். அப்பொழுது அப்பொழுது அவ்வவ்விடங்களிலுள்ள ஆலயங்களில் எழுந்தருளிய மூர்த்திகளின் விஷயமாகவும் தம்மை ஆதரித்த உபகாரிகளின் விஷயமாகவும் இவர் பாடிய கீர்த்தனங்கள் பல.

திருக்குன்றத்தில் கனம் கிருஷ்ணையருக்கும் அவருடைய சகோதரர்களுக்குமாக, தெற்கு வீதியில் வடக்கு நோக்கிய ஐந்து வீடுகள் உண்டு. இவர்கள் திருக்குன்றத்தில் ஒன்று சேரும் போது மாலைக்காலத்தில் வீதியில் விசிபலகையில் உட்கார்ந்து

1. கனம் கிருஷ்ணையருடைய தமையனராகிய சுப்பராமையர் இயற்றிய "முருகையனேடன் னிருகையனே" என்பதும் ஆனை ஐயா என்பவர்கள் இயற்றிய "ஐயாரு மிக ஒய்யார" என்பதும் இந்த மெட்டில் அமைந்தவை.

பாடிப் பொழுது போக்குவார்கள். அப்பொழுது சுப்பராமையர் கனம் கிருஷ்ணையரை ஏதாவது பாடும்படி சொல்வார். அவர் பாடிய கீர்த்தனங்களை இவர் பாடுவதோடு சௌந்தரராஜப் பெருமாள்மீது புதிய கீர்த்தனங்களையும் இயற்றிப் பாடுவார். அங்ஙனம் இவர் இயற்றிப்பாடியவை, "இன்னமன மிரக்கம் வல்லையோ" (பைரவி), "உன்பதமே ஸதாகதி" (தேசிக தோடி), "என்னத்துச்கு இந்த" (கமாசு), "செருக்கிமயக்கமீறி" (தர்பார்), "நல்லநல்ல நிலவு பறிபோகுதே" (சங்கராபரணம்) "படியளக்கும் பெருமானென்று" (பைரவி), "சௌந்தரராஜப் பெருமாளே உன்திருத்தாள் பணிந்தேன்" (தன்யாஸி) முதலியனவாம்; அவற்றுள் ஒன்று வருமாறு:

(ராகம் : பைரவி. தாளம் : ஆதி.)

பல்லவி

இன்னமனம் இரக்கம் வல்லையோ
ஏக நாத மகப்பிரபுவே.

அநுபல்லவி

பன்னக சயனனே பரந்தாமனே ஸ்ரீ
பரம புருஷனே அரிஹரி சௌந்தர ராஜனே (இன்னமனம்)

சரணங்கள்

1. பக்தபரா தீனனென்று விருதுபெற்ற வயனமென்ன
பாரமா உனக்கித பாரமா
முக்திதர நீயென்னுள்ளே மூர்த்திகர மாய்நிறைந்த
மூர்த்தியே உனக்கப கீர்த்தியே சூத்ரதாரி (இன்னமனம்)

2. உருக்குக் கம்பத்தி லிருந்துவந்து பிரகலாதனைக் காப்பாற்றின
ஓராமா உனக்கிந்தப் பேராமா
பெருக்கமாயுன் பாதமன்றிப் பேரின்பமும் வேறுமுண்டோ
பெருமானே என் பெருமானே அரிஹரி[1] (இன்னமனம்)

இவர் ஒருமுறை உடையாளூரென்னும் ஊருக்குச் சென்றிருந்தார். அங்கே செல்வர்களாகிய சிலபந்துக்கள் இருந்தார்கள். அருணாசலகவி ராமாயணக்கீர்த்தனத்தைப் பாடிப் பிரஸங்கம் செய்து யாவரையும் மகிழ்வித்து அங்கங்கே பரிசுபெற்றுவருபவரும் நாகூரென்னும் ஊரினருமாகிய ஒருஸங்கீதவித்துவான் அங்கே நாள்தோறும் பிரஸங்கம் செய்துகொண்டு இருந்தார். இவர் அவ்வூருக்கு வந்திருத்தலையறிந்து அவர் இவர்பால் வந்து மிகவும் பயபக்தியோடு இவரை நமஸ்கரித்து நின்றார். இவர் அவரை இருக்கச் செய்து இன்னாரென்று தெரிந்துகொண்ட பிறகு சில கீர்த்தனங்

1. இதன் மூன்றாஞ் சரணம் கிடைக்கவில்லை.

களைப் பாடச்சொன்னார். இங்கிருக்குமுன் பாடுவதற்கு அவர் அஞ்சினார். பின்பு சிலவற்றைப்பாடினார். அப்பால் அவரும் அங்கே இருந்த பிறரும் இவரை வேண்டிக்கொள்ள இவர், இராமாயண கீர்த்தனத்திலுள்ள சங்கராபரணத்திலமைந்த "தொடுத்தானே சரதாரை" என்பதையும், பியாகடாராகத்திலமைந்த "சொன்னான் ஸ்ரீராமன்" என்பதையும் பாடிக்காட்டினார். அவற்றைக் கேட்ட யாவரும் மனமகிழ்ந்தனர்.

அப்பொழுது அந்தக் கிராம தேவதையாகிய செல்ல மாகாளியென்னும் தெய்வத்துக்கு உத்ஸவமாதலின் அந்தத் தேவதை திருவீதியில் வந்தது; அக்காலத்தில் அந்தக்கிராமத்தாருடைய விருப்பத்திற்கு இணங்கிக் கல்யாணி ராகத்தில் "வல்லமையுன் வல்லமையே" என ஒரு கீர்த்தனத்தை இவர் பாடினார். அது வருமாறு:

(ராகம் : கல்யாணி. தாளம் : ஆதி)

பல்லவி

வல்லமை யுன் வல்லமையே
சொல்லஎவர்க் குந்தரமா?

அநுபல்லவி

எல்லாம் உன்செயலே வேறில்லை
[1]பூபதிராஜ புரந்தனில்வாழும்
செல்ல மாகாளி அம்மையே தேவிபாஞ்சோதி (வல்லமை)

சரணங்கள்

1. பஞ்சமியே பார்வதியே பாவனி பராசக்தி
கஞ்சமலர்ப் பொற்பாதத்தைக் கண்டேன்குறை யொன்றுமில்லை
தஞ்சமென்ற பேர்களையுஞ் சகலரையுங் காப்பாற்றும்
நஞ்சணிகண் டத்தியே நாராயணி பரிபூரணியே (வல்லமை)

2. அம்மணியே சூலினி கபாலினி ஆநந்தமயீ
நின்மகிமை யேமகிமை நித்தியகல் யாணியே
என்மனதுன் பதியாக எப்போதும் அருளிச்செய்வாய்
உன்மதமா தங்கியே உத்தண்டியேசுக சாமளையே[2] (வல்லமை)

ஒருசமயம் திருச்சேறைக்குப் போயிருந்தபோது அங்கே எழுந்தருளியுள்ள ஸ்ரீஸாரநாதப்பெருமாளது ஆலயதருமகருத்தாவாகிய [3]இஞ்சிக்கொல்லை வேங்கடராமையரென்பவர் இவரை மிகவும் உபசரித்துப் பாராட்டி இவருக்கு ஸ்ரீஸாரநாதருடைய தரிசனம் செய்வித்தார். அப்பொழுது இவர் உள்ளங்குளிர்ந்து

1. உடையாளூரிலுள்ள ஒரு பகுதி.
2. இதன் 3-ஆம் சரணம் கிடைக்கவில்லை.
3. இஞ்சிக் கொல்லை : திருச்சேறைக்கு அருகேயுள்ள ஓரூர்.

சில கீர்த்தனங்கள் இயற்றிப்பாடினர். பைரவிராகத்தில் "முன்னழகும் பின்னழகும்" எனவரும் கீர்த்தனத்தில் முற்கூறிய வேங்கடராமையரைக் குறித்து,

"முன்னேவந்து நின்று எங்கள் வேங்கடராமனைக் காக்கும்
முகுந்தனடி எனக்கவர் சொந்தனடி"

எனப்பாடியிருக்கிறார். அன்றியும் அந்தக் கீர்த்தனத்திலும், கல்யாணிராகத்திலுள்ள "பாரஸகலமும்" என்னும் கீர்த்தனத்திலும் அத்தலத்திற்குரிய பஞ்சஸாரமென்று சொல்லப்படும் ஸாரநாதர், ஸாரநாயகி, ஸார க்ஷேத்திரம், ஸ்ார புஷ்கரிணி, ஸார விமானம் என்னும் பெயர்களை அமைத்திருக்கின்றார்.

இங்ஙனமே, மன்னார்குடிக்குப் போயிருந்த காலங்களில் ஸ்ரீராஜகோபாலப்பெருமாள்மீது இவர்பாடிய கீர்த்தனங்கள், "என்னமோ வகையாய் வருகுதே மானே" (கமாசு), "மன்னனார் வலைவீசி மயக்கஞ் செய்தாரோ" (தோடி), "மன்னனா ரொயிலும் வரிசையு மென்சொல்வேன்" (தன்யாஸி) முதலியனவாம்.

ஒருசமயம், இவருடைய உறவினர்கள் இருந்ததும் அகண்ட காவேரியின் தென்கரையிலுள்ளதுமாகிய கிருஷ்ணராஜபுரமென்னும் ஊருக்குச் சென்றிருந்தபோது அங்குள்ள சிவாலயத்துக்குப் போய்த் தரிசனம் செய்தார்; அப்பொழுது அந்தக் கோயிலின் தர்மகர்த்தாவாக இருந்த திருக்கண்மாலீசுவர ஐயரென்பவரும் பிறரும் கேட்டுக்கொள்ள, அங்கே எழுந்தருளியுள்ள ஸ்ரீமதுகர வேணியம்பிகை விஷயமாகத் தோடி ராகத்தில் [1]"திருக்கண்மாலீச்வருக் குகந்த தேவியே" என்னும் முதலையுடைய ஒரு கீர்த்தனத்தை இயற்றிப் பாடினர்.

கும்பகோணத்திற்குப் போயிருந்த காலங்களில் அங்கேதிருக்கோயில்கொண்டெழுந்தருளியுள்ள ஸ்ரீ ஆதிகும்பேசர், மங்களாம்பிகை, சார்ங்கபாணிப்பெருமாள், சக்கரபாணிப்பெருமாள்முதலிய மூர்த்திகளின்மீது பாடிய கீர்த்தனங்கள் பல; "ஈச்வரிஜகதம்பா" என்னும் ஆனந்தபைரவி ராகத்திலமைந்த கீர்த்தனமொன்று மங்களாம்பிகை ஸ்துதியாக உள்ளது. ஒருமுறை பகற்பத்து உத்ஸவம் நடந்தபோது ஸ்ரீசக்கரபாணிப்பெருமாள் திருவுலாவைத் தரிசித்து மகிழ்ந்து தன்யாஸிராகத்தில் இவர்பாடிய "பகல்பத்துத்திருநாளில் சக்ரபாணியைப் பார்த்தேன்" என்னும் கீர்த்தனம் ஒன்று உண்டு. அக்காலத்தில் அவ்வூரில் த்ஸெளகம் சீனுவையங்கார் என்னும் பிரபல ஸங்கீதவித்துவானும், வாலிஸ் அப்புராயரது சமுக

1. திருக்கண்மாலீச்வரரென்பது அவ்வூர்ச்சிவபெருமான் திருநாமம்; அம்பிகைஸந்நிதி விசேஷமானது.

வித்துவானாகிய சங்கராபரணம் நரஸையரும் இருந்தார்கள். அவர்களோடு இவருக்குப் பழக்கம் உண்டு. ஆதலின் கும்பகோணம் செல்லுங்காலங்களிலெல்லாம் இவர் அவர்களுடன் ஸல்லாபம் செய்து வருவது வழக்கம்.

திருச்சிராப்பள்ளியிலுள்ள சில செல்வர்கள் இவரை வருவித்துச் சில்நாள் இருக்கச் செய்து உபசரித்து வந்தார்கள். இவருடைய கனமார்க்க ஸங்கீத அமுதத்தை நுகர்ந்து அப்பக்கங்களிலுள்ள வித்துவான்களும் பிரபுக்களும் இவர்பால் அபிமானம் பூண்டு பாராட்டி வந்தனர். அக்காலத்தில் இவர் திரிசிராமலை திருவானைக்கா ஸ்ரீரங்கம் முதலிய ஸ்தலங்களுக்குச் சென்று தரிசனம் செய்துவருவார். அவ்வக்காலங்களில் இவர் பாடிய சில கீர்த்தனங்கள் உண்டு. வைகுண்டஏகாதசியன்று ஸ்ரீரங்கம்சென்று ஸ்ரீரங்கநாதரைத் தரிசனம் செய்தபின்பு கமாசு ராகத்தில் "சொர்க்கவாசலேகாதசியில் ஸ்ரீரங்கராஜரைநான் சுந்தரமாய்ச் சேவித்தேன்" என்று ஒருகீர்த்தனம் இயற்றினார். "ரங்கமய மான எங்கள் ஸ்ரீரங்க ராஜருடன்" என்று காம்போதிராகத்திலுள்ள கீர்த்தனம் ஒன்றும் உண்டு.

இவற்றையன்றித் தம்முடைய வழிபடுதெய்வமாகிய முருகக் கடவுள்மீது இவர் பலகீர்த்தனங்கள் இயற்றியிருக்கிறார். பைரவி ராகத்திலுள்ள "வேலவரேயுமைத் தேடி" என்னும் பதம் இப்பொழுது பிரவலித்தமாக வழங்கிவருகிறது. ஸ்ரீராமபிரான்மீது சில கீர்த்தனங்கள் உள்ளன.

இவ்வாறு பல இடங்களுக்குச் சென்றுசென்று தம்முடைய ஸங்கீத ஆற்றலைக் காட்டிவந்தமையால் இவருடைய பெரும்புகழ் எங்கும் பரவியது. கனமார்க்கம் இத்தகையதென்பதை வித்துவான்களும் பிறரும் நன்கு அறிந்தனர். பேராற்றல் வாய்ந்தவரையல்லாமல் பிறர் அம்மார்க்கத்தில் பயிற்சிபெறல் இயலாதென்பதை அவர்கள் அறியுந்தோறும் கனம் கிருஷ்ணையருடைய மதிப்பு உயர்ந்துகொண்டேவந்தது. இவர்பாற் பொறாமையுள்ள சிலர் மறைவாக, "இவரது ஸங்கீதம் மிக அருமையானதோ! ஏதோ காட்டில் இருந்து கத்திக் கற்றுக்கொண்ட ஸங்கீதந்தானே; அந்தக் கத்தலினால் என்ன பிரயோசனம்?" என்று சொல்லிவந்தனர். இவருடைய ஸங்கீதத்தை நேரிற் கேட்டபிறகுதான் அவர்களுக்குக் கனமென்பது வெறுங்காட்டுக்கத்தலன்றென்பதும் மிக்க கம்பீரமும் அருமையுமுடைய வித்தையென்பதும் புலப்பட்டன. அப்பால் அவர்கள் தங்கள் எண்ணத்தைமறந்து இவர்பால் மதிப்புடையவர்களானார்கள்.




# வழியைப் பார்த்துப் போ

வித்துவான் ச. தண்டபாணி தேசிகர்

---

நம்மிடத்து எல்லையற்ற அன்புபூண்டவர்கள் பாட்டன் பாட்டி தாய் தந்தை ஆகிய இவர்களேயாவர். இவர்கள் தாங்கள் கொண்டுள்ள அன்பின் பெருக்கத்தைக் காட்டச் சமயம்பார்த் திருப்பார்கள். நாம் எங்கேயாவது அவசரமாகப்போக விரும்பி ஞல் கிடைத்த சமயத்தை வீணுக்கக் கூடாதென்று எண்ணி அன்பு கனிந்த முகத்தோடு குறுக்கிட்டு, "அப்பா! வழியைப் பார்த்துப் போடா" என்பார்கள். அதன்பொருள் 'உனக்கு எதிரில் வரும் சகுனத்தைப் பார்த்துப்போ' என்பதாம். ஆகவே மக்களுக்கு பின்வரும் நன்மை தீமைகளே முன்னமே எச்சரிப்பதில் சகுனம், உற்பாதம், கனவு என்ற மூன்றும் சிறந்தன என்பது அறியப் பெறும். எந்தத் தொழிலையும் தொடங்கும்போது சகுனம் பார்த்துத் தொடங்குதலே நம்நாட்டுப் பண்டைய வழக்கம். தற் கால நாகரிக உலகில் சகுனம் என்பது சோம்பேறிகள் காலக் கழிவிற்காகக் கொண்ட சாதனம்; அவர்கள் கூறுவதுபோல் நன்மை தீமைகள் நிகழ்ந்து விடுவதில்லை" என்று கூறப்பெறு கின்றது. ஆனாலும் முக்கால நாகரிகத்தையும் முழுதுணர்ந்த மூதறிஞர்களாகிய புலவர் பெருமக்களால் சகுனங்களும் அவற்றின் பயனும் அங்கங்கே அழகுபெறக் கூறப்பெற்றுள்ளன. தற் போதும் நிகழ்ச்சியையும் அதன் பயனையும் ஊன்றிப்பார்க்கும் உண்மையறிவாளிகள் இதன் உண்மையைச் சிறிதும் மறுக்கமாட் டார்கள். ஆதலால் இச்சகுனத்தைப்பற்றி யறிதல் அவசியமாகும். அடியேனது ஆசிரியப் பெருந்தகையார் மகாமகோபாத்தியாய ஐயரவர்கள் கண்டெடுத்த இலக்கியப்பொக்கிஷத்து இதுபற்றிய பொறுக்குமணிகள் சிலவற்றைச் சேர்த்துக்கோத்து அழகுபெறக் கலைமகளுக்கு அணிதல் மிகப்பொருந்துவ தொன்றும்.

## சகுனம் என்பது என்ன?

சகுனம் என்பது மக்களுக்கு வரும் நன்மை தீமைகளை முன்னர் அறிவிக்கும் அறிகுறியாம். இது மிருகம் பட்சி இவற்றின் நிகழ்ச்சியிலிருந்து அனுபவ முதிர்ச்சியாற் கண்டறிந்த உண்மைகளில் ஒன்று. சகுனம் என்றசொல் பறவையாலுண்டாவது எனப் பொருள் படும். ஆதலால் இச்சகுனம் பறவைகளின் செயலில் இருந்தே முன்னர் அறியப்பெற்றது என்பதும், பின்னரே விலங்குகளின் நிகழ்ச்சியிலிருந்து அறியப்பெற்றது என்பதும் விளங்குகின்றது. இவ்வுண்மையை அறிந்தே செந்தமிழ்வாணர்களும் 'புள்' என்ற பெயரான் இதனை யழைப்பர்.

## வகைகளும் பயனும்

தொல்காப்பியத்து, தண்டமிழ்நாட்டுப் பண்டையோர் போர் முறையைக்கூறும் புறத்திணையியலில் மாடுபிடிச்சண்டைக்குப் போகின்ற அரசன் 'அல்வாய்ப்புள்' என்னும் பறவையின் சகுனம்பார்த்துச் செல்லுதலும், பிடித்துக்கொண்டுபோன மாடுகளை மீட்கப் புறப்படுகின்ற அரசன் வழிப்போக்கர்களுடைய வாய்ச்சொல்லைக் கேட்டுப் புறப்படுதலும் வழக்கம் என்று குறிப்பிடப் பெறுகின்றது. இது 'பாக்கத்துவிரிச்சி' என்ற பெயரான் அதிற் கூறப்பெற்றுளது. புறப்பொருள் வேண்பாமாலையில் காரியென்னும் பறவை வழிவிலக்கினுல் போருக்குச் செல்லலாகாது எனக்குறிப்பிடப் பெற்றுள்ளது.

வீரர்கள், சண்டைக்குப் புறப்பட்டுக்கொண்டிருக்கிறுர்கள். அப்போது அயல்நின்ற பெண்ணெருத்தி 'குடக்கள்ளைக் கொண்டுவா' என்றுள். அதனல் வீரன் 'நமக்கு வெற்றிகிடைப்பது நிச்சயம்' எனத் தேறிப் போருக்குப் புறப்பட்டான் எனவும் கூறப்பெற்றுள்ளது. இதனல் கட்குடம் கொண்டு வருதல் நல்ல சகுனம் என்றும், கொண்டுவரும்படித் தூண்டுதல் நல்ல வாய்மொழி யென்றும் அறியக்கூடும்.

சிலப்பதிகாரத்தில், கோவலன் இடைச்சேரியிலிருந்து சிலம்பு விற்பதற்காகப் புறப்படுகின்றுன். அப்போது ஒருகாளை அவனை எதிர்த்து முட்டவந்தது. அது கெட்டசகுனம் என்பதை அவன் அறியவில்லை யாதலால், உயிருக்கே தீங்கு விளைந்தது. இதனல் மாடுமுட்டவருதல் தீச்சகுனம் என்று இடையர்கள் அறிந்திருந்தார்கள் என்பது உணர்த்தப் பெறுகின்றது.

பெருங்கதையில் உதயணன் தன்மனைவியாகிய வாசவதத்தைக்காகப் பூக்கொய்யக் காட்டிற்குச் சென்றுன். அவன் மந்திரியாகிய யூகி என்பவன் அரசன் நன்மையைக்கருதி அரண்மனை

முழுதும் தீமூட்டினான். காடுசென்ற அரசன் திரும்பினான். அப்போது அரசனுக்கு இடக்கண் ஆடியது; இடத்தோள் துடித்தது; சிலபறவைகள் ஒலித்தன. இவற்றைக்கண்டு அஞ்சிய அரசன் சாஸ்திரம் வல்லவர்களைக் கூப்பிட்டுக் கேட்டான். அவர்கள் "உம்முடைய ஆருயிர்க்காதலியாகிய வாசவதத்தை உயிரோடு இருக்கின்றாள். ஆனால் சிறிதுகாலம் உம்மைவிட்டுப் பிரிந்திருப்பள்" என்று பலன் கூறினார்கள். இவ்விடத்து வரும், "நிமித்தமும் சகுனமும் நயக்குணமின்மையும்" என்ற செய்யுட்பகுதியால் ஒரு சிறந்த உண்மை விளக்கப்பெறுகின்றது. சகுனமும் நிமித்தமும் ஒன்றே எனச் சில நூல்களிற் கூறப்பெறினும் பட்சியாலுண்டாவது சகுனம் என்றும் தன் உடல்பற்றி உண்டாவது நிமித்தம் என்றும் அறியக்கிடக்கின்றது. வடநூல்களிலும் இவ்வாறே சகுனமும் நிமித்தமும் வேறு பிரித்துக் கூறப்பெற்றுள்ளன. அரசனுக்கு வெற்றி யுண்டாகுமா? என்பதை உன்ன மென்னும் மரம் தளிர்த்தலைக்கொண்டு அறிந்துகொள்ளுதலும் வழக்கம்.

இவ்வாறே பல்லி கொட்டுதலும், காக்கைகரைதலும் நற்சகுனங்கள்எனத் திவ்விய பிரபந்தத்தும் பிறநூல்களிலும் கூறப்பெற்றுள்ளன.

கவியரசராகிய கம்பரும், "ஸ்ரீராமபிரானுக்குச் சீதாபிராட்டியாரை மணம் புரிவித்து ஊருக்குத் திரும்ப எண்ணிய தசரதர் தேர்மேல் ஏறினார்; அப்போது மயில் வலமாயிற்று; காகம் இடமாயிற்று; உடனே தசரதர் சாத்திரம் வல்லவனை அழைத்துக் கேட்க அவன் புள்ளின்வாய்ச் சொல்லுங்கேட்டு 'உமக்கு இப்பொழுதே தீமைவரும்; அதுவும் உடனே நன்றாய்விடும்' என அறிந்து கூறினான்" எனத் தீச்சகுனமும் அதன் பயனும் தோன்ற விளக்கினர்.

சாகுந்தல நாடகத்திலே, கண்ணுவர் தம்மகளாகிய சகுந்தலையைக் கணவன் வீட்டுக்குப்போக வழியனுப்புகிறார். அப்போது வழிகள் மங்களகரமாகவும் அநுகூலமான காற்றையுடையனவாகவும் இருக்கின்றன எனக் கூறுகின்றார். இதனால் அநுகூலமான காற்றடித்தல் நல்லசகுனம் என்றும், எதிர்காற்றில் போதலும் சுழல்காற்றில் போதலும் கூடாதென்றும் அறியலாகும்.

மிருச்சகடிகத்துக்கதாநாயகனான சாருதத்தன் தன் காமக்கிழத்தியான வசந்த சேனையைக் கொலைசெய்துவிட்டான் எனப் பொய்க்குற்றம் சாட்டப்படுகிறான். அந்த விசாரணைக்காக நியாய ஸ்தலத்துக்கு அழைக்கப்பெற்றுச் செல்லும்போது அவன், "வழியில் காகங்கள் பொறுக்கமுடியாத பெருங்கூச்சலிடுகின்றன; வற்

றிய மரத்திலிருந்து ஒருகாகம் சூரியனைப் பார்த்ததுபோல என்னைப் பார்த்துப் போபோ என ஏவுகிறது. நியாயஸ்தலத்தின் வாசுலிலோ கரும்பாம்பு ஒன்று வழியில் படுத்துக்கொண்டிருக்கிறது. தரை யீரமில்லாமலிருந்தும் கால் வழுக்குகிறது. கழுகுகளும் அண்டங்காக்கைகளும் கூச்சல்போட்டுக்கொண்டு பறக்கின்றன. ஆதலால் இவைகள் ஏதோ பெரிய துன்பம் எனக்கு விளையப் போகின்றது என்பதை அறிவிக்கின்றன" எனக்கூறுகின்றான். இதனால் பட்டமரத்திற் காகம் கரைதலும், வழியில் கரும்பாம்பு கிடத்தலும் முதலியவை தீச்சகுனங்கள் என்று அறியக்கிடக்கின்றது.

ஆங்கிலக் கவியரசராகிய ஷேக்ஸ்பியரும் தம் நாடகத்து, "ஜூலியஸ்ஸீஸர் இறந்தபிறகு காஷியஸ் என்பவன் மெஸாலாவைப்பார்த்து 'நாம் ஸார்டிஸிலிருந்து திரும்பிவரும்போது இரண்டுகருடன் நம்முடன்கூடவே பிலிப்பி வரையில் வந்தன. நாம் கொடுக்கும் உணவையும் உண்டன. இன்றுகாலையில் அவை போய்விட்டன. பருந்தும் காகங்களும் வட்டமிடுகின்றன. ஆதலால் நமக்குத் தோல்வியே கிடைக்கும்' எனக் கூறுகின்றான்" எனக் கூறினர். இதிலிருந்து கருடன் உடன்வருதல் நல்சகுனம் என்றும் பருந்து வட்டமிடுதல் ஆகாததென்றும் அறியலாம்.

இவ்வாறே நாட்டில் வசித்துக்கொண்டிருந்த பழைய பறவைகள் வேற்று நாட்டுக்குச் செல்லுதலும் புதிய பறவைகள் வருதலும், காலமல்லாக் காலத்தில் கோட்டான் கத்துதலும் தீயசகுனம் எனத் தொல்காப்பிய உரையிற் கூறப்பெறுகின்றது.

எதிர்பாராத நன்மையை ஒருவன் அடைய நேரின் "நரிமுகத்து விழித்துவந்தாயோ" எனக் கேட்பதை நாம் அறிவோம். அதனால் காரியத்தொடக்கத்தில் நரியைப்பார்த்தல் நற்சகுனம் என்பது உணர்த்தப்பெறுகின்றது.

சகுனசம்பந்தமான பழமொழிகள் பல நம்நாட்டில்வழங்குகின்றன. அவற்றுள், "காணலாம், கத்தக்கூடாது; கத்தலாம், காணக்கூடாது; காணவும் கணலாம், கத்தவும் கத்தலாம்" என்பதும் ஒன்று. "நரியைக் காணலாம் அது கத்தினால் பெருந்தீமை. கழுதை கத்தினால் நலம் கண்டால் தீமை. கருடனைக் கண்டாலும், கருடன் கத்தினாலும் நலம்" என்பன இதன் கருத்தாம்.

இவ்வாறே "வால்நீண்ட கரிக்குருவி வலமிருந்து இடம் போனால், கால்நடையாய்ப் போனவர்கள் கனக்தண்டி ஏறுவரே" என்பதும் கரிக்குருவியின் சகுனத்தையும் அதன்பயனையும் நன்கு விளக்குகிறது.

# பாரதியார் பாடல்

## எட்டையபுரம் மன்னருக்கு

[காலஞ்சென்ற தேசியகவி ஸ்ரீமான் ஸி. சுப்பிரமணிய பாரதியார், இயற்றிய பாடல்களில் இன்னும் வெளிவராதன சில. அவற்றுள் 'மது' என்னும் தலைப்பிட்டுள்ள செய்யுட்களைச் சென்ற இதழில் வெளியிட்டிருந்தோம். வேறு நான்கு பாடல்கள் கீழே வெளியிடப்படுகின்றன. பாரதியார் புதுச்சேரியை விட்டு நீங்கியபின் தம் பிறப்பிடமாகிய எட்டையபுரத்திற்குச் சென்றபொழுது அவ்வூர் மன்னர் விஷயமாகச் சில செய்யுட்கள் பாடினார். அச்செய்யுட்களில், கீழ்க்கண்ட மூன்றுமட்டும் இப்பொழுது கிடைத்தன. எட்டையபுர மன்னர் தமிழில் மிக்கபயிற்சியும் ஆர்வமும் உள்ளவர். பாரதியார் மீது அவருக்கு இளமைமுதற்கொண்டு மிகுந்த ஆர்வம் உண்டு.

சென்ற இதழில் வெளிவந்த செய்யுட்களையும் கீழ் உள்ளவற்றையும் கலைமகளில் வெளியிடும் பொருட்டு அன்புகூர்ந்து உதவியவர், பாரதியாருக்கு உறவினராகிய ஸ்ரீமான் ல. சங்கரையரவர்களாவர். அவருக்கு எம்முடைய நன்றியறிவு உரியதாகுக. ப—ர்.]

---

1. பாரிவாழ்ந் திருந்த சீர்த்திப்
பழந்தமிழ் நாட்டின் கண்ணே
ஆரிய நீஇங் நாளில்
அரசுவீற் றிருக்கின் றுயால்
சாரியங் கருதி நின்னைக்
கவிஞர்தாம் காண வேண்டின்
நேரிலப் போதே எய்தி
வழிபட நினைக்கி லாயோ?

2. விண்ணள வுயர்ந்த கீர்த்தி
வேங்கடே சுரேட்ட மன்ன!
பண்ணள வுயர்ந்த தேன்பண்
பாவள வுயர்ந்த தேன்பா

எண்ணள வுயர்ந்த எண்ணி
இருங்கவிப் புலவர் வந்தால்
அண்ணலே பரிசு கோடி
அளித்திட விரைகி லாயோ?

3. கல்வியே தொழிலாக் கொண்டாய்
கவிதையே தெய்வ மாக
அல்லுநன் பசலும் போற்றி
அதைவழி பட்டு நின்றாய்
சொல்லிலே நிகரி லாத
புலவர்நின் சூழ லுற்றால்
எல்லினைக் காணப் பாயும்
இடபம்போல் முற்ப டாயோ?

—:o:—

தம் ஞானகுருவாகிய
ஸ்ரீ நிவேதிதாதேவியின் துதி

அருளுக்கு நிவேதனமாய் அன்பினுக்கோர் கோயிலாய்
அடியேன் நெஞ்சில்
இருளுக்கு ஞாயிறாய் எமதுயர்நா டாம்பயிர்க்கு
மழையாய் இங்கு
பொருளுக்கு வழியறியா வறிஞர்க்குப் பெரும்பொருளாய்ப்
புன்மைத் தாதச்
சுருளுக்கு நெருப்பாகி விளங்கியதாய் நிவேதிதையைத்
தொழுது நிற்பேன்.

# சித்திரம்

## அடால்ப் ஹிட்லர்

மா. இராசமாணிக்கம்

"ஜெர்மனி பகைவரால் நசுக்கப்பட்டது போதும். இளைஞர் இனியும் தம் தாய்நாடு பகைவரால் நசுக்கப்படுதலை ஒருபோதும் விரும்பார். ஜெர்மனி தனது சுயமதிப்புக்கும் பெருமைக்கும் பாதகமான எதையும் ஒப்புக்கொள்ளத் தயாராக இல்லை. ஜெர்மனி இழந்த தனது பழம் பெருமையை மீண்டும் பெற்று நாகரிக உலகிற்கு முன்போலச் சிறந்தவழி காட்டியாக நிற்றல்வேண்டும். அதற்கு வேண்டுவன நாம் செய்தே தீருவோம். நம்மையோ, நமது முன்னேற்றத்தையோ, எவரும் தடைசெய்ய இயலாது" எனக்கூறிக் கர்ச்சனைபுரியும் குட்டைமீசையுடைய 'அடால்ப் ஹிட்லர்' பெயர் கேட்டமாத்திரத்தே உலக மக்கள், அவருள்ளும் பிரஞ்சு மக்கள் நடுக்கங்கொள்ளுகின்றனர். சென்ற ஒரு வருட காலமாக எல்லா நாட்டு இராஜதந்திரிகளின் பார்வையும் ஜெர்மனியையும் இக்குட்டைமீசை மனிதரையும் நோக்கியவாறுள்ளது. சிறந்த கலைஞானப் பெருக்குடைய, சிறந்த வீரம் படைத்த 6½ கோடி ஜெர்மானியர் தம் ஏக தலைவராக விளங்கி, உலகத்தை நடுங்கச்செய்யும் இவர் சமாதானப் பிரியரா! இல்லையா? இவரது வாழ்க்கை எத்தகையது?—என்பனபோன்ற வினாக்களுக்கு விடைகாணின், உலக அரசியல் விஷயங்கள் பலவற்றை நாம் உள்ளவாறு உணர்ந்தவராவோம்.

ஹிட்லர் சாதாரண எளிய குடும்பத்திற் பிறந்தவர். இளவயதில் தம் தந்தையாரை இழந்ததால், இவர் தம் அருமைத் தாயாரைத் தெய்வமாகப்போற்றி, அவருக்கும் தமக்கும் வேண்டும் உணவுக்காக வேலை செய்யலானார். பாவம்; சொற்பக் கல்வியறிவுடைய இவர் முதலில் செங்கற்களை யறுக்கும் வேலையில் அமர்ந்தார்; பின்னர்ச் சித்திரங்கள் எழுதும் வேலையில் சிறிதுகாலம் இருந்தார். அவ்வேலையில் இவர் இருந்தபோது இவருடைய ஆருயிர் அன்னையார் இவ்வுலக வாழ்வை நீத்தார். ஏழை ஹிட்லர் ஈன்ற தாயாரையும் இழந்து திக்கற்றவர் ஆனார்.

1909-ஆம் ஆண்டு ஆகஸ்டுமாதம் ஹிட்லர் வியன்னு நகரில் வேலையின் பொருட்டுத் தெருத்தெருவாக அலைந்தார். இவர் உடுத்திருந்த கிழிந்த அழுக்காடைகள் இவர் அநாதி யென்பதைக் குறிப்பிட்டன. அந்நிலையில் இவரைக்கண்ட 'ஹனிச்' என்பவர் இவரோடு நண்பரானுர். ஹிட்லர் அந்நாள் முழுவதும் பட்டினியாக இருந்ததை யறிந்த அவ்வேழை நண்பர் தம்மிடம் இருந்த ரொட்டித்துண்டு ஒன்றைத் தந்து, இவர் பசியைத் தணித்தனர்.

பின்னர் இருவரும் மூட்டை தூக்குதல் முதலிய தாழ்ந்த வேலையில் ஈடுபட்டுவந்தனர். சிறிது காலத்திற்குப் பின் ஹிட்லர் தபால்கார்டுகளில் சித்திரம் வரைந்தார்; அவற்றை இவர் நண்பர் பல இடங்களில் விற்றுவந்த பொருளைப் பெற்று இருவரும் காலங் கழித்தனர். அப்போது இவர்கட்கு ஜீவனத்துக்கு மேற்பட்ட வருவாய் கிடைக்கலாயிற்று. ஹிட்லர் அந்நிலையில் பத்திரிகைகளை வாங்கிப் படித்துக்கொண்டே இருந்தார்; தம் நண்பரோடு அரசியல் சம்பந்தமான விஷயங்களைப்பற்றிப் பேசித் தர்க்கம் செய்துவந்தார். அவ்வாறு நிகழ்ந்த தர்க்கம் ஒன்றில் இவர் தம் நண்பரைப் பார்த்து, "நண்பரே, நான் என் கொள்கைகள் நிறைந்த ஜெர்மனியை விரைவிற் காண்பேன். நான் விரைவில் உயர்ந்த நிலையை அடைவேன். அஃது என்னுல் இயலும்" என்றுர். அப்பொழுது இவர் கண்கள் இவர் கூறியவற்றைச் செய்து முடிப் பனபோல் மலர்ந்து பிரகாசித்தன. இவரது முகம் மாசற்று மனவுறுதி கொண்டவர் முகம்போல ஒளிவீசிற்று.

ஹிட்லர் சென்ற மகாயுத்தத்தின்போது, ஜெர்மானியர் படையில் சாதாரண வீரராகச் சேர்ந்தார்; ஆனுல், போர் முடிந்த போது பெரிய புகழுடன் வெளிவந்தார். இவர் போரிற்செய்த வீரச்செயல்களைப் பல பத்திரிகைகள் பாராட்டிப் புகழ்ந்தன. அப்பொழுதுதான் ஹிட்லரைப்பற்றி உலகம் அறிந்துகொள்ளச் சந்தர்ப்பம் வாய்த்தது.

மகாயுத்தத்திற்குப் பின்னர் ஜெர்மனி குழப்பத்துக்கு உள்ளாயது. பொதுவுடைமை இயக்கம் வலுப்பெற்றது. அது அரசியலைக் கைக்கொண்டு தன் ஆட்சியை நிலைநிறுத்த முயன்றது. அப்பொழுது ஹிட்லர் தம் கொள்கைகளை விளக்கமாகக் கூறி ஓர் இடத்தில் பிரசங்கம் செய்தார். இவரது பேச்சு வன்மையையும் பரிசுத்தமான கொள்கைகளையும் அறிந்த இளைஞர் பலர் இவர் இயக்கத்திற் சேர்ந்தனர். இவரது இயக்கம் நாஸி யியக்கம் எனப் பெயர்பெற்றது.

ஹிட்லர் கட்சியைச் சுயநலங்கொண்ட அரசாட்சியினர் ஆதரிக்கவில்லை; நாஸி இயக்கத்துக்குப் பலதடைகள் ஏற்பட்டன; நாஸிவீரர்கள் கண்ட கண்ட இடத்தெல்லாம் கொல்லப்பட்டார்கள். ஹிட்லர் சிறைசெல்ல நேர்ந்தது. இவருடைய உயிர்த்தோழரான ஜெனரல் கேர்ரிங் சிறை சென்றார். ஜெர்மனியில் குழப்பமே குடிகொண்டிருந்தது. எனினும், நாஸிக்காட்சி நாளடைவில் வலுப்பெற்று அரசியல் கட்சிக்குத் தகுந்த எதிர்க்கட்சியாக மாறிற்று. அதனை அழிக்க எவராலும் இயலவில்லை. அதன் தலைவரான ஹிட்லர் கலங்காவுள்ளம் உடையவர்; பிறர் பேச்சைக் கேட்டு நடப்பவர் அல்லர்; தம்மைவிடச் சக்தி மிகுந்தவரைத் தம்மினும் உயர்ந்தவராகக் கருதும் தாராள மனப்பான்மை யுடையவர். இவரது மாசற்ற ஒழுக்கத்தாலும் உள்ளத்தை உருக்கும் சொற்பொழிவுகளாலும் கட்சியின் கட்டுத் திட்டங்களாலும் ஜெர்மனியில் நாஸி இயக்கம் என்னும் மரம் வேரூன்றித் தழைத்து அரும்பிப் போதாகி மலர்ந்து தேனுஞ் சிந்திற்று.

நாஸி இயக்கத்தின் பெருக்கத்தைக் கண்ட தேசியக் கட்சியினர் அதனுடன் சேர்ந்துகொண்டு ஹிட்லரைத் தலைவராக ஏற்றுக் கொண்டனர். அதனால், 'சமதருமத் தேசியக்கட்சி' (*National Socialistic Party*) என நாஸி இயக்கம் பெயர் பெற்றது. இதைக்கண்ட 'ப்ரூனிங்' முதலிய மந்திரிமார் அழுக்காறு கொண்டு இவ்வியக்கத்துக்குப் பல இன்னல்களை விளைத்தனர். எனினும், ஹிட்லரது கலங்காவுள்ளம் சிறிதும் கலக்கமுறவில்லை. வான் பேபன் (*Van Papen*) பிரதம மந்திரியாராக இருந்தபோதும் வான் ஸ்லீச்சர் (*Van Schleicher*) பிரதமமந்திரியாக இருந்த போதும் ஹிட்லர் கட்சியார் பார்லிமெண்டில் இடம்பெற்றுப் பெருந்தொண்டாற்றி அரசியல் கட்சியைக் கண்டித்துக் காற்றிற் பறக்கவிட்டனர். வான் பேபன் ஹிட்லரை ஒரு மந்திரியாக்க விரும்பினர். எனினும் ஹிட்லர் அதற்கு இணங்கவில்லை; தம்மைப் பிரதம மந்திரியாராக்க வேண்டுமெனக் கோரினர். அதற்கு வான் பேபன் இணங்கவில்லை. அதிகம் அறைவதேன்? தலைவர் வான் ஹிண்டன்பர்க்கும் (*Van Hindenburg*) அதற்கு உடன்படவில்லை. எனினும் 1933-ம் ஆண்டு ஜனவரி மாதம் 30-ம் தேதி வான் ஹிண்டன்பர்க்கே ஹிட்லரை அழைத்து மந்திரிசபையை அமைக்குமாறு வேண்டினர். ஹிட்லர் வெற்றி பெற்றார். சுவருக்கு வர்ணம் அடித்த ஹிட்லர்—மூட்டைத் தூக்கிப் பிழைத்த ஹிட்லர்—போர்வீரரான ஹிட்லர்—இறுதி

யில் ஜெர்மானியர் தம் இரட்சகர் எனக்கொண்டாடும் நிலையில் பிரதமமந்திரியார் ஆனர். அன்று மாலை ஜெர்மானியர் அடைந்த இன்பத்தைப்பற்றி ஹிட்லரின் உயிர்த்துணைவரும் வலதுகையாளருமான ஜேனரல்கோரிங் தாம் எழுதி வெளியிட்டுள்ள 'ஜெர்மனியின் மறுபிறவி' (*Germany Reborn*) என்னும் நூலில் பின் வருமாறு கூறுகின்றார். "அமைச்சரது முதற்கூட்டம் அன்று மாலை 5 மணிக்குக் கூட்டப்பட்டது. ஹிட்லர் எங்கள் பெருமகிழ்ச்சிக்கிடையே எழுந்து தம் நோக்கத்தையும் கொள்கையையும் வெகு அழகாக எடுத்துக்கூறினர். கூட்டம் முடிவுற்றதும் நாங்கள் எங்கள் மாளிகைகட்குச் சென்றோம். ஆனல் பொதுமக்கள் என்ன செய்தார்கள்? நாடுமுழுவதும் ஒரே கொண்டாட்டந்தான். மூலைமுடுக்குக்களில் கூட்டங்கள்; 'ஹிட்லர் வாழ்க, ஜெர்மனிவாழ்க' என்ற கோஷங்கள்! இதுவரையில் ஜெர்மனியின் தலைநகரான பர்லினில் கண்டிருக்க இயலாதபடி தெருக்கள்தோறும் கூட்டங்கள். நாஜிவீரர்களும் பொதுமக்களும் தெருக்களில் ஊர்வலமாகச் சென்றார்கள். அவர்கள் ஜெர்மன் குடியரசுத் தலைவரது அரண்மனைக் கெதிரில் நின்று அமைதியாகப் பிரார்த்தித்த காட்சி உலக சரித்திரத்திலேயே எழுதப்பட்டிராத செய்தியாகும். தலைவர் வான் ஹிண்டன்பர்க் ஹிட்லரது கட்சியின் வலிமையை யுணர்ந்தார்; தாம் இவரைப் பிரதம மந்திரியாராக நியமித்ததை நினைத்து மகிழ்ந்தார். ஜெர்மானியர் மறுபிறப்பெடுத்தனர். சுயமரியாதையைப் பெற்றனர் என்பதை யுணர்ந்து மகிழ்ந்தார். அவரது அரண்மனைக்குச் சிலகெஜதூரத்தில் உள்ள மாளிகை ஒன்றில் தங்கள் இரட்சகராக இறைவன் அருளிய அடால்ப் ஹிட்லர் இறைவனைத் தொழுதபடி நின்று, தம் மக்களை—துன்பங்களினின்றும் விடுபட்ட மக்களைக் கண்டு ஆனந்தக் கண்ணீர் விட்டார். அந்த இரவே ஜெர்மனி மறுபிறவி எடுத்த இரவாகும்.

ஹிட்லர் முதன்மந்திரியார் ஆனதும் போலீஸ்படையைச் சீர்திருத்தம் செய்தார்; நாஜிவீரர்களைப் போலீஸ் வீரர்களாகவும் சேனை வீரர்களாகவும் ஆக்கினர்; இரகசியப்போலீஸ் படையையும் சீர்திருத்தம் செய்தார்; வேலையற்றிருந்த 70 லட்சம் பேருள் 35 லட்சம் பேர்கட்கு வேலைகளை யுண்டாக்கிக் கொடுத்தார்; இன்னும் கொடுத்து வருகின்றார்; பொதுவுடைமைக் கட்சியாளரையும் யூதர்களையும் அடியோடு ஒழித்துவிட்டார். இவ்விருபிரிவினரும் ஜெர்மனியின் முன்னேற்றத்துக்கு முட்டுக்கட்டைபோன்றவர் என்பது ஹிட்லரது பலமான அபிப்பிராயம்.

ஹிட்லர் அயல்நாடுகளோடு வியாபார ஒப்பந்தங்கள் செய்து வருகின்றார்; தரிசான நிலங்களைக் குடியானவர்களுக்குக் கொடுத்து வேலையளிக்கிறார்; பெண்களை வேலையினின்றும் நீக்கி, அவ்விடங் களில் ஆடவரை நியமித்து வருகின்றார். பெண்கள் வீடுகளில் அமைதியாக இருந்து இல்லறத்தை இனிது நடத்த வேண்டும் என்பதே ஹிட்லரது பெருநோக்கம்; பெருவிருப்பம். பெருஞ் சாலைகள் செப்பனிடப்பட்டுள்ளன; விவசாய சம்பந்தமான புதிய கால்வாய்கள் வெட்டப்பட்டுள்ளன; மோட்டார் வரி நீக்கப்பட்டது; ஆயிரக்கணக்கான புதிய மோட்டார்வண்டிகள் செய்யப்படுகின்றன. பலவேறு சங்கங்கள் நாடகமேடைகள் முதலியன யூதர் ஆதிக்கத்தினின்றும் விடுதலை பெற்றன. நாட்டில் இருந்த பலதிறப்பட்ட கட்சிகள் ஒழிந்து, ஜெர்மானியர் ஓரே இயக்கத்தினராகி 'ஜெர்மானியர்' என்னும் பரிசுத்த உணர்ச்சியைப் பெற்றுவிட்டனர். ஏறக்குறைய நான்கு கோடி மக்கள் ஹிட்லர் கட்சியிற் கலந்துவிட்டனர். நான்குகோடி இருபதுலட்சம் வோட்டர்களில் நான்குகோடி பேர் இன்னும் ஹிட்லரை ஒருமுகமாக ஆதரிக்கின்றனர் எனின், ஹிட்லரது பெருமதிப்பையும் அவர்பால் ஜெர்மானியர்கொண்ட நம்பிக்கைகளையையும் என்னென்பது! சர்வதேச சங்கத்தில் அங்கம் பெற்றிருந்த ஜெர்மனி, தனக்கு வல்லரசுகள் சுதந்திரம் அளிக்க மறுத்ததைக்கண்டு அச் சங்கத்தினின்றும் நீங்கிவிட்டதாக ஹிட்லர் அறிவித்தார். வல்லரசுகள், எதிர்பாரா இச்செயலைக் கண்டதும் நடுக்கங் கொண்டன. 'இனி என்ன நேருமோ' எனப் பயங்கொண்டன. ஆனால், ஹிட்லர் அமைதியாகத் தம் நாட்டைச் சீர்படுத்தி வருகின்றார். இவர் போர்வெறி கொள்ளவில்லை. ஜெர்மனியை ஏனைய முதல்தர வல்லரசுகளைப்போல உயர்நிலையில் நிறுத்தவே இரவும் பகலும் உழைத்து வருகின்றார்; போருக்கு முன்னிருந்த ஜெர்மனியைக் காணவேண்டும் என்பதே இவரது பெருவேட்கை.

உலகில் உள்ள அரசியல் நிபுணருட்சிறந்த மஹா வீரரான முசோலினியால் ஏற்படுத்தப்பட்ட நான்கு வல்லரசுகள் ஒப்பந்தத்தில் ஹிட்லர் கையொப்பமிட்டார்; முசோலினியிடத்தில் ஹிட்லருக்குப் பெரும் நம்பிக்கையுண்டு; முசோலினிக்கும் ஹிட்லரிடம் நம்பிக்கையுண்டு. சுமார் இரண்டு மாதங்கட்கு முன்பு, ஹிட்லர் ரோமாபுரிசென்று முசோலினியைச் சந்தித்தார்; முசோலினிகூறிய யோசனைகளை வரவேற்றார். ஆஸ்திரியாவின் சுதந்திரத்தை ஆமோதித்தார். மஹாவீரரான முசோலினி இருந்திராவிடின், ஹிட்லர் ஆஸ்திரியாவை ஜெர்மனியோடு சேர்த்

திருப்பர்—சேர்க்கப் பெருமுயற்சியேனு எடுத்திருப்பார் என்று கூறுதல் பொருந்தும்.

இன்று ஜெர்மனி எப்படியிருக்கின்றது? அது வலிவுற்றிருக்கிறது. ஜெர்மானியர் ஓர் இனத்தவர் என்ற உணர்ச்சியுடன் இருக்கின்றனர்; தங்கள் வாழ்க்கையை முன்னேற்றி வருகின்றனர்; அடுத்துவரும் போருக்கும் ஆயத்தம் செய்கின்றனர்; வெளிநாட்டு விஷயங்களில் ஊக்கங்காட்டி வருகின்றனர்? ஏற்றுமதி, இறக்குமதி செவ்வையாக நடைபெறுகின்றன. சுருங்கக்கூறின், ஹிட்லரது மஹத்தான வெற்றியால் ஜெர்மனி புத்துயிர்பெற்றுளது என்று கூறுதல் மிகையாகாது.

ஹிட்லர் மாசற்ற ஒழுக்கம் உடையவர். அவர், சமீபத்தில் தமக்கு விரோதமாகச் சதிசெய்த வான் ஸ்லீச்சர் முதலான தலைவர்களை இரக்கங்காட்டாது சுட்டுக்கொன்ருர். அதைப் பாராட்டித் தலைவர் வான் ஹிண்டன்பர்க் ஹிட்லரைக் கொண்டாடினர் எனின் ஹிட்லர்செய்த செயல் நாட்டுக்கு நலன் தருவதா, அன்ருு என்பதை அறிவுடையோர் உணர்க. வான் ஹிண்டன்பர்க் இறந்ததும், ஹிட்லர் பெரும்பாலான ஜெர்மானியரால் ஜெர்மன் குடியரசுத் தலைவராகவும் பிரதமமந்திரியாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார். இவற்ருல், இவர்மீது ஜெர்மானியருக்குள்ள பற்று இற்றென இனிது விளங்கும்.

ஹிட்லர் மணமாகாதவர்; இவர் 42 வயதினர்; மாசற்ற ஒழுக்கமுடையவர்; பகைவரும், இவரது நடத்தையைப்பற்றிக் குறைகூற இயலாது. இவர் மது மாமிசங்களை உட்கொள்வதில்லை; புகை பிடிப்பதில்லை. எல்லாப் பெண்மணிகளையும் தம் தாய்மாராகக் கருதும் நேர்மையான குணமுடையவர். இவரை நேரிற் சந்தித்துப் பேசிய ஆங்கில ஆசிரியர் பலர் இவர் 'சாந்தமூர்த்தி' எனக் கூறியுள்ளார். இவர் பேச்சு வன்மையுடையவர்; மக்கள் மனத்தைத் தம்பால் இழுக்கும் பேராற்றல் பெற்றவர்; வசீகர முகத்தோற்றம் உடையவர். இரவிலும் பகலிலும் ஜெர்மனியின் முன்னேற்றத்தையே உளத்திற் கொண்டவர். இப்பெரியாரால் ஜெர்மனி மிகச் சிறந்த நாடாக விளங்கும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. இவர் பெற்றுள்ள கலங்கா வுள்ளத்தால் ஜெர்மனி புத்துயிர் பெற்றுவிட்டது. இனி அதை நசுக்க எந்த வல்லரசாலும் இயலாது.




## பூமியும் சந்திரனும்

பே. நா. அப்புஸ்வாமி ஐயர், பி. ஏ., பி. எல்.

பகலில் ஒளிதரும் சூரியனும் இரவில் ஒளிரும் சந்திரனும் அநாதிகாலமாக மனிதர் மனத்தைக் கவர்ந்து வருகின்றன. ஒவ்வொரு நாட்டினரும் சந்திரனை ஒரு சேதனப்பொருளாகவைத்து அதனுடைய பிறப்பு, வளர்ப்பு, வாழ்க்கை, குணகுணங்களைப் பற்றியும் பெருமை சிறுமைகளைப் பற்றியும் எத்தனையோ புராணக் கதைகளை உண்டுபண்ணியிருக்கின்றனர். அவர்கள் அக்கதைகளை அவரவர் அறிவுக்கேற்றபடி பலவாறாகப் பலகாலங்களில் புனைந்து வந்திருக்கின்றனர். அவை மாற்ற இயலாத உண்மைகளென்றும், புனைவுரைகளென்றும், வெறும் அறிவின்மையின் விளைவென்றும், முதிர்ந்த அறிவின் பயனென்றும் பலபடியாக எண்ணப்படுவன. சந்திரனைக்கண்டால் கடலுக்குக் கொண்டாட்டம் என்கிறார்கள். அதைவிட அதிகக்கொண்டாட்டம் குழந்தைகளுக்கும் கவிகளுக்கும் உண்டாகிறது. சந்திரனைப் பாடி அதன் அழகைப் பருகி இன்புற்று வருணியாத பாஷையே இல்லை. காவியங்களில் சந்திரோதயவருணனையை ஒருமுக்கிய அங்கமாகவைத்து இலக்கணம் செய்துவிட்டார்கள்.

பாற்கடலைத் தேவர்களும் அசுரர்களும் கடையும்போது அதிலிருந்து சந்திரன் பிறந்ததாக நமது புராணம் கூறுகிறது. வானசாஸ்திரத்திலும் பூதத்துவ சாஸ்திரத்திலும் ஆராய்ச்சி மிக்க இக்காலத்து விஞ்ஞானப் புலவர்கள், ஒருகாலத்தில் சந்திரன் பூமியின் ஒரு பாகமாகவே இருந்ததென்றும் பூமி சுழலும்போது அதிலிருந்து வேறாகப் பிரிந்தது என்றும் கூறுகிறார்கள்; பூமியின் பாகமாக இருக்கும்போது சந்திரன் இருந்த இடந்தான் இப்பொழுது பசிபிக் மகாசமுத்திரமாக இருக்கிறதென்றும் சொல்லுகிறார்கள்.

சந்திரன்தான் பூமிக்கு நெருங்கிய துணை. அது எப்பொழுதும் இடைவிடாமல் பூமியைச் சுற்றிப் பிரதக்ஷிணம் செய்து

கொண்டு வருகிறது. இரவில் ஒளிவீசி இரவினால் பூமியில் உண்டாகும் பயத்தை ஓரளவு நீக்குகிறது. காதலையும் அழகையும் உண்டாக்குகின்றது என்று கவிஞர் கூறுகின்றனர். பயித்தியத்தை உண்டாக்குகின்றதென்று வேறு சிலர் சொல்லுகின்றனர். கடல் முதலியவற்றின் நீரை நாள்தோறும் ஏறி இறங்கச்செய்கின்றதென்று வானசாஸ்திரிகள் சொல்லுகிறார்கள். சிலகாலத்துக்கு முன் புரோபஸர் ஜாலி என்னும் விஞ்ஞானப்புலவர் ஒருவர் பூமியிலே ஏற்படுகின்ற பெரிய குழப்பங்கள் எல்லாவற்றுக்கும் சந்திரனே காரணமென்று சொன்னார். அவர் சொன்னவற்றின் சாராம்சத்தை எழுதுகிறேன்:

பூமியின் மேல்பரப்பிலே இதுவரையில் மிகப்பெரியனவாக ஆறு குழப்பங்கள் நிகழ்ந்திருக்கின்றன; இது பூதத்துவசாஸ்திரிகளுக்கு நன்றாகத் தெரிந்தவிஷயம். இந்த ஆறு குழப்பங்கள் நடந்தகாலங்களிலெல்லாம் புதிய மலைகள் தோன்றியுள்ளன. ஒவ்வொரு குழப்பக்காலத்திலும் பெரியமலைத்தொடர் ஒன்று புதிதாக உண்டாக்கப்பட்டிருக்கிறது. பழைய காலங்களில் இவ்வாறு உண்டான பெருமலைகள் நாளடைவில் வெயிலாலும் மழையாலும் காற்றாலும் தாக்கப்பட்டுத் தகர்ந்து பொடிப்பொடியாகி இப்போது மண்ணோடுமண்ணாகப் போய்விட்டன. பழங்காலங்களில்தோன்றிய சிற்சில மலைகளின் தாழ்வரைகளை நாம் இக்காலத்திலும் காணலாம்; அவற்றின் சிகரங்கள்யாவும் அழிந்துபோயின. 'கில்லார்னி' என்னும் பிரதேசத்திலுள்ள சிறுமலைகள் இரண்டாவது மலையுகத்தை (பர்வதோத்பவ காலத்தை)ச் சார்ந்தவை. ஐரோப்பாவிலுள்ள ஆல்ப்ஸ் மலைத்தொடரும் இந்தியாவின் வடவெல்லையாகிய இமயமலையும் மலையுகத்திலே ஆறாவது யுகத்தில் உண்டானவை. அவை பனியாலும் மழையாலும் வெயிலாலும் காற்றாலும் தாக்குண்டுவந்தபோதிலும் முற்றுந்தகர்ந்து தரைமட்டமாதற்கு வேண்டிய நெடுங்காலம் இன்னும் ஆகவில்லை; அதனால்தான் அவை இன்னும் தலைநிமிர்ந்து உயர்ந்து நிற்கின்றன. அவை சிறிதுசிறிதாகத் தகர்ந்துகொண்டுதான் வருகின்றன. அவையும் தரையோடுதரையாகப் போகுங்காலமும் ஒன்று உண்டு.

ஆறுதடவை மலைகள் தோன்றியதற்கு விசேஷகாரணம் ஏதேனும் இருக்கவேண்டுமென்பது நிச்சயம். சமீபகாலம்வரையில் அந்தக் காரணம் இன்னதுதானென்று தெளிவாகத் துணியப்படவில்லை. இப்பொழுது பெரும்பாலாரான அறிஞர்கள் ஒரு காரணத்தைக் குறிப்பிடுகிறார்கள். ஆயினும் இதுவே முடிந்த

முடிபென்று சொல்வதற்கில்லை; அங்ஙனந் துணிவதற்குமுன் செய்யவேண்டும் ஆராய்ச்சிகள் இன்னும் பல இருக்கின்றன.

அலை அலையாக மலைகள் உண்டாவதற்கு இவைகளே காரணம் என்று சுட்டிக்கூறுவதற்குரிய சக்திகள் இருப்பதாக நமக்குத் தெரிவதில்லை. பூமி நாளுக்குநாள் தனது வெப்பத்தை இழந்துவருகிறது; ஆயினும் அப்படி இழத்தல் ஒரே ஒழுங்கில் அமையவில்லை. சில காலங்களில் அதிகமாகவும் சிலகாலங்களில் குறைவாகவும் அதன் வெப்பம் குறைந்துவருகிறது. ஏன் இங்ஙனம் குறையவேண்டும்? சிற்சில காலங்களில்மட்டும் உலகம் முழுவதையும் ஒரேகலக்காகக் கலக்கும் பெரியகுழப்பங்கள் ஏன் உண்டாகின்றன? மற்றவேளைகளில் ஏன் உண்டாவதில்லை?

இவற்றை விளக்குவதற்குரிய காரணங்களாகப் பல செய்திகளைப் பலர் கூறிவந்துள்ளனர். பூமியானது சூரியனைச்சுற்றி வரும்போது சிலசில காலங்களில் தடுமாறித் தள்ளாடுகின்றதென்றும் அதனால்தான் குழப்பங்கள் உண்டாகின்றனவென்றும் சிலர் சொன்னார்கள். வானசாஸ்திரிகள் அதை ஒப்புக்கொள்ளவில்லை. அவர்கள் பூமி அப்படித் தடுமாறுவதற்குக் காரணமே இல்லை என்று கூறுகிறார்கள். இந்தக் குழப்பங்கள் எப்பொழுதோ ஒரு முறைமட்டும் உண்டாவனவல்ல. அணி அணியாகப் பெரிய பெரிய மலைகள் தோன்றியிருப்பதனால் அவை மீண்டும் மீண்டும் நிகழ்பவைகள் என்று தெரியவருகிறது. இவ்வளவு பிரமாதமான காரியங்களுக்குக் காரணமாகும் சக்திகள் இருக்குமிடமே தெரியாமல் போவதும் திடீரென்று மறைந்துவிடுவதும் அதியற்புதமான விஷயமல்லவா? அவை எவையென்று கண்டுபிடிப்பதில் மிகவும் ஊக்கத்தை மேற்கொண்ட பலர் அறுதியிட்டு ஒன்றையும் சொல்ல முடியாமல் வெகுகாலமாகத் தவித்தனர்.

பிறகு 'ரேடியம்' என்னும் விந்தையான பொருள் அறிவாளர் இருவரால் கண்டு பிடிக்கப்பட்டது. அதன் அரிய குணங்கள் ஒவ்வொன்றாகத் தெரியலாயின. அவற்றுள் சில வருமாறு:

யுரேனியம், தோரியம், ரேடியம் ஆகிய ரேடியத்தொடர்புடைய பொருள்கள் எல்லாம் நாளடைவில் உடைந்துபோய் வேறுவேறு பொருள்களாக மாறிவிடுகின்றன. இதற்கிடையில் அவற்றிலிருந்து இடைவிடாமல் வெகுவேகமாக நுண்ணிய அணுக்கள் நான்குபக்கங்களிலும் எறியப்படுகின்றன. வேகமாய் இயங்கிக்கொண்டிருக்கும் பொருள் ஒன்றைத் திடீரென்று நிறுத்தினால் சூடு உண்டாகும். மேற்கூறிய பொருள்களினின்று எறியப்படும் அணுக்களும் வெளியில் செல்லும்போது திடீரென்று

தடையுற்று நிற்கின்றன; அதனால் அவை சூடு பெறுகின்றன. ரேடியத்தொடர்புடைய பொருள்கள் யாவும் தம் பக்கத்திலுள்ள பொருள்களை ஓயாமல் தாக்கிக்கொண்டே யிருக்கின்றன. அவற்றின்மேல் மோதுகின்றன; அவற்றால் தடைபடுகின்றன; அதனால் சூட்டை அடைந்துகொண்டே யிருக்கின்றன. அந்தச் சூட்டை அப்பொருள்களுக்கும் பகுத்துக் கொடுக்கின்றன. இவ்வாறாகப் பக்கத்திலுள்ள பொருள்கள் யாவும் சிறிது சிறிதாக மேன்மேலும் சூடேறிக்கொண்டே வருகின்றன. ரேடியத்தொடர்புள்ள பொருள்களைச் சூட்டைத்தரும் அக்ஷயபாத்திரங்களென்று கூடச் சொல்லலாம்; அவை எவ்வளவு சூட்டைப் பகுத்துக் கொடுத்தாலும் தாம் சூடு குறைவுபடாதிருக்கின்றன. பூமிக்கு உட்புறமுள்ள சிற்சிலபாறைகளும் வேறுசில பொருள்களும் இயல்பாகவே ரேடியச் சுறுசுறுப்பை யுடையனவாக இருக்கின்றன; அல்லது ரேடியத்தொடர்புள்ள வேறு சிலபொருள்கள் சிறிய அளவிலேனும் அவற்றுள் காணப்படுகின்றன. இவற்றால் உண்டாகும் சூடானது விளைய விளைய அப்படியப்படியே காற்றிலும் அந்தரத்திலும் ஓடிச் சிதறிவிடாமல் இருக்குமானால் பூமியில் சேகரிக்கப்படும் சூடு நாளுக்குநாள் அதிகமாகிக்கொண்டுதானே வர வேண்டும்?

சிற்சில பொருள்கள் சூட்டை எளிதில் ஏற்றுக்கொள்ளும்; எளிதில் இழக்கும்; தன்னிடத்தில் ஒருபாலிருந்து மற்றொருபால் எளிதில் செலுத்துவன. இவற்றுக்கு நல்ல 'கண்டக்டர்கள், என்று பெயர். இவற்றைச் சுலப வாஹகிகள் என்று சொல்லலாம். இரும்பு, வெள்ளி, செம்பு முதலிய உலோகங்கள் இந்தவகையைச் சேர்ந்தன. இரும்புத்துண்டு ஒன்றின் ஒருமுனையை நெருப்பில் காட்டினால் மறுமுனையும் வெகுசீக்கிரம் சுட்டுப்போய்விடும்.

வேறு சிலபொருள்கள் உஷ்ணத்தை இவ்வளவு நன்றாக ஏற்கமாட்டாதன; செலுத்தவும் இயலாதன; இழக்கவும்மாட்டா. அவற்றுக்குக் கெட்ட 'கண்டக்டர்கள்' அல்லது அல்ப வாஹகிகள் என்றுபெயர். கண்ணாடி, கல் முதலியவை அந்தவகையைச் சார்ந்தவை. இவை சூட்டை எளிதில் ஏற்கமாட்டா; செலுத்தவும் மாட்டா; கடத்தவும்மாட்டா.

நமதுபூமியின் நிலப்பரப்பாக அமைந்திருக்கும் பொருள்கள் உஷ்ணத்தை எளிதிற் கடத்திவிடும் வன்மையற்றனவாகும். அவை அல்பவாஹகிகள். ஆதலின் பூமியின்உட்புறத்திலே ரேடியத் தொடர்பினால் உண்டாகும் உஷ்ணத்தை அவ்வப்போது வெளியே விட்டுவிடுந் திறமையற்றவைகளாகவே காணப்படுகின்றன. 'பல

யுகங்களாகச் சூடுண்டுவரும் பூமியின் மேற்புறமானது செக்கச் சிவக்கக் காய்ந்துபோயிருக்க வேண்டுமே; அப்படிக் காணப்பட வில்லையே' என்று நீங்கள்கேட்கலாம். இப்பூமியினுள் தொகுக்கப் பட்டுவரும் சூடானது சிறிதுசிறிதாக ஆறிப்போய்க் குறைய வில்லை; சிலகாலத்துக்கு ஒருதரமாகத் திடீரென்று ஒரேயடியாக வெளியேறியே அது குறைந்திருக்கவேண்டும்.

'இந்நிகழ்ச்சி எவ்வாறு நிகழ்கிறது?' என்பதை அறிந்து கொள்வதற்குமுன்பு ரேடியத் தொடர்பினால் பூமியினுள் அதி கரித்துவரும் உஷ்ணம் என்ன என்ன செயல்களை இயற்றுகின்றது என்பதை ஆராய்வோம்.

பூமியின்மேலே வாழ்ந்துவருகின்ற நமக்கு இப்பூமியின் மேல் பரப்புமட்டிலும் கண்ணுக்குத் தெரிகிறது. நாம் காணமுடியாத பாகங்களைப் பற்றிப் பூகோளப் படங்களின் மூலமாகவும் பூகோள சாஸ்திரங்களின் மூலமாகவும் அறிந்துகொள்கிறோம். பூமியின் மேல்பரப்பை விளக்கும் சித்திரப்படங்களைப் பார்த்தால் அது மடிந்து சுருக்கல் விழுந்து பற்பல மேடுபள்ளங்களுள்ளதாக இருக் கிற தென்று தெரியவருகிறது. இதைப் பார்த்துப் பூமியின் உட் புறமும் இம்மாதிரியாகவே இருக்குமோ என்று நாம் எண்ணலாம். இவ்விஷயத்தைப்பற்றி ஊன்றிப் பார்ப்போமானால் பூமியின் உட் புறம் இங்ஙனம் இருக்க முடியாதென்பது தெரியும்.

'வெள்ளை வெளுக்கக் காய்ந்து சுழன்றுகொண்டிருந்த காற்று ஒன்று இருந்தது; அதில் ஒரு பகுதியானது சூரியமண்டலத்தி னின்று பிரிந்து தனியாயிற்று. பிறகு அது குளிர்ந்து இறுகிப் பூமியாயிற்று' என்று ஒரு சாரார் கூறுகின்றனர். அப்படிக் குளிர்ந்து இறுகும்போது, இலேசான பாறைப்பொருள்கள்—முன் ஆவியாயிருந்தவை—நீராகிப் பிறகு இறுகின. பின்புதான் கனத்த உலோகங்களும் பாறைகளும் தாம்கொண்டிருந்த ஆவி வடிவத்தைவிட்டு நீராகியநிலையை அடைந்தன. ஆதலால், பூமியின் உட்புறத்திலே நீர்ப்பாங்கான பெரும்பகுதியானது ஒன்றுபோல இருந்தது. அதற்கு மேற்புறத்திலே வெளுக்கக் காய்ந்த பாறைக ளும் பிறவும் நுரைத்துக்கொண்டு, காய்ந்த சர்க்கரைப்பாகின்மேல் அழுக்கு மிதப்பதுபோல் திட்டுத் திட்டாக மிதந்துகொண்டிருந் தன. காலக்கிரமத்தில் உள்ளேயிருந்த நீர்ப்பாங்கான மையப் பகுதி வரவர இறுகிக் கெட்டியாயிற்று. அதன் மேற்புறத்திலே மிதந்துகொண்டிருந்த அழுக்கும், மேலாகப்படிந்து இறுகிப் பூமியின் நிலப்பரப்பாயுள்ள கண்டங்களாக ஆகிவிட்டது. அக் காலத்தில் பூமியானது மிகவும் சூடாயிருந்தபடியால் அதிலுள்ள

நீர் முழுதும் அப்பொழுது ஆவி வடிவமாகவே வாயுமண்டலத்தில் கலந்திருந்தது. பூமி குளிரக்குளிர அந்த நீராவி குளிர்ந்து இறங்கி நீராகிப் பூமியில் விழுந்து திட்டுத்திட்டாக இருந்த நிலப்பரப்புக்களுக்கு இடையிலுள்ள பெரிய பள்ளங்களில் தங்கிச் சமுத்திரங்களென்ற பெயரைப்பெற்றன. கடல்கள்யாவும் பூமியின் மேல் பரப்பாகிய திட்டுக்களின் மேலே தங்கவில்லை; அவற்றிற்கு இடையேயுள்ள பள்ளமான இடங்களிலேதான் அமைந்துள்ளன வென்பது இங்கே கவனித்தற்குரியதாகும். நீர்தங்கிய இடம் திட்டுக்களாக அமைந்த இலேசுப் பாறைகளின்மேலன்று; பூமியின் மத்தியிலுள்ள பொருளாகிய கனத்த பாறைப்பொருளின் மீதுதான் தங்கியிருக்கிறது.

நிலப்பரப்பாகிய கண்டங்களை ஆக்கிய பாறை கிரானிட்[1] அல்லது கருங்கல் வருக்கத்தைச் சேர்ந்தது. அதன் தண்ணீர்த தூக்க எடை (ஸ்பெஸிக் கிராவிடி[2]) 2·7-ஆக இருக்கும். கடல்களின் அடிப்புறத்திலுள்ள பாறையானது பஸால்ட்[3] அல்லது

---

1. கிரானிட்:—ஒருவகைக் கல். இது ஓர் அளவு நெருப்பினால் உருக்கி வார்க்கப்பட்டும், ஓர் அளவு நீரில் படிந்து உண்டாகிப்பிறகு சூட்டினாலும் அழுத்தத்தாலும் உருமாறியும் தோன்றியது. இது சற்று வெள்ளை நிறமுள்ளதாயும், சாம்பல் நிறமுள்ளதாயும், வெங்காயம் போன்ற நிறமுள்ளதாயும் இருக்கும். இதைக் கூழாங்கல் என்றும் சொல்வதுண்டு.

2. ஸ்பேசிபிக் க்ராவிடி:—ஒவ்வொரு வஸ்துவுக்கும் குறிப்பிட்ட ஒவ்வொரு கனம் உண்டு. அதைக் கொண்டே மற்றெந்த வஸ்துவினின்றும் அதைப் பிரித்தெடுத்து விடலாம். அதாவது ஒரே பரிமாணமுள்ள பற்பல வஸ்துக்களை ஆராய்ந்தால் அவற்றின் கனமானது வஸ்துவுக்கு ஏற்றபடி மிகுந்தோ குறைந்தோ காணப்படும். ஒரு பரிமாணமுள்ள தண்ணீரின் கனத்தை ஒன்று என்று அளவுகருவியாக ஏற்படுத்திக்கொண்டு, அதனோடு பிற பொருள்களை எல்லாம் அதே பரிமாணமுள்ள அளவில் எடுத்து ஒப்பிட்டுப்பார்த்து, அவற்றின் கனத்தை வரையறுத்து வைத்திருக்கின்றனர். இதற்குத்தான் ஸ்பெசிபிக் க்ராவிடி என்று பெயர். இது ஒவ்வொரு வஸ்துவின் திண்மைக்கு—செறிவுக்கு—ஏற்றபடியாகக் கூடியோ குறைந்தோ இருக்கும். அதனால் இதற்குத் தாரதம்மியச் செறிவு என்ற ஒரு பெயரும் உண்டு. உதாரணமாக: தண்ணீர் (ஸ்பெசிபிக் க்ராவிடி) 1·0 ; கருங்கல் 2·7; மேகவர்ணக்கல் 3·0 ; இரும்பு—7·4; பித்தளை—8·5; செம்பு—8·9; வெள்ளி—10·5, ஈயம்—11·3; பொன்—19·3; ஆஸ்மியம்—22·5.

3. பஸால்ட்:—ஒருவகைக் கல். இது நெருப்பினால் உருக்கி வார்க்கப்பட்டு உண்டாகியது. இதிலே கால்சியம், மக்னீசியம், இரும்பு, பொடாசியம், ஸோடியம், அலுமினியம், ஆக்ஸிஜென், ஸிலிகன் ஆகிய உலோகங்களும் அலோகங்களும் பலவாறாகக் கலந்து தோன்றும். இதிலுள்ள மணிகள் (ரவைகள்) மிகவும் பொடிப்பொடியாயிருப்பன. இதன் நிறமானது சற்று மேகவர்ணமாகவேனும், இலேசுப் பச்சையாகவேனும், மங்கலான தவிட்டு வர்ணமாகவேனும், கறுப்பாகவேனும் இருக்கும். இது மிகவும் கனமுள்ளது.

மேகவர்ணக்கல் வருக்கத்தைச் சேர்ந்தது. அதன் தண்ணீர்த்தூக்கம் 3·0-ஆக இருக்கும்.

பூமியின் உட்புறத்திலே மேகவர்ணக்கல்லினால் ஆக்கப்பட்டுள்ள பாறைகள் நெகிழ்வாயிருக்கும்போது பூமி அளித்த காட்சியானது எப்படியிருந்திருக்கும் தெரியுமா? கடலிலே இக்காலத்திலே பனிமலைகள் மிதக்கும்பொது, அவற்றுள் ஒரு சிறு பகுதிதான் நீர்மட்டத்தின்மேல் தோன்றும்; பெரும் பகுதி நீருள் ஆழ்ந்துகிடக்கும். அதுபோலவேதான் கருங்கல்லாலாகிய கண்டங்கள் நீலமேகக்கற்குழம்பாலாகிய சமுத்திரத்தில் மிதக்கும் போதும் இருக்கும். கணக்கிட்டுப்பார்க்கும்போது பொதுவாக அக்கண்டங்கள் திரவமட்டத்துக்குமேல் ஒருபங்கும் அந்த மட்டத்துக்குக் கீழ் சற்றேறக்குறைய எட்டுப்பங்கும் உள்ளனவாக இருக்கும் என்று சொல்லலாம்.

சராசரிக் கணக்கெடுத்துப்பார்க்கும்போது இமயமலையானது மூன்றுமைல் உயரமும் இருபத்துநான்குமைல் ஆழமும் உள்ளதென்று தெரியவருகிறது. இதை எப்படிக் கண்டுபிடித்தார்கள் என்று நீங்கள் கேட்கலாம். ஆகர்ஷணசக்தி[1]யில் ஏற்படும் வித்தியாசங்களைக் கொண்டு இதைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். இமயமலையை அதன் அடிவேர்வரையில் தோண்டிப் பார்த்துக் கண்டு பிடிக்கவில்லை. ஆகர்ஷணசக்தியானது பொருள்களின் அழுத்தத்துக்குத் தக்கபடி மாறியிருக்கும். இமயமலைப் பிரதேசத்திலே ஆகர்ஷணசக்தியைப்பற்றி எவ்வளவோ ஆராய்ச்சிகள் செய்து வந்தார்கள். பாறை இரண்டு வகையான அழுத்தம் உள்ளதாக இருக்கிறது. ஒருவகைப்பாறையின் செறிவளவு 2·7; மற்றொரு வகைப்பாறையின் செறிவு 3·0. பின்னுள்ள கனத்தபாறை அடிப்

அழுத்தமுள்ளது. ஆதலால் ரஸ்தாக்கள் போடுவதற்கு மிகவும் பிரயோஜனமானது.

1. ஆகர்ஷண சக்தி.—இதை ஆங்கிலத்தில் 'க்ராவிடேஷன்' என்று சொல்லுகிறார்கள். இந்தப் பிரபஞ்சத்திலே ஒவ்வொரு பொருளும் மற்ற ஒவ்வொரு பொருளையும் இழுத்துக்கொண்டே யிருக்கிறது. உதாரணமாகச் சூரியனும் சந்திரனும் பூமியும் ஒன்றையொன்று இழுத்துக்கொண்டே யிருக்கின்றன. இதற்குப் பிரபஞ்ச ஆகர்ஷணம் என்று சொல்லலாம். இதைச் சித்தாந்தப்படுத்தியவர் ஸர் ஐஸக் ந்யூடன். இதில் ஒரு சிறு பகுதிக்கு பூலோக ஆகர்ஷணம் என்று சொல்லலாம். அது என்னவென்றால் பூமியானது தன் மேலுள்ள பொருள் எல்லாவற்றையும் தன்னுடைய நடுமத்தியைப் பார்த்து இழுக்க முயலும் சக்தி. இதை ஆங்கிலத்தில் 'டெர்ரெஸ்ட்ரியல்' (அதாவது பூலோக) 'க்ராவிடேஷன்' என்றும் 'க்ராவிடி' என்றும் சொல்லுகிறார்கள்.

நீர் முழுதும் அப்பொழுது ஆவி வடிவமாகவே வாயுமண்டலத்தில் கலந்திருந்தது. பூமி குளிரக்குளிர அந்த நீராவி குளிர்ந்து இறுகி நீராகிப் பூமியில் விழுந்து திட்டுத்திட்டாக இருந்த நிலப்பரப்புக்களுக்கு இடையிலுள்ள பெரிய பள்ளங்களில் தங்கிச் சமுத்திரங்களென்ற பெயரைப்பெற்றன. கடல்கள்யாவும் பூமியின் மேல் பரப்பாகிய திட்டுக்களின் மேலே தங்கவில்லை; அவற்றிற்கு இடையேயுள்ள பள்ளமான இடங்களிலேதான் அமைந்துள்ளனவென்பது இங்கே கவனித்தற்குரியதாகும். நீர்தங்கிய இடம் திட்டுக்களாக அமைந்த இலேசுப் பாறைகளின்மேலன்று; பூமியின் மத்தியிலுள்ள பொருளாகிய கனத்த பாறைப் பொருளின் மீதுதான் தங்கியிருக்கிறது.

நிலப்பரப்பாகிய கண்டங்களை ஆக்கிய பாறை கிரானிட்[1] அல்லது கருங்கல் வருக்கத்தைச் சேர்ந்தது. அதன் தண்ணீர்த தூக்க எடை (ஸ்பேஸிக் கிராவிடி[2]) 2·7-ஆக இருக்கும். கடல்களின் அடிப்புறத்திலுள்ள பாறையானது பஸால்ட்[3] அல்லது

---

1. கிரானிட்:—ஒருவகைக் கல். இது ஓர் அளவு நெருப்பினால் உருக்கி வார்க்கப்பட்டும், ஓர் அளவு நீரில் படிந்து உண்டாகிப்பிறகு சூட்டினாலும் அழுத்தத்தாலும் உருமாறியும் தோன்றியது. இது சற்று வெள்ளை நிறமுள்ளதாயும், சாம்பல் நிறமுள்ளதாயும், வெங்காயம் போன்ற நிறமுள்ளதாயும் இருக்கும். இதைக் கூழாங்கல் என்றும் சொல்வதுண்டு.

2. ஸ்பெசிபிக் க்ராவிடி:—ஒவ்வொரு வஸ்துவுக்கும் குறிப்பிட்ட ஒவ்வொரு கனம் உண்டு. அதைக் கொண்டே மற்றெந்த வஸ்துவினின்றும் அதைப் பிரித்தெடுத்து விடலாம். அதாவது ஒரே பரிமாணமுள்ள பற்பல வஸ்துக்களை ஆராய்ந்தால் அவற்றின் கனமானது வஸ்துவுக்கு ஏற்றபடி மிகுந்தோ குறைந்தோ காணப்படும். ஒரு பரிமாணமுள்ள தண்ணீரின் கனத்தை ஒன்று என்று அளவுகருவியாக ஏற்படுத்திக்கொண்டு, அதனோடு பிற பொருள்களை எல்லாம் அதே பரிமாணமுள்ள அளவில் எடுத்து ஒப்பிட்டுப்பார்த்து, அவற்றின் கனத்தை வரையறுத்து வைத்திருக்கின்றனர். இதற்குத்தான் ஸ்பெசிபிக் க்ராவிடி என்று பெயர். இது ஒவ்வொரு வஸ்துவின் திண்மைக்கு—செறிவுக்கு—ஏற்றபடியாகக் கூடியோ குறைந்தோ இருக்கும். அதனால் இதற்குத் தாரதம்மியச் செறிவு என்ற ஒரு பெயரும் உண்டு. உதாரணமாக: தண்ணீர் (ஸ்பெசிபிக் க்ராவிடி) 1·0 ; கருங்கல் 2·7; மேகவர்ணக்கல் 3·0 ; இரும்பு—7·4; பித்தளை—8·5; செம்பு—8·9; வெள்ளி—10·5, ஈயம்—11·3; பொன்—19·3; ஆஸ்மியம்—22·5.

3. பஸால்ட்:—ஒருவகைக் கல். இது நெருப்பினால் உருக்கி வார்க்கப்பட்டு உண்டாகியது. இதிலே கால்சியம், மக்னீசியம், இரும்பு, பொடாசியம், ஸோடியம், அலுமினியம், ஆக்ஸிஜென், ஸிலிகன் ஆகிய உலோகங்களும் அலோகங்களும் பலவாறாகக் கலந்து தோன்றும். இதிலுள்ள மணிகள் (ரவைகள்) மிகவும் பொடிப்பொடியாயிருப்பன. இதன் நிறமானது சற்று மேகவர்ணமாகவேனும், இலேசுப் பச்சையாகவேனும், மங்கலான தவிட்டு வர்ணமாகவேனும், கறுப்பாகவேனும் இருக்கும். இது மிகவும் கனமுள்ளது.

மேகவர்ணக்கல் வருக்கத்தைச் சேர்ந்தது. அதன் தண்ணீர்த்தூக்கம் 3·0-ஆக இருக்கும்.

பூமியின் உட்புறத்திலே மேகவர்ணக்கல்லினுல் ஆக்கப்பட்டுள்ள பாறைகள் நெகிழ்வாயிருக்கும்போது பூமி அளித்த காட்சியானது எப்படியிருந்திருக்கும் தெரியுமா? கடலிலே இக்காலத்திலே பனிமலைகள் மிதக்கும்பொது, அவற்றுள் ஒரு சிறு பகுதிதான் நீர்மட்டத்தின்மேல் தோன்றும்; பெரும் பகுதி நீருள் ஆழ்ந்துகிடக்கும். அதுபோலவேதான் கருங்கல்லாலாகிய கண்டங்கள் நீலமேகக்கற்குழம்பாலாகிய சமுத்திரத்தில் மிதக்கும் போதும் இருக்கும். கணக்கிட்டுப்பார்க்கும்போது பொதுவாக அக்கண்டங்கள் திரவமட்டத்துக்குமேல் ஒருபங்கும் அந்த மட்டத்துக்குக் கீழ் சற்றேறக்குறைய எட்டுப்பங்கும் உள்ளனவாக இருக்கும் என்று சொல்லலாம்.

சராசரிக் கணக்கெடுத்துப்பார்க்கும்போது இமயமலையானது மூன்றுமைல் உயரமும் இருபத்துநான்குமைல் ஆழமும் உள்ளதென்று தெரியவருகிறது. இதை எப்படிக் கண்டுபிடித்தார்கள் என்று நீங்கள் கேட்கலாம். ஆகர்ஷணசக்தி[1]யில் ஏற்படும் வித்தியாசங்களைக் கொண்டு இதைக் கண்டுபிடித்திருக்கிறுர்கள். இமயமலையை அதன் அடிவேர்வரையில் தோண்டிப் பார்த்துக் கண்டு பிடிக்கவில்லை. ஆகர்ஷணசக்தியானது பொருள்களின் அழுத்தத்துக்குத் தக்கபடி மாறியிருக்கும். இமயமலைப் பிரதேசத்திலே ஆகர்ஷணசக்தியைப்பற்றி எவ்வளவோ ஆராய்ச்சிகள் செய்து வந்தார்கள். பாறை இரண்டு வகையான அழுத்தம் உள்ளதாக இருக்கிறது. ஒருவகைப்பாறையின் செறிவளவு 2·7; மற்றொரு வகைப்பாறையின் செறிவு 3·0. பின்னுள்ள கனத்தபாறை அடிப்

---

அழுத்தமுள்ளது. ஆதலால் ரஸ்தாக்கள் போடுவதற்கு மிகவும் பிரயோஜனமானது.

1. ஆகர்ஷண சக்தி.—இதை ஆங்கிலத்தில் 'க்ராவிடேஷன்' என்று சொல்லுகிறுர்கள். இந்தப் பிரபஞ்சத்திலே ஒவ்வொரு பொருளும் மற்ற ஒவ்வொரு பொருளையும் இழுத்துக்கொண்டே யிருக்கிறது. உதாரணமாகச் சூரியனும் சந்திரனும் பூமியும் ஒன்றையொன்று இழுத்துக்கொண்டே யிருக்கின்றன. இதற்குப் பிரபஞ்ச ஆகர்ஷணம் என்று சொல்லலாம். இதைச் சித்தாந்தப்படுத்தியவர் ஸர் ஐஸக் ந்யூடன். இதில் ஒரு சிறு பகுதிக்கு பூலோக ஆகர்ஷணம் என்று சொல்லலாம். அது என்னவென்ருல் பூமியானது தன் மேலுள்ள பொருள் எல்லாவற்றையும் தன்னுடைய நடுமத்தியைப் பார்த்து இழுக்க முயலும் சக்தி. இதை ஆங்கிலத்தில் 'டெர்ரெஸ்ட்ரியல்' (அதாவது பூலோக) 'க்ராவிடேஷன்' என்றும் 'க்ராவிடி' என்றும் சொல்லுகிறுர்கள்.

புறத்திலும் முந்திய இலேசான பாறை மேற்புறத்திலும் இருக்கிறதென்று சொன்னோம். ஆராய்ச்சியின்மேல் அங்கேயுள்ள பாறை அடுக்குக்களின் உண்மை தெரியவந்தது. கனமானபாறை எவ்வளவு ஆழத்தில் இருக்கிறது. இலேசானபாறை எங்கிருந்து தொடங்குகிறதென்பது அப்போது தெரியவந்தது. ஆராய்ச்சியாளர்களுடைய கணக்குக்கள், தரைமட்டம் வரையில் கனத்த பாறையும் அதற்குமேல் இலேசுப்பாறையும் இருக்கும் நிலைமைக்குரியனவாக இல்லை. அவர்கள் அங்கே 27 மைல் ஆழம்வரையில் 2·7 என்னும் செறிவளவுள்ள இலேசுப்பாறை இருக்கவேண்டுமென்று தீர்மானித்திருக்கிறார்கள். அதற்குக்கீழேதான் 3·0 என்னும் செறிவுள்ள கனத்தபாறை இருக்கவேண்டும். இந்த ஆழத்திலிருந்து இலேசுப்பாறையடுக்குத் தொடங்கி மலையாக அமைந்திருக்கிறதென்பது அவர்கள் கருத்து.

ஆகவே கண்டங்கள் யாவும், தம்மைக்காட்டிலும் செறிவு சற்று அதிகமாகவுள்ள கனத்த பாறைப் பொருள்களின்மேல் தங்கி மிதந்துகொண்டிருக்கின்றன என்பது தெளிவாயிற்று.

தற்காலத்திலே, பூமியானது உள்ளிருந்து வெளிவரையும் ஒரேகட்டியாகத்தான் இருக்கிறதென்பதில் சந்தேகமில்லை என்பது ஒரு சாரார் கொள்கை. அவர்கள், பூமி கட்டியாயில்லாவிட்டால் சுழல்கின்ற வேகத்தினால் வடதென் துருவங்களின்பக்கத்தில் இன்னும் அதிகத்தட்டையாகி மத்தியப்பகுதியிலே இன்னும் பருத்துத்தோன்றுமென்கிறார்கள். பூமியிலே ஏதாயினும் ஒரு புறத்திலே தோன்றுகின்ற பூகம்பங்களின் அசைவுகள் பூமியை ஊடுருவிச்சென்று எங்கும் உணரக்கிடப்பதனாலும் இக்கொள்கை வலியுறுகின்றதென்றும் அவர்கள் கூறுகின்றார்கள்.

இனி, கண்டங்களின் அடிப்புறத்திலே என்ன நிகழ்கின்றதென்று பார்ப்போம். முன்புசொல்லியபடி ரேடியத்தொடர்பினால் உட்புறத்தின் சூடு மேன்மேலும் அதிகரித்துக்கொண்டேவருகிறது. லக்ஷக்கணக்கில் வருஷங்கள் ஆக ஆக இங்ஙனம் சேகரமாகும் சூட்டால் பூமியின் உட்பகுதியாக அமைந்த நீலமேகக் கல் இளகுகிறது. சூடுண்டபோது ஒருபொருள் அளவில் பெருகுவதும் குளிரும்போது அளவு சுருங்குவதும் இயல்பென்பது பௌதிகநூலின் துணிபு. அதன்படி சூடுண்ட நீலக்கற்பகுதி இளகுவதோடு அளவிலும் விரிகிறது. அப்பொழுது அது தன் மேலுள்ள பூமியின் மேல்பரப்பைத் தூக்கித்தள்ள நேர்கிறது. அதனால் மேல்பரப்பானது விரிவுபட்டு முன்னிலையினும் பல்லாயிரக்கணக்கான சதுரமைல் விஸ்தீர்ணம் அதிகமுடையதா

கின்றது. ஆனால் நெகிழ்ந்து சுருங்கும் எலாஸ்டிசிடி [1] எனப்படும் சக்தி அதற்கு இல்லை. அதனால் அந்நிலப்பரப்பானது இடையிடையே பிளந்து வெடிப்புக்களும் கீறல்களும் உண்டாகிவிடுகின்றன. அப்பொழுது, அடியில் கொதித்துக்கொண்டிருக்கின்ற மேகவர்ணப்பாறைக் குழம்பானது அவ்வெடிப்புக்களின் வழியாகப் பொங்கி வெளிவருகின்றது; அது நிலப்பரப்பின்மேல் பரவுவதும் உண்டு; கடலின் அடிப்புறமாக உள்ள இடத்திற் பரவுவதும் உண்டு. இவ்விதமாகத் தான் இந்தியாவிலே அப்பாறைக் குழம்புவெள்ளம் பெருகிப்படிந்து குளிர்ந்து இறுகி இப்போது தக்ஷிண பீடபூமியாகக் காணப்படுகிறது. உலகத்திலே பிற இடங்களிலும் இங்ஙனம் நிகழ்ந்திருக்கிறது.

மேகவர்ணப்பாறையானது குழம்பாகி அளவிற் பெரிதாகிவிடவே அதன் செறிவளவு குறைந்துபோகும். அதனால் அது முன்பிலும் சற்று இலேசானபொருளாக ஆகிவிடும். அப்பொழுது அதன்மீது மிதந்து கொண்டிருக்கும் கற்பாறையாலாகிய நிலப்பரப்பானது முன்பிலும் சற்று அதிகமாகக் கீழே அழுந்தும்; அதன் மேல்மட்டத்தின் உயரம் குறையும். அக்காலத்தில் சிற்சில இடங்களில் நிலப்பரப்பு பக்கத்துள்ள கடல்மட்டத்துக்குக் கீழாகிவிடும். அதனால் அயலிலுள்ளகடல் நீர் அந்நிலப் பரப்பின்மேல் வந்துவிடும். இவ்வாறு கடல்களின் எல்லை வளர்ந்து நிலத்தின் எல்லை குறைந்துபோகும். நிலப்பரப்பின் இடையிலும் சிற்சில பகுதிகள் தாழ்ந்து போய்ப்பள்ளமாகிவிடும். இவை கண்டங்களின் நடுவே தோன்றும் கடல்களாகின்றன. காஸ்பியன் கடல் இங்ஙனம் உண்டானதே. இத்தகைய நிகழ்ச்சிகளால் மேடுகள் குறைந்து நீர்ப்பரப்பு எங்கும் அதிகமாகவே வாயு மண்டலத்தில் நீர் மிகச்செறிந்து கசகசவென்றிருக்கும் நிலையொன்று பூமியில் உண்டாகிவிடுகிறது. இந்நிலை தான் தாவரவருக்கங்களுக்கும் பிராணிவர்க்கங்களுக்கும் மிகவும் ஏற்றநிலை. ஆதலால் அக்காலத்தில் இவ்விரண்டு வர்க்கங்களும் செழித்து வளரத்தொடங்குகின்றன. சீமைச் சுண்ணும்பை உன்

---

1. எலாஸ்டிசிடி:—நீண்டு சுருங்கும் சக்தி. இதற்கு ரப்பர் தான் மிகவும் சாதாரணமான உதாரணம். ஒரு ரப்பர்த் துண்டை இழுக்கும்போது அது நீளும். அவ்வாறு இழுப்பதை விட்டுவிட்டால் அது உடனே தன் பழைய அளவைப் பெற்றுவிடும். அதேமாதிரி அதை அழுத்தினால் அழுந்தும். அழுத்திய சக்தியை எடுத்துவிட்டால் அது மீண்டும் தன்னுடைய பழைய வடிவத்தைப் பெற்றுவிடும். எல்லாப்பொருள்களிலும் இது வேறுபடும் அளவுகளில் காணுகின்றது. ரப்பரில் இது அதிகமான அளவிலும் களிமண்ணில் குறைவான அளவிலும் இருக்கிறது.

டாக்கிய பிராணிகளும் நிலக்கரிக்கு ஆதிகாரணமாகிய தாவரங்களும் செழிப்படைந்தது அக்காலத்திலேதான்.

இவ்வாறு சுமார் நான்குகோடி வருஷங்களிலே பூமியின் நடுப் பகுதியாகிய மேகவர்ணப்பாறைப் பிழம்பானது நெகிழ்ந்து நீர் போல ஆகிவிடும். அப்பொழுது அதிகக் கனமற்ற மேல்பரப்பு ஒன்று அதன்மேல் இருந்துகொண்டிருக்கும். அம்மேகவர்ணக் கல்லானது அநேக இடங்களில் கடலின் நீரிலிருந்து அதிக தூரத்தில் இராது. மேலேயுள்ள கடல் நீரானது அதன் அடியிலிருக்கும் கற்பாறைப் பிரதேசத்தை ஆறச்செய்து கொண்டே வரும். ஆனாலும் அடியிலுள்ள சூட்டின் மிகுதி அளவற்றதாக உள்ளது. அதனால் கடலின் நீரால் ஆறிவரும் பகுதி சூட்டை முற்றிலும் இழக்காமல் இருக்கும். அடியில் சூடும் மேலே நீரின் குளிர்ச்சியும் ஒருங்கே யுள்ள இந்தநிலையில் சூடானது இந்நிலப் பரப்பை அப்பளத்தை வாட்டுவதுபோல வாட்டத்தொடங்கும். இந்தச்சமயத்தில் தான் சந்திரன் பூமிக்கு உதவிபுரிகிறது.

சந்திரனும் பூமியும் ஆகர்ஷணசக்தியின் விதிப்படி ஒன்றையொன்று இழுத்துக்கொண்டே இருக்கின்றன. இந்த ஆகர்ஷணத்தால் கடினப்பொருளைக்காட்டிலும் திரவப்பொருள் அதிகமாக இழுக்கப்படும்; அதனால் சமுத்திரத்திலே ஏற்றவற்றங்கள் நாள்தோறும் நிகழ்ந்து வருகின்றன. சந்திரனுடைய ஆகர்ஷணத்தால் பூமியின் உட்புறத்துள்ள மேகவர்ணக்கற்குழம்பானது அதிகமாக இழுக்கப் படுகிறது. நீர்க்கடலில் ஏற்படுவதைப்போலவே அக்குழம்புக்கடலிலும் ஏற்றவற்றங்கள் உண்டாகின்றன. அவற்றால் அக்குழம்புப்பெருக்கின்மேல் மிதக்கும் நிலப்பரப்பானது பழைய இடத்தைவிட்டு விலகிச்சற்றே மேற்குப் பக்கமாகச் சரிந்து ஒதுங்கிப்போகும். போகவே அப்பரப்பால் மூடப்பட்டிருந்த மேகவர்ணக்குழம்புள்ள இடம் திறக்கப்படும். அப்பொழுது குளிர்ந்தகடல் அக்குழம்பின்மேல் வந்துபடிய நேரிடும். அது அவ்வாறு படிகையில் மேகவர்ணப் பகுதிக்குள்ள சூடானது கொஞ்சங் கொஞ்சமாக ஆறி இல்லாமற் போய்விடும். இவ்வாறு சூட்டை இழந்த அடிப்பாகம் மறுபடியும் குளிர்ந்து இறுகிப்போய் முன் போலக் கட்டியாகிவிடும். அது இம் முறையால் சூட்டை இழப்பதற்குச் சற்றேறக்குறைய ஐம்பதுலக்ஷ வருஷகாலமாகிறதென்று அறிஞர்கள் கணக்கிட்டிருக்கிறார்கள்.

இதன்பின் நிகழ்வது இதனினும் விந்தையானது: அடியிலுள்ள மேகவர்ணக்குழம்பு இறுகவே குளிர்ச்சியாற் சுருங்கும் விதிக்கேற்ப அது அளவில் குறையத்தொடங்குகிறது. அதனால்

பூமியின் குறுக்களவு குறைகிறது; பூமியின் மேற்பரப்பிலும் அதற்கேற்றபடி சுருக்கம் விழுகிறது. முன்னரே நீரால் குளிர்ந்து இறங்கியுள்ள கடலின் தளத்தில் ஒரு மாற்றமும் உண்டாவதில்லை; நிலப்பரப்பைச்சேர்ந்த கண்டங்களில்தான் வேறுபாடு நிகழ்கிறது; கண்டங்களின் மேற்புறத்தில் சுருக்கங்கள் விழுகின்றன. இத்தகைய சுருக்கங்கள் பெரும்பாலும் கடலோரத்திலுள்ள இடங்களிலேயே அதிகமாக ஏற்படுகின்றன. இக்காரணத்தாலேயே கடலோரத்தையொட்டிய இடங்களில் பெரியமலைத் தொடர்கள் காணப்படுகின்றன. தென் அமெரிக்காவில் கரையோரமாக நெடுக உள்ள ஆண்டீஸ் மலைத்தொடர் இங்ஙனம் அமைந்ததேயாகும்.

நிலப்பரப்பானது இங்ஙனம் சுருங்கும்போது கடலின் அடித்தளம் சுருங்காமலேயிருக்கிறதென்று எண்ணக்கூடாது; ஆனால் நிலப்பரப்பில் விழுவதைப்போல அதிகமான சுருக்கங்கள் அதில் உண்டாவதில்லை. நிலப்பரப்பின் நடுவிலுள்ள கடல்களின் அடிப்புறம் சிறிது சிறிது சுருக்கமடைந்து வருகிறது.

பூமியின் நடுவிற் பிழம்பாக உள்ள மேகவர்ணப்பாறைப்பகுதி இறங்கிச் சுருங்குதலால் பூமியின் குறுக்களவு குறைவதோடு நிலப்பரப்பு மேலே எழுகின்றது. முன்பு மேகவர்ணப்பாறைப் பகுதி நெகிழ்ந்தபோது அதன்செறிவு குறைய அதனால் நிலப்பரப்புக் கீழே அழுந்தியதற்கு மாறாக மீண்டும் மேகவர்ணப்பாறை இறங்கியபொழுது அதன் செறிவு அதிகப்படுவதால் நிலப்பரப்பு மேலே எழவேண்டிநேர்கிறது. அப்பொழுது தாழ்ந்துகிடந்த சிறுபொற்றைகளும் மலைக்குவடுகளாக உயர்ந்துவிடுகின்றன. பூமியினின்று மலைகள் மேலெழுந்தவரலாறு இதுதான்.

இத்தகைய நிகழ்ச்சிகளுக்குப் பிறகு நான்குகோடிவருஷங்கள்வரையில் பூமியின் மேல்பரப்பானது பெரும்பாலும் ஒரு நிலையாகவே இருக்கிறது. பிறகு மீண்டும் மேல்புறத்திலே உள்ள மலைகள் கரைந்து கரைந்து மட்டமாகிக் கொண்டே வருகின்றன. உட்புறத்திலே உள்ள சூடு வரவர மிகுந்துகொண்டே வருகிறது. கடல் இதை ஒருவாறு ஆற்றுகிறது. மண்பரப்பிலே பூமி ஆறாது சுட்டுப்போகிறது; உள்நெகிழ்கின்றது; சந்திரன் அதை இழுக்கின்றது; நிலம் சறுக்கி நகர்கின்றது; நிலப்பரப்பின்மேல் கடல் ஊர்ந்து இடங்கொள்கின்றது; பூமியைத்தடவி ஆறுகின்றது. உள் இறுகுகின்றது; செறிவு மிகுகின்றது; மறுபடி மலைகள் எழுந்து ஓங்குகின்றன. இவ்வாறு பூமியின் வாழ்வுச்சக்கரம் சுழன்றுகொண்டேயிருக்கிறது.

இங்ஙனம் பல தடவைகளாகப் பூமியில் உயர்வும் தாழ்வும் மீண்டும் மீண்டும் தோன்றி வருகின்றன. இதுவரை ஆறு தடவை இத்தகைய நிகழ்ச்சிகள் நேர்ந்திருக்கின்றன.

இவ்வாறாகப் பூமியிலே தோன்றிய ஜீவராசிகள் நிலைத்து நிற்குமாறு காப்பாற்றி வருவது சந்திரன் தான் என்பது தெரிய வருகிறது. சந்திரன் இல்லாவிட்டால் பூமியின் நிலப் பரப்பின் சூடு குறையாது; மிகுந்துகொண்டே வரும். ஜீவராசிகள் யாவும் சூட்டினால் கருகிப்போய்விடும். இந்தப்பூமியும் உயிரற்ற பாழ்நில மாகக்கிடக்கும்.

பூமியைக் குளிரச்செய்து ஜீவராசிகளைக் காப்பாற்றி நம்மை யும் பரம்பரையாக இந்நிலவுலகில் நிலவச்செய்வது சந்திரனே.

"திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்
கோங்கலர்தார்ச் சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ்
வங்க ணுலகளித்த லான்."

---

## உடற்பயிற்சிக் கல்வி

மாஞ்செஸ்டர் கலாசாலைத் தலைவராயிருந்த ரெவரெண்ட் டாக்டர் டி. பி. ஜேக்ஸ் கூறுவதாவது:—

இதுகாலை பள்ளிக்கூடங்க்ளிலும் சர்வகலாசாலைகளிலும் மூளையைப் பொறுத்த கல்விமட்டும் மாணவர்களுக்கு அளிக்கப்படுகின்றது. அவர்க ளுக்கு உடலொன்று இருக்கிறதென்ற ஞாபகமே நமக்கு இல்லை. மூளைக் கும் உடலுக்கும் சமத்துவமான கல்வி இருந்துவரவேண்டியது அவசியம். இந்த இருவகைக் கல்வியையும் நாம் ஒன்றாக இணைப்பதால் மாணவர்கள் உடல்வலிமையையும் அழகையும் பெறுவதுமாத்திரமல்லால், அவர்களுடைய கல்வியறிவும், ஞாபகசக்தியும், இவற்றையெல்லாம் காட்டிலும் புலன்களை அடக்கியாளும் சக்தியும் பலமடங்கு விருத்தியாகின்றன. கல்வித்துறையி னது முன்னேற்றத்தின் அடுத்தபடி உடற்பயிற்சிக்கல்விக்கு மூளைக்கல்வி யோடு சமஅந்தஸ்தைத் தருவதேயாம்.




அசை போடும் பிராணிகளின் இரைப்பை

# ஆடுமாடுகள் அசைபோடுவதேன்?

டி. என். எஸ். இராகவாச்சாரி பி.ஏ.

---

இப்பூவுலகத்தில் கடவுளால் சிருஷ்டிக்கப்பட்டு உயிர் வாழும் பிராணிகள் கோடிக்கணக்கானவை. பூதக்கண்ணுடியின் உதவியில்லாமல் நமது கண்களுக்குப் புலப்படாமல் நீர் நிலைகளில் சஞ்சரிக்கும் மிக்க நுண்ணிய அமீபா (*Amoeba*) என்னும் பிராணியிலிருந்து ஜீவவர்க்கத்துள் சிறந்து விளங்கும் மனிதன் வரையில் எல்லாப் பிராணிகளுடைய சரீரங்களும் அவயவங்களும் அவ்வப்பிராணிகளின் உயிர் வாழ்க்கைக்கேற்றவாறு அமையப் பெற்றுள்ளன.

தாம் ஈன்ற குட்டிகளுக்குப் பாலூட்டி வளர்க்கும் ஜீவஜந்துக்கள் (மனிதவர்க்கமும் இதில் அடங்கியபடி) அனைத்தையும் ஜீவதத்துவ சாஸ்திர நிபுணர்கள் மம்மேலியா (*Mammalia*) என்ற ஒரு வகுப்பில் சேர்த்துள்ளார். எனவே, இவ்வகுப்பில் சேர்த்துள்ள பிராணிகளுக்குரிய அம்சங்கள் பல ஒருப்பட்டன வாயினும், வெவ்வேறு பிராணிகள் வெவ்வேறு விதமாகத் தங்கள் உயிர்வாழ்க்கையை நடாத்த வேண்டியிருப்பதால், அதற்கேற்ப அவைகளின் அவயவங்களும் மாறுபாடுகள் அடைந்துள்ளன. மம்மேலியா வகுப்பிற்சேர்ந்த நாலுகால் பிராணிகளுள், ஆடு, மாடு, மானினங்கள், ஒட்டைச்சிவிங்கி, ஒட்டகம், இன்னும் நமது தேசத்தில் காணப்படாத சிலமிருகங்களும் அசைபோடும் வழக்கத்தையுடையனவாதலால் அவைகள் ஒரு சிறு வகுப்பினவாக மதிக்கப்படுகின்றன. சிங்கம் புலி முதலிய மாமிச பக்ஷிணிகளும், குதிரை யானை முதலிய தாவரப்பக்ஷிணிகளும் அசைபோடுவதில்லை. ஆகவே அவைகளின் ஜீரணக்கருவிகள் பொதுவாக விசேஷணங்கள் ஒன்றுமில்லாமல் மனிதருடைய ஜீரணக்கருவிகளை ஒத்திருக்கின்றன. ஆனல் மேற்கூறிய மிருகங்களில் சிற்சில சில்லறை வேறுபாடுகள் மட்டும் இருத்தல்கூடும்.

புல் பூண்டு தழை வைக்கோல் முதலிய உணவுப் பொருள்களையே ஏராளமாகத் தின்று உயிர்வாழும் பிராணிகள், தாங்கள் உட்கொள்ளும் மேற்கூறிய ஆகாரத்தை, அசைபோட்டு ஜீரணம்

செய்துதான் இரத்தவோட்டத்தில் கலந்து தேகவளர்ச்சிக்கேற்ற விதமாக மாற்றக்கூடும்.

படத்தில் காட்டியுள்ள இரைப்பை ஓர் ஆட்டினுடையது. (படத்தைப்பார்க்க.) அசைபோடும் மற்றைய பிராணிகளின் இரைப்பைகளும் இத்தகையனவே. ஒட்டகத்தின் இரைப்பையில் மட்டும் மூன்று அறைகள் தான் உண்டு. அசைபோடும் பிராணிகள் ஏராளமான புல் பூண்டு வைக்கோல் முதலிய தீனிகளையுட் கொள்ளுகின்றன. அத்தீனியில் உணவுச் சத்துக்கள் சிறிதளவே உண்டு. எனவே, இச்சிறிதளவுள்ள சத்துப்பொருளைச் சிறிதும் வீணாக்காதபடி அப்பிராணிகள் உபயோகமாக்க வேண்டியது அவசியமாகிறது.

ஒருமாடு அல்லது ஆடு, தான் மேய்கின்ற இடத்திலுள்ள புல் தழைகளை நுனிப்பற்களால் கிள்ளிச் சேகரித்து, மெல்லாமல் விழுங்கிவிடுகிறது. அப்படிவிழுங்கிய உணவு இரைப்பையின் நான்கு அறைகளுள் பெரியதான முதல் அறைக்குள்போய்ச் சேருகிறது. இந்த அறைக்கு ரூமென் (*Rumen*) என்று பெயர். அவ்வறையில் சிறிதுநேரம் ஊறுவதால் சற்றே மிருதுவாக்கப்பட்ட உணவு இரண்டாவது அறைச்குள் புகுத்தப்படுகிறது. இதற்கு ரெடிகுலம் (*Reticulum*) என்றுபெயர். இரண்டாவது அறையின் உட்புறம் தேன்கூட்டையும், நெருக்கமாய்ப் பிணைக்கப்பட்ட வலைக் கூட்டையும் ஒத்திருக்கும். இவ்வறைக்குள் உணவானது பின்னும் கொஞ்சம் மிருதுவடையும். பின்னர், அவ்விரைப்பையிலுள்ள தசைத்தொகுதிகள் சுருங்கிச் சுருங்கிப் பெருகுந்தன்மையால், மாட்டின் வாய்க்குள், மறுபடியும் போய்ச் சேருகிறது. இரண்டு அறைகளிலும் ஊறி மிருதுவாக்கப்பெற்ற உணவை மாடு வெகு சாவகாசமாகத் தன் கடைவாய்ப் பற்களால் நைவடையும்படி மென்று மூன்றாவது அறைக்குள் செலுத்தி விடுகிறது; இந்த அறைக்கு ஸால்டீரியம் (*Psalterium*) என்று பெயர். புல் மேய்ந்த பிறகு மாடுகள் ஓரிடத்தில் ஒய்வுடன் படுத்து வெறும் வாயை இடைவிடாது மெல்லுவதுபோல் நமக்குப் புலப்படும் காட்சியின் சூக்ஷ்மம் இதுவேதான்.

மூன்றாவது அறையின் உட்புறம் தந்திக்கம்பிகள் நிறைந்து பொலியும் வீணையை ஒத்ததாய்த் தசைக்கம்பிகள் மலிந்துள்ளது. இவ்வறைக்குள் உணவு கூழைப்போல் மாற்றப்பெற்று பிறகு நான்காவது அறைச்குள் வந்து சேருகிறது. இந்நான்காவது அறைதான் நமது இரைப்பைக்கு ஒப்பானது. இதற்கு அபொமேஸம் (*Abomasum*) என்றுபெயர். இவ்வறைக்குள் ஜாடராக்னி

என்று சொல்லக்கூடிய ஜீரணசக்தியுள்ள ரசம் ஊறி வழிந்து நிரம்பியிருத்தலால், உணவுமுழுவதும் செவ்வையாக ஜீரணமடைந்து குடலுக்குள் புகுத்தப்படுகிறது. குடலின் உட்புறத்து மெல்லிய தசை மிகச்சிறிய ஆயிரக்கணக்கான இரத்தக்குழாய்களால் நிரம்பியுள்ளது. இக்குழாய்கள் வழியாகத்தான், ஜீரணமடைந்த உணவிலுள்ள சத்துப்பொருள்கள் இரத்தவோட்டத்தில்கலந்து, தேக விருத்தியை உண்டுபண்ணுகிறது.

அசைபோடும் பிராணிகளின் குடல் மிகநீண்டது. ஆட்டின் குடல் சுமார் 50 அடிநீளமும், ஒட்டகத்தின் குடல் சுமார் 280 அடி நீளமுமிருக்கும். மனிதருடைய குடல் சுமார் 25 அடி நீளமேயுள்ளது. அசைபோடும் பிராணிகளின் குடல்கள் மட்டும் அதிக நீளமாய் இருப்பானேன்? இதன் மர்மம் ஒன்றும் அதிசயப்படக்கூடியதல்ல.

இப்பிராணிகள் உட்கொள்ளும் உணவுப்பொருள்களின் நிறையளவு மிகப்பெரிதாயினும், அதிலுள்ள சத்துப்பொருளின் பகுதி மிகச்சிறிதேயாதலால் (அந்தச் சத்துப்பொருளில் சிறிதும் வீணாக மலத்துடன் கழிக்கப்படாவண்ணம்) அவ்வளவு சத்தையும் எளிதில் இரத்தத்துடன் கலக்கும்படி செய்வதற்கென்றே குடல் பிரதேசத்தின் விஸ்தீரணம் அதிகமாக அமைக்கப்பட்டுள்ளது. ஈசுவரசிருஷ்டியின் விசித்திர விநோதங்கள் மிகப் பல. அவைகளுள் இது ஒன்று.

---

## திராவிட பாஷையின் வியாபகம்

இந்தியாவுக்கு வடமேற்கே பெலுஜிஸ்தானத்தின் ஓர் பகுதியில் ப்ராஹி என்று ஒருபாஷை பேசப்படுகிறது. அது திராவிடத்தின் சிதைவு. அதைப்பேசுவோர் துருக்கிய ஐரானியபிரிவைச் சேர்ந்தவர்கள். ஆரிய மொழி, இந்தியாவுக்கு வருவதற்குமுன் கங்காசிந்து சமவெளியில் திராவிட பாஷை பேசப்பட்டுவந்தது. ஆரியமொழியில் டவர்க்கம் அமைந்திருப்பதும் அம்மொழியில் திராவிடபாஷைச் சொற்கள் பல புகுந்திருப்பதும் ஆரியர் இந்தியாவில் காலெடுத்து வைக்கும்போது ஆப்கானிஸ்தானத்திலும் பாஞ்சாலத்திலும் திராவிடர்களோடு பயின்றிருக்கிறார்கள் என்பதைக் காட்டுகின்றன. இதனால் திராவிடர்கள் ஒருகாலத்தில் அநேகமாக இந்தியா முழுவதும் பரவியிருந்தார்கள் என்பதைத் தெரிந்துகொள்ளுகிறோம்.

ஆர். டி. பேனர்ஜி.

# அபார மூளை

கி. ஸ்ரீ.

---

சூத்தக்கிறுக்கு. ஞாபகமறதிக்கோ கேட்க வேண்டாம்; பிடிவாதமோ குரங்குப்பிடிவாதம். ஆனால்—வேலைசெய்யச்சொன்னால் அதற்கு ஈடாக வேலை செய்யக்கூடிய மூளையே கிடையாது என்னலாம். அதுயார் தெரியுமா? மூளைக்கேற்ற முகம் இல்லை. முகம் கடினமானதாகவும் கெட்டியாகவும் தோன்றும் என்று நினைக்கிறீர்களா? இல்லை, கம்பீரமும் ருசியும் கலந்த கவி அல்லது பாடகனது முகத்தைப்போன்றது. சாந்தம், சமயத்திற்கேற்றவாறு தாழ்ந்துபோவது, விட்டுக்கொடுத்தல், முதலிய நற்குணக் களஞ்சியம். ஒருசமயம் ஏழைகள் உதவிக்குப் பணம் சேகரிக்கப் பாடச்சொன்னபோது "ஐயோ. எனக்கு என்ன பாடத்தெரியும்! தொழிலாகப் பாடுவோரைக் கேளுங்கள் ...." என்றார். ஆனால் கடைசியில் "ஏழைகளுக்காக அல்லவா" என்று ஒப்புக்கொண்டார். ஒருசமயம் கப்பலில் இவருக்கென்று ஒருபெரிய இரட்டை அறை கொடுத்தார்கள். அப்பொழுது "இது எனக்கு வேண்டாம். மஹாராஜாக்களுக்கு அல்லவோ இது வேண்டும்" என்று ஒதுக்கிவிட்டார். ஆனால் கப்பல் கம்பெனிக்காரர் அது தங்களுக்கு அவமானமாகும் என்று சொன்னதும் சரிஎன ஒப்புக்கொண்டார். அமெரிக்காவில் விருந்துக்கு அழைத்தார்கள். அவரும் அவர்மனைவியும் போகும் பொழுதே "இவர்கள் நம் போன்றவர்கள் அல்லர். மரியாதையாகக் கொடுத்ததைச் சாப்பிடுவோம்" என்று பேசிக்கொண்டு சென்றார்கள். அங்கு ஒவ்வொருவருக்கும் ஒரு தட்டில் ஒரு கொத்துப்புஷ்பம் அழகாகவைத்தார்கள். "இதுவும் சாப்பிடத்தானுக்கும்" என்று அவர் மனைவி சாப்பிட்டாள். புருஷனுக்கு ஏற்றமனைவி. தகப்பனின் தம்பிக்கும், தாயின் தங்கைக்கும் பிறந்தவள் அல்லவா! 1500 டாலர் செக் ஒன்று ராக்பெல்லர் இவருக்கு இனாம் அளித்தார். அதைப்புத்தகத்தில் படிக்கும் இடத்திற்குக் குறியாகவைத்துப்படித்தவர் புத்தகத்தை யாருக்கோ கொடுத்துவிட்டார். செக்கு மாத்திரம் ஞாபகம் இருக்கிறது. யார் கொடுத்தார்கள் என்பதே மறந்து விட்டது. நல்ல ஞாபகம். பெல்ஜியம் அரசி விருந்துக்கு அழைத்தாள். எதிர்கொண்டு அழைக்க எல்லாரும் ரயிலடியில் காத்துக்கொண்டிருக்

---

ஆங்கிலத்தில் ஆல்வா ஜான்ஸ்டன் என்பவர் எழுதியதை ஒட்டித் தமிழில் எழுதப்பட்டது.

கிறார்கள். இவர் ஒரு 3-ம் வகுப்பு வண்டியிலிருந்து இறங்கி நேரே அரண்மனைக்கு நடந்து போனால் அங்கு எல்லாருக்கும் நகைப்பு என்று சொல்லவும் வேண்டுமோ? "நோபல் பரிசு" இதுபெரிய மேதாவிகளுக்கே கொடுக்கப்படுகிறது. இதை இவருக்கு அளித் தார்கள். "இது எனக்கு வேண்டாம். ஏழைகளுக்கு அவசியம்" என்று உடனே தர்மத்திற்குக்கொடுத்தார். ஒருகட்டுரைக்கு 500 பவுன் தருவதாகப் பிரசுரகர்த்தன் ஒருவன் கேட்டதற்கு "என்னடா, பைத்தியமா நீ. ஒருகட்டுரைக்கு 500 பவுன் அதிகம் அல்லவா? நான் என்ன பணப்போட்டிக்கு எழுதுபவனா?" என்று 250 பவுனுக்கு ஒருகட்டுரை எழுதித்தந்தார். பெரிய சர்வ கலாசாலையில் உத்தியோகம் அளித்தார்கள். "இவ்வளவு சம்பளம் வாங்கிக்கொண்டால் அது எனக்குப்பாவம். ஏழைகள் கஷ்டப் படும்பொழுது நான் இவ்வளவு அடையக்கூடாது" என்று பாதியிலும் குறைவாகச்சம்பளம் பெற்றுக்கொண்டார். பணம் பிறருக்குக் கொடுக்கப்படுவதற்காக உளது என்பது இவரது கொள்கை. ஒருகாலத்தில் இவர் 150 ஏழைக்குடித்தனங்களைக் காப்பாற்றிவந்தார். சிகரெட்டுக்கும் பற்பொடிக்கும் அத்தாக்ஷி பத்திரம் எழுதிக் கொடுக்கும்படி இவருக்கு வந்த விண்ணப் பங்கள் எவருக்கும் வந்ததில்லை. இவை லஞ்சம் வாங்கும் காரியம் என்று நிராகரித்துவிட்டார்.

இப்பெரியார்தான் "மஹரிஷி ஐன்ஸ்டீன்". 1879-இல் பிறந்தவர். பால்யம் தொட்டு யுத்தமின்மைக் கட்சிக்கும் யூதமதத் திற்கும் ஈடுபட்டவர். 8 அல்லது 9 வயது பையனாய் இருக்கும் பொழுது மியூனிச் நகரில் ராணுவ வீரர் பயிற்சி செய்வதைக்கண்டு தம் தந்தையிடம் "அப்பா, என்னை இத்தொழிலினின்றும் காப் பாற்றுவீராக" என்றார். இதற்காக அவரும் ஸ்விட்ஸ்ஸர் லாந்து தேசத்தவரானார். 10 வயது பையனாக இருக்கும் காலத் தில் ஒரு கிறிஸ்தவப்பாதிரியார் இவர் படித்துவந்த பள்ளிக்கூடத் திற்கு வந்தார். ஏசுநாதரை யூதர்கள் கொன்றபொழுது அவரது காலில் அடிக்கப்பட்ட ஆணி என்று ஒன்றை அப்பையன்களுக்குக் காண்பித்தார். மற்றமாணவர்கள் ஐன்ஸ்டீனுடன் பிறகு எப்படிப் பழகி இருப்பார்கள் என்றுசொல்லவேண்டுவது இல்லை. பெரிய கணிதாசிரியரானபின் கொஞ்சகாலம் மதத்துவேஷத்தால் தாக் கப்படாமல் இருந்துவந்தார். ஆனால் ஹிட்லர் ராஜ்யம் ஏற்பா டானதும் அவர்மனம் கொஞ்சம் தத்தளிக்க ஆரம்பித்தது. இப்பொழுது அமெரிக்காவில் வசித்து வருகிறார். ஆயினும் இவர் உயிருக்கே ஜெர்மானியர் உலைவைக்கிறார்கள் என்று வதந்தி உலவு கிறது.

பள்ளிக் கூடத்தில் கொஞ்சம் மக்குத்தான். பேச்சும் கொஞ்சம் மெதுவு. உபாத்தியாயர்கள் இவர் மூளைக்குள் இருக்கும் வஸ்து என்னவாயிருக்கும் என்று கூட ஒரோர் சமயம் சந்தேகித்தனர். இவர் தந்தை ஒரு மின்சார எஞ்சினியர். இவருக்கு வயது 15 ஆக இருக்கும் பொழுது இவரை அழைத்துக்கொண்டு இத்தாலியில் உள்ள மிலான் நகருக்கு வேலைக்குச்சென்றார். 17 வயதில் ஸ்விட்ஸர்லாந்து தேசத்து ஸூரிச் நகரத்துக் கைத்தொழில் கலாசாலையில் சேர்ந்தார். அங்கு இவருடன்படித்த ஒரு பெண்ணைச் சில ஆண்டுகளுக்குப்பின் 1903-இல் மணந்தார். இவர்களுக்கு இரண்டு பிள்ளைகள் பிறந்தனர். பிறகு இருவருக்கும் ஒத்துக்கொள்ள வில்லை. ஆதலால் மணரத்து செய்து கொண்டார்கள். 1911-இல் எல்ஸா என்னும் பெண்ணை மணந்தார். அவள் இவர் தந்தையின் தம்பிக்கும் தாயின் தங்கைக்கும் பிறந்தவள்.

பிழைக்க வழிதெரியாத பேர்வழி, 3 தடவை உபாத்தியாயர் வேலைபார்த்தார். ஒவ்வொரு தடவையும் உபயோகமில்லை என்று நீக்கப்பட்டார். எதுவும் கிடைக்காவிடில் உபாத்தியாயர் தொழில் என்பது வழக்கம். அதற்கும் இவர் உபயோகமில்லை எனில், என்னே இவர் ஸாமர்த்தியம்! 1902-இல் பிரன் நகரத்து,பேடண்ட் ஆபீஸில் வேலைக்கமர்ந்தார். குமாஸ்தா உத்தியோகத்திற்கு இவர் ஏற்றவர் அல்லர். ஒழிந்த நேரத்தில் கணக்குப்போடுவார். உத்தியோகத்தின் சட்டத்திற்கு இது விரோதம். ஆனல் சட்டவிரோதமே இவர் தொழில். பெரிய ஆபீஸர் வந்துவிட்டால் கடிதத்துண்டுகள் மேஜை டிராயர்க்குள்ளாவது தலைத்தொப்பிக் குள்ளாவது ஒளிந்து விடும். இவர் ஆயுதங்கள் ஒரு அட்டையும், பௌண்டன்பேனவும், தலைத்தொப்பியுமே. இவைகளில் தொப்பி முக்கியமானது.

1905-இல் இவரது 26-ம் வயதில் (*Specil Relativity Theory*) ஸம்பந்த ஸித்தாந்தப்பகுதி என்னும் விஷயத்தைப் பற்றி ஐந்து முக்கிய மான வியாஸங்கள் எழுதினர். இதுவே இவரது "ஸம்பந்த ஸித்தாந்தம் என்னும் தரிசனத்தின் ஆரம்பம். இவ்வியாஸங்களில் வழக்கத்தில் உள்ள நியூடன் (*Newton*) முதலியவர்களுடைய ஸித்தாந்தங்களைத் தகர்த்தார். வெகு சீக்கிரத்தில் கீர்த்திஎய்தினர். உடனே பலர் வரவேற்றனர். பல பெரிய கலாசாலைகளில் உத்தியோகம்பெற்றார். அதிர்ஷ்டம் பொங்க ஆரம்பித்தது. 1915-ல் பொது ஸம்பந்த ஸித்தாந்தம் என்னும் தர்சனத்தை வெளியிட்டார். இன்னும் இதை ஸாமான்ய ஜனங்கள் அறியவில்லை. 1919-ம் வருஷத்து பூர்ணசூர்ய கிரகணம் முதலிய பரீக்ஷைகளில் இவரது ஸித்தாந்தம் ஜயம்

பெற்றதும் இவர் உலகப்பிரசித்திபெற்ருர். இப்பொழுது சாஸ்திர ஆராய்ச்சியாளர்களில் இவருக்கு மேம்பட்டவர் எவரும் இலர்.

கோபம் என்பதே அறியாதவர். மனச்சஞ்சலம் ஒருபொழுதும் இவரை அணுகினது கிடையாது. இவர் வேலேயோ வெகு கடினமான விடுகதைகள் போன்ற ஆராய்ச்சியே. பலதடவை பல முயற்சிகள் வீண் போயினும் அவற்றை மேன்மேலும் ஆராயும் சாந்தஸ்வபாவமுடையவர். மனிதர்களால் அறியமுடியாது தேவர்களே அறியும் விஷயங்களே இவர் அறிந்து இருக்கிருர். ஆனல் அவற்றை நமக்குக் கணிதக்குறிப்பால் அல்லது வேறுவழியில் சொல்ல இயலவில்லே. மனிதவர்க்கத்தின் அறிவின் உன்னதம் இவரிடமே உள்ளது.



ஐன்ஸ்டீன்.

இவர் சாந்தமே உருவாதலால் இருவருக்குள் எப்படி மனவேறுபாடு உண்டாகும் என்று ஆச்சரியப்படுகிருர். இவர் பொழுது போக்குக் கப்பல் ஓட்டுதல். அதற்கெனச் சிறு படகு வைத்துக் கொண்டு பர்லின் நகரத்து ஏரியில் பொழுது போக்குவார். இவர் மீசான் திறமையைப்பற்றி எவரேனும் குறைவாகக் கூறிவிட்டால் போதும்; வந்துவிடும் கோபமும் தற்புகழ்ச்சியும். இது ஒன்றுதான் இவரை மனித வர்க்கத்தினர் என்று காண்பிக்கிறது.

நன்மதிப்புப் பத்திரங்களுக்காக இவரை அணுகுவோர் பல கோடிக்கணக்கினர். சித்திரம், ராஜீயம், கல்வி, தத்துவம், வேதாந்தம், செலாவணி ஆராய்ச்சி, முக்கியமாக புருஷன் பெண்சாதி சச்சரவுதீர்ப்பு, இவைபோலப் பலவிஷயங்களுக்கும் அலுப்புச் சலிப்பு இன்றி எல்லாரையும் ஒரேமனதுடன் பாவித்துப் பலருக்கும் பதிலும் புத்திமதியும் எழுதிக்கொண்டே இருக்கிருர். குழந்தைகளுக்குத் தாலாட்டுப் பாட்டுக்கள் எழுதுகிருர். பெரியவர்களுக்குச் சந்தேகங்களேத் தீர்க்கிருர். பணக்காரர், ஏழை, பெரியவர், சிறியவர் முதலியபேதமே இவருக்குக் கிடையாது. பேச்சிலோ ஒரு ருசியும் சாதுர்யமும் ததும்பும். ஆனல் முகம் பால்யத்தில் இருந்தவாறே பேய்பிடித்தது போல் தோன்றினும், அங்கு விளங்கும் பிரகாசமும், வசீகரமும், அன்பும் இவரைத்தெய்வப் பிறப்பு என்றே விளக்குகின்றன.

# கிழமைகள்

ஏ. குப்புஸாமி ஐயர்

---

ஒரு வாரத்தில் ஏழுகிழமைகள் இருக்கின்றன. சூரியன் சந்திரன் முதலிய ஏழு கிரகங்களின் பெயரால் ஏழு கிழமைகளை யும் வழங்குகிறோம். கிழமைகளின் வரிசை வாய்ந்த வழி விந்தை யானது. கிரகங்கள் பூமியைச் சுற்றி ஓடுவதாக முன்னோர்கள் சொன்னார்கள். சனி, வியாழன், செவ்வாய், சூரியன், வெள்ளி, புதன், சந்திரன் என்ற வரிசையில் கிரகங்கள் அமர்ந்தனவாகவும் கருதினார்கள். ஒரு நாளில் 24 மணிகள் இருக்கின்றன. ஒரு மணி நேரத்தை 'அவர்' (*Hour*) என்று இங்கிலீஷ் பாஷையில் சொல்லுகிறோம். ஒரு மணிநேரம் $2\frac{1}{2}$ நாழிகை. இதை முன்னாளில் 'ஹோரா' என்று வழங்கினார்கள். ஹோரா என்பது கிரீக்பாஷை என்று சிலர் சொல்லுகிறார்கள். 'அஹோராத்ர' என்றசொல்லின் முதல் எழுத்தும் கடைசி எழுத்தும் நீங்கி 'ஹோரா' என்றசொல் பிறந்தது என்பது சிலரின் கொள்கை. ஒரு நாளின் 24 ஹோரை களுக்கும் காலஹோரை என்று பெயர். சனிமுதலிய ஏழுகிரகங் களுக்கும் தலைக்கு ஒவ்வொரு ஹோரைவிகிதம் அதிகாரம் உண்டு. ஒரு நாளில் ஒவ்வொரு கிரகத்துக்கும் மும்மூன்றுதரம் அதிகாரம் கிடைக்கும். ஆகாயத்தில் கிரகங்கள் அமர்ந்த வரிசைப்படி அதி காரம் தொடங்கும். வரிசையின் தொடக்கத்தில் எல்லாவற்றிற் கும் மேலே சனி இருப்பதால் முதலாவது சனிக்கிழமை. இன்று தொடக்கத்தில் சனி ஹோரை; பிறகு வியாழனின் ஹோரை; பிறகுசெவ்வாய் ஹோரை. இப்படியே வரிசையாக மற்றக் கிரகங் களின் ஹோரைகளும் நிகழும் புதன்ஹோரை முடிந்தவுடன் திரும்பவும் சனியின்ஹோரை தொடங்கும். ஆகவே 1, 8, 15, 22-வது சனிஹோரைகளாகும்; 23-வது வியாழன்ஹோரை; 24-வது செவ்வாய் ஹோரை. இத்துடன் சனிக்கிழமை முடிந்தது. வரிசையில் அடுத்து அமர்ந்த கிரகம் சூரியன் ஆகையால் மறுநாள் சூரியஹோரை தொடங்குகிறது. அன்று ஞாயிற்றுக்கிழமை. இப்படியே கிழமைகளின் வரிசை ஏற்பட்டது. $24 \div 7 = 3\frac{3}{7}$ ஆகையால் வரிசையில் நான்காவது நான்காவது கிரகத்தின் ஹோரையே கிழமைகளின் வரிசைக்கு ஆதாரமாகிறது. சனியி னின்றும் எண்ணிவர வரிசையில் நான்காவது கிரகம் சூரியனும், சூரியனிலிருந்து நான்காவது சந்திரனும், அதினின்றும் நான்காவது

செவ்வாயும்—இப்படியே புதன் முதலிய கிரகங்களும் கிழமை களின் வரிசைக்குக் காரணமாகின்றன. காலஹோரையின் (*Planetary Hours*) கிரமப்படி கிழமைகளை அமைத்தார்கள்.

நவீன வானநூலில் (*Modern Astronomy*) கிரகங்கள் சூரியனைச் சுற்றி ஓடுவதாகவும், பூமியும் ஒரு கிரகம் என்றும் ரூபிக்கிறார்கள்; சந்திரன் பூமிக்கு உபக்கிரகமாகி (*Satellite*) பூமியைச் சுற்றி ஓடுகிறது. கிரகங்கள் அமர்ந்த வரிசையிலும் மாறுபாடு இருக்கிறது.

| பழையவரிசை | புதியவரிசை |
|---|---|
| — | ப்ளூடோ |
| — | நெப்தியூன் |
| — | யுரேனஸ் |
| 1. சனி | 1. சனி |
| 2. வியாழன் | 2. வியாழன் |
| 3. செவ்வாய் | 3. செவ்வாய் |
| 4. சூரியன் | 4. பூமி, சந்திரன் } |
| 5. சுக்ரன் (வெள்ளி) | 5. சுக்ரன் |
| 6. புதன் | 6. புதன் |
| 7. சந்திரன் | |
| பூமி | சூரியன் |

பழைய வரிசையில் சூரியனை நடுவே வைத்து இருபக்கங் களிலும் மும்மூன்று கிரகங்கள் இருப்பதாகக் கொண்டார்கள். இதைப் பார்க்கும்போது கிரகங்கள் யாவும் சூரியனைச் சுற்றி ஓடுவதை முன்னோரும் அறிந்தார்கள் என்று நாம் நினைக்க வேண்டும். பூமியில் வசிப்போருக்குப் பூமியின் சலனத்தை ரூபித்துக் காட்டுவது கஷ்டம்; இதற்காகவே பூமியை வரிசையி னின்றும் ஒதுக்கிக் கடைசியில் வைத்தார்கள்; உபக்கிரகமான சந்திரனையும் அதன் பக்கத்தில் அமர்த்தினார்கள். இந்த வரிசை யில் சூரியனுக்குப் பதிலாகப் பூமியையும் அதன் பக்கத்தில் சந்திரனையும் எழுதி பூமிக்குப்பதிலாகச் சூரியனை எழுதுவோ மானால் இரண்டு வரிசைகளுக்கும் வித்தியாஸம் இல்லை. பூமியை அடுத்து மேற்பாகத்தில் செவ்வாய் அமர்ந்திருப்பதை முன்னோர் நன்றாக அறிந்தார்கள்; இதனாலேயே செவ்வாய்க்கு 'குஜன்', (பூமியின்மகன்) என்ற பெயர் கொடுத்திருக்கிறார்கள்; மேலும் செவ்வாய் பூகாரகன்—பூஸ்திதியைக் கொடுக்க உரிமையுள்ள கிரகம்— என்றும் சொன்னார்கள்.



# ஸத்தியமே ஜயம்

## ஓர் ஓரங்க நாடகம்

ஸ்ரீ

1

---

["நாடகத்தின் முக்கிய லக்ஷணம் போராட்டம்; நாடகமேடையில் நம் உள்ளத்தைக் கவர்வது இம்முரண்பாட்டின் காட்சியே. கதை, ஒருவனுடைய ஜீவியசரிதத்தின் தினசரிவரலாற்றைக் கூறுவது; ஆற்றுப்போக்குடையது. நாடகமோ, அருவிவீழ்ச்சியை யொத்து, ஒருவர் வாழ்க்கையில் இடையூறுகள் எதிர்ப்படும் சந்தர்ப்பத்தையே தன் விஷயமாகக் கொண்டது. மெய்க்காதல் நாடகத் தலைவனாகவும், பேராசை தலைவனின் தகப்பனாகவும் வேஷம் பூண்டு, ஒன்றோடொன்று முரண்பட்டு நாடக சந்தர்ப்பத்தை உண்டு பண்ணலாம்; அல்லது, இம்முரண்பாடு ஒருவனுடைய உள்ளக்களத்திலேயே நிகழலாம்." மேடர்லின்க்.]

நாடக பாத்திரங்கள்

ரங்கநாதராவ்—ஒரு பூமான்
லீலாவதி—அவன் தங்கை
சாந்தா—அவன் மனைவி
தங்கவேலு—ஒரு வேலைக்காரன்.

இடம்:—ரங்கநாதராவின் வீடு
காலம்:—பிற்பகல்

[ஸோபா, நாற்காலிகள் போட்டு அலங்காரமாயுள்ள ஓர் அறையில், ரங்கநாத ராவும், லீலாவதியும் பேசிக்கொண்டிருக்கிறார்கள்.]

லீலா:—ரயிலுக்கு நேரம் ஆகவில்லையா? மன்னி இன்னும் மாடியிலேயே இருக்கிறாளே?

ரங்க:—முக்கால் மணி நேரம் இருக்கிறது ரயில் புறப்பட; சாவகாசமாய்ப் போகலாம். இங்கிருந்து ஸ்டேஷனுக்குக் காரிலே பத்துநிமிஷங் கூடப் பிடிக்காது.

லீலா:—நீ பட்டணத்துக்கு இராத்திரி மெயிலில் தானே போகிறாய்? திரும்பி வர நாலுநாள் பிடிக்குமா?

ரங்க:—செல்லாது. நாளையன்றைக்கு வரமுடியாது; அதற்கு மறுநாள் வந்துவிடலா மென்றிருக்கிறேன். அவளை நாளை சாயங் காலமே இங்கே திருப்பி யனுப்பிவிடு.

லீலா:—சரி; நான் மன்னியை வருந்தி யழைக்கவேயில்லை; அவள்தான், இங்கே தனியே யிருப்பதைவிட, என்னுடன் இரண்டு நாள் வந்திருப்பதாகச் சொல்லுகிறாள்.

ரங்க:—இப்பொழுது கூட்டிக்கொண்டுபோ, பாதகமில்லை. ஆனால் நான் திரும்பிவரும்போது உன் மன்னி வீட்டிலிருந்தால் தான் நல்லது. அது முக்கியம்; அதற்காகத்தான் நீ உபசாரமாய், கூட இரண்டுநாள் இருத்திக்கொண்டுவிடாதே என்று சொல்லுகி றேன்.

லீலா:—(சிரித்துக்கொண்டு) 'எங்காத்திலிருந்தது போதும், போ' வென்று நானே சொல்லிவிடவா? சரி, நீ கோபித்துக்கொள் ளாதே; அப்படியே செய்கிறேன். ஆனால் உனக்கும் மன்னிக்கும் ஒரு நாளுமில்லாமல் இப்பொழுது என்ன மனஸ்தாபம் என்பது எனக்குத் தெரியவில்லை. என்னிடம் சொல்லக்கூடியதா யிருந்தால்—

ரங்க:—உன்னிடம் சொல்லாமலென்ன? என் கவலை உனக் குத்தெரியுமே. உன் மன்னிக்கு அது கவலையாயில்லை. அதுதான் கஷ்டம்.

லீலா:—எனக்கொன்றும் விளங்கவில்லை.

ரங்க:—நீ தான் சொல்லேன்; எனக்கென்ன கவலை, என்னகுறை?

லீலா:—ஒரு குறையுமில்லை.

ரங்க:—(ஆத்திரத்துடன்) ஒரு குறையுமில்லையா?

லீலா:—பிள்ளையில்லாக்குறை ஒன்றுதான் குறை. அதைத் தெய்வம் தீர்க்கவேண்டும். அதுதவிர ஒன்றுமில்லை பணமிருக் கிறது; பவிஷிருக்கிறது. தர்மப்பிரபு என்ற பெயரிருக்கிறது குடும்பத்தில் சுகமிருக்கிறது.

ரங்க:—குடும்பத்திலே எனக்கு என்ன சுகமிருக்கிறது?

லீலா:—நீயே அப்படிச் சொல்லிவிட்டால் எப்படி? உங்க ளுக்குள் தற்காலத்திய மனஸ்தாபம் எதுவாயிருந்தாலும் சரி; இத்தனை வருஷங்களாக நீயும் மன்னியும் இருந்துவந்ததைப் பார்த் தால், உங்களைப்போல அந்நியோன்யமாய் இருக்கப்பட்டவர்கள் இந்த உலகத்தில் அபூர்வம் என்று சொல்லவேண்டும்.

ரங்க:—வெகு அழுத்தமாய்ப் பேசுகிறுயே!

லீலா:—உள்ளதைத்தான் சொல்லுகிறேன். உங்களுடைய சுகத்துக்குக் காரணம் மன்னியுடைய பொறுமையே.

ரங்க:—அவள் பொறுமையைக் காட்டும்படி இத்தனை வருஷங்களாக நான் அவளை என்ன கஷ்டப்படுத்திவிட்டேன்?

லீலா:—நீ நல்லவன்தான்; ஆனல் அவளும் பொறுமைசாலி; தானுக ஒன்றைவிரும்பி முரண்டடிக்கப்பட்டவளில்லை. அம்மாவே அவள் குணத்தை சிலாகிப்பதுண்டு.

ரங்க:—லீலா, நான் சொல்வதைக்கேள்; எனக்குக் குழந்தையில்லாக்குறை தீராக்குறையாயிருக்கிறது. உன் மன்னி அதைப் பாராட்டுவதில்லை.

லீலா:—உன்னைவிட அதிகமாய் அவளுக்கும் மனத்திலிருக்கும்; அதைச் சொல்லிப் பிரயோஜனமென்ன?

ரங்க:—என்னை எதிர்த்து அவள் கக்ஷிக்குப் பரிந்து பேசுகிறுயே.

லீலா:—நீங்கள் இருவரும் வெவ்வேறு கக்ஷி யென்பதுதான் எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது. இதுவரை பூவும் நாரும்போல் ஒத்திருந்தீர்களே.

ரங்க:—சரி; இதில் பூ யாரு, நார் யாரு? சிரிக்காமல், உன் மனத்தில் உள்ளபடி சொல்; நீயும் இப்பொழுது பெரியவளாய், குடித்தனம் செய்கிறுய்; உலக அநுபவம் எல்லாம் வந்துவிட்டது; யோசித்துச்சொல்லு.

லீலா:—இதிலென்ன சந்தேகம்! நீதான் பூ, மன்னிதான் நார். கலியாணமாவதற்கு முன் அவளுக்கு என்ன மகிமை இருந்தது? எங்கேயோ பட்டிக்காட்டிலிருந்தாள்; அழகு மட்டும் தான் இருந்தது.

ரங்க:—அந்த அழகைக்கூட வேறு எவரும் விரும்பவில்லை. அவளுக்கு நிச்சயம் செய்து வைத்திருந்த அத்தான் கல்யாணம் வேண்டாமென்று ரங்கூனுக்குப் போய்விட்டான். உறவில் எத்தனையோ பெண்களைத் தள்ளிவிட்டு, நான் உன் மன்னியைக் கல்யாணம் செய்துகொண்டுவந்து, அவளைப் படிக்கவும் வைத்தேன்; எல்லாவற்றையும் அவளுடன் பகிர்ந்து அநுபவித்தேன். ஒரு விதத்திலும் ஒரு நாளும் அவளைக் குறைசொல்லவில்லை.

லீலா:—நீ குறை சொல்லும்படியாக அவள் இருக்கவில்லை.

ரங்க:—முழுவதும் கேள். என் மனத்தில் இப்பொழுது ஐந்தாறு வருஷங்களாக ஒரு குறை இருக்கிறது. அதைத் தீர்த்

துக்கொள்ளவே இன்று ராத்திரி பட்டணத்துக்குப் போகிறேன். இந்த விஷயத்தில் அவள் உபேக்ஷையாயிருக்கிருள்.

லீலா:—பட்டணத்துக்குப் போய்க் குறைதீர்த்துக் கொள்ளப் போகிருயா? ஐயோ.

ரங்க:—உளருதே; நான் பட்டணத்துச்குப்போய் இன்னொரு பெண்டாட்டியைக் கட்டிக்கொண்டு வரப்போவதில்லை. என்னைப் போலிருப்பவர்கள் நூற்றில் தொண்ணூறு பேர்கள் அப்படிச் செய்தாலும் செய்வார்கள். பிள்ளையில்லாக்குறையால் என் மனம் கசந்திருந்தாலும், அப்படிப்பட்ட துரோகம் செய்ய நான் தலைப் படவில்லை. பட்டணத்தில் அநாதை யாச்சிரமங்கள் இருக்கின்றன. அந்த அதிகாரிகளுச்கு எழுதியிருக்கிறேன். அங்கே போய் நேரில் பார்த்து ஒரு குழந்தையைக் கொண்டுவரப் போகிறேன். அப்புறம், அவள்தான் என் மகள்.

லீலா:—பெண்குழந்தையையா அழைத்துவரப் போகிருய்? மன்னி என்ன சொல்லுகிருள்?

ரங்க:—அவள் ஒன்றுமே சொல்லவில்லை. அவளுக்குப் பிள்ளைப்பேறு இல்லாது போகவே, அவள் மனத்தில் தாயன்பு கருகிவிட்டது. இவ்விஷயத்தைப் பற்றி நான் புஸ்தகங்கள் வாங்கிப் படித்துத் தீர்க்காலோசனை செய்திருக்கிறேன். உன் மன்னிக்காகவேதான் ஒரு பெண்ணை எடுத்து வளர்க்கப்போகிறேன். என் ஆசையும் தீரும்; அந்தக் குழந்தைக்குத் தலை சீவி நல்லதை உடுத்திப் பேணி வளர்ப்பதில், அவள் மனத்திலும் அன்பு பிறந்துவிடும்.

லீலா:—ஆனல் அவளுக்கு இப்படித் தோன்ருவிட்டாலோ? நீ நினைத்ததை இதுவரை அவள் தட்டியதில்லை; அவள் மனத்துக்கு விரோதமாய் நீயும் ஒன்றும் செய்ததில்லையே.

ரங்க:—நான்தான் சொல்லுகிறேனே; முக்கியமாய் அவள் நன்மைக்காகத்தான் நான் இந்தக் காரியம் செய்யப் போகிறேன். என்னைப் போல அவள், நமக்கொரு குழந்தை வேண்டுமே என்று ஏங்கவில்லை. நாளுக்குநாள் ஒன்றிலுமே ஆசையில்லாமல் ஒரு மாதிரியாய் உபேக்ஷையாயிருக்கிருள்.

லீலா:—நீ அழைத்து வரப்போகும் குழந்தைக்கு எத்தனை துர்க்குணங்கள் இருக்குமோ? பெண்ணுனல், அதற்குப் பிறகு வரன் தேடவேண்டும்.

ரங்க:—எல்லாம் நான் யோசித்தாய் விட்டது. வியாதியில்லாமல் லக்ஷணமாயுள்ள குழந்தையைத்தான் நான் அழைத்து வரப் போகிறேன். ஒரு கட்டுக்குள் அடங்கி வளர்ந்து பயந்த சுபாவம்

தான் இருக்கும் அந்தக் குழந்தைக்கு. அதன்மேல் நாம் வாஞ்சை வைத்தால் அதற்கும் நம்மேல் வாஞ்சை வந்து விடும். கல்யாண யோசனை இன்னும் ஏழெட்டு வருஷங்கள் கழித்துத்தானே. நான் எடுத்து வளர்த்த பெண், இன்ன சீதன முடையவள் என்று சொன்னால், எத்தனை பேர் அவளைத்தேடி வருகிறார்களோ, பார்க்கலாம்.

லீலா:—சரிதான்; ஆனால் இது மன்னிக்குப் பிடிக்காமலிருப்பதும் நியாயம் தான். அவளுக்கு ஒரு குழந்தை பிறக்கவில்லையென்றுதானே, நீ எந்தப் பாவி பெற்றுவிட்ட குழந்தையையோ எடுத்துவளர்க்கப் போகிறாய்.

ரங்க:—அதற்கென்ன செய்யலாம்? தாய் செய்த பாவத்தைக் குழந்தை மேல் சுமத்துவானேன். பெண்களுக்கே இந்த விஷயத்தில் இரக்கம் கிடையாது. கற்பை இழந்து விடுவது ஒன்று தான் பாவமா ? அதிலும் கொடிய பாவங்கள் அகங்காரமும், கர்வமும். (வேலைக்காரன் வருகிறான்.) என்னடா, கார் வந்து விட்டதா? அம்மா பெட்டியைப் பின்னால் வைத்துக் கட்டு. நம் அம்மா பெட்டியை மாடியிலிருந்து எடுத்து வா.

(வேலைக்காரன் போகிறான்.)

லீலா:—மன்னி இன்னும் வரவில்லையே.

ரங்க:—நான் போய்ப் பார்க்கிறேன்.

(போகிறான்.)

## 2

இடம்:—அதே அறை.

காலம்:—அரை மணி நேரத்துக்கப்பால்.

(லீலா தனியே அங்கு மிங்கும் உலாவுகிறாள்.)

லீலா:—(உரக்க) தங்கவேலு! தங்கவேலு!

(வேலைக்காரன் வருகிறான்.)

இன்றைக்கு ரயில் போய்விட்டதா? பாஸெஞ்ஜரில் கூட இனிமேல் போகமுடியாதே.

தங்க:—மெயில் போயாச்சுது. உடனே புறப்பட்டால் பாஸெஞ்ஜரில் போகலாம். எஜமான்தான் இன்னும் மாடியிலிருந்து வரவில்லை.

லீலா:—சரி; ரயில் தப்பிவிட்டதென்று தந்தியடிக்கவேண்டும். எஜமான் அறைக்குப் போய், காகிதமும் பேனாவும் எடுத்துக் கொண்டு வா.

(தங்கவேலு போகிறான்.)

என்ன கஷ்டகாலமிது! மாடியில் கதவு சாத்தியிருக்கிறது! அழுகைப் பேச்சுக் கேட்பது போலத் தோன்றுகிறது! ஒன்றுமே தெரியவில்லை. இதோ, அவர்கள் வந்து விட்டார்களே.

(ரங்கநாத ராவ் கையில் சில கடிதங்களுடன் வருகிறான். அவன் மனைவி சாந்தாவும் பின்னால் வருகிறாள். இருவரும் பிரமை பிடித்தவர்கள் போலத் தோன்றுகிறார்கள்.)

ரங்க:—லீலா! நீ இன்னும் போகவில்லையா?

லீலா:—மன்னி வராமலும், உன்னிடம் சொல்லிக்கொள்ளாமலும் போவதெப்படி? ரயில் தப்பி விட்டதென்று தந்தியடிக்கப் போகிறேன்.

ரங்க:—தந்தியா, சரி (சிரமப்பட்டு மனத்தைத் தேற்றிக் கொண்டு) நீ போகலாமே, பாஸென்ஜருக்கு டைம் இருக்கிறது.

லீலா:—மன்னி—

சாந்தா:—நான் வரவில்லை.

ரங்க:—நான் இன்று பட்டணம் போகவில்லை. அதனால் அவளும் உன் கூட வரவில்லை.

லீலா:—சரிதான். ஆனால் . . .

ரங்க:—உனக்கு நேரமாச்சுதம்மா; சட்டென்று புறப்படு. தங்கவேலு! (வேலைக்காரன் வருகிறான்.) நீயும் அம்மாவுடன் ரயிலேறிப்போ. இந்தா. இதை வைத்துக் கொள்.

(லீலாவிடம் சில நோட்டுக்களைத் தன் சட்டைப் பையிலிருந்து எடுத்துக் கொடுக்கிறான்).

லீலா:—என்னதுக்கு இவ்வளவு பணம்? ரயில் சார்ஜுக்கா? (சிரிக்கிறாள்.)

ரங்க:—(பைத்தியச் சிரிப்பு சிரித்துக் கொண்டு) இருக்கட்டும்; இருக்கட்டும். நேரமாச்சு; போய் வா.

லீலா;—மன்னி, நான் வரட்டுமா? (இரகசியமாய். அவளுடன்) மன்னி, இதென்ன?

தங்க:—அம்மா, வருகிறீர்களா?

ரங்க:—போய் விட்டுவா, ஊரிலிருந்து எழுது.

லீலா:—ஆகட்டும்; நீங்களும் எழுதுங்கள்.

(திகைத்து அவர்களைத் திரும்பிப் பார்த்தவண்ணம் போகிறாள். ரங்கநாதராவும், தங்கவேலுவும் அவள் பின் போகிறார்கள். சாந்தா ஒரு நாற்காலிமேல் உட்காருகிறாள். கார் புறப்படும் சப்தம் கேட்கிறது. அடுத்த நிமிஷம் ரங்கநாத ராவ் உள்ளே வந்து அங்கு மிங்கும் உலாவுகிறான்.)

சாந்தா :—(ஏக்கம் தேங்கிய குரலில்) நான் என்ன செய்யட்டும்?

ரங்க :—எனக்கு இன்னும் விளங்கவில்லை. தெய்வமே! (திடீரென்று வெறிகொண்டு) உன்னைக் கொன்று விடுகிறேன் பார்.

(சாந்தா மௌனமாயிருக்கிறாள்.)

ரங்க :—பேசேன். ஏதேனும் சொல்லேன். (மறுபடியும் வெறி கொண்ட குரலில்) உள்ளதை உள்ளபடி சொல்லு.

சாந்தா :—நான் எல்லாம் சொல்லியாய் விட்டது. உங்கள் கையில் கடிதங்கள் எல்லாம் இருக்கின்றன.

ரங்க :—பாவி, படுபாவி, இத்தனை நாளாக என்னை மோசம் செய்தா விட்டாய்! அகஸ்மாத்தாயல்லவா எனக்கு உண்மை தெரிந்தது? இந்தக் கடிதங்களை நீ உள்ளே வைத்த பின் நான் வந்திருந்தால், எனக்கு ஒன்றுமே தெரிந்திருக்காதே! என் தாயார் இருந்தால், இப்பொழுது உன்னை என்ன சொல்வார்கள். உன் தகப்பன் எப்படிப் பட்டவன். பிள்ளையைப்பெற்ற பெண்ணை ஒருவனுக்குக் கட்டிக்கொடுத்தானே. உன் தாயார் எப்படிப்பட்டவள்.—(வெறிகொண்ட குரலில்) இப்பொழுது அவர்கள் உயிரோடிருந்தால் நான் அவர்களைக் கொன்றுவிட மாட்டேனா?

சாந்தா :—எழுந்து நின்று கொண்டு (திடமான குரலில்,) அவர்கள் செத்தாய் விட்டது. நான் இருக்கிறேன். உங்களுக்கு நினைவிருக்கிறதா, புரட்டாசிமாதம் நீங்கள் என்னை வந்து பார்த்து விட்டுப்போனதும், தை மாதம் கலியாணம் நடக்கவிருந்ததும், பிறகு எனக்கு டைபாய்டு சுரம் வந்ததென்று ஆனி மாதக்கடைசி வரை கலியாணம் நடக்காமலிருந்ததும். தை மாதம் சுரம் வரவில்லை; குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தையை உடனே கொண்டு போய், திருச்சினாப்பள்ளி ஹோமில் விட்டு வந்துவிட்டார்கள். என்னை முதலில் கலியாணம் செய்துகொள்ள இருந்தானே, அவன் என்னை மோசம் செய்துவிட்டான். பித்துப் பிடித்தவள் போலிருந்தேன். பிறகு உங்களால் மனம் தேறினேன்.

ரங்க :—(முணு முணுக்கிறான்) துரோகி, பாவி.

சாந்தா :—செத்த பாம்பைப் பிழைப்பித்து விட்டால், அது என்ன ஆட்டம் ஆடும் தெரியுமா? என் மனம் துவண்டு கிடந்தது. இந்த வீட்டில் புகுந்த பின், உங்கள் அன்பாலும் ஆதரவாலும் அது தேறிவிட்டது, அதற்கப்புறம் நான் பட்ட கஷ்டம் பகவானுக்கே தெரியும். எத்தனையோ வேளைகளில் உங்களிடம்

நடந்ததைச் சொல்லிவிட நினைத்தேன். மனம் துணியவில்லை. பிறகு நாளுக்கு நாள், என்னிடமிருந்த அன்புக்கு மேலாக உங்களுக்குக் குழந்தை ஆசை மேலிடவே, என் மனமும் என் குழந்தையை நாடிற்று. அந்த ஹோமுக்கு எழுதிக் குழந்தையைப்பற்றி விசாரித்தேன். பாட்டியைப் பார்க்கத் தஞ்சாவூருக்குப் போகும் பொழுதெல்லாம், திருச்சிராப்பள்ளிக்கும் போய்க் குழந்தையைப் பார்த்து விட்டு வந்தேன். இதைவிட என்ன—அவள் எழுதக் கற்றுக் கொண்டவுடன், நான் அவளுக்கு வாராவாரம் எழுத ஆரம்பித்து விட்டேன். இன்னொரு குழந்தையை எடுத்து வளர்க்கச் சொல்லி நீங்கள் வற்புறுத்தினீர்கள். இவள் எழுதின கடிதங்களை எடுத்து வாசித்துக் கொண்டிருந்தேன். நீங்கள் வந்து பார்த்துவிட்டீர்கள். நல்ல காரியம்! அந்த ஹோமில் நானும் ஒரு அநாதையாகப் புகுவதே எனக்கேற்ற விதி! என் குழந்தை அநாதையாயிருக்க, எனக்கு நகையும் புடைவையும் போஷணையும் வேண்டியிருக்கவுமில்லை. ஆனால் நானாக உங்களை விட்டுப்பிரிய மனம் வரவில்லை. நீங்களாகத் தள்ளி விடுங்கள். அதுவே போதும்; நான் போய் விடுகிறேன். உங்களுக்கேற்ற பெண்ணைக் கலியாணம் செய்து கொள்ளுங்கள். (எழுகின்றாள்.)

ரங்க:—ஐயோ, நான் என்ன செய்யட்டும்! சாந்தா, எங்கே போகிறாய். உட்காரு. இந்த விஷயத்தை நாம் பேசித்தீர்க்க வேண்டும்.

சாந்தா:—நான் சொல்லக் கூடியது இனி ஒன்றுமில்லை. நான் போகிறேன்.

ரங்க:—சாந்தா, உட்காரு. என்னைவிட்டு நீ எங்கே போவாய்; நீ வருத்தப்படாதே.

சாந்தா:—வருத்தமென்ன? இத்தனை நாளாகத்தான் வருத்தம். இருதலைக் கொள்ளி எறும்பு போல் இருந்தேன். உங்கள் மேல் அளவில்லா வாஞ்சை கொண்டு, உங்களுக்கே துரோகம் செய்தேன். எல்லாம் வீணாய் விட்டது. நிஜம் துலங்கி விட்டது. உங்களுக்கு உண்மை தெரிந்துவிட்ட இந்த நிமிஷமே என் மனம் நிம்மதியாயிருக்கிறது!

ரங்க:—சாந்தா, நீ உள்ளதைச் சொல்லிவிட்டாய். நான் சொல்வதைக்கேள். உன்னைப்பாவியென்று வைதேனே. மகாபாவி நான்; "ஒருயிரும், ஈருடலும் நாம்" என்று நான் பிதற்றின நாளெல்லாம், உன் சோகத்தை நான் அறிந்து கொள்ளவில்லையே! கலியாணத்தின் பொழுது நான் ஏமாந்திருந்தேன். உள்ளது தான்; ஆனால் பத்து வருஷமாய் நமக்குள் இருந்த அன்பு பொய்யாய்

விடுமா? குழந்தையைப் பிரிந்து சோகிப்பவளை நான் மலடியென்றும், நெஞ்சீரம் இல்லாதவளென்றும் பிதற்றினேனே. அந்தப் பிதற்றலையும் நீ பொறுமையுடன் கேட்டுக்கொண்டிருந்தாயல்லவா? உன் மனத்தின் ரணத்தை மறைத்துக் கொண்டு, நீ சிரித்த முகத்துடன் உலாவி வந்த தீரமே தீரம்! ஆனால், கண்மணி, தீரத்துடன் கூட, அன்பு மேலீட்டால் கூட, உண்மையை மறைக்கலாகாது! (அவளை அணைத்துக் கொள்கிறான்).

சாந்தா:—(அவனைக் கட்டிக்கொண்டு) என்னை உதறிவிடுங்கள்! என்னை அடித்துத் துரத்தாமல் நீங்கள் என்ன பேசுகிறீர்கள்!

ரங்க:—பொய் ஜம்பத்தால், நான் சொன்ன சொல்லையெல்லாம் நீ இன்னும் நினைத்துக் கொண்டிருக்கிறாயா? எதற்காக நாம் இன்னும் கஷ்டப்படவேண்டும்? உலக வழக்கம் எப்படியிருந்தாலும் சரி, பொய் ஜம்பம் என்ன சொல்லச் சொன்னாலும் சரி. என் மனத்தில் உண்மை பறையடித்துச் சொல்கிறது. நாம் இருவரும் பிரிந்தால் நமக்கு ஒரு நாளும் துக்க நிவர்த்தியில்லை. நாம் பிரியவேண்டிய காரணமுமில்லை. நமக்கு ஒரு குழந்தையுமிருக்கிறது.

சாந்தா:—(விம்மிய குரலில்) நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?

ரங்க:—இன்றிரவு நாமிருவரும் திருச்சினப்பள்ளிக்குப் புறப்பட்டுப்போய் நமது குழந்தையை அழைத்துக்கொண்டு வரவேண்டும்.

---

## வெளிச்சத்தையுண்டாக்கும் கைத் துப்பாக்கி

கண்ணைப்பறிக்கும் வெளிச்சத்தை உண்டாக்குமொரு புதிய கைத் துப்பாக்கியை ஒரு பிரெஞ்சுக்காரர் கண்டுபிடித்திருக்கிறார். இதனால் பல சௌகரியங்களுண்டு எனச் சொல்லப்படுகிறது. ஆகாய விமானிகள் இவைகளைவைத்துக்கொண்டால் எவ்வளவு கடுமையான மூடுபனியையும் தாராளமாகக் கடந்துசெல்லலாம். இதுவுமன்றிக் கலகம் செய்யும் கூட்டத்தினரை இந்தத் துப்பாக்கி வெளிச்சத்தின் மூலம் கட்டுப்படுத்தி விடலாமாம். இதனால் கலகங்களில் இரத்தம் சிந்துவதைத் தடுத்து விடலாமாம்.

ஜெ.

# யார் குற்றவாளி?

குமுதினி

———

சைனாவிலிருந்து வரும் இதர விஷயங்களைப்போல் இக் கதையும் ஆழ்ந்த கருத்தமைந்து புத்திபுகட்டுகிறது.

ஜனங்கள் பீரங்கிகள் மாதரி. அவர்களைப் பின்பக்கத்தி லிருந்து மருந்திட்டுக் கெட்டிக்கவேண்டும். இதை நன்குணர்ந்தே எல்லாத்தேசங்களினும் சர்க்கார்கள் ஜனங்களுக்கு முதுகின் மூலமாகவோ அல்லது அதற்கும் கீழ்ப்பட்ட பாகங்கள் மூலமா கவோ புத்தி புகட்ட முயலுகிறார்கள்.

சீனதேசத்தவர்கள் இக்கொள்கையை அதிதீவ்ரமாகப் பின் பற்றுகிறார்கள். அத்தேசத்தில் குதிகாலில் மூங்கில் தடியால் அடித்துப் புத்தி புகட்டப்படுகிறது. குதிகாலில் அடிப்பானேன் என்ற சந்தேகம் உண்டாகலாம். புத்தி சரியான இடத்தில் இல்லாத தனாலேயே ஜனங்கள் தப்பிதம் செய்கிறார்கள். அவ்விதம் கீழ்ச் சென்ற புத்தி மேல் வந்து அதனையுடையவர் ஞானமடையச் செய் வதற்கு மூங்கிலினால் குதிகாலில் அடிப்பது நியாயந்தானே! அத் தேசத்தில் அவ்விதம் தண்டிப்பதற்குக் காரணம் இதுவாகத்தான் இருக்கும்.

சூரியகுலதிலகரும், சந்திரனுக்குச் சகோதரர் போன்றவரும், சகல தாராகணங்களுக்கும் தந்தையும், உலக முழுதும் வென்ற வரும், எல்லாச்சக்கரவர்த்திகளுக்கும் மேம்பட்டவரும், மகா பராக்ரமசாலியுமான வீரதீர ஞானப் பிரபு போக்டிகாங்க் சிங்க்சாங் என்ற சீனதேசச் சக்கரவர்த்தி தம் மந்திரி பரிவாரங்கள் சூழச் சபைநடுவில் சிங்காதனத்தில் அமர்ந்திருந்தார். அவர் அதிகப் பருமனாக இருந்தமையால் அவருடையதேகம் பளபள வென்று பிரகாசித்தது.

போக்டிகாங்க் சற்றுச்சிந்தனை புரிந்து மணிபோல் கணீரென் றிருக்கும் குரலில் மொழிந்தார்:—

"சபையோர்களே, இச்சீனதேசம் தற்காலத்தில் எந்த நிலைமை யிலிருக்கிறதென்று யாமறிய விரும்புகிறோம். எம்முடைய சிறந்த

ஒரு சீனதேசக் கதை.

மந்திரிகளாகிய உங்கள் நடுவில் நிபுணரான டேன்லீ விளங்குகிறார். அவரே இத்தேசத்தில் போலீசார்களுக்குத் தலைவராகவும், தானியங்களை மேற்பார்வையிடுபவராகவும் ஜனங்கள் தீச்செய்கை புரியாமல் தடுப்பவராகவுமிருக்கிறார். ஜனங்களுக்கு வரிவிகிதம் திட்டம் செய்பவரும் அவரே; ஜனங்களைத் தண்டிப்பவரும் அவரே. இக்காரணங்களால் ஜனங்களின் நிலைமையை டேன்லீயே நன்கு அறிவார். ஆகையால், கீர்த்திவானும், சாமர்த்தியசாலியுமான ஓ டேன்லீ, உங்கள் பாதங்களுக்கு ஏற்படும் சிரமத்தைப் பொருட்படுத்தாமல் எழுந்திருப்பீராக. எமக்கு இத்தேசத்தின் நிலைமையை உரையுங்கள்.''

இவ்விதம் அவ்வேந்தர் கூறவே, சபையோர்களெல்லோரும் அரசரிடம் தமக்குள்ள மரியாதையைக் காண்பிக்க ஒவ்வொரு விரலைத் தூக்கினார்கள்.

பிறகு டேன்லீ எழுந்து முறைப்படி 472 நமஸ்காரங்கள் செய்து கூறினார்:

“தெய்வத்திருவுருவே, நாயும் சந்திரனைப்பார்த்துக் குலைக்கிறது. அதைக்கண்ணுற்ற அடியேனுக்கும் தங்கள் முன்னிலையில் பேசச் சற்றுத் தைரியமுண்டாகிறது. அடியேன் உண்மையைக் கூறிவிடுகிறேன். பொய்யுரைப்பதெனில் முதலில் பொய்யொன்றைக் கற்பனை செய்யவேண்டும். புத்தியற்ற அடியேனுக்கு அது எவ்விதம் கூடும்? சாமர்த்தியசாலிகள் கற்பனை செய்வார்கள். முட்டாள்களால் உண்மையைத்தான் உரைக்க முடியும். இச்சீன தேசத்தில் பெக்கிங் என்ற நகரம் நான்கிங்குடன் போராடுகிறது. நான்கிங் மற்றொரு நகரமாகிய காண்டனிடமும், சாண்டன் ஷாங்கெய் இடமும் சண்டையிட்டுக் கொண்டிருக்கின்றன. இருந்தும், சீனதேசம் செழுமையுடனிருக்கிறதென்றே கூறலாம். இத்தேசத்தின் வளமையைக் கண்டு இதரதேசங்கள் பொறாமையால் உள்ளம் உருகி அழிகின்றன. இத்தேசத்தின் செழுமையை நிரூபிக்க ஓர் உதாரணம் போதுமானது. இத்தேசத்தில் செல்வம் நிறைந்திருப்பதால் கோழிகள் கூடத் தங்கமுட்டையிடுகின்றன.''

“என்ன! தங்க முட்டையா!'' என்று ஆச்சரியத்துடன் போக்டிகாங்க் வெள்ளிமணிபோன்ற குரலில் வினவினார். “இது விந்தையாயிருக்கிறதே! கதைகளிலல்லவோ இவ்விதம் நேரிடும்!''

டேன்லீ மறுபடி நமஸ்கரித்தார்; “இவ்விதம் கதைகளில் மாத்திரமன்று; சீனாவைப்போன்ற செழுமையான தேசங்களிலும் நடக்கும். தாங்கள் சக்கரவர்த்தியாக இல்லாவிடில் ‘தாங்களே நேரில் சந்தையில் போய் விசாரியுங்கள்' என்று சொல்வேன். பத்து

முட்டை என்ன விலை? பத்து மோஹரா! ஒரு கோழி முட்டையிட்டால்—கொஹ்ற கோஹ்ற கொஹக் ஒரு மோஹரா!"

இதைக்கேட்டுச் சபையோரெல்லாம் தங்கள் ஆச்சரியத்தைத் தெரிவிக்க ஒவ்வொரு விரலை உயர்த்தினார்கள். ஆனால் அச்சபையில் மிகப் பாண்டித்யம் பெற்றவரான சின்ஸன் என்பவர் மட்டில் "எவ்விடத்தில் கோழிகள் மேன்மையான ஸ்தானம் வகிக்கின்றனவோ அங்கே மானிடர்கள் சிரமமடைவார்கள்" என்று உரைத்தார்.

வேந்தனாகிய போக்டிகாங்க் இதைப்பாராட்டாமல், அவரை மௌனமாக இருக்குமாறு சமிஞ்ஞை செய்து, அதிகத் திருப்தியுடன்மொழிந்தார்: "நம் பண்டிதர்களில் சிறந்தவராகிய சின்ஸன் ஒரு பெரிய அறிஞரென்பது உண்மையே. ஆனால் ஒடேன்ஸீ! நீங்கள் அவர் சொல்வதைப் பொருட்படுத்தவேண்டாம். சூரியனை மறைக்க ஆகாயத்தில் மேகங்கள் தோன்றுவதுபோல், உலகத்தில் இன்பத்தை அனுபவிக்காமல் ஜனங்களைத் தடுப்பதற்கே ஞானம் ஏற்பட்டிருக்கிறது. அது போகட்டும். நீங்கள் சற்றுமுன் உரைத்தது செவிக்கு மிக இனிமையாகவும் மனதிற்கு ஆனந்தத்தைக்கொடுப்பதாகவுமிருக்கிறது. கொஹ்ற கோஹ்ற கொஹக். ஒரு மோஹரா! கொஹ்ற கோஹ்ற கொஹக்—ஒரு மோஹரா!!"

சபையோரெல்லாரும் மிகச் சந்தோஷத்துடன்—"கொஹ்ற கோஹ்ற கொஹக்—ஒரு மோஹரா!" என்று கோஷித்தனர்.

அச்சபை இதற்குமுன் இவ்வளவு ஆர்ப்பாட்டத்துடன் விளங்கினதேயில்லை.

அதன்மேல் போக்டிகாங்க் சங்கநாதம் செய்யச்செய்து கூறினார்:—"இச்சபை இனிக் கலையாலாம். மந்திராலோசனை சபையே மனச்சோர்விற்கு இருப்பிடம். இச்சமயம் நாம் மிக்க குதூகலமும் ஆனந்தமும் நிறைந்திருக்கிறோம். இச்சபையில் அமர்ந்திருக்க எமக்கு விருப்பமில்லை. மூன்று தினங்களுக்கு உத்சவங்கள் நடத்தி ஊர் முழுதும் இதைக்கொண்டாடவேண்டுமென்று நாம் ஆஞ்ஞாபிக்கிறோம்."

அதன்மேல் "கொஹ்ற கோஹ்ற கொஹக்—ஒரு மோஹரா!" என்று ஆராவரித்துக்கொண்டு மந்திராலோசனை சபையும் கலைந்தது.

சந்தோஷத்தினால் உள்ளம் பூரித்தவராய் போக்டிகாங்க் தம் நந்தவனத்தில் உலாவச்சென்றார். முதன் முதல் தம் கண்ணெதிரில் தோன்றிய தலையாரியைக் கொத்தவாலாக மாற்றினார். தம் மூத்த மகனின் குருவைக் கண்டார். அவரைத் தட்சணமே தளகர்த்த

ராகச் செய்தார். இவ்விதம் கண்ணில் பட்டவர்களுக்கெல்லாம் சம்மானங்களும் சால்வைகளும் துப்பட்டாக்களுமாக அளித்து விட்டுக் கடைசியில், அந்நந்தவனத்தின் மூலையிலிருந்த ஒரு சிறிய ஆச்சிரமம் போன்ற பர்னக்குடிசையை அடைந்தார். அவ் விடத்தில் ஞானியான சின்ஸன் வசித்துவந்தார்.

"ஞானிகளுடன் என்ன பேசுவதென்று எனக்குத் தெரிவ தில்லை. நீங்களோ பெரிய பதவிகளை விரும்புவதில்லை. சால்வைகள் துப்பட்டாக்களில் கூட உங்களுக்குப் பற்றுதலில்லை. உங்களுக்கு நாமென்ன செய்யலாம்.?" என்று போக்டிகாங்க் அவரை வினவினர்.

"ஓ புழ்பெற்ற போக்டிகாங்கே, தங்கள் கிருபையில் எனக்கு ஆகாரத்திற்குப் பத்துப்படி அரிசி அனுப்பிவைத்தால் தங்களுக்கு என் வந்தனத்தைச் செலுத்த இச்சீன பாஷையிலுள்ள பதங்கள் போதாவென்று நான் எண்ணுவேன்" என்றார் அப்பண்டிதர்.

"என்ன! நீங்களா! மிக ஞானியாகிய நீங்கள் இவ்வற்பவஸ்து வைக்கொண்டு திருப்தியடைவீர்களா?" என்று ஆச்சரியத்துடன் அரசர் கேட்டார்.

"முட்டாள்களுக்குத்தான் பசியெடுக்குமா! கோழிகள் மேன் மையாக இருக்குமிடத்தில் சாதாரண ஜனங்கள் துன்புறுவார்கள் என்று நான் தங்களுக்குமுன்பே சொன்னேன். 'கொஹ் கோஹ் கொஹக்—ஒரு மோஹரா!' நல்லதே. ஆனால் ஜனங்கள் பசியினால் வருந்துகிறார்களே!"

"இந்தப் பாழாய்ப்போன டேன்லீயைப் பேய்பிடித்தாட் டட்டும். நானூறுகோடி ஜனங்களுக்கு அதிபதியானஎன்னெதிரில் ஒரு பெட்டைக்கோழிபோல் கொஹ் கோஹ் கொஹக் கென்று கூவிவிட்டு என்னை அவமதிக்கிறானே! இருக்கட்டும்" என்று அரசர் சினந்தார்.

டேன்லீயின் பேரில் அரசருக்குத் தாங்கொணுக் கோபமுண்டா யிற்று. அந்தக் கோபாவேசத்தில் சின்ஸனுக்குப் பத்துப்படி அரிசி அனுப்புவதற்குக் கூட ஞாபகமில்லை. உத்சவங்கள், கொண்டாட் டங்கள் எல்லாவற்றையும் உடனே நிறுத்தவேண்டுமென்று கட்டளையிட்டுவிட்டு, மந்திராலோசனை சபையைக் கூட்டினார். சபை கூடினதும் போக்டிகாங்க் கம்பீரமான குரலில் பேசினார். அந்தக்குரலின் தொனி ஓர் பேரிகைத் தொனிபோல் முழங்கிற்று.

"அந்தத் துஷ்டன் டேன்லீ இன்று காலை இத்தேசம் மிகச் செழுமையாக இருப்பதாகக் கூறினான். அது முழுப் பொய்

யென்பது தெரிய வருகிறது. இத்தேசத்தில் கோழியின் முட்டை கூட ஒருமோஹராவாக இருக்கிறது. நம் தேசத்தில் சிறந்த ஞானி யும், நம் ராஜ்யத்திற்குத் திலகம் போன்றவரும், நம் சபைக்கு ஓர் ஆபரணமானவருமான பண்டிதர் சின்ஸன் பசியினுல் மரிக்க நேரிடும் போலிருக்கிறது. பிற்காலத்தில் நம்மைப்பற்றி என்ன சொல்வார்கள்! 'போக்டிகாங்க் சிங்சாங்க் காலத்தில் அவன் சபைக் குப்பூஷணமாக விளங்கிய ஞானி சின்ஸன் பட்டினிகிடந்து மரித் தார்' என்றல்லவோ சொல்வார்கள். ஓர் எட்டு வயதுப் பள்ளிப் பிள்ளையைப் போக்டிகாங்க் சிங்சாங்க் காலத்தில் என்ன விசேஷம் நடந்ததென்று கேட்டால், அவன் உடனே 'போக்டிகாங்க் அரசாளுகையில் பண்டிதர்கள் பட்டினி கிடந்தார்கள். சிறந்த ஞானியான சின்ஸன் பசியினுல் மரித்தார்' என்பான். இவ்விதம் சொல்லும் பிள்ளையைப் பார்த்து உபாத்தியாயர் அவனுக்கு நல்ல உதை கொடுக்காமல், 'நிரம்ப சரி' என்று ஆமோதிப்பார். என் சந்ததிகள் தம் மூதாதைகளின் பெயரைச் சொல்லுகையில் என் பெயரை ஒதுக்கிவிடுவார்கள். இது ஓர் பெரிய அபகீர்த்தி யைக்கொண்டு வரும். துஷ்ட டேன்லீ, இக்கேடு உன்னுல் சம்பவித் ததே. கொஹ கோஹ கொஹக்— ஒரு மோஹரா!. சட்' என்று அரசர் சீறினர்.

டேன்லீ சட்டென்று எழுந்து 472 நமஸ்காரங்கள் செய்து விட்டு, "முட்டாளாகிய அடியேன் ஒரு வார்த்தை சொல்ல வேண்டு கிறேன்" என்று பிரார்த்தித்தார்.

"நமக்கிருக்கும் பெருந்தன்மையால் அவ்வித அனுமதி கொடுக்கப்படுகிறது. கேடுகெட்ட மனிதப் பதரே, உன் மனதில் இருப்பதைச் சொல்" என்று அரசர் விடை கொடுத்தார்.

டேன்லீ அரசர் பாதத்தில் விழுந்து, "சூர்யகுலதிலகமே, குற்றம் என்னவென்பது தெரிந்துவிட்டது. அதாவது முட்டை களின் விலை மோஹராக்களாகிவிட்டதே. இனி அவ்விதமாவ தற்குக் காரணமானவர்களின் குதிகாலைக்கண்டுபிடிக்கவேண்டியதே எஞ்சிநிற்பது" என்ருர்.

சபையின் இதர அங்கத்தினர்களும் டேன்லீயின் வார்த்தை சரியானதென்று ஒத்துக்கொண்டனர்.

"எவர் உண்மைக்காரணபூதர் என்பதே கேள்வி" என்ருர் பண்டிதர் சின்ஸன்.

"ஆமாம்; அதுதான் கேள்வி" என்று மிக ஆவலுடன் டேன்லீ ஆமோதித்தார். "பண்டித சின்ஸன், உங்கள் வாயின் மூலமாகச் சரஸ்வதி தேவியேபேசுகிருள். ஆமாம். எவை காரண பூதரின்

குதிகால்? முட்டைகள் முதலில் கிராமத்தில் விற்கப்படுகின்றன. அவைகளை வியாபாரிகள் வாங்கி நகரத்தில் சந்தையில் கொணர்ந்து விற்கிறார்கள். முட்டைகளின் விலையைக் கிராமங்களில் கிராக்கியாகச் செய்தவர் எவர்? கிராமத்தில் முட்டைவிற்பவர் எவர்? குடியானவர்களே! ஆகையால் அவர்களின் குதிகால்களே தண்டிக்கத்தகுந்தவை. அவ்விதம் அக்குதிகால்களைத் தண்டித்தால் முட்டைகளின் விலை குறைந்துவிடும். தேசத்தில் பஞ்சம் போய்விடும்'' என்றார் டேன்லீ.

“நீர் சொல்வது நியாயமாகத் தோன்றுகிறது. ஆகையால், டேன்லீ, அவ்விதம் தண்டிப்பதற்குத் தகுந்த ஏற்பாடு செய்யுங்கள்'' என்றார் அரசர்.

சீனதேசத்துக் குடியானவர்களுக்கெல்லாம் புத்தி புகட்ட ஏழு மூங்கிற்காடுகள் போதுமானவையாக இருந்தன.

மறுதினம் முட்டைகளின் விலை இன்னும் அதிகமாயின. சந்தையில் ஒரு முட்டையின் விலை இரண்டு மோஹராக்கள்.

“முட்டைக்காக ஒரு மோஹரா. மூங்கில் தடிக்காக ஒரு மோஹரா'' என்று குடியானவர்கள் சொன்னார்கள்.

பண்டிதர் சின்ஸன் நந்தவனத்தில் புஷ்பக்கொடிகளுக்கிடையில் பசியினால் வாடிப் படுத்திருந்தார். போக்டிகாங்க் அவரைத் தேடி அங்கு வந்தார். “மூங்கில் தடியால் திருத்தியும் தேசம் செழிப்படையவில்லையே'' என்று முறையிட்டார்.

“திருவுருவே, எவருடைய குதிகால் குற்றவாளி என்பதைப் பற்றி ஏமாறியிருக்கலாம்?'' என்று சிரமத்துடன் சின்ஸன் கேட்டார்.

அரசர் அதைக் கேட்டதும் மந்திராலோசனைசபை உடனே கூடவேண்டுமென்று ஆஞ்ஞாபித்தார். அவ்விதம் கூடிற்று. அரசர் சபையோரை நோக்கிக் கூறினர் “உங்களிடம் உண்மையைக் கூறுகிறேம். ஞானிகளைக் கண்டாலே எமக்குச் சங்கடமுண்டாகிறது. அறிஞர்களின் கூட்டமே மிகக் கவலைக்கு இடம்தருபவை. சாதாரண மனிதர்கள் ஏதோ தத்தம் காலத்தைச் சரிவரக் கழித்துக் கிரமத்தில் மரிக்கிறார்கள். இந்தப் பண்டிதர்களை வைத்துக் காப்பாற்றுவதோ பெருந்தொல்லையாக இருக்கிறது. அவர்களால் பிற்காலத்தில் தொந்தரவு ஏற்படுகிறது. அவர்கள் மரித்தால், 'ஏன் மரித்தார்? எங்கே மரித்தார்? எதனால் மரித்தார்?' என்றெல்லாம் கேள்விகள் உண்டாகின்றன. பெரிய ஞானியாகிய சின்ஸன் தமது அந்திமதசையை யடைந்திருக்கிறார். இன்னும் முட்டைகளின்

விலை அதிகமாகவேயிருக்கிறது. டேன்லீ செய்தவையெல்லாம் பயனின்றிப் போயின."

"தெய்வத்திருவுருவே, தாங்கள் சற்றுப் பொறுக்கவேண்டும்" என்று நியமப்படி 472 நமஸ்காரங்கள் செய்து டேன்லீ வேண்டினார்; "துன்பம் எதனால் ஏற்பட்டிருக்கிறதென்று தெரியவருகிறது. முட்டைகளின் விலை அதிகமாயிருப்பதுதான் அதற்குக் காரணம். அதை நிவர்த்திக்கும் வழியும் கண்டிருக்கிறோம். மூங்கில் பிரயோகத்தினால் நிவர்த்திக்கலாம் அதைப் பிரயோகிப்பதிலே தான் சிறிது தடுமாற்றம் ஏற்பட்டிருக்கிறது."

"ஆமாம், ஆமாம். பண்டிதர் சின்ஸனும் குதிகாலைப்பற்றி ஏமாற்றம் ஏற்பட்டிருக்கலா மென்றே உரைத்தார்" என்றார் வேந்தர்.

"ஆகையினால் சரியான தண்டனையைக் குதிகாலிற்குப் பிரயோகிக்கவேண்டியதே எஞ்சியிருக்கிறது. குடியானவர்களின் குதிகாலிற்குப் பிரயோகித்தாய் விட்டது. ஆனால் விற்பதிலும் வாங்குவதிலும் இருவர் சேருகிறார்கள். ஒருவன் அதிக விலைக்கு விற்றுக் குற்றம் புரிந்தால், மற்றொருவன் அதிக விலைக்கு வாங்கிக் குற்றம் செய்கிறான். இவ்விதம் அதிக விலைகொடுத்து வாங்காமல் தடுக்கவேண்டும். ஊதாரித்தனத்திற்கு இடம் கொடுக்கக்கூடாது."

"டேன்லீ, நீங்கள் சொல்வது மிக நேர்மையாகவும் நியாயமாகவுமிருக்கிறது. ஆகையால் இதற்கு அவசியமான உத்தரவு கொடுங்கள்" என்று அரசர் ஆஞ்ஞாபித்தார்.

"போன முறையைவிட இம்முறை அதிக மூங்கில் வேண்டியிருக்கும்" என்று கஜானா அதிகாரி கூறினார்.

"என் பிரஜைகள் விஷயத்தில் கேவலம் மூங்கிலில் கூட நாம் கருமித்தனம் காண்பிக்க வேண்டுமோ?" என்று அரசர் உருக்கமாக வினவினர்.

ஊதாரித்தனத்தைத் தடுக்கச் சந்தை முழுதும் போர் நடந்தது. மூன்று தினம் உக்ரமாக மூங்கில் பிரயோகம் செய்யப்பட்ட பின், நான்காவது தினம் ஒரு முட்டையின் விலை நான்கு மோஹராவாயிற்று.

ஒருவரும் சந்தையில் பகிரங்கமாக வந்து முட்டை வாங்க மாட்டார்கள். அவைகள் இரகசியமாக விற்கப்பட்டன. ஆகையால் இரட்டிப்பு விலை.

பண்டிதர் சின்ஸனின் நிலைமையை அறிய கருணைவள்ளலான போக்டிகாங் வந்தார். பண்டிதர் மரணத் தறுவாயிலிருந்தார்.

கையினால் குதிகாலைக் காண்பித்து "தவறுதல் ஏற்பட்டிருக்கிறது" என்று முனுமுனுக்கமாத்திரம் அவருக்குச் சக்தியிருந்தது.

அரசர் துக்கத்தினால் பீடிக்கப்பட்டவராய்ப் புலம்பினார்; "என் குருவே! முனியே! அறிவிற்கெல்லாம் இருப்பிடம் போன்றவரே! உம்மை இழந்து விடுவேன் போலிருக்கிறதே. கிருபை புரிந்து உங்கள் மரணத்தை ஒரே ஒரு தினத்திற்குத் தள்ளிவையுங்கள். நாளைக்குள் தேசத்தின் நிலைமை சரியாகிவிடும் என்று நான் சத்தியம் செய்து கொடுக்கிறேன். இல்லாவிடில் டேன்லீயின் மண்டையை உடைத்துவிடுகிறேன். இது நிச்சயம்" என்று கூறி அரசர் புலம்பினார்.

உடனேயே போக்டிகாங்க் அங்கிருந்து வேகமாகச் சென்று மந்திராலோசனை சபைகூட்டி மிகக் கடுங்கோபத்துடன் மேகங்களின் கர்ஜனைபோல் முழங்கும் குரலில் டேன்லீயைத் திட்டி, "படுபாவி டேன்லீ, உன் தலைக்கு இன்று கேடுவந்திருக்கிறது. ஞானியாகிய சின்ஸன் மரிக்கப் போகிறார்; இனி, பிற்காலத்தில் நம் பெயருக்கு அழியா அபகீர்த்தி ஏற்படப்போகிறது என்று இரைந்தார்.

டேன்லீ அரசரின் பாதங்களில் விழுந்து "தெய்வாம்சமே, அடியேனைப் போன்ற அற்பனின் தலை இன்றைக்கு விழுந்தால் என்ன? நாளைக்கு விழுந்தால் என்ன! இதனால் அதிக வித்யாசம் ஏற்படாது. கிருபை புரிந்து ஒரு தினம் அடியேனுக்கு உயிர்ப் பிச்சை யளிக்க வேண்டும். அதற்குள் சரியான குற்றவாளிகளின் குதிகாலைக் கண்டுபிடித்துவிடுகிறேன். ஒரு வர்க்கத்தினர் தவிர்த்து மற்றவர்களைத் தண்டித்தாய்விட்டது. இப்போதே சரியானகுற்றவாளிகள் எவரென்பது தெரிகிறது. முட்டைகளை இடுபவை கோழிகளே! ஆகையால் கோழிகளே தண்டிக்கத் தக்கவை. விலையுயர்ந்த முட்டையிட்டது அவைகளுடைய பிசகினால்தான்!" என்று உரைத்தார்.

சபையோரனைவரும் இவ்வளவு தெளிவாகவும் நியாயமாகவும் டேன்லீ பேசியதைக்கேட்டுச் சந்தோஷித்து ஆரவாரித்தனர்.

"டேன்லீ, அவசியமான உத்தரவிடும்" என்றார் போக்டிகாங்க். அவ்விதமே செய்யப்பட்டது.

அன்று முழுதும் சீனதேசத்தில் கோழிகள் கூவும் தொனி ஆகாயம் வரை பரவி நிரம்பியிருந்தது. அச்சத்தத்தில் மனிதர் ஒருவருக்கொருவர் பேச இயலாதிருந்தனர். அத்தேசத்திலுள்ள கோழிகளையெல்லாம் பிடித்துத் திருப்பிப்போட்டு, மூங்கில் தடி

யால் அவற்றின் பாதங்களை அடித்தனர். மறுதினம் கோழிகள் முட்டையிடுவதை நிறுத்திவிட்டன.

மிக்க கவலையிலாழ்ந்தவராய் போக்டிகாங்க் நந்தவனத்தி லுள்ள ஆச்சிரமத்திற்குச் சென்றார். சின்ஸன் சாகுந்தறுவா யிலிருந்தார்.

போக்டிகாங்க் தம் காலருகில் உட்கார்ந்து பிரலாபிப்பதைப் பார்த்த சின்ஸன் தமக்கு மிகுந்திருக்கும் சக்தியைச் சேர்த்துக் கொண்டு, ஒரு ஞானிக்குரிய புன்சிரிப்புடன் சொன்னார்: "அரசே, உமக்குப் பிற்காலத்தில் உம்மைப் பற்றி ஜனங்கள் என்ன சொல் வார்களென்பதைப்பற்றி நீர் மிகக் கவலைப்படுகிறீர்கள். பாதக மில்லை. கவலைப் படாதீர்கள். ஒன்றும் கெடுதல் உரைக்கமாட் டார்கள். பிற்காலத்தவர் 'போக்டிகாங்க் சிங்சாங் ஒரு நல்ல அரசரே. அவர் நன்மையைத்தான் விரும்பினார். ஆனால் அவ ருடைய துரதிருஷ்டம் அவரைப் பின்பற்றிற்று. எவை சரியான பாதமென்றறியாமல் ஏமாந்தார்' என்றே சொல்வார்கள். ஆனால் இதற்காக வருந்தாதீர்கள். உலகத்திலேயே நன்மையை விரும்பும் போக்டிகாங்க் வமிசத்தாரின் விதி இது. எவை தண்டிக்கத் தகுந்த குதிகாலென்பதைப்பற்றி அவர்கள் ஏமாறுகிறார்கள்."

இவ்விதமுரைத்து ஞானியாகிய சின்ஸன் மரித்தார்.

---

## குடிநீரும் பாத்திரமும்

போசனஞ் செய்கிறவர்கள் தண்ணீர்குடிக்கும் பாத்திரம் தமக் கெனப் புறம்பாகவைத்திருக்கவேண்டும். பிறர் குடித்த பாத்திரத்தை உபயோகிக்கக் கூடாது. ஏனென்றால் பிறரால் தொடப்பட்ட பாத்திரத்தில் அவர்களது சரீராம்சம் கலந்து இருப்பதால் அநேகநோய்கள் உண்டாகும். அப்பாத்திரங்களும் தங்கம் வெள்ளிகளால் ஆக்கப்பட்டவையானால் விசேஷ முடையவையாகும். இயலாதவர்கள் செம்பு வெண்கலம் முதலியவற்றை உப யோகிக்கலாம். உதயகாலத்தில் தயாரிக்கப்பட்டதும், தேத்தாங்கொட்டையால் தெளிவித்துச் சுத்தமான மண்குடத்திலிட்டுக் குளிர்ச்சியுள்ள பாதிரிப்பூ முதலியவற்றால் வாசனையிடப்பட்டதும், கடுக்காய் நெல்லிக்காய் தான்றிக் காய் இவற்றுள் ஒன்றினாலாவது சுத்தமாக்கப்பட்டதுமான தண்ணீரை வைத்துக்கொள்ள வேண்டும். வெந்நீராயின் செப்புப்பாத்திரத்தில் வைக்கக் கூடாது. வைத்தால் சூடுபட்டவுடன் களிம்பாகிய விஷத்தைக் கக்கும் தகுதி யனவாம். வைத்தியசாஸ்திரப்படி வெந்நீரையே குடிக்கவேண்டுமாம்.

லோ.

# விதியின் செயல்

எ. எஸ். பஞ்சாபகேசையர், எம். ஏ., ஐ. ஸி. எஸ்.

(365-ஆம் பக்கத்தொடர்ச்சி)

II

மேற்கூறிய கலியாணப் பேச்சு முடிவடைந்து விடவே, அவர் எதிர்பார்த்துக் கொண்டிருந்த தருணம் அவருக்கு வாய்த்தது.

சாவகாசமாக இருக்கும் ஒரு சாயங்கால வேளையில், நாகபட்டர் ராமபட்டரை அணுகிப் பின் வருமாறு சொன்னர்:—"வரதக்ஷிணையைப் பெற்றுக்கொள்வது, நியாயமானதா, அல்லது நியாயத்திற்கு விரோதமானதா என்பதைக் குறித்து நாம் சிறிது ஆராய்ந்து அறிந்துகொள்ளவேண்டும்."

"அவற்றைக் குறித்துத் தரும சாஸ்திரங்களில் ஒன்றும் காணமுடியாது. நியாயமாக இந்து சாஸ்திரப் பிரகாரம் ஒரு குடும்பத்தின் ஆஸ்தியில் பெண்களுக்கு யாதொரு பாகமும் கிடைப்பதில்லை. ஆகவே ஆஸ்திகள் அதிகமுடைய குடும்பத்தைச் சேர்ந்த பெண்கள் விஷயத்தில், அந்தப் பெண்களின் பாகத்திற்கு அதிகப்படாத ஒரு தொகையை வரதக்ஷிணையாகக் கொள்வது ஒரு விதத்தில் நியாயமான தென்றே நாம் கருத வேண்டி யிருக்கிறது. அதை ஸ்ரீதனம் என்று சொல்வார்கள். ஆனல் சில மாப்பிள்ளை வீட்டுக்காரர், பெண் வீட்டுக்காரர்கள் ஏழைகளாயிருப்பினும் சரி, பணக்காரர்களாயிருப்பினும் சரி, பணத்தை வரதக்ஷிணையாகப் பிடுங்கிவிடுகின்றனர். அப்பணம் ஸ்ரீதனமாகக் கருதப்பட மாட்டாது. அப்பெண் புக்ககத்திற்கு வந்து வாழ்க்கை ஆரம்பிப்பதற்கு முன்னரே, அப்பணத்தை மாப்பிள்ளையும், மாப்பிள்ளையின் சுற்றத்தாரும் சாப்பிட்டு விடுகின்றனர். அதில் ஒரு சிறிது பாகத்தை அப் பெண்ணின் ஆபரணங்களுக்காகச் செலவிடுகின்றனர். அதுவும்கூட மாப்பிள்ளை வீட்டுக்காரருடைய இஷ்டத்தைப் பொறுத்திருக்கிறது. ஆகவே வரதக்ஷிணையை நியாயமானதென்று தரும சாஸ்திரப் பிரகாரம் சொல்லமுடியாது. வேறு தேசத்தவர் ஒரு தேசத்தைக் கைப்பற்றி அத் தேசத்தின் வருமானங்களை அனுபவிப்பது எவ்வாறு நியாயமாகாதோ, அதே மாதிரி, வரதக்ஷிணையை வாங்கி அனுபவிப்பதும் ஒருபோதும் நியாயமாகாது. அவைகளை அனு

பவிப்பதற்கு அவர்களுக்குச் சுதந்திரமுண்டு என்று சொல்வது ஒரு நல்ல நியாயமல்ல. பணம், தேவையாயிருப்பதால்தான் வரதக்ஷிணை வாங்கப்படுகிறதென்னும் நியாயமும் ஒரு நல்ல நியாயமல்ல. மத்திய ஆசியாவைப்போன்ற சில தேசங்கள் மிகவும் தரித்திர தசையில் இருக்கின்றன. அத் தேசங்கள் மற்ற தேசங்களின் மீது படையெடுத்துச் சென்று, அவைகளைக் கைப்பற்றி, அதனல் கிடைக்கும் திரவியத்தைக் கொண்டே பிழைக்கவேண்டும். பொதுவாக எல்லாத் தேசங்களும் அவ்வகையைச் சேர்ந்தவைகளென்றே சொல்லலாம். சில தேசங்கள் நன்றாகப் பிழைக்கவேண்டுமானல் வேறு தேசங்களைக் கைப்பற்றியே யாகவேண்டும். அவ்வாறு கைப்பற்றப்பட்ட தேசங்களில் கிடைக்கும் திரவியத்தைக் கொண்டே அவைகள் படாடோபத்துடன் வாழவேண்டியிருக்கின்றன. அதே மாதிரியாக, நமது கலியாணங்களிலும் நாம் அதிகப் பணம் செலவு செய்யவேண்டி நேரிடுகிறது. அவ்வாறு அதிகப்படி செலவு செய்வதற்கு வரதக்ஷிணையாகக் கிடைக்கும் திரவியமே நமக்கு உபயோகமாகின்றது. எவ்வாறு ஒரு தேசம், தான் கைப்பற்றிய தன்னைச் சார்ந்த மற்றொரு தேசத்தைச் சுயேச்சையாக விட்டுவிடாதோ, அதே மாதிரியாக, இந்த வழக்கத்தையும் நாம் விட்டுவிடமுடியாது. இவ் வழக்கங்கள் இன்னும் காணப்படுவதற்குக் காரணம் மனித சமூகத்தின் சுய நலமேயாகும். ஆனல், சில கலியாணங்களில், அதாவது உன்னுடைய கலியாணத்தைப் போன்றவைகளில், மனித சங்கல்பம் ஒன்றும் பிரயோஜனப்படாது. அதாவது ஒருவன் வரதக்ஷிணையைக் கைக்கொண்டு, உயர்தரப் படிப்புப் படிக்கவேண்டும்; பிறகு வாழ்க்கையில் சிறப்புற்று விளங்கவேண்டும் ; இல்லையேல், வரதக்ஷிணை வேண்டாமென்று சொல்லிவிட்டு, இவ்வுலகத்தில் அன்ன ஆகாரமின்றித் திரியும் பல துரதிர்ஷ்டசாலிகளைப்போலத் திரிந்து கொண்டிருக்க வேண்டும்'' என்று ராமபட்டர் எடுத்துரைத்தார்.

"உண்மைக்காதல் என்னும் தேவதையைப் பூசிக்கும் உன்னதமான எண்ணத்தைக்கொண்ட ஒருவன், வரதக்ஷிணை வேண்டாமென்று சொல்லிவிட்டு, எந்த விதமான கஷ்டத்திற்கும் உள்ளாகத் தயாராக இருக்கவேண்டுமல்லவா? கலியாணங்கள் கடவுளினலேயே நிச்சயிக்கப்படுகின்றன என்னும் கொள்கையை நாம் நம்புகிறோமல்லவா? மேலுலகத்தில் நிச்சயிக்கப்பட்ட புனிதமான விஷயத்தை, நாம் கீழே இழுத்து, மண்ணிலும் சேற்றிலும் அழுத்தி அசுத்தப்படுத்துகிறோமல்லவா?'' என்று நாகபட்டர் கேட்டார்.

"முற்றிலும் உண்மையே; நீ பேசுவதில் சமர்த்தன் என்று வெகுமதிகள் பெற்றிருக்கின்றாயல்லவா? ஆனால் சிறிது ஆலோசித்துப்பார். நீ வரதக்ஷிணையை ஏற்றுக்கொள்வதில்லை என்று நினைத்துக்கொள். அப்பொழுது உயர்தரப் படிப்பு படிப்பதற்கில்லாமற் போகிறது. இத்துடன் உன்னுடைய படிப்பை நிறுத்திவிட வேண்டியது தான். பிறகு வாழ் நாள் முழுவதும் நீ ஒரு பள்ளிக்கூடத்து உபாத்தியாயராகத்தா னிருக்கவேண்டும். உனக்குக் கிடைக்கும் சம்பளமோ, வயிறாரச் சாப்பிடுவதற்கும் கூடப் போதாது. சம்பள உயர்வு என்பதைக் கனவிலும் நினைக்கமுடியாது. கல்வி இலாகா தலைவர்கள், கல்வி இலாகா மந்திரிகள் முதலானவர்கள் நீ உத்தியோகத்திலிருக்கும் ஊருக்கு விஜயம் செய்யும்போது, அவர்களுக்கு உபசாரப் பத்திரங்கள் அளிக்கும் பாக்கியம் மாத்திரம் உனக்குக் கிடைத்தால் கிடைக்கும். ஆகவே தற்போது மண்ணைப் பூசிக்கொள்வது நல்லதா, அல்லது எப்போதும் சேற்றிலேயே அழுந்திக் கிடக்கும் படிக்குச் செய்து கொள்வது மேலானதா? மேலும் வரதக்ஷிணையை ஏற்றுக் கொள்வது உனக்கு அருவருப்பாகத் தோன்றினால், உனக்கு இஷ்டமான போது நீ பெற்றுக்கொண்ட தொகையை நீ திருப்பிக் கொடுத்து விடலாம்."

"அப்படியானால், வரதக்ஷிணை கொடுக்கச் சக்தியில்லாத ஒரு பெண்ணைக் காதலித்தால், அப் பெண்ணை ஒருவன் கலியாணம் செய்து கொள்ளுதல் அசாத்தியமான காரியமாகிவிடும்."

"அது உண்மைதான். தரித்திர தசையினால் ஏற்படக் கூடிய பல கஷ்டங்களில் அதுவும் ஒன்றாகும், 'பணமே உன்னாலாவதென்ன குணமே' என்று வேதாந்திகள் அதை வெறுக்கக் கூடும். ஆனால் அக் கொள்கையை உண்மையென்று நான் நம்ப முடியாது. ஆனால் பணமில்லாதபோது, பலர் மெச்சத் தகுந்த உன்னத எண்ணம் வாய்ந்த பெரியோர்கள் மானக்கேடான காரியங்களைச் செய்து விடுகின்றனர். அவ்விஷயங்களினால் சில கௌரவம் வாய்ந்த மனிதர்களுடைய பெருந்தன்மையும் சிதைந்து போகின்றது. மிகச் சிலர், தங்களுடைய கொள்கைகளைக் கெட்டியாகப் பிடித்தவர்களாய், கேவலமான விஷயங்களில் எப்போதும் பிரவேசிக்காமல் இருக்கின்றனர். ஆனால் அவர்கள் அதிகக் கஷ்டப் படுவார்கள்."

"ஏன் ஒவ்வொரு மனிதனும் அவ்வாறு செய்யக்கூடாது? மானக்கேடான காரியங்களைச் செய்யாமலிருப்பது ஒவ்வொரு மனிதனுடைய கடமையல்லவா?" என்றார் நாகப்பட்டர்.

"நீ சொல்வது என்னவோ சாஸ்திரங்களைப் பொறுத்தவரையில் உண்மைதான்; அவ்வாறிருக்கத்தான் வேண்டும். ஆனல் வாழ்க்கையில் ஒவ்வொரு மனிதனும் அவ்வாறு நடந்துகொள்ளுதல் அசாத்தியம்; வரதக்ஷிணை வேண்டாமென்று மறுக்கும் மனேதிடம் வாய்ந்த பாலியர்கள் எங்கே இருக்கின்ருர்கள்?"

எது எப்படி நடந்தாலும், வரதக்ஷிணையாக ஒரு காசைக் கூடக் கையினுல் தொடுவதில்லை என்று தமக்குள் தீர்மானித்துக் கொண்டு, நாகபட்டர் அவ்விடத்தைவிட்டுச் சென்ருர். அவருடைய மனதிலேயே இருந்துகொண்டு வந்த பங்கஜத்தின் நினைவு அப்போது உள்ளேயிருந்து கிளம்பியது. அந்த எண்ணம் அவருடைய மனத்தில் ஒருவிதமான ஆனந்தத்தை உண்டுபண்ணிற்று. தமக்கு அப்பெண்ணிடம் தோன்றிய ஆசை, சாதாரணமானதல்லவென்றும், உண்மையான காதலென்றும் அவர் அப்போது கண்டு கொண்டு அதிக ஆச்சர்யப்பட்டார். "நான் வரதக்ஷிணை ஏற்றுக் கொள்ளாமல் கலியாணம் செய்துகொள்ளும் பக்ஷத்தில், என் மனத்திற்கிசைந்த மாதையே நான் மணம் புரிந்துகொள்வேன்" என்று அவர் தமக்குத்தாமே சொல்லிக்கொண்டார். பாட்டுக் கச்சேரி நடந்த தினத்திலிருந்து அப்பெண்ணினுடைய வரலாறு அவருக்குத் தெரியாமலிருந்தது. அவரும் அவளிருப்பிடத்தை விசாரித்து அறிந்து கொள்ளவில்லை. அச்சமயத்தில் அவளிருப்பிடத்தை அறிந்துகொள்ளவேண்டும் என்னும் எண்ணம் அவருடைய மனத்தில் உதித்தது. வேருெருவரை அவள் கலியாணஞ் செய்துகொண்டிருப்பின் என்ன செய்வதென்று எண்ணியபோது அவருடைய உடம்பு நடுக்கமெடுத்தது.

அன்றிரவு அவர் தூங்கவேயில்லை. அப்போது விடுமுறை நாட்களாயிருந்தமையால் மறுநாட்காலை அவர் குற்ருலத்திலிருக்கும் நீர் வீழ்ச்சிக்குப் போகப்போவதாக ராமபட்டரிடம் சொல்லிவிட்டு விடைபெற்றுக்கொண்டார். செலவிற்கு வேண்டிய பணத்தையும் பெற்றுக்கொண்டார். அவ்விடத்திற்குப் போய்த் திரும்பிவரப் பதினைந்து நாட்கள் செல்லும் என்று ராமபட்டரிடம் அவர் சொல்லிவிட்டார். அதிகக் கலவரத்துடனும், குழப்பத்துடனும் அவர், பாட்டுக்கச்சேரி நடந்த வீட்டின் யஜமானரிடம் சென்ருர். சாதுர்யமாக அவரிடம் சம்பாஷித்துக் கொண்டிருந்துவிட்டு மறுபடியும் பங்கஜம் அவ்வூருக்கு வரும் சந்தர்ப்பம் வாய்க்குமா என்றும், பங்கஜத்திற்குக் கலியாணம் ஆகிவிட்டதா என்றும் அவர் அவ்வீட்டுக்காரரைக் கேட்டார். "கலியாணம் செய்துகொள்ள வேண்டுமென்று அவள்

செய்த பிரயத்தனங்கள் பலிக்கவில்லை. இந்தக்கலியாணகாலம் முடிவடைவதற்குள் எப்படியாவது அவளுக்குக் கலியாணம் செய்து விடவேண்டுமென்று அவளுடைய தாயார் பிரயத்தனப் பட்டுக்கொண்டிருக்கிறாள். அப்பெண்ணோ அதிகமாக வளர்ந்து விட்டாள். அவள் பரம ஏழையாயிருப்பதைக் காண மனவருத்த முண்டாகிறது. இல்லையேல், உன்னைப்போன்ற புத்திசாலியான ஒருவனை அவள் கணவனாக அடைந்திருப்பாள்'' என்று அவர் சொன்னதைக்கேட்டு, நாகபட்டர் அதிக சந்தோஷமடைந்தார். "அவர்களுடைய சொந்த ஊர் எது?" என்று நாகபட்டர் கேட்க'', "ஆலங்காடு" என்றார் அந்த அண்டைவீட்டுக்காரர்.

"அவர்களுக்கு அவ்விடத்தில் ஆஸ்தி ஒன்றும் இல்லை. அவர்களுடைய பழைய வீட்டை ஒரு கிழவன் விலைக்கு வாங்கியிருக்கிறான். அக்கிழவனுடைய சம்மதத்தின்பேரில், அவர்கள் அவ் வீட்டில் வசித்து வருகின்றனர்."

"அவர்கள் இப்போது பிரயாணம் செய்வதில்லையா ?"

"இல்லை, அதை அவர்கள் நிறுத்திவிட்டனர். அவர்களுக்கு அதிகப் பணம் வசூலாகாமையினால் செலவிற்குக்கூடப் போதாமல் போயிற்று. இக்காலத்தில் ஜனங்களுக்கு சங்கீதத்தின் மீது எவ்வளவு பிரீதி இருக்கிறதென்று உனக்குத் தெரியாதா?"

தம்மீது சந்தேகங் கொள்ளாதிருக்கும் வண்ணம், மற்றும் பல விஷயங்களைக் குறித்துப் பேசிவிட்டு நாகபட்டர் அவ்விடத்தை விட்டகன்றார்.

சாப்பிட்டுவிட்டு ஆலங்காட்டிற்குச் செல்லும் பஸ்ஸில் ஏறிப் பிரயாணமானார். அவர் குற்றாலத்திற்குத்தான் சென்றிருக்கிறார் என்று அவருடைய சகோதரர்கள் எண்ணிக் கொண்டிருந்தனர். நாகபட்டர் பங்கஜத்தின்வீட்டை அணுகியபோது இருட்டும் சமயமாயிருந்தது. அவருடைய நெஞ்சு படபடவென்று துடித்துக்கொண்டிருந்தது. மெதுவாகச் சென்று கதவைத் தட்டினார். பங்கஜம் கதவைத் திறந்தாள். அவளுடைய முகம் வாடியிருந்தது. அப்போதுதான் அழுது கொண்டிருந்தவள்போல் அவள் காணப்பட்டாள். அவரைப் பார்த்தவுடன் அவளுடைய முகம் மலர்ச்சியடைந்தது. அதிக்ச் சந்தோஷ மடைந்தவள் போல அவள் தோன்றினாள். அவர் அவளைப்பார்த்து இரண்டு வருஷங்களாகிவிட்டன. அந்த இரண்டு வருஷங்களுக்குள் அவள் உயர்ந்து அதிக வனப்புவாய்ந்தவளாகி விட்டாள். அவர் முன்பு பார்த்தபோது அவள் ஒரு சிறு பெண்ணாயிருந்தாள். பிறகு அவள் மங்கைப் பருவத்தை

அடைந்து விட்டதனால், அவளுடைய முகத்தில் பெருந்தன்மையும் சௌந்தர்யமும் அமைதியும் சிறந்து விளங்கின. பள்ளிக்கூடத்திற்குச் சென்று கொண்டிருந்த ஒருசிறு பையனாயிருந்த அவர், வாழ்க்கை என்னும் சமுத்திரத்தில் விழுந்து நீந்துவதற்குத் தயாராயிருக்கும் ஒரு கட்டழகுவாய்ந்த இளையராக விளங்கினார். பங்கஜம் சிறிது நாணித் தயங்கிப் பின்னடைந்தாள். "உன்னுடைய தாயார் எங்கே?" என்று அவர் வெட்கத்துடன் தலை குனிந்து கொண்டிருந்த பங்கஜத்தைக் கேட்டார்.

"என்தாயார் வீட்டிற்கு வேண்டிய சாமான்களை வாங்கிக் கொண்டு வருவதற்காகச் சென்றிருக்கிறாள். வீட்டில் நான் மாத்திரம் தனிமையாக இருக்கிறேன்" என்று அவள் பதிலளித்தாள். ஒருநிமிஷம் சிந்தித்துவிட்டு, அவர் வீட்டிற்குள் நுழைந்தார். "நான் யாரென்பது உனக்கு ஞாபகமிருக்கலாம்" என்று அவர் பேச ஆரம்பித்தார். "நன்றாக ஞாபகமிருக்கிறது. சர்வகலாசாலையில் தங்களுக்கு ஏற்பட்ட வெற்றிகளைக் கேட்டு நாங்கள் அதிக சந்தோஷமடைந்தோம். தாங்கள் எதற்காக இங்கு வந்தீர்கள் என்று நான் கேட்கலாமா? தங்களுடைய சுற்றத்தார் எவரேனும் இவ்விடத்தில் இருக்கின்றனரா?" என்று பங்கஜம் கேட்டாள்.

"ஒருவரும் இல்லை. இதுவரையில் ஒருவர்கூட இல்லை" என்றார் நாகபட்டர். பெண்களுக்கு ஏற்பட்டிருக்கும் பகுத்தறிவைக் கொண்டு, அவர் கூறிய வார்த்தைகளின் அர்த்தத்தைப் பங்கஜம் அறிந்துகொண்டு முகமலர்ந்தாள். நாகபட்டர் தமது எண்ணங்களை ஒருவாறு அடக்கிக் கொண்டு, "சரி, நான் உன்னுடைய தாயாரையும் உன்னையும் பார்ப்பதற்காகவே இங்கே வந்திருக்கிறேன். நான் வரதக்ஷிணையைப் பெற்றுக்கொள்ளாமலே கலியாணம் செய்துகொள்ளவேண்டுமென்று தீர்மானித்து விட்டேன். பங்கஜமே, என் அருமைப் பங்கஜமே, நான் உன்னைக் கலியாணம் செய்துகொள்ள விரும்புகிறேன்" என்று தட்டுத் தடுமாறிச் சொன்னார்.

அப்பெண் சுவரின்மீது சாய்ந்து கொண்டாள். அவளுடைய கண்களிலிருந்து நீர் தாரையாகப் பெருகிற்று. நாகபட்டர் அவளுடைய கைகளைத் தம் கைகளினால் பிடித்துக் கொண்டு, "என் அருமைப் பங்கஜமே, நீ ஏன் பேசாமலிருக்கிறாய்? என்னைக் கலியாணம் செய்துகொள்ள மாட்டாயா?" என்று கேட்டார். "கடவுள் ஏன் இவ்வளவு கொடியவராயிருக்கவேண்டும். அவருக்குக் கண்ணில்லையா? தாங்கள் ஏன் இவ்வளவு நாட்கள் கழித்து

வந்தீர்கள்?'' என்று கண்களில் துக்கத்தினால் நீர் ததும்பப் பங்கஜம் கேட்டாள். அவர் சிறிது திடுக்கிட்டுப் பின்னடைந்து, "உண்மையில் உனக்கு இன்னும் கலியாணமாகவில்லையே?'' என்று கேட்டார். "இன்னும் ஆகவில்லை. அவ்வாறு கலியாணம் நடந்திருந்தால் என்னைத் தொடும்படி நான் தங்களுக்கு அனுமதியளித்திருக்கமாட்டேன். ஆனால் என்னுடைய தாயார் இந்தவீட்டின் சொந்தக்காரனான ஒரு கிழவனுக்கு என்னைக் கலியாணம் செய்து கொடுப்பதாக வாக்களித்து விட்டாள். அக்கிழவனுக்கு வயது ஐம்பத்துநான்கு ஆகிறது. அவனுக்கு மனைவியில்லை. அவன் அதிகப் பணக்காரன்'' என்று அவள் சொன்னாள்.

"இந்த வயது முதிர்ந்த மடையனைக் கலியாணஞ்செய்து கொள்ள உண்மையில் நீ சம்மதித்திருக்க மாட்டாயென்று நான் நினைக்கிறேன்.''

"நான் ஒன்றும் சொல்லவில்லை. வரதக்ஷிணையாகக் கொடுப்பதற்கு என்னுடைய தாயாரிடம் ஒருகாசுகூடக் கிடையாது. பாட்டுக்கச்சேரிகளினால் சம்பாதித்து வைத்திருந்த சிறிது தொகையையும் நாங்கள் திரும்பிவந்ததுமுதல் எங்களுடைய சாப்பாட்டிற்காகச் செலவு செய்து விட்டோம். இந்தக்கிழவனைத்தவிர வேறு எவரும் என்னைக் கலியாணம் செய்துகொள்ள முன்வரவில்லை. தங்களுக்குச் சர்வகலாசாலையில் கிடைத்த வெகுமதிகளையும், பட்டங்களையும் குறித்துக் கேள்விப்பட்ட பிறகு, தங்களைக் குறித்து எண்ணுவதற்குக்கூட எனக்குத் தைரியமில்லாமல் போயிற்று. ஆகவே இந்தக் கலியாணத்திற்கு நிச்சிதார்த்த முகூர்த்தம் இன்னும் இரண்டு தினங்களில் நடைபெறவேண்டுமென்று ஏற்பாடாகி யிருக்கிறது. பதினைந்தாம் நாளாகிய திங்கட்கிழமை கலியாணத்திற்கு நல்ல முகூர்த்தநாளாகப் பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது'' என்று பங்கஜம் கூறினாள்; அவள் கண்களில் கண்ணீர் வழிந்தது.

"இந்தக் கலியாணம் நடக்கக் கூடாது. அதற்குப் பதிலாக நீ என்னைக் கலியாணம் செய்து கொள்வாயாக'' என்று நாகபட்டர் சொன்னார். "ஆனால்'' என்று ஏதோசொல்லப் பங்கஜம் வாயெடுத்தாள். அதற்குள் அவர் அவளுடைய உதடுகளில் காதலுடன் கூடிய ஒரு முத்தம் கொடுத்து விட்டதனால் அவள் ஒன்றும் சொல்லமுடியாமல் போயிற்று. "இது கலியாணத்தை நிச்சயமாக்கிவிட்டது'' என்று அவர் சொன்னார்; "உன்னுடைய தாயாரிடத்திலும் அக்கிழவனரிடத்திலும் நாம் முத்தம் கொடுத்துக்கொண் டாகிவிட்டதென்றும், நாம் ஒருவரை ஒருவர்

கலியாணம்செய்துகொள்வதாக ஒப்பந்தம் செய்து கொண்டாகி விட்டதென்றும் சொல்லி விடலாம். நாம் அவ்வாறு சொல்லி விட்டபிறகு அந்தக் கிழவன் தடைசெய்யமாட்டான்; தானுகவே விலகிக் கொள்வான்."

அவள் அவரைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு பின்வருமாறு சொன்னுள்: "நீங்கள் என்னைக் காப்பாற்றிய பிரபு; இச்சமயத்தில் என்னுடைய பங்கிலிருந்ததே தெய்வம்! இனிமேல் என்னைக் காப்பாற்றும்பாரம் தங்களைச் சேர்ந்தது. நான் இறந்து போகும் வரையில் என்னல் கூடியவரையில் தங்களுக்குப் பணி விடைகள் செய்வேன் என்று பிரமாணம் செய்கிறேன்."

அவர் அவளைத் தழுவி முத்தமிட்டு, "என் கட்டிக் கரும்பே, நான் உன்னையடையும் பெரும் பாக்கியத்தைப்பெற முன்ஜன்மத்தில் என்ன புண்ணியம் செய்தேனே?" என்று சொன்னர்.

"என் ஆருயிரே, நான் சென்ற ஜன்மத்தில் செய்த புண்ணியத்தின் பலனல்தான், தங்களை அடையும் பெரும்பாக்கியத்தைப் பெற்றேன் என்று சொல்லுங்கள்."

"பங்கஜமே! நான் உன்னை என்னுடைய சகோதரர்களின் அனுமதியில்லாமலே கலியாணம் செய்துகொள்ளப் போகிறேன். என்னுடைய சகோதரர்களின் கட்டளையை மீறி, நான் உன்னைக் கலியாணம் செய்துகொள்ளப் போகிறேன். என்கண்ணே, நான் சட்டகலாசாலைக்குச் சென்று படிப்பதென்பதை அறவே மறந்து விடவேண்டும். ஏதோ ஓர் இடத்தில், அற்பச்சம்பளமுடைய ஒரு பள்ளிக்கூடத்து உபாத்தியாயராகத்தான் நான் அமர வேண்டும்" என்ருர் நாகபட்டர்.

"தாங்கள் ஏன் அவ்வாறு செய்யவேண்டும்? தாங்கள் திருவனந்தபுரத்தில் ஒரு பள்ளிக்கூட உபாத்தியாயராகச் சேர்ந்து கொண்டு, அச்சம்பளத்தைக்கொண்டு சட்டகலாசாலையில் படிக்கலாமே" என்ருள் பங்கஜம்.

"அவ்வாறு கிடைக்கும் பணம் போதாது. சட்டகலாசாலைக்கு அதிகத் தொகை செலுத்தவேண்டும்".

"நான் சிறு பெண்களுக்குப் பாட்டுச் சொல்லிக் கொடுத்துச் சிறிது சம்பாதிக்கக்கூடும்."

"நீயல்லவோ மனைவி! நீ மதிப்பதற்கரியவளாய்விட்டாய்."

"நான் அவ்வாறே இருக்க முயல்கின்றேன்" என்று அவள் சொல்லிவிட்டு அவரைக் கட்டித் தழுவிக் கொண்டாள்.

அச்சமயத்தில் பங்கஜத்தின் தாயாரும் அக்கிழவனும் திறந்து வைக்கப்பட்டிருந்த வாயிலின்வழியாக உள்ளே வந்தனர். "இது என்னகோலம்?" என்று அக்கிழவன் கோபத்துடனும் ஆத்திரத்துடனும் கேட்டான். பங்கஜத்தின் தாயார் ஆச்சரியம் மேலிட்டவளாய்த் திடுக்கிட்டு அசையாமல் நின்று விட்டாள். பங்கஜத்தைத் தழுவிக் கொண்டிருந்த கைகளை விட்டுவிட்டுப் பின்வருமாறு நாக பட்டர் கூறினர்:—"சரி, தக்கவயதுடைய இரண்டு காதலர்கள் தங்களுக்குள் இருக்கும் காதலை வெளிப்படுத்திக்கொண்டிருக்கின்றனர். நாங்கள் இருவரும் கலியாணம் செய்துகொள்வதென்று தீர்மானித்துவிட்டோம். நாங்கள் எத்தகைய வாழ்க்கையை மேற்கொள்வதென்று ஒருவாறு கலந்து யோசித்துக் கொண்டிருக்கிறோம். இவ்விஷயங்களை நீங்கள் அறிந்துகொள்ள வேண்டியது அவசியம்."

"இந்தப்பெண்ணை எனக்குக் கலியாணம் செய்து கொடுப்பதென்று நிச்சயமாகி யிருக்கிற விஷயம் உனக்குத் தெரியாதா? அவளைக் கட்டித்தழுவி அவளுடைய கற்பை அழிக்க நீ எவ்வாறு துணிந்தாய்? நான் இக்கிராமப் பஞ்சாயத்தார்களைக் கூட்டி, உங்களிருவருக்கும் தகுந்த தண்டனை விதிக்கும்படி செய்கிறேன்" என்று அதிகக் கோபத்துடன் அக்கிழவன் கூறினன். "ஐயா, நல்லவேளையாக ஜாதிப் பிரஷ்டம் செய்தல் முதலியவைகளும், ஜாதிக்கட்டுப்பாடும் மறைந்துபோய்க்கொண்டிருக்கின்றன. அத்தகைய பஞ்சாயத்தார்களிலும் சிலர், இந்த அழகிய பெண் என்னைக்கலியாணம் செய்து கொள்ளுதலே மேல் என்றும், உம்மைப் போன்ற சாகுந்தறுவாயில் இருக்கும் கிழவனைக் கலியாணம் செய்துகொள்ளுதல் அக்கிரமம் என்றும் கருதுவார்கள் என்பதில் சந்தேகமேயில்லை. அத்தகைய பஞ்சாயத்தைக் கூட்டினல் அக்கம்பக்கங்களில் இருப்போர்கள் உம்மை ஏளனம் செய்வார்கள். உம்முடைய மானத்தை நீர் இழக்கவேண்டி நேரிடும். நீர் சும்மா இருப்பீரேயானல் இந்த ஏழைகளை ஆதரித்துக் காப்பாற்றிய புண்ணியவான் என்று உம்மை எல்லோரும் போற்றுவார்கள். மேலும் உம்மீது பிரியமில்லாத ஒருபெண்ணை—உம் எதிரிலேயே வேறு ஒருவனைத் தழுவி முத்தமிட்டுக் கொண்டிருந்த ஒருபெண்ணைக்—கலியாணம் செய்துகொள்ள நீர் இஷ்டப்பட மாட்டீர் என்பது நிச்சயம்" என்று நாகபட்டர் கூறினர்.

அக்கிழவன் சிறிது நேரம் யோசித்து விட்டு, "நீ சொல்வது ஒரு விதத்தில் நியாயமாகத்தான் தோன்றுகிறது. நீயார், உன்னுடைய அபிப்பிராயமென்ன என்பவைகளை விவரமாகச்

சொல்'' என்றுசொன்னான். பிறகு பங்கஜத்தின் தாயாரைப் பார்த்து, ''சந்தோஷத்துடன் இருங்கள். இங்கே நடந்தவைகளெல்லாம் இரகசியமாகவே இருக்கும்'' என்று அவன் சொன்னான். நாகபட்டர் விவாக விஷயங்களைக் கூறியபிறகு, அக்கிழவன் பின் வருமாறு கூறினான்: ''வீரம் நிரம்பிய பல கொள்கைகளையுடைய தைர்யசாலியாக நீ காணப்படுகிறாய். உன்மீது எனக்கு எள்ளளவேனும் கோபமில்லை. நீங்கள் இருவரும் சிரஞ்சீவியாக வாழ்வீராக!''

நாகபட்டரும் பங்கஜமும் அக்கிழவரை நமஸ்கரித்து அவருடைய ஆசீர்வாதத்தைப் பெற்றனர். அன்றையதினம் இராத்திரி அந்தச் சந்தோஷகரமான சம்பவத்தை முன்னிட்டு ஒரு நல்ல விருந்து நடந்தது.

மறுநாட்காலை, நாகபட்டர் எரணுகுளத்திற்குச்சென்று ராமபட்டரிடம் நடந்த விஷயங்களைக் கூறினார். அவற்றிற்குத் தடையாக ராமபட்டர் ஒன்றும் கூறாமலிருந்தது நாகபட்டருக்கு அதிக ஆச்சர்யமாக இருந்தது. ''நீயாக்வே, முட்கள் நிரம்பிய, கடமையும் பெருந்தன்மையும் வாய்ந்த நன்னெறியைக் கடைப்பிடிக்கத் தீர்மானித்துவிட்டாய். நீ சந்தோஷமாக வாழக்கடவாய்!'' என்று அவர் சொன்னார்.

ஒரு பக்ஷத்திற்குள்ளாக நாகபட்டர் பங்கஜத்தைக் கலியாணம் செய்து கொண்டார். ஒரு மாதத்திற்குப் பிறகு அவர் திருவனந்தபுரத்தில் ஒரு பள்ளிக்கூட உபாத்தியாயராக நியமிக்கப்பட்டார்; சட்டகலாசாலையின் மாணுக்கராகவும் அவர் சேர்ந்து கொண்டார். காலையிலும் மாலையிலும் அவர் சட்டகலாசாலைக்குச் செல்வார். காலை பத்தரைமணியிலிருந்து மாலை நாலரைமணி வரையில் அவ்விடத்திலிருந்த பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயர் உத்தியோகம் பார்த்துவந்தார். அவருக்கு மாதம் ஒன்றுக்கு ஐம்பது ரூபாய் சம்பளம் கிடைத்துவந்தது. பங்கஜம் தனக்கு அவகாசம் கிடைத்தபோது பெண்களுக்குப் பாட்டுச் சொல்லிக் கொடுத்து மாதம் பதினைந்துரூபாய் சம்பாதித்துவந்தாள். பணக் கஷ்டமில்லாமல் அவர்கள் சௌக்கியமாக வாழ்ந்து வந்தார்கள். இரண்டு வருஷங்களில் நாகபட்டர் ஒரு வக்கீலாகிவிட்டார். மூன்று வருஷங்களுக்குப்பிறகு அவர் மாதம் ஒன்றுக்கு முந்நூறுரூபாய் சம்பாதித்து வந்தார். பங்கஜமும் பாட்டுச் சொல்லிக் கொடுப்பதை நிறுத்திவிட்டாள். அவ்வூரிலிருந்த பெண்கள் கழகத்திற்கு அவள் காரியதரிசியாக விளங்கினாள்.

பெண்கள் முன்னேற்ற விஷயத்தில் அவள் அதிக ஊக்கம் கொண்டு உழைத்து வந்தாள்.

ஒரு வருஷத்திற்குப் பிறகு அவர்களுக்கு ஒரு குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்கு எக்ஞதத்தன் என்று பெயரிட்டனர். அதாவது தியாகத்தின் பலனாகப் பிறந்த குழந்தை என்றுகாட்ட அப்பெயரிட்டனர். நாகபட்டர் அடிக்கடி அதிகவிலையுயர்ந்த வெகுமதிகளை பங்கஜத்திற்குக் கொடுத்துவந்தனர். அவ்வாறு கொடுக்கப்பட்டவைகளுள், தந்தத்தினால் செய்யப்பட்டதும், விலையுயர்ந்த இரத்தினங்கள் பதிப்பிக்கப்பட்டதுமான ஒரு சிறிய பெட்டியே மிகவும் மேலானதாக விளங்கியது. ஒருநாள் அப்பெட்டியை நாகபட்டர் எடுத்து அதற்குள் என்ன விலையுயர்ந்த ஆபரணங்களைத் தம்மனைவி வைத்திருக்கிறாளென்று பார்பதற்காக அதன்மூடியைத் திறந்தார். அதற்குள் ஓர் அழகிய பட்டுத் துணியில் முடிந்து வைக்கப் பட்டிருந்த ஒரு பழைய நான்கணாநாணயத்தைத் தவிர வேறு ஒன்றும் காணப்படவில்லை. அதைக் கண்டு நாகபட்டர் ஆச்சரிய மடைந்தார். அவர் பங்கஜத்தைக் கூப்பிட்டு, "இதென்ன?" என்று கேட்டார். "அதுதான் விதியின் செயலைக் குறிக்கிறது; மற்றவெகுமதிகளுக்கெல்லாம் காரணமாயிருந்த, காதலை விளக்கிக்காட்டிய முதல் வெகுமதி அதுவே" என்று பங்கஜம் சொன்னாள்.

---

## இந்தியாவின் காகிதத் தொழில்

கி. பி. 1840-க்கு முன் இந்தியா தனக்குவேண்டிய காகிதங்களுக்காகச் சீனதேசத்தை எதிர்பார்த்திருந்தது. உத்தேசமாக மேற்கூறிய வருஷத்தில் இந்தியாவிலேயே காகிதத் தொழிலை மேற்கொள்ள வேண்டுமென்ற கிளர்ச்சி நாடெங்குப் பரவியது. அதன் பயனாகப் பல இடங்களில் இந்து முகம்மதிய காகிதத்தொழிற்சாலைகள் நிறுவப்பட்டன. சணலிலிருந்து காகிதங்கள் செய்யப்பெற்றன. ஸர் சார்லஸ் உட் இந்தியா மந்திரியாக வந்தபோது அவர் 'இந்திய அரசாங்கத்துக்குத் தேவையான காகிதங்களை எல்லாம் அந்த அரசாங்கம் இங்கிலாந்திலிருந்தே விலைக்கு வாங்க வேண்டும்' என்று ஓர் உத்தரவைப் பிறப்பித்தார். வளர்ந்தோங்கி வந்த சுதேசிகாகிதத் தொழில் இந்தத்தடையால் க்ஷீணித்து விட்டது.

—ஸர். ஜார்ஜ் வாட்.

# சங்கு மோதிரம்

தி. ஜ. ர.

---

I

'புஷ்பகாந்தன்' என்பது என்தந்தை வைத்த பெயர்; அந்தக்காலத்தில் அவருக்கு மிகுந்த நாவல் பைத்தியம். "ஜகதீசா!" என்றுதான் தாயார் கூப்பிடுவாள்; அவள் தெய்வ பக்தி வாய்ந்தவள். சின்னத்தம்பிக்கு நாவலும் தெரியாது; அவன் 'பலிக்காத பார்ப்பாரச்சாமி'களையும் அறியான்; தம்பி என்றே அழைப்பான் என்னை.

எத்தனை வருஷங்கள் ஆனல் என்ன? இன்னும் எனக்கு அவனை நன்ருக ஞாபக மிருக்கிறது.

பச்சைப்பசேல் என்று ஒரு கூடை நிறையப் பாகற்காய் கொண்டுவருவான். "இது கசப்பாய்க் கசக்குமப்பா; வெள்ளை யாய் இருக்குமே ஒருஜாதி; அது கிடையாதா?" என்பார் என் தந்தை.

"அதெல்லாம் கடவுள் படைத்த படைப்பு, சாமி. பச்சை யெல்லாம் கசக்காது; வெள்ளையெல்லாம் இனிக்காது; அதுக்கு உள்ளது அதுக்கு. நீங்கள் கறுப்பு; அம்மாள் கறுப்பு. தெய்வம் மாதிரி உங்களைப் பார்க்கச் சந்தோஷமாயிருக்கிறது. அதோ அந்தக் கோடிவீட்டுச் சாஸ்திரியா, மேஸ்திரியா—அவர் வெள்ளைக்காரன் மாதிரிதான் இருக்கிருர். அவர் முகத்தைக் காணப் பிடிக்கிறதா? அப்படியே தங்கத்தைத்தான் கொடுக்கட்டுமே; நான் அவர்கள் வீட்டுப்பக்கம் போகமாட்டேன், சாமீ" என்று என் தந்தையிடம் கூறிவிட்டு என்னைப் பார்த்து, "ஐயா இப்படித்தான் சொல்லுவார்; நீ போய் முறத்தை எடுத்துவா, தம்பீ" என்று எனக்குக் கட்டளை போட்டுவிடுவான் சின்னத்தம்பி.

கோடிவீட்டுக்காரர் சாஸ்திரிதான்; ஆனல், மேஸ்திரியல்ல. சின்னத்தம்பிக்கு வெறுப்பு வரும்போது பிராஸமும் கூடவே வரும். "மோனைமுத்தமிழ் மும்மதமும் பொழி"யும் புலவர்களுக்கு அகராதியில் இருக்கிறது பிராஸம்; சின்னத்தம்பிக்கு வாயிலேயே இருக்கிறது; அந்தர்யாமி பேசிவிடுகிருர்! சாஸ்திரி, மேஸ்திரியல்ல

வென்றாலும் காரியத்தில் மேஸ்திரியைப்போன்றவரே; அவரே அந்த ஊர்வெட்டையா; அதாவது போலீஸ் ஹெட்கான்ஸ்டபிள். சின்னத்தம்பிக்கு அவரிடம் இவ்வளவு கோபம் வந்ததற்கு என்ன காரணம் என்பது எனக்கு அப்பொழுதும் தெரியவில்லை; இப்பொழுதும்தெரியவில்லை. ஆனால் எனக்கும் அவரிடம் ஒரே வெறுப்பு. அதன் காரணம்மாத்திரம் எனக்கு இப்போது ஸ்பஷ்டமாகப் புலனாகிறது; அதாவது: அவர் சின்னத்தம்பிக்குச் சிறிதும் பிடிக்காதவரா யிருந்ததுதான்.

சின்னத்தம்பி என்ன சாமான் கொண்டுவந்தாலும் சரிதான்; எங்கள் வீட்டில் 'போணி' பண்ணாமல் போகமாட்டான். அதோடு, விக்னேசுவர பூஜைபோல, அந்தக்காலத்துக்கு ஏற்ப, ஒரு வெள்ளரிப்பிஞ்சு, மாம்பழம், பனை நுங்கு ஏதாவது கூடையின் அடியில் ஒளித்துவைத்திருந்து எனக்குக்கொடுத்துவிட்டுத் தான் போவான்.

என்பாட்டி—அம்மாளைப்பெற்றவள்—எனக்கு இரண்டுகைகளுக்கும் மும்மூன்று பவுனில் கெட்டியான தங்கக்காப்புப் போட்டிருந்தாள். பவித்திர விரலில் ஓர் அழகான கிளாவர்மோதிரமும் அணிந்திருந்தேன். இப்போது சிறுகுழந்தைகள் நகை போடுவதைக் கண்டால் எனக்கு வெறுப்பா யிருக்கிறது. நான் சிறுவனாயிருந்தபோது நகையில் நிரம்ப ஆசை. லோகம் தர்க்க ரீதியில் நடக்கிறதா? நாம்தான் தர்க்கத்துக்குக் கட்டுப்படுகிறோமா? என் தங்கநகைகள் எல்லாவற்றையும்விட, சின்னத்தம்பி கையில் போட்டிருந்த ஒரு சங்கு மோதிரத்தில் எனக்கென்னவோ மிகுந்த மோஹம். ஆனால் அப்பா வைவார்; அம்மாள் திட்டுவாள்; எனக்கோ அந்த மோதிரமே வேண்டும் என்றாலும், நான் வாய் திறந்து அதைக் கேட்கவேயில்லை; இப்பொழுது—இத்தனைவருஷம் கழித்து—நான் நிஜம்சொல்ல ஏன் பயப்படவேண்டும்? உண்மையாக அதைநான் அவனைக் கேட்கவேயில்லை.

"சின்னு, ஏ சின்னு!"

இப்படித்தான் எல்லாரும் கூப்பிடுவார்கள் அவனை. அதனால் தான் நானும் அப்படிக் கூப்பிடுவது வழக்கம்.

"சின்னு, உனக்கு ஏது இந்த மோதிரம்?" என்று ஒருநாள் அவனை நான் கேட்டேன்.

"இதுவா?" என்று சிரித்துவிட்டு, "உனக்கேன் தம்பி இந்தக் கவலையெல்லாம்?" என்ற சின்னத்தம்பி, "நீபோட்டுப் பார்க்கிறாயா இதை?" என்றான். மோதிரத்தைக் கழற்றி என் கையில் தந்து நகைத்தான் சின்னு.

பயத்தோடு அக்கம்பக்கம் பார்த்துக்கொண்டே அந்தக் கையில் வாங்கிய நான் விரலில் அணிந்து பார்த்தேன். ஏ அப்பா! இன்னும் எனக்கு இன்றுபோல் அது ஞாபகமிருக்கிறது. சுண்டு விரல், பவித்திரவிரல், அதற்கடுத்தாற்போலுள்ள நடுவிரல் மூன்றும் நுழைந்தன அந்த மோதிரத்துக்குள்.

"இது பெரிய மோதிரம் . . ம் . . ம்" என்று சொல்லிக் கொண்டே திருப்பிக்கொடுத்துவிட்டேன்.

இதற்குமேல் ஒன்றுமே நடக்கவில்லை. ஆனால், இந்தச் சம்பவத்தை அவன் கடைசிவரையில் நன்ருய் நினைவில் வைத்திருந்தான்.

இப்பொழுது நான் பெரியவன்தான்; என்ருலுமென்ன? சின்னத்தம்பியுடன் நான் பழகிய காலத்து நினைவு—அந்தப் பழைய வாசனை—அடியோடு மறக்கமாட்டேனென்கிறது. அவனைப் பற்றிச் சொல்லும்போது பெரியவனுமில்லாமல் சிறியவனுமில்லாமல் ஒரு கதம்பமாகி விடுகிறேன். அது எனக்கே தெரிகிறது. எனினும், நான் என்ன செய்வது? கதைகளில் சொல்லப்படும் அன்னப்பறவையா என்ன, கலப்படத்தைப் பிரிப்பதற்கு?

"ஏ, சின்னு! நீ அந்தச் சொக்கியை விட்டுவிட்டாயா? அல்லது இன்னும் அவளைக் கட்டிக்கொண்டுதான் அழுகிருயா?" என்று ஒருநாள் என் தகப்பனர் கேட்டார்.

"போ, சாமீ! அதை விட முடியுமா? நம்மை நம்பிவந்து விட்டதே" என்று அரைச்சிரிப்புடன் சொன்னன்.

"உன் ஜாதியில் ஒரு நல்ல பெண்ணைத் தாலிகட்டிச் சுகமாய் வாழப்படாதா?" என்ருர் தகப்பனர்,

"அது என்னவோ மனசு பிடிச்சுப்போச்சு. அப்புறம் ராசிப் பொருத்தம், பஞ்சாங்கம் எல்லாம் பார்க்கமுடியுமா?" என்று சொல்லிவிட்டு துலாக்கோலைப் பிடித்துக் கத்தரிக்காயை நிறுக்க ஆரம்பித்து விட்டான் சின்னு.

எங்கள் ஊர் ஒரு சிறிய பட்டணம்; அதற்கு மூன்றுமைல் தூரத்தில் சின்னத்தம்பியின் களத்தங்காடு என்ற கிராமம். மற்ருெருபுறத்தில் சோணையனூர் என்ற வேருெரு கிராமம். சோணையனூருக்கும் களத்தங்காட்டுக்கும் இரண்டு தலைமுறையாக மனஸ்தாபமாம்.

"ஓ! அந்தப் பசங்கள் என்னவோ நினைத்துக்கொண்டிருக்கிருங்கள், சாமீ. அவங்கள் மாடுபிடுக்கி. இப்பொழுதுதான் அடங்கியிருக்கின்ருனுகள்; நாலுவருஷத்துக்குமுன் ஒரு மேஸ்தி

ரிட்டு ஐயா வந்தாரு; தங்கமானவர். அவர் சுட்டுக்கொளுத் தட்டுமோ, வழிக்குவர்ரீங்களா என்றாரு. இருபதுபேரை உள்ளே தள்ளிவிட்டார். இனிமே அந்தப் பசங்கள் மூச்சுப்பறிய முடி யாது, சாமீ; களத்தங்காட்டான் என்றால், என்னவோ கிள்ளுக் கீரை என்று நினைச்சுக்கிட்டிருக்கிறானுங்க. எங்கப்பார் மாத்திரம் சிலம்பை எடுத்தாருன்னு; நூறுபேரை அடிப்பாரு, சாமீ; மூணுதடவை செத்தேன் பிழைத்தேன் என்று ஓடிப்போன பசங்கள், சாமீ'' என்று சின்னத்தம்பி பேச ஆரம்பித்து விட்டானானால் கீற்றுவிழுந்த கிராமபோன் பிளேட்டுமாதிரிதான்; ஓயவேமாட்டான். ஒரே பல்லவிதான்; சங்கதிகள்மட்டும் சற்று மாறுபடும். ஏனென்றால், மனோதர்மம் அவன் பிறவியிலே அமைந்தது. ஆனால், எத்தனையோ தடவை இதைப்பற்றிப் பேசியிருந்தும் இரண்டு ஊருக்கும் தணியாக் குரோதம் இருப்ப தற்கு வேண்டிய காரணம்மட்டும் விளங்கவேயில்லை.

"ஏனடா, சின்னு, ஏன் உங்கள் இரண்டு ஊருக்கும் இவ் வளவு சண்டை?'' என்று என் தாய் சில சமயம் கேட்பதுண்டு.

"அது என்ன, அம்மா? நாம் பண்ணிக்கொண்ட சங்கதியா? எங்கள் அப்பன் பாட்டன் காலமுதல் இருந்துவரும் சண்டை. இரண்டு மூன்று தடவை அவங்கள் கெஞ்சினானுகளே; அந்தப் பசங்களோடு ராஜியாய்ப்போக முடியுமா? அவமானம் அது?'' என்று தான் சின்னத்தம்பி சொல்லுவான்.

## 2

எங்கள் வீட்டுக்கெதிரே ஒரு பாழ்மனை இருந்தது. அதுவும் எங்களுக்கே சொந்தம். பெரியவர்கள் காலத்தில் கட்டிய ஒரு கட்டிடத்தின் சுவர்கள் மாத்திரம் அதில் மிச்சமாயிருந்தன.

சுவர்களை இடிக்கவே கூடாது என்று என் பாட்டி குறுக்கே விழுந்து மறித்துவிட்டாள்; "அதை ஒரு கொட்டகையாகப் போடு'' என்று அவள் என் தந்தையிடம் சொன்னாள். தகப்ப னார் அவள் சொன்னதைத் தட்டாமல் போட்டார். ஆனால், வாயு பகவான் என் தந்தையின் மாத்ருபக்தியை மெச்சாமல் கொட் டகையைப் பிய்த்து எறிந்துவிட்டார். பெரும் புயலின் லீலை. சுவர்கள் இடிந்துவிழுந்தன. எல்லாம் தரைமட்டமான பிறகு, "அந்த மனையை ஏன் இப்படி வீணாக்கவேண்டும். வேலி கட்டி இரண்டு பயிர்பச்சையைப் போட்டாலும் போடலாம்'' என்று

அதே பாட்டி சொன்னாள். பாட்டியின் யோசனையின் பேரில் நிர்மாணமாயிற்று ஓர் அவரைப்பந்தல். அதில் புடலையும் தொங்கும்.

“பாழும் மனையா, மக்கியமண்ணு? உரமே வேண்டியதில்லை. நன்றாய்க் காய்க்கும். என்னை இனிமேல் லட்சியம் பண்ணமாட் டீங்க” என்றான் நீண்டநாள் வாடிக்கைக்காரனான சின்னத்தம்பி.

கண்குளிரும்படி பசுமையாய் இருந்ததுமாத்திரமல்ல; மனத் திற்கு ஒரு ரம்யமும் மகிழ்ச்சியும் தரும் ஒருவித அழகுவாய்ந்து மிருந்தது அந்த அவரைப்பந்தல்; சின்னு சொன்னதுபோல் காய்க் கவும் ஆரம்பித்துவிட்டது.

அவரை புடலை விதைகளை நட்டவள் என் தாயார். நான் நடத்தெரியாமல் நேராய் நட்ட விதைகூட முளைத்துக் கொடியாய்ப் படர்ந்து பரந்து காய்த்துவிட்டது! என்தகப்பனார் தான் தண்ணீர் இறைத்தவர். தாய் எருப்போட்டுக் களை பறித் தாள். நாங்கள் எல்லோருமே அந்த அவரைப்பந்தலை வெகு பரிவோடு பாதுகாத்தோம்.

நாங்கள் போட்ட விதை, பூத்துக் காய்த்து, நாங்களே சாப் பிடக்கூடிய உணவை விளைவித்துவிட்டது. அது என்ன ருசியா யிருந்தது தெரியுமா? நாங்கள் அவரை என்று நட்ட ஒன்று மொச்சைக் கொடியாய் முளைத்துவிட்டது. அதுவும் ஒரு நல்லதுக்குத்தான்; படிப்படியாய்க் காய்த்தது. அநேகந்தடவை சுண்டல்கூடச் சுண்டியிருக்கிறாள் என்தாயார்.

காலையில் எழுந்ததும் நான், தாயார், தகப்பனார் மூவரும் தனித்தனியே அந்த அவரைப்பந்தலை ஒருமுறை சுற்றிவிட்டு வராமல் இருக்கமாட்டோம்.

அந்த அவரைப் பந்தலுக்குப்பக்கத்திலே ஒரு மல்லிகைச் செடியும் உண்டு. என்ன பூ! என்ன பூ!! ஊருக்கெல்லாம், எத்தனை அரும்பு அள்ளிக் கொடுத்தோம்!!!

“அடடா! என்ன பெரியமனசு! நிதானமாகக் கொடுக்க வேண்டும்? என்னிடம் கொடுத்தால் நான் சுமந்து சந்தையில் விற்றுக் காசு பண்ணிவருவேனே. தம்பிக்கு ஒரு பட்டுச்சொக் காய்க்கு ஆகாதா?” என்றான் சின்னத்தம்பி.

என் தகப்பனார் நகைத்தார். தாயாரின் முகத்தில் ஒரு மலர்ச்சி ஏற்பட்டது. ஆனால், அது வார்த்தையாய்க் கனிய வில்லை; நகைப்பாயும் பரிணமிக்கவில்லை.

# 3

ஒருநாள் சின்னத்தம்பி தனியாய்வரவில்லை. அவனோடு இன்னொரு பெண்ணும் வந்தாள். அவள் தான் சொக்கி.

நகரத்திலே தேர்த்திருவிழா; சின்னத்தம்பி, அந்தத் தெற்கத்தியாள் சொக்கியையும் அழைத்துவந்தான்.

"அது பாப்பாத்தி மாதிரியிருக்கும், சாமீ" என்று சின்னத்தம்பி பலமுறை சொல்லியிருக்கிறான்; அது உண்மைதான். சொக்கி செக்கச்செவேலென்று வாட்ட சாட்டமா யிருந்தாள். கன்னங்கரேல் என்ற விழி. வாய் நிறையப் பாக்கு வெற்றிலை. அவள் கொப்பு, முருகு, திருகு ஒன்றும் போட்டுக் கொள்ளவில்லை. ஒரு சிறிய தோடு; கையிலே, கெட்டியான தங்கக்காப்பு; இவ்வளவுதான் அவள் நகை. அவள் கையிலும் ஒருசங்கு மோதிரம் போட்டிருந்தாள்.

"ஜோடியாக வாங்கினயா?" என்று நான்கேட்டேன்.

சின்னப்பன் நகைத்தான்; மோதிரத்தைப்பார்த்துக் கொண்டே நான் மறுபடியும் வினவினேன்.

"இல்லை, தம்பீ! வாங்கவில்லை; சொக்கிக்கு இந்தவித்தை தெரியும். அவள்தான் இந்த மோதிரங்கள் செய்தாள். இப்போது நல்ல சங்குமாத்திரம் அகப்பட்டால், உன் தங்கவிரலுக்கு அழகாக ஒரு மோதிரம் செய்துவிடுவாள். அடுத்தமாதம் ஊருக்குப்போய் வரவேண்டுமாம்" என்ற சின்னத்தம்பி அவள் முகத்தைப் பார்த்தான்.

"என் குழந்தையை ஏமாற்றுகிறாய்? நீ என்னை விடுவாயா? ஆறுமாதமாய் அசைய இடங்கொடுக்க மாட்டேனென்கிறாயே?" என்று முகத்தைச் சிணுங்கிக்கொண்டே சொன்னாள் சொக்கி.

"இந்தா, கோபித்துகொள்ளாதே, குட்டி" என்று தலையை ஒரு தினுசாய்ச்சாய்த்துப் பதில் சொன்ன சின்னப்பன் என்பக்கம் திரும்பி, "அப்போது உனக்கு ஒரு சங்குமோதிரம் செய்துவருவாள்" என்று முடித்தான்.

"எனக்கு ஏதுக்குச் சங்குமோதிரம்?" என்றேன் நான்.

"உனக்குமா தம்பி கோபம்?" என்று இடியிடி என்று நகைத்தான் சின்னப்பன்.

இந்தச் சொக்கியைப்பற்றிப் பின்னால் என் தகப்பனார் பல முறை கதை சொல்லி யிருக்கிறார். அதை வைத்துக்கொண்டு, இங்கே சுருக்கமாய் அவளைப்பற்றி இரண்டொருவார்த்தை தெரிவிக்கவேண்டும்.

சொக்கியைப்பற்றி மிகத்திட்டமாக ஒன்றும் சொல்லமுடியா விட்டாலும் சின்னத்தம்பி அவளுக்குத் தாலிகட்டிய கணவனல்ல என்பது நிச்சயமாய்த் தெரியும்.

சின்னத்தம்பி நாகபட்டினத்தில் ரெயில்வேயில் 'பாயிண்ட்' வேலைபார்த்து வந்தானும். அப்போது சொக்கி இவன் வலையிலோ, அல்லது இவன் அவள் வலையிலோ, அன்றி இரண்டுபேரும் இரண்டுபேர் வலைகளிலுமோ விழுந்துவிட்டார்களாம்.

சொக்கி தெற்கத்தியாள்; யாரோ ஒரு பெரிய மனிதர் வீட்டில் சமையல்காரியா யிருந்தாளாம். அந்த வீட்டுக்காரப்பையன் சொக்கியிடம் சற்று விஷமம் செய்ய முயன்ருன். சொக்கி, சின்னத்தம்பியிடம் இதைச்சொன்னுள். சின்னத்தம்பி அந்தப் பையனுக்குப் புத்திவரும்படி பூசை கொடுத்துவிட்டான். அதற்குப்பிறகு இருவருக்கும் அந்த ஊரில் இருக்கப் பயம்; ஆகையால், கிராமத்துக்கு ஓடிவந்துவிட்டார்கள். நிற்க.

திருநாளைக்குவந்த சொக்கிக்கு, சந்தைக் கூட்டத்தையெல்லாம் சின்னத்தம்பி காட்டினனும். அதன்மேல் தானும் சிலவாரம் நகரத்துக்குவந்து வியாபாரம் செய்வதாகச் சொல்லி யிருக்கிருள். சின்னத்தம்பி சம்மதித்துவிட்டான்.

இதற்குப்பிறகு எங்கள் வீட்டிற்குச் சில வாரம் சொக்கி வருவாள்; சிலவாரம் சின்னத்தம்பி வருவான்.

சொக்கியும் சின்னத்தம்பியின் சம்பிரதாயத்தை விடாது அனுஷ்டித்துவந்தாள்; அதாவது ஒரு தின்பண்டம்—ஒரு சர்க்கரைவள்ளிக்கிழங்காவது—கொண்டுவந்து தராமல் இருக்கமாட்டாள்.

## 4

பலபல வென்று விடியவில்லை; சொக்கி வந்தாள் அன்றைத் தினம்.

ஒரு பெரிய மாம்பழத்தை எடுத்து, "இது சர்க்கரைக் காய்ச்சி, தம்பி; கல்கண்டுமாதிரி இருக்கும்" என்று சொல்லி, என்னிடம் நீட்டினுள்.

பிறகு தனது கத்தரிக்காய்க் கூடையிலிருந்து இரண்டுசேர் காயை என்தாயாரிடம் விற்ருள்; "வரும்போது காசுவாங்கிக் கொள்ளுகிறேன். போணிக்காக ஒரு துட்டுக்கொடுங்கள்" என்று சொல்லி அதை என்கையால் வாங்கிக்கொண்டு புறப்பட்டாள்.

சற்றுத்தூரம் போனவள் மறுபடியும் திரும்பிவந்து, "தம்பி, நல்லபொழுதாய்ப் போகனும்; மோதிரம் நழுவி விழுந்துவிட்

டது!" என்று கூடையை வைத்து எங்கள் வீட்டைவிட்டு நகர்ந்தாள்.

"அப்படியானல் ஊருக்குப்போய் விடேன்" என்று நான் சொன்னதைச் செவியில் வாங்கவில்லை.

வாசலில் கிடந்தது மோதிரம்! அதிக சந்தோஷத்தோடு அதை எடுத்துக்கொண்டு மறுபடியும் கூடை தாங்கி நடந்தாள்.

நான் மாம்பழத்தைப் பத்திரம்செய்துவைத்துவிட்டுப் பழைய்து சாப்பிட்டுவிட்டுப் பள்ளிக்கூடம் சென்றேன். பதினென்றரை மணிக்கு வீட்டுக்குத் திரும்பி வந்தேன்.

தாய் "சாப்பிடடா" என்ருள். அதைக் கேட்காமல் கதுப்புமிகுந்த, கமகமவென்று வாசனை வீசிய அந்தமாங்கனியைக் கடித்துக் கௌவிக்கொண்டு வாயிற்புறம் ஓடினேன். அவரைப் பந்தலண்டை சென்று மேலுங் கீழும் பார்த்தவண்ணம் அதை ருசித்து உண்ணலானேன்.

இந்தச் சமயத்தில் நான் திடுக்கிடும்வண்ணம், "சொக்கி! சொக்கி! அடபாவிப் பசங்களா! நாசமாய்ப்போக, சொக்கீ! சொக்கீ" என்று கூவியவண்ணம் இரைக்க இரைக்கப் பெருமூச்சோடு ஆவேச வெறி பிடித்தவன்போல ஓடிவந்தான் சின்னத்தம்பி.

அவன் அக்கம்பக்கம் பார்க்கவில்லை. நானிருந்ததுகூட அவன் கண்ணுக்குத் தெரியவில்லைபோல் தோன்றிற்று.

அப்பொழுதுதான் சிறிது தளிர்த்து உயிர்வந்துகொண்டிருந்த அவரைப்பந்தலின் கால் ஒன்றை ஒரே அசைப்பாய்க் கையிற் பிடுங்கி எடுத்துக்கொண்டு பின்னும் ஓட்டம்பிடித்தான்.

"ஏ சின்னு" என்று நான் மிக உரக்கக் கூவவந்த வார்த்தை, என்மென்னியிலேயே அடைத்துக்கொண்டது. அவன் தேகத்தின் பரபரப்பு என்னை அப்பொழுது நடுநடுங்கச் செய்தது.

அவனுக்குப் பின்னல் களத்தங்காட்டைச்சேர்ந்த இன்னும் பலபேர் ஓடிவந்தார்கள். ஒருவரைப்பார்த்து ஒருவர், எல்லாரும் இதே அவரைப்பந்தலின் ஒவ்வொரு காலாகப்பிடுங்கிக்கொண்டு போய் விட்டார்கள். பாட்டி இரேழிமுகப்பிலேயே நின்றுகொண்டு, "அடநாசமாய்ப்போகிறவன்களா! இந்தப்பந்தல் என்ன பண்ணிற்று? வாயில்லாச்சீவன் மென்னியைத் திருகுகிறமாதிரி, பச்சைக்குழந்தைபோன்ற வளரும் கொடியை நாசம் செய்கிறீர்களே!" என்று ஏதேதோ புலம்பிக்கொண்டேயிருந்தாள். ஒருவனும் கேட்கிறவழியாகக் காணேம். கடைசியில் பந்தல் தரை

மட்டமாகிவிட்டது. நேற்று மாலையில் நாங்கள் கூடை கூடை யாய்க் காய்பறித்தபந்தல் இன்று சின்னபின்னமாய்ப் போய் விட்டது.

சந்தையில் களத்தங்காட்டார்களுக்கும் சோணையனூரார் களுக்கும் பிரமாதமான அடிதடியாம்.

ஒரு களத்தங்காட்டு ஸ்திரீ கத்தரிக்காய் விற்றுக்கொண் டிருந்தாளாம். சோணையனூர்க்காரன் ஒருவன் அந்தக்கூடையைத் தட்டிவிட்டானும். அவள் துடுக்குத்தனமாய்த் திட்டினாளாம். குடிவெறியால் சோணையனூரான் அவளை நையப்புடைத்துவிட் டான். அந்த ஸ்திரீ சோர்ந்து கீழேவிழுந்து விட்டாளாம். இதி லிருந்து அடிதடி வலுத்தது இரண்டு ஊரார்களுக்கும். இவ்விஷயம் எட்டவே இரண்டுஊர்களுமே திரண்டு வந்துவிட்டன. கலகம் பிரமாதமாய் வலுத்துவிட்டது.

இந்த அதிர்ச்சியால் நகரமெங்கும் என்னஎன்னவோ வதந்தி கள் உலவின; இருதரப்பிலும் பல மண்டைகள் உடைந்தனவாம். கலகத்தைத் தடுக்கப்போன சிலபோலீஸ்காரர்களும் இறந்தனர். ரிஸர்வ்போலீஸுக்குத் தந்திகொடுத்திருப்பதாகச் சொன்னார்கள். நகரத்தாரெல்லாம் தங்கள் தங்கள் வீட்டுக்கதவுகளைத் தாளிட்டு உள்ளே உட்கார்ந்துவிட்டார்கள்.

## 5

இரண்டுநாள் கழித்து தலைவிரிகோலமாய்ச் சொக்கி எங்கள் வீட்டுக்குவந்தாள்.

அழுதகண்ணும் சிந்தியமூக்குமாய், "சாமீ! சாமீ! நான் என்ன செய்வேன்! பாவி என்னாலேயல்லவா குடிமுழுகிப் போச்சு, சாமீ! சாமி!" என்று ஒன்றும் புரியாமல் கதறினாள்.

தகப்பனார் சற்று ஆறுதல் சொல்லி என்ன விஷயம் என்று கேட்டார்.

"சாமி! ஐயோ! தம்பி தெய்வம்மாதிரி சொல்லிற்றே, கேட்டேனா பாவி! கூடையை எடுத்துப்போனேன்; மகாராஜி கையால் போணிபண்ணினேனே; வெகுசீக்கிரத்திலே விற்றுப் போச்சு. ஊருக்குத்தான் திரும்பினேனா? " என்று மறுபடியும் அடுக்கிக்கொண்டே போனாள்.

அன்று அடிபட்டஸ்திரீ வேறுயாரோ; சொக்கிதான் அடி பட்டிருக்கவேண்டும் என்று சின்னத்தம்பி நினைத்து விட்டான். அதனால் ரணகளத்தில் கலந்துவிட்டான். கோடிவீட்டுச் சாஸ்திரி ஹெட்கான்ஸ்டேபில் அதில் மரணமடைந்தார். சின்னுதான்

கொன்றுனென்று தவறுதலாய் நினைத்த ஒருகான்ஸ்டபிள் சின்னு வைத் தொடையில் சுட்டுவிட்டான். அதோடு அவனை ஆஸ்பத் திரியில் படுத்தபடுக்கையாய்ச் சிறைவைத்திருந்தார்கள். சொக்கி அவனைப்பார்க்க அனுமதி பெறவில்லை. விஷயம் இதுதான்.

## ௬

என்தகப்பனுர் மிகுந்த சிபார்சின்மீது சின்னத்தம்பியைக் கண்டுபேச அனுமதி பெற்ருர்.

சொக்கி, நான், என்தகப்பனுர் மூன்றுபேருமாகப்போனேம். சின்னத்தம்பி மிகுந்த ஆயாசத்துடன் ஒரு கட்டிலில் படுத் திருந்தான்.

பக்கத்தில் ஒரு கான்ஸ்டபிளும் வேருெரு உத்தியோகஸ் தரும் டாக்டரும் நின்றுகொண்டிருந்தார்கள்.

அன்று காலையில்தான் ஏதோ மரண வாக்குமூலமோ என்னவோ வாங்கினுர்களாம். ஏனெனில் அவனுக்கு ரணஜன்னி பிறந்துவிட்டது.

கோயிலுக்குள் சந்நிதானத்தில் பிரவேசிக்கும்போது எப்படி நிச்சப்தமாயிருக்குமோ அப்படி நிச்சப்தமாயிருந்தது.

"சின்னு" என்று மெதுவாகக் கூப்பிட்டார் என்தந்தை.

"யாரு?—என்ன?—எவன் என்ன செய்யமுடியும்?—ஆமாம், உதைத்தேன்—பணக்காரன் வீட்டுக் குழந்தையாயிருந்தால் எனக் கென்ன?—ஒரு பெண்பிள்ளை—அவளிடமா வீரம்?—வாயேன் —ஒரே குத்து—ஒரேபோடு" என்று பிதற்றலானுன்.

அவன் ஓய்ந்த சற்றுநேரம் கழித்து, "இதோபார், சொக்கி" என்ருர் தந்தை.

"சொக்கியா? சொக்கி! சொக்கி! ஏ, குட்டீ!" என்று திடீ ரென்று குதித்து உட்காரப்போனுன்.

டாக்டர் உட்காரவிடாமல் தடுத்து மெல்லப் படுக்கவிட்டார்.

அதுவரையில் மௌனத்தோடு தாரைதாரையாய்க் கண்ணீர் விட்டுக்கொண்டிருந்த சொக்கி, "நான்தான்; இதோ இருக்கிறே னுங்களே" என்று இரைந்து கத்தினுள்.

"சொக்கீ! உன்னை அடித்த பசங்களை நொறுக்கிவிட்டேன். பயப்படாதே" என்ற சின்னத்தம்பி மறுபடியும் அசதியுற்றுத் தலையணையில் சாய்ந்துவிட்டான்.

சற்றுநேரம் கழித்து மறுபடியும் தானுகத் தலையைத்தூக்கி, "சொக்கி! நீ போட்டமோதிரம் காணுமல் போச்சுது. அதனுல்

தான் எனக்கு அபாயம் ஏற்பட்டுவிட்டது; இல்லாவிட்டால், என்னை எந்தப்பயல் என்னசெய்திருக்க முடியும்? நீ ஊருக்குப் போய்வரும்போது ஒரு சங்குமோதிரம் கொண்டுவந்து தம்பிக்குக் கொடு'' என்றான்.

"இதோ இருக்குதுங்களே, தம்பி'' என்று மெதுவாய்க் கூறிய சொக்கி என்னைக் கையைப் பிடித்து இழுத்துக் கட்டிலருகில் கொண்டு போய் நிறுத்தினள்.

"ஓ தம்பியா!'' என்ற சின்னத்தம்பி, யாரும் எதிர்பாராத வண்ணம் திடீரென்று எழுந்து என்னை அணைத்து ஒரு முத்தம் கொடுத்துவிட்டுச் சொக்கியைப் பார்த்து, "உனக்குக் கோபமா?'' என்று கூறி அவளை இழுத்து அவளுக்கும் ஒரு முத்தம் கொடுத்தான்.

அவ்வளவுதான்; அதோடு பொதீரென்று சாய்ந்த சின்னத் தம்பி பிறகு பேசவுமில்லை; எழுந்திருக்கவுமில்லை. அவன் மீளாத் தூக்கத்தில் ஆழ்ந்துவிட்டான்.

## 7

ஊருக்குப்போன சொக்கி இன்னும் வரவில்லை. அவள் மனம் ஒடிந்து இறந்து போனதாகச் சிலர் சொல்லுகிறார்கள். அக்கரைச் சீமைக்குப் போய்விட்டதாக வேறு சிலர் சொல்லுகிறார்கள். உண்மையை மாத்திரம் நிச்சயமாய்த் தெரிவிப்போர் எவருமில்லை.

* * *

சில நாட்கள் கழித்து நாசமடைந்த அந்த அவரைப்பந்தலண்டை போனேன். சில ஆடுகள் தழைகளை மேய்ந்து கொண்டிருந்தன.

திடீரென்று எனக்கு அன்று சின்னத்தம்பியிருந்த ஆவேசக் கோலம் ஞாபகத்துக்கு வந்தது. நான் நின்ற இடத்திலிருந்த பந்தல் கம்பைத் தான் அவன் பறித்துப் போனன்.

கீழே நோக்கினேன். என்ன ஆச்சர்யம்! சின்னத்தம்பி கையிலிருந்து காணமற்போன அந்தச் சங்கு மோதிரத்தை நான் கண்டெடுத்தேன்.

இன்றுவரையில் அது என்னிடமிருந்து வருகிறது. எனக்கு உலகிலுள்ள வேறு எந்த அற்புதத்திலும் நம்பிக்கை கிடையாது. ஆனல், அந்தச் சங்கு மோதிரத்தை மாத்திரம் அப்படிச் சொல்ல முடியாது. அனுபவித்துக் கூறுகிறேன். அது என்னுடைய பரம பொக்கிஷம்; மகா சித்தி கவசம்.

# ஆசிரியர் பகுதி

## குழந்தைகளின் நந்தவனம்

எஸ். ஜகந்நாதன்

---

இந்த ஜன்மயாத்திரையிலே நாம் உபாத்தியாயர்கள் ஏறிச் செல்லும் ஒருபடகில் ஏறிச்செல்லுகிறோம். நமக்கு எதிரில் சிறிது தூரத்தில் பெற்றோர்களும் அவர்களுடைய குழந்தைகளும் மற்றொரு படகில் ஏறிவருகின்றனர். நம்மிடமிருந்து அன்பாகிறது ஒளிவீசக் குழந்தைகளின் முகமாகிற தாமரை மலர்கிறது; அன்பாகிற கயிற்றாலே அப்படகு நம்படகோடு பிணைக்கப்பட்டது. பெற்றோர்கள் நம்மைப்பார்த்து "அருமை ஆசிரியர்களே! கண்ணுடையரென்பர் கற்றோர், முகத்திரண்டு புண்ணுடையர் கல்லாதவர்; ஆகவே எங்களுடைய குழந்தைகள் 3 வயதுமுதல் 5 வயதுக்குள்தானிருக்கிறார்கள். இவர்களைக் கற்றவர்களாகச் செய்யும் வழியை இப்பொழுதிருந்தே காண்பிக்கவேண்டும். இக்குழந்தைகளை யாங்கள் உங்களிடமே ஒப்படைக்கிறோம். குடும்பபாரத்தை வகிக்கவேண்டிய அலுவலிலும் தொல்லையிலும் குழந்தையின் கல்வியைப் பற்றிக் கவனிக்க எங்களுக்குப் போதுமான அவகாசமும் இல்லை. மேலும் எங்களுக்கு இந்தச் சிறுபிராயத்தில் அவர்களைப் பழக்கத் தகுந்த முறைகளும் தெரியா" என்கின்றனர். ஆகவே நாம் அக்குழந்தைகளையும் ஆசையுடன் அணைத்துக்கொண்டு கரைவந்து சேர்ந்தோம். இப் பாலர்கள் படிக்கக்கூடிய பள்ளிக்கூடம் எங்கே என்று தேடிச் செல்லுகையில் ஒரு நந்தவனம் குறுக்கிட்டது. அங்கு ஒருவன் வெகு ஆனந்தமாகப் புல்லாங்குழல் வாசிக்கிறான். பல சிறுவர்கள் அவனைச் சுற்றி நிற்கிறார்கள். சிலர் கையில் தடிபிடித்து மாடுகளையும் கன்றுகளையும் மேய்க்கிறார்கள். சிலர் மரத்திலிருந்து கயிறு தொங்கவிட்டு ஊஞ்சலாடுகிறார்கள். மற்றும் சிலர் மரத்தடியில்படுத்துக்கொண்டு பக்ஷிகளின் குரலோசையைக் கேட்டுக்களிக்கிறார்கள். ஆடுமாடுகள் வயிறாரப்புல் மேய்கின்றன. இக்காட்சியைப் பார்க்கவே, நமது மனத்தில் திடீரென்று ஓர் எண்ணம் உதிக்கிறது. நம்முடன்கூடவரும் குழந்தைகளையும் இம்மாதிரி இயற்கையாகவே வளர்க்கவேண்டும். செடிகளைத் தோட்டக்காரன் எப்படி வளர்க்கிறானே அவ்வளவு

ஜாக்கிரதையாக வளர்க்கவேண்டும் என்றும் நினைக்கிறோம். குழந்தைகள் கற்கக் கூடிய நந்தவனத்தை நாடிச்செல்கிறோம்.

## சிறுபிராயத்திலேயே படிப்பு அவசியமா ?

படிப்பு என்பது தகுந்த வார்த்தையாகாது! இளமைப் பழக்கம் என்றே நாம் கொள்ளவேண்டும். இது பெற்றோர்கள் பொறுப்பு அல்லவா? என்று மற்றொரு கேள்வி பிறக்கிறது. ஆம், பெற்றோர்கள் பொறுப்பு ஆயினும் உபாத்தியாயர்களுடைய பொறுப்பும் இங்கு அடங்கியிருக்கிறது. பாலர்வகுப்பிற்கு வரும் பிள்ளைகளின் சங்கியையில் எத்தனையோபேர் அவ்வருஷப்படிப்பை முடிப்பதற்கு முன்பு பள்ளிக்கூடத்தை விட்டு அகன்றுவிடுகிறார்கள். பலர் இரண்டு மூன்றுவருஷமிருந்தும் படிப்பு இல்லாமல் வீட்டிற்குத் திரும்பவந்துவிடுகிறார்கள். இதற்குப் பல காரணமிருப்பினும் சரியான முறையில்பாடம் நடத்தப்படாததும் ஒரு முக்கியமான குறையென்றே நினைக்க நேரிடுகிறது. இளம்பிராய முதற்கொண்டே தகுந்த பயிற்சிகொடுப்போமானால் எண்ணும் எழுத்தும் கொஞ்சம் சுலபமாகவே வரக்கூடும். இவைகளை அறியத்தக்க விளையாட்டுக்கள் பலவற்றைக் குழந்தைப்பருவத்தில் சொல்லிக்கொடுக்க முடியும். பள்ளிக்கூடம் வருகிறவயது ஐந்தாயிருப்பினும், படிப்பு ஜனனகால முதற்கொண்டே ஏற்பட்டுவிடுகிறது. ஆகவே இந்த உணர்ச்சியை வளரச்செய்யச் சில பிரத்தியேகமான ஏற்பாடுகளும் வசதிகளும் தேவைதான்; இதனால் பல குழந்தைகள் நன்மையடைவார்கள்.

## இந்த நந்தவனத்தை நிர்மாணிக்கும் விதமும் நடத்தும் விதமும்

பூச்செடிகள் நிரம்பியுள்ள ஒரு பூஞ்சோலை மத்தியில் 20 முதல் 50 சிறுகுழந்தைகள் ஓடியாடிப் படுக்கத் தகுந்த போதுமான விசாலமுள்ள ஒரு வசதி யிருக்கவேண்டியது அவசியம். மழைக்கும் கானலுக்கும் தக்கபடி தட்டி அல்லது திரைகளும் தேவை. சுவர்களில் அழகான வர்ணப்படங்கள் தொங்கவிட்டிருப்பது அவசியமாகும். குழந்தைகளின் பால லீலைகளைக்காட்டும் படங்களிருப்பது விசேஷமேயாகும். குழந்தைகள் சுவர் ஓரங்களில் நின்று கைகளை எட்டத்தக்க உயரம்வரையில் அச்சுவர்களைக் கரும் பலகைமாதிரி உபயோகிக்கத் தக்கவாறு மாற்றி யமைக்கவேண்டும். அந்த அறையில் குழந்தைகள்

கையாளத்தக்க விசேஷமான விளையாட்டுச்சாமான்கள், பொம்மைகள், படப்புஸ்தகங்கள் மற்றும் அநேகமும் இருக்கவேண்டும். அறையைச் சுற்றிப் பூஞ்செடிகளும் பூந்தொட்டிகளும் கட்டாயம் இருக்கவேண்டும். அறைக்கு அருகில் ஓரிடத்தில் சில பக்ஷி ஜாதிகள், மிருகஜாதிகள் இவைகளை வளர்க்கத் தக்க ஏற்பாடு செய்தல் வெகுநன்று. ஒரு மரத்திலிருந்து ஊஞ்சல் தொங்க விட்டிருக்கலாம். குழந்தைகள் ஏறியிறங்கத் தக்கபடி சருக்குமலை, குதிரை, இவைகளை அமைத்திருப்பின் அவை குழந்தைகளுக்கு வெகு உற்சாகத்தைத்தரும். அவர்கள்கூடிய விளையாடுமிடம் மணல்நிறைந்ததாயிருக்கவேண்டும். குழந்தைகள் களைத்துப்போய் அவர்களுக்குத் தூக்கம்வந்த சமயத்தில் படுத்துக்கொள்ள சில பாய்களும், மல ஜல விஸர்ஜனம் செய்யப் பிரத்யேக இடங்களும் கைகால் முகம்கழுவ ஒரு ஸ்நான அறையும் அவசியமென்றே புலப்படும். ஸ்நான அறையில் வெந்நீரும் குளிர்ந்த ஜலமும் சமயத்திற்கேற்ற பிரகாரம் உபயோகிக்க வேண்டிவரும். குடிக்கத் தக்க சுத்த ஜலமும் தயாராக இருக்கவேண்டியதாகும்.

## குழந்தைகளைப் பழக்கத்தக்க உபாத்தியாயர்

பாலர்களைப் பழக்கவேண்டியவர் ஓர் உபாத்தியாயினியாகவாவது அல்லது இந்த வேலையில்அதிக ஊக்கங்கொண்ட ஓர் உபாத்தியாயராகவாவது இருக்கலாம். குழந்தையின் விளையாட்டிலும் செய்கையிலும் சொல்லிலும் ஒரு வினோதத்தைக்காண்கிறவரும் அக்குழந்தையின் மனப்போக்கை அறிந்து அதை முன்னேற்றம் அடையச்செய்யும் வாஞ்சையுள்ளவருமே சரியான குழந்தை உபாத்தியாயர். தாம் குழந்தைப்பருவத்தில் என்ன என்ன விஷயங்களைப்பற்றி யோசித்தார்கள் எவைகளில் அதிகவெறுப்பு அல்லது ஆசை, எது அதிக கடினமாக இருந்தது, எவ்விஷயங்கள் குறைவாகக் காணப்பட்டன, என்ற இவைபோன்றவற்றை யோசித்துத் தற்காலத்தில் மேற்படி குறைகளை எப்படி நீக்கத் தாம் பாடுபடலாம் என்ற எண்ணமுள்ளவராக இருக்கவேண்டும். தமது உத்தியோகமுறையைப் பாராமல் குழந்தைகளுக்குத் தகுந்த தோழரும் சினேகிதருமாக இருந்து அவர்களுக்குக் கதை சொல்லி, அவர்களுடன் ஓடி ஆடிவிளையாடிச் சந்தோஷித்து அவர்களுடன்கூட ஒரு குழந்தையாகவிருக்க முயலவேண்டும். இப்படிச் செய்வதினாலே குழந்தைகளின் மனத்தைக் கவரமுடியும். மேலும் தாம் எப்படி குழந்தைகளை வளர்க்கவேண்டும், எந்த உயர் குணத்தில் பழக்கவேண்டும் என்று ஆசைப்படுகிறாரோ அவற்றைத் தாமே

அனுஷ்டானத்தில் கொண்டுவரவேண்டும். இதே நோக்கமுள்ள வர்களுக்கு முறைகள் எளிதாகப் புலப்படும். நித்திரையில் கனவு காண்கிறதுபோல் இவர் நாடிக்கொண்டிருக்கும் முறைகளும் சாதனங்களும் இவருக்குத் தோன்றும்,

இப்பள்ளிக்கூடத்தை மற்றும் கவனித்துவர ஒரு வைத்திய நிபுணரும், ஒரு தாதியும், உபாத்தியாயருடன் உழைத்துவர சில உதவி உபாத்தியாயர்களும், ஒரு வேலைக்காரனும் அவசியம். வைத்தியர் தேகசவுக்கியத்தைப்பப்பற்றித் தினந்தோறும் கவனித்து வருகிறார். தாதி குழந்தகைளை அழைத்து வந்து அவர்களது தேகத்தைச் சுத்தம் செய்து குழந்தைகளுக்கு வேண்டிய சிச்ருஷையும் செய்கிறாள். வேலைக்காரன் பள்ளிக்கூடம், அங்குள்ள உபகரணங்கள், தோட்டம், பக்ஷி மிருகஜாதிகள் இவற்றைப் பாதுகாத்து வருகிறான். உதவி உபாத்தியாயர்கள் தலைவருடன் ஒத்துழைத்து, இந்த நந்தவனத்தை மேன்மைபெறப் பாடுபடுகின்றனர்.

## நந்தவனத்து நடவடிக்கைகள்

1. சுகாதார முறைகள் :—இந்நந்தவனத்து நடவடிக்கைகள் காலையில் குளிர்ந்த நேரத்திலும், மாலையில் வெயில்தாழ்ந்த நேரத்திலுமே நடக்கவேண்டும். குழந்தைகள் காலையில் வந்தவுடனே தாதியானவள் அவர்களின் தேகசௌக்கியத்தைக் கவனிக்கிறாள். சிலருக்குத் தலைபின்னியும், சிலருக்குக் கண் மூக்கு முகம் கழுவியும் சிலரை வெந்நீரில் குளிப்பாட்டியும் வேண்டிய சுத்தமுறையைப்பற்றிக் கவனிக்கிறாள். பற்கள் கைகால் நகங்கள் இவைகளின் சுத்தத்தையும் பரிசீலனை செய்வதும் அவளது கடமையே.

2. கடவுள் ஸ்தோத்திரமும் இயற்கை விசேஷங்களும்:—தேகத்தைச் சுத்தம் செய்துகொண்டதும் குழந்தைகள் அறையினுள் சென்று வரிசையாக நின்று அவர்களது உபாத்தியாயரால் சொல்லப்படும் ஸ்தோத்திரப்பாடல்களைக் கேட்டுக் கைகூப்பி நிற்கிறார்கள். நாளடைவில் இப்பாடல்களைக் குழந்தைகளே சொல்லவும் தெரிந்துகொள்கிறார்கள். சற்றுநேரம் சும்மாவிருக்கப்பழக்குவது நற்பழக்கமே. மாண்டிஸோரி பள்ளிக்கூடத்தில் சந்தடியில்லாத விளையாட்டு என்று ஒருவிளையாட்டு உண்டு. அதில் பிள்ளைகள் பேச்சு இல்லாமல் அமைதியாக ஒரு விளையாட்டுவிளையாடி அம்மாதிரியே இருக்கவும் பழகிக் கொள்ளுகிறார்கள்.

தோட்டத்தில் எப்புஷ்பங்களைப் பறிக்கலாமோ அவைகளைக் கொய்துவந்து அறையினுள் உள்ள படங்களுக்குப் போடுகிறார்கள். தங்களுடைய பொம்மைகளையும் அப்புஷ்பங்களால் அலங்காரம் செய்கிறார்கள். அறைக்கு வெளியே இருக்கும் பக்ஷிஜாதிகளுக்கும் மிருகஜாதிகளுக்கும் உணவூட்டிக் களிக்கிறார்கள். தோட்டத்திலுள்ள செடிகளுக்கும் தமது சிறு கைகளில் பூவாளிகள் ஏந்தித் தண்ணீர்கொண்டு ஜலம் வார்க்கிறார்கள்.

3. இந்திரியப் பழக்கங்கள்:—மறுபடி அறையினுள்வந்து தாங்கள் பார்த்த விஷயங்களைப்பற்றிப் பேசுகிறார்கள். அக்காலத்தில் இந்திரியப் பழக்கங்களைச்சார்ந்த சில அப்பியாசங்களில்பழகுகிறார்கள். இவைகளுக்குவேண்டிய உபகரணங்கள் பின்வருமாறு. இவைகளை உபாத்தியாயர் தாமே சேர்த்துவைத்துக் கொள்ளலாம்.

உருவம், பருமன், நீளம், கனம்:—பந்துகள், கனவடிவமுள்ள கட்டைகள், நீளமுள்ள பல உருண்டையான கட்டைகள், மாடிப்படிபோல் அடுக்கக்கூடிய கட்டைகள்.

நிறம்:—(i) மஞ்சள், பச்சை, சிவப்பு, நீலம், வெள்ளை, கருப்பு இவைகளை விளக்கக்கூடிய சிலபந்துகள், அம்மானைக் காய்கள், வர்ணநூல், காகிதம், சாக்கட்டி, வளை முதலியவைகள்; மேலும் புஷ்பங்களின் நிறங்களைக்கொண்டும் இவைகளை விளக்கலாம்.

(ii) ஒரு நிறத்துடன் மற்றொரு நிறத்தைச் சேர்த்து ஒரு புதுநிறம் உண்டு பண்ணுதல். மஞ்சளுடன் நீலத்தைக் கலக்கப் பசுமை உண்டாகும். தூரிகைகளும் சில கிண்ணங்களும் இந்த அப்பியாசத்திற்கு முக்கியமான உபகரணங்களாகும்.

(iii) ஒரு நிறத்தைச் சேர்ந்த சாயைகள் பலவுண்டு; உதாரணமாகச் சிவப்பில், கருஞ்சிவப்பு வெண்சிவப்பு குங்கும நிறம், இரத்த நிறம், ரோஜா நிறம் என்று பலவகைகள் வழங்குகின்றன. இவைகளுக்குத் தகுந்தாற்போல் சில காகிதத்துண்டுகள், வர்ணம் தடவப்பட்ட அட்டைகள், அல்லது துணிகள் இருப்பது நலம். சற்று வயதுமுதிர்ந்த குழந்தைகளே ஒரு நிறத்தின் சாயைகளைத் தெரிந்துகொள்ளமுடியும்.

தொனியை அறிதல்:—சில பெட்டிகளில் கூழாங்கல், மணல், விதை, பேறுமுள் இவைகளை முறையே போடுக. வாத்தியப் பெட்டி ஒன்றும் தேவை. பீங்கான் பாத்திரம் பித்தளைப்பாத்திரம், கண்ணாடிப்பாத்திரம், ஒரு மரப்பெட்டி இவைகளை ஒரு

மெல்லிய கோலினால் அடிக்க உண்டாகும் சத்தத்தினால் தொனி பேதத்தைத் தெரிந்துகொள்ளமுடியும்.

மணி அல்லது ஒரு தோற்கருவியை ஒருவன் அடிக்க மற்றப் பிள்ளைகள் கண்களைமூடிக்கொண்டு மணியடிக்கிறவனைக் கண்டறிதல், ஒருவன் கண்கட்டிக்கொண்டு ஒரு கூட்டத்தில் மணி அடிக்கும் மற்றொருவனைக் கண்டறிதல்.

வாசனையறிதல்:—புஷ்பஜாதிகள்: (உ-ம்.) ரோஜா, மல்லிகை, சாமந்தி, அரளி. எண்ணெய்தினுசுகள்: (உ-ம்.) தேங்காயெண்ணெய், விளக்கெண்ணெய், நீலகிரித்தைலம், நல்லெண்ணெய். இலைகள்: (உ-ம்.) மா, வேம்பு, கொய்யா, துளசி. சில பொட்டணங்கள்: (உ-ம்.) மிளகுப்பொடி, கற்பூரம், சாம்பிராணி.

ஸ்பரிச உணர்ச்சி:—உப்புத்தாளில் பலவிதம், நன்றாக இழைக்கப்பட்ட மரத்துண்டு, கண்ணாடி.

இலையின் முன்புறம் பின்புறம், கடல்பஞ்சு, கல், பழுத்த பழம், காய், பஞ்சுத்தலையணை, நார்த்தலையணை.

கனம்:—பலவித உருவமுள்ள கட்டைகள் ஒரே பருமனுள்ள சாமான்கள். இவை பலவித உலோகங்களினால் செய்தவையாயிருக்கவேண்டும். பருமனும் உலோகமும் வித்தியாசமுள்ள சாமான்கள், கடற்பஞ்சு, செட்டி, கட்டை முதலியன. மேலே சொல்லப்பட்ட வஸ்துக்களில் இரண்டைக் கையிலெடுத்துப் பார்த்து எது கனம் எது இலேசு எனக்கண்டறியும் பழக்கம் கொடுக்கலாம்.

இந்த உபகரணங்களைச் சில பெட்டிகளில் அறைகள் தடுத்து வகுப்பில் வைப்பது நலமாயிருக்கும். தினசரிமாற்ற வேண்டியவைகளை மாற்ற வேண்டும்.

இந்த அப்பியாசங்களினால் வஸ்துக்களின் தன்மை, இந்திரியப் பழக்கம், பாஷை அபிவிருத்தி, இயற்கை விசேஷம் இவைகள் திரண்டு ஒருமிக்கப்புலப்படும். பாலர்களுக்கு இவ்வப்பியாசங்களை விளையாட்டு மூலமாகச் சொல்லிக்கொடுக்க முடியும்.

4. சாமான்களைவைத்துக்கொண்டு விளையாடுதல்:—வீடு, கோபுரம், கோயில், தேர், கிணறு, இம்மாதிரி கட்டக்கூடிய சில கட்டைகளும்; மண்ணால் உருவம் அமைக்க ஏற்றவாறு தயார் செய்யப்பட்ட களிமண்ணும்; காகிதம்மடித்தல், கத்தரித்தல், ஒட்டுதல், பின்னுதல் முதலியவற்றிற்குத் தக்கவாறு உபயோகிக்கக்கூடிய வர்ணக்காகிதமும்; படங்களை ஒழுங்காகக் கத்தரித்தலுக்கு ஏற்ற

பழையபட்டங்களும்; சுயேச்சையாகச் சித்திரம் எழுதவும், வர்ணம் பூசவும் தேவையாயுள்ள காகிதம், தூரிகை, நிறங்கள் முதலியனவும்; மணி கோப்பதற்கேற்ற மணிகளும், மணிச்சட்டங்களும், கம்பி அல்லது நூல்களும்; கொருக்கைத்தட்டுத் துண்டுகளும்;



பல உருவங்கள் வெட்டப்பட்ட அட்டைகள். (வெட்டப்பட்ட உருவங்களை மறுபடியும் அந்தத் துவாரத்தில் பதியவைத்தலுக்காக) இன்னேரன்ன பொருள்கள் இத்தகைய விளையாட்டு உபகரணங்களாம்.

இவைகளையேயன்றி மற்ற உபகரணங்களையும் சமயத்திற்கேற்றவாறு உபயோகித்துக் கொள்ளலாம். உடைந்துபோன கண்ணுடிவளையல்களை ஜாக்கிரதையாய் உபயோகித்தால் பல உருவங்கள் அமைக்கமுடியும்.

குழந்தைகளுக்கான ஒரு பள்ளிக்கூடத்தில் சில குழந்தைகள் ராட்டினத்தடியில் உட்கார்ந்து சக்கரத்தைச் சுற்றி நூல்நூற்றதும் பாய்பின்னினதும் எனது ஞாபகத்திற்கு வருகிறது. சாதாரணமான ஈர்க்குச்சிகளைக்கொண்டும் உருவங்களைவைக்கலாம். இம்மாதிரி விஷயங்களில் நாம் குழந்தைகளுடைய கற்பனு சக்தியை ஓங்கச்செய்யவேண்டும். முதலில் அவர்களைச் சுயேச்சையாகவிட்டு அவர்களே அந்த உபகரணங்களைக்கொண்டு உருவங்களைச்செய்ய அவர்களை அனுமதிக்கவேண்டும். கொருக்கைத் தட்டை 2, 2, அங்குலத் துண்டுகளாக வெட்டிவைத்து, 1, 2, 3, 4, . . . . . 10 என முறையே துண்டுகளை மெல்லிய கயிறு

களில் கோத்துக்கொண்டு தக்க உருவங்கள் அமைக்க முடியும். குரும்பை, நுணுக்காய், கோவைக்காய் முதலியவைகளினால் ஈர்க்குகளைக் கொண்டு உருவங்கள் அமைக்க முடியும்.



5. சுயேச்சையான விளையாட்டு:—குழந்தைகள் ஒருமிக்கச் சேர்ந்தாவது நாலுபேர் சேர்ந்தாவது சிலவிளையாட்டுக்களை விளையாடலாம். இந்த விளையாட்டுக்களில் குழந்தைகள் உலக நாடகத்தை நடித்துக் காட்டுகிறார்கள் என்று முன்பு படித்தோம். அவர்களின் விளையாட்டுக்களைக் கவனித்து அவற்றின் மூலமாக நற்பழக்கங்களைப் பழக்குதல் நமது பொறுப்பாகும். குழந்தைகளின் குணங்களைக் கவனிக்க இவ்விளையாட்டுக்களே நல்ல சமயமாகும்.

களைத்துப்போன பிள்ளைகள் தூங்கவும், பசியெடுக்கிற குழந்தைகள் சிற்றுண்டி பெறவும் இந்நந்தவனத்தில் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கவேண்டியது அவசியம் எனப் புலப்படும்.

6. திறந்தவெளியில் விளையாடுவது:—மரநிழலில் இருந்து மரக்குதிரைமீது சவாரிசெய்தல், ஊஞ்சலாடுதல், மணலில் கிளிக்கூடு, மண்மலை, தோட்டம், வீடு கட்டுதல், சருக்குமலை ஏறி இறங்குதல், வளையம் எறிதல், பந்துவிளையாடுதல் முதலிய விளை

யாட்டுக்களில் காலங்கழிப்பது தேக சௌக்கியத்திற்கும் மன வளர்ச்சிக்கும் தக்கனவா யிருக்கும்.

7. கதை சொல்லுதல்:—நமது தேசக் குழந்தைகள் கதையில் பிரியம்கொண்டவர்கள். கதை கேட்டுக்கொண்டே சிலர் தூங்கிவிடுவார்கள். "ஒரேஒரு ஊரிலே ஓர் இராஜாவாம்" "ரொம்பநாளைக்கு முன்னே ஒரே ஓர் அம்மையார் பாட்டி இருந்தாளாம்" என்று சொல்லுகிற கதைகள் குழந்தைகளுக்கு நிரம்பவும் இன்பத்தைத் தரக்கூடியன. கதைகளைச் சொல்லிநடித்தல் அவசியமானது. இக்கதைகள் மூலமாக அவர்களை உண்மை, தைரியம், விடாமுயற்சி, தெய்வபக்தி, பெரியோர்களிடம் வணக்கம் பிராணிகளிடத்தில் அன்பு, எளியோர்களிடத்தில் பிரியம், சுத்தம் இவைபோலுள்ள மேலான குணங்களில் பழகச்செய்யவேண்டும்.

8. வெளியே உலாவி வருதல்:—நந்தவனத்திற்கு அருகிலுள்ள குளம், ஆறு, வயல் கோயில், மிருகக் காட்சிசாலை, பெரிய தோட்டம் முதலியவைகளுக்குக் குழந்தைகளை அழைத்துச் செல்லலாம். சிலசமயம் வண்டியிலும் ஏற்றிக்கொண்டு அழைத்துப் போகலாம்.

9. ஒழுங்கான விளையாட்டுக்கள்:—தேகப்பயிற்சிக்குத் தகுந்த அளவு குழந்தைகளுக்குப் பிரியமான விளையாட்டுக்களில் சற்று நேரம் காலம் கழிக்கலாம். சில குழந்தைகளுக்குப் பிரத்தியேகமான தேகப்பயிற்சி கொடுப்பதும் சரியாகும். எல்லா விஷயங்களிலும் வைத்திய நிபுணருடன் கலந்துகொள்ளுவது நல்லது.

11. உற்சாகக் கொண்டாட்டம்:—சற்றுநேரம் பாட்டுக் கச்சேரி, விகடம், கிராமபோன், கூத்து, தேகப்பயிற்சி சம்பந்தமான காட்சிகள் முதலியவைகளை ஏற்படுத்தினால் குழந்தைகள் எல்லோரும் களைதீர்ந்து முகமலர்வார்கள். இவை நாள்தோறும் முடியாவிடினும் மாதத்தில் சிலநாள் நடத்துவது போதுமானது.

அறையைச் சுத்தம் செய்வது, செடி கொடிகளுக்குத் தண்ணீர் ஊற்றுவது, பக்ஷி மிருக ஜாதிகளுக்கு உணவு அளிப்பது கடைசிவேலையாகும். இவையும் பாலர்களுக்கு உற்சாகமளிப்பனவே.

## சில குறிப்புகள்

இங்கே சொல்லிய கால அட்டவணையையே வேதவாக்காகக் கொள்ளாமல் குழந்தையின் மனப்போக்கை அறிந்து அட்டவணையைச் சமயத்திற் கேற்றபடி மாற்றிக்கொள்ளலாம். பெரிய குழந்

தைகளுக்குப் புத்திசொல்லிச் சிறு குழந்தைகளை நற்பழக்கத்தில் கொண்டுவர முயலவேண்டும். சாம தான பேத தண்டம் என்ற சதுர்வித உபாயத்தில் கடைசியைச் சற்று விலக்கிப் பாக்கி மூன்று உபாயங்களைக் கைக்கொள்ளுதல் முக்கியம். சிலசமயங்களில் சற்றே கண்டிப்பு இருப்பதும் அவசியமாகும். இந்த நந்தவனத்து நடவடிக்கைகளில் என் எழுத்து இவைகளைச்சொல்லிக் கொடுக்காவிடினும் பின்னால் இவைகளைச் சுலபமாய் அறிந்துகொள்ளக் கூடிய உபகரணங்கள் விளையாட்டுக்கள் இவைகளை எடுத்துக் கொள்ளலாம். நமது குழந்தைகளுக்கு ஏற்ற முறையை நாமே கண்டறிவது முக்கியமானது. இடைவிடாமல் இவ்விஷயத்தில் கவனம் செலுத்திவந்தோமானால் புதுப்புது விஷயங்கள் நமது கருத்திற்குப் புலப்படும் என்பது முன்பே கூறப்பட்டது.

## முடிவுரை

பல நல்ல காரியங்களைச் செய்வதில் எவ்வளவோ மகான்கள் பசி, தூக்கம், தாகம், களைப்பு என்பன தெரியாமல் பாடுபடுகிறார்கள். குழந்தையின் கல்வி என்ற விஷயத்திலும் அம்மாதிரி பாடுபடுகிற மகான் உதிக்கவேண்டும். தற்காலம் குழந்தைகளை ஆதரிக்குமிடத்தை மேலே காட்டிய முறைப்படி நந்தவனமாகச் செய்துகொள்ள முயற்சி எடுக்கலாம். பல பெரியார் சேர்ந்து இம்மாதிரி ஓரி நந்தவனத்தை நிர்மாணித்துத் தக்க உபாத்தியாயர்களைப் பழக்கி, தாய்மார்களுக்கும் தக்க முறைகளைக் காட்ட முன்வருவார்களானால், அது ஒரு பெரிய புண்ணியமாகும். கோயில் கட்டி, குளம் வெட்டி, சத்திரம் கட்டித் தர்மம் செய்வதுபோன்ற தர்மத்திற்குச் சமானமான தர்மத்தில் குழந்தையின் நந்தவனத்தை நிர்மாணம் செய்தல் என்றதும் பொருந்தின தர்மமாகும். இவையெல்லாம் எளியேனது சனொக இருந்தாலும் கூடியசீக்கிரம் இவை நனவாகக் காணப்படும் என்றே ஈசுவரனைப் பிரார்த்திக்கிறேன்.






## கார்த்திகை விளக்கு

**குழந்தைகளே!**

கார்த்திகை மாஸத்தில் என்ன பண்டிகை வரும் தெரியுமா? கார்த்திகைப் பண்டிகை அல்லவா? அன்றைக்கு எல்லோருடைய வீடுகளிலும் நிறைய விளக்கு வைக்கிறார்கள். கிராமங்களில் மண் அகல் விளக்குகளும் கல் விளக்குகளும் குத்து விளக்குகளும் ஏற்றி வைக்கிறார்கள். பட்டணங்களில் இவைகளோடு மின்சார விளக்குகளை நிரம்ப ஏற்றுகிறார்கள். கார்த்திகைப் பண்டிகையில் சென்னப்பட்டணத்துக்கு வந்து பார்த்தால் எங்கே பார்த்தாலும் மின்சார விளக்குகளைப் பார்க்கலாம். நம்முடைய காலத்தில்தான் மின்சார விளக்கு ஏற்றுகிறோம். முன்பெல்லாம் அது கிடையாது.

பழைய காலத்திலிருந்து இந்தக் காலம் வரையில் எந்த எந்த மாதிரி விளக்குகள் உண்டாக்கப்பட்டன என்பதைப் பின்னே உள்ள படங்களால் அறிந்து கொள்ளலாம்.

கட்டையோடு கட்டையைத் தேய்த்து வெளிச்சத்தை உண்டு பண்ணுதல். நெருப்புக் குச்சியில்லாத காலத்தில் இப்படித்தான் நெருப்பை உண்டுபண்ணினார்கள்.





சாணை பிடிக்கும் போது நெருப்புப் பொறி காணப்படுகிறது.



கும்முட்டி அடுப்பில் நெருப்பு மூட்டி வைத்துக் கொள்ளுதல்.



ஒரு பூதக்கண்ணாடியை வெயிலில் பிடித்து மரம் காகிதம் முதலியவற்றை எரித்துவிடலாம்.

பிற்காலத்தில் பலவகை விளக்குகள் ஏற்பட்டன.



மண் பாத்திரத்தில் திரியையும் எண்ணெயையும் போட்டு விளக்கு எரித்தல்.



அகல் விளக்கு. கார்த்திகை யன்றைக்கு இம்மாதிரி விளக்கை நிறைய வாங்கி வைக்கிறோம்.



குத்துவிளக்கு.




நெருப்புப் பெட்டி.



மண் எண்ணெயினால் எரியும் தகர விளக்கு.



மண்எண்ணெய் வைத்திருக்கும் தகரமும் கண்ணாடிக் குப்பியும்



படுக்கையறையில் வைத்துக் கொள்ளும் கோழிமுட்டை விளக்கு.



காற்றில் அவியாத 'அரிகன்' விளக்கு.



தனி மெழுகு வர்த்தி.

மெழுகு வர்த்தி விளக்கு.





சுவரில் மாட்டும் மெழுகு வர்த்தி விளக்கு.



சாராய விளக்கு.



'ஸ்டௌ' என்னும் அடுப்பு.



'காஸ்லைட்.'



பெட்ரோமாக்ஸ் விளக்கு.



வீதிகளில் உள்ள மின்சாரத் தூண் விளக்கு.



சட்டைப் பையில் போட்டுக் கொள்ளக்கூடிய 'பாட்டரி' விளக்கு.

எஸ். ஜகந்நாதன்.




# புடைவையும் கரையும்

வி. விசாலாக்ஷியம்மாள்

---

'அவளுக்கு என்ன மஹராசி; முப்பாகம் புடவை கட்டுகிறாள்' என்று அதிக அகலம் உடைய கரைகள் போட்ட புடைவைகளை மிகவும் உயர்த்தியாகக் கூறுவது முன்னாட்களில் சகஜமாக இருந்தது. முப்பாகம் புடைவைகளுக்குப் புடைவையின் முழு அகலத்தில் இரண்டு பாகங்கள் இரண்டு பக்கத்துக் கரைகளாக இருக்கும்; மூன்றில் ஒரு பங்கு மட்டுமே நடுவில் உடல் இருக்கும். இவ்விதம் கரைகள் உடைய புடைவைகளின் விலை அதிகமாகவே இருந்தது. முன்னாட்களில் இந்தப் புடைவையே மிகவும் நாசூக்கான, நேர்த்தியான உடையாகக் கருதப்பட்டது.

காலக்கிரமத்தில் புடைவையின்கரை மட்டாக இருந்தால்தான் அழகு என்ற எண்ணம் எற்பட்டது. இப்பொழுது மூன்று நான்கு விரல்கள் அகலம் மட்டுமே உள்ள 'கார்டு' கரைகளே நாசூக்காகக் கருதப்படுகின்றன. புடைவைக்குக் கரை இல்லாவிட்டால் வர்ண பேதம் ஏற்படாமல் புடைவையின் அழகு குன்றி விடும். இதிலும் புடைவையின் வர்ணமும், கரையின் வர்ணமும் அதிக முரண்பாடான நிறங்களாக இருந்தாலும் நன்றாக இருக்காது.

அதிக அகலக் கரைகள் உள்ள புடைவைகள் உடலின் அழகே தெரியாமல், ஒரே கரை மட்டுமே தெரியும்படி இருப்பதினால் அவ்வளவாகச் சோபிப்பதில்லை. மேலும், முதலில் கூறியபடி, இவ்விதக் கரைகள் தற்காலத்தில் அநாகரிக மானவைகளாகவே எண்ணப்படுகின்றன. சற்று அகலக் கரைப் புடைவைகளை அதிக

உயரமில்லாதவர்கள் உடுத்திக் கொண்டால், பார்வைக்கு அவர்கள் உண்மையாக இருப்பதை விடச் சற்று அதிக உயரமுள்ளவர்கள் போல் தோன்றச் செய்யும். 'கார்டு' கரைப் புடைவைகளை நல்ல உயரமுள்ளவர்கள் கட்டினால் சோபித்துக் காட்டும்.

புடைவைக்குப் பட்டு வேறாக வாங்கிக் கரை வைத்துத் தைப்பதாக இருந்தால், கரைக்கும் புடைவையின் உடலின் நிறத்திற்கும் வர்ண ஒற்றுமை இருக்கிறதா என்பதை முதலில் யோசித்துக் கொள்ள வேண்டும். புடைவையின் மேலே வைத்துத் தைக்கும் சரிகைக் கரைகளாக இருந்தால், ஒரே சீராக ஒட்டி, ஆங்காங்கே கெட்டியாக இருக்கும்படி ஒவ்வொரு கெட்டித் தையலை மட்டும் போட்டு வைத்தால் நல்லது. புடைவையில், கறைகள் அழுக்கு முதவியவைகள் பட்டுவிட்டால் கரையைச் சுலுபமாகப் பிரித்து எடுத்து விட்டுப் பட்டைச் சுத்தம் செய்து, மறுபடியும் வைத்துத் தைத்து விடலாம். இவ்விதம் செய்வதினால் சரிகையின் பளபளப்புக் குன்றாமலும், அது சுருங்காமலும் இருக்கும். தற்காலத்தில் சுதேசி 'ஜார்ஜெட்' பட்டும், இதன் அடியில் வைத்துத் தைப்பதற்கு இசைந்தாற்போல் மூன்று நான்கு விரல்கள் அகலத்தில் சரிகையும் பட்டும் கலந்து நெய்யப்பட்ட கரைகளும் கஜக் கணக்கில் விற்கிறார்கள். ஆறு கஜம் புடைவையும், இரண்டு பக்கத்துக் கரையுமாக முப்பது ரூபாய்களிலிருந்து நாற்பது ஐம்பது ரூபாய்கள் வரையில் விலை கூறுகிறார்கள். இந்தப் புடைவைகள் பார்வைக்கு அழகாக இருப்பதுடன், உடுத்த நாசூக்காகவும் இருக்கின்றன.

சரிகைப் பாய்க்கரை, உருத்திராக்ஷப்பேட்டுக் கரைகள் முதலிய அகலமுள்ள சரிகைக் கரைகள் போட்ட ஒன்பது கஜப் புடைவையின் கரையைக் கிழித்து, பட்டு வாங்கி அதில் வைத்துச் சிலர் தைத்துக் கொள்ளுகிறார்கள். கரையைக் கிழித்துவிட்டால் முதல் புடைவைக்குக் கரைக்கு என்ன செய்வது என்ற சந்தேகம் ஏற்படலாம். புடைவை இரண்டு பக்கமும் ஒரே மாதிரியில் கரைபோட்ட பதினெட்டு முழம் புடைவையாக இருக்க வேண்டும். புடைவையின் மேல் பாகத்திலிருந்து ஏத்தாப்பிற்கு வேண்டிய அளவிற்குச் சுமார் இரண்டு கஜம்போல் விட்டு விட்டுக் கரையைக் கிழித்து விடவேண்டும். புடைவையின் நிறத்தில் பட்டு வாங்கிக் கிழித்த இடத்தில் வைத்துத் தைத்துவிட வேண்டும். இவ்விதம் செய்வதினால், புடைவை உடுத்தும் பொழுது, மேற்பக்கம் சரிகை உறுத்தாமல் கட்டிக்கொள்ள சௌகரியமாக இருக்கும். இப்பொழுது நெய்யும் பொழுதே இந்தப் பாகத்திற்குப் பட்டுக்கரை

போட்டு நெய்துவிடுகிருர்கள். இவ்விதம் கிழித்து எடுத்த கரையை ஐந்து, அல்லது ஐந்தரை கஜம் நீளமுள்ள புடைவை தைக்க உபயோகிக்கலாம். கீழுக்கு முழுக்கக் கரை வைத்துத் தைத்து விட்டு, பாக்கி உள்ளதை மேல்பக்கம் ஏத்தாப்புக்குச் சரியாக வைத்துத் தைத்துக்கொள்ள வேண்டியது. தலைப்புக்கு 'குரோ்டிர்' ஊசியினல் சரிகைக் கம்பிகளைக் கொண்டு பூக் கொடி மாதிரியில் போட்டுக் கொள்ளலாம். இந்த வேலை தெரியா விட்டால் தையற்காரனிடம் சொன்னல் செய்துகொடுப்பான். மெல்லிய பட்டுக்களில் வைத்துத் தைக்கப்பட்ட இந்தக் கரைகள் பார்வைக்கு மிகவும் அழகாக இருக்கும்.

---

## மந்தாரைப்பூக் குழம்பு

கொழுக்கட்டை மந்தாரைப் பூவைத் துவையல், புளிப்பச்சடி, பொரித்த குழம்பு முதலியவைகள் செய்யலாம். இந்தப் பூவினல் செய்யப்பட்ட பொரித்த குழம்பு, துவையல் முதலிய இதர பதார்த்தங்களை விட மிகவும் ருசியாகவும், வாசனையாகவும் இருக்கும். புரட்டாசி, கார்த்திகை மாசங்களில் இந்தப் பூக்கள் ஏராளமாகப் புஷ்பிக்குமானதினல், இவற்றைச் சமையல் செய்யலாம். அன்று மலர்ந்த புஷ்பங்களைப் பறித்து, இதழ் இதழாக ஆய்ந்து எடுத்துக்கொள்ள வேண்டும். பூ இதழ்களைச் சுத்தமாக அலம்பின பிறகு, கொஞ்சம் நெய்விட்டு வதக்கிக் கொள்ள வேண்டும். மிளகாய் வற்றல், மிளகு, உளுத்தம் பருப்பு, தேங்காய்த்துருவல் இவைகளை வறுத்து, நன்ருக அரைத்துக் கரைத்து, வேண்டிய அளவு உப்புப் போட்டுக் கொதிக்கவைக்க வேண்டும். நன்ருகக் கொதித்துக் கொண்டிருக்கும் குழம்பில் வதக்கிவைத்திருக்கும் பூவையும் பருப்பையும் கொட்டி, அது சேர்ந்து கொதித்ததும், அடுப்பை விட்டு இறக்கி, கடுகு தாளித்து உபயோகிக்க வேண்டும். பூவிற்கு ஒருவிதவாசனை உண்டானதினல் பெருங்காயம் போடவேண்டிய அவசியமில்லை; வேண்டுமானல் சேர்த்துக்கொள்ளலாம். துருவலைக் கடைசியாக வறுத்தும் போடலாம். கொழுக்கட்டை மந்தாரைச் செடியின் இலைகளைக் கறிவேப்பிலைத் துவையல் அரைப்பது போல் அரைத்தால் வாசனையாக இருக்கும்.

## கோதுமை வடாம்

பம்பாய்க் கோதுமையைவிட இந்த வடாம் செய்வதற்குச் சம்பாக் கோதுமையே மேலானது. முதல் நாள் இரவே கோதுமை

யைத் தண்ணீரில் ஊறப்போட்டுவிட வேண்டும். ஊறப்போடு வதற்கு முன் கோதுமையை நன்ருகக் குத்திப் புடைத்து, நேர்ம்பிச் சுத்தம் செய்துகொள்ள வேண்டும். மறுநாள் மத்தி யானமாக, ஊறின கோதுமையை உரவில் போட்டு அரைத்து ஜலம் விட்டு அலசிப் பாலை வடிக்கட்டிக் கொள்ள வேண்டும். கோதுமையில் சத்து உள்ளவரையில் மறுபடியும், மறுபடியும் அரைத்துப் பாலை வடிக்கட்டி எடுத்துக் கொள்ள வேண்டும். இவ் விதம் எடுக்கப் பட்ட பால் தண்ணீர் தாராளமாக விடப்பட்டிருப் பதினுல் நிறைய இருக்கும். இதை ஒரு ஈயம் பூசின பாத்திரத்தில் விட்டு நன்ருக மூடி வைக்கவேண்டும். மறுநாள் காலையில் பாத்திரத்தை அசைக்காமல் தூக்கி, முத்துப்போல் தெளிந்திருக் கும் நீரை இறுத்துவிட வேண்டுடியது. அடியில் பால் கை கையாக இருக்கும். பக்குவமாக உப்புப் போட்டு, அடுப்பை நிழல்போல் எரிய விட்டுக் கை விடாமல் கிளற வேண்டியது. பால் மொத்தை ஆனதும் இறக்கி, சூடாக இருக்கும் பொழுதே ஓமப் பொடி நாழியில் போட்டுச் சிறிய சிறிய வடாங்களாகப் பிழிய வேண்டியது. இது வெளுப்பாகப் பொரிந்து, வாய்க்குக் கரகரப்பாகவும் ருசியாகவும் இருக்கும். உடம்பிற்கும் புஷ்டியைத் தரும். பால் தயாரிப்பதற்கு இரண்டு தினங்கள் ஆவதினுல் சிறு புளிப்புத் தானுகவே ஏற்பட்டு வாய்க்கு ஆரோக்கியமாக இருக்கும். இஷ்டமானுல் பச்சை மிளகாயை அரைத்துக் காரம் சேர்த்துக் கொள்ளலாம். அப்படிக் காரம் கலக்க உத்தேசிக்கும் பக்ஷத்தில் மிளகாயையும், உப்பையும் நன்ருக அரைத்துக் கொஞ்சம் தண் ணீர் விட்டுக் கரைத்து ஜல்லடையில் வடிக்கட்டிக் கொள்ளவேண் டும். இல்லாவிட்டால் மிளகாய்த் தோல், விதை இவைகள் ஓமப்பொடி நாழியின் கண்களை அடைத்து, வடாம் பிழிவது மிக வும் சிரமமான காரியமாகிவிடும்.

---

## இஸ்திரி போடுவதில் ஒரு புதியமுறை

எந்தத் துணியை இஸ்திரி போடவேண்டுமோ, அதை முதலில் ஒரு மேஜையின் மேல் பரப்புவது வழக்கமல்லவா? அவ்விதம் பரப்புவதற்குமுன் அந்தமேஜையை ஈரத்துணியொன்றினுல் நன்ருகத் துடைக்கவேண்டும். அப்பால் துணியை இஸ்திரி செய்தால் துணி முரமுரப்பாய் இருப்பதோடு அதை மடிப்பதில் ஏற்படும் சுருக்கங்களும் உண்டாகமாட்டா.




**விசித்திரவேள்ளோட்டம்:** நாளுக்குநாள் விஞ்ஞான சாஸ்திர ஆராய்ச்சியினல் அறிந்து அமைக்கப்படும் அதிசயக் கருவிகளும் அதிசயச் செயல்களும் அதிகமாகிக்கொண்டு வருகின்றன. நெடுந்தூரத்திலுள்ளவர்களோடு பேசுவது இப்பொழுது சர்வசாதாரணமாகிவிட்டது. இப்படியே நெடுந்தூரத்திலுள்ளவர்களை இருந்த இடத்திலிருந்தே பார்ப்பதும் விரைவில் சாமான்யமான காரியமாகிவிடும். நெடுந்தூரத்தில் இருந்துகொண்டே நினைத்த காரியமொன்றைச் செய்வது இப்பொழுது மின்சாரத்தால் இயலுகின்றது.

இங்கிலாந்தின் மேற்குக் கரையில் லங்காஷயருக்குப் பக்கத்திலுள்ள பாரோ துறைமுகத்தில் ஒருகப்பல் புதியதாகக் கட்டப்பட்டுள்ளது; இதற்கு 'ஓரியன்' என்றுபெயர். இது 24,000 டன் கனமுள்ளது. இது வரும் டிஸம்பர்மாதம் 7-ஆம் தேதியன்று மிதக்க விடப்படும்.

இதிலே என்ன ஆச்சரிய மிருக்கின்றதென்று அதற்குள் அவசரப்பட்டு விடாதீர்கள். கப்பலை மிதக்கவிடுபவர் மன்னர்பிரான் குமாரராகிய கிளஸ்டர் பிரபு. அவர் டிஸம்பர்௴ 7-ஆம் தேதியன்று ஆஸ்டிரேலியாவில் பிரிஸ்பேன் நகரில் ஒரு ஸங்கீதக் கச்சேரியில் இருப்பார். பல நூறுமைல்களுக்கப்புறமுள்ள பாரோ துறைமுகத்தில் அவரால் கப்பல் மிதக்கவிடப்படும். எப்படி தெரியுமா?

கிளஸ்டர் பிரபு இருந்த இடத்திலிருந்தே ஒரு பொத்தானை அழுத்துவார். அதிலிருந்து மின்சார அலைகள் ஸிட்னி நகருக்குப் போய், அங்கிருந்து ரேடியோ மூலமும் ஸர்வதேச டெலிபோன் மூலமும் பாரோவுக்குப் போய் அங்கே கப்பலில் இணைக்கப்பட்டிருக்கும் மின்சாரக் கருவிமீது படும். உடனே கப்பல் துறைமுகத்தைவிட்டு நகர்ந்துவிடும்.

---

## பிழைதிருத்தம்

403-ஆம் பக்கத்தில் Van papen, Van Schleicher, Van Hindenburg என்ற பெயர்களில் காணப்படும் Van என்பதை Von என்று திருத்தி வாசித்துக் கொள்ளுக.

—ப. ர.




**சந்திரவதனா அல்லது காதலின் வெற்றி:** [கொழும்பு 'வீரகேசரி' ஆசிரியர் ஸ்ரீமான் எச். நெல்லையா அவர்கள், பி.ஏ., எழுதியது ; இரண்டு பாகங்கள் ; முதற்பாகம்: 468 பக்கங்கள் ; இரண்டாம் பாகம்: 486 பக்கங்கள் ; கிடைக்குமிடங்கள்: (1) ஸ்டான்லி பிரஸ், 63, மலிபான் தெரு, கொழும்பு ; (2) வீரகேசரி ஆபீஸ், 20, கிராண்ட் பாஸ், கொழும்பு; விலை: ஒவ்வொரு பாகமும் தனித்தனி ரூ. 1-12-0.]

மேல்நாட்டு ஆசிரியர்கள் திடுக்கிடற்குரிய சம்பவங்களும் வீரச்சுவை ததும்பும் நிகழ்ச்சிகளும் அமைக்கும்பொருட்டு அரசர்களையும் அரசாங்கத்தையும் தொடர்புபடுத்தி நாவல்கள் எழுதியிருக்கின்றனர். நம் நாட்டுக் கதைகளிற் குடும்பங்களைப் பற்றியனவாக உள்ளவையே பெரும்பாலன ; ஆதலின் அத்தகைய கதைகள் சிலவகையான சுவைகளைமட்டும் தருமளவில் அமைந்துவிடுகின்றன. இப்பொழுது வங்கமொழியில் வீரச்சுவை ததும்ப எழுதப்படும் கதைகள் அரசர்களைப்பற்றியனவாக அமைந்துள்ளன.

நமது பார்வைக்கு வந்திருக்கும் 'சந்திரவதனா அல்லது காதலின் வெற்றி' என்னும் இந்த நாவலானது மகாராஷ்டிர அரசகுடும்பத்தில் நிகழ்ந்ததுபோல அமைக்கப்பட்டுள்ளது. இராகுலனென்னும் இளவரசன் மகாராஷ்டிர தேச அரசருடைய புத்திரியான சந்திரவதனாவை மணம் செய்துகொள்ள விரும்ப, சந்திரவதனா அதற்கு இணங்காததனால் அவ்விளவரசன் அவளுடைய தாய் தந்தையரைக் கொன்றுவிட்டு மகாராஷ்டிரத்தைத் தன் வயப்படுத்திக் கொண்டு சந்திரவதனாவையும் அவளுடைய சகோதரனையும் துரத்திவிடுகிறான். இந்த நிலையில் கதை தொடங்கப்படுகிறது. சந்திரவதனா ஆண் வேடம் புனைந்து செய்யும் வீரச்செயல்களும், அவளுடைய இணையற்ற காதற் சிறப்பும், இடையிடையே இராகுலனால் நேர்ந்த பலவகைத் துன்பங்களையும் அஞ்சாமல் உறுதியோடு எண்ணியதை எண்ணியபடியே முடிக்க முயல்வதும் பிறவுமாகிய செய்திகள் படிக்குந்தோறும் இன்பத்தை ஊட்டுகின்றன.

சற்றேறக்குறைய ஆயிரம் பக்கங்களுள்ள இந்த நாவல் முற்றிலும் படித்த பின்பே கீழே வைக்கும் கதாபாகத்தை உடையதாக விளங்குகிறது. இந்த நாவலை எழுதிய ஸ்ரீமான் எச். நெல்லையா அவர்கள் ஒரு தமிழ்த் தினசரிப் பத்திரிகையின் ஆசிரியர். அவருடைய விரிந்த மனோபாவம் இந்த நாவலில்

நன்றாகப் புலப்படுகிறது. தமிழர் அவருடைய நாவல்களைப் படிப்பதில் இன்பங்காண்பா ரென்பதற்குத் தடையில்லை.

ரமண விஜயம்: [ஸ்வாமி சுத்தானந்தபாரதியார் இயற்றியது; கிடைக்குமிடம்: ஸ்ரீரமணாசிரமம், திருவண்ணாமலை; விலை ரூ. 2.]

ரமணமகரிஷிகளை அறியாதார் சிலரே; குமரிமுதல் இமயம்வரையில் அவர்களுடைய அடித்தொண்டர்கள் உள்ளார்கள். மேனாட்டார் பலர் அவர்களுடைய ஞானநிலையைக் கண்டு வியந்து ஆட்பட்டிருக்கின்றனர். அவர்களுடைய முழுவரலாறு இது.

இதனை எழுதிய பாரதியார் ஒரு கவி; யோகி; எனவே ஒரு மகாஞானியைப்பற்றி அறிவதற்கும் அறிந்தவற்றைச் சுவைபட வெளியிடுவதற்கும் அவருக்குள்ள தகுதி சிறந்தது. ஸ்ரீரமணமகரிஷிகளுடைய வரலாற்றை விளக்கும்வாயிலாக பாரதியார் அங்கங்கே எழுதியிருக்கும் உயரிய கருத்துக்கள் பல. அநுபவத்தாலும், உபதேசத்தாலும், நூல்களாலும் அறிந்த பலவற்றின் உருவங்களே அவை. ஸ்ரீரமணபகவானைப்பற்றிய பல சம்பவங்கள் மிக அழகாக இடைஇடையே கூறப்படுகின்றன. இது, புதுமுறையில் அமைந்த ஒரு வேதாந்தநூல்; வாழ்க்கைக்குப் பயன்படும் ஜீவியசரித்திரம்; கண்ட காட்சிகளைச் சித்திரிக்கும் சொற்சித்திரம். இதன் பதிப்புமுறை, இடையே சேர்க்கப்பட்டுள்ள படங்கள் முதலியவை யாவும் இந்நூலின் பெருமைக்கு ஏற்றவாறு பொருந்தியுள்ளன. தமிழர் யாவரும் இதனைப்பெற்றுப் படித்து இன்புறவேண்டுமென்பது நம் அவா. இந்துமதத்தின் லட்சியமாகிய ஆத்யாத்மிக வாழ்க்கைத்துறையில் இறங்கி உலகுக்கு விளக்கங்களாகத் திகழும் பெரியார்களுடைய வரலாறுகள் இந்த முறையில் பாரதியாரால் எழுதப்படின் அவை தமிழ்நாற்கருவூலத்துக்குச் சிறப்பைத்தரும்.

இஸ்லாத்தில் ஸ்திரீகளின் உன்னதம்: [ஆக்கியோர்: ஜனாப் எஸ். புருஹானு-த்-தீன். கிடைக்குமிடம்: ஜனாப் வி. ஏ. எஸ். முஹம்மது எஹ்யா சாஹிது, ஜெனரல் மர்ச்சண்ட், அடியக்க மங்கலம் (தஞ்சாவூர் ஜில்லா) விலை அணா 8.]

இஸ்லாத்தில் ஸ்திரீகளுக்கு உன்னதம் கொடுக்கப்பட்டுள்ளது என்று கூறும் இந்நூலின் பேர்பகுதியில் பிறநாட்டு, பிறமதத்து ஸ்திரீகளின் நிலை ஒருவாறு சுருக்கிக் கூறப்பட்டுள்ளது. பிற மதங்களைப்பற்றி ஆசிரியர் பிரஸ்தாபிக்குமிடங்களில் அவ்வம் மதங்களிலுள்ள குறைகளையே பெரும்பாலும் எடுத்துக்காட்டிச் செல்லுகிறார். சிறப்பாக இந்து சகோதரிகளைப்பற்றி அவர் கூறுவதில் இவ்விஷயம் புலனாகிறது. இப்புத்தகத்தில் காணப்படும் விஷயங்கள் அனைத்தையும் யாம் அப்படியே ஒப்புக்கொள்ளாவிட்டாலும் இந்நூல் பெண்களுக்காகப் பாடுபடுகின்றவர்களின் ஆராய்ச்சிக்கு உரியதொன்றென்று கூறுவோம்.

கமலசுந்தரம்:—[ஆசிரியை: ஸ்ரீமதி எஸ். சீதாலட்சுமி அம்மாள். கிடைக்குமிடம்: திருவாளர் இ. எம். கோபாலகிருஷ்ணக்கோன், புத்தகவியாபாரம்; மதுரை அல்லது சென்னை, விலை அணா 5.]

இப்புத்தகம் பெரிய எழுத்துக்களில் எழுதியிருப்பதை நோக்கின் கீழ்வகுப்புக்களுக்கென்ற உத்தேசத்துடன் வெளியிடப் பெற்றதாகத் தோன்றுகின்றது. ஆனால் இன்ன வகுப்பிற்குரியதென்று குறிக்கப்படவில்லை. நாயக நாயகிகளின் பெயர்களைக் கூட்டிக் கமலசுந்தரம் என்ற பெயரில் வெளியிடப்பட்ட இச்சிறு புதத்தகத்தில் ஆங்காங்கே சில கிராமியச்சொற்களும் வேண்டாத ஆங்கிலச் சொற்களும் விரவியிருக்கின்றன. 'இவாள் ளாரும் எண்டிவல்லே' 'லெக்ஷணமாய்' 'மெட்டிகிலேஷன் 'ஸ்பெஷலாக' 'கிளாஸ்' முதலியவை தமிழ்மொழியினிடத்து இளம் பக்குவிகளாயுள்ள மாணவர்கள் கண்களுக்குப் படாமல் இருத்தல்வேண்டுமென்பது பெரியோரின் கொள்கையாகும். சிறுவர்கள் பிழையான சொற்களைக் கேட்டாலும் கண்டாலும் அவற்றைச் சரியான சொற்களென் றெண்ணித் தாங்களும் பிழைபடப் பேசவும் எழுதவும் கூடுமானதால் ஆசிரியர்கள் தங்கள் பேச்சிலும் பாட புத்தகங்களிலும் கிராமியச்சொற்கள் அதிகமாக இல்லாதவாறு கவனஞ்செலுத்துவது அவசியமாகின்றது. இப்புத்தகத்தில் 2-ம் பக்கத்தில் 'ரோஜா, மல்லிகை, இருவாட்சி, செண்பகம், மருக்கொழுந்து, பன்னீர் முதலிய பூங்கோடிகள்' என்று ஒரு தொடர் காணப்படுகின்றது. 'பூங்கொடிகள்' என்ற சொற்றொடர் இங்கே பொருந்தாது. சம்பாஷணையாக வருமிடங்கள் சரியானபடி திருத்தம்பெற்றிருக்கவில்லை. உதாரணமாக "சீதாரா:—ஸார், மெயில் பத்துநிமிஷம் லேட்தான் . . . . . க்ஷேமந்தானே? என்று கேட்டார்." கீழே சம்பாஷணை தொடர்ச்சியாக வருகையில் 'என்று கேட்டார்' என்றதொடர் அவசியமில்லையன்றோ? மேற்கோள் குறிகள் சிலவிடங்களில் ஒற்றையாயும் வேறிடங்களில் இரட்டையாயும் நியதிஇன்றி இப் புத்தகத்துள் ஆளப்பட்டுள்ளன. சிலவிடங்களில் அவை காணப்பெறவில்லை. மேற்கூறப்பட்ட குறைகள் எல்லாம் அடுத்த பதிப்பில் பூர்த்திசெய்யப்படுவது நலம்.

---



# கனம் கிருஷ்ணையர்

மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர்

---

## 3

கனம் கிருஷ்ணையர் திருவையாறு சென்றிருந்த ஒருகாலத்தில் இவருக்கு முன்பே பழக்கமாகந் இருதவரும், ஸ்ரீராமபிரானுடைய பக்தியில் ஒப்புயர்வற்றவரும், பல அரியகீர்த்தனங்களை இயற்றிப் புகழ்பெற்றவருமாகிய ஸ்ரீ தியாகைய்ரையும் அவருடைய கோஷ்டியையும் பார்த்துவர எண்ணி அவருடைய வீட்டிற்குச் சென்றார். சென்றவுடன் அவரை நமஸ்கரித்தார். அவரும் அவருடைய சிஷ்யர்களும் இருந்து பஜனை செய்துகொண்டு காலம் கழித்துவரும் அந்தக்காட்சி இவர் மனத்தைக் கவர்ந்தது. தியாகையர் இவரை மிகவும் பிரியமாக வரவேற்றுப்பேசிக் கொண்டிருந்தார். அப்பொழுது அவருடைய சிஷ்யர்களாகிய [1]காமரஸவல்லி நாணுவையர், தில்லைஸ்தானம் (திருநெய்த்தானம்) ராமையங்கார் என்னும் இருவரும் அவரால் அடாணாவில் இயற்றப் பட்ட "ஏபாபமு" என்ற கீர்த்தனத்தைப் பாடினார்கள். பிறகு இவரை நோக்கி, "நீங்கள் ஏதாவது பாடவேண்டும்" என்று தியாகையர் குறிப்பித்தார். இவர் உடனே அடாணாராகத்தை ஆலாபனம் செய்துவிட்டு அந்தப்பல்லவியையே வைத்துக்கொண்டு பல ஸங்கதிகளையும் பல கற்பனைஸ்வரங்களையும் அமைத்துப் பாடினார். கேட்டு மகிழ்ந்த தியாகையர், "நீங்கள் செய்த கீர்த்தனமொன்று பாடவேண்டும்" என்றார். இவர் அப்பொழுதே புதிதாக அடாணா ராகத்தில், "சும்மா சும்மா வருகுமா சுகம்" என்று ஒருபல்லவியை இயற்றிப் பாடலானார். நூற்றுக்கணக்கான சங்கதிகளுடனும்

---

1. காமரஸவல்லியென்பது கொள்ளிடத்துக்கு வடபாலுள்ள ஓரூர்.

கற்பனை ஸ்வரங்களுடனும் இவர் பாடிவந்தார். அருமை தெரிந்த ஒருபெரிய ஸங்கீதவித்துவானும் அவருடைய சிஷ்யர்களும் உள்ள கூட்டத்தில் பாடியதனால் இவருடைய உத்ஸாகம் மிக்கது. இவர் பாடப்பாடக் கனஜாதியின் கம்பீரம் தியாகையருடைய உள்ளத்தை உவப்பித்தது; அவர் கேட்டுக்கேட்டு விம்மிதமுடையவரானார். மிக விரிவாக இவர்பாடிமுடித்தவுடன் தியாகையர் இவருக்குத் தம்மிடம் இருந்த ஒரு சால்வையைப் போர்த்தச்செய்து மனங் குளிர்ந்து ஆசீர்வதித்தார். இவர், "ஸதா ஈசுவர ஸேவை செய்து கொண்டு சிஷ்யர்களுடன் பஜனைசெய்து காலத்தைப் போக்கி வரும் உங்களுடைய பெருமையே பெருமை. இத்தகைய நிலைமை எல்லோருக்கும் கிடைக்காது" என்று அவரை மனமுருகிப் பாராட்டி விடைபெற்றுக்கொண்டார். அப்பால் இவர் ஊருக்கு வந்து உடனிருந்தவர்களின் வேண்டுகோளின்படி அந்தப் பல்லவிக்கு இணங்க அநுபல்லவியையும் சரணங்களையும் ஸ்ரீஸௌந்தர ராஜப்பெருமாள் விஷயமாக அமைத்துக்கீர்த்தனத்தை முடித்தார்.

மாயூரத்திற்கு அருகிலுள்ள திருவழுந்தூரில் (திருவிந்தளூரில்) இவர் சிலகாலம் இருந்துவந்தார். அக்காலத்தில் அடிக்கடி பல்லவராயப்பட்டெடன்னும் ஊரிலுள்ள செல்வவான்களும் மாயூரத்திலுள்ள சில பிரபுக்களும் அழைக்க அங்கங்கே சென்று அவர்களால் ஆதரிக்கப்பெற்றனர். திருவழுந்தூரில் இருந்தகாலத்தில் அங்கே கோயில் நாகசுரக்காரராகச் சுப்பிரமணியர் என்னும் ஒருவர் இருந்தார். அவர் தஞ்சாவூர் ஸம்ஸ்தானத்தில் பல வித்துவான்கள் முன்னிலையில் வாசித்து அரசரால் முதல்முதல் வெள்ளி நாகசுரம் பரிசு பெற்றவர். அவர் கனம் கிருஷ்ணையரிடம் சில கீர்த்தனங்களை அறிந்ததோடு கனமார்க்கத்தையும் சக்ரதானம் பாடும் முறையையும் கற்றுக்கொண்டார். அவரை அவருடைய முதியபிராயத்தில் நான் பார்த்திருக்கிறேன்; அப்பொழுது எனக்கு 12பிராயம் இருக்கும். அக்காலத்தில் மாயூரத்தில் இருந்த கோபால கிருஷ்ண பாரதியார் அடிக்கடி கிருஷ்ணையர்பால் வந்து கீர்த்தனங்கள் சிலவற்றைக் கற்றுக்கொண்டு சென்றார். திருவழுந்தூரில் இருந்தகாலத்தில் அந்தஸ்தலத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீபரிமள ரங்கர்மீது இவரால் தர்பார் ராகத்தில் இயற்றப்பட்ட, "பரிமள நாதா" எனவரும் பதமொன்றுண்டு.

இங்ஙனம் இவர் அங்கங்கே சென்று மீண்டு திருவிடைமருதூருக்குவந்து அமரஸிம்மரை மகிழ்வித்து வந்தார். அவர் இவருடைய ஸங்கீதவித்தையின் அபிவிருத்தியை அறிந்து மகிழ்ந்தார். அக்காலத்தில் இவர்பால் தேப்பெருமாணல்லூர்

(தேவைப்பெருமானல்லூர்) வாசிகளாகிய கிருஷ்ணபாகவத ரென்பவரும் சுப்பராய ஐயரென்பவரும் சிட்சைசொல்லிக் கொண்டனர்.

சென்னையிலிருந்துவந்த சில செல்வர்கள் கிருஷ்ணையருடைய ஸங்கீதத்தைக் கேட்டுத் தாங்கள் அதுகாறும் கேட்டிராத அமைப் புடன் அது விளங்குவதை அறிந்து மகிழ்ந்தனர்; "தாங்கள் இந்நாட்டில் உள்ளவர்களைத் தங்கள் ஸங்கீதத்தால் மகிழ்வித்தல் போலச் சென்னை முதலிய இடங்களிலுள்ளவர்களையும் மகிழ்வித் தல்வேண்டும்; அவர்களும் தங்களுடைய சிறந்த கானத்தைக் கேட் கும் பாக்கியம்பெறும்படி தாங்கள் ஒருமுறை அந்தப்பக்கத்திற்கு வந்து செல்லவேண்டும்" என்று இவரைக் கேட்டுக்கொண்டார்கள். அவர்களுடைய விருப்பத்திற்கு இணங்கி இவர் சென்னைக் குச்சென்றார். அங்கே பல நாட்கள் இருந்தார். இவருடைய ஸங்கீதத்தின் அருமையை உணர்ந்தவர்கள் இவரைப் பாராட்டி உபசரித்துப் பலவகையான ஸம்மானங்களைச் செய்தார்கள். அக்காலத்தில் கவர்னராக இருந்த ஸர்தாமஸ் மன்றோ என்ப வருக்கு நகரத்திலுள்ள பிரபுக்கள் ஒரு விருந்து அளித்தார்கள். அப்பொழுது இவருடைய ஸங்கீதக்கச்சேரி நடைபெற்றது. அன்று பாடும் பொருட்டுத் தாம் முன்பே இயற்றியிருந்த ஒரு கீர்த்தனத்தையும் இவர் பாடிக்காட்டி மகிழ்வித்தார். அதில் கவர்னரது பெயர், "மன்றோ சாஹிபு" என்று குறிப்பிடப்பட்டி ருந்தது. அன்று அக்கூட்டத்தில் இவருடைய திறமை மிகவும் பிரகாசமடைந்தது.

ஒருமுறை திருவொற்றியூருக்கு இவர் சென்றிருந்தார். அங்கே குருமூர்த்தி சாஸ்திரிகளென்ற சிறந்த ஸங்கீதவித்துவா னொருவர் இருந்தார். அவர் கனம் கிருஷ்ணையரைக்கண்டு மகிழ்ந்து உபசரித்தார். இவர் அங்கே அவர் விரும்பிய சில கீர்த்தனங்களைப் பாடும்பொழுது உடல் சிறிதேனும் அசையாமல் நாதம் மட்டும் பலவித விசித்திர அமைப்போடு எழுவதை அறிந்த அவர் இவரை ஒரு தெய்வப்பிறப்பாகவே கருதிப் போற்றினார். பாடும் பொழுது தலையில் எலுமிச்சம்பழமொன்றை வைத்துக்கொண்டு அது கிழே விழாமலிருக்க, சங்கதிகள் முதலியவற்றோடு இவர் பாடிக்காட்டினரென்றும், அக்காலத்தில் தலை அசையவில்லையென் றும், அதைக்கேட்ட குருமூர்த்தி சாஸ்திரிகள் வியப்பே உருவமாகி ஸ்தம்பித்து விட்டாரென்றும் சொல்வார்கள். திருவொற்றியூர்த் தியாகேசர்மீது அடாணாராகத்தில், "திருவொற்றியூர்த் தியாகராஜர் சித்விலாஸ நாதரடி" எனவரும் கீர்த்தனம் இவராற் பாடப்பெற்

றது. சென்னையிலிருந்து மீண்டு திருவிடைமருதூர் வந்தவுடன் அமர்லிம்மர் அங்கங்கே நிகழ்ந்தவற்றையெல்லாம் இவர்பாற் கேட்டுமகிழ்வுற்றார்.

தமக்கு இராமபத்திரமூப்பனர் அளித்திருந்த பொன்னரைஞாணையும் வைர்க்கடுக்கனையும் ஒருசமயம் தம்பால் மிக்க அன்புடையார் ஒருவர்பொருட்டு இவர் விற்கநேர்ந்தது. அச்செய்தியை யாரோ ஒருவர்மூலமாக அறிந்த மூப்பனர், 'எப்பொழுதும் அணிந்துகொண்டிருக்க வேண்டுமென்று எண்ணியல்லவோ கொடுத்தோம்? பணம் வேண்டுமானல் குறிப்பித்தால் நாம் கொடுக்க மாட்டோமா!' என்று எண்ணி வருந்தினர். அவருக்கு அங்ஙனம் வருத்தம் இருத்தலையறிந்த கிருஷ்ணையர் எங்ஙனமேனும் அதனைத் தீர்த்துவிடவேண்டுமென்றெண்ணி யிருந்தார்.

இராமத்திர மூப்பனர், பாபநாசத்துக்குக் கிழக்கே உள்ள தம்முடைய கிராமங்களில் ஒன்றாகிய உத்தானியென்னும் ஊருக்கு வந்து தமது சத்திரத்தில் தங்கிக் கிராமவிசாரணை செய்து கொண்டிருந்தார். அப்பொழுது அவ்வழியாகக் கனம் கிருஷ்ணையர் செல்லநேர்ந்தது. அங்கே மூப்பனர் தங்கியிருத்தலையறிந்து இவர் அந்தச் சத்திரத்திற்குள்ளே சென்றார். இவர் வந்ததை அறிந்தும் மூப்பனர் இவருக்கு முகங்கொடாமல் வேறு வேலைகளைக் கவனிப்பதுபோலப் பராமுகமாக இருந்தார். தம்பாலுள்ள கோபத்தினலேதான் அவர் அங்ஙனம் உள்ளாரென்பது கனம் கிருஷ்ணையருக்குப் புலப்பட்டது. உடனே இவர் அடாணுராகத்தில்,

"என்னடா சொல்லடா என்சாமி நீயே
என்னடா என்மீது கோபம்"

என்ற கீர்த்தனமொன்றைப் புதிதாகப் பாடத்தொடங்கினர். அந்தக்கீர்த்தனம் மூப்பனருடைய மனத்தைக் கவர்ந்து விட்டது; இவர் அந்தக் கீர்த்தனத்தைப் பாடும்பொழுது இவரை நிமிர்ந்துபார்த்தார்; தம்மையறியாமல் அவருக்குப் புன்சிரிப்புவந்து விட்டது; "உங்கள் மீது கோபம் வரக்காரணம் ஒன்றும் இல்லையே! பரீட்சார்த்தமாக இப்படி யிருந்தேன். உங்கள் மீது கோபித்துக்கொண்டு உங்களை வெறுத்து இருக்கமுடியுமா? நீங்கள் கல்மனத்தையும் உருக்கும் சக்தி உடையவர்களல்லவா?" என்றார் மூப்பனர். "உங்களுடைய பராமுகத்தைக்கண்ட பிறகு என்னல் வேறு என்ன செய்யமுடியும்?" என்றார் கிருஷ்ணையர். "உங்கள்மீது வேறுகோபம் ஒன்றும் இல்லை; உங்களுக்கு என்ன

வேண்டுமானாலும் தருவதற்கு நான் காத்திருக்கும்போது நான் ஆசையுடன் செய்து அணிவித்த அரைஞாணையும் கடுக்கனையும் இழந்ததுபற்றித்தான் சிறிது வருத்தம். உங்கள்காது வெறுங் காதாக இருப்பது என்னுடைய கண்ணை உறுத்துகிறது'' என்று சொல்லித் தம்முடைய அன்பை மூப்பனார் காட்டினார். பிறகு இவரைக் கபிஸ்தலத்திற்கு அழைத்துச் சென்று சிலநாள் இருக்கச்செய்து மீண்டும் தங்க அரைஞாணும் வைரக்கடுக்கனும் செய்து அணிவித்தார்.

அப்பால் கிருஷ்ணையர் திருவிடைமருதூருக்குவந்து இருப் பாராயினர். அக்காலத்தில் உடையார்பாளயத்தில் ஜமீன்தா ராகஇருந்த [1]கச்சிரங்க உடையாரென்பவர் இவருடைய பெரு மையைக் கேள்வியுற்றிருந்தார். அவர் ஸங்கீதத்தில் சிறந்த பயிற்சியுடையவர்; ஸங்கீதவித்துவான்களின் ஆற்றலை அளந்தறி வதில் மிக்க திறமையுடையவர். கனம் கிருஷ்ணையரைத் தமது ஸம்ஸ்தானவித்துவானாக இருக்கச்செய்ய வேண்டுமென்ற விருப்பம் அவருக்கு உண்டாகி வளர்ந்துவந்தது. அமரஸிம்மருடைய பாது காப்பில் இருந்த கிருஷ்ணையர் தம்பால் வருவாரோ மாட்டாரோ என்னும் சந்தேகமும் இருந்தது. அதனால் இவருடைய விருப் பத்தை அறிவதற்காக அந்த ஜமீன்தார் தக்கமனிதர்களை அனுப்பி உடையார்பாளயத்துக்கு வந்து செல்லவேண்டுமென்று அழைத் தார். கிருஷ்ணையர் கச்சிரங்கரோடு முன்னமே பழக்கமுடைய வராதலாலும் அவருடைய ஸங்கீதவாற்றலையும் அருமையறிந்து பாராட்டும் தன்மையையும் உணர்ந்தவராதலாலும் சந்தோஷத் தோடு அங்கே சென்றார். கச்சிரங்கதுரை இவரைச்சிறப்பாக உபசரித்துப்பாராட்டி இவருடைய பாட்டைப் பலமுறை கேட்டு மகிழ்ந்து பிறகு தமது விருப்பத்தை மெல்லத் தெரிவித்தார். அங்கேயிருந்த ஒழுங்கான அமைப்புக்களையும் ஜமீன்தாரின் உயர் குணங்களையும் நல்லன்பையும் உணர்ந்த கிருஷ்ணையருக்கு அங்கே இருத்தல் உவப்பைத்தருவதாகவே யிருந்தது. ஆதலின் தமது உடன்பாட்டைத் தெரிவித்து, அமரஸிம்மரிடம் விடைபெற்று வருவதாகச் சொல்லிவிட்டுத் திருவிடைமருதூர் வந்தார். அமர ஸிம்மருக்கு இவரைப் பிரிந்திருப்பது மிகுந்த வருத்தத்தை விளைவிப்பதாகவேயிருந்தது. ஆயினும் ஒருவாறு அதற்கு உடன் பட்டார்.

---

1. இவருடைய சரித்திரத்தைக் கலைமகள் நான்காந்தொகுதி, 518-20--ஆம்பக்கங்களிற் பார்க்க.

கனம் கிருஷ்ணையர் உடையார்பாளையத்துக்குப் புறப்படுவதற்குரிய நல்ல நாளொன்றைப் பார்த்து உத்தரவுபெற்றுக் கொண்டார். அமரஸிம்மர் தக்க மரியாதைகளைச் செய்தார். புறப்படும் தினத்துக்கு முந்தியநாளே உத்தரவு பெற்றுக்கொண்ட கிருஷ்ணையர் மறுநாள் விடியற்காலையிற் புறப்படும்பொழுது அமரஸிம்மருடைய பேரன்பை நினைந்துருகி மீண்டும் அவரைப் பார்க்க வேண்டுமென்று அரண்மனைக்குச் சென்றார். அமரஸிம்மர் உள்ளே இருந்தார். இவரைக் கண்டவுடன், "என்னவிசேஷம்?" என்று வினவினர். இவர் உடனே, "ஊருக்குப்போய் வருகிறேன்" என்று தொடங்குவதும் பூபாளராகத்திலமைந்ததுமாகிய ஒரு கீர்த்தனத்தைப் பாடினர். அந்தக் கீர்த்தனம் அமரஸிம்மருக்கு இன்பத்தை விளைவித்தது; ஆயினும் அதன் பொருளாகிய பிரிவு அவரைத் துன்பக்கடலிலாழ்த்தியது; 'இவ்வளவு சிறந்த வித்துவானோடு இனி அடிக்கடி ஸல்லாபம் செய்வதற்கு இயலாதே' என்ற நினைவு அவருடைய மனத்தை வருத்தியது; "உங்களுடைய இனிய கானத்தை இனி அடிக்கடி கேட்டு ஸந்தோஷிக்க முடியாது; விடைகேட்கும்பொழுதுகூட உங்களுடைய ஸங்கீதசக்தியைக் காட்டிக் கேட்கிறீர்களே. உங்களை நான் எப்படி மறக்கமுடியும்? என்னைமறவாமல் அவ்வப்போது இங்கே வந்துபோக வேண்டும்" என்று அமரஸிம்மர் தமது பிரிவாற்றாமையைப் புலப்படுத்தி மீண்டும் இவருக்குச் சில மரியாதைகளைச் செய்து விடைகொடுத்தனுப்பினர்.

## 4

கச்சிரங்கர் கனம் கிருஷ்ணையரைத் தமது ஸம்ஸ்தானவித்துவானாக நியமித்தார். ஸங்கீதரஸிகராகிய அவர் இவருடைய ஸங்கீதத்தினால் அடைந்துவந்த இன்பமும் அதனால் அவர் இவரை ஆதரித்துவந்த அருமையும் ஒருவர்பால் ஒருவரை ஈடுபடச் செய்துவிட்டன. அவ்வீடுபாடு முதிர முதிரக் கனம் கிருஷ்ணையர் வேறு இடங்களுக்குச் செல்வதை நிறுத்திக்கொண்டார். ஜமீன்தாருக்கும் இவரை ஒருநாட் பிரிந்திருத்தலும் துன்பத்தை விளைவித்தது. ஆற்றலுடைய வித்துவானும் அருமையறிந்த பிரவும் பழகும்போது இருவருடைய வாழ்வும் இன்பமயமாகவே இருக்குமென்பதைச் சொல்லவும் வேண்டுமா? கனம் கிருஷ்ணையருடைய அன்பும் ஆற்றலும் அவ்வப்போது சில சில கீர்த்தனங்களாக வெளிப்பட்டன. கச்சிரங்கருடைய அன்பும் கொடைச்சிறப்பும்

அவ்வப்போது கனம் கிருஷ்ணையருக்குரிய ஸம்மானங்களாக வெளிப்பட்டன.

கிருஷ்ணையர் கச்சிரங்கர்மீது பாடிய கீர்த்தனங்கள் சில. "பச்சிளங்தேமற் படர்ந்த" என்று தொடங்கும் கீர்த்தனம் ஒன்று உண்டு. அது தோடி ராகத்தில் அமைந்துள்ளது. கச்சிரங்க ராகிய தலைவரைப் பெருமையால் வாட்டமுறும் நாயகி ஒருத்தி வருந்துவதை அவளுடைய தோழி தெரிவிப்பதாக அதன் பொரு ளமைப்பு இருக்கிறது. "கச்சிரங்கராஜனடி உச்சிதநற்போஜனடி" எனத் தொடங்குவதும் சஹானாராகத்தில் அமைந்ததுமாகிய சிந்து ஒன்றும் உண்டு.

இவர் முன்பே குதிரையேறிப் பிரயாணம் செய்யும் பழக்க முடையவர். இராமபத்திரமூப்பனரால் அளிக்கப்பட்ட குதிரை ஒன்று இவர்பால் இருந்தது. உடையார்பாளையம் வந்தபின்னர் கச்சிரங்கர் வேறு சிறந்த குதிரையொன்றை இவருக்கு அளித்து அதனைப் பாதுகாத்தற்குரிய ஏவலாளரையும் நியமித்தார்.

கச்சிரங்கதுரையின் ஸங்கீத அபிமானத்தையும் வித்துவான் களை ஆதரிக்கும் இயல்பையும் அறிந்த வித்துவான்கள் பலர் அடிக் கடி உடையார்பாளையம் வந்து இவரைக்கண்டு இவர்மூலமாக ஜமீன்தாரிடம் தங்கள் தங்கள் திறமையைக் காட்டிப் பரிசுபெற்றுச் செல்வார்கள்; இவருடைய ஸல்லாபத்தால் அவர்கள் மகிழ்ச்சி யடைவார்கள். வேறு ஸம்ஸ்தானங்களிலுள்ள வித்துவான்கள் வந்தகாலங்களில் கனம் கிருஷ்ணையருடைய சிறந்த ஸங்கீதத் தைக் கேட்டு மகிழ்வார்கள்; 'இத்தகைய அருமையான வித்துவான் இந்த இடத்தில் இருக்கிறாரே. இவர் பெரிய ராஜ சமுகங்களில் இருந்து விளங்கவேண்டியவரல்லவோ' என்று அவர் களிற் சிலர் எண்ணுவதுண்டு.

ஒருசமயம் வெளியூர்களிலிருந்து சில ஸங்கீத வித்துவான் கள் உடையார்பாளையம் வந்திருந்தார்கள். அவர்கள் வழக்கம் போல் ஜமீன்தாரைக்கண்டு பாடிப் பரிசுபெற்றார்கள். பிறகு கனம் கிருஷ்ணையர் இருந்தவீட்டிற்குச் சென்று இவரோடு ஸல்லாபம் செய்துகொண்டிருந்தார்கள். அப்பொழுது அவர்கள் இவரைநோக்கி, "நீங்கள் தஞ்சாவூர், திருவனந்தபுரம், மைஸூர் முதலிய பெரிய ராஜஸம்ஸ்தானங்களில் இருக்கவேண்டியவர்கள். இந்த ஜமீன்தாரிடத்தில் இருந்து காலங்கழிப்பது உங்களுக்கு ஏற்றதன்றென்பது எங்கள் அபிப்பிராயம். அந்த ஸம்ஸ்தானங் களில் வித்வத்ஸபையில் அடிக்கடி தங்கள் உயர்ந்த ஸங்கீதசக்தி பிரகாசிப்பதற்கு மார்க்கங்கள் ஏற்படும்; நல்ல ஸம்மானங்களும்

கிடைக்கும். இந்த ஊர் காட்டுக்குள்ளேயல்லவா இருக்கின்றது?'' என்று சொன்னார்கள். அவர்கள் கச்சிரங்கதுரையின் உண்மையான அன்பையும் பிற குணவிசேஷங்களையும் உணர்ந்துகொள்ளாமைக்கு இவர் வருந்தினார்; ''நீங்கள் சொல்வதெல்லாம் ஸரியே; பெரிய ராஜகரங்களில் இருப்பது பெருமைதான்; உயர்ந்த ஸம்மானங்களும் கிடைக்கலாம்; பட்டமும் கிடைக்கலாம்; இன்னும் எத்தனையோ வகையான பொருள்களும் கிடைக்கலாம்; ஆனால் கச்சிரங்க துரையவர்களுடைய சிரக்கம்பம் அங்கே கிடைக்காதே. கோடிபவுன் கிடைத்தாலும் எனக்கு அது பெரிதன்று; அருமையறிந்த பிரபுவாகிய இவருடைய சிரக்கம்பம் ஒன்றே இந்த லோகம் பெறும்'' என்று மனமுருகிச் சொல்லி அக்கருத்தை அமைத்து ஒரு கட்டளைக்கலித்துறை இயற்றிச் சொன்னார். அதன் ஒருபகுதியாகிய ''கச்சிரங் கேந்த்ரன் சிரக்கம்பம் போதும்'' என்பது மட்டும் இப்பொழுது எனக்கு நினைவில் இருக்கிறது. அதனைக் கேட்ட வித்துவான்கள் ஜமீன்தாரிடத்தில் இவருக்குள்ள பேரன்பையெண்ணி வியந்தார்கள்; ''இந்த ஜமீன்தார் பெரிய அதிர்ஷ்டசாலியே. ஒரு சிங்கத்தை வசப்படுத்தித் தம்பால் இருக்கச்செய்ததுபோல உலகமெல்லாம் சஞ்சரித்து வெற்றியடையும் இந்த மகாவித்துவானுடைய மனத்தை வசீகரித்துத் தம்பால் இருக்கச்செய்து விட்டார். ஆகையால் ஜமீன்தார் பெரிய ரஸிக சிரோமணியாகவே இருக்கவேண்டும்'' என்று தமக்குள் பேசிக்கொண்டார்கள்.

கனம் கிருஷ்ணையர் விரும்பியிருந்தால் ஒருபெரிய ஸம்ஸ்தானத்தில் இருந்து விளங்குவதற்குரிய நிலையை அடைந்திருக்கக்கூடும். கச்சிரங்கருடைய அன்புக்கு அடிமையாகிய அவர் அத்தகைய நிலையை விரும்பவேயில்லை. 'உடையார்பாளையம் காட்டுக்குள் மறைந்து இருக்கிறாரே. வெளியிடங்களுக்கு வரமாட்டேனென்கிறாரே' என்று வித்துவான்கள் வருத்தப்படுவார்கள். இவருக்குக் கச்சிரங்கன் சிரக்கம்பமொன்றே பூரணதிருப்தியை விளைவித்தது.

கச்சிரங்கதுரை அளித்த குதிரையை இவர் உபயோகித்து வருவாராயினர். ஒருமுறை தம்முடைய ஊராகிய திருக்குன்றத்திற்குச் சென்றிருந்தகாலத்தில் அவ்வூர் ஸ்ரீ ஸௌந்தரராஜப்பெருமாளுடைய ஆலயம் பழுதுபட்டிருப்பதை அறிந்தார். அவ்வூரார் உடையார்பாளையம் ஜமீன்தாரவர்களைக்கொண்டு திருப்பணிசெய்விக்கவேண்டுமென்று இவரைக் கேட்டுக்கொண்டார்கள். அவர்களுடைய விருப்பத்தின்படியே இவர் கச்சிரங்கரிடம் ஒருகீர்த்தனை

யின்மூலமாக அக்கருத்தை வெளியிட்டார். அவர் மகிழ்ந்து உடனே திருப்பணிக்குரிய உதவிகளைச் செய்வித்தார். திருப்பணி நிறைவேறியபின்னர் கச்சிரங்கர் அக்கோவிலுக்குக் கும்பாபிஷேக மும் செய்வித்தார்.

இங்ஙனம் இருந்துவந்த காலத்தில் கச்சிரங்கர்பூதவுடம்பை நீத்தார். அக்காலத்தில் அவருடைய குமாரராகிய கச்சிக்கல்யாண ரங்கர் பட்டம் பெறவில்லை; வேறு ஒருவர் பெற்றார். கச்சிக்கல் யாணரங்கர் உடையார்பாளையத்தை விட்டு நீங்கித் திருவானைக் காவில் இருந்து வந்தார். ஆதலின் கிருஷ்ணையர் தம் ஊருக்குச் சென்று இருக்கலானார். பிரபுக்களாலழைக்கப்பட்டு இவர் திருச்சி ராப்பள்ளிக்குச் செல்லும் காலங்களில் திருவானைக்காவுக்கும் சென்று கச்சிக்கல்யாணரங்கரோடு ஸல்லாபம் செய்து விட்டு வருவார். அவர் இளமைப் பிராயமுடையவராயினும் பரம்பரைக்கு ஏற்றபடி வித்துவான்களிடத்தில் அபிமானம் உடையவராகவே யிருந்தார். தம் தந்தையார் கிருஷ்ணையரை உபசரித்து வந்ததை நேரிற் கண்டவராதலின் இவர்பால் அளவற்ற மதிப்பும் பக்தியும் அவருக்கு இருந்துவந்தன. தமக்குப் பட்டம் கிடைத்த வுடன் இவரை வருவித்து உபசரிப்பதை முதற்கடமையாகக் கொள்ள வேண்டுமென்று அவர் எண்ணிக்கொண்டிருந்தார்.

1842-ஆம் வருஷம் கச்சிக்கல்யாணரங்கர் உடையார்பாளையம் ஸம்ஸ்தானாதிபதி ஆனார். தாம் ஜமீன்தார் பதவிபெறப்போவதை யறிவித்து அவர் கனம் கிருஷ்ணையரை வருவித்தார். அவர் ஜமீன் தலைமையைப் பெற்றுக்கொண்ட காலத்தில் இவர் பாடிய கீர்த் தனங்கள் சில உண்டு. அவற்றில் அடாணாவில் உள்ள,

"மகமேரு மகராஜனே சத்ரபதி"

என்ற பல்லவித்தொடக்கத்தையுடைய கீர்த்தனமொன்றில் கச்சிக் கல்யாணரங்கரது கொடைச் சிறப்பைப் பாராட்டிக் கூறி யிருக்கிறார்; அவர் ஸங்கீதவித்துவான்களிடத்திலும் தமிழ் வித்து வான்களிடத்திலும் அன்புடையரென்பதை, 'கனநயங் தேசிகங் தமிழைக் கணக்கில்லாமல் ஆதரிக்கும்' என்று புலப்படுத்தி யிருக்கிறார்.

ஜமீன்பதவியைப் பெற்ற பின்னர் கல்யாணரங்கர் கனம் கிருஷ்ணையரை உடையார் பாளையத்திலே ஸம்ஸ்தான வித்துவா னாக இருந்துவரும்படி செய்து வேண்டிய சௌகரியங்களைச் செய் தளித்தார். இவருக்கு எந்தவகையிலும் குறைவிராதபடி கவனிக்க வேண்டுமென்று அவர் ஏவலாளர்களுக்குக் கட்டளையிட்டிருந்தார்.

தம் தந்தையாருக்குச் சிறந்த நண்பராதலின் இவர்பால் மரியாதை யோடு இருந்து வரலானர்.

கனம் கிருஷ்ணையருக்குப் பிராயம் அதிகமாக ஆகக் குதிரை யேறிச்செல்லுதல் இயலாததாக இருக்குமென்றறிந்த கல்யாணரங்கர் ஓர் அழகிய பல்லக்கு வழங்கிப் போகிகளையும் அமைத்தார்; அவர்களுக்குரிய மாதச்சம்பளம் அரண்மனையிலிருந்தே கொடுக்கப்பட்டு வந்தது. ஜமீன்தாருடைய பேரன்பு கிருஷ்ணையருடைய உள்ளத்தைக் குளிர்வித்தது. ஆதலின் மகிழ்ச்சி மிக்கபொழுதெல்லாம் அவர் விஷயமாகக் கீர்த்தனங்கள் இவர் பாடிவந்தார். இப்பொழுது கிடைக்கும் இவருடைய கீர்த்தனங்களிற் பெரும்பாலன கச்சிக்கல்யாணரங்கர் விஷயமானவைகளே.

கல்யாணரங்கர் எங்கே போனாலும் கிருஷ்ணையரை உடன் அழைத்துக்கொண்டே செல்வார். ஸ்ரீமுஷ்ணம், கும்பகோணம், சிதம்பரம் முதலிய ஸ்தலங்களுக்கு அவர்போய் ஸ்வாமிதரிசனம் செய்துவருவார். அக்காலங்களிலெல்லாம் கிருஷ்ணையரும் உடன் சென்று தரிசனம் செய்துவிட்டுச் சில கீர்த்தனைகளை இயற்றிப்பாடுவார். இங்ஙனம் இருவருடைய பொழுதும் இனிதாகப் போய்க் கொண்டிருந்தது. ஸ்ரீமுஷ்ணத்துக்குப் போனகாலங்களில் இவர் பாடியகீர்த்தனைகள் "தேவரொயிலும்" (கமாசு), "பூவராகரே" (அடாணு) முதலியன. 'தேவரொயிலும்' எனவரும் கீர்த்தனத்தில் 'பெருமையுடனே கச்சிக்கல்யாணரங்கன்றன் பேரும் ஊரும் விளங்கத்தருவார்' என்று கச்சிக்கல்யாணரங்கரைப்பற்றிக் கூறியிருக்கிறார். மற்றொரு கீர்த்தனம் வருமாறு:—

(இராகம் : அடாணு; தாளம் : ஆதி)

பல்லவி

பூவராகரே பரிபூர்ண போத மாதவரே
பூவராகரே

அநுபல்லவி

சேவையுந்தந்து ஆதரித்துவெகு
திவ்யமாய்ச் சிரஞ்சீவி யாக
ஈவில்கர்ணன் கச்சிக்கல்யாண
ரங்கனுக்கே கிருபைசெய்யும் (பூவராகரே)

சரணங்கள்

1. வைபவமும்வெகு செல்வமும் தழைக்க
வல்லபமும் மகிமையு மிகக்கொடுத்து
வாசுதேவரே வைகுந்தரே
வடமலையாரே முகுந்தரே

தெய்வம் நீரல்லாமல் ஜெக
 தீசனும்வேறே யுண்டோ மாதவ
சீலமாய் ஜயமாய் வாழும்
 ஸ்திரமுடனேயும் விளங்கக் கிருபைசெய்யும் (பூவராகரே)

2. வாமனரூபரே எங்கள் வனத்துளப மாலையாரே
கோமளரோ கோவிந்தரே கோகுல தாரியே
சாமள வர்ணரே செந் தாமரைத் திருக்கண்ணரே
நேமம் உந்தம் பக்தனையும் நிலையாகச் சவரட்சணைசெய்யும் (பூவ)

3. எம்பெருமானே எப்போதும் ஏகநாதரே
உம்போலே தெய்வம் உலகத்தில் வேறுண்டோசொல்லும்
அன்புடனே மிச்சமாக அர்ச்சனைசெய்த அடிமைக்குத்
தெம்புடனேவச்சிரகாயம் ஸ்திரமுடன் விளங்கச் செய்யும் (பூ)

4. வேல்முருகர் மாமனே வேதாந்த வேத்தியரே
மாலம் புஜவல்லியுடன் மாயவரே என்றைக்கும்
மேன்மைக்கச்சிக் கல்யாணரங்கனுக்கே கடாட்சம் உம்மைப்
போலெவர்க்குக் கிடைக்குமோ பூமண்டலத்தில் உண்டோ
 சொல்லும் (பூவ)

கும்பகோணத்துக்குக்கச்சிக்கல்யாணரங்கருடன் ஒருமுறை போயிருந்தகாலத்தில் இவர் ஸ்ரீசார்ங்கபாணிப் பெருமாளை அவருடன் தரிசனம்செய்த பின்பு கல்யாணி ராகத்தில், "பாரெங்கும் பார்த்தாலும்" என்ற கீர்த்தனத்தை இயற்றிப்பாடினார். அதில், 'கச்சிக் கல்யாணரங்கனை ஸௌக்கியமாகக் காத்து' என்று அமைத்திருக்கிறார். கச்சிக்கல்யாணரங்கனைப் பாதுகாக்கவேண்டுமென்று உடையார்பாளையத்தில் எழுந்தருளியுள்ள அம்பிகையாகிய ஸ்ரீகுஸுமகுந்தளாம்பிகையைப் பிரார்த்தித்துப் பியாகடை ராகத்தில், "குஸுமகுந்தளாம்பிகையே கொஞ்சுகிளியே பஞ்சமியே" எனவரும் ஒரு கீர்த்தனையைப் பாடினார்.

ஸ்ரீ தியாகையருடைய சிஷ்யரொருவர் ஒருசமயம் உடையார்பாளையத்துக்கு வந்திருந்த காலத்தில் ஜமீன்தாருக்குமுன் சில கீர்த்தனங்களைப் பாடினார். அவற்றுள் காம்போதி ராகத்தில் உள்ள "மாஜானகி" என்ற கீர்த்தனத்தைக் கேட்டுமகிழ்ந்த ஜமீன்தார் அருகிலிருந்த கிருஷ்ணையரை நோக்கி, "இந்த வர்ணமெட்டில் ஏதேனும் கீர்த்தனம் உண்டோ?" என்று கேட்டார். அவருடைய குறிப்பையறிந்த இவர், "எங்கள் ஜானகியை மணஞ்செய்த" என்று அவர் விஷயமாகவே ஒரு கீர்த்தனை இயற்றிப் பாடினார். ஜானகி யென்பது ஜமீன்தாருடைய மனைவியாரின் பெயர். ஜமீன்தாருக்குப் புத்திரபாக்கியம் உண்டாக வேண்டுமென்று பிரார்த்தித்து ஸ்ரீ முற்கபுரீசர் விஷயமாக அடாணாராகத்

தில், "பகுளவனவாசரே முற்கபுரீசரே, வளமாய்ப்புத் திரசந்தானம் வன்மையாகக் கொடுக்கும்" எனவரும் கீர்த்தனமொன்றை இயற்றிப்பாடினார்.

கச்சிக்கல்யாணரங்கர், உடையார்பாளையம் கோவிலுக்குத் தென்புறத்திலுள்ள காண்டீபதீர்த்தத்தைச் செப்பஞ் செய்வித்து மிகச்சிறப்பாகத் தெப்போத்ஸவத்தை நடத்தினார். அந்த உத்ஸவச்சிறப்பைப் பாராட்டி இவர் ஒரு கீர்த்தனம் இயற்றிப்பாடினார். கொள்ளிடத்துக்கு வடகரையிலுள்ளதும் கும்பகோணத்துக்கு நேர் வடக்கிலுள்ளதுமாகிய மதனத்தூரென்னும் இடத்தில் ஜமீன்தார் ஓர் அன்னசத்திரம் கட்டினார். அக்காலத்தில் இவர் பாடிய கீர்த்தனம் ஒன்று உண்டு.

தத்தனூர் என்னும் ஜமீன் கிராமத்தில் ஜமீன்தாருடைய கட்டளையின்படி ஓர் அழகிய தோட்டம் விசாலமாக அமைக்கப்பட்டது. அதில் பலவகையான பலவிருட்சங்களும் புஷ்பமரங்களும் செடிகளும்வைத்து வளர்க்கப்பட்டிருந்தன. பழமரங்கள் நன்றாகப் பழுத்துவிளங்கியகாலத்தில் தத்தனூரிலிருந்த குடிகள் கல்யாணரங்கதுரையை அழைத்தார்கள். அவர் பரிவாரங்களுடன் சென்றார். பூஸாரம் பொருந்திய அவ்விடத்தில் மலர்களையும் பழங்களையும் தாங்கிக்கொண்டு பல மரங்கள் விளங்கிய காட்சி யாவருடைய கண்களையும் கவர்ந்தது. ஜமீன்தாருடன் சென்றிருந்த கிருஷ்ணையர், அந்தத் தோட்டத்தின் வளப்பத்தையும் கச்சிக்கல்யாணரங்கர் சென்ற வைபவத்தையும் குடிகள் அன்புடன் வரவேற்று உபசரித்ததையும் கண்டு மகிழ்ச்சியுற்றார். அதன் பயனாக ஒரு கீர்த்தனம் இவரால் இயற்றப்பெற்றது. அது தர்பார் ராகத்தில் அமைந்தது; "டாப்பும் சிறப்புமாகப் பவனிவந்த வரிசை" என்று தொடங்குவது. அதன் அநுபல்லவியாகிய,

"மாப்பழுக்குஞ் சோலை சூழ் தத்த நகர்தனிலே
மகிபன் கச்சிக்கல்யாண ரங்கமஹாராஜன்"

என்பது மட்டும் இப்பொழுது என் ஞாபகத்தில் இருக்கிறது. இந்தக் கீர்த்தனத்தின் வர்ணமெட்டுப் பலரால் பாராட்டப் பெற்றது. அரியிலூரில் இருந்த [1]சடகோப ஐயங்கார் இந்தக் கீர்த்தனத்தில் ஈடுபட்டுத் தாம் இயற்றிய ஜீவப்ரம்ம ஐக்கிய சரித்திரம் என்னும் வேதாந்த நாடகத்தில் இந்த மெட்டில் ஒரு கீர்த்தனத்தை இயற்றியமைத்திருக்கிறார்; "சுத்த விருத்தியினாலே" என்னும் தொடக்கத்தையுடையது அது.

1. இவரைப்பற்றிய வரலாற்றை, கலைமகள் நான்காந்தொகுதி 297-300-ஆம் பக்கங்களிற் பார்க்க.

வேருெரு சமயம் தத்தனூரில் உள்ள கரும்புத் தோட்டத்தைப் பார்ப்பதற்காகக் கல்யாணரங்கர் கிருஷ்ணையருடன் சென்றிருந்தார். நல்ல வளம்பெற்றுக் கரும்புகள் தழைத்து நின்றன. அதைப்பார்த்த கிருஷ்ணையர், "இத்தகைய பாக்கியம் தங்களுக்கன்றி வேறு யாருக்கு உண்டு? கண்ணுக்கு எட்டியவரையிலும் கரும்புத்தோட்டமாகவே இருக்கிறது. இந்தக் காட்சியொன்றே மனத்துக்கு இன்பம் விளைவிக்கின்றது" என்று பேசிக்கொண்டிருந்தார். அதனைக் கேட்ட ஜமீன்தார், "இந்தச்செல்வத்தில் உங்களுக்கும் பங்கு தருவேன்" என்று சொல்லி அருகிலிருந்த அதிகாரியிடம், கரும்புத்தோட்டத்தில் ஐந்துகாணி இவருக்கு ஸர்வமான்யமாகக் கொடுக்கும்படி கட்டளையிட்டார்.

சிலகாலம் வரையில் உத்தியோகஸ்தர்களின் பொருமையினலோ வேறு காரணங்களாலோ அந்தக் கரும்புத்தோட்டம் கிருஷ்ணையருக்குக் கிடைக்கவில்லை. எப்போதாவது இவர் உரிய அதிகாரிகளை விசாரிக்கையில் அவர்கள் சாக்குச் சொல்லி வந்தார்கள். இங்ஙனம் அவர்கள் செய்துவந்தது ஜமீன்தாருக்குத் தெரியாது. ஆதலின் இதனை அவருக்குப் புலப்படுத்தவேண்டுமென்று எண்ணிய கிருஷ்ணையர் உசேனிராகத்தில், "கச்சிக்கல்யாணரங்கராஜன்பட்சமே" என்ற ஒரு பதத்தையும், "கன்னலுஞ் செந்நெலும் உன் மனப் பூர்வமாக் காட்டிவிட" என்று தொடங்கும் ஒரு கட்டளைக் கலித்துறையையும் இயற்றிப் பாடினர். பதத்தில் அதிகாரிகள் செயலை, "எல்லாருடைய ஹ்ருதயங்களுமே தெரியும், எவர் சூதும் நடவாது" என்று குறிப்பாகப் புலப்படுத்தி யுள்ளார். இவற்றைக் கேட்டவுடன் ஜமீன்தார் உண்மையை நன்கு விசாரித்தறிந்தார். அவருக்குண்டான கோபத்திற்கு அளவேயில்லை. கனம் கிருஷ்ணையர் ஒருவாறு அதிகாரிகள்மேல் குற்றம் சாராமல் பேசிக் கோபத்தைத் தணிவித்தார். உடனே ஜமீன்தார் சோழங்குறிச்சியென்னும் கிராமத்தில் விளச்சலோடு பத்துக்காணி நன்செய் ஸர்வமான்யமாகக் கொடுக்கும்படிசெய்தார். அந்நிலத்தை நேரிற் சென்றுகண்டு மகிழ்ந்துவந்த கிருஷ்ணையர் கல்யாணரங்கரது வள்ளன்மையையும் பேரன்பையும் எண்ணி எண்ணி உருகினர். அவரை வந்துகண்டார். அப்பொழுது சந்தோஷமிகுதியால்,

"நிறைந்ததே எங்கும் சிறந்ததே - கலி
பறந்ததே உன் பேரைச்சொன்னல்
நிறைந்ததே எங்கும்"

எனத்தொடங்கும் கீர்த்தனத்தை இயற்றிப்பாடினர்.

திருக்குன்றம் ஸ்ரீ ஸௌந்தரராஜப்பெருமாள் கோவில் மகா மண்டபம் பழுதுபட்ட நிலையில் இருந்தது. ஆதலின் அதனைக் கல்யாணரங்கரைக் கொண்டு புதியதாகக் கட்டவேண்டுமென்ற எண்ணம் இவருக்கு உண்டாயிற்று. ஒருசமயம் அந்தக் கருத்தை இவர் புலப்படுத்தவே, ஜமீன்தார் நன்றாகக் கட்டி முடித்துக் கும்பாபிஷேகம் செய்வித்தார். அதனால் மனமகிழ்ந்த கிருஷ்ணையர் அடாணாராகத்தில், "பணிவிடைக்காகவே" எனத்தொடங்கும் ஒருகீர்த்தனையை இயற்றிப் பாடினார். அதில், மகாமண்டபம் கட்டிவைத்ததை,

"ஸௌந்தர ராஜப் பெருமாள் மகாமண்டபம்
கட்டிவைக்கும் உன்போல ராஜனுண்டோ"

என்று புலப்படுத்தியிருக்கிறார்;

"புல்லர் முகந்தன்னிலே விழியாம லெனக்குப்
பூர்த்தியாக மசுதைச்வரியங் கொடுத்து
அல்லலில்லாம லேயென்னை
ஆர்ப்பரித்துக் காப்பாற்றும்"

என்று தம்மை அவர் பாதுகாத்துவருவதைச் சிறப்பித்திருக்கிறார்;

"கல்லாக் கலைகள்கற்ற ராஜரிருந் தாலுமென்ன
கானலோலனே கனம்கிருஷ்ண னுடன்
சொல்வாக்கைக் காக்குமெங்கள் தாரதுரையே"

என்று தமக்கு வாக்குக்கொடுத்தவற்றை நிறைவேற்றிவைப்பதைப் பாராட்டியிருக்கிறார்;

"நன்மை தெரிந்தபிரபுவே நவரத்னம் வைத்திழைத்த
பல்லக்குத் தான்கொடுத்துப் பரிவுடன் கீர்த்திபெற்று"

என்று தமக்குப் பல்லக்களித்ததைப்பற்றி கூறியிருக்கிறார்;

"பெரியதுரை செய்த திருப்பணிக்குக் குறைவில்லாமல்"

என்று கச்சிரங்கர் முன்பு திருப்பணிசெய்வித்ததையும் குறிப்பித்துள்ளார்.

ஒரு சமயம் ஜமீன்தார் அரண்மனை முகப்பில் இவருடன் பேசிக்கொண்டு நின்றார். அப்பொழுது வீதியில் ஒரு தாதன் கிருஷ்ணவிலாஸமென்னும் புஸ்தகத்திலுள்ளதும் முகாரி ராகத்தில் அமைந்துள்ளதுமாகிய "மாதே யசோதை கேளம்மா-உன்மகன் சேதியை" என்ற கீர்த்தனத்தைப் பாடிக்கொண்டுசென்றான். அவனுடைய குரல் இனிமையுடையதாக விருந்தது. அதைக் கேட்டு இன்புற்ற ஜமீன்தார் கிருஷ்ணையரைப்பார்த்து, "இந்தக் கீர்த்தனம் நன்றாயிருக்கிறது. முகாரிராகத்தின் களையைச் செவ்வை

யாக இந்த வர்ணமெட்டுக் காட்டுகிறது" என்றார். கிருஷ்ணையர் அவர் கருத்தை அறிந்துகொண்டு உடனே, "அவர்வருவாரோ நான் வரவோ என்னடி சொல்லடி" என்ற கீர்த்தனையை இயற்றிப் பாடினர். அது பின்னும் சிறந்த அமைப்புள்ளதாயிருத்தலை அறிந்த ஜமீன்தார் மிகவும் மகிழ்ந்தார்.

கச்சிக் கல்யாணரங்கர் ஒருமுறை சில பொறாமைக்காரர்களுடைய சொற்களைக் கேட்டு இவர்பால் சிறிது பராமுகமாக இருக்கத் தொடங்கினர். இவர் அதனை ஒருவாறு அறிந்து கொண்டார். ஒருநாள் இவர் அரண்மனைக்குச் சென்றபோது ஜமீன்தார் வேறு ஒருகாரியமாக இருப்பதாகவும் பிறகு பார்ப்பதாகவும் சொல்லியனுப்பினர்.

எந்தக் காலங்களிலும் தடையின்றிப் பார்த்து ஸல்லாபம் செய்வது இவருடைய வழக்கம்; ஆதலின் அப்பொழுது வருத்த முற்றார். மற்றொருநாள் செல்லுகையில் வேறு வேலையைக் கவனிப்பவரைப்போல அவர் இருந்தார். அங்ஙனம் இருப்பதற்குக் காரணம் ஜமீன்தாரது மனவேறுபாடே என்பதை அறிந்த கிருஷ்ணையருடைய உள்ளத்தில் வருத்தமும் சினமும் கலந்து வளர்ந்தன. ஜமீன்தார் சிறிதுநேரங்கழித்துத் தலைநிமிர்ந்து பார்த்தார். உடனே இவர் கோபக்குறிப்புடையவராகிச் சுருட்டிராகத்தில்,

"பத்துப்பை முத்துப்பை வச்சிரப் பதக்கமும்
பைபையாத் தனத்தைக் கொடுத்தவர் போலப்
பாடின பாட்டுக்கும் ஆட்டுக்கும் நீரென்னைப்
பசப்பின தேபல னறிவேன் காணும்"

என்ற பல்லவியை இயற்றிப் பாடத் தொடங்கினர். அதைக் கேட்ட ஜமீன்தாருக்குத் தாம்செய்த தவறு மனத்தில் உறுத்தியது. 'எவ்வளவோ பெரிய ஸம்ஸ்தானங்களிலெல்லாம் வலிய அழைத்தும் போகாமல் இங்கே அபிமானம் வைத்து இருந்துவிட்ட இவரை அவமதித்தது பெரும்பிழை' என்பதை அவர் உணர்ந்தார்; உடனே எழுந்துநின்று கைகுவித்துக் கொண்டு, "ஸ்வாமீ, க்ஷமிக்கவேண்டும்; நீங்கள் பெரியதுரை காலமுதற் கொண்டு அபிமானத்தோடு இருந்து எங்களுடைய ஸம்ஸ்தானத்துக்குப் புகழை உண்டாக்குகிறவர்களல்லவா? இப்படித் திருவுள்ளத்தில் கொள்ளக்கூடாது. நான் தெரியாமல் செய்ததை அவமதிப்பாக எண்ணாமல் ஆசீர்வதிக்கவேண்டும். தங்களுடைய அருமை எனக்குத் தெரியாதா? தங்களுடைய அபாரமான திறமைக்கு நான் தரும் ஸம்மானங்கள் எவ்வளவு? மகாராஜாக்களால் பூஜித்து ஆதரிக்கத்தகும் தங்களுடைய யோக்யதையை அறியாதவர்கள் யார்? நடந்தவற்றை மறந்துவிட வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார். அவருடைய பரம்பரைக்குணமாகிய ஸௌலப்யம் அந்த வார்த்தைகளில் பொங்கிவழிந்தது.

கிருஷ்ணையருக்குக் கோபம் தணிந்தது; "உங்கள்மேல் வருத்தம் ஒன்றுமில்லை. ஏதோ மனம் நினைத்தது; இப்பொழுது ஸமாதானம் ஆகிவிட்டது" என்று சொல்லிவிட்டு இவர் முன்கூறிய பல்லவியையே மாற்றி, ஒரு நாயகி கூறுவதாக,

"பத்துப்பை முத்துப்பை வச்சிரப்பதக்கமும்
பரிந்து கொடுத்து மிகச்சுகந்தந்து
பஞ்சணைமீதினிற் கொஞ்சிவிளையாடி
ரஞ்சிதமும் அறிந்த மகாராஜனே"

என்று பாடத்தொடங்கி அக்கீர்த்தனையைப் பூர்த்திசெய்தார்.

ஜமீன்தார் கனம் கிருஷ்ணையருடைய சாமர்த்தியத்தை நினைந்து வியந்தார்; "பெரியவர்கள் கோபித்தாலும் நன்மையாகவே முடியுமென்பார்கள்; தாங்கள் என்மேல் கோபம் கொண்டாலும் அக்கோபம் நீர்கிழிய எய்த வடுப்போல மாறியதோடல்லாமல் ஆசிர்வாதம்போன்ற இந்தக் கீர்த்தனம் ஒன்று புதிதாக உண்டாயிற்று. இவ்வளவு திறமையையுடைய தங்களோடு பழகும் பாக்கியம் எனக்கு அமைந்தது நான் பல ஜன்மங்களில் பண்ணிய தவத்தின் பயனாகும்" என்று பணிவுடன் சொன்னார்; அப்பொழுது உண்டான உள்ளப்பூரிப்பால் சிலவகையான ஸம்மானங்களையும் செய்தார்.

இவர் தினந்தோறும் சிவபூஜை தவறாமல் செய்துவருவார். ஒருமுறை விரைவில் அரண்மனைக்குச் செல்லவேண்டியிருந்தமையின் சிவபூஜைசெய்ய அமர்ந்தார். அப்பொழுது என்ன காரணத்தாலோ பத்திரபுஷ்பங்கள் ஸித்தமாகக் கொண்டுவந்து வைக்கப்படவில்லை. இவர் என்னசெய்வதென்று சிறிது யோசித்தார். சமையலுக்காக ஆய்ந்துவைக்கப்பட்ட கீரை அருகிலிருந்தது; அது சுத்தமானதாகவும் கண்ணுக்கு அழகியதாகவும் தோற்றியது. "போதும் பெருவிடிற் பச்சிலையுண்டு" என்னும் திருவாக்கு அப்போது இவர் நினைவுக்கு வந்தது. உடனே அந்தக் கீரையை எடுத்து அதனையே பத்திரமாகக்கொண்டு சிவார்ச்சனையை நிறைவேற்றினர். உடனிருந்தவர்கள் இவருடைய மனநிலையின் சிறப்பை அறிந்து வியந்தார்கள்.

கச்சிக்கல்யாணரங்கதுரையின் ஆஸ்தான வித்துவானாக இவர் அமர்ந்த சில வருஷங்களுக்குப் பின்பு என்னுடைய தந்தையாராகிய ஸ்ரீவேங்கடஸுப்பையரவர்கள் இவர்பாற் சென்று பன்னிரண்டு வருஷங்களுக்குமேல் இடைவிடாமல் உடனிருந்து பணிவிடைசெய்து ஸங்கீதசிக்ஷை பெற்றார்கள். அவர்களுடைய தாயாரின் அம்மான் கனம் கிருஷ்ணையர். சக்கரதானம் முதலியவற்றை அவர்கள் நன்றாகக் கற்றுக்கொண்டார்கள். தாம் கற்றுக்கொண்டதை உடையார்பாளையத்திலுள்ள திருவாவடுதுறை மடத்தில் விடியற்காலத்திற் சென்று நாள்தோறும் ஸாதகம் செய்து

வந்தார்கள். அக்காலத்தில் அவர்களுக்கு ஜமீன்தார் மாதந் தோறும் பொருளுதவிசெய்து ஊக்கமளித்து வந்தார். கனம் கிருஷ்ணையருடைய கீர்த்தனங்கள் பல அவர்களுக்குப் பாடம் உண்டு. பிற்காலத்தில் அவர்களிடமிருந்து அக்கீர்த் தனங்களைக் கற்றுக்கொண்டோர் பலர். அவர்கள் இவரை அடைந்த சிலகாலத்துக்குப் பின் என்சிறிய தந்தையாராகிய ஸ்ரீ சின்னசாமி ஐயரவர்களும் சென்று இவரிடம் அப்பியாஸம் செய்துவந்தார்கள். கனம் கிருஷ்ணையர் என் தந்தையாருடைய கல்யாணத்துக்குப் பொருளுதவி செய்யவேண்டுமென்று விரும்பிக் கச்சிக் கல்யாணரங்கர்மீது ஒரு கட்டளைக்கலித்துறை இயற்றினர்; அதன் முதலடியாகிய,

"வன்ய துலோத்தமன் ரங்க மகீபன் வரிசைமைந்தா"

என்பதுமட்டும் இப்பொழுது என் ஞாபகத்திலிருக்கிறது. ஜமீன் தார் அங்ஙனமே என் தந்தையார் திருமணத்துக்குப் பொருளுதவி செய்தார்.

கிருஷ்ணையருக்குப் பிராயங்கள் ஆக ஆகத் தளர்ச்சிஉண்டா யிற்று. வறள்வாயுவென்னும் ஒருவகை நோயால் இவர் வருந்தினர்; ஆதலின் திருக்குன்றம்சென்று இருக்க விரும்பினர். கச்சிக்கல் யாணரங்கதுரை இவரைப் பிரியத் துணியவில்லை; ஆயினும் இவ ருடைய நிலையை அறிந்து ஒருவாறு அதற்கு உடன்பட்டார். இவர் தம் ஊர் சென்று இருக்கலானர். ஜமீன்தார் இவர் விடை பெற்றுக் கொள்கையில் தக்க பொருளுதவி செய்து அனுப்பிய தன்றி அவ்வப்போது வேண்டிய பொருள்களையும் விடுத்து வந்தார். தக்கவர்களை அடிக்கடி அனுப்பி இவருடைய நிலையைத் தெரிந்துவரச்செய்து அறிந்துகொள்வார்.

இவருடைய மிகத்தளர்ந்த நிலையை உணர்ந்த என் தந்தையார் அதிக வருத்தத்தை அடைந்தார்கள்; அதை யறிந்த கிருஷ்ணையர் அவர்களைத் தேற்றி, பைரவிராகத்தில்,

"கோடுத்துவைத்தது வரும் ஏறுசையால்மிகக்
துறைப்பட்டால் வருதமோ பேய் மனதே"

என்ற ஒரு கீர்த்தனையை இயற்றி அவர்கள்பால் அளித்தார்.

இறப்பதற்கு இரண்டு நாட்களுக்குமுன் தாம் சிதம்பரம் சென்று ஸ்ரீநடராஜமூர்த்தியைத் தரிசனம்செய்ததாக இவர் கனவு கண்டார். விழித்தவுடன் ஸ்ரீ ஆனந்த நடராஜ மூர்த்தியை நினைந்து மனமுருகி விபூதியைத் தரித்துக்கொண்டு பந்துவராளி ராகத்தில் ஒரு கீர்த்தனை இயற்றினர்; அதன் பல்லவி,

"தில்லையப்பா உனது பஞ்சாக்ஷரப்படியில்
சின்மயமாய்த் தினந்தினமும் வந்து தரிசிப்பேன்"

என்பது. இந்த ஸங்கீதசிகாமணி இவ்வுலகை நீத்தகாலத்தில் இவருக்கு அறுபது பிராயத்திற்குமேல் இருக்கும். அக்காலத்தில் என் தந்தையார் உடன் இருந்தனர்.

இவருடைய மாணாக்கர்கள் பலர். அவர்களுள் தஞ்சையிலிருந்த [1]ஆதிமூர்த்தி ஐயரை நான் பார்த்துப் பழகியிருக்கிறேன். திருக்குன்றத்திற் கணக்குப்பிள்ளையாக இருந்தவரும் தமிழிலும் ஸங்கீதத்திலும் ஞானமுள்ளவரும் கார்காத்த வேளாளருமாகிய அருணாசலம்பிள்ளையென்னும் ஒருவர் இவர் பாடுவதைக் கேட்டுக் கேட்டு அன்புற்று ஊக்கமூட்டி வருவாரென்று கேள்வியுண்டு.

இவர் இறந்தபின்பு இவருடைய சகோதரர்களாகிய சுப்பராமையரும் ஸுந்தர ஐயரும் மிகவும் வருத்தமுற்று உருகினார்கள். பாடும் பொழுதெல்லாம் இவருடைய நினைவு வந்து அவர்களைத் துன்புறுத்தும். என் தந்தையார் பாடுங் காலங்களில் ஸுந்தர ஐயர், "கிருஷ்ணனை நினைத்துக் கொண்டு பாடு; இன்னும் நன்றாக ஸங்கதிகள் வரும்" என்று கூறுவாராம். அவருக்கு இவரிடம் இருந்த பிரேமையும் மதிப்பும் இதனாலும் விளங்கும்.

கனம் கிருஷ்ணையருக்கு ஒருகுமாரியார் மட்டும் இருந்தனர்; அவருடைய பெயர் சங்கரியம்மாளென்பது.

என் தந்தையார் இவருடைய கீர்த்தனங்களை அடிக்கடி பாடிக்காட்டி மனமுருகி வருந்துவார்கள்; இவருடைய குணங்களையும் கீர்த்தனங்களைப் பாடும் முறைகளையும் சொல்லிச் சொல்லி, "இனி அவர்களைப்போல் யாரைப் பார்க்கப்போகிறோம்!" என்று இரங்குவார்கள். என் சிறிய தந்தையாரும் அங்ஙனமே இரங்குவார்.

கனம் கிருஷ்ணையர் வாழ்வு முழுவதும் ஸங்கீத ஸம்பந்தமான நிகழ்ச்சிகளே நிறைந்திருந்தன. இவருடைய மன உணர்ச்சிகளைப் புலப்படுத்தும் கருவியாக இவருடைய ஸாஹித்தியம் பயன்பட்டது. இவரால் தமிழ்நாட்டார் கனமார்க்கத்தின் இனிமையை உணர்ந்தனர்; கனமார்க்க ஸாஹித்தியங்களைப்பெற்றனர். ஸங்கீத வித்துவான்களின் கோஷ்டியில் இவர் ஒரு பிரிவுக்குத் தலைவராக விளங்கினார். இவருடைய கம்பீரமும் சாமர்த்தியமும் வசீகரசக்தியும் இவருடைய வரலாற்றால் விளங்குகின்றன. இந்த அரிய இயல்புகளை நினைந்து நினைந்து பாராட்டி மகிழ்வதையன்றி நம்மாற் செய்யக்கூடியது வேறு யாதுளது?

[குறிப்பு: என் தந்தையார்பால் அப்பொழுதப்பொழுது கேட்ட செய்திகளைக்கொண்டும், என் சிறியதந்தையார் எழுதி வைத்துள்ள கீர்த்தனங்கள் குறிப்புக்கள் ஆகியவற்றைக்கொண்டும், அவ்வப்போது பிறர்முகமாக அறிந்தவற்றைக்கொண்டும் இவ்வரலாறு ஒருவாறு தொடர்புபடுத்தி எழுதப்பட்டது.]

---

1. இவர் வரலாற்றைக் கலைமகள் ஆறுந்தொகுதி 97-101-ஆம் பக்கங்களிற் காணலாம்.

## கனம் கிருஷ்ணையர் இயற்றிய கீர்த்தன உருப்படிகளின் முதற்குறிப்பகராதி

| எண். | பல்லவியின் முதல். | | ராகம். | தாளம். | கீர்த்தனத்துக்குரிய தலைவர். |
|---|---|---|---|---|---|
| 1 | அவர்வருவாரோ நான் வரவோ | ... | முகாரி | ஆதி | கச்சிக்கல்யாணரங்கதுரை. |
| 2 | அன்னமே நான் என்னசெய்வேன் | ... | தோடி | ஆதி | கபிஸ்தலம் இராமபத்திரமூப்பனர். |
| 3 | ஆராவமுதரை அணைத்தணைத்து | ... | தன்யாசி | ஆதி | கும்பகோணம் ஸ்ரீ சார்ங்கபாணிப்பெருமாள். |
| 4 | ஆராவமுதரைப் பாராமே | ... | தன்யாசி | ஆதி | ஷை ஷை |
| 5 | ஆராவமுதரைப் போலெமக்கு | ... | கமாசு | ஆதி | ஷை ஷை |
| 6 | இந்திரவியைப்போலே | ... | அடாணா | ஆதி | கச்சிக்கல்யாணரங்கதுரை. |
| 7 | இன்னமனம் இரக்கம் வல்லையோ | ... | பைரவி | ஆதி | திருக்குன்றம் ஸௌந்தரராஜப்பெருமாள். |
| 8 | இனியென்ன செய்வேனடி | ... | வசந்தா | ஆதி | கச்சிக்கல்யாணரங்கதுரை. |
| 9 | ஈச்வரி ஜகதம்பா | .. | ஆனந்தபைரவி | ரூபகம் | கும்பகோணம் ஸ்ரீ மங்களாம்பிகை. |
| 10 | உன்பதமே ஸதாகதி | ... | தேசிகதோடி | ஆதி | திருக்குன்றம் ஸௌந்தரராஜப்பெருமாள். |
| 11 | எங்கள் ஜானகியை | ... | காம்போதி | ஆதி | கச்சிக்கல்யாணரங்கதுரை. |
| 12 | எத்தனைநாள் விரகமுடன் | ... | சுருட்டி | ஆதி | ஷை |
| 13 | *எல்லா அருமையையும் எல்லாப்பெருமையையும் | ... | தோடி | ஆதி | கபிஸ்தலம் இராமபத்திரமூப்பனர். |
| 14 | *என்னடா சொல்லடா | ... | அடாணா | ஆதி | ஷை |
| 15 | *என்னடி சொல்லடி ஏதடிசூதும்வாதும் | ... | பியாகடை | ஆதி | திருக்குன்றம் ஸௌந்தரராஜப் பெருமாள். |
| 16 | என்னத்திக்கிர்த | ... | கமாசு | ஆதி | ஷை |
| 17 | என்னமோவகையாய் | | கமாசு | ஆதி | இராஜமன்னர் கோயில் இராஜ கோபாலப் பெருமாள். |
| 18 | கச்சிக் கல்யாண ரங்கன் பக்ஷமே | ... | உசேனி | ஆதி | கச்சிக்கல்யாணரங்கதுரை. |

| எண். | பல்லவியின் முதல். | | ராகம். | தாளம். | கீர்த்தனத்துக்குரிய தலைவர். |
|---|---|---|---|---|---|
| 19 | *கச்சிரங்காராஜனடி (சிந்து) | ... | ஸஹாநா | | கச்சிரங்கர். |
| 20 | *கன்னலுஞ் செந்நெலும் (கலித்துறை) | ... | பைரவி | ஆதி | கச்சிக்கல்யாண ரங்கதுரை. |
| 21 | காமதேனுவைந் தருவென | ... | பியாகடை | ஆதி | ஷை |
| 22 | குஸுமகுந்தளாம்பிகையே | ... | பியாகடை | ஆதி | உடையார்பாளையம் குஸுமகுந்தளாம்பிகை |
| 23 | கொடுத்துவைத்தது வரும் | ... | பைரவி | ஆதி | |
| 24 | கொண்டைகுலுங்கவே | ... | காம்போதி | ஆதி | கச்சிக் கல்யாணரங்க துரை. |
| 25 | சக்ரபாணி சாமிகிட்டே | ... | அடாணா | ஆதி | கும்பகோணம் ஸ்ரீ சக்ரபாணிப் பெருமாள். |
| 26 | சக்ரபாணி சாமியைக்கண்டேன் | ... | தன்யாசி | ஆதி | ஷை |
| 27 | சும்மா சும்மா வருகுமா சுகம் | ... | அடாணா | ஆதி | திருக்குன்றம் ஸௌந்தரராஜப் பெருமாள். |
| 28 | செருக்கிமயக்கமீறி | ... | தர்பார் | ஆதி | ஷை |
| 29 | சைதன்ய விக்ரகமே | ... | தோடி | ரூபகம் | பரப்பிரஹ்மம். |
| 30 | சொர்க்கவாச லேகாதசியில் | ... | கமாசு | ஆதி | ஸ்ரீ ரங்கநாதர். |
| 31 | சொல்லடீ என்னடீ | ... | பரசு | ஆதி | கச்சிக்கல்யாணரங்கதுரை. |
| 32 | *டாப்பும் சிறப்பும் | ... | தர்பார் | | ஷை |
| 33 | தான்ருணயிருக்க | ... | கமாசு | ஆதி | அத்துவிதானந்தம். |
| 34 | திருக்கண்மாலீச்வரர்க்குகந்த | ... | தோடி | ஆதி | கிருஷ்ணராஜபுரம் ஸ்ரீ மதுகரவேணிஅம்மை. |
| 35 | திருவொற்றியூர்த் தியாகராஜர் | ... | அடாணா | | திருவொற்றியூர் ஸ்ரீ தியாகராஜசுவாமி. |
| 36 | தில்லைச்சிதம்பரச் சித்ஸபை | ... | பந்துவராளி | ஆதி | சிதம்பரம் ஸ்ரீ நடராஜமூர்த்தி. |
| 37 | தில்லையப்பாவுனது பஞ்சாக்ஷரப்படியில் | ... | பந்துவராளி | ஆதி | ஷை |
| 38 | தாராதரைகளுக்கு | ... | பந்துவராளி | ஆதி | கச்சிக்கல்யாணரங்கதுரை. |
| 39 | தேவரொயிலும் | ... | கமாசு | ஆதி | ஸ்ரீமுஷ்ணம் பூவராகப்பெருமாள். |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 40 | நல்ல நல்ல நிலவு பறிபோகுதே | ... | சங்கராபரணம் | ஆதி | திருக்குன்றம் ஸௌந்தரராஜப்பெருமாள். |
| 41 | *நாராயணமந்திரமே மந்த்ரம் | ... | அடாணா | | திருமால். |
| 42 | நாராயணாவென்று சொல்லுவாயே | ... | ஸௌராஷ்டிரம் | ஆதி | ஷை |
| 43 | *நிறைந்ததே எங்கும் | ... | | | கச்சிக்கல்யாண ரங்கதுரை. |
| 44 | நீயல்லாமல் | ... | தோடி | ஆதி | பெரிய மறை (ஒருஸ்தலம்) ஸ்ரீநிவாஸப் பெருமாள். |
| 45 | பகற்பத்துத் திருநாளில் | ... | தன்யாசி | ஆதி | கும்பகோணம் ஸ்ரீ சக்ரபாணிப் பெருமாள். |
| 46 | பகுள வனவாசரே | ... | அடாணா | திரிபுடை | உடையார்பாளையம் ஸ்ரீ முற்கபுரீசர். |
| 47 | பச்சிளந்தே மற்படர்ந்த | ... | தோடி | ஆதி | கச்சிரங்கதுரை. |
| 48 | படியளக்கும் பெருமானென்று | ... | பைரவி | ஆதி | திருக்குன்றம் ஸ்ரீ ஸௌந்தரராஜப் பெருமாள். |
| 49 | பணிவிடைக் காகவே | ... | அடாணா | ஆதி | கச்சிக்கல்யாண ரங்கதுரை. |
| 50 | பத்துப்பை முத்துப்பை | ... | சுருட்டி | ஆதி | ஷை |
| 51 | பரிமளநாதா | ... | தர்பார் | ஆதி | திருவழுந்தூர் (திருவிந்தளூர்)ப் பரிமளரங்கப்பெருமாள். |
| 52 | பார ஸகலமும் அபாரம் | ... | கல்யாணி | ஆதி | திருச்சேறை ஸாரநாதப்பெருமாள். |
| 53 | பாரெங்கும் பார்த்தாலும் | ... | கல்யாணி | ஆதி | கும்பகோணம் ஸ்ரீ சார்ங்கபாணிப்பெருமாள். |
| 54 | பூவராகரே | ... | அடாணா | ஆதி | ஸ்ரீ முஷ்ணம் பூவராகப்பெருமாள். |
| 55 | மகமேரு மகராஜனே | ... | அடாணா | ஆதி | கச்சிக்கல்யாணரங்கதுரை. |
| 56 | மதனனுக் கெழுதுவள் நிருபம் | ... | அடாணா | ஆதி | ஷை |
| 57 | *மருதப்பா | ... | ஆனந்த பைரவி | ரூபகம் | திருவிடைமருதூர் ஸ்ரீமகாலிங்கமூர்த்தி. |
| 58 | மன்னனார் வலைவீசி | ... | தோடி | ரூபகம் | இராஜமன்னார் கோயில் ஸ்ரீ இராஜகோபாலப்பெருமாள். |
| 59 | மன்னனா ரொயிலும் | ... | தன்யாசி | ஆதி | ஷை |
| 60 | மனமே எந்நாளும் | ... | தோடி | ஆதி | நெஞ்சறிவுறுத்தல். |
| 61 | மாதே அவர்செய்தவஞ்சனை | ... | பைரவி | ரூபகம் | கபிஸ்தலம் இராமபத்திரமூப்பனார். |
| 62 | முன்னழகும் பின்னழகும் | ... | பைரவி | ஆதி | திருச்சேறை ஸ்ரீஸாரநாதப்பெருமாள். |
| 63 | மெய்யனேயுனை வேண்டியே | ... | கல்யாணி | ஆதி | கச்சிக்கல்யாணரங்கதுரை. |

| எண். | பல்லவியின் முதல். | | ராகம். | தாளம். | கீர்த்தனத்துக்குரிய தலைவர். |
|---|---|---|---|---|---|
| 64 | ரங்கமய மான எங்கள். | ... | காம்போதி | ஆதி | ஸ்ரீரங்கநாதர். |
| 65 | ராமா வுன்மகிமை | ... | சுத்ததோடி | ஆதி | இராமபிரான். |
| 66 | லக்ஷ்மி ஸமேத | ... | சங்கராபரணம் | ஆதி | திருமால். |
| 67 | வல்லமையுன் வல்லமையே | ... | கல்யாணி | ஆதி | உடையாளூர் செல்லமாகாளியம்மை. |
| 68 | *வன்ய குலோத்தமன் (கலித்துறை) | ... | பைரவி | ஆதி | கச்சிக்கல்யாணரங்கர். |
| 69 | *வஸ்து இவனைப்போலே | ... | பிருந்தாவன ஸாரங்கா | ஆதி | ஷை |
| 70 | வாராரோவந்து முத்தந்தாராரோ | ... | தோடி | ஆதி | ஷை |
| 71 | வேலவ ரேயுமைத் தேடி | ... | பைரவி | ஆதி | முருகக்கடவுள். |
| 72 | வேலவனே தெய்வம் உனைப் போல | ... | பியாகடை | ஆதி | பழனி முருகக்கடவுள். |
| 73 | ஜகஜனனீ சுகபாணி | ... | பைரவி | ஆதி | மதுரை ஸ்ரீ மீனாட்சியம்மை. |
| 74 | *ஷண்மத ஸ்தாபனஞ் செய்தார் | ... | பியாகடை | ஆதி | கும்பகோணம் ஸ்ரீ சங்கராசார்யர். |
| 75 | *ஸௌந்தர ராஜப்பெருமாளேயுன் | ... | தன்யாசி | ஆதி | திருக்குன்றம் ஸ்ரீ ஸௌந்தரராஜப்பெருமாள். |

கனம் கிருஷ்ணையர் இயற்றிய கீர்த்தனங்கள் நூற்றுக்கணக்கானவை. என்பால் சிதிலமாயுள்ள பிரதிகளில் உள்ளனவும் பலசமயங்களில் பலர்முகமாக அறிந்தனவுமாகக் கிடைத்தவற்றைத் தொகுத்து வைத்துள்ளேன். அவற்றின் முதற்குறிப்புக்கள் மட்டும் இங்கே கொடுக்கப்பெற்றுள்ளன.

இந்த ஸங்கீத சிரோமணியின் வரலாற்றை இந்த அளவிலேனும் எழுத நேர்ந்த எனது நல்லூழைப் பாராட்டுகிறேன்.

* இக்குறியிட்டவற்றின் முழுப்பகுதியும் கிடைக்கவில்லை.




# சில தமிழ்நூல்களின் காலக்குறிப்புக்கள்

எஸ். அனவரதவிநாயகம் பிள்ளை, எம்.ஏ., எல்.டி.

---

[302-ஆம் பக்கத்தொடர்ச்சி]

## 12. சங்கற்ப நிராகரணம்

மெய்கண்ட சாத்திரங்களுள் ஒன்றும் உமாபதிசிவாசாரியர் என்னும் பெரியாரால் இயற்றப்பட்டதுமாகிய சங்கற்பநிராகரணத்தில் நூல்வரலாறு உரைப்பதாகிய பாயிரத்திலே,

ஏழஞ் சிருநூ றெடுத்த வாயிரம்
வாழுநற் சகன மருவா நிற்பப்
பொற்பொது மலிந்த அற்புத ஞானி
யாறும் விழவில்

என்னும் அடிகளால் சாலிவாகனசகம் 1235 [கி. பி. 1312] சுட்டப்பட்டது. ஆசிரியர் ஆனித்திருவிழா ஆறும் நாளில் சமயவாதிகளுள் வாதம் நிகழ்ந்ததென்று சொல்லியதால் அப்பொழுதே நூலும் செய்யப்பட்டதென்று கொள்வதற் கிடமில்லை. வாதங்களனைத்தையும் மனத்தில் வைத்து நூல் செய்ததாகச் சொல்வதால் அஃது அவ்வாண்டிலேயே செய்திருக்கலாம்; அடுத்த ஆண்டிலோ அதற்குப் பின்னே செய்துமிருக்கலாம்.

இலக்கிய இலக்கணங்களிலும் மெய்கண்ட சாத்திரங்களிலும் நல்ல பயிற்சியுடைய மருதநாயகம்பிள்ளை முதன்முதலாக மெய்கண்ட சாத்திரங்களைப் பதிப்பித்ததாக ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரம் [முதற்பாகம், பக்கம் கஅ] கூறும். கி. பி. 1899-ல் சைவசித்தாந்த சாத்திரம் என்னும் பெயரோடு திருவுந்தியார் முதலிய சாத்திரம் பதினான்கின் மூலம் ஆ. சிங்காரவேலு முதலியாரால் வெளியிடப்பட்டது. இதற்கு முன்னமே திருவுந்தியார் உரை [1882], திருக்களிற்றுப்படியார் உரை [1875], சிவஞானபோதம் பாண்டிப்பெருமாள் விருத்தி [1887], சிவஞான சித்தியார் பரபக்ஷம் திருவொற்றியூர்த் தத்துவப்பிரகாசர் உரை

[1876], சுவபக்ஷம் மறைஞானதேசிகர், சிவாக்கிரயோகிகள், ஞானப்பிரகாசமுனிவர், நிரம்பவழகியதேசிகர், சிவஞானமுனிவர், சுப்பிரமணியதேசிகர் என்னும் அறுவருரை [1888-89], சிவப்பிரகாசம் மதுரைச் சிவப்பிரகாசர் உரை [1872], சிவப்பிரகாசம் முதலிய எட்டு நூல்களும் மதுரைச் சிவப்பிரகாசர் முதலியோருடைய உரையோடும் [1895] கொ. ஷண்முகசுந்தர முதலியாரால் சிவஞானபோத யந்திரசாலையில் பதிப்பித்து வெளியிடப்பட்டிருந்தன. பதினன்கு சாத்திரங்களையும் ஒவ்வொன்றற்கு ஒவ்வோருரையோடு மெய்கண்டசாத்திரம் மூலமும் உரையும் எனக் கி. பி. 1897-ல் காஞ்சி நாகலிங்க முதலியார் பதிப்பித்தனர்.

அவர் சங்கற்பநிராகரண காலம் சாலிவாகனசகம் 1235 என அந்நூற் பாயிரமே யுரைப்பதை ஆதாரமாகக் கொண்டு மற்றச் சாத்திரங்களின் காலத்தையும் தம் முகவுரையில் வரையறுத்துரைத்தார்.

| | | |
|---|---|---|
| உண்மைவிளக்கம் | .. | 1234 |
| நெஞ்சு விடு தூது | .. | 1233 |
| கொடிக்கவி | .. | 1232 |
| போற்றிப்பஃறொடை | .. | 1231 |
| வினவெண்பா | .. | 1230 |
| திருவருட்பயன் | .. | 1229 |
| சிவப்பிரகாசம் | .. | 1228 |

உமாபதி சிவாசாரியர் ஆண்டுக்கொருநூல் இயற்றினரென்பதற்கு ஆதாரம் என்னவோ?

மனவாசகங்கடந்தார் உண்மைவிளக்கத்தைச் சாலிவாகன சகம் 1177-ல் இயற்றினராம். அவர் மெய்கண்டதேவர் சீடர்களுள் ஒருவரன்றோ? அருணந்திதேவர் சிவஞானசித்தியாரைச் சாலிவாகன சகம் 1175-லும் இருபாவிருபதை 1176-லும் இயற்றினராம். சிவஞானசித்தியார்க்குப் பின்தான் உண்மைவிளக்கம் இயற்றப்பட்டதென்பதற்கு ஆதாரம் காணோம்.

1228-க்கும் 1177-க்கும் இடையில் 50 ஆண்டுகள் விட்டதற்கு நியாயம் அருணந்திதேவர் சீடராகிய மறைஞானசம்பந்த சிவாசாரியரிடத்து உமாபதியார் உபதேசம் பெற்றமைபோலும்!

சிவஞானபோதம் சகம் 1145-ல் இயற்றப்பட்டதாம். வரலாற்றில் அருணந்தியார் மெய்கண்டதேவர்க்குக் குலகுருவென்றுரைக்கப்பட்டது. ஆண்டினும் அருணந்தியார் முதியராயிருத்தல்வேண்டும். மெய்கண்டார் பிதாவுக்குப் பிள்ளை பிறக்கு முன்னே ஏட்டில் கயிறுசார்த்திப் பார்த்தவர் அவரல்லரோ!

ஆதலால் சிவஞானபோதம் செய்து 30 ஆண்டுகள் கழிந்து சிவஞான சித்தியார் தோன்றிற்று என்பது பொருந்துமா? செந்தமிழ் மூன்றாந் தொகுதி பக்கம் 189, 190-ல் து. அ. கோபிநாதராயர் மெய்கண்ட தேவர் காலம் கி. பி. 1232-ஆயிருக்கலாமென்று சாஸன ஆதாரங் கொண் டுரைத்தனர். திருவண்ணாமலையிற் கண்ட அச்சாஸனத்தில் 'திருவெண்ணெய்நல்லூருடையான் மெய்கண்ட தேவன் ஊரு டையபெருமாளாகிய எடுத்தது வலியவேளர்' என்போனொருவன் திருவண்ணாமலையில் எழுந்தருளுவித்த ஒரு விக்கிரகத்திற்குச் சில தானங்கள் செய்தானும். இச் சாஸனத்திற் கண்டவன் முதற் சந்தான குரவராகத்தான் இருக்கவேண்டு மென்பதற்கு இராயர் கூறும் நியாயங்கள் முழுதும் பொருந்துமோ என்பது சந்தேகம். மெய்கண்டதேவரிடத்து அதிக கௌரவம் வைத்த அவ்வூரானொரு வன் அவர்காலத்திலேயே தானங்கள் செய்திருக்கலாம். எடுத்தது வலியவேளர் என்ற பன்மையையும் மெய்கண்டதேவன் என்னும் ஒருமையையும் நோக்குக. அவன் திருவெண்ணெய்நல்லூரிற் பெரிய குடித்தனக்காரனா யிருந்திருத்தல் கூடும். தானஞ்செய்தோன் யாவனாயினும் மெய்கண்டதேவர் காலம் கி. பி. 1232-ஐ அடுத் திருக்கலாம்.

திருவுந்தியார் இயற்றிய காலம் சகம் 1070 என்றும், 30 ஆண்டு கள் கழிந்தபின் திருக்களிற்றுப்படியார் சகம் 1100-ல் இயற்றப் பட்டதென்றும் முதலியார் கூறினர். சிவஞானபோதத்திற்கும் திருக்களிற்றுப்படியார்க்கு மிடையில் 45 ஆண்டுகள் கழிந்தன வென்பதற்கு என்ன ஆதாரமோ?

உந்தி களிறு வுயர்போதஞ் சித்தியார்
பிந்திருபா வுண்மை பிரகாசம்—வந்தவருட்
பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
வுண்மைநெறி சங்கற்ப மூற்று

என்று மெய்கண்ட சாத்திரங்களின் பெயரை யுரைத்த வெண்பா கூறிய முறையையே ஆதாரமாகக் கொண்டு முதலியார் அவற்றின் காலத்தையும் வரையறுத்தார்போலும்! மெய்கண்டசாத்திரங்களின் மூல மெழுதப்பட்ட தென்னாட்டுப்பிரதிகளில் உண்மைவிளக்கம் காணப்படுவதில்லை. அதன் இடத்தில் துகளறுபோதம் காணப் படுகிறது. உண்மைவிளக்கம் செய்தார் சீகாழிச்சிற்றம்பல நாடிகளின் திருவருள்பெற்ற சீகாழித் தத்துவநாதரென்று ஆராய்ச்சியில் ஏற்படுகிறது. தென்னாட்டுப் பிரதியொன்றில் 'மெய்கண்டசாத்திரம் பதினான்கும் திருவுளம்பற்றி யருளிய வரன்முறை:—

மெய்கண்டசுவாமியள் திருவுளம்பற்றியருளியது—
சிவஞானபோதம் .. க
அருணந்திசிவாசாரியார் திருவுளம்பற்றியது—
சிவஞானசித்தியார் க
இருபாவிருபது க ஆக உ
உமாபதி சிவாசாரியார் திருவுளம்பற்றியது:—
சிவப்பிரகாசம்—திருவருட்பயன்—போற்றிப் பஃறொடை—நெஞ்சுவிடுதூது—சங்கற்ப நிராகரணம்—வினாவெண்பா—கொடிக்கவி
ஆக கொற்றவன்குடி சுவாமியள் .. எ
உண்மைநாயனார்—உண்மைவிளக்கம் .. க
உய்யக்கொண்ட சுவாமியள்—திருவுந்தியார் .. க
ஆளுடையநாயனார்—திருக்களிற்றுப்படியார் .. க
சிற்றம்பலநாடி சுவாமியள்—துகளறுபோதம் .. க

ஆக சாத்திரம் பதினான்கும்' என்னும் குறிப்புக் காணப்படுகிறது. இதனால் திருவுந்தியாரை முதலாக வைத்துக் கூறும் முறையே முறையென்று சொல்வதற்கில்லையென்பது தெளிவாம். இரண்டு பிரதிகளில் துகளறுபோதம் பதினான்காவது சாத்திரமாக எழுதப்பட்டுள்ளது.

இன்னும் ஒரு பிரதியில் பண்டாரசாஸ்திரம் 14 என்னும் தலைப்போடு சிவஞானபோத முதலிய 14 சாஸ்திரங்கள் எழுதப்பட்டுள்ளன. இறுதியில்

'பண்டாரசாஸ்திர அட்டவணை
சிவக்கியானபோதம் .. க
உண்மைநெறிவிளக்கம் .. க
சிவப்பிரகாசம் .. க
திருவருட்பயன் .. க
சிவக்கியானசித்தியார் .. க
இருபாஇருபது .. க
நெஞ்சுவிடுதூது .. க
போற்றிப்பஃறொடை .. க
கொடி .. க
வினாவெண்பா .. க
திருக்களிற்றுப்படியார் .. க
சிவானந்தபோதம் .. க
திருவுந்தியார் .. க
சங்கற்பநிராகரணம் .. க
ஆக. சாஸ்திரம் .. யச'

என்றெழுதப்பட் டுள்ளது. பண்டாரசாஸ்திரங்கள் இவற்றின் வேறாகிய அம்பலவாணதேசிகர் இயற்றிய தசகாரியம் முதற் பதினான்கென்பது பிரசித்தம்.

## 13. சிதம்பர புராணம்

சிதம்பரத்தலத்தின் மான்மிய முரைக்கும் இந்நூல் முதன் முதலாக இராக்ஷஸ ஹூ ஆவணி மீ [கி. பி. 1855]-ல் அச்சிடப் பட்டது. இப்பதிப்பில் இயற்றியார் பெயர் குறிக்கப்படவில்லை. ஆயினும் அவ்வாசிரியர் மெய்கண்ட சந்தான பரம்பரையினருக்குச் சீடரென்பது,

முற்றுமுணா மெய்கண்ட சந்ததிக்கோர் தீபமென
    முதன்மை கொண்ட
கொற்றவன்றன் குடிமருவு குலவுமுமா பதிசிவன்பொற்
    கோயி லுண்மை
சொற்றபுரா ணமுமிருக்கப் பின்னுமொரு வகையானுஞ்
    சொல்வான் புக்கேன்
மற்றவன்றன் றிருவடியின் வழிவந்தோர்க் கடியனெனும்
    வழக்கான் மன்னோ

என்று அவரே கூறுவதால் அறியக்கிடக்கும்.

நூலியற்றிய காலம்:

சூழு மாகடற் புடவியான் சுடர்முடிச் சகற்கீ
ரேழு நூறுடன் முப்பஃ தியைந்தவாண் டெல்லைத்
தாழு மாமதிச் சடைமுடித் தனிமுத லென்றும்
வாழு மம்பலப் பெருமையை வழுத்தலுற் றனன்யான்

என்னுஞ் செய்யுளால் சகம் 1430 என ஆசிரியராலேயே சுட்டப் பட்டது. சகம் 1430 பிரபவ ஆண்டாகும். அது கி. பி. 1507 ஏப்ரில் மீ முதல் 1508 ஏப்ரில் வரையுள்ள ஆண்டு.

இப் புராணம் பிரமாதி ஹூ ஆடி மீ [கி. பி. 1879] துறைமங் கலம் சிவப்பிரகாச ஐயர் செய்த பொழிப்புரையோடு வெளி வந்தது. திருவிடைமருதூர்ச் சிவபாதம்பிள்ளையவர்கள் வேண்டு கோளின்படி ம-ா-ா-ஸ்ரீ மருத்துக்குடி இரத்தினசேகரம் பிள்ளை யவர்கள் முன்னிலையில் கோகுலாபுரம் மலையானந்தசுவாமி களின் மாணாக்கரு ளொருவரும் வேங்கடராம முதலியார் குமாரருமாகிய அருணாசல முதலியாரால் பார்வையிடப்பட்டுக் கொன்னூர் -மாணிக்க முதலியார் கம்பெனியாரவர்களது மனோன்மணி விலாச அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது. இப்பதிப்பில் மூலஞ்செய்தார் சைவ பரஞ்சோதிமாமுனிவர் என்று

முகப்பிற் பொறிக்கப்பட்டுளது. அதற்கு ஆதாரமாகத் தற்றெரிசனச் சருக்கத்தில் இறுதிச்செய்யுளுக்கு முந்தின செய்யுளாக,

அருமறையின் சிரத்தொளியா யானந்த நாட்டியஞ்செ
யமரர்க் கன்பாய்த்
திருவருள்பெற் றுயர்சைவ புராணத்திற் சிதம்பரத்தின்
றிகழு மேன்மைப்
பொருடெரியத் தமிழ்விருத்த யாப்பதனு னவாசங்கள்
பொலிய மன்னுந்
திருமலைநா தன்புதல்வன் பரஞ்சோதி மாமுநிவன்
செப்பி னானே

என வரும் விருத்தம் திருமலைநாதர் மகனாராகிய பரஞ்சோதிமுனிவர் இப் புராணத்தை இயற்றினாரெனத் தெளிவாகக் கூறுகின்றது. தஞ்சைச் சரபோஜிமகாராஜா ஸரஸ்வதிமால் லைபிரேரி தமிழ்காட்லாக்கில் (Vol. I. P. 394] சிதம்பரபுராணத்தை இயற்றியவர் பரஞ்சோதிமுனிவர் என்றும், இவர் திருவிளையாடற்புராணம் இயற்றிய பரஞ்சோதிமுனிவரினும் வேறானவரென்றும் எழுதப்பட்டுளது. இப் பதிப்பின் பின் 1905-ல் விசுவாவசு ஹு மார்கழி மீ ஆறுமுக நாவலர் மாணாக்கருள் ஒருவராகிய சிதம்பரம் உபாத்தியாயர் பே. இராமலிங்கம்பிள்ளை செய்த புத்துரையுடன் ஒரு பதிப்பு வெளிவந்தது. அதில் ஆசிரியர் பெயர் குறிக்கப்படவில்லை. முகப்பில் உமாபதியார் மாணாக்கர் பரம்பரையிலுள்ள ஒருவர் என்று மாத்திரம் குறிக்கப்பட்டது.

இனி, சேந்தமிழ்ப் பிரசுரங்களி லொன்றாகிய சிதம்பரப் பாட்டியலிற் காணப்படும் பாயிரச்செய்யுள்களுள் இரண்டு இச் சிதம்பர புராணத்தைப்பற்றிப் பிரஸ்தாபிப்பன.

பூமன்னு பொழில்வெண்ணை மெய்கண்டான் கச்சிப்
புகழ்புனைதத் துவஞான ப்ரகாசமாய் வந்து
பாமன்ன வுரையென்ன வவனருளா லவன்றன்
பதம்பரவிச் சிதம்பரப்பாட் டியலெனப்பேர் வகுத்தான்
மாமன்னு சிதம்பரபு ராணமுத னூலு
மதுரையுலா வும்பகர்ந்தோன் மருவுகுல மைந்தன்
தேமன்னு புராணகலை பலதெரிபு ராணத்
திருமலைநா யகனருளின் றேசுபூண் டோனே.

சிதம்பரப் பாட்டியலைச் செய்தான் றமிழாற்
சிதம்பர புராணமுதற் செய்து—விதம்பெறுசீர்
சேர்ந்த புராணத் திருமலைநா தன்றவத்தாற்
சார்ந்தபரஞ் சோதியென்பான் றான்.

இச்செய்யுள்களை ஆதாரமாகக் கொண்டு திருமலைநாதர் சிதம்பரபுராணமும் மதுரைச்சோக்கநாதருலாவும் இயற்றினரென்றுரைத்தனர் மஹாமஹோபாத்தியாய டாக்டர் சாமிநாதையரவர்கள். இன்னும் 'இவர் காஞ்சிபுரம் ஞானப்பிரகாசமடத்துச் சிஷ்ய பரம்பரையைச் சார்ந்தவர் . . . . இவருக்குப் பரஞ்சோதி யென்ற பெயருள்ள குமாரர் ஒருவர் இருந்தார். அவர் இவரிடத்தே தமிழ்க் கல்வி கற்றவர்; இலக்கண இலக்கியங்களில் நல்ல பயிற்சியுள்ளவர்; சிதம்பரத்தில் தந்தையாரைப்போலவே விசேடப்பற்றுடையவராக இருந்தார். பொருத்த இலக்கணமும் பிரபந்த இலக்கணமும் அமைந்த சிதம்பரப் பாட்டியலென்னும் நூலொன்று அவராற் செய்யப்பெற்றது' என்றும் உரைத்தனர்.

மதுரைச்சோக்கநாதருலா இயற்றிய புராணத்திருமலைநாதரே சிதம்பரபுராணத்தையும் இயற்றினரென்பது உறுதிப்படுமாயின், யான் முன் குறித்த 'அருமறை' யென்னுஞ் செய்யுள் இடைச்செருகலா யிருக்கவேண்டும். அதனைச் செருகினதன் நோக்கம் புலப்படவில்லை.

மற்று, மதுரைச்சோக்கநாதருலாவின் காலத்தை ஆராய வந்த ஐயரவர்கள் சிதம்பரபுராணத்தின் காலம் சகம் 1430 என்றும், அவ்வுலா மல்லைய சின்னப்பநாயக்கர் திருப்பணிகள் செய்வித்த காலமாகிய சகம் 1448 (கி. பி. 1526)க்குப் பின்னர் இயற்றப்பெற்றதென்றும் கூறினர். ஆகவே சிதம்பரபுராணம் இயற்றியதற்கும் உலா இயற்றியதற்கும் இடையில் பதினெட்டு ஆண்டுகளாதல் கழிந்திருக்கவேண்டும்.

---

## நிலக்கரியால் ஓடும் மோட்டார்

இத்தாலியில் ஒருவர் நிலக்கரியால் ஓடும் இயந்திரத்தை ஒரு மோட்டாருக்கு இணைத்து ரோம் நகரில் அவ்வண்டியைச் செலுத்திக் காட்டினர். இம்முறையில் தயாரிக்கப்பட்ட மோடார்கள் பெற்ரோலியத்தால் ஓடும் மோட்டார்களைவிட மிகக்குறைந்த செலவில் ஓடுவனவாம். இத்தாலியார் இனி இவ்விதமோட்டார்களையே உபயோகிப்பார்கள் என்று தெரிகிறது. டிராம் வண்டிகளின் ஸ்தானத்தையும் இவைகளே கொள்ளக்கூடுமாம்.

இந்தியன் ரிவ்யூ.




## சில வானசாஸ்திர நூல்கள்

பே. நா. அப்புஸ்வாமி ஐயர், பி.ஏ., பி.எல்.

---

**வா**னசாஸ்திர விஷயங்களைப்பற்றி வடமொழியிலே சில பழைய நூல்கள் இருக்கின்றன. அவற்றைச் சித்தாந்தங்கள் என்று சொல்லுகிறார்கள். ஐந்து சித்தாந்தங்கள் இருந்தனவென்று தெரிகிறது. அவை சூரியசித்தாந்தம், பைதாமஹசித்தாந்தம், வாஸிஷ்டசித்தாந்தம், பௌலிச சித்தாந்தம், ரோமக சித்தாந்தம் என்பனவாம். இவற்றுள் சூரியசித்தாந்தந்தான் கிட்டத்தட்ட அதன் பழைய வடிவத்திலேயே நமக்குக் கிடைத்திருக்கிறது.

சூரியசித்தாந்தம் சூரியபகவானால் செய்யப்பட்டதென்றும், பைதாமஹசித்தாந்தம் பிரமதேவனால் செய்யப்பட்டதென்றும், இவை அனாதி என்றும், மற்றச்சித்தாந்தங்கள் வஸிஷ்டர், புலிசர், முதலிய ரிஷிகளால் செய்யப்பட்டவை என்றும் சொல்லிக்கொள்ளுகிறார்கள்.

### சூரிய சித்தாந்தம்

சூரியசித்தாந்தத்தைச் சூரியபகவான் ரோமகத்திலே இயற்றினார் என்று அந்நூலின் முன்னுரையாக உள்ள சுலோகங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ரோமகம் என்பது ரோமாபுரியோ அல்லது அலெக்ஜாந்திரியாவோ அல்லது வேறு எந்த ஊரோ தெரியவில்லை. அந்நூல் பதினான்கு அதிகாரங்களாக வகுக்கப்பட்டிருக்கிறது. நூல் முழுதும் சுலோகமாகவே உள்ளது.

ஆல்-பெருனி என்னும் பாரஸீக வானசாஸ்திரி, கி. பி. பத்தாம் நூற்றாண்டின் இறுதியிலும் பதினோராம் நூற்றாண்டின் தொடக்கத்திலும், நம்முடைய நாட்டில் வாழ்ந்தவர். அந்த நூலை

---

ஸார்டன் ।என்பவர் எழுதிய 'விஞ்ஞானசாஸ்திர வரலாறு' என்னும் புத்தகத்திலிருந்து தொகுத்து எழுதியது.

லாடர் என்ற ஒருவர் இயற்றினர் என்று அவர் சொல்லியிருக்கிறார். இது தப்பு. லாடர் என்பவர் அந்த நூலுக்கு உரை எழுதிய உரையாசிரியரே தவிர அதன் நூலாசிரியர் அல்ல. பௌலிச சித்தாந்தத்துக்கும் ரோமக சித்தாந்தத்துக்கும் லாடர் உரைகள் எழுதியிருக்கிறார் என்று வராஹமிஹிரரும் சொல்லியிருக்கிறார்.

சூரியசித்தாந்தமானது பெரும்பாலும் கிரேக்க வானசாஸ்திரக் கொள்கைகளைத் தழுவியே எழுதப்பட்டிருக்கிறது என்று மேல்நாட்டார் சொல்லுகிறார்கள். ஆயினும் கூடியவரையில்—அதாவது அசம்பந்தமாக இல்லாத இடங்களிலெல்லாம்—பழைய ஹிந்து வானசாஸ்திரக் கொள்கைகளையும் விஷயங்களையும் சேர்த்தே அது எழுதப்பட்டிருக்கிறது என்று ஒப்புக்கொள்ளுகிறார்கள். உதாரணமாக கிரக - நக்ஷத்திரச் சேர்க்கைகளையும், யுகம் (43,20,000 வருஷம் கொண்டது) கல்பம் (1000 யுகங்கள் கொண்டது) முதலிய பெருந்தொகை விஷயங்களையும், வடதுருவத்தில் உள்ள மகாமேரு பர்வதத்தையும் இன்னும் இவைபோன்ற சிற்சில விஷயங்களையும் இதில் விரிவாகக் காணலாம்.

## பௌலிச சித்தாந்தம்

இந்த நூல் அகப்படவில்லை. வராஹமிஹிரர் இந்த நூலைப் பற்றிக் கூறுகிறார். அவருடைய நூலுக்கு உரை எழுதிய பட்டோத்பலர் என்னும் உரையாசிரியரும் இதைப்பற்றிக் கூறியிருக்கிறார். ஆல்-பெரூனி இந்த நூலிலிருந்து சில சுலோகங்களை மேற்கோளாக எடுத்துக்காட்டுகிறார். அவர் இதைப் புலிசன் என்று சொல்லுகிறார். ஸைந்திரா என்னும் ஊரிலே வாழ்ந்துவந்த கிரேக்கன் ஒருவருடைய பெயரே இது என்றும் சொல்லுகிறார். அலெக்ஜாந்திரியாவிலே பவுல் என்ற ஒரு நிபுணர் கி. பி. நான்காம் நூற்றாண்டின் பிற்பகுதியிலே வாழ்ந்துவந்தார். புலிசர் என்பவரும் பவுல் என்பவரும் ஒருவர், ஸைந்திராவும் அலெக்ஸாந்திரியாவும் ஒருவர் என்று சிலர் துணிவாகச் சொல்லுகிறார்கள். இவற்றுக்குப் போதிய ஆதாரம் இன்னும் கிடைக்கவில்லை.

## ரோமக சித்தாந்தம்

முன்னிரண்டு நூல்களைக் காட்டிலும் இதிலே கிரேக்க சம்பந்தம் மிகுந்த அளவிலே காணக்கிடக்கிறது. இதற்கும் சூரிய சித்தாந்தத்துக்கும் பல பேதங்கள் இருக்கின்றன. நம்முடைய தேசத்திலே இல்லாத ஒரு புது யுக அளவையை இந்த நூலில் காணலாம். இதன் ஆசிரியர் 2850 வருஷங்கள்கொண்ட ஒரு

யுகத்தைப்பற்றிப் பேசுகிறார். இதன் பெயரைப் பார்த்தாலே இது அந்நியநாட்டுத் தொடர்புடையது என்று தோன்றும்படியா யிருக்கிறது.

பைதாமஹ சித்தாந்தத்தைக் காட்டிலும் வாஸிஷ்ட சித்தாந்தம் சிறந்ததாகத் தோன்றுகிறது. இவை இன்னகாலங்களில் உண்டாயின என்று ஆராய முயன்ற மேல்நாட்டு நிபுணர்கள் இவை மிகமிகப் பழமையானவை என்பதை ஒப்புக்கொள்ள வில்லை. அவர்கள் சொல்லுவதாவது:

'இவற்றின் காலங்களைப் பற்றி, இவை இன்ன வருஷம் இன்ன மாதம் இன்னதேதியில் இயற்றப்பட்டன என்று சொல்ல முடிய வில்லை. இவற்றை ஒன்றோடொன்று ஒப்பிட்டுப் பார்க்கும்போது இவைகளுக்குள்ளே சிற்சில பேதங்கள் காணப்படுகின்றன. அவற்றைக்கொண்டு இவை யாவும் ஒரே காலத்தில் செய்யப்பட்டவை அல்ல, பல வெவ்வேறு காலங்களில் இயற்றப்பட்டவை என்பது தெரியவருகிறது. கிரேக்கநாட்டு அறிவு விஷயங்களும் ஆராய்ச்சி விஷயங்களும் இவற்றுள் காணக்கிடக்கின்றன. ஆனால் சிற்சில நூல்களில் இவை அதிகப்படியாயும் வேறு சிலவற்றில் மிகக் குறைந்த அளவிலும் காணப்படுகின்றன. உதாரணமாகப் பைதாமஹ சித்தாந்தத்திலே கிரேக்கநாட்டுத் தொடர்பு மிகக் குறைந்த அளவிலும், ரோமக சித்தாந்தத்திலே அத்தொடர்பு மிகவும் அதிகமான அளவிலும் இருப்பதாகக் காணப்படுகின்றன. இந்தியாவுக்கு இந்தக் கிரேக்க சம்பந்தம் எப்படி எப்பொழுது ஏற்படத் தொடங்கியது, ஏற்பட்டுவந்தது என்பதைப்பற்றி நாம் நிச்சயமாகக் கூற முடியவில்லை. இது டாலெமி காலத்துக்குப் பின்பு--அதாவது கி. பி. இரண்டாவது நூற்றாண்டுக்குப் பின்பு—ஏற்பட்டிருக்கலாம் என்று தோன்றுகிறது. அதற்கு முன்பு இந்தத்தொடர்பு அதிகம் இருந்ததாகத் தெரியவில்லை. வராஹமிஹிரர் பஞ்சசித்தாந்திகை என்னும் நூலை இயற்றிய காலத்தில், அதாவது கி. பி. 505-ம் வருஷத்தில் இவை பிரசித்த மானநூல்களாக இருந்தன என்பது நிச்சயம். ஆதலால் இவை கி. பி. ஐந்தாவது நூற்றாண்டின் முற்பகுதியில்—அதாவது கி. பி. 401 முதல் 450 முடிய உள்ள காலத்தில்—இயற்றப்பட்டிருக்க லாம் என்று தோன்றுகிறது.'

## ஆரியபட்டீயம்

ஐந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலே, கி. பி. 476-ம் வருஷத்திலே, பாடலிபுரத்துக்கு அருகிலுள்ள குசுமாபுரம்

என்னும் ஊரிலே ஒரு வானசாஸ்திரி பிறந்தார். இவர் பெயர் ஆரியபட்டர். கணிதசாஸ்திரத்திலும் வானசாஸ்திரத்திலும் இவர் மிக்க திறமையை உடையவராக இருந்தார்.

கலியுகம் தோன்றிய 3600-ம் வருஷத்திலே அதாவது கி. பி. 499-ம் வருஷத்திலே இவருடைய இருபத்து மூன்றாவது வயதிலே இவர் ஒரு வானசாஸ்திர நூலை இயற்றினார். அதற்கு **ஆரியபட்டீயம்** என்று பெயர். இதற்கு **லகுஆரியபட்டீயம்** என்னும் ஒரு பெயரும் உண்டு. மேற்கூறிய சித்தாந்தங்களில் காணப்படும் விஷயங்களில் பெரும்பாலான விஷயங்களை இதிற் காணலாம். அவற்றைத் தொகுத்தும் சுருக்கியும் விரித்தும் ஒழுங்குபடுத்தியும் எழுதிய நூல் என்று இதைச் சொல்லலாம். அவற்றில் காணப்படாத வேறு விஷயங்களும் இதில் சொல்லப்பட்டிருக்கின்றன.

இது சுலோகங்களால் அமைந்தது. நான்கு பாகங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. முதற்பாகத்துக்குத் **தசகீதிகாசூத்திரம்** என்று பெயர். இரண்டாம் பாதத்துக்குக் **கணிதபாதம்** என்று பெயர். மூன்றாம் பாதத்துக்குக் **காலக்ரியாபாதம்** என்று பெயர். நான்காம் பாதத்துக்கு **கோளபாதம்** என்று பெயர். பின் மூன்று பாகங்களையும் சேர்த்து **ஆர்யாஷ்டசதம்** என்றும் சொல்லுவதுண்டு.

அநேகம் ஆச்சரியமான விஷயங்களை இந்த நூலில் காணலாம். உதாரணமாக ஒரு வட்டத்தின் குறுக்களவு தெரிந்தால் அதிலிருந்து அதன் சுற்றளவைக் கண்டுபிடிப்பதற்கு ஒரு வாய்பாடு இருக்கிறது.

$$\text{சுற்றளவு} = \text{குறுக்களவு} \times \pi \text{ (பை)}.$$

இந்த வாய்பாட்டிலே $\pi$ என்னும் எண்ணை அவர் மிகவும் துல்லியமாகச் சொல்லியிருக்கிறார். அதாவது $3\frac{177}{1250}$ (3·1416) என்று அவர் சொல்லி யிருக்கிறார்.

அவருடைய வானசாஸ்திரக்கொள்கையானது அனேகமாகச் சூரிய சித்தாந்தத்தை ஆதாரமாகக்கொண்டதாகவே இருக்கிறது. என்றாலும் ஒரு முக்கியமான விஷயத்தில், ஆச்சரியப்படும்படியான அளவில், அது மாறுபட்டதாகக் காணப்படுகிறது.

சூரியனும் சந்திரனும் நக்ஷத்திரங்களும் அடங்கிய வான மண்டலமானது இராப்பகலாகப் பூமியைச் சுற்றிவருவதுபோல் தோன்றுகிறதே ஒழிய அது உண்மையாகப் பூமியைச் சுற்றிப் பிரதக்ஷிணம் செய்யவில்லை. வாஸ்தவத்தில் பூமி சுழல்வதினாலேயே இப்பேர்ப்பட்ட காட்சியை நாம் காண்கிறோம் என்று அவர் மிகவும்

துணிகரமாகக் கூறினர். இது குறிப்பிடத்தக்க விஷயம் அல்லவா? நமது நாட்டிலே அவருக்குப் பிற்காலத்தில் தோன்றிய வராஹ மிஹிரரும் பிரம்மகுப்தரும் இந்தக் கொள்கையை ஒப்புக் கொள்ளவில்லை என்றால் இவருடைய புத்திநுட்பமும் தைரியமும் நமக்கு ஒருவாறு விளங்கும். மேலைநாட்டில் வாழ்ந்த கலிலியோ என்னும் வானசாஸ்திரி இப்பேர்ப்பட்ட அபிப்பிராயத்தை வெளி யிட்டதற்காகக் கஷ்டத்துக்கு உள்ளானதுபோல் இவர் யாதொரு கஷ்டத்துக்கும் உள்ளானதாகத் தெரியவில்லை.

## பஞ்சஸித்தாந்திகை

வேறொரு சிறந்த நூல் பஞ்சஸித்தாந்திகை என்பது. இதில் கண்ட விஷயங்கள் பெரும்பாலும் கிரேக்க நாட்டு வானசாஸ்திரத் தையே அடிப்படையாகக் கொண்டவை. என்றாலும் இதில் சிற்சில நூதனமான அமிசங்கள் காணப்படுகின்றன. இதில் வான சாஸ்திர விஷயங்களும் சோதிடசாஸ்திர விஷயங்களும் சொல்லப் பட்டிருக்கின்றன. நாம் முன்னே சொல்லிய ஐந்து சித்தாந்தங் களிலே கண்ட விஷயங்களைச் சுருக்கியும் விரித்தும் விளக்கியும் எழுதப்பட்ட நூலாக இது இருக்கிறது.

இதை எழுதியவர் வராஹமிஹிரர் என்பவர். இவர் உஜ்ஜ யினி நகரத்துக்கு அருகில் பிறந்தவர். இவர் பிறந்தவருஷம் இன்னதென்று நிச்சயமாய்ச் சொல்லக்கூடவில்லை. பஞ்ச ஸித்தாந்திகையிலே காணப்படுகின்ற கணக்குக்களிலே 427-ம் சகத்தைக் குறிப்பிட்டிருக்கிறது. ஆதலால் இவர் அந்தக் காலத் தில் வாழ்ந்தவர் என்று சொல்லலாம். 427-ம் சகம் என்பது கி. பி. 505 ஆகும். வராஹமிஹிரர் இறந்தகாலம் கி. பி. 587 என்று தெரிகிறது. இதை வைத்துக்கொண்டு அவர் 505-ம் வருஷத்தில் பிறந்திருக்கலா மென்று சிலர் ஊகிக்கின்றனர். கேவலம் வயது ஒன்றை மட்டிலும் வைத்துக்கொண்டு இந்தவித மாய் முடிவுசெய்துவிடுவது சரியல்லவென்று தோன்றுகிறது. அவர் நூலில்கண்ட 505-ம் வருஷத்திலே அவர் சிறப்பான வாழ்க்கை புரிந்து ஆராய்ச்சிகளை நடத்திவந்தார் என்று சொல்லு வதுதான் பொருந்தும்.

## பிருஹத்ஸம்ஹிதை

ஆரியபட்டர் முதலிய முன் ஆசிரியர்கள் எழுதிய நூல்களை வராஹமிஹிரர் எடுத்துக் கையாள்கிறார். பிருஹத்ஸம்ஹிதை என்னும் ஒருசோதிடநூலை அவர் எழுதியிருக்கிறார். அது

முற்றிலும் செய்யுளாகவே இருக்கிறது. அதில் இரத்தினங்களைப் பற்றியும், தேசப்பிரிவினைகளைப்பற்றியும் ஆங்காங்கே உள்ள சில விஷயங்கள் மிகவும் ரஸமாக இருக்கின்றன. அவர் வேறு அநேக விஷயங்களைப்பற்றியும் அந்நூலில் எழுதியிருக்கிறார். பூமி உருண்டை வடிவமானது என்று அவர் தெளிவாகச் சொல்லி யிருக்கிறார்.

## பிரம்மஸ்புடஸித்தாந்தம்

அவருக்குப் பிற்காலம் தோன்றிய வானசாஸ்திர ஆசிரியர் களிலே மிகவும் கீர்த்திவாய்ந்தவர் பிரமகுப்தர் என்னும் ஒருவர். இவரும் உஜ்ஜயினியிலே வாழ்ந்தவர். இவர் கி. பி. 628-ம் வருஷத் திலே **பிரம்மஸ்புடஸித்தாந்தம்** என்னும் நூல் ஒன்றை இயற்றினார். ஸ்புடம்போட்ட, அதாவது சீர்திருத்திய, பிரம்மஸித்தாந்தம் என்பது இதன்பொருள். இந்நூல் பெரும்பாலும் சூரிய ஸித்தாந்தத்தையும் ஆரியபட்டீயத்தையும் தழுவியதாகக் காணப் பட்டபோதிலும் இதில் பற்பல நூதன விஷயங்கள் சொல்லப் படுகின்றன. இவர் கேவலம் வானசாஸ்திரிமட்டும் அல்ல; மிகச் சிறந்த கணிதசாஸ்திர விற்பன்னராயும் விஞ்ஞானசாஸ்திரியாயும் இவர் விளங்கினார்.

## கணிதஸாரஸங்கிரஹம்

இவருக்குப் பிற்காலத்தவராகிய மஹாவீரர் மைசூர்ராஜ்ஜி யத்திலே வாழ்ந்தவர். இவர் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டிலுள் ளவராக இருக்கவேண்டும். இவருக்கு மஹாவீராசாரியர் என்று ஒரு பெயரும் உண்டு. இவர் எழுதிய **கணிதஸாரஸங்கிரஹம்** என்னும் நூலானது பிரம்மகுப்தர் எழுதிய பிரம்மஸ்புடஸித் தாந்தம் என்னும் நூலைக்காட்டிலும் விரிவாக எழுதப்பட்டிருந்த போதிலும் அதில்கண்ட விஷயங்களைவிடச் சில இலேசான விஷயங் களையே பெரும்பாலும் கூறுவதாயுள்ளது. இந்நூல் கி. பி. 830-ம் வருஷத்துக்குச் சற்றுமுன்பின் எழுதப்பட்டதென்று தோன்று கிறது.

---

# சுயாபிவிருத்தி என்னும் மதம்

டி. கே. ரகுபதி, பி. ஏ.

---

**ப**த்தொன்பதாவது நூற்றுண்டின் மத்தியில் சார்லஸ் டார்வின் (*Charles Darwin*) என்னும் ஓர் அறிஞர் பெருமை வாய்ந்த ஓர் புத்தகத்தைத் தம் 22 வருட ஒப்பற்ற வேலையின் பயனாக வெளியிட்டார். அதன்விளைவாக உலகமெங்கும் ஓர் புதிய ஆர்வம் அறிவாளரிடையே தோன்றிற்று. வாலஸ் (*Wallace*) என்ற இயற்கை நூற்புலவர் தம்மெண்ணங்களை 1858-ம் வருடம் டார்விணுக்கு எழுதியனுப்பினர். டார்வினும் அப்பொழுது தம்முடைய 'உயிர்வர்க்கத்தின் முதல் தோற்றம்' (*On the Origin of Species*) என்ற புத்தகத்தை அநேகமாக எழுதிமுடித்து வெளியிடப்போகுந்தருணம். வாலஸின் குறிப்புக்களைப் பெற்ற டார்வின், லயல் என்பவருக்கு அவற்றை அனுப்ப, அவர் 'லின்னியன் கழகம்' (*Linnean Society*) என்பதிலிருந்து வெளிவரும் சஞ்சிகையின் மூன்ருவது தொகுதியில் அவற்றை வெளியிடச் செய்தார். இதனுல் டார்வினும் தமது புத்தகத்தை வெளியிடும் ஊக்கத்தைப் பெற்ருர்.

உலகத்தினருக்குப் பயன்படச் செய்ய நினைந்து டார்வின் தமது புத்தகத்தை 1859-ம் வருடம் அச்சுவாகனம் ஏற்றுவித்தார். அது உயிர்வர்க்கத்தின் குணங்கள், மாற்றங்கள், வளர்ச்சிமுறை, அவற்றிற்குரிய நிலைமைகள் முதலியவற்றை விரிவாகக் கூறுவதாகும். தாவரங்களும் விலங்குகளும் (மனிதனும் அடங்கியோன்) உலகத்தில் பிறந்தது முதல் சிறிது சிறிதாக மாறி வெவ்வேறு வகுப்பு அல்லது பிரிவைச் சேர்ந்தனவாகி வளர்ச்சியுற்றுப் பலவிடங்களுக்கும் பரவியதைப் பற்றியும் ஒரு பிராணியின் உடலிலுள்ள பல அங்கங்களின் தனித்தனி வேலைகளைப் பற்றியும் உயிர் உடல் அங்கங்கள் என்பன தம்முள் ஒற்றுமையுடன் வாழ்க்கை நடத்தல் முதலியவைகளைப் பற்றியும் அது கூறுநிற்கும். "ஓர் உயிர் தற்காலத்தில் பெற்றிருக்கும் உடலும், அதன் தன்மைகளும், அதன் பல்வேறு பாகங்களின் உருவமும், அமைப்பும், தொழில்களும், பொருத்தப்பட்ட இடங்களும் முதலிய இத்தன்மைகளை அவ்வுயிர்கள் எப்படிச் சிறிது சிறிதாக

நீண்டகாலம் உண்டான மாற்றங்களின் பயனுய்ப் பெற்றது என்பதைக் கூறும் சரித்திரத்தை டார்வினது புத்தகம் வற்புறுத்திற்று. இது 'ஹக்ஸ்லி' (*Huxley*) என்பவரது விளக்கம். 'மிகச்சிறிய ஓர் உயிர் அல்லது பொருள் தானுக அகத்திலிருந்து வெளிப்பட்டு வெளிநோக்கி விருத்தியடைதல்' (*To develop outwardly from within out of a small genesis*) என்று இச்சரித்திரத்துக்கு நாமகரணஞ் செய்யப்பட்டது. அதாவது, வாமனமூர்த்தி போன்ற ஓர் உயிர் திடீரெனத் திரிவிக்ரம மூர்த்தியாக வளராமல் சில யுகங்களாகப் பல தலைமுறைகளில் சிறிது சிறிதாகப் பல வேற்றுமைகளைப் பெற்று அநேகந் திரிவிக்ரம அவதாரங்களெடுப்பதைப்போலப் பெருகி வளரும். இவ்வளர்ச்சி அல்லது விருத்தியை 'எவல்யூஷன்' (*Evolution*) என்ற ஒரே பதத்தால் ஆங்கிலத்தில் குறிக்கிறுர்கள்.

இப்பொழுதுள்ள அளவிடமுடியாத மாறுபாடுகளுடைய தாவரங்கள் மிருகங்கள் முதலியவைகளின் தனித்தனிச் சிறிய பிரிவுகள் (*Varieties and sub-varieties*), ஒன்றற் கொன்று சில வேற்றுமைகளடைந்த அச்சிறு பிரிவுகள் சேர்ந்த ஒரு பெரும் பிரிவுகளாம் (*Species*). அதுபோல் ஒன்றற் கொன்று சில வேற்றுமைகளடைந்த அப்பெரும் பிரிவுகள் சேர்ந்த ஓர் பெரும் பிரிவு (*Genus*), அவைபல சேர்ந்த ஒரு மிகப் பெரிய பாகுபாடு அல்லது வகுப்பு (*Class or Kingdom*) முதலியன எவ்விதம் ஆதியில் எளிதில் விளங்கத்தக்க (*Simple*) ரூபங்கள் சிலவற்றிலிருந்து (அல்லது ஒரே ரூபத்திலிருந்து) வம்சாவளிக் கிரமத்தில் தோன்றியன என்பதைத் தொடர்ந்து கூறுவதாகும் அவரது மதம். டார்வினது இம்மதத்தை 'ஹெர்ப்பார்ட் ஸ்பென்ஸர்' (*Herbert Spencer*) 1855-ம் வருடத்தில் தமது 'மனேத்தத்துவசாஸ்திர உண்மைகள்' (*Principles of Psychology*) என்ற நூலில் வெளியிட்டிருந்தார். எனவே, டார்வின் தம் புத்தகத்தை வெளியிடுமுன் வேறிருவர் தாமாகவே டார்வினது மதத்தை அறிந்தவராயிருந்தனர். ஆனுல் பல இயற்கை நூற்புலவர்கள் டார்வினது புத்தகம் வெளிவந்ததும் அவர் கூறுவதை ஒப்புக்கொள்ளாமலும், நிச்சயபுத்தியுடன் அவருக்குச் சாதகமாகவோ விரோதமாகவோ தீர்மானிக்காமலும் உளேந்தனர். இதனை டார்வினே தம் புத்தகத்தின் பிற்காலப் பதிப்பொன்றில் கூறியிருக்கிறுர்.

டார்வின் தமது மதத்தை எங்ஙனம் எடுத்துரைக்கின்றுர் என்று நோக்குவாம். ஓர் உயிர்க்கூட்டத்தின் பல தனி உயிர்களின்

(*Individuals of a variety or group*) குணங்கள், உடலிலுள்ள அங்கங்களின் அமைப்புக்கள் முதலியன தம்முள் சிறிதளவேனும் வேற்றுமைப்பட்டிருக்கின்றன. அவை ஒவ்வொன்றின் பொதுத்தன்மையில் வேற்றுமையின்றி சிறப்புத்தன்மையில் வேறுபாடு இருக்கும். இச்சிறப்புத் தன்மை ஒரு தலைமுறைக்காரரிடம் இருந்தது போலிராமல் பின் தலைமுறைவந்தவர்களிடம் கொஞ்சம் கொஞ்சமாக அவரவர்களுக்கு அநுகூலமான வேற்றுமைகளைப் பெற்றுப் பெரிதும் மாறுபட்டிருக்கும். எனவே முதல்தலைமுறையில் நாம் பார்த்த சிறப்புத்தன்மை பலதலைமுறைகள் சென்றபின் முற்றிலும் மாறுபட்ட சிறப்புத்தன்மையாக மாறிவிடுகிறது. இவ்விரண்டையும் ஒத்துப்பார்த்தால், முதல்தலைமுறையின் சிறப்புத்தன்மைகள் 50-வது அல்லது 100-வது தலை முறையின்பொதுத் தன்மைகளாக மாறி, 50-வது அல்லது 100-வது தலைமுறையின் சிறப்புத்தன்மைகள் மிகவும் வேறுபட்டனவாகத் தோன்றும். முந்தியவற்றை வர்க்கத்தன்மைகள் (*Characteristics of species*) என்றும், பிந்தியவற்றைப் பிரிவுகளின் தன்மைகள் (*Characteristics of varieties*) என்றும் சொல்லாம். இரண்டும் சம்பந்தமற்ற இரண்டு தன்மைகள் என்றே யாவரும் கூறுவார். ஆனால் இரண்டும் சம்பந்தம் பெற்றவை என்பது ஒவ்வொரு தலைமுறையாக மாற்றங்களைக் கவனித்து வருபவர்களுக்குத் தெரியும். இயற்கையானது ஒவ்வோர் உயிருக்கும் அனுகூலமான மிகச்சிறிய வித்தியாசங்களை அவைகளின் உருவம், அங்கங்களின் அமைப்பு முதலியவற்றில் உண்டாக்கி, வாழ்க்கையை நடத்துவதிலும் வேறுபட்ட தன்மைகளை[1] அடையச் செய்து, இவ்விதம் நன்றாகவும் தகுதியாகவும் வேற்றுமைகளை யடைந்த உயிர்களைத் தன் வேலையாகிய பிரஜாவிருத்தி (*Propagation of the Species*)க்கு வைத்துக் கொண்டு, சிறப்பெய்தாதவைகளை அழித்து விடுகின்றது. என் அங்ஙனம் இயற்கை அழித்து விடுகிறதென்றால் அதனால் எல்லாவுயிர்களுக்கும் உணவளித்துக் காப்பாற்ற முடியவில்லை. இயற்கையும் பஞ்சபூதச் செய்கைகளால் வேற்றுமையடைகிறது. மனிதன் ஓர் உயிருக்கும் அதன் பிரிவைச் சேர்ந்த மற்றோர் உயிருக்குமுள்ள வேற்றுமைகளைக் கவனித்தறிந்து, தனக்கு

---

1. வாழ்க்கை நடத்துவதில் எந்த அங்கங்களை உயிர்கள் அதிகமாக உபயோகிக்கின்றனவோ அவை உரம் பெற்றுச் சிறப்பாக வளர்கின்றன. உபயோகப்படுத்தாத அங்கங்கள் தேய்வுற்று முதலில் தாமிருந்ததைக் குறிக்கச் சிறிய அடையாளங்களை மட்டும் வைத்து மறைந்து விடுகின்றன.

உபயோகமானதைக் கிரகித்து உபயோகமற்றதைக் காப்பாற்ருது வெளியில் தள்ளிவிடுதல் (*Variation under domestication of plants and animals*) செய்யும்பொழுது ஏன் இயற்கையும் தனக்கு அனுகூலமானவைகளைக் காப்பாற்றி மற்றவைகளை அழித்து விடக்கூடாது? இயற்கை இவ்விதம் திடீரென்று செய்வதில்லை. அநேகந் தலைமுறைகளாக உயிர்களைப் பெருகவைத்து, அவைகளைப் பல வேற்றுமைகளை அடையச்செய்து, அவ்வேற்றுமைகளுள்ளும் பொதுத்தன்மை வாய்ந்தவைகளைச் சிறு சிறு கூட்டங்களாக வாழச்செய்து, ஒவ்வொரு சிறு கூட்டத்திலுமுள்ள தனிஉயிர்கள், உணவு பிற சௌகரியங்கள் முதலியன அடைய அக்கூட்டத்தினருள்போட்டியையும் (*Struggle for existence*) உள்நாட்டுச் சண்டையையும் (*Civil war*) ஒவ்வொரு கூட்டத்திலும் விளைவித்து, அச்சண்டையில் எஞ்சும் உயர்ந்த தன்மைகள் வாய்ந்த உயிர்களையே மறுபடியும் பெருகச் செய்கிறது. இவ்விதம் பஞ்சத்தையும் சண்டையையும் உயிர்ச் சேதத்தையுமுண்டாக்கி மேன்மை வாய்ந்த உயிர்களையே இயற்கை பொறுக்கியெடுத்து (*Survival of the fittest*) மேலும் பிரஜா விருத்தி செய்யத் தூண்டுகிறது. சண்டையில் வெற்றிபெற்ற உயிர்களின் மேன்மைக்குணங்கள் அவற்றின் சந்ததிகளுக்கும் பரம்பரை உரிமையாகப் பொருந்தப்பெற்று, மேலும் மேலும் அச்சந்ததிகளும் சிலசில அனுகூலமான வேற்றுமைகளைப் பெற்று விருத்தியாகும்; பின்னும் ஒவ்வொரு பிரிவு அல்லது கூட்டமும் உள்நாட்டுச் சண்டை செய்யும். அச்சண்டையில் வெற்றியடைந்தவை மறுபடியும் பெருகும். இஃது 'இயற்கையின் பொறுக்குதல்' (*Natural selection*) எனப்படும்.

இவ்விதமாக, உயிர்வர்க்கங்களில் அவற்றின் ஆதித் தோற்றத்திலிருந்து மிகவும் மாறிய தோற்றமுடையவைகளை நாம் இப்பொழுது பார்க்கிறோம். இவை சிறு சிறு பிரிவுகளாக இருக்கின்றன. இப்பிரிவுகள் கடவுளால் ஆதியில் வெவ்வேருகவே படைக்கப்பட்டனவாக ஆழ்ந்து ஆலோசியாத நாம் நினைக்கக்கூடும். பறவைகளெல்லாம் ஒரே வகுப்பைச் சேர்ந்தவை. அவ்வகுப்பில் எத்தனையோ குடும்பங்களும், அக்குடும்பங்களில் எத்தனையோவர்க்கம் அல்லது இனங்களும் (*Species*), அவ்வினங்களில் எத்தனையோ உட்பிரிவுகளும் (*Varieties*) இருப்பதை நாம் இப்பொழுது காண்கிறோம். பறவைகளைப் போல் தாவரமும் விலங்குகளும் வெவ்வேறு வகுப்பைச்சேர்ந்தன. அவற்றில் எத்தனை உட்பிரிவுகள், உட்பிரிவுகளுள் உட்பிரிவுகள் முதலியன இருக்கின்றன? இவ்வகுப்புக்கள், பாகுபாடுகள் அல்லது உட்பிரிவுகள் முதலியவைகளின் சிறப்

புத்தன்மைகள் மிகவும் வேறுபட்டுத் தோன்றுவனவாயினும், அவற்றின் பொதுத்தன்மை ஒன்றாகவே இருக்கவில்லையா? அப்பொதுத் தன்மை யாது? எல்லா வுயிர்களும் குறள் வடிவிலிருந்து விருத்தியடைந்து உயிர்வாழ்ந்து தத்தம் இனத்தைப் பெருக்கிப் பின் அழிந்து விடுகின்றன. அவை தத்தம் இனத்தைப் பெருக்குகையில் தத்தம் குணங்களையும் தத்தம் சந்ததிகள் பெறச் செய்கின்றன. இப்பொதுத் தன்மைகளும் சிறப்புத்தன்மைகளுடன் சேர்ந்து பல பிரிவுகளிலும் காணப்படுவதால் தான், வகுப்பு, குடும்பம், இனம், அதனுட்பிரிவு முதலியன வெல்லாம் நாம் இப்பொழுது கண்டுகொள்ள முடிகிறது. இப்படி இயற்கை, ஆதியில் உலகத்தில் தோன்றிய சில உயிர்களிலிருந்து (அல்லது ஒரே உயிர்த் தோற்றத்திலிருந்து) கணக்கற்ற வகுப்புக்கள், உட்பிரிவுகள் முதலியவற்றைக் கணக்கிடமுடியாத வருஷங்களில் மாற்றியமைத்து, தற்பொழுதுள்ள உயிர்களுக்கும் ஆதியில் தோன்றிய சில உயிர்களுக்கும் இடையில் தோன்றிய எத்தனையோ உயிர்களை (*Intermediate varieties or species*) அழித்துத் தற்போதைய நிலையை அடையச்செய்திருக்கிறது. இதை மிகவும் மெதுவாக இயற்கை செய்து முடித்திருக்கிறது. இப்பொழுது காணப்படும் உயிர்வர்க்கங்கள் இவ்வுலகத்தில் இவ்வாறு வேகுசாலமாக முன்னேறி வந்திருப்பதால், உலகமும் இன்னும் வெகுகாலம் அழியாதிருக்கு மென்றும், உயிர்வர்க்கங்கள் முன்போல் இன்னும் முன்னேற்றமடையு மென்றும் நாம் ஊகிக்கவேண்டியிருக்கிறது. இப்படி உலகம் முன்னேறிச்செல்வதுதான் 'விருத்தியடைதல்' (*Evolution or Improvement*) என்று கருதப்படுகிறது. எனவே உயிர்கள் சர்வோத்கிருஷ்டமான நிலையை நோக்கி மெல்ல மெல்ல வளர்வதாக எண்ணப்படுகின்றன.

ஆனால், உலகமும் அதிலுள்ள உயிர்களும் தாமாக மாறுதலடைகையில் எப்பொழுதும் மேன்மையுற்று முன்னிலும் நல்ல ஸ்திதியை அடைந்து கொண்டேபோய் முன்னேற்றமடைவதாகக் கருதுவதில் சில சந்தேகங்களும் ஆக்ஷேபங்களும், பிற கஷ்டங்களும் தோன்றவே தோன்றுகின்றன. பல பழைய கால உயிர்கள் அடையாளங்களின்றி நசித்துப் போயின. ஒரே உட்பிரிவைச் சேர்ந்த எல்லாவுயிர்களும் ஒரே தன்மையில் மாறவில்லை. சில உயிர்கள் தம் பிரிவினின்றும் பெரும்பாலும் மாறுபட்ட தன்மைகளை (*Aberrant characteristics*) அடைகின்றன. வாழ்க்கைச் சாதனங்களில் அதிக மாறுதலில்லையாயின் வெகுகாலத்திற்குமுன் பெற்ற தன்மைகளை இவ்வுயிர்கள் இழந்து விடாமல் அப்படியே காப்பாற்றி வருகின்றன. மாறும்பொழுதும் பல உயிர்கள் மிக

மாறியும், சில உயிர்கள் சில மாற்றங்களையே பெற்றும், வேறுசில மாறாமலும் இருந்து விடுகின்றன. மற்றும் சில வெகுகாலத்திற்கு முன்னிருந்த ஓர் மூதாதையின் ஏற்றமில்லாத குணத்தைப் பெற்றுவிடுகின்றன. இது முன்னேற்றத்திற்கு முற்றிலும் மாறாக இருக்கின்றதல்லவா. ஒரே மாகாணத்தில் ஒன்றை யொன்று அடுத்த இருபிரதேசங்களில் ஒரே வர்க்கத்தைச் சேர்ந்த உயிர்கள் வேறு வேறு தன்மைகளை அடைந்திருக்கின்றன. ஆனால் அவ்விரண்டு பிரதேசங்களிலுள்ள உயிர்களுக்கும் மத்தியில் வேறு உயிர்கள் அவ்விரண்டு பிரதேசங்களினுடைய உயிர்களுக்குரிய பலதன்மைகளைப் பெற்று (*Intermediate variety*) மத்தியப்பிரதேசத்தில் வாழ்ந்துகொண்டிருந்து சிறிது காலத்துக்குப்பின் மறைந்து போயிருக்கவேண்டும். இடையே தோன்றிய இந்தப்பிரிவு அநேகமாய் எவ்வித அடையாளங்களையும் விட்டுச் செல்லவில்லை. தவிர, ஒரு பிராணியின் ஒரே அங்கம் வெவ்வேறு மாறுபட்ட வேலைகளை வெவ்வேறு சமயங்களில் செய்கின்றன. சில நீர்வாழ் பிராணிகளுக்கு ஆதியில் நீந்துதற்கு ஏற்பட்ட பை, பின் மூச்சு விடுவதற்கேற்ற சுவாசாசயமாய் மாறிவிடுகிறது. ஒன்றற்கொன்று சம்பந்தமில்லாத இரண்டு உயிர்கள் அவற்றின் ஒரேகாரியத்திற்கு இன்றியமையாத அங்கங்களை வெளித்தோற்றத்தில் ஒரேமாதிரியாயிருக்கும்படி தனித்தனியே அமைத்துக் கொண்டிருக்கின்றன. ஓர் உயிரின் சில அங்கங்கள் பெரிதும் மாறியும், வேறு சில அங்கங்கள் கொஞ்சமும் மாறாமலுமிருப்பதால் அம்மாறுதலில்லாத அங்கங்கள் அவ்வுயிருக்கு அதிக உபயோகமுள்ளனவாகச் சொல்வதற்கு முடியவில்லை. ஒருவேளை அவை வேறோர் மாறுபட்ட வாழ்க்கை முறைக்கு ஏற்றவையாகவும், அப்பொழுது மிகவும் வளர்ச்சியடையத் தக்கனவாகவு மிருக்கலாம். முன் உபயோகப்பட்ட ஓர் அங்கம் பின்னர் உபயோகமற்றுப் போயினும் மறைந்து போகாமல் அப்படியே இருக்கிறது. இயற்கையின் பொறுக்குதல் ஒரு வர்க்கத்தைக் குறைகூற முடியாத உன்னதநிலையைக் கட்டாயமாய் அடையச் செய்கிறதெனச் சொல்வதற்கில்லை. சிலசமயங்களில் ஒரு வர்க்கத்தில் திடீரெனச் சிலமாற்றங்கள் (நாம் வளர்க்கும் சில தாவரங்களிலும் மிருகங்களிலும்) காணப் படுகின்றன; அவ்வர்க்கத்திற்கு அவசியமில்லாத அல்லது உபயோகமில்லாத சில மாற்றங்களும் காணப்படுகின்றன—ஆறு விரல் மனிதவகைபோன்றவை. சில சில தனிமையான குணங்கள் (வேறு பிராணிகளிடம் பார்க்க முடியாதவை) சில பிராணிகளிடம் நாம் காண்கிறோம். அவை அதிக மாறுதலடைவனவாகத் தெரியவில்லை. எல்லாப் பிராணிகளையும் விட நாய் யஜமான விசுவாசத்தில் தலைசிறந்து விளங்குகிறது.

பகைவனைக்கண்டு பயப்படுவது சில மிருகங்களைவிடச் சில மிருகங்களிடத்தில் அதிகமாகக் காணப்படுகிறது. வேறு பறவைகளின் கூடுகளில் குயில் முட்டைகளை இடுகிறது. சில எறும்புகள் தாம் ஒரு வேலையுஞ் செய்யாமல் பிற எறும்புகளை அடிமைகளாகச் செய்யும். பல பெண் எறும்புகள் மலடுகளாகவே இருக்கின்றன; சில பெண் எறும்புகளே மலடுகள் அல்லாதவை. மனிதனால் கூட இயற்றமுடியாத அவ்வளவு சிறந்த தேன்கூடுகளைத் தேனீக்கள் கட்டுகின்றன. இவையெல்லாம் வேறு பிராணிகளிடமில்லாத சிறப்பு வாய்ந்த தன்மைகளாகத் தோன்றுகின்றன. ஒரேவர்க்கத்தைச் சேர்ந்த பல பிரிவுகளிலிருந்தும் ஆணையும் பெண்ணையும் சேர்த்து அதனால் சந்ததிகள் ஏற்படச்செய்ய முடிவதேபோல் ஒரே குடும்பத்தைச் சேர்ந்த வேறு வேறு வர்க்கங்களிலிருந்து அவ்வாறு செய்ய எளிதில் முடிவதில்லை. இன்னும், வேற்றுமைப் பட்ட பல உட்பிரிவுகளும் ஆதியில் அவ்வகுப்பைச் சேர்ந்த ஒரே உயிரின் வழித்தோன்றியவை என்று கூறுவதற்கு நமக்கு அவைகளைப் பற்றிய தொடர்ச்சியறாத தலைமுறை வரலாறும் கிடைத்திலது. இவையெல்லாம் டார்வினது மதத்திற்கு விரோதமான ஆக்ஷேபங்களும் சந்தேகங்களுமாகும். இவற்றைப் போல இன்னும் பல ஆக்ஷேபங்களை அவர் புத்தகத்தில் காணலாம். அவற்றையெல்லாம் எடுத்துக் கூறி அவற்றிற்கு அவர் கூறும் சமாதானங்களையும் கூறுவதாயின் அது மிக விரியும். அநேக விஷயங்களும் பலவற்றிற்குக் காரணங்களும் முற்றிலும் தமக்கு விளங்கவில்லை என அவர் கூறுகிறார். ஆயினும் தம் மதத்தை யாவரும் அறிய வெளியிடுவதற்குப் போதுமான சாட்சியங்கள் தமக்குக் கிடைத்துவிட்டனவென்று அவர் நம்புகிறார். லாமா, ஒட்டை, குதிரை முதலியவற்றின் முழுவிவரங்களும் நமக்கு ஆதியோடந்தமாய்க் கிடைத்துள்ளன. இவை நமக்கு இம்மதத்தை விளக்கப் போதிய சாட்சியங்கள் எனலாம்.

இவற்றை யெல்லாம் எப்படி டார்வின் கண்டுபிடித்தார் என்று கேட்கலாம். அவர் 'பீகள்' (*H. M. S. Beagle*) என்ற அரசாங்கக் கப்பலில் தென் அமெரிக்காவுக்குப் போயிருந்தபொழுது அங்கே உயிர்கள் பலவிடங்களில் பரவியிருந்ததையும் தற்காலத்திலுள்ள உயிர்கள் அங்குள்ள பழைய கால உயிர்களுடன் சம்பந்தப்பட்டிருந்ததையும் பற்றிய சில உண்மைகள் அவர் மனத்தில் வேரூன்றி விட்டனவாகத் தோன்றவே அவைகளைச் சோதனைகளின் மூலம் கண்டறிய அவர் ஆவல் கொண்டார். எனவே சுமார் 20 வருடகாலமாக அச்சோதனைகளை மிகுந்த கஷ்டத்துடனும் உற்சாகத்துடனும் செய்து நிறை

வேற்றினர். பூமியைத்தோண்டி அதன் பல அடுக்குகளிலும் கிடைத்த பல உயிர்களின் சின்னங்களை எடுத்து அப்படியப்படியே ஆராய்ந்து அவற்றைக்கொண்டு உயிருள்ள பொருள்களின் பழக்க வழக்கங்கள், வளர்ச்சி முதலியவைகளைக் கவனித்து அவை களின் தன்மைகளையும் ஆதாரமாகக் கொண்டு தம் மதத்தைப் பற்றிய புத்தகத்தை எழுதினர். பூமியின் பல அடுக்குக்களிலும் கிடைக்கும் உயிர்களின் சின்னங்களைப் (*fossils*) பலர் டார்வி னுக்கு முன் எடுத்துச் சோதனைகள்செய்திருந்தனர். அவர்களின் முயற்சியால் 50,000 தாவர விலங்குவர்க்கங்களின் சின்னங்கள் எடுத்துப் பரிசோதிக்கப்பட்டிருக்கின்றன.

டார்வின், தமது மதத்தால் பிற சாஸ்திரங்கள் கூடச் சாலத் தெளிவும் முன்னேற்றமும் அடையும் என்று கூறியிருக்கிறார். அவர் சொல்லுவதாவது: "எதிர்காலத்தில் இதனினும் மிகமிக நுணுகிய ஆராய்ச்சிகள் செய்யப் பெரியதுறைகள் (*fields*) விரிவதை நான் காண்கிறேன். மனதின் ஒவ்வொரு சக்தியையும் ஆற்றலையும் ஓர் உயிர் அடைவது சிறிது சிறிதாகத்தான் என்று ஸ்பென்ஸர் நன்றாக முன்பே போட்ட அஸ்திவாரத்தின்மேல் மனோதத்துவ சாஸ்திரம் அசைக்கமுடியாமல் இனி எழுப்பப்படும். மனித னுடைய ஆதி உற்பத்தியைப்பற்றியும் அவனுடைய வரலாற்றைப் பற்றியும் மிக்க விளக்கம் உண்டாகும்."

இங்ஙனம் அவர் எழுதியது பல சாஸ்திரங்களையும் ஆராய்ந்த நிபுணர்களைத் தத்தம் நூல்கள் எவ்வெவ்விஷயங்களைப் பற்றியன வோ அவற்றை அவற்றின் முதல் தோற்றத் (*origin*) திலிருந்து தற்காலநிலைவரை அறிந்துகொள்ளத் தூண்டிற்று. டார்வினே தமது மதத்தைப் பின்னும் விரிவாக 'மனிதனுடைய பரம்பரை' (*The Descent of Man*) என்ற புத்தகத்தில் வெளியிட்டிருக்கிறார். அவரது மதத்தை மிகவும் கடுமையாய்க் கிறிஸ்தவமதபோதகர்கள் எதிர்த்தனர். ஏனென்றால் அவர்கள் கடவுள் எல்லாவுயிர்களை யும் படைத்ததாகக் கூறுகிறார்கள். டார்வின் சில உயிர்களே முதலில் படைக்கப்பட்டிருக்கவேண்டும் என்கிறார். மனிதன் தாழ்வுற்றுப் பாவங்களைப் புரிவதாக அவர்கள் சொல்லுகிறார்கள். டார்வின் போன்றோர் உயிர்களெல்லாம் முன்னேறிச் செல்கின்றன என்கின்றார். டார்வின், வாலஸ், ஸ்பென்ஸர், ஹக்ஸ்லி, லயால், ஹெக்கல், டைலர், கீத்முதலிய பிரபல அறிவாளிகளின் முயற்சி யால், இயற்கையில் மனிதனுக்கு அளிக்கப்பட்டுள்ள இடத்தை யும், அவனது சம்பிரதாயங்கள், நடையுடை பாவனைகள், வழக்கம், கலைகள், கைத்தொழில்கள், நம்பிக்கைகள், விழைகின்ற உயர்

நிலைகள் முதலியவற்றையும் பற்றிக்கூறும் சாஸ்திரம் (*Anthropology*) டார்வினது மதத்தைப்பின்பற்றி மிகவும் முன்னேற்ற மடைந்திருக்கிறது. ஹெக்கல் என்ற ஜெர்மன் அறிஞரின் 'மனிதனுடைய சுயாபிவிருத்தி' என்ற புத்தகம் (*The Evolution of man*) ஆதியில் உயிர், மிருகம், தாவரம் என்ற பாகுபாடில்லாத ஒரே உயிரின் வகுப்பைச் சேர்ந்ததும், பின் புழுவைப்போன்று மீனைப்போன்று கால்விரல்கள் ஐந்துடைய மனிதக்குரங்கின் உருவம்பெற்ற குரங்கினத்தைச் சேர்ந்து நரம்புகள், பஞ்சேந்திரியங்கள், இயங்குவிக்கும் உறுப்புக்கள், உண்ணுங்கருவிகள் பிரஜோத்பத்திக்குரிய கருவிகள் முதலியவற்றைப் பெற்ற விதங்களையும், பின் மனிதன் அபிவிருத்தி அடைந்துள்ளதையும் விரிவாகக் கூறுகிறது. டார்வின் கூறியதுபோல் மனோதத்துவ சாஸ்திரமும் மனிதசமூகத்தைப்பற்றிய பிறசாஸ்திரங்களும் மிக்க விரிவடைந்தன. பூமியின் நிலைமையையும் அமைப்பையும் கூறும் (*Geology*) சாஸ்திரமும், அதன்மேல் பரவியிருக்கும் மனிதப் பெருங்கூறுகளை விளக்கும் சாஸ்திரமும் (*Ethnology or Ethnography*), அவர்களின் பாஷைகளிலுள்ள வார்த்தைகளின் மூலங்களைக் கண்டறியும் சாஸ்திரமும் (*Etymology*), பாஷையின் மூலத்தையும் வளர்ச்சியையும் கூறும் சாஸ்திரமும் (*Philology dealing with the origin and development of language*) சமூக அமைப்பும் அதன் முதல்தோற்றமும் கட்டுப்பாடும், இராஜீய அமைப்பின் மூலமும் வளர்ச்சியும் (*Origin and growth of the state*), பல துரைத்தன அமைப்புக்களின் வளர்ச்சியும் (*Growth of constitutions in different countries*), சட்டங்களின் மூலமும் வளர்ச்சியும் (*Jurisprudence*) என்பவைகளைப்பற்றிய சாஸ்திரங்களும், சரித்திரமும் (*History*) பொருளாதர மதசம்பந்தமான சமூக ஆதி எண்ணங்களையும் நடவடிக்கைகளையும் வளர்ச்சியையும் விவரிக்கும் சாஸ்திரங்களும், ஆதிகாலசாஸ்திரத்தை அறியத் துணைபுரியும் பழையகால சரித்திர ஞாபகச்சின்னங்களை விளக்கும் சாஸ்திரமும் (*Archaeology*), மனிதன் அமைக்கும் சித்திரத்தையும், கல், உலோகம் முதலியவைகளில் அமைக்கும் பொம்மை முதலிய வேலைப்பாடுகளையும், அவன் பிறரைப் பரவசமாகச் செய்யும் கானத்தையும் பற்றிக் கூறும் சாஸ்திரங்களும் டார்வினது மதத்தைப் பின்பற்றிப் பல ஆராய்ச்சிகள் செய்து முன்னேற்ற மடைந்துள்ளன. சமூகத்தைப் பற்றிய சாஸ்திரங்கள் பல (சரித்திரம், மனோதத்துவ சாஸ்திரம் போன்றன) பழையகால மனிதர்களின் நிலையை அறிய டார்வினது முறையை அனுஷ்டித்தன. நமக்கு நன்றாகத் தெரிந்தவிஷயங்

களிலிருந்து தெரியாத பண்டைக்கால விஷயங்களுக்குச் செல்லு முறை (தற்காலத்தில் அதிகவிருத்தியடையாத காட்டுமிராண்டிகள், குழந்தைகள் முதலியோரைப்பார்த்தும், ஜனங்களுக்குள் வழங்கிவரும் மூடநம்பிக்கைகள் அல்லது கொள்கைகள், பழக்க வழக்கங்கள், குழந்தைகள், கர்ணபரம்பரை முதலியவைகளை அறிதலின் மூலமும்) கையாளப்பட்டது.

உயிர்வர்க்கப் பிரிவுகள் இன்னவாறு தோன்றி வேறுபட்டன என்று டார்வின் கூறுகிற கொள்கை நம் தமிழ்நாட்டுப் பண்டைய நூலாசிரியர்களுக்கும் கொஞ்சம் தெரிந்திருந்ததாக நினைக்க இடமிருக்கிறது. அவர்கள் தாவரம், பக்ஷிகள், விலங்குகள், மக்கள், அவர்களது தன்மைகள், தொழில்கள் முதலியன எவ்வாறு ஒவ்வொரு நிலத்திலும் வேறுபட்டிருந்தனவென்றும், ஆயினும் எல்லாமக்களும் ஒரே (இந்து) மதம், ஒரேசமுகக்கட்டுப்பாடு முதலியன கொண்டவரென்றும் அறிந்திருந்தனர். மருதம், முல்லை, குறிஞ்சி, நெய்தல், பாலைமுதலிய நிலங்களில் வெவ்வேறு பிரிவுகளையும் வர்க்கங்களையும் சேர்ந்த பக்ஷிகள், தாவரம், விலங்குகள், மனிதர்கள், தெய்வங்கள் முதலியன இருந்தனர் என்று நம் இலக்கண நூல்கள் கூறுகின்றன. உதாரணமாக: நெய்தல் நிலத்துக்குப் புன்னைமரங்கள், கரும்பனைமரங்கள், முதலியனவும், நெய்தல் போன்ற மலர்களும், கயல், சுறு, நந்து முதலிய நீர் வாழ்பிராணிகளும், நாரை, அல்லது கொக்கு முதலிய பறவைகளும், பரதவர் செம்படவர் முதலிய மக்களும், வருணன் என்ற தெய்வமும் உரியன. தொழில் மீன்கள், முத்துக்கள், பவழங்கள் முதலிய கடல்படு திரவியங்களை விற்றலும் கப்பல் படகு முதலியன ஓட்டுதலும். பரதவர்களின் நாகரிகம் மருதநிலத்து மக்களின் நாகரிகத்தினும் வேறுபட்டதாகவே இருக்கவேண்டும் என்பது நன்குக விளங்கக்கூடியது. இப்படியே பிறநிலங்களிலுள்ள உயிர்களும் வேறுபட்ட வாழ்க்கையையும் தன்மைகளையும் கொண்டவை. அவற்றையெல்லாம் பரக்க நம் இலக்கண நூல்களில் காணலாம்.

"தெள்ளிய வாலின் சிறுபழத் தொருவிதை
தெண்ணீர்க் கயத்துட் சிறுமீன் சினையினும்
நுண்ணிதே யாயினும் அண்ணல் யானை
அணிதேர் புரவி யாட்பெறும் படையொடு
மன்னர்க் கிருக்க நிழலா கும்மே."

---

# நாழி

ஏ. குப்புஸாமி ஐயர், பி. ஏ.

---

முற்காலத்தில் கடியாரங்கள் இல்லை. பொழுதை அளப்பதற்கு நாழிகளை வழங்கினார்கள். வடமொழியில் 'நாலீ' என்ற சொல்லுக்குக் குழாய் என்பது பொருள். ஓர் அகன்ற குழாயை விரும்பிய அளவில் அறுத்து ஒருபுறம் மூடியிட்டு அதை நாழி என்கிறோம். முன்னோர் இதை மணலால் நிரப்பினார்கள்; அடியில் சிறு துவாரமிட்டார்கள்; மணல் கொஞ்சங்கொஞ்சமாகக் கீழே விழுந்துகொண்டே இருந்தது. நாழியின் வெளிப்புறத்தில் கோடுகள் கீறி அவற்றின் உதவியால் மணலின் அளவு குறையுங் காலத்தைக் கணக்கிட்டார்கள். இவ்வாறே நாழியைத் தண்ணீராலும் நிரப்பிக் காலத்தை அளந்தார்கள்.[1] ஒரு நாளை 60 நாழிகளாகக் கணக்கிட்டார்கள். ஒரு நாழியளவு மணலும் தண்ணீரும் குழாயிலிருந்து கீழே விழுகிற நேரத்தை ஒரு நாழி என்று வழங்கினார்கள். நாலீ என்ற வடமொழி 'நாளி, நாழி, நாடி' என்று மாறிற்று. விநாடி என்பது நாடியின் உட்பிரிவு.

நாடி என்பது நமது உடம்பில் ஓடுகிற இரத்தக்குழாய்களுக்கும் பெயர்; மூக்குக்கும் பெயர். சுவாஸக்குழாயும் ஒரு குழாயல்லவா? வாதம், பித்தம், கபம் என்ற மூன்று நாடிகள் நமது கைகளில் துடிக்கின்றன. வைத்தியர்கள் நோயாளியின் கையைப் பிடித்து நாடிகள் துடிக்கிற வேகத்தைக் கவனிக்கிறார்கள். நோயற்ற மனிதன் ஒரு நாளில் 21,600 முறை சுவாசிப்பதாக வேதம் சொல்லுகிறது. ஒரு மணி நேரத்தில் 900 சுவாஸங்கள்; ஒரு நிமிஷத்தில் 15 சுவாஸங்கள். இந்த விகிதத்தில் ஒரு முறை சுவாசிக்க 4 ஸெகண்டு நேரம் ஆகும்; இதற்குள் கை நாடி 5 முறை துடிக்கிறது; ஒரு நிமிஷத்தில் 75 முறை துடிக்கிறது. ஆகையால் கையில் துடிக்கிற நாடிகளைக் கொண்டும் சுவாஸங்களைக்கொண்டும் காலத்தை நம்முன்னோர்கள் கணக்கிட்டு அறிந்தார்கள். தற்போது சுவரில் பெரிய கடியாரங்களை இணைக்கிறோம். இந்த யந்திரங்கள் திட்டமான நடையில் இயங்க வேண்டும்; இதற்காக ஒரு பெண்டுலத்தை இசைக்கிறார்கள். இந்த உபாயத்தைக் கண்டறிந்தவர் கலிலியோ. இவர் தமது கைநாடிகள் துடிப்பதை நுட்பமாகக் கவனித்துப் பெண்டுலம் அசைதற்குஉரிய கால அளவையும் அதற்கு ஏற்றபடி பெண்டுலத்தின் நீளத்தையும் கனத்தையும் அறிந்து உரிய கருவிகளை அமைத்தார் என்று சொல்லுகிறார்கள்.

நாலீ என்ற மொழி நாடீ என்றும் நாடிகா என்றும் வழங்கப்படுகிறது. தமிழில் இவற்றை 'நாழி' என்றும், 'நாழிகை' என்றும் வழங்குகிறோம்.

---

1. இது தமிழில் குறுநீர்க்கன்னலென்றும் நாழிகை வட்டிலென்றும் வழங்கும்.

# சரித்திரம்

## பெல்லமியின் ஏற்பாடு

சு. குஞ்சிதபாத ஐயர், பி. ஏ., எல். டி.

---

சிலவருஷங்களாக உலகத்தில் மக்களிடையே தீராத்துன்பம் பயக்கும் பல்வேறு கஷ்டங்களை நீக்கவேண்டு மென்று ஓர் தீவிர முயற்சி இருந்துகொண்டுவருகிறது. சர்வதேச சங்கமென்றும், ஆயுதப் பரிஹரண மகாநாடுகளென்றும், ஐந்துவருஷத்திட்டங்களென்றும், தேசநலமீட்சிச் சங்கமென்றும் பல்வேறு பெயர்கள் பல நாடுகளில் வழங்கிவருகின்றன. இவை ஒவ்வொன்றின் இலக்ஷியமும் ஜனங்களின் துன்பத்தைக்குறைத்துப் பொருளாதார நெருக்கடியைப் போக்கி இன்பத்தைப் பெருக்குவதேயாகும். பெல்லமியின் ஏற்பாடும் இக்குறிக்கோளையே அடிப்படையாகக் கொண்டுள்ளது. இது மானிட வாழ்க்கையின் சகோதரத்துவத்தை உணர்ந்து, பொங்கும் மங்களம் எங்கும் தங்க வழிகாட்டுகின்றது.

இவ்வேற்பாட்டை உலகிற்கு அளித்த பெரியார் எட்வர்டு பேல்லமி யென்பார். அவர் அமெரிக்காவில் சென்ற நூற்றாண்டிலிருந்த ஓர் பிரபல பிரசுரகர்த்தரும் நூலாசிரியருமாவார். ஐக்கிய நாட்டின் ஒருபகுதியாகிய மாஸாசஸட்ஸில் கி. பி, 1850-ம் ஆண்டு அவதரித்தார். 48 வருஷங்களே இந்நிலவுலகில் ஜீவித்திருந்தார். அவர் இயற்றியநூல்களுள் 'கழிந்தகாலக் காட்சி' (*Looking Backward*), 'சமத்துவம்' (*Equality*) என்ற இரண்டுமே முக்கியமானவை. அவருடைய இறந்தகாலவாராய்ச்சியானது கி. பி. 2000-த்திலிருந்தே தொடங்குவதால், அவருடைய கொள்கை

---

இவ்வியாசம் பெரும்பாலும், அகிலதேச பெல்லமி சங்கத்தின் தென் ஆப்பிரிக்காக் கிளைஸ்தாபனத்தின் தலைவராகிய ஸ்ரீமான் ப்ரொட் W. பெல் என்பவரால் ஆகஸ்டுமாத "தியாஸபிஸ்டு" பத்திரிகையில் எழுதப்பட்டுள்ள கட்டுரையைத்தழுவியது. ஓரோரிடத்தில் ஆங்கிலத்திலிருந்து மொழிபெயர்ப்பெனினும் அமையும்.

கள் முற்போக்கான இக்காலத்து அறிவாளிகட்கும் முற்பட்டு நிற்கின்றன. நமது சமூக வாழ்க்கையின் பொருளாதாரமும் செல்வ நிலையும் தன்னலத்திலும், சகோதரத்துவமின்மையிலும் வேரூன்றிக் கிடப்பதால் நீடித்திருக்கமாட்டா வென்று அவர் கண்டார்; இப்பொழுது நிகழ்ந்து வரும் சீர்கேடுகளை அக்காலத் திலேயே ஊகித்து எச்சரித்தார்.

பெல்லமி இயற்றிய அவ்விரண்டு நூல்களையும் தற்காலத்தின் கலிநீக்கும் சாஸ்திரங்கள் என்னலாம். ஏனெனின் அவைகளிற் கூறப்பட்டிருக்கும் சமூகப் பொருளாதார ஏற்பாடுகளை அனுசரித் தால் இவ்வேழையுலகம் சிக்குண்டு அவதிப்படும் பல தொல்லைகளி னின்றும் விடுபெறும். பெல்லமியின் திட்டத்தில் வல்லரசுகள் சண் டை யிடுவதொழியும். வேலையில்லாத்திண்டாட்டம் இராது. ஜனங் களினிடை வறுமையும் துன்பமும் காணப்படா. இப்பொழுது நிகழ்ந்துவரும் இலாபசம்பாத்திய சம்பிரதாயத்தினல் மாந்தர்க ளிடையே காணும் தீயவெண்ணங்களும் மனப்பாங்கும் மறச்செய் கையும் அறவே நீங்கும். ஜாதிச்சண்டையும் சமயப்போரும் அற்று அமைதியெங்கணும் உலவும். பாடுபட்டுத்தேடிப் பணத்தைப் புதைத்து வைக்கும் அவசியமின்மையால் உத்தியோகப்படித்தாங் கள் யாவும் புனிதப்படும். சின்னஞ்சிறு குழந்தைகளும் பிணி வாய்ப்பட்டுழல்கின்றோரும் வயோதிகர்களும் அன்னவஸ்திரமின்றி அவதிப்படார். எங்கும் அமைதி, எங்கும் இன்பம் உண்டாகும்.

இவ் வரமளிக்கும் அவருடைய கொள்கைகள்தாம் என்ன? இவ்வுலகத்தில் உற்பத்தியாகும் பொருளின் தொகை ஈண்டு வசிக்கும் ஜனத்தொகை முழுவதற்கும் போதுமானதென்பது அவரது அடிப்படையான கொள்கை. ஊணும், உடையும், வசிக்க இடமும், பிற இன்றியமையாத பொருள்களும் போதிய அளவு உள. இவையாவும் ஒவ்வொருவருக்கும் கிடைக்கக் கூடியனவாயிருக்கவேண்டும். விஞ்ஞானசாஸ்திரப் பிரயோகத்தி லும் நூதனப்பொறிகளின் உதவியினலும் எல்லோருக்கும் வேண்டுவவேண்டியாங்குக்கொடுத்தல் கூடும். அன்றியும், ஒரு புறம் கூலிக்காரர் வதையும், ஒரு புறம் ஆத்ம அமைதியை அறவே யொழிக்கும் கவலையும் மனோவேதனையுமின்றி உற்பத்திசெய்வதும், செய்த பொருளை ஜனங்களிடை விநியோகஞ் செய்து அவர்களை அனுபவிக்கச்செய்வதும் நிகழும். ஒவ்வொருவனுக்கும் வாழ்க்கை யின் பயனை ஆராய்ந்து உள்ளபடி உணர்தற்கேதுவாய ஒய்வு இன்றி யமையாதது. யந்திரங்களினுதவியால் எவனுக்கும் ஓய்வதிகமும் தளர்ச்சிநீக்கமும் உண்டாகவேண்டுமேயல்லாது வேலையகப்படாத

அவதியல்ல. இத்தகைய வாழ்வு உலக மக்களிடை நிகழவேண்டுமா யின் அதற்கு மார்க்கம் எல்லாச்சட்டதிட்டங்களையும் கவிழ்ப்பது அல்ல; உதிரவெள்ளமுண்டாக்கும் புரட்சி அல்ல. அறிவுட னும் அமைதியுடனும் நியாயவிரோதமின்றி எல்லோருடைய நன்மைக்காக இதுவரை எய்தியதையும் கையிலுள்ளதையும் பயன்படச்செய்வதே. தனவந்தர்களைக்கொள்ளையிட்டு ஏழை களைத் தனிகர்களாக்கவோ, அல்லது எல்லாரையும் சுவாரஸ்யமற்ற சமரஸப்படுத்தவோ அவர் விரும்பவில்லை. ஒற்றுமையே அவரது இலக்ஷியம்; எனினும் அது வேற்றுமையில் ஒற்றுமை.

பெல்லமியின் ஏற்பாட்டின் முக்கிய அம்சங்களாவன:-நாட்டி லுள்ள பூமியாவும் ஜனநாயகத்திற்கே உரியது. அரசாங்கமானது தற்காலம் ஜீவித்துவரும் மாந்தர்கள் சார்பாகவும் பின்வரவிருக்கும் தலைமுறைக்காகவும் ரக்ஷகனாக இருக்கும். ஆகவே பூமியைப் பரா தீனமாக்க இயலாது. ஆனால் ஜனங்கள் தங்களுக்குத் தேவையான நிலப்பரப்பை அரசாங்கத்தாரிடமிருந்து நீண்ட கால போக்கியத் திற்கு, அதற்கேற்ற வருஷவரி செலுத்திப் பெற்றுக் கொள்ள லாம். இந்த வரி ஒன்றுமாத்திரமே ஜனங்கள் கொடுக்கவேண்டிய தீர்வையாகும். அரசாங்கமே நாட்டிலுள்ள சகலவித பொருள்உற் பத்திக்கும் பொறுப்பாளியாகும். ஜன நாயகத்தின் அங்கத் தினர்க்கு அளிக்கும் பொருள்களுக்கு, இப்பொழுது நாம்கொடுப் பது போலவே, அரசாங்கம் விலைவாங்கிக்கொள்ளும். ஜனநாயகத்தி லிருக்கும் வயதுவந்த ஆண் பெண் இருபாலார்க்கும் அரசாங்க மானது ஆண்டுக்கு இவ்வளவென்று நிரந்தரமாக அவர்கள் ஆயுள் உள்ள வரை வருமானம் கொடுக்கும். இதிலிருந்தே அவர்கள் பொருள்களுக்கு விலை கொடுத்து வாங்கிக்கொள்வார்கள். இந்நிர ந்தரவருமானத்திற்குப் பதிலாக, சமூகத்திலுள்ளதொழிலாற்றும் திறனுடைய யாவரும் மூப்புவந்தடையும்வரை தத்தமது உழைப்பை அளிக்கவேண்டும்.

"இதற்கெல்லாம் பணம் ஏது?" என்று ஒருவினா எழக்கூடும். பெல்லமிதிட்டத்தில் இங்கேதான் நாம் கவனிக்கவேண்டியதொன் றுளது. அவரது ஏற்பாட்டில், நாம் சாதாரணமாக நினைத்திருக்கும் வகையில், "பணம்" என்பது இராது. தற்காலத்தில், ஒருவன்தன் னிடத்துப் பணம் வைத்திருப்பதனாலேயே அதற்கு உரியவனாக மாட்டான். கொள்ளையடித்துப் பிடுங்கியவனும் கொலை செய்து பறித்தவனும் தத்தம் கையிலுள்ள பணத்திற்குக் கஷ்டப்பட்டு உழைத்து சம்பாதித்தவனைப் போல் உரிமையுடையவர்களாவார் களா? விற்பதும் விலைக்கு வாங்குவதும் தத்துவ ஆராய்ச்சியின்படி

சமூகநன்மைக்கு மாறுபட்டவையாகும். இத்தகைய வியாபாரம் பிறர் கஷ்டநஷ்டம் சிறிதும் பாராத சுயநலப் பயிற்சி யாகும். இப்பழக்கத்தில் வளர்ந்த ஒரு ஜன நாயகமானது மேன்மை யான நாகரிகத்தை ஒருகாலும் அடையாது. ஆகவே அவரது ஏற்பாட்டின்படி காணப்படும் பணத்தை, 'கணக்குப் பணம்' அல்லது "பைத்துப்பணம்" (*money of account*) என்று சொல்லலாம். இத்தகைய பணத்தின் மதிப்பானது எக்காலத்தும் குறையாது; ஒரே நிதானமுடையதாயிருக்கும். இப்பணத்தைச் சேர்த்துவைக்கவும் இயலாது; சேமித்துப் பத்திரப் படுத்தலும் அவசியமில்லை. எல்லோருக்கும் எக்காலத்திலும் போதிய அளவு கொடுக்கப்படும். எதிர்காலத்துத் தேவைக்கும் அரசாங்கமே உத்தரவாதமாய் நிற்கும். ஒவ்வொருவருக்கும் தரப்படும் வருஷாந்தர வருமானமானது ஜனநாயகத்தின் மொத்த வருமானத்தில் அவரவருக்குரிய பங்காகும்.

எனவே ஒவ்வொருவரும் தத்தமக்கு வேண்டிய வருஷவருமா னத்தைப் பெற்றுக்கொண்டு ஐக்கிய உற்பத்தி திட்டத்தின்படி (*Cooperative system of production*) தங்கள் உபயோகத்திற் கும் பொது ஜனங்களுக்கும் தேவையான பொருள்களைச் செய்வார் கள். பொருளுற்பத்தி தீவினைபயக்கும் வியாபாரப் போட்டியின் பொருட்டோ, ஒரு சில முதலாளிகளின் லாபத்திற்காகவோ, பிற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதற்கென்றோ உண்டாகாது. ஒரு தேசத்தின் க்ஷேமத்தை அதன்விளைபொருள்களிலிருந்தோ ஏற்றுமதித்தொகையிலிருந்தோ அளத்தல் தவறாகும். அத் தேசத்திற்குள் மக்களிடை நிகழும் பொருள் விநியோகத்தின் மதிப்பே அதன் உண்மை அளவுகோல். பொதுநலத்திற்கும் ஜனநாயகக்ஷேமத்திற்கும் இவ்விதம் உழைப்பதால் தற்பிரயத்தன மும் ஊக்கமும் குன்றி விடுமென்பதில்லை. தாம் பிறந்து வளர்ந்து வாழ்ந்துவரும் ஜனநாயகத்தின் ஆக்கங்கருதி மேலும் மேலும் தளரா ஊக்கத்துடன் மக்கள் உழைப்பர்.

பெல்லமியார் புகழும் இம்மார்க்கம் வெறுங் கட்டுக்கதை யல்ல; காவியக்கற்பனையல்ல. சென்ற சிலவருஷங்களாக இவ்வுலகம் அல்லலுறுவதைக்கண்ட பல மேனாட்டு அறிஞர்களும், அரசியல் அர்த்த சாஸ்திர வல்லுநரும் பெல்லமியார் இலக்ஷியங்கள் விரும் பத்தக்கவை, சாதிக்கக் கூடியவை, சாத்தியமானவை யென்று அறைகின்றனர். நியுயார்க் ஹோரஸ்மான் கலாசாலைத்தலைவராகிய ரோலோ. ஜி. ரெயினால்ட்ஸ் என்பாரும், கொலம்பியா சர்வகலா சாலைப் பேராசிரியராகிய ஜான்டீவி யென்பாரும் பெல்லமியை ஓர்

தீர்க்கதரிசியென மதிக்கின்றனர். நியுயார்க் நகரத்துப் பாதிரிப் பெரியாராகிய ரெவரண்டு ஜே. எச். ஹோம்ஸ் என்பார் பெல்லமியின்நூலை அமெரிக்க ஜனசமூகவேதத்தின் புதிய ஏற்பாடு (*New Testament*) என்று புகழ்ந்து பாராட்டுகின்றார். அவரது கொள்கைகளைப் பரப்புவதற்கென்றே அகிலதேச பெல்லமி சங்கமொன்று நிறுவப்பட்டுள்ளது. அமெரிக்கா மாத்திரமன்று; அனைத்துலகமும் அவரது உண்மை நெறியைக் கடைப்பிடித்து ஒழுகல் வேண்டும். அக்காலத்து உலகில் எங்கும் இருப்பது இன்பமே; எங்கும் அமைதியே; எந்நாளும் துன்பமில்லை.

---

## நார்வே நாடு

ஒருதமிழர் நார்வே சென்றிருந்தபோது தாம் கண்டகாட்சிகளைத் தம் புதல்வருக்கு ஒரு கடிதமூலமாக எழுதியதிலிருந்து திரட்டியது:

"நார்வேபோனபோது முதல் இரண்டுநாள் மழையும் மேகமுமாக இருந்தன. பிறகு எல்லாம் வெளிவாங்கியது. மேமீ 26உ (1933) இரவு 12 மணிக்கு ஸூரியன் அஸ்தமிப்பதுபோல மேற்கே தாழ்ந்தது. பிறகு கீழேபோகாமல் உயர்ந்து வடக்கே நோக்கிச்சென்றது. நடு இரவு ஸூரியன் நேரே மேற்கே உதிக்கிறது. காலை 6 மணிக்குள் மெள்ளமெள்ளக் கிழக்குப் பக்கத்துக்குச் சுற்றிவருகிறது. பிறகு தென்பாகமாகச் சுற்றி மறுபடி மேற்கே வருகிறது. நார்வேதேசத்தில் இக்காலத்தில் மூன்றுநாலு மாதத்துக்கு இரவே கிடையாது. இரவும் பகலும் ஒன்றுபோலவேதான். கடியாரத்தால்தான் காலநிர்ணயம். தூங்குவது மிகக்கடினம். குளிர்காலத்தில் இதற்குநேர் எதிர். மூன்று நாலுமாதம் ஒரே இரவு, ஒரே இருட்டு; ஸூரியனே கிடையாது. அப்பொழுது நல்ல தூக்கம்வரும். அது ஆரோக்கியமான காலம் என்கிறார்கள். ஆரோரா என்ற வாணவித்தைபோன்ற ஒரு வடதுருவ ஒளி அப்பொழுது சிறிது வெளிச்சம் தருகிறது. இந்நாடுகளில் சுமார் ஆறாயிரம் அடி உயரமுள்ள மலைகள் இருக்கின்றன. இவை எப்பொழுதும் பனிக்கட்டி மூடியவை. இவைகளின்மீது ஸூரியன் நாலுபக்கத்திலுமிருந்து இடைவிடாது பிரகாசிக்கும்போது இவை தங்கம்போல் ஒளிவீசுகின்றன. இதனால் இம்மலைகளை ஸம்ஸ்கிருத நூல்களில் 'மஹாமேரு', 'ஸ்வர்ண பர்வதம்', 'த்ருவஸ்தானம்' என்றெல்லாம் வர்ணிக்கிறார்கள்."

ஸ்திரீதர்மம்.



# யாத்திரை

## கு. வே. சிவசுப்ரஹ்மண்யம்

சங்கரசாஸ்திரிகள், ராமாதீக்ஷிதர் இருவரும் வயது முதிர்ந்தவர்கள். முன்னவர் செல்வர்; நல்லொழுக்கம் உடையவர். வயது ஐம்பது எனினும் நரை திரையற்று வலிமைகொண்டவராய் இருந்தார். பின்னவர் அவரைவிட வயது கொஞ்சம் குறைவுள்ளவர்; ஆயினும் சம்சாரி; சாஸ்திரிகளைவிடக் கொஞ்சம் செல்வத்தில் குறைவுபட்டவர். ராமாதீக்ஷிதருக்கு மூத்தசகோதரர் குடும்ப பாரத்தை ஏற்றுக்கொண்டு, செம்மை நெறிவழுவாமல் இருந்ததனுல் தீக்ஷிதர் குடும்பக் கவலையற்று வாழ்க்கை நடத்திவந்தார்.

அவர்கள் இருவரும் காசியாத்திரை செய்தல்வேண்டும், காசியம்பதிக் கடவுளைத்தொழுதல் வேண்டும் என்று பல நாட்களாகச் சிந்தித்துவந்தனர். ஒவ்வோர் ஆண்டும் ஏதேனும் ஓர் தடை ஏற்பட்டுவந்தமையால், தங்கள் எண்ணத்தை நிறைவேற்றக் கூடாமையைக் கண்டு மனம்புழுங்கினர். ஒரு நாள், தீக்ஷிதர் சாஸ்திரிகளைக்கண்டு, "இந்த ஆண்டு நாம் எப்படியேனும் போய்வருதல்வேண்டும்" என்று கூறினர். அதற்குச் சாஸ்திரிகள் கூறுகிருர்:

"இந்தவருஷம் நாம் போவது முடியும் என்று நினைக்கவில்லை. நான் கட்ட ஆரம்பித்த கட்டிடம் இன்னும் முடியவில்லை. ஆயிரம் ரூபாய்வரையில் செலவு செய்தாய்விட்டது. இனி, கொஞ்சப் பணத்தில் அதை முடித்துவிடுதல் வேண்டும் என்று எண்ணியுள்ளேன். ஆகையால் அடுத்த ஆண்டு செல்வோம்."

"நமக்கோ வயது ஆகிவிட்டது. நாளை நாளை எனில் அது நமனுடையநாளே தவிர, நம் நாள் அல்ல."

"ஆரம்பித்தசெய்கையை அறைகுறையாய் விட்டுப்போவதோ? என்மக்கள் இதனைக் கவனிக்கும் திறன் அற்றவர்கள். நன்மக்களை நான் பெறவில்லை. அவர்கள் இனி என்றுதான் நல்லொழுக்கம் கற்றுக்கொள்ளப்போகின்றனரோ! எவ்வேலையையும் சரியாய்ச் செய்யும் திறன் அற்றவர்களாய் உள்ளனரே!!"

---

*டால்ஸ்டாய் கதையொன்றைத் தழுவி எழுதப்பட்டது.*

"சங்கரா, இன்னும் எத்தனைவருஷம் நீ இவர்களுக்கு உதவியாய் இருக்கமுடியும்? நீ மறைந்தபின்னர் அன்னார் தாமே உனது தொழில்களைக் கவனிப்பர். இப்போதே அவ்வேலைகளைக் கவனிக்கும்படிவிட்டால் என்ன? நீதான் அவர்களைக் கெடுக்கின்றாய். எல்லாவற்றையும் அவர்களிடம் ஒப்படைத்துப் புறப்படு."

"பணம் இல்லையே!"

"பணத்திற்கு என்ன, நான் தருகிறேன். அடுத்தவாரம் நாம் புறப்படுதல் வேண்டும்."

அவ்விரவு சாஸ்திரிகள் தீக்ஷிதர்கூறியவற்றைச் சிந்தித்தார். சிந்தனையின் பயன், "நீர்மேற்குமிழி ஒத்தது இவ்வுடல். நாளை நாளை எனில் செல்லும்வழிக்கு ஓர் நற்செய்கை செய்ய முடியாது போகும்; அதனால் சென்று வருதல் நலம்" என்று அவர் தீர்மானித்ததே. விடியற்காலையில் ஆற்றங்கரையில் தீக்ஷிதர் சொன்னபடி செய்வதற்குத் தாம் தயார் என்று தம் சம்மதத்தைக் கூறினர்.

குறிப்பிட்டநாளில் அவ்விருவரும் யாத்திரைக்குப் புறப்பட்டனர். சாஸ்திரிகள் தம் மக்களுக்கு, செய்யவேண்டியனவற்றைச் செம்மையாகச் செய்யும்படி பல பல புத்திமதிகளைக் கூறினர். தீக்ஷிதரோ அவை ஒன்றும் கூறாமல், "உங்களுக்கே நடந்து கொள்ளவேண்டியனவும் செய்யவேண்டுவனவும் தெரியும்" என்ற ஒரேசொல்லைத்தான் சொன்னர். அன்றியும் தங்கள் இருவரது வழிச்செலவிற்கு வேண்டியபணத்தையும், தமது மனைவியால் தரப்பட்ட ஆகாராதிகளையும் எடுத்துக்கொண்டார். சாஸ்திரிகள் தமது ரொக்கப்பணத்தில் இருநூற்றை எடுத்துக்கொண்டு, மிகுதியைத் தன் இல்லாளிடம் ஒப்படைத்துப் பத்திரமாக வைத்திருக்கும்படிக்கும், அவ்வருட வருமானங்களை அதிகச்செலவு செய்யாமல் சேமிக்கும்படிக்கும் கூறிவிட்டுக் கிளம்பினர்.

அவ்விரண்டு முதிய அந்தணர்களும் மகிழ்ச்சியோடு ஊரார் வழியனுப்பப் புறப்பட்டனர். நடையிலேயே புறப்படலாயினர். காடும் மலையும் ஆறும் தாண்டிக் காசிக்குச்செல்ல மாதம் ஆறு பிடிக்கும். வீட்டைவிட்டுக் கிளம்பியவுடனேயே தீக்ஷிதர் தமது குடும்பக்கவலைகளை மறந்து, "காசியம்பதி செல்வேனு! விசுவநாதனையும் விசாலாக்ஷியையும் கண்குளிரக் காணுவேனு! கங்கையின் புனித நீர் எனது சடலத்தை நனைக்குமா!" என்ற ஒரே கருத்தினராய் நடந்தார். சாஸ்திரியாரோ, தமது தேகம் யாத்திரை செய்யினும், மனம் அகத்திலேயே இருந்தபடி, தமது குடும்பவிஷயங்களிலேயே உழன்று அதே சிந்தனையில் ஆழ்ந்து, "நடந்து வீடு திரும்பிவிடுவோமா?" என்று கூட எண்ணி நடந்தார்.

## 2

மூன்று மாதம்வரை இவ்விருவரும் பல பல கிராமங்களையும் தாண்டி, காடு, மலை, நதி, ஆறுமுதலியவற்றைக் கடந்து ஆந்திர நாட்டின் தென் எல்லையை அணுகிவிட்டனர். அதுவரை அவர்களுக்கு யாதொரு கஷ்டமும் தோன்றவில்லை. அதன்பின் அவர்கள் சென்றவழியில் உணவுப்பொருள்கள் கிடைக்கவில்லை. ஐந்து வருஷமாக மழையின்றி வருந்திய ஊர்கள் வழியாக அவர்கள் செல்லவேண்டியிருந்தது. ஒரு காலத்தில் செழிப்பாக இருந்த ஊர்களெல்லாம் பூகம்பத்தினால் பாழடைந்து கிடந்தன. இருக்க இடமும், உண்ண உணவுமற்று மாண்டவர்போக எஞ்சியிருந்தோர் ஊரைவிட்டு ஓடிவிட்டனர். உணவுப்பொருள்கள் கிடைத்த ஊர்களிலிருந்து, இரு கிழவர்களும் தாங்கள் தூக்கிச் செல்லக்கூடிய அளவு அவற்றை வாங்கிக்கொண்டார்கள்.

பேசிக்கொண்டே இருவரும் செல்லலாயினர். தீக்ஷிதருக்குத் தாகம் எடுத்தது. அவர்கள் சென்றவழியில் ஊர் ஒன்றுமில்லை. சிறிது தூரத்தில் ஓர் கிராமம் தெரிய, அக்கிராமத்தில் சென்று தண்ணீர் குடித்து வருவதாகச் சாஸ்திரிகளிடம் கூறினார் தீக்ஷிதர். தமக்குத்தாகம் இல்லை என்று பதிலளித்தார் சாஸ்திரிகள். அப்படியானால் தமக்காகக் காத்திருக்கவேண்டாமென்றும், மெதுவாகப் போய்க்கொண்டிருந்தால், தாம் அவரை வந்து சந்திப்பதாகவும் கூறித் தீக்ஷிதர் கிராமத்தில் பிரவேசித்தார்.

அங்கே மனிதர்களே காணப்படவில்லை. பல வீடுகள் பாழடைந்து சுத்த சூனியமாக இருந்தன. ஒரு வீட்டில் முக்கலும் முனகலும் கேட்கப்படவே அவ்வீட்டை அணுகினார் தீக்ஷிதர். கதவு சும்மா சாத்தப்பட்டிருந்தது. காசியம்பதிக் கடவுளின் பெயரைக் கூறித் 'தீர்த்தம்வேண்டும்' எனக்கேட்டார். பதிலில்லை. ஒரு சிறுகுழந்தையின் அழுகைக்குரல் கேட்டது. "இவ்வீட்டில் மனிதர்கள் இருக்கிறார்கள் என்று தெரிகிறது. ஆயினும் தாகத்திற்கு ஜலம் கூடக் கொடுக்காமல் அவ்வளவு கிருபண புத்தியுள்ளவர்களாய் இருக்க மாட்டார்கள்; ஏதேனும் கஷ்டமாய் இருக்கலாம், போய்ப் பார்ப்போம் என்று நிச்சயம் செய்துகொண்டு, கதவை நெருங்கினார். கதவு தாழ்ப்போடவில்லை. திறந்து உள்ளே சென்றார். திடுக்கிட்டார். அவரை அறியாமலே அவர் கண்கள் நீரைச் சொரிந்தன.

வீட்டின்கூடத்தில் ஓர் கிழவி, குனிந்த தலையுடன் சுவரில் சாய்ந்து உட்கார்ந்திருந்தாள். அவள் பக்கத்தில் ஒரு சிறு குழந்தை அவள் புடைவையைப் பிடித்துக்கொண்டு 'பசி பசி'

என்று கதறிக்கொண்டு இருந்தது. மற்ருேர் பக்கத்தில் ஓர் சிறு பெண் சுருண்டு புரண்டு படுத்திருந்தாள். வேருேர் பக்கத்தில் அக்குழந்தைகளின் தாய் முக்கி முனகிக்கொண்டு, அறையில் துணியுமற்றுப் படுத்திருந்தாள். ஓர் ஆடவன் தன் சுயப்பிரஞ்ஞை யற்றுக் கிடந்தான். அவர்கள் எல்லாரும் எலும்பும் தோலுமாகக் காணப்பட்டனரே ஒழிய, சதைப்பிடிப்புக் கொஞ்சம்கூடக் காணப்படவில்லை. நாற்றம் சகிக்கக் கூடாததாயிருந்தது.

கூடத்திலிருந்த கிழவி தலை நிமிர்ந்து, மெலிய குரலில் "ஐயா உமக்கு என்ன வேண்டும்? எங்களிடம் ஒன்றுமில்லை" என்று தன் தெலுங்கு பாஷையில் கூறினள். தீக்ஷிதருக்குத் தெலுங்கு தெரியுமாதலால் அவள் சமீபம்சென்று தண்ணீர் வேண்டும் எனக் கேட்டார்.

அதற்கு அவள், "ஐயா, வீட்டில் யாருமில்லை, உமக்கு ஜலம் எடுத்துவந்து கொடுக்க" என்ருள்.

"அம்மா, அங்கோர் பெண்பிள்ளை படுத்துள்ளாளே. அவளை யாவது கவனிக்கக்கூடாதா?"

"சுவாமி, எங்களை யார் கவனிப்பார்கள்! நாங்கள் இறக்க வேண்டியதே" என்று தழுதழுத்த குரலில் கூறினள் கிழவி. அவள் தொண்டை அடைக்க ஆரம்பித்தது.

இதைக்கண்ட தீக்ஷிதர், ஆடவன் சமீபம் சென்று அவனைத் தட்டி எழுப்ப, அவன் பேந்தப் பேந்த முழித்து, "சு - வா - மீ, நா - ங் - க - ள் - இ - ற - க் - க - ப் - போ - கி - ருே - ம்" என்று பேசமுடியாமல் மெதுவாக விட்டு விட்டுப் பேசினன். கிழவியிடம் உள்ள குழந்தையைச் சுட்டிக் காட்டினனே ஒழிய, அவனுல் பேசமுடியவில்லை. கண்ணீர்விட்டு அழுதான். இவற்றை யெல்லாம் பார்த்த தீக்ஷிதருக்குத் துக்கம் நெஞ்சையடைத்தது. நீரும் கண்களில் ஊறியது. தமது தோளில்உள்ள மூட்டையை இறக்கி, நனைத்துப் பதமாக்கி வைக்கப்பட்டிருந்த அவலை எடுத்து அவனிடம் கொடுக்க, அவ்வாடவன் அதை மறுத்துக் கிழவிக்குத் தரும்படி சமிஞ்ஞைசெய்தான். கிழவியோ தனக்கும் வேண்டா மென்று சிறுவனையும், பெண்ணையும், பெண்பிள்ளையையும் சுட்டிக்காட்டி அவர்களுக்குத் தரும்படி கூறினள்.

தீக்ஷிதர் சிறுவனிடம் அவலைத் தர, அவன் வெகு ஆவலுடன் உண்டான். சிறுமியிடம் தர அவளும் அதிக ஆவலுடன் உண்டாள். கிழவிக்கும் தர அவள் தொண்டை வறண்டுபோயிருந்ததால் தொண்டையில் அடைத்துக்கொள்ள, 'தண்ணீர் - தண்ணீர்' என்று கதறினள். தீக்ஷிதர் தண்ணீர் இருக்கும் இடம்

கேட்டுத்தெரிந்துகொண்டு, அங்கேசென்று தண்ணீர் எடுத்து வந்து, அவர்களுக்குத் தந்தார். அதே அவலைப் பெண்பிள்ளைக்குத் தர அவள் தேகம் பஞ்சைப்போல் இருந்ததால், அது உள்ளே செல்லவில்லை.

தீக்ஷிதருக்கு அவர்களை அந்நிலையில் விட்டுச் செல்ல மனம் இல்லை. கோடரி தேடி எடுத்துச் சென்று, விறகுவெட்டி, அடுப்பு மூட்டி, தாம் கொண்டுவந்திருந்த உணவுப் பொருள்களினால், கஞ்சி தயார்செய்து, அவர்கள் எல்லாருக்கும் தர, ஏதோ தேவாமிர்தத்தைப் பருகுவதுபோல், வெகு வெகு ஆவலுடன் குடித்து, அன்பு ததும்பும் விழியால் தீக்ஷிதரை நோக்கினார்கள்.

## 3

கஞ்சியைக்குடித்த அவ்வாடவன் களைநீங்கப்பெற்றுத் தனது குடும்ப வரலாற்றைக் கூறலானான்.

“ஸ்வாமி! நாங்கள் அதிக பணக்காரர்களுமல்லர், ஏழைகளுமல்லர். சாப்பாட்டுக்கு வேண்டியவை எங்கள் நிலங்களிலிருந்து கிடைத்தன. சென்ற ஐந்து வருடகாலமாக மழையில்லை. நாங்கள் சேமித்து வைத்திருந்த உணவைச் சில நாள் வரையில் சாப்பிட்டோம். உணவுப்பொருள் குறைவதைக்கண்டு, குழந்தைகளுக்குத் தினந்தோறும் உணவளித்து நாங்கள் மூன்றுநாளைக்கொருதரம் உண்டுவந்தோம். கடைசியாக உணவெல்லாம் தீர்ந்துவிட்டது. பணத்தைக் கொடுத்து உணவு பெற்று உண்டு வந்தோம். சில நாளில் விலைக்கும் உணவு கிடைப்பது அரிதாகிவிட்டது. காய்ந்த இலை, சருகு முதலியவற்றைத் தின்றோம். இந்த நிலையில் ‘பெரிய பூகம்பம் ஒன்று உண்டாகி, எங்கள் கிராமத்தையும், மற்றும் பல கிராமங்களையும் அழித்து, மனிதர்களையும் பலியாகப்பெற்றது. எஞ்சியிருந்தோரிற் சிலர் நாட்டைவிட்டு ஓடிவிட்டனர். நாங்கள் ஓடமுடியாது என்று தீர்மானித்து இங்கேயே மடிவோம் என்று இருந்துவிட்டோம். எனது மனைவிக்கு இந்தப் பூகம்பம் உண்டானதிலிருந்து குளிர் சுரம் அடித்துவருகிறது. நாங்கள் இறக்கும் நிலையில் இருந்தோம். தெய்வம்போல் வந்து நீங்கள் காப்பாற்றினீர்கள்” என்று பரிதாபமான குரலில் சொன்னான்.

அவனது வரலாற்றைக் கேட்ட தீக்ஷிதருக்குக் காசியாத்திரை மறந்துபோய்விட்டது. அன்று இரவு அவ்வீட்டிலேயே தங்கி அவர்களுக்கு வேண்டிய உதவிசெய்தார். இரவில் கண்விழித்திருந்து, அப்பெண்பிள்ளைக்கு வைத்தியம் செய்தார். தாம்

கொண்டுவந்திருந்த உணவுப் பொருள்களினால் மூன்று நாட்கள் வரை அவர்களைக் காப்பாற்றினர்.

நான்காம்நாள் குழந்தைகள் விளையாடலாயின. ஆயினும், பெண்பிள்ளையும் ஆடவனும் நகரும் சக்தியைப் பெற்றார்களே தவிர நடக்கும் சக்தியைப் பெறவில்லை. உணவுப் பொருள் எல்லாம் தீர்ந்துவிட்டன. தீக்ஷிதரை, தாம் காசிக்குச் செல்ல வேண்டுமென்ற எண்ணமும், அவர்களை அந்நிலையில் விட்டுச்சென்றால் பிழைக்க இடமில்லையே என்ற எண்ணமும் வருத்தத்தொடங்கின. ஈசனைக் கும்பிட்டார்; யோசித்தார். "என்னைக் கடவுள் சோதனை செய்யத்தான் எனக்குத் தாகம் உண்டாகும்படியும், இவ்விடம் வரும்படியும், இவர்களுக்கு உதவி செய்யும்படியும் நியமித்திருக்கிறார். இவர்களை இந்நிலையில் விட்டுச்செல்லுதல் கூடாது. இவர்களைக் காப்பாற்றுவதே புண்ணியம். கல்லில் உள்ள கடவுளைக் கும்பிடுவதைவிட மனித ஹிருதயத்தில் உள்ள கடவுளைக் கும்பிடுவதே மேல். அதுவே பல தீர்த்தங்களில் ஸ்நானம்செய்த பலன். இதனாலன்றோ 'உண்டிகொடுத்தோர் உயிர் கொடுத்தோர்' என்று கூறப்பட்டுள்ளது. இவர்களுக்கு ஒரு மாதத்திற்கு வேண்டிய உணவுப் பொருள்களைச் சேகரித்து வைத்துவிடில், ஒரு மாதம் சென்று இவர்கள் பிழைத்துக்கொள்வார்கள். தற்போது இவர்கள் வெளியே செல்லக்கூடச் சக்தியற்றவர்களாய் உள்ளார்கள்" என்று எண்ணுதன எண்ணி அன்று இரவைக் கழித்தார்.

மறுநாள் அதிகாலையில் உணவுப் பொருள்கள் வாங்கி வருவதாக அவர்களிடம் கூறிவிட்டுப் பக்கத்துக் கிராமங்களுக்குச் சென்று ஒருமாதத்திற்கு வேண்டிய உணவுப் பொருள்களை வாங்கி, ஓர் வண்டியில் ஏற்றி, நள்ளிரவில் இவர்கள் வீட்டில் இறக்கிவிட்டுத் திண்ணையில் உட்கார்ந்து யோசித்தார். "விடிந்தால் இவர்களை விட்டுப் போவது கடினம்; அதனால் பொழுது விடியுமுன் புறப்பட்டுப் போதல்வேண்டும். நாம் செய்யவேண்டியன செய்தாய் விட்டது. இவர்களால் ஏற்பட்ட பந்தம் போதும்" என்று. தம் சிறிய மூட்டையை எடுத்துக்கொண்டு காசிக்குச் செல்லும் பாதையில் நடக்கலாயினர்.

சுமார் ஏழெட்டு மைல் நடந்திருப்பார்; காகம் கரையலாயிற்று. ஓர் மரத்தின் அடியில் உட்கார்ந்து தமது சிறு மூட்டையில் உள்ள பணத்தை எண்ணினர். பணம் மிகக் குறைவாக இருந்தது. "இதை வைத்துக்கொண்டு காசிக்குச் செல்லுதல் இயலாது. நான் காசிக்குச் செல்லுதல் கூடாது என்பது கடவுளின் எண்ணம்போலும்; என் எண்ணமும் அவனுக்குத்தெரியும். இச்

சென்மத்தில் செல்வேன் என்ற நம்பிக்கை சிறிதும் இல்லை. அவனன்றி ஓரணுவும் அசையாது. நடப்பது நடக்கட்டும்'' என்று சிந்தித்துத் தமது ஊருக்குத் திரும்பலாயினர். மூன்று மாதங்கள் பிரயாணம் செய்த இவர் ஒரு மாதத்தில் ஊர்வந்து சேர்ந்தார். இவர்மட்டும் வந்ததைக்கண்டு, ஊரார் சாஸ்திரியாரைப்பற்றிக் கேட்க, இவர் நடந்தவிஷயங்களைக் கூறாது, தமது பணமெல்லாம் வழியிலேயே செலவாய்விட்டதால் காசிக்குச்செல்லப் பணம் இல்லை; அதனால் தாம் திரும்பலானர் என்று கூறினர். ஊரார் நகைப்புக்கு அவர் ஆளானர்.

தீக்ஷிதரை விட்டுப்பிரிந்த சாஸ்திரியார் கொஞ்சதூரம் நடக்கலாயினர். வழிநடந்த களைப்பால் மரத்தடியில் படுத்து அயர்ந்துவிட்டார். விழித்து எழுந்தவுடன் தீக்ஷிதரைக் காணவில்லை. தாம் படுத்திருப்பது தெரியாமல் முன்னால் சென்றிருக்கலாம் என்று எண்ணி நடந்தார். வழியில் போவோர் வருவோரையெல்லாம் கேட்டார். ஒருவரும் கண்டதாகக் கூறவில்லை. கங்கைக்கரையில் காணலாம் என்ற பெரும் நோக்கத்தோடு நடந்து காசியம்பதி அடைந்தார் சாஸ்திரிகள்.

## 4

காசியம்பதியை அடைந்த சாஸ்திரிகள் தமது நண்பரைக் கங்கைக்கரையில் காணலாம் என்ற நோக்கத்தோடு கங்கைக்கரைக்குச் செல்லும்பாதை எது என்று வினவினர். இவர் அந்நியர், காசிக்குப்புதியவர் என்று அறிந்த பைராகி ஒருவன் இவரைச் சிநேகம் செய்துகொண்டு தான் எல்லாவற்றையும் காட்டுவதாகவும் கூறினன். அவன் வார்த்தைகள் நம்பத்தகுந்தனவாக இருந்தன. அங்கே ஓர் தருமசாலையில் தங்கினர்கள்.

மறுநாள் காலையில் பைராகி தனது பணத்தை யாரோ திருடிக்கொண்டு விட்டார்கள் என்று கூக்குரலிட்டான். அதனைக் கேட்ட சாஸ்திரிகளுக்குச் சந்தேகம் தோன்ற ஆரம்பித்தது; முதல் நாள் தாமே அவனுக்கு வேண்டிய செலவுகளை யெல்லாம்செய்தார். அவனிடம் பணமேயில்லை. ஓர் வேளை இது அபத்தமாய் இருக்கலாம் என்று எண்ணினர். ஆயினும் தமது நண்பனைத் தேடும் வரையில் தமக்கு உதவியாய் இருக்கட்டுமென்று சும்மா இருந்தார். அன்று அமாவாசையானதால், இருவரும் கங்கைக்கரையை அடைந்து செய்யவேண்டிய சடங்குகளை யெல்லாம் செய்தனர். கூட்டம் ஏராளம். தமது நண்பர் பேரிலேயே குறியாயுள்ள சாஸ்திரிகள் நண்பர் எங்கேயாவது இருக்கிறாரா என்று சுற்றுமுற்றும்

பார்க்க, தமது நண்பர் மற்றோர் இடத்தில் பிண்டம்போட்டுக் கொண்டு, தர்ப்பணாதிகள் செய்வதைக் கண்டு, அவர் இருக்குமிடம் செல்லவேண்டுமென்று கூட்டத்தை நெருக்கிக்கொண்டு சென்றார். பைராகியும் பின்னாலேயே சென்றான். அங்கே சென்று பார்க்கத் தீக்ஷிதர் காணப்படவில்லை. தம்மைப் பார்த்திருக்கமாட்டார், ஒருகால் கோவிலுக்குச் சென்றிருக்கலாமென்று எண்ணி காசிவிசுவநாதர் ஆலயத்திற்குச் செல்லலானார். தம்பின் பைராகியும் வருவதைக்கண்டு இன்னும் சந்தேகம்கொண்டு தமது மடியில் உள்ள பணம் இருக்கிறதா என்று மடியைத் தொட்டுக்கொண்டே செல்லலானார்.

ஆலயத்தை அடைந்த அந்தணர் தமது நண்பரைக் காணுதல் வேண்டுமென்று சுற்று முற்றும் பார்க்கத் தெய்வத்தின் அருகில் அவர் பூஜைசெய்துகொண்டு இருப்பதைக்கண்டு தாம் அவரைக் கண்டு பிடித்தாய்விட்டது என்று எண்ணி, தாமும் பூஜைசெய்ய முற்பட்டார். இந்தச் சந்தர்ப்பத்தில் அவர் மனம் தீக்ஷிதர் பேரிலும் நின்றிருந்ததால் பணமூட்டையைப்பற்றி எண்ண சாவகாசம் இல்லை. பூஜையை முடித்துக்கொண்டு தம்பக்கத்தில் பைராகி இருக்கிறானோ என்று பார்த்தார். அவன் காணப்படவில்லை. பணமுடிப்பும் காணப்படவில்லை. வருத்தம் ஒருபக்கம், கோபம் ஒருபக்கம். இச்சமயம் தீக்ஷிதரைப்பற்றி எண்ண நேரமில்லை; போனதுபோகட்டும் என்று தீக்ஷிதரைப் பார்க்க, அவர் காணப்படவில்லை. எங்காவது தங்கி யிருப்பார் என்று எண்ணி ஒவ்வோர் தர்மசாலையாகத் தேடலானார். ஆனால் ஒருவரும் இவர் கூறும் ஆசாமியைக் கண்டதாகக் கூறவில்லை.

இவ்விதமாகவே மூன்றுநாளும், கங்கைக்கரையிலும், ஆலயத்திலும் தீக்ஷிதரைக்காணுவதே தவிர, அவருடன் பேசமுடியவில்லை. இஃதென்ன மாயம்! என்னைப் பார்க்கவில்லையா அவர்? பின் ஏன் என்முன் தோன்றி மறைந்துவிடுகிறார்?" என்று சிந்தித்துத் தாம் தங்கியிருந்த தர்மசாலைக்கு வந்து சேர்ந்தார். பணத்தைப் பறிகொடுத்ததால் நன்றாகத் தூங்கினார். ஆயினும் தாம் திரும்பும் செலவுக்குவேண்டிய பணத்தை மற்றோர் மூட்டையாகக் கட்டித் தம் இடுப்பில் கட்டிவைத்து இருந்ததினால் பைராகி அதைத் தெரிந்து கொள்ளவில்லை.

இதேவிதமாக ஒருவாரம் கங்கையில் ஸ்நானம்செய்வதும், கோவிலுக்குச் செல்வதுமாகவே இருந்தார். ஒவ்வொருநாளும் தீக்ஷிதர் இவர் முன் தோன்றித் தோன்றி மறைந்துவிடுவார்.

தீக்ஷிதரைத் தேடாத் இடம் இல்லை; விசாரிக்காத பேர்வழிகள் இல்லை.

சிலநாள் அங்கிருந்து கங்காஜலம் எடுத்துக்கொண்டு தமது ஊருக்குப் புறப்பட்டார்.

## 5

சங்கர சாஸ்திரிகள் தாம் முன்பு வந்தவழியே திரும்பலானார். பூகம்பத்தால் வாட்டமடைந்த பிரதேசங்கள் எல்லாம் நன்றாக முன்போல் ஆக்கப்பட்டிருந்தன. பஞ்சத்தால் வாடிய இடங்களி லெல்லாம் சுபிக்ஷம் குடிகொண்டிருந்தது. கங்கைக்கரையில் இருக்குமளவும் தமது வீட்டுக் கவலைகளை மறந்திருந்தார் சாஸ்திரிகள். அதைத் தாண்டினாரோ இல்லையோ மறுபடியும் கவலை அவரைப் பற்றிக்கொண்டது.

மாலைப்போதில் ஒருநாள் தீக்ஷிதரைவிட்டுப் பிரிந்த இடத்திற்கு வந்தவுடன், தீக்ஷிதர் ஞாபகம் வரலாயிற்று. ஒரு சிறு பையன் 'தாத்தா' என்று கூவிக்கொண்டே தனது வீட்டிற்கு இவரை அழைத்தான். அவன் வீட்டிற்குச் சென்ற சாஸ்திரிகள் 'இந்த ஊரில்தானே தீக்ஷிதர் தீர்த்தம் சாப்பிடச் சென்றார் அவரைப்பற்றி விசாரிப்போம்' என்று எண்ணினார்.

அவ்வீட்டில் இவருக்கு நடந்த உபசாரத்திற்கு ஓரளவில்லை. தம் தலையிலுள்ள மூட்டையை இறக்கியவுடன் ஒரு பெண் கால் அலம்ப ஜலமும், சாப்பிடப் பசும்பால் வகையும் கொண்டு வந்து கொடுக்க, "அம்மா! அன்னியனாகிய எனக்கு இவ்வளவு உபசாரம் நீங்கள் செய்வது ஏன்?" எனக்கேட்டார்.

"சுவாமி! அன்னியரானால் என்ன? நாங்கள் ஓர் அன்னியராலேயே காப்பாற்றப்பட்டோம். தரும சிந்தனையின்றி வாழ்ந்து வந்தோம். எங்களை நல்லவழியில் சேர்த்தார் அவர். நாங்கள் இறக்கும் நிலைமையில் இருந்தோம். எங்களைக் காப்பாற்றினார்" என்று பூகம்பம் உண்டானதுமுதல் தீக்ஷிதர் தங்களைக் காப்பாற்றியது வரையில் கூறினார்கள்.

அதைக்கேட்ட சாஸ்திரிகள் மனமகிழ்ச்சியடைந்து, "தீக்ஷிதர் புண்ணியவான், அவர்,

'அன்பர்பணி செய்ய என்னை ஆளாக்கி விட்டால்
இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே'

என்றபடி இவர்களுக்குப் பாத்திரரானார். நான் என்னசெய்தேன்!" என்று வருத்தம் ஓர்புறம், மகிழ்ச்சி ஓர்புறம் கொண்டு மௌனக் கடலில் வீற்றிருந்தார்.

அவ்வீட்டார், அன்று இரவு அவரை அங்கேயே தங்கும்படி வேண்டிப் பலமாக விருந்தளித்து உபசரித்தனர். அவ்விரவில் சாஸ்திரியார், தம்மூடத் தன்மையையும், தீக்ஷிதரின் கருணையையும், தெய்வத்தின் சோதனையையும், கனவுமூலமாய்க் கண்டுகொண்டார்.

மறுநாட்காலையில் வீட்டாரிடம் விடைபெற்றுக்கொண்டு அவர் மகிழ்ச்சியோடு அவர்களால் தரப்பட்ட உணவுப் பதார்த்தங்களை எடுத்துக்கொண்டு புறப்படலாயினர்.

* * *

குடும்பவிஷயங்களை எண்ணிக்கொண்டே தம் வீடுவந்து சேர்ந்தார் சாஸ்திரிகள். அவருடைய மக்களில் மூத்தவன் தாசிவீட்டில் இருப்பதையும், இளையவன் குடியனாய் மாறினதையும் நில பலங்கள் சாகுபடி செய்யாமல் தரிசாகக் கிடப்பதையும் கண்டு, அவர் கோபமும் வருத்தமும் கொண்டு, எல்லாரையும் திட்டி, இளையவனை அடிக்க ஆரம்பித்தார். இளையவனோ சமீபத்தில் கிடந்த தடியைஎடுத்துத் தனது பிதாவை அடித்துவிட்டான். அதற்குள் அவரது சம்சாரம் அங்குவந்து சேர்ந்து தனது பதியான சாஸ்திரிகளைப் பார்த்து, "காசிக்குப் போனதால் புத்தியும் போச்சோ, வயசு வந்த பிள்ளையை அடிக்கலாமா?" என்று வைது கிழவரைக் கோபித்துக்கொண்டாள்.

வசவு அடி முதலியவற்றைப் பெற்ற சாஸ்திரிகளுக்கு ஒன்றும் தோன்றவில்லை. அங்கு இருக்கப் பிடிக்காமல் தீக்ஷிதர் வீட்டிற்குச் செல்லலாம் என்று அங்கே செல்ல, தீக்ஷிதரின் மனைவி இவரை நல்வார்த்தை கூறித் திண்ணையில் இருக்கச்செய்து காசியாத்திரையைப் பற்றிக்கேட்டாள். சாஸ்திரிகள் எல்லாம் கூறித் தீக்ஷிதர் எங்கே என வினவினர்.

"நல்லவேளையாய்ப்போச்சு அவர் திரும்பிவந்தது. அவர் இல்லாமல் வீடு வெறுச்சுன்னு இருந்தது. பிள்ளைக்கும் ஒன்றும் ஓடவேயில்லை, தெய்வம்தான் அவரைத் திருப்பிக் கொண்டு வந்துவிட்டது" என்று கூறிக் கொல்லைப்புறத்தில் கீரைப்பாத்தி போட்டுக்கொண்டிருந்த தனது புருஷரை அழைத்தாள்.

தீக்ஷிதர் சாஸ்திரிகளைக் கட்டித்தழுவ, இருவர் கண்களினுமிருந்து தண்ணீர் பெருகலாயிற்று.

"சங்கரா! காசிக்குச் சென்றாயா? கங்கையில் ஸ்நானம் செய்தாயா? விசுவநாதனையும், விசாலாக்ஷியையும் கண்குளிரக் கண்டாயா?" என்று ஆவலுடன் வினவினர்.

"ராமா! நான்போனேன் உனக்குக் கங்காஜலம் கொண்டுவந்துள்ளேன். ஆயின் என் யாத்திரையைக் கடவுள் ஒப்புக்கொண்டாரோ என்பதுதான் சந்தேகம்?"

"சங்கரா! உன்னைக் கடவுள் கைவிடமாட்டார்; காசியாத்திரை புண்ணியம் இல்லாமற் போகுமா? கங்காஜலமும் புண்ணியம் தராதுபோகுமா?" என்று கூறினர்.

அதற்கு சாஸ்திரிகள் கூறுகிறார்: "ராமா! நானா யாத்திரை செய்தேன்? என் உடல் செய்தது, என்மனம் எங்கே போனதோ? என் ஆத்மா எங்கே போனதோ? என் உயிர் இங்கே இருந்தது. உன் உயிர் அங்கே இருந்தது. உனது கடமைகளைக் கடவுள் ஒப்புக்கொண்டார்" என்று கூறிக் காசியில் தீக்ஷிதர் கடவுளைப் பூஜித்ததையும், பிண்டோதகம் சமர்ப்பித்ததையும் தாம் நேரிற் கண்டதைப் பற்றிக் கூறினர்.

---

## தீர்த்தயாத்திரையின் நோக்கம்

நம்நாட்டிலுள்ள ஒவ்வொருவரும் தீர்த்தயாத்திரை செய்யவேண்டுமென்று நம்முன்னோர் ஓர்கடமை ஏற்படுத்தி யிருக்கிறார்கள். இதன் கருத்தென்ன? அழகிய நதிகள், மலைகள், கடற்கரைகள், ஆரோக்கியமான ஜலஊற்றுக்கள் முதலிய இயற்கை அழகுபொருந்திய இடங்களிலேயே நம் தீர்த்தங்களும் புண்ணியஸ்தலங்களும் உள. அங்கு யாத்திரைசெய்வதால் இயற்கைப்பொருள்களின் அழகும், சுத்தமும் நமக்கு இன்பம், மனவிரிவு, ஆரோக்கியம் முதலியவற்றை அளிக்கும். தவிரவும் அந்த ஸ்தலங்களில் மனத்தூய்மையும் ஈசன் அருளும் பெற்ற ஸாதுக்கள் பலர் கூடுவர். அவர்களது நிலைமையைக் காணும்போதே அது நம்மனதிலும் அவ்விதத் தூய்மை பெறும் முயற்சியை எழுப்பும். ஆகவே மனம் சாதாரண உலகக் கவலைகளை விட்டு ஈசன் நினைவிலும் அவனை அடையும் வழிகளிலும் வேர் ஊன்றும். ஆத்ம அழகும் சரீர ஆரோக்கியமும் வரும். பல நாடுகளிலுள்ள பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், நியமங்கள் முதலியவற்றைக்கண்டு பழகும்போது நமது மனம் விரிவடையும். நம் ஆசாரங்களில் எவை ஆத்ம ஸாதனத்துக்கு அவசியமானவை, எவை காலதேசத்துக்குத் தக்கபடி மாறக்கூடியவை என்ற தெளிவும் மனதில் வரும். இவ்வாறெல்லாம் யாத்திரை செய்து நலம் பெறுவதற்காகத் தீர்த்தயாத்திரை ஏற்படுத்தினர். —ஸ்திரீ தர்மம்.

# விதியின் கொடுமை

## ஜீபதி

---

"டக். டக். டக்" என்ற சப்தம் எவருடைய காலில் அணியப்பெற்ற பூட்ஸுகளால் கல்லூரிக்கட்டடத்தின் படிக்கட்டு களைத் தாவித் தன் காதுவழியாகச்சென்று ஹிருதயத்தைத் தாக்கு கின்றது என்று மேல்மாடியில் நின்ற கண்ணனுக்குத்தெரியும்.

"மாதூஉ"—மெல்லிய வீணுகானத்தை ஒத்ததொனி. "ஏண்டா இத்தனை நாழீஈ."

"கண்ணு"—இனிமைபொருந்திய கம்பீரமான குரல் வசீகரிக் கும் தன்மையுடையது. "வா! சமயமாகிவிட்டது; சீக்கிரம் போக லாம்" என்று மாதவன் கூறியதும் காந்தத்தால் இழுக்கப்பட்ட இரும்பு போலும் கண்ணன் அவன் அருகில் சென்று கைகோத் துக்கொண்டு வகுப்பறையின் உட்புகுந்தான்.

மாதவன் ஒருபெரிய தனவந்தனின் ஒரேபுதல்வன். சுமார் பதினேழு வயதுடையவன் எனினும் ஐந்தரை அடி உயரமும் நல்ல திடகாத்திரமும் பசும் பொன்னிறமும் பெற்றவன். நீண்டு அடர்ந்த புருவங்கள், அழகு நிறைந்த மூக்கு, செக்கச்சிவந்த அதரங்கள். அவன் தந்தை கல்லூரியில் ஒருபோதகாசிரியர். கண்ணனுக்கு இன்னம் பதினறு வயது பூர்த்தியாகவில்லை. மாதவன் உயரத்தினும் அரை அடி குறைந்தவன். எப்பொழு தும் புன்னகை தவழும் முகம்; கவலைக்குறிகள் தோன்ருத சிறு பால ரின் முகத்தை யொத்தது; பொன்னிறமுடையவன். எனினும் மாத வனினும் அதிக அழகு உடையவன். கபடமறியாப் பாலன்.

இருவரும் சினேகிதர்கள். விரோதிகளல்லாததால் சினேகிதர் களல்ல. இருவரும் அடிக்கடி சினிமா பார்க்கப் போவதானுமல்ல. ஆனல் இயற்கையாகவே தம்முள் ஒற்றுமை உண்டென்று நம்பின சினேகிதர்கள். தேங்காயின் உள்ளிருக்கும் பருப்பையும் நீரையும் ஒத்த நட்பினர். தம்முள் ஒருவர்முகத்தில் கவலைக் குறி காணில் அதற்காக வருந்திக் கண்ணீர் சொரிந்து கவலையில் அழுந்தும் அன்புடையவர்கள். ஒருபொழுதும் ஒருவரை ஒருவர் விட்டகலார். இருவரும் மாதவன் வீட்டிலேயே வசித்துவந்தனர்.

அவ்வீடு ஓர் அரண்மனையை ஒத்தது. நல்ல கொடும் வேனிற் காலத்தும் குளர்ந்த காற்றோட்டமுள்ள சோலையின் நடுவே அமைக்கப்பட்டுள்ளது. ஆதலால் கண்ணன் அவ்வீட்டில் வசித்து வந்ததில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை. இருவரும் படிப்பதும் ஒரேசமயம், உண்பதும் ஒரேசமயம், உறங்குவதும் ஒரேசமயம், எழுந்திருப்பது கூடவும் ஒரேசமயம்.

* * *

இப்பொழுது கண்ணன் தன் பெற்றோர்களுடன் வேறு வீட்டில் இருந்து வருகிறான்.

"மாது, இன்றைக்குக் கடற்கரைக்குப் போகலாமே. நாளை கோடைகால விடுமுறை ஆரம்பமாகின்றது" என்றான் கண்ணன்.

"நானும் அதைத்தான் இப்பொழுது நினைத்தேன். அடே! மாணி!! இரண்டு 'கப்' காப்பி, ஜல்தி ஆகட்டும்" என்று மாதவனிடமிருந்து உத்தரவு பிறந்ததும் காத்துக்கொண்டே நின்ற மாணி, விரைவாக மறைந்தான்.

ஹோட்டலைவிட்டு வெளியேறிய நண்பரிருவரும் நேராகக் கடற்கரையைநோக்கிப் புறப்பட்டுச் சுமார் ஐந்துமணிக்குக் கடலை அடுத்து, தூய வெண்ணிறமான மணலின்மேல் சாய்ந்து கடலை நோக்கியவாறு உட்கார்ந்திருந்தனர். பௌர்ணமி அன்று சூரிய அஸ்தமனசமயம். விரிந்த அகலமான ஜலப்பரப்பின் அழகிய நீலநிறம் மாறி, உருகிநிற்கும் இரும்பைப்போன்று செந்நிறமாகிப் பார்ப்பதற்கு நீரோ என்ற ஐயத்தைக் கொடுத்தது. அக்னிசொரூபமான மேகங்களின் இடையே சூரியகோளம் அனலால் அமையப்பெற்ற பந்துபோல் தோன்றிற்று. அது அதிவிரைவாகச்சுற்றிக் கொள்வதாகவும் தெரிந்தது. சூரியன் இன்னம் சமுத்திரத்தைத் தொடுவதற்கு ஒரு அடி தூரந்தானிருக்கின்றது. அரை அடி, கால் அடி, இரண்டங்குலம், ஓரங்குலம்.......இப்பெரிய அனல்கோளம் இவ்வளவு வேகத்தில் சுற்றிக்கொண்டு கடலில் மூழ்கினால் சமுத்திரஜலம் வற்றிவிடுமல்லவா! அவ்விதம் மூழ்கும் பொழுது, பழுக்கக் காய்ந்த இரும்பு, ஜலத்தில் விழுவது போன்று 'சுர்ர்ர்ர்....' என்ற சப்தம் இங்கு என்காது வரைக்கும் எட்டாதா? என்றெல்லாம் எண்ணிக்கொண்டிருந்தான் கண்ணன். சூரியன் சமுத்திரத்தைத் தொட்டுவிட்டது. கண்ணன் நினைத்தபடி ஒரு சப்தமும் காதுக்கு எட்டவில்லை. சூரியனும் கொஞ்சங்கொஞ்சமாகக் கடலினுள் மறைந்துகொண்டே இருந்தான். கண்ணனும் இமைகொட்டாமல் வேறு என்ன சம்பவிக்குமோ என்று அதிக பயத்துடன் பார்த்துக்கொண்டே இருந்தான்.

சூரியனும் அதைச்சுற்றிலும் உள்ள சில பாகங்களும் தவிர மற்றெல்லா இடங்களும் அதிவிரைவாக இருண்டுகொண்டே வருவதுபோல் அவனுக்குத்தோன்றிற்று. உடனே கண்ணன் எதிர்பாராவண்ணம் சூரியன் திடீரென்று கடலில் மூழ்கிவிட்டான்.

"ம்ம்மா தூஉ" என்ற உயிரை உருக்கும் சப்தம். கண்ணன் பயந்துநடுநடுங்கி மாதவனை இறுகத் தழுவிக்கொண்டு அவன்மடியில் தலையை வைத்துக் கவிழ்ந்து படுத்துக்கொண்டான்.

வெளியே விளையாடச்சென்ற குழந்தை கோவென அலறி வீடு திரும்பினல் அதன் அன்னை துடிதுடித்து எவ்விதம் அந்தக் குழந்தையை எடுத்து அணைத்துக்கொள்வாளோ அதேபோன்று மாதவனும் கண்ணனை உரம் நெருங்க அணைத்துச் சில நிமிஷங்கள் மெய் மறந்திருந்தான். கண்ணனும் தன்பீதி ஒழிய மாதவனின் ஆலிங்கனத்தின்மதுவை உட்கொண்டு வெறியடைந்து அசைவுற்றான். எங்கும் நிசப்தம் குடிகொண்டது.

'டிங்-டாங்....டிங்-டாங்....டிங்-டாங்.......' ஒன்று, இரண்டு, மூன்று.....மணி ஓசையால் இருவரும் கண்களைத் திறந்தனர். ஹா! என்ன அழகு! கண்ணன் இயற்கை அழகில் மையலுற்றான். அவன் ஆத்மா உள்ளத்தினின்று வெளியேறி எங்கும் பரந்து இயற்கையுடன் ஐக்கியமாவதுபோல் தோன்றிற்று. இயற்கை அழகு. ஆம் அது வருத்திவருதல் அன்று. உவமை இல்லாதது. கடவுளின் தூய்மை நிலையைப் பிரதிபிம்பிப்பது. மனக்கவலையை ஓட்டவல்லது. சிறியோன்பெரியோன் என்னும் வேறுபாட்டைக் கருதாதது. எவருக்கும் இன்பமளிப்பது. ஆதலால் கண்ணன்—வஞ்சனை அறியாப்பாலன் அதில்மையலுற்றது மிகப்பொருத்தமே. எங்கும் பால்நிறம்; ஒரேஒளி; மாசற்ற நீலவானம். அதில் மின்னிவரும் விண்மீன்கள். கீழ்த்திசையில் பூர்ணசந்திரன் உதயமாகிச் சிறிது தூரம் மேல் எழுந்ததும் கம்பீரமாகத் தோன்றினன். எதிராகக் கடல்நீர் வெள்ளி போன்று பளபளப்புடன் மின்னிக்கொண்டிருந்தது. அங்கு அலைகள் தோன்றி நுரையாக மாறுவது, பால்பொங்கி வழிவதுபோன்றிருந்தது. கடலினின்று 'ஓம்' என்னும் சப்தம் பிறந்து பிரபஞ்சத்திலுள்ள ஒவ்வோர் அணுவும் சென்று அதனுள்ளே புகுந்து தொனிப்பதுபோல் தோன்றிற்று. அத்தொனியானது தெய்விகத்தன்மை பொருந்தியது. இன்னிசைக் கருவிகளினின்றோ, அல்லது உயிர் பெற்ற எந்த ஜந்துவிடமிருந்தோ அல்லது தனியான ஒருவஸ்துவிடமிருந்தோ புறப்படாத கானம். அது மெல்லிய மணமுறும் இளந்தென்றலுடன் எங்கும் பரந்துநிறைந்தது. எல்லா வஸ்துக்களும் ஒருங்கே தம்முள் உணர்ந்

தும் உணராதும் இசைக்கும் தொனி ஆ எவ்வளவு இனிமையானது! சிறிது நேரத்திற்கு முன் பயத்தைவிளைவித்த அதே இடம் இப்பொழுது எவ்வளவு இன்பம் பயக்கும் தன்மையதாயிற்று! எங்கும் ஒரே அமைதி, ஒரே வெண்மை, ஒரே தூய்மை, ஒரே இனிமை, ஒரே ஆனந்தம்! இதற்கிடையில் வெகுதூரத்திற்கப்பால் தென்னஞ் சோலையில் வழிதவறி அலையும் ஓர் குயிலின் 'கிச்' என்ற அழுகுரல். ஆஹா! அச்சப்தம் வானத்தையும் பிளந்து கொண்டு சென்றது. பிரபஞ்சமுற்றும் ஒரே நொடி மின்சாரசக்தி ஊடுருவிச் சென்றது போலிருந்தது. மீண்டும் எங்கும் நிசப்தம் பரந்தது.

"மாதூஉ! கேவலம் ஒரு சிறுபறவையின் அழுகுரல் இத்தனை வலிமைபொருந்தியதா? என் ஹிருதயங்கூட அதனுல்படபட வென்று அடிக்கின்றதே" என்று கண்ணன் வினவினன்.

"ஆம் கண்ணு! அதில் ஆச்சரியமேன்? நீ பயந்த உடன் இயற்கையில் எவ்வளவு மாற்றம் தோன்றின பார்த்தாயா? ஏன் 'கேவலம் ஒரு சிறுபறவை' என்று கூறுகின்றுய்? அன்று, நம்தாய் வயிற்றில் அமைந்த நாள் முதலாய் இந்நாள்வரைக்கும் நம்மைக் காக்கும் ஒரேசத்தி, நம்பால் எவ்வளவு சிரமம் எடுத்ததோ அதினின்றும் சிறிதளவாவது குன்றுத கவலையுடன்தான் அப்பறவையும் காக்கப்படுகின்றது. அதன் உயிரினும் உன்னுயிர் பெரிதல்ல. எல்லாம் ஒரேமாற்றுடையவைதான்" என்று ஆரம்பித்தான். ஆனுல் கண்ணன் இடைமறுத்து, "சரி, போதும்-ஆரம்பித்துவிட்டாய் அல்லவா? மணி ஒன்பதரை இருக்கும்; புறப்படு போகலாம்" என்றுன்.

வேறு உலகத்தினின்று மீண்டது போல் மாதவன் எழுந்தான். கண்ணன் முல்லைக்கொடிபோன்று தன் கையால் மாதவனைப் பின்னிக்கொள்ள இருவரும் வீட்டை நோக்கிக் குதூகலத்துடன் நடந்தனர்.

"இயற்கையழகும் நிலாவும்" என்று இருவரும் ஒரே சமயத்தில் கூறி ஒருவரை ஒருவர் பார்த்தனர். கண்ணன் கூறி முடிக்கட்டும் என்று மாதவனும், மாதவன் கூறி முடிக்கட்டுமென்று கண்ணனும் ஒருவரை ஒருவர் நோக்கிய வண்ணமே நின்றனர். பால் நிறம் பொருந்திய நிலா ஒளி இருவர் முகத்திலும் விழுந்து அவர்களின் அழகைப் பன்மடங்கு அதிகரித்தது. மாதவன் தன் கரங்களால் கண்ணனைச் சிறுகுழந்தைபோல் வாரி எடுத்து அவன் அதரத்தில் முத்தம் ஈந்து அவனைக் கீழேவிடுத்தான்.

"மாதா! நான் பெண்ணாய்ப்பிறந்தவனென்று நினைத்தாயா?"

"நீபெண்ணாய்ப்பிறவாதது என்குற்றமல்ல; துர்ப்பாக்கியம். என்! ஆண்களை ஆண்கள் முத்தமிடுவதில்லையா?"

"இல்லை."

"சகோதரருள்ளும், சகோதரிகளுள்ளும் ஒருவரை ஒருவர் முத்தமிடுவது சகஜந்தானே!"

"நான் உன்சகோதரனல்லவே!"

இதைச் செவியுற்றதும் மாதவனின் கண்கள் கலங்கின. சில சமயம் மக்கள் கூறும் வாய்ச்சொற்கள் பழுக்கக்காய்ந்த இரும்பினும் அதிக ஆபத்தைத் தருவனவாய் இருக்கின்றன. எதனால்? சொற்கள் அவ்விரும்பைவிட அதிக ஆழமாகப் பாய்வதனாலும், ஆற்றொணாதபுண்களை உண்டுபண்ணுவதனாலுமே. மாதவன் கண்களினின்று இரண்டு நீர்த்துளிகள் சிதறி அவன் கன்னத்தில் தங்கி நின்றன. சந்திரிகையின் ஒளியில் அவைகள் விலையேறிய வைரமணிகளை ஒத்திருந்தன. ஆனால் இந்நீர்த் துளிகளோ விலைமதிக்கமுடியாதவை. அவன் கன்னத்திலிருந்து சிறிதே தவறி நிலத்தில் விழுந்தால் பூமியை வெடிக்கச்செய்யும் சக்தியுடையன. ஏனெனில் கண்ணன் பால் மாதவன் கொண்ட சினேகம் தெய்விகத் தன்மையுடையது. இருவரும் மௌனமாய்த் தலைகுனிந்தவாறே மாதவன் வீடெய்தினர்.

"கண்மணிகாள்! சாப்பிட வாருங்கள்" என்று மாதவனின் தாயார் கூப்பிட்டாள். அன்னையின் அன்பான வார்த்தைகள் மாதவனின் மனத்தை உருக்கின. ஆனால் சினேகமே பெரிதெனத் தேறினான்.

"எனக்கு இன்று சாப்பாடு வேண்டாம்."

"அம்மா! நான் எங்கள்வீட்டில் சாப்பிட்டேன்" என்று கண்ணனிடமிருந்து பதில்வந்தது.

மாதவன் அதிக விசனமும் கோபமும் அடைந்து, "கண்ணு! உனக்குச் சாப்பிட இஷ்டமில்லை என்று சொல்லிவிடு; அதற்காகப் பொய் சொல்ல வேண்டாம்."

கண்ணனின் கண்களில் தீப்பொறிகள் பறந்தன. அவன்செய்த குற்றத்தை வெளிப்படுத்தினால் கோபமடைவது அவன் வழக்கம். என்னசெய்வான் பாவம்! மாதவனை நிமிர்ந்து பார்த்தான். மாதவன் இப்பொழுது அழவில்லை. கம்பீரமாக நின்றான்.

"நீ உளம் வருந்தவேண்டாம். ஆனால் நீ பொய்சொல்லாமலிருப்பதே எனக்கு மிகவும் ஆனந்தம்" என்று கூறி மாதவன் கண்ணனைச்

சமாதானப்படுத்தும் நோக்கத்துடன் அவனை அணுகினன். கண்ணனே சிறுவன். ஒன்றையும் ஆலோசியாமல் செய்பவன். அவன் திடீரென மாதவனுடைய வீட்டை விட்டு வெளியேறித் தன் வீட்டை அடைந்தான். மாதவன் அன்று இரவு முழுதும் கவலையுற்றுப் படுக்கையில் அழுது புரண்டு படுத்திருந்தான்.

அதிகாலையில் சூரியோதயத்திற்கு முன்னல் வீட்டின் வெளிப்பக்கம் எங்கும் பறவைகளின் கீச்சுக்குரல்கள். காகம் 'கா-கா' வெனக் கரைந்து வந்தது. கோழி காகத்தைப் பார்த்துப் பருந்தோ எனப்பயந்து வெருண்ட தன் குஞ்சுகளை இறக்கையின் உள் அணைத்துக்கொண்டது. பழுதில்லாப் பணிசெய்யும் உழவன், ஏரைத் தோளில் ஏந்தி எருதுகளை முன்னல் ஓட்டிக்கொண்டு தன் வயலைநோக்கிப் புறப்பட்டான். இரவே தனக்குரியதெனக் கொண்டாடும் ஆந்தை கூகை முதலிய பறவைகள் தத்தம் இருப்பிடம் சென்று மறைந்தன. வெள்ளியவானில் சூரியன் தன் கிரணங்களைப் பரப்பினன். நதியோரம் சென்றிருந்த பல மங்கையரும், நீராடிக் கங்கையின் அழகைக் கவர்ந்து தம்தம் குடங்களில் ஜலம் மொண்டு கொடிபோன்ற இடையில் பளபளப்பான குடத்தை யேந்தி அழகாகக் கைவீசி நடந்து வந்தனர். சூரியகாந்தியின் வல்லமையால் அவர்கள் தம் கயல் போன்ற கண்களைமூடிக்கொண்டு நடந்தார்கள். உலராத மெல்லிய சேலைகளின் வழியாகத் தம் அங்க வனப்பு இவ்வளவு அழகு பொருந்த வெளிப்படையாகத் தோன்றுகின்றதே என்று நாணித் தம் கண்களைமூடிக் கொள்வது போல் அது இருந்தது.

இதற்குள்ளாகக் காலைக்கடனை முடித்த மாதவன் கண்ணன் வீடுவந்து, "கண்ணா !" என்று அழைத்தான். அவன் தன் குரலில் என்றும்இல்லாத ஓர் இனிமை அன்று இருப்பதை உணர்ந்தான்.

உள்ளே கூடத்தில் சயனித்துக்கொண்டிருந்த கண்ணனின் தந்தை அரைத் தூக்கத்திலேயே, வந்தவன் யார் என்பதையும் கவனியாது, "அவன் இன்று காலை மூன்று மணிவண்டிக்கு மதராஸுக்குப் போய்விட்டான்" என்று பதிலளித்தார்.

மாதவன் கண்கள் சுழன்றன. சிறிதுநேரம் இன்னது செய்வது என்று அறியாது திகைத்துநின்றபின்னர்த் தன் வீடெய்தினன். கண்ணனின் தாய்தந்தையர்களும் இச்சம்பவம் நடந்த ஒருவாரத்திற்குள் வட இந்தியாவிற்குப் போய்விட்டனர். ஏனெனில் கண்ணனின் தந்தைக்கு அங்கே ஒருதலைமைஆசிரியர் பதவி கிடைத்தது.

நாட்கள் வாரமாயின, வாரங்களும் மாதமாயின. கன்னனிடமிருந்து ஒருசெய்தியும் வரவில்லை. ஆம், அவன்கோபம் இன்னமும் குறையவில்லை. விடுமுறை நாட்களும் சென்றன. கன்னன் வரவில்லை. இருவரும் 'இண்டர் மீடியேட்' பரீட்சையில் முதன்மையாகத் தேறினர்.

மாதவன் பி. ஏ. வாசிப்பதற்கு மதராஸை அடைந்தான். அங்கு அவன் தங்கிய இரண்டுவருடமும் எவ்வளவோ கஷ்டப்பட்டுக் கன்னனைத் தேடியும் அவனைப்பற்றிய ஒரு புலனும் அறிய முடியவில்லை. மாதவனின் எம். ஏ. படிப்பும் அடுத்த இரண்டு வருடத்தில் முடிந்தது. கோடைகால விடுமுறைக்காக அவன் தன் சொந்த ஊரை நாடினன்.

சித்திரை மாதம் எங்கும் கலியாணகாலம். மாதவன் தனக்கு வந்த கலியாண கடிதத்தைத் தன்தந்தையால் படிக்கக்கேட்டு மனமகிழ்ச்சியடைந்தான். 'கன்னன் பீ. ஏ. ஆனர்ஸுக்கு நாளைக்குக் கலியாணம்.' தன்னைப்போகவிடாதுதடுத்த விதியை நொந்து கொண்டான்.

* *

தஞ்சையில் மிகவும் அழகான மாளிகையொன்றில் ஒரே இரைச்சல். காரணம் கன்னனின் கலியாணமே. கமலம் பெரிய தனவந்தனுடைய புதல்வி; மிகுந்த அழகும் நல்லகுணமும் படைத்தவள். வரதக்ஷிணைக்கோ குறைவில்லை. ஒன்றிரண்டல்ல, பத்தாயிரம் ரூபாய்கள். இவையெல்லாம் உண்மையே. பின்னர், கன்னனின் முகத்தில் விசனக்குறி தோன்றுவானேன்? அவனே அறிவான். கலியாணமும் இனிதே நிறைவேறிற்று.

அன்று மாலை தன் சிநேகிதர்களுடன் கூடி இருக்கையில் கிருஷ்ணனைப் பார்த்துக் கன்னன், "கிட்டு! மாது ஏன்வரவில்லை?" என்றான். கிட்டு கன்னன் மாதவன் இருவருக்கும் நண்பன்.

ஒருமாத காலமாக மாதவன் கடும் சுரத்தால் கஷ்டப்படுவதைக் கிட்டு தெரிவித்தான். கன்னனின் கண்களிலிருந்து நீர் தாரைதாரையாய் ஓடிற்று.

மாதவனின் வீட்டிற்குச் செல்வதற்காகக் கன்னனும் கிட்டுவும் 'டாக்ஸி' யில் ஏறினர்கள். உடனே வண்டியும் பறந்தது. கன்னனின் நினைவெல்லாம் மாதவனிடமே சென்றது. "ஐயோ! நான் பெரிய மதியீனன். என்மாதுவிற்கு எவ்வளவு அபாண்டமான தீங்கை இழைத்தேன். 'உன் சகோதரனல்லவே' என்று கூறியதற்

கன்றே சிறு குழந்தையைப்போன்று விம்மி விம்மி அழுதான். கடவுளே! இக்குற்றத்தினின்று எப்பொழுது விடுதலை அடைவேன்........" என்றவாறெல்லாம் எண்ணிக்கொண்டிருக்கையில், 'டாக்ஸி' மாதவன் வீட்டின்முன்னுல் வந்துநின்றது. கண்ணன் தன் மாமனுர் கொடுத்த கைக்கடிகாரத்தைப் பார்த்தான். மணி இரண்டே முக்கால். ஒருநாள் இரவு அதேசமயம் சுமார் நான்கு வருடங்களுக்குமுன்னர் மாதவனிடம் கோபங்கொண்டு மதராஸுக்குப் புறப்பட்டது அவன் ஞாபகத்திற்கு வர அவனுடைய மூளை பிறழ்வது போல் அவனுக்குத் தோன்றிற்று.

நோய்வாய்ப்பட்ட மாதவன் மிகவும் மெலிந்து ஸ்வரூபம் மாறிக் கண்ணனே அவனை மாதவனென நம்புவதற்கு இடமில்லாத நிலையில் இருந்தான்.

"மாதூ—மாதூ" எனக் கண்ணன் மிகவும் தாழ்ந்த குரலில் கூப்பிட்டான். ஆ! அந்த அன்பின் சக்திதான் என்னே! அன்று பூராவும் அசைவற்றுப் பிணம்போற் கிடந்தமாது தன்கண்களைத் திறந்தான்.

கொஞ்சமும் கலங்காத கண்கள். தூய்மையான அன்பொளி வீசும் கண்கள். ஆத்மாவின் அழிவிலாத் தன்மையைச் சுட்டிக் காட்டும் கண்கள். ஆம் அவை மாதவனின் கண்கள்தாம். அதில் சற்றும் ஐயமில்லை. கண்ணனைத் தன் சமீபத்தில் குனியும்படி மாதவன் சமிக்ஞைசெய்து தன் உலர்ந்து வெடித்த உதடுகளால் கண்ணனின் கன்னத்தில் முத்தமிட்டான்.

கட்டிலின் சமீபமிருந்த மெழுகுவத்தி, மினுக்கு மினுக்கென்று எரிவதால் இருள் சூழ்ந்திருப்பதை எப்பொழுதும் ஞாபகப்படுத்திக் கொண்டிருந்தது. உயிர் அஸ்தமிக்கும் சமயம்.

"கண்ணு!" என்ற உயிரற்ற சப்தம் பிறந்தது.

"என்! மாதூ!"

"ஒருவரும் அளவிடமுடியாதகடலில் என் ஆத்மாவான சூரியன் மூழ்கப்போகின்றது."

"என்னை இங்கு விட்டுவிட்டா?" என்று கதறினன் கண்ணன்.

"ஆம்."

"ஆனல் நம்முடைய ஆத்ம ஐக்கியம் எங்கே? உன்னுடைய உண்மைச் சினேகத்தின் சக்தி எங்கே? உன் ஆத்மாவின் வல்லமை எங்கே?"

"கண்ணா! விதியின் கொடுமையை யார் தடுப்பவர்?" என்று தாழ்ந்த குரலில் பதிலளித்தான் மாது. அவ்வார்த்தைகளில் உண்மை தொனித்தது. மாதவன் தன் கண்களைக் கடைசித்தடவை யாக மூடிக்கொண்டான்.

"டிங்-டாங்....டிங்-டாங்....டிங்-டாங்.." மணியும் மூன் றடித்தது.

மூர்ச்சையடைந்த கண்ணனைக் கிட்டு ஆஸ்பத்திரிக்கு எடுத் தேகினன்.

* * *

இச்சம்பவம் நடந்து ஒன்றரை வருஷமிருக்கும். இன்ஸ் பெக்டர் கண்ணன் மாலை ஐந்தரைமணிக்கு வீடுவந்துசேர்ந்தான். ஒரு சிறு குழந்தையின் அழுகுரல் கேட்டது. ஓடிச்சென்று சிறிது நேரத்திற்கு முன்னுல் ஜனித்த தன் குழந்தையைப் பார்த் தான். என்னே ஈசனின்செயல்! ஒரு சிறு மாதவனே தன் இல்லாள் சமீபத்தில் அழுதுகொண்டிருந்தான். ஆஹா! அக் குழந்தையின் கண்கள்—அந்த ஒளிபொருந்திய கண்கள் மாத வனின் கடைசி நேரத்தில் அவனிடம் தோன்றிய கண்கள்.

"மாதூஉ!" என்றுன் கண்ணன்.

குழந்தையும் அழுகையை நிறுத்திக் கண்ணனைப் பார்த்துப் புன்னகை பூத்தது.

---

## நாய்போற்குரைக்கும் பொறி

சமீபத்தில் லண்டனில் நடத்தப்பட்ட ஒரு பொருட்காட்சிக்கு மின் சார நாய் ஒன்று கொண்டுவரப்பட்டது. அது வைத்திருந்த இடத்திலிருந்து 10 அறைகளுக்கு ஒலிபெருக்கும் கருவிகள் அமைக்கப் பெற்றிருந்தன. இதில் என்ன விசேஷமென்ருல் ஒருவன் இந்த அறைகளுள் எதிலேபுகுந்தா லும் தட்சணமே ஓர் ஒளி உண்டாகி வேலைசெய்யத் தொடங்குகின்றது. அதன்பயனுக மேற்குறித்த 10 அறைகளிலும் நாய்குரைப்பது போலவும் ஒருவன், "யார் அங்கே?" என்று அதட்டிக் கேட்பது போலவும் இரண்டு வித சப்தங்கள் உண்டாகின்றன. —இந்தியன் ரிவ்யூ.

# விசுவாமித்திரரும் மேனகையும்

குு. ப. இராஜகோபாலன், பி. ஏ.

---

ஆர்யா வர்த்தத்தில் ஓர் மலையருவியின் பக்கத்திலுள்ள ஆசிரமம். அதன் வாயிலில் விசுவாமித்திரர் சூர்யோதயத்தைக் கவனித்துக் கொண்டு நிற்கிறார். மேனகை குழந்தையுடன் ஆச்ரமத்திலிருந்து வெளியே வந்து விசுவாமித்திரரிடம் குழந்தையைக் காட்டுகிறாள்.

மேனகை :—இதோ பாருங்கள், குழந்தையை! இதோ உதயமாகும் சூர்யனைப் போல ஜொலிக்கிறாள்.

விசுவாமித்திரர் :—குழந்தையா! (என்று சொல்லித் திக்பிரமை கொள்கிறார்.)

மேனகை :—இந்தாருங்கள்! (என்று நெருங்குகிறாள்.)

விசுவாமித்திரர் :—போ, அப்புறம்!

மேனகை :—என்ன!

விசுவாமித்திரர்—போகிறாயா இல்லையா? உன்னை என்ன செய்வேன், தெரியுமா?

மேனகை :—எதற்காக?

விசுவாமித்திரர்—என்ன சொல்கிறாய்?

மேனகை :—நீர்தானே அன்று இந்த அருவியில் குளித்துக் கொண்டிருந்த என்னை வற்புறுத்தினீர்?

விசுவாமித்திரர் :—உனக்குக் குளிப்பதற்கு வேறிடம் அகப்படவில்லையோ, என் ஆச்ரம அருவியைத்தவிர?

மேனகை :—பூலோகத்தில் இதைக் காட்டிலும் ஸுகமான இடம் கிடையாது.

விசுவாமித்திரர் :—நீ யார்? நிஜத்தைச்சொல்.

மேனகை—நானா? நான் அப்ஸரஸ் மேனகை.

விசுவாமித்திரர்—மேனகையா? ஆ, இப்பொழுது தெரிகிறது. அந்த அயோக்யப் பதர்கள்—தேவர்கள்—உன்னை அனுப்பியிருக்க வேண்டும்.

மேனகை :—இருக்கட்டுமே.

விசுவாமித்திரர் :—என் கொடுந்தவத்தைக் குலைப்பதற்காக அல்லவா?

மேனகை :—இருக்கும்.

விசுவாமித்திரர் :—பொறுமைப் புழுக்கள்! நசுக்குகிறேன் அவர்களை! முதலில்—உன்னை—ஹதம் செய்தாலென்ன?

மேனகை :—ஸ்த்ரீ ஹத்தி தோஷத்தை ஏற்றுக்கொள்ளும்.

விசுவாமித்திரர் :—நீ என்ன பெண்ணா, பேயா? உனக்கு ஹிருதயம் இருக்கிறதா, இல்லையா?

மேனகை :—இல்லாமலா உம்மை இவ்வளவு நாள் உலகத்தையே மறக்கும்படி செய்தேன்?

விசுவாமித்திரர் :—உன் ஹிருதயத்தில்—உன்பாழாய்ப் போன ரூபத்தால் . . . . . . . . .

மேனகை :—அதில் உம்மையார் ஈடுபடச்சொன்னார்கள்?

விசுவாமித்திரர் :—ராக்ஷஸி! உனக்கு இரக்கமில்லை, விசனமில்லை, ஓர் ஆயுளின் தவவலிமை, மலைபோல் எழுந்ததைக் குன்றிப் போகச் செய்தோமே யென்று? அக்னிஜ்வாலைபோல ஆகாயத்தை அளாவி எழுந்த ஊக்கத்தை வானத்து மழைபோல் அவித்தோமே என்று பச்சாத்தாபமாவது உன் மனதில் தோன்றவில்லையா? நீ என்ன அஸுராம்சமா? இந்த ரூபத்துடன் வந்த தூமகேதுவா?

மேனகை :—இவ்வளவுதானே உம்மால் மொழியக்கூடிய வசை?

விசுவாமித்திரர் :—பிசாசமே! உனக்கு என்ன தைரியம்? பெண்ணல்லவா தேவதையானாலும்!

மேனகை :—நீர்தாம் என் தேவதாம்சத்தைக் குறைத்து விட்டீரே? நான் இனிமேல் எப்படி தேவதையாவது, இம்மனிதக் குழந்தையுடன்?

விசுவாமித்திரர் :—என்ன?

மேனகை :—சாயை உருவத்தைப் பிடித்திழுத்துப் பூமியில் தள்ளுவதுபோல என்னைப் பூமிக்கு இழுத்து விட்டீரே.

விசுவாமித்திரர் :—என்னைக் கெடுத்தது மல்லாமல் என்மேல் குற்றமுமா சாட்டுகிறாய், மிருகமே?

மேனகை :—உமது நோக்கத்தில் உமக்கு உறுதி இருந்திருந்தால் நான் எப்படிக் கெடுத்திருக்க முடியும்?

விசுவாமித்திரர்:—அடடா! என்ன மதிமயக்கம்கொண்டு விட்டேன்! இந்தப் பாவியின் மையலில் என் உயிரின் உயர்வையே மறந்து ஜடத்தைப் போலக் கிடந்துவிட்டேனே!....சை! இருக்கட்டும்; என் ஊக்க நெருப்பின்மேல் மண்டியிருக்கும் சாம்பலை ஊதித்தள்ளி அதைக் கிளப்புகிறேன்; இந்தத் திரிலோகங்களையும் தகிக்கிறேன். இந்தத்தோள்களைத் துடிக்கவடிக்கிறேன்........ இன்று சூர்யோதயத்துடன் என்மயக்கம் தெளிந்து விட்டது. இனிமேல் இவள் தன்னுடைய கைகளால் என்னைக் கட்டமுடியாது. (அவளைப் பார்த்து)—போ, நிற்காதே இங்கே!

மேனகை:—நான் எங்கே போவது?

விசுவாமித்திரர்:—அதைப்பற்றி எனக்கென்ன கவலை? எவ்வழியாக வந்தனையோ அவ்வழியே செல்! இல்லையேல் உலகெலாம் திரிந்தலையேன்.

மேனகை:—உமது பரத்தை என்று சொல்லிக்கொண்டு, இக்குழந்தையுடன் திரியவா?

விசுவாமித்திரர்:—என்ன செய்ய வேண்டுமென்கிறாய் இப்பொழுது?

மேனகை:—சொல்வதைக் கேளும்; ஸ்த்ரீயின் லஜ்ஜையையும் விட்டுச் சொல்லுகிறேன்: இந்திரனின் கட்டளைப்படி முதலில் உம்மை மயக்கித் தபஸைக் கலைத்துவிட்டுமட்டும் போகவந்த நான் தேவராஜனின் மனஸ்தாபத்தைக்கூட மதிக்காமல் உம்மையே அண்டிப் பிழைப்பது என்ற உறுதியுடன் இருந்துவிட்டேன். இனித் தேவலோகத்திற்குப் போவது எனக்கு இஷ்டமில்லை. உம்மிடமே இருந்து விடுகிறேன்.

விசுவாமித்திரர்:—எனது லக்ஷியத்திற்கும் உனக்கும் விரோதம். ஸ்த்ரீ அருகிலிருந்தால் ஒரு விதமான காரியமும் உருப்படாது.

மேனகை:—இந்தத் தத்துவம் முன்பே உதிக்கவில்லையோ? என்னை அன்றே உதறி எறிந்திருந்தால் இருவருக்கும் இவ்வளவு சங்கடமில்லையே. என்னை அங்கீகரித்து இவ்வளவு காலம் அனுபவித்து விட்டு இப்படி அநாதையாக உதைத்துத் தள்ளுவது உமது ஆண்மைக்குத் தர்மமாகுமா?

விசுவாமித்திரர்:—மேனகா, நீ இவ்வளவு சொன்னபிறகு உன்னைக் கடிந்துகொள்ள எனக்கு மனம் வரவில்லை. நல்ல வார்த்தையாகச் சொல்லுகிறேன், கேள்! உன்னழகு என்னை நிலைமாறச் செய்தது—நான் ஸ்வயப்பிரக்ஞையுடன் உன்னை ஏற்றுக்கொள்ளவில்லை. இப்பொழுது என் போதை தெளிந்து விட்டது.

இனிமேல் உன்னிடம் ஈடுபட மாட்டேன்; உன் கடைக்கண் பார்வை இனிமேல் என்னிடம் செல்லாது.

மேனகை:—குபேராதிகள் அதற்காக என்ன பாடுபடுவார்கள் தெரியுமா?

விசுவாமித்திரர்:—ஆகையால் அவர்களிடம் அது பிரயோஜனப்படட்டும்; நல்ல தனமாகத் திரும்பிப்போ!

மேனகை:—நான் திரும்பிப் போவதென்றால் உமக்கொரு பாபம் வந்து சேருமே?

விசுவாமித்திரர்:—என்ன?

மேனகை:—நான் இக்குழந்தையைக் கொண்டுபோக முடியாது; இதை எங்காவது பூலோகத்தில் எறிந்துவிட்டுத்தான் போகவேண்டும்.

விசுவாமித்திரர்:—ஈன்ற இரக்கம் உனக்கில்லையென்றால் நான் கவலைப்பட்டு முடியுமா? . . . . . நீ போகலாம்.

மேனகை:—அவ்வளவு லேசாக என்னை உதறிவிட உங்களுக்கு மனம் வருகிறதா? ஐயோ! தேவேந்திரன் முதல் என் இஷ்டப்படிதான் நடந்துகொள்ளவேண்டும். அப்படிப்பட்ட செல்வாக்கிலிருந்த நான் ஒரு ஸ்த்ரீயின் மட்டையே மறந்து, கர்வத்தையும் களைந்து, உம்மைப் பணிவதே போதுமென்று உழன்றேனே! நீர் இப்படி என்னைத் திரஸ்காரம் செய்வது தகுமா?

விசுவாமித்திரர்:—அக்னி ஸாக்ஷிகமான ஒருவித பந்தமும் நம்முள் கிடையாது.

மேனகை:—அப்படிச் செய்தால்தானா உறுதி? காந்தர்வமென்கிறார்களே அதன் ரீதியாகவல்லவோ நாம் கண்நோக்கினோம்?

விசுவாமித்திரர்:—அது எனக்கேற்பட்டதல்ல. நான் தபஸ்வி.

மேனகை:—மனிதரல்லவா?

விசுவாமித்திரர்:—அக்னிஜ்வாலை, தெரியுமா?

மேனகை:—எல்லாம் நான் தீண்டினது தானே.

விசுவாமித்திரர்:—இல்லை — அதன் உள்ளிருப்பது. நீ தொடமுடியாது.

மேனகை:—என் குரலிசையால் அதைப் பாம்பு போல ஆட்டிவைக்க எனக்குச் சக்தியுண்டே!

விசுவாமித்திரர்:—எவ்வித இசையும் ஏறாத இடம் அது.

மேனகை:—சிவத்தைக் கூட மன்மதன் ஒரு ஆட்டு ஆட்டவில்லையா?

விசுவாமித்திரர் :—என்ன ஆனுன்?

மேனகை :—வெற்றி வெற்றிதான் . . . . நான் இக்குழந்தையை விடிந்தும் விடியாமலும் உமது முன் கொண்டு வந்தது பிசகாய்ப் போய் விட்டது, உள்ளே போகிறேன்.

(உள்ளே போக யத்தனிக்கிருள்.)

விசுவாமித்திரர் :—என் ஆச்ரமத்திற்குள் இனிமேல் நுழையாதே; இப்படியே போய் விடவேண்டும்.

மேனகை :—நிரம்ப அழகு! தேவதைகள் பார்த்துச் சிரிக்கப்போகிருர்கள்; போதும்!

விசுவாமித்திரர் :—என்னைப் பார்த்துச் சிரிப்பதற்கு இந்த மூன்று லோகங்களில் யாருக்குத் தைரியமிருக்கிறது?

மேனகை :—பெண்ணை நானே சிரிக்கிறேனென்று வைத்துக் கொள்ளும். அது உமக்கு வெட்கமாயிராதா?

விசுவாமித்திரர் :—நீ போகிருயா இல்லையா, இப்பொழுது?

மேனகை :—நாலு தபஸ்விகளைக் கூப்பிட்டு என் நியாயத்தைச் சொல்லுகிறேன். அவர்கள் தீர்மானப்படி நான் செய்கிறேன்; அல்லது இக்குழந்தையை நீங்கள் வைத்துக் கொள்ளுங்கள்; நான் இந்த நிமிஷமே ஸ்வர்க்கத்திற்குத் திரும்பிப்போய் விடுகிறேன்.

விசுவாமித்திரர் :—என் கோபாக்னியைத் தூண்டுகிருய்; நிமிஷத்துக்கு நிமிஷம் அது வளர்கிறது. ஜாக்கிரதை! இன்னும் என் தபஸ் வீணுவதற்குக் காரணமாகாதே. சொல்லி விட்டேன். திரும்பி ஸ்வர்க்கம்போ. தேவேந்திரனிடம் நான் சொன்னதாகச் சொல், இன்னும் ஒருபக்ஷகாலம் சுகமாயிருக்கலாமென்று!

மேனகை :—நான் போக மாட்டேன்.

விசுவாமித்திரர் :—போகிருயா, மாட்டாயா? (கண்களில் ஆவேசம் பொங்க அவளைக் கூர்ந்து பார்க்கிருர்.)

மேனகை :—(மின்னல் பாய்ந்ததுபோல் துடித்துக் கலங்கி) மஹர்ஷே! போகிறேன். மூலிகை முன் பாம்புபோல எனது கர்வம் ஒடுங்கி விட்டது. (போகிருள்.)

விசுவாமித்திரர் :—பிழைத்துப் போ!

(மறுபடியும் தபஸில் அமர்கிருர்.)

---




# மூங்கிலின் கதை

பி. ஆர். ராஜசூடாமணி

---

அழகாபுரி என்ற ஊரிலே அழகேசர் என்று ஒரு ராஜா இருந்தார். அவருக்கு அழகப்பன் என்கிற தோட்டக்காரன் இருந்தான். ஒரு காலத்தில் அழகேசருடைய தோட்டத்தில் அழகான மரங்கள் இருக்கவில்லை. ஒருநாள் அழகேசர் அழகப்பனைப் பார்த்து, "அழகப்பா, அழகப்பா, அரண்மனைத் தோட்டத்திலே அழகான மரங்களை யெல்லாம் அணியணியாக நடவேண்டும்; அதை நான் பார்க்க வேண்டும்" என்று சொன்னார். ஆகையால் அழகப்பன் நாற்பது வருஷ காலம் ஓயாமல் அல்லும் பகலும் அழகேசர் அரண்மனைத் தோட்டத்தை அழகு செய்தான்.

அழகப்பனுக்கு அதிக வயதாகிவிட்டது. அதனாலே அழகப்பன் அழகேசனிடம்போய், "அன்பு மிகுந்த ஆண்டவரே, அடியேனுக்கு ஆனவயதும் அளவில்லை; உடலும் தளர்ந்துபோச்சு; உளமும் மெலிந்துபோச்சு; இனிமேல் உள்ள நாள் ஆடி ஓய்ந்த பம்பரம்போல் அசையாமல் இருக்க ஆசை ஐயே" என்றான்.

அழகேசர் மிகவும் துக்கத்தோடு, "அழகப்பா! நீ எங்கே போக விரும்புகிறாய்?" என்றார். அதற்கு அழகப்பன், "மலை சார்ந்த சிறுகுடிதான் எங்கள் ஊர், ஐயே; சிறு குடியில் சிறிது காலம் வாழ்ந்திருக்க விருப்பம் ஐயே" என்றான்.

அழகேசர், "அழகப்பா! உன் இஷ்டப்படியே செய். யானை குதிரைகளும், இரத்தினமாலைகளும், முத்துச்சரப்பனியும், மோகன மாலைகளும், பட்டாடைகளும், பலவகை விருதுகளும் தந்தேன். நீ இவைகளையெல்லாம் கொண்டுபோய் உன்னூருக்கு அரசனாய் இரு" என்றார். அதற்கு அழகப்பன், "அன்பு மிகுந்த ஆண்டவரே, ஆனை குதிரையுடன் அரசனைப்போல் நானிருந்தால் யாரும் என்னைத் தேடமாட்டார்கள்; ஆகையால் அழகப்பன் அழகப்பனாகவே சிறுகுடிக்குப் போய்வருவேன்" என்று சொன்னான். அழகேசரும் துக்கத்தோடு வழியனுப்பிவைத்தார்.

அழகப்பன் சிறுகுடி என்னும் தன்ஊருக்கு வந்தான். அந்த ஊரில் இருந்த ஊருணிகள்[1] எல்லாம் உப்புநீருடையனவாக இருந்தன. ஊரார் எல்லாரும் கலங்கித் தவித்தார்கள். அதைக் கண்ட அழகப்பன், "என்ன செய்வேன்! ஊரார் எல்லாரும் உண்ணநீரில்லாமல் உயிர் சோர்ந்து போகிறார்கள். சிறுகுடியில் வாழ்பவர்கள் சீரிழந்து தவிக்கிறார்கள். அழகேசர் அரண்மனைக்காக ஆயுசு எல்லாம் உழைத்தேனே! என்னைப்பெற்ற என் அருமைச் சிறு குடிக்கு ஏதும் நன்மை செய்யாமல் இருந்தேனே" என்று துக்கித்தான்.

ஒருநாள் அழகப்பன் அதிகாலையில் சிறுகுடியைவிட்டுப் பக்கத்தில் இருந்த மலைமேல் ஏறினான். அந்த மலையின் உச்சி வானத்தைத் தொடுவதுபோல் உயர்ந்திருந்தது; என்றாலும் அதில் மரமுமில்லை, செடியுமில்லை, புல்லுமில்லை, புதருமில்லை. வெட்டவெளிபோலே வெறுமையாகக் கிடந்தது. அழகப்பன் அந்த மலைமேல் ஏறிப்போனான். அன்று சாயங்காலம் அவன் அதன் உச்சியை அடைந்தான். அங்கே ஆகாய கங்கையைப்போல், பம்பைப் பொய்கையைப்போல் பார்க்கப் பார்க்க அழகான சுனை ஒன்று இருந்தது. அதைக்கண்டதும், அழகப்பனுக்கு உண்டான அகமகிழ்ச்சிக்கு அளவே இல்லை. அவன் தேடிவந்த திரவியத்தைக் கண்டவன் போல் திகைத்துக் களித்து நின்றான். அவன் அந்தச் சுனையை ஒரு முறை பார்த்தான்; மலையடியில் உள்ள தன் ஊரையும் ஒரு முறை பார்த்தான்; "கண்டேன், வழிகண்டேன்" என்றான். அந்த இரவு தான் கொண்டுவந்த கட்டுசாதத்தைச் சாப்பிட்டான். பின்பு அங்கேயே படுத்துத் தூங்கினான்.

மறுநாள் அதிகாலையில் மலை உச்சியை விட்டுப் புறப்பட்டுக் கீழே இறங்கிவந்தான். அழகாபுரியிலிருந்து தான்கொண்டுவந்த விதை மூட்டைகளில் ஒன்றை அவிழ்த்தான். அதிலிருந்து ஒருபடி விதை எடுத்துக் கந்தைத்துணியில் மூட்டையாகக் கட்டிக்கொண்டான். திரும்பவும் மலைமேல் ஏறி மலை உச்சியை அடைந்தான். அவன் தான் கொண்டுவந்த விதைகளையெல்லாம் சுனையின் கரைகளிலே அங்கும் இங்கும் விதைத்துவிட்டுத் தன் ஊருக்குவந்தான். பின்பு இரண்டு மூன்று நாட்களுக்கொருதரம் தோண்டியுடன் மலைஉச்சிக்குப்போய் நாற்றுக்களுக்கு நீர் ஊற்றினான். மேலும் அவை செழித்து வளரும்வரையில் எரு முதலியவை இட்டான்.

---

1. ஊருணி—குடிக்கும் ஜலமுள்ள கிணறு, குளம் முதலியவை.

விதைத்த விதைகள் நாற்ருகிக் கன்ருகி நாற்புறமும் கிளை நீட்டிக் கோயில் கொடிமரம்போல் கோணலின்றி வளர்ந்துவந்தன. முடிவில் யாவரும் கண்டு அதிசயப்படும்படி அழகான மூங்கில் காடாயிற்று.

ஒருநாள் அழகப்பன் கையில் கோடரியுடன் மலை உச்சிக்கு வந்தான். அவன் அங்குள்ள மூங்கில்களில் மிகவும் உயரமான மூங்கிலிடம் போய்,

"வான்ஓங்கி வளர்ந்தெழுந்த வான் பணையே[1]
வருந்தி உன்னை வளர்த்தேன் விரும்புகிறேன்
வந்தெனக்கு உதவிபுரிவாயோ?"

என்ருன்.

அதைக்கேட்ட வுடனே அந்த மூங்கில்,

"விதை விதைத்தாய் நீர்இறைத்தாய்;
வளமும் இட்டு என்னை வளர்த்துவந்தாய்;
வாழ்வு எனக்குப் பெரிதாமோ?
வருவேன் நான் உன்னேடு;
எனைக்கொள்வாய் இப்போதே"

என்று சொன்னது. உடனே அழகப்பன் தான் கொண்டுவந்த கோடரியினுல் அந்த மூங்கிலை வெட்டித் தள்ளினுன். அது கீழேவிழுந்தது.

பின்பு அழகப்பன் வேருெரு மூங்கிலினிடம் போய்,

"நீண்டு உயர்ந்த நீள்வேயே[2]
நீ எனக்கு வேண்டும்"

என்ருன்.

அதைக்கேட்ட வுடனே அந்தமூங்கில் அளவில்லாத துக்கத்தோடு,

"நட்டமரம் நஞ்சானுலும்
நல்லவர்கள் வெட்ட மாட்டார்.
நாள்தோறும் நான்மலைமேல்
நாற்றிசையும் அசைந்தாடி
நல்ல நல்ல கதைசொல்லி
உல்லாசக் காற்றினிலே
உலகுவப்பப் பாட்டிசைத்து
உளம் மிகவே மகிழ்ந்திருப்பேன்.

---

1. பணை—மூங்கில்
2. வேய்—மூங்கில்

உயிர் எனக்குச் சர்க்கரையே;
உலகு எனக்குப் பேரின்பம்;
ஆதலினால் வெட்டாதே''

என்றது.

அதைக்கேட்டதும் அழகப்பன் மிகவும் துக்கத்தோடு போய் விட்டான். சிலநாட்களுக்குப்பின் அவன் திரும்பவும் அந்த மூங்கில் காட்டிற்கு வந்தான். இப்பொழுது அங்கே அநேக மூங்கில்கள் அழகாக வான்ஓங்கி வளர்ந்திருந்தன. அழகப்பன் ஒரு மூங்கிலிடம் போய்,

''காற்றில் அசைந்து அசைந்து
காதுக்கு இனிய இசைபாடும்
கல்வேயே[1]—நீ எனக்குத்தேவை''

என்றான்.

அதற்கு அந்த மூங்கில், ''என்னை விதைத்தவன் நீ; வளர்த் தவன் நீ; என்னைக் காத்தவன் நீ; என்னை ஏற்றுக்கொள்வாயே'' என்றது. உடனே அழகப்பன் தன் கோடரியினால் அதை வெட் டிக் கீழேதள்ளினான். பின்பு வேறொரு வேயினிடம்போய், ''நீ எனக்கு வேண்டும்'' என்றான். அதற்கு அந்த மூங்கில், ''நீயே என்னைப்படைத்தாயே; நீயே என்னை எடுப்பாயே'' என்றது. அழகப்பன் அதையும் வெட்டினான். அதைக்கண்ட வேறொரு மூங்கில், ''விரும்பிவந்து என்னை வெட்டும்; கீழேவிழுந்து உமக்கு உதவிசெய்ய விரும்புகிறேன்'' என்றது. அழகப்பன் புன்னகை யோடு அதையும் வெட்டினான். அன்றைக்கு அநேக மூங்கில்கள் தங்களை வெட்டும்படி ஒப்புக்கொடுத்தன. ஆகையால் அழகப்பன் பகலெல்லாம் பாடுபட்டு அந்த மூங்கில்களை யெல்லாம் வெட்டி னான். முடிவில், தனக்கென்று வாழ்ந்து தன்னலமிகுந்த மூங்கி லிடம் வந்தான். அவன் அந்த மூங்கிலைப்பார்த்து,

''அழகிய வேயே! நீயும் தேவை
அறுக்க இசைந்தால் அனைவரும் புகழ்வார்;
உலகில் உயிர்கள் உன்னை வாழ்த்தி
உள்ள நாள் எல்லாம் உள்ளம் களிக்கும்''

என்றான்.

அதைக்கேட்ட அந்தமூங்கில்,

''இலையும் கிளையும் இசைந்ததுஎன் மேலே
மலையின் அழகாய் வளர்ந்தேன் உன்னாலே

1. கல் வேய்—மலைமூங்கில்

அலைபோல் மோதும் தென்றலில் அசைந்து
அங்கும் இங்கும் ஆடிக் களிக்கின்றேன்;
இளமை இன்பம் என்னில் ததும்ப
இன்னும் சிலநாள் இங்கே இருப்பேன்;
என்னைப் போல்என் அடியில் மூங்கில்கள்
எழுந்து ஓங்கி எங்கும் நிறைந்தால்
என்னை நீயும் வெட்டிக் கொள்வாயே''

என்றது.

அதைக்கேட்டதும் அழகப்பன் துக்கத்தோடு போய்விட்டான். சிலமாதங்கள் சென்றன. ஒருநாள் அழகப்பன் திரும்பவும் மலை உச்சிக்கு வந்தான். அங்கே இருந்த மூங்கில்கள் எல்லாம் ஆகாயத்தைத் தொடுவதுபோல் ஓங்கிவளர்ந்திருந்தன. அவன் அந்த மூங்கில்களிடம்போய் அவைகளை வெட்டலாமா என்று கேட்டான். அந்த மூங்கில்கள் எல்லாம், "என்னை வெட்டும்", "என்னை முன்னே வெட்டும்" என்று ஒன்றுக்கு ஒன்று போட்டி போட்டுக்கொண்டு முன்னே வந்தன. அவன் அவைகளையெல்லாம் வெட்டினான்.

முடிவில், ஒரேஒரு மூங்கில் மட்டும் இருந்தது. அது மற்றெல்லா மூங்கில்களைப்பார்க்கிலும் அதிக உயரமாய் வளர்ந்து இருந்தது. அதன் அடியைச் சூழ அநேக மூங்கில் கன்றுகள் முளைத்திருந்தன. அவன் அந்த மூங்கிலிடம்போய், "மூங்கிலே, இங்கே வளர்ந்திருந்த எல்லா மூங்கில்களும் தங்களையே எனக்குக் கொடுத்துவிட்டன. நீயோ இன்னும் இசையாமல் இருக்கிறாய். நான் உன்னை அதிகமாய் நேசித்தேன். உனக்கு அதிகமாய் நீர் ஊற்றினேன். உனக்கு அதிகமாய் உரம் இட்டேன். உன்னை அதிகமாய்ப் பராமரித்தேன். என்றாலும், நீ எனக்கு உதவ உன்னைத்தரமாட்டாயா?" என்று கேட்டான்.

அதற்கு அந்த மூங்கில், "நான் இறந்தால் என் கன்றுகளைக் காப்பவர் யார்? என் கன்றுகள் எல்லாம் என்னைப்போல் வளர்ந்த பின்பு நீர் என்னை வெட்டலாம்" என்றது.

அதைக்கேட்டதும் அழகப்பன் மிகவும் துக்கத்தோடு போய்விட்டான். பின்பு அவன் வெட்டித்தள்ளின மூங்கில்களின் கிளைகளை எல்லாம் தறித்தான். அவைகளை உருண்டு நீண்ட கழிகளாகத் திரட்டினான். ஒரு நீண்ட இருப்புக்கோலால் அந்த மூங்கில்களின் உள்ளே இடைஇடையே உள்ள கணுக்களையெல்லாம் துளைத்தான். முடிவில், ஒரு மூங்கிலைச் சுனையின் பக்கமாக நீருக்குள்ளே விட்டான். அதன் ஒருகோடியில் வேறொரு மூங்கிலைச்

சேர்த்தான். இப்படியே ஒவ்வொரு மூங்கிலாகச் சேர்த்துக் கொண்டே வந்தான். மூங்கில்கள் நீண்டுகொண்டே வந்தன. இந்த மூங்கில்குழாய் மலையின் பக்கமாக அவனுடைய ஊராகிய சிறுகுடியை நோக்கி நீண்டுகொண்டே போயிற்று. இதன் வழியே சுனையின் நீர் மடைதிறந்தாற்போலப் பாயத்தொடங்கினது. அழகப்பன் மூங்கில்களை ஒவ்வொன்றாய்ச் சேர்த்துக் கொண்டே வந்தான். முடிவிலே மூங்கில்குழாய் ஊரை எட்டி விட்டது.

ஊரார் எல்லாரும் மூங்கில் குழாய்வழியாக நீர்பாய்வதைக் கண்டு மட்டுஇல்லா மகிழ்ச்சி அடைந்தார்கள். அவர்கள் அழகப்பனைப்பார்த்து, “அழகப்பா, இன்னும் ஒரு மூங்கில்குழாய் இருந்தால் இந்தச் சுத்தஜலம் நமது ஊருக்கு நடுவில் இருக்கும் ஏரியிலேயே பாயச்செய்யலாம்” என்றார்கள்.

அதற்கு அழகப்பன், “இன்னும் ஒரு மூங்கில் உண்டு. ஆனால், அது தனக்கென்று வாழும் மூங்கில்; பிறர்க்கு உதவாது. ஆகையால், நீங்கள் வாய்க்கால்வெட்டி நீரை ஊர் ஏரிக்குள் விழும்படிச் செய்யுங்கள்” என்றான். அவர்கள் அப்படியே செய்தார்கள். அதனால், மலையிலுள்ள சுனைநீர் ஊரில் உள்ள ஏரியில் பாய்ந்தது. அப்பொழுது ஏரிநிறைந்து மறுகால்பாய்ந்தது. மறுகால் பாய்ந்ததினாலே ஏரி நீர் சுத்தமாயிற்று. ஊரார் யாவரும் சுத்தமான நீர் அருந்தி அழகப்பனையும் அவனுடைய மூங்கில்களையும் புகழ்ந்தார்கள்.

மலை உச்சியிலே இருந்த மூங்கில் தன்னந்தனிமையாக நின்றது. அதன் அடியில் அறுத்திருந்த மூங்கில்கள் வளர்ந்து பெரிய காடாயின. ஒருநாள் பெரிய காற்றுஅடித்தது. அப்பொழுது அந்தத் தனி மூங்கில் மற்றமூங்கில்களோடு உராய்ந்து தீப்பற்றி எரிந்துபோயிற்று. ஒருவருமே அந்த மூங்கிலை நினைக்கவில்லை. ஆனால் சிறுகுடியில் வாழ்ந்தவர்கள் எப்போதும் மற்றெல்லா மூங்கில்களையும் புகழ்ந்தார்கள்.

---

## தென்னிந்தியாவின் பழைமை

சமீபகாலத்தில் சென்னை நகரைச்சார்ந்த கீழ்ப்பாக்கத்தில் ஒருவருடைய வீட்டின் நிலத்திலிருந்து சில புராதன சரித்திரச்சின்னங்கள் கண்டெடுக்கப்பட்டன. அவை ஒரு குடம், ஒருபறவையின் உருவம், ஓர் இரும்பாயுதம் என்பன. இவற்றைக்கண்ட சரித்திரமேதாவிகள் கிறிஸ்துபிறப்பதற்கு 5,000 வருஷங்களுக்கு முன்னரே தென்னிந்தியாவிலிருந்தவர் இரும்பின் உபயோகத்தை அறிந்திருந்தனர் என்று அபிப்பிராயப்படுகின்றார்கள்.

# பக்ஷிகளின் கூண்டு

---

குழந்தைகளே !

எனது வகுப்புக் குழந்தைகள் ஒருதடவை பக்ஷி களின் கூண்டுகள் செய்து கொண்டு வந்தார்கள். அவைகளில் சில மாதிரிகளை இங்கே காட்டியிருக்கி றேன். இவைகளைச் செய்வதற்கு நீங்கள் சேகரம் செய்யவேண்டிய சாமான்கள் பின்வருமாறு :—

1. தென்னை ஈர்க்குகள் அல்லது மெல்லிய மூங் கில் சிம்புகள்.

2. வட்டமான அல்லது சதுரமான அட்டைத் துண்டுகள்.

3. ஓர் ஊசி, கொஞ்சம் நூல், ஒரு வளையம்.

4. வர்ணக் காகிதம், பிசின் இவைகளே.

குறுக்களவு 5 அங்குலமுள்ள இரண்டு வட்ட மான அட்டை வெட்டிக்கொள். சுமார் 8 அங்குல நீளமுள்ள குச்சி ஒடித்து வைத்துக் கொள். மேலே எடுத்துக் கொண்ட இரண்டு அட்டைகளின் ஓரங் களிலும் குச்சி செல்லக்கூடிய துவாரங்களைச் செய்து கொள். கீழ் அட்டைத் துண்டுக்கும் மேல் அட்டைத் துண்டுக்கும் 4 அங்குல தூரம் வைத்துக் குச்சிகளைச் செருகி விடு. மேலே நீட்டிக் கொண்

டி-ருக்கும் குச்சிகளை ஒன்ருகச் சேர்த்துக்கோபுர உச்சி முனைபோல் காணும்படி ஒரு நூல் கொண்டு கட்டு. பக்ஷி உட்காருவதற்கு ஒரு குச்சியையும் கூண்டின் குறுக்கே கட்டலாம். அடித்தட்டு, மேல் தட்டு இவை களைச் சுற்றி மெல்லிய வர்ணக் காகிதங்களைத் தோரணம் கத்தரித்து ஒட்டுவது அழகாக இருக்கும்.

---

மேலே சொன்னது போல் 6 அங்குலக் குறுக் களவு உள்ள இரண்டு வட்டமான அட்டைகள் தேவை. குச்சிகள் 7 அங்குல நீளமுள்ளனவாக இருக் கட்டும். அட்டையின் ஓரங்களில் துவாரம் செய்து குச்சிகளைச் செருகு. தொங்கவிடுவதற்காக மேல்


கோபுரக்கூண்டு.


வட்டக்கூண்டு.

அட்டையில் ஒரு வளையத்தையும் செருகு; அல்லது தைத்துவிடு. பக்ஷி நடுக்குச்சி மீது ஏறவும் இறங்க வும் ஈர்க்குச்சியாலேயே ஓர் ஏணி செய்து சாய்த்து வை. இரும்புக் கம்பி கிடைக்குமானுல் ஒரு சிறு ஏணி செய்து படத்தில் காட்டியது போல் அதை வளைத்து வை.

இது ஒரு சதுரக்கூண்டு. 6 அங்குல சதுரமுள்ள இரண்டு அட்டைகளும், 7 அங்குல நீளமுள்ள குச்சிகளும் தேவை. முன்னே சொன்ன மாதிரி கூண்டைச் செய். ஏதாவது ஒரு கிளியின் படம் கிடைத்தால் அதை ஓர் அட்டையில் ஒட்டி நடுவிலுள்ள் குச்சியின் மீது கிளி நிற்கிறது போல் வை. இது பார்வைக்கு வெகு அழகாக இருக்கும். கிளி வெளியே வரும்படி ஒரு வாசற்படி செய்து வைப்பது அவசியம். இந்த வாசற்படி 4 அங்குல அகலமும் $3\frac{1}{2}$ அங்குல உயரமும் இருக்கலாம். ஏதாவது ஒரு பக்கத்தில் இம்மாதிரி வாசற்படி செய்து வைத்துக்கொள்ளுக. திறந்து மூடும்படி கயிறாவது கம்பியாவது கட்டிக் கொள்ள வேண்டும்.



சதுரக்கூண்டு.

எஸ். ஜகந்நாதன்.

---

## பாதுகாவலுக்குப் புதியவழி

நிதி வைக்கப்பட்டுள்ள அறைகளுக்கு ஒருவித மின்சார இயந்திரத்தை (Photo electric cells) அமைத்துவிட்டால் எவரும் இலகுவில் அந்த நிதியைக் களவாட இயலாதாம். விஷயம் என்னவென்றால்:- அவ்விதக் கருவி அமைக்கப்பட்ட அறைக்குள் எவராவது பிரவேசிக்க முயன்றால்—அவரது மூச்சுநுழைந்தாலும் மயிரிழை நுழைந்தாலும் சரியே—உடனே ரேடியோ அலைகள் தோன்றி மின்சாரத்தை இயக்கிப் பல மணிகளை அடித்துப் பெரியஓசையை எழுப்பிவிடும். அதனைக்கேட்டு நிதிக்கு உரியவர்கள் ஜாக்கிரதையாக இருத்தல் எளிதாகின்றதல்லவா!

—இந்தியன் ரிவ்யூ.

# உபாத்தியாயர் பகுதி

## குழந்தைகளின் விளையாட்டு

எஸ். ஜகந்நாதன்

'குழந்தைகளின் நந்தவனம்' என்ற தலைப்பில் சென்றமாதம் எழுதியிருந்த விஷயங்கள் குழந்தைகளின் அறிவு அபிவிருத்திக்கு ஏற்றனவாக இருக்கும். அவைகளால் வேடிக்கையாகக் குழந்தைகளுக்குப் பொழுது போவதோடன்றிப் பெரிய விஷயங்களை அவர்கள் சுலபமாக அறிந்தும் கொள்வார்கள்.



சில மரத்துண்டுகளை வைத்துக்கொண்டு அவைகளைக்கொண்டு பலவகையான விஷயங்களை அவர்களுக்குப் போதிக்கலாம்.

சதுரமாகவும் நீண்ட சதுரமாகவும் முக்கோணங்களாகவும் வட்டமாகவும் உள்ள கட்டைகளை வைத்துக்கொண்டு வஸ்துக்களின் உருவத்தைப்பற்றிப் போதிக்கலாம். பிறகு அவைகளை வீடுகளைப் போலவும், கோபுரங்களைப்போலவும் அடுக்கச்சொல்லி அவைகளைப்பற்றிய விஷயங்களை அறிவிக்கலாம்.

ஒரு குழந்தை தன்னிடம் கொடுத்த மரக்கட்டைகளைக் கொண்டு சரியானபடி ஒரு கோபுரத்தை அமைக்கத் தெரிந்து கொண்டகாலத்தில் அதற்கு உண்டாகும் சந்தோஷத்திற்கு அளவே இராது.

சிலவஸ்துக்களைப் பலவகையாக மாற்றிவைப்பதால் பலவகையான விசித்திர உருவங்களை அமைப்பது, உருவத்தின் வேறுபாடுகள் என்பவற்றைப்போன்ற விஷயங்களை இந்தப் பயிற்சியால் குழந்தைகள் உணர்ந்துகொள்வார்கள்.




மேலே படத்திற்காட்டியபடி பலநிறமுள்ள பந்துகளை நூல்களால் கட்டித் தொங்கவிடச் செய்து அவைகளைப் பற்றிப் போதிக்கலாம். இதனால் நிறபேதங்களை நன்ருகக் குழந்தைகள் அறிந்து கொள்வார்கள்.

---

## இரவில் ஜனனமரணவிகிதம்.

பிரான்சு தேசத்தில் பல ஆஸ்பத்திரிகளில் ஜனனமரணவிகிதத்தின் ஒரு வருஷக் கணக்கைப் பார்வையிட்டபோது தெரியவந்தவிஷயமாவது:— ஒரு நாளில் இரவு பன்னிரண்டு மணியிலிருந்து மறுநாள் பகல் பன்னிரண்டு மணிக்குள் ஜனனவிகிதம், பிற்பகலிலும் முன் இரவிலும் உண்டாகும் எண்ணிக்கையை விட அதிகமாக இருக்கிறது. மரணவிகிதம் ஒரு நாளில் மாலை ஆறுமணியிலிருந்து காலை ஆறுமணிவரையில் அதிகமாக இருக்கின்றது.

—லிடரி டைஜஸ்ட்.

# மரகதவல்லியின் கடிதங்கள்

## ஸ்ரீ.

---

[பங்கஜாக்ஷியின் காதற் கடிதங்கள் படிக்கப்படிக்க அற்புதமாயிருக்கும். செண்பகவல்லியின் கடிதங்கள் தாய்மாருக்கு நற்புத்தி புகட்டுவன. மரகதவல்லியின் கடிதங்களோவெனின்—'பேரு பெத்தபேரு, தாக நீரு லேது' என்கிற சமாசாரந்தான் என்று வேறுயாராவது சொல்லுமுன், அவள் கதையை நானே சுருக்கிச் சொல்லிவிடுகிறேன். மரகதம் நல்ல குடும்பத்தில் பிறந்தவள்; மாமனுக்கே வாழ்க்கைப்பட்டாள். கஷ்டகாலம்; ஒரேவருஷத்தில் அவள் தகப்பனும் கணவனும் இறந்துபோய்விட்டார்கள். குடும்பம் ஏழ்மைப்பட்டுவிட்டது. பிறகு மரகதம் ஒரு விதவாசிரமத்தில் சேர்ந்து படித்து, 'நர்ஸ்' வேலையிலமர்ந்தாள். இப்பொழுது தாயாரையும் மாமியாரை (பாட்டியை)யும், அவள்தான் சம்ரக்ஷிக்கிறாள். நல்லபெண்; ஆனால் செல்வமாய் வளர்ந்த பால்யப் பழக்கத்தால், சற்று வாய்த்துடுக்குள்ளவள். விதவாசிரமத்திலிருந்து தான் படித்து, வேலையிலமர்ந்த விவரங்களைப்பற்றி ஒரு சிநேகிதிக்கு அவள் எழுதின கடிதங்கள் இவை.]

### 1

சாந்திநிலையம்.
8—8—..............

என் அருமைத்தோழி ஜம்புவுக்கு,

. . . . . . நான் இங்கிருந்து எழுதுவதைப்பற்றி நீ ஆச்சரியப் படுவாய். போன வாரம், சிற்றப்பா என்னை இங்கே கொண்டு வந்து விட்டுப்போய்விட்டார். இங்கே சந்தோஷமாக இருப்பதாகவே அம்மாவுக்கு எழுதியிருக்கிறேன். இல்லாவிட்டால், அவள் துரும்பைத் தூணாக்கி விசாரப்படுவாள். என் மனத்தில் உள்ளதை உள்ளபடி யாருக்கேனும் சொல்லவேண்டுமென்றிருப்பதால் உனக்கு எழுதுகிறேன். எனக்கு எல்லாம் புதியதாய், என்னவோ

போலிருக்கிறது. எப்படியாவது ஆறுமாதம் கழிந்துவிடாதா என்றிருக்கிறது. உன் அம்மங்கார், இங்கே ஆறு வருஷமிருந்து படித்து இப்பொழுது கடப்பைக்கு வாத்திச்சியாய்ப் போயிருக்கிருளாமே?

உன் குழந்தைக்கு ஆண்டு நிறைவு எப்பொழுது?.

இப்படிக்கு,
உன் அன்புள்ள,
மரகதம்.

## 2

என் அருமைத்தோழி ஜம்புவுக்கு,

......உன்கடிதம் எனக்கு எவ்வளவோ ஆறுதலாயிருந்தது. நீ சொல்வது வாஸ்தவந்தான். இந்த உலகத்திற் பிறந்துவிட்டால், அதுவும் பெண்ணுய்ப்பிறந்துவிட்டால், எதையும் பாராட்டாமல் சகித்துக்கொள்வதுதான் மேல். இங்கொன்றும் அப்படிக் கஷ்டமில்லே. ஒருதப்புச் செய்தால்கூட, நம்வீடுகளில் போல யாரும் வைவதில்லே; அடிப்பாருமில்லே, அணேப்பாருமில்லே; அவ்வளவுதான். எல்லாரும் ஓர் ஒழுங்குப்படி நடக்கவேண்டும்; இல்லாவிட்டால் நாற்பதுபேருள்ள குடித்தனம் எப்படி நடக்கும்? இவ்விடத்து மாமூல் எனக்குப் பிடிபட்டுவிட்டது. எல்லாரும் காலே ஆறுமணிக்குள் எழுந்து படுக்கையை மடித்து அறையைச் சிராகவைத்துப் பல்தேய்த்துவிட்டு நடு ஹாலுக்கு வரவேண்டும்; அங்கே அரைமணிநேரம் கடவுளேத் துதித்து ஏதாவது பாடல்கள் சொல்லிவிட்டு, அவரவர் பாடங்களேப் படிக்க ஆரம்பிக்க வேண்டும். அது முதல் ஒன்பதுமணிவரையில் பத்து நிமிஷத்துக்கு இரண்டுபேராய் எழுந்துபோய்ப் புடைவையைத் தோய்த்துக் குளித்து விட்டுவரவேண்டும். பிறகு சாப்பிட்டுப் பத்துமணிக்குள் பள்ளிக்கூடத்துக்குப் போகத்தான் பொழுதிருக்கும். மத்தியானம் மோரும் சாதமும்; சாயங்காலம் அடை, தோசை, ஏதாவது பலகாரமும் தருகிருர்கள். இராத்திரி சமையல் அநேகமாய் சாம்பாரும் கறியும்; அது எங்களேப்பொறுத்தது; வரிசைவாரியில் தினம் இரண்டுபேராய், நாங்கள் இராத்திரி சமைக்கவேண்டியது. சமையல் பாட்டி, அப்பொழுது சற்றுச் சிரமபரிகாரம் செய்து கோவிலுக்கு ஒரு நடை போய்விட்டுப் பரிமாற வந்துவிடுவாள். இங்கே ஒவ்வொருவருக்கும் சாப்பாடு மாதம் எட்டுரூபாயாகிறதாம். எவ்வளவோ சிக்கனமாயிருப்பதால்தான் இதற்குள் முடிகிறதென்று நினேக்கிறேன். புதியவளாயிருந்தாலும் நான் சட்டென்று மாமூலேப் பிடித்துக்கொண்டுவிட்டேன் என்று நேற்று சூப்ரெண்

டம்மா சொன்னாள். சிலர் வேளைக்குக் குளிக்கப் போகாமல் பிறரைக் காக்கவைக்கிறார்கள்; பரிமாறின கறி போதாதென்று பாட்டியுடன் சண்டைபோடுகிறார்கள். என்ன கஷ்டம் வந்தாலும் சிலருக்கு நாவை அடக்கத் தெரிவதில்லை. இவை அற்ப விஷயங்கள்; மொத்தத்தில் எல்லாரும் ஒற்றுமையாய்த்தான் இருக்கிறோம். நான் நாலாவது பாரத்தில் சேர்ந்திருக்கிறேன்.

## 3

என் அருமைத்தோழி ஜம்புவுக்கு,

......நான் பள்ளிக்கூடத்தில் படிப்பதைப்பற்றி நீ பொறாமைப்படுவது எனக்குச் சிரிப்பாயிருந்தது. அக்கரைக்கு இக்கரை பச்சை என்றபடி நீ பள்ளிப்பெண்ணாயிருக்க ஆசைப்படுகிறாயா, என்னவோ? நாம் குழந்தையில் படித்த படிப்புக்கும் இந்தப் படிப்புக்கும் எவ்வளவோ வித்தியாசமுண்டு. விளையாட்டிலேயே மனமாய், தீராப்பொறியாய் பாடம் வாசித்தகாலத்தில், நம்மை அறியாமலே எவ்வளவு சீக்கிரம் படிப்பும் கணக்கும் வந்தன. இப்பொழுது என்ன முயன்றும், என் வகுப்பில் படிக்கும் சிறுமிகளுக்கொப்ப என்னால் மார்க்குவாங்க முடியவில்லை. பத்துவயதில் விட்டபடிப்பை இருபதுவயதில் மறுபடியும் தொடங்கினால் எப்படி? நடுவில் சம்சார பாரத்தைத்தாங்கி ஒதுக்கியாய் விட்டது; வித்தியாப்பியாசம் குறையும் நடக்கிறது. என் வகுப்பில் பன்னிரண்டு பதினாறு வயதுப்பெண்கள், கலியாணமாகாதவர்கள், கவலையற்று ஆடி ஓடிக்கொண்டு விளையாட்டிலும் வாசிப்பிலும் எவ்வளவோ உற்சாகமா யிருக்கிறார்கள். அதைக்கண்டால், இருபது வயதுவரையேனும் அவர்களுக்குப் படிப்பைத்தவிர வேறு ஒரு பொறுப்பும் இல்லாதிருந்தால் நல்லதென்றுதான் தோன்றுகிறது. எப்படியாவது இந்த வருஷம் பரீக்ஷையில் தேறவேண்டுமென்ற ஆசைதான் எனக்கிருக்கிறது. அந்த ஆசை நிறைவேறுவது துர்லபந்தான். போனால்போகிறது. ......

## 4

என் பிரியமுள்ள ஜம்புவுக்கு,

...... நாங்களும் கிருஷ்ணஜயந்தியைக் கொண்டாடினோம். பூஜை உள் வாசலில் தோரணம்கட்டி வீடெல்லாம் மாக்கோலமிட்டுச் சாயங்காலம் பூஜைசெய்து கீர்த்தனங்கள் பாடினோம். பங்கஜம் வெகு அழகாய்க் கீதகோவிந்தம் பாடினாள். ஒரு தெலுங்குப்பெண் பக்தியாவேசத்தில் ஆழ்ந்துவிட்டாள். "கிருஷ்ணனை நினைத்து, கோபிகாஸ்திரீகள் தங்களுக்கு வீடும் புருஷனும் குழந்

தைகளும் உண்டு என்பதை மறந்து விட்டார்களாம். அதுபோல நானும் கிருஷ்ணனை நினைத்தால் எனக்கு வீடும் புருஷனும் குழந்தைகளும் இல்லை என்பதை மறந்து விடுகிறேன்" என்று அவள் என்னிடம் சொன்னாள். என்மனம் கல்நெஞ்சுதான். பாட்டுக் காதுக்கு இனிமையாக இருந்தது என்பது ஒன்றைத் தவிர எனக்கு வேறொன்றும் தோன்றவில்லை. அநேகர் தங்களுக்குப் பரீக்ஷை தேறவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். ......

## 5

என் அருமை ஜம்புவுக்கு,

....நான் இங்குவந்தநாளாய் 'டெனிஸ்' ஆடுகிறேன். உன்னிடம் சொல்லவில்லையா? சாயங்காலம் ஏதாவது ஆடவேண்டுமென்பது இங்கே சட்டம். விளையாட்டிலுமா கட்டாயம் என்று முதலில் கஷ்டமாயிருந்தது. ஆனால் கட்டாயம் இல்லாவிட்டால், ஒருவரும் பழைய வழக்கங்களைவிட்டுப் பந்தாட முன்வரமாட்டார்கள்; மூலைக்கொருவராய் உட்கார்ந்திருப்பார்கள். இப்பொழுது 'டெனிஸ்' ஆடுவதில் எனக்கே ஓர் உற்சாகம்; ஆடும்பொழுது மெய்மறந்து ஆட்டத்திலுள்ள போட்டியைத் தவிர வேறொன்றும் தோன்றுவதில்லை. சனி ஞாயிறில், எங்கள் எல்லாருக்கும் புடைவை நெய்யவும் பிரம்பு பின்னவும் இங்கே கற்றுக்கொடுக்கிறார்கள். எனக்குத் தமிழ் சுமாராய்த் தெரிகிறதென்றும், அதனால் அவ்வளவு தெரியாதவர்களுக்குத் தினம் ஒருமணிநேரம் தமிழ்ப்பாடம் நான் கற்றுக்கொடுக்கும்படியும் சூப்ரெண்டம்மா சொல்லியிருக்கிறாள். இதெல்லாம் போக, பாடம்; போதாக்குறைக்கு வாரவாரம் யாரேனும் சாந்திநிலையத்தைப்பார்க்க வந்துவிடுவார்கள்; அவர்கள் பிரசங்கத்தைக்கேட்பது, அவர்களுக்கு உபசாரம் செய்யவேண்டியது. போது ஒழிவேயில்லை. .....

## ௬

என் பிரியமுள்ள ஜம்புவுக்கு,

......நான் விடுமுறையில் ஊருக்குப் போகவில்லை. பரீக்ஷையில் தேறிவிட்டேன். இங்கே சில பெண்களுக்குப் பாடம் கற்றுக் கொடுக்கிறேன். அவர்களுக்குப் படிப்பு நன்றாய் வரவில்லை. அவர்கள் விடுமுறையில் ஊருக்குப் போகவில்லை. நானும் போக முடியவில்லை. எனக்கு வருத்தம்தான். "உன்னைப் பிறர் கைதூக்கி விடுவதற்கு மாறாக, உன்னிலும் கேவலமாயுள்ள பிறருக்கு நீ உபகாரம் செய்யவேண்டுமென்று நினைக்கவேண்டாமா?" என்று இங்கே எல்லாரும் சொல்லுகிறார்கள்.

நான் அடுத்தவருஷம் ஆஸ்பத்திரி 'நர்ஸாக' 'ட்றெயினிங்' எடுக்கலாமென்றிருக்கிறேன்..........

## 7

என் பிரியமுள்ள ஜம்புவுக்கு,

........நர்ஸ்வேலை வியாதியஸ்தர்களுக்கு உபகாரந்தான். ஆனல் நான் நர்ஸ் ஆனதற்கு முக்கியகாரணம், வாத்திச்சி வேலையில்விட இதில் அதிக வரும்படி கிடைக்கும் என்பதற்காகத்தான்.

பரோபகாரம், சேவை என்று நீயும் பெரிதாய்த் தொடங்காதே. அந்த வார்த்தைகளைக் கேட்டுக்கேட்டு அலுத்துவிட்டது. நேற்று வைரமாய் ஜொலித்த ஓர் அம்மாள் வந்து 'தொண்டு' என்பதைப்பற்றி எங்களுக்கு ஒரு பிரசங்கம் செய்தாள். முக்கியமாய் நாங்கள் ஜன சமூகத்துக்குத் தொண்டுசெய்யவேண்டுமாம். அரைக்காசில் கால்பங்கை எளியோருக்குக் கொடுக்கவேண்டுமாம். ஏனே? அந்த அம்மாள் 'தொண்டு' செய்யட்டுமே; ஒருகாதுக் கம்மலைவிற்று எளியோருக்குக் கொடுக்கட்டுமே? இந்த வழக்குப் பிசகுதான்; எனக்கே தெரியும். சொந்தமாய் ஒரு குடும்பமில்லாதவர்கள் பிறர் பாரத்தையேனும் கூடச் சுமக்கவேண்டும்; குழந்தைகள் இல்லாதவள் அநாதைக் குழந்தைகளுக்காகவேனும் சிரமப்படவேண்டும். இது அவரவர் தம் சொந்த நன்மையைக்கோரிச் செய்யவேண்டியது. ஒருத்தி துக்கத்தைக் காத்து, அவளுக்குத் தன்நினைவே மனத்தில் உறைத்துப்போய்விட்டால், அப்புறம் நெஞ்சில் ஈரம் போய்விடும்; அப்படியின்றி உற்ருர், அயலார், பாட்டு, படிப்பு, பரோபகாரம், ஜீவனேபாயம் முதலிய விஷயங்களில் அவள் மனத்தைச் செலுத்தினல் புண்பட்ட மனம் ஆறிவிடும்; அவளும் சந்தோஷமாயிருப்பாள்; அவளையொட்டின பிறருக்கும் சந்தோஷமுண்டு. ஆனல், "உனக்கு ஒரு பாக்கியமும் கொடுத்து வைக்கவில்லை; நீ இருப்பது நிலத்துக்குக் கேடு; பிறருக்கேனும் உபகாரம்செய்" என்ருல் அது முடியாது. அவ்வளவு மனக்கசப்புடன் உபகாரசிந்தை சேர்ந்துவராது; அப்படிக் கசந்துகொண்டவர்களுடைய உபகாரம் சாதாரண ஜனங்களுக்கு வேண்டவும் வேண்டாம். தேருத மனத்தைக்கொண்டு பக்தி மார்க்கத்தில் நுழையலாம்; தேறின மனத்துடன்தான் ஜனசேவை செய்யப் புகவேண்டும். 'தொண்டு' செய்வதைப்பற்றிய பிரசங்கங்கள் பணக்காரரிடமும் பாக்கியசாலிகளிடமும் செய்யவேண்டும். அவர்கள் செய்யும் தொண்டின் முன்மாதிரியைப்பார்த்துப் பிறரும் பின்பற்றுவார்கள்........,

## 8

என் அருமை ஜம்புவுக்கு,

...... இந்த வேலையில் உழைப்பு அதிகந்தான்; ஆசாரம் கொண்டாடுவதை நான் அடியோடு விட்டுவிட்டேன். எந்தச் சாதியாரையும் எந்த வியாதியஸ்தரையும் கண்டால் எனக்கு அருவருப்பில்லை; அவர்களுக்குச் சிகிச்சைசெய்வதில் ஓர் உற்சாகந்தான் தோன்றுகிறது. ஏன் என்று கேளாதே; அப்படியே வழக்கமாய்விட்டது. அம்மாவும் பாட்டியும் இந்த மாத ஆரம்பத்திலேயே வந்துவிட்டார்கள். ஒட்டுக்குடி வேண்டாமென்று அடுத்த மாதமுதல் ஒரு தனிவீட்டுக்குப் போகப்போகிறோம். வெகு லக்ஷணமான வீடு; இருபதுரூபாய் வாடகை. வீடு சின்னதுதான்; ஆனால் கூடமும் சமையலறையும் பாங்காய் இருக்கின்றன; மொட்டைமாடி இருக்கிறது. அதை ஒரு 'மாடல்' வீடுபோல வைத்துக் கொள்ளப்போகிறோம். நேற்றெல்லாம் அலைந்து புதுச் சாமான்கள் வாங்கிவந்தோம்; எல்லாம் குடித்தனத்துக்கு வேண்டியவைதாம். ஆஸ்பத்திரியிலிருந்து நான் வந்தவுடன் படுத்துக் கொள்ள ஒருசாய்வு நாற்காலியும், மேஜைமேல்வைக்க ஒரு காசிப் பித்தளைப் பூந்தொட்டியும் அம்மாசொல்லி வாங்கின அதிகப்படி சாமான்கள். அடுத்தமாதம் உங்களாத்துக்காரர் பரீக்ஷைக்காக இங்கே வருவதாயிருந்தால், நீயும் அவருடன் நாலுநாளைக்கு வந்துவிட்டுப்போனால் எவ்வளவு நன்றாயிருக்கும்! நீ வீட்டைவிட்டுப் புறப்படுவது பகீரதப் பிரயத்தனந்தான்........

இப்படிக்கு,<br>
உன் அன்புள்ள,<br>
மரகதம்.

---

## குற்றத்தை வெளிப்படுத்தும் அறை

நியூயார்க் நகரத்திலுள்ள ஓர் அறிஞர் குற்றவாளிகள் தாங்களே தங்கள் குற்றத்தை ஒப்புக்கொள்ளச் செய்வதற்குரிய அமைப்புக்களுடன் ஓர் அறையை நிறுவ எண்ணியிருக்கிறார். அவ்வறையில் நான்குபக்கங்களிலும் கண்ணாடிகள் இருக்கும். குற்றவாளி அறைக்கு நடுவே இருப்பான். அவனுக்கு மேலே பலவர்ண விளக்குகள் இருக்கும். அவன் அங்கே இருக்கையில் அவனுடைய முகத்திற் பலவிதமான நிற ஒளிகள் படும்படி செய்யப்படும். அதனால் அவனுடைய முகம் பயப்படுவதுபோலவும் தளர்ச்சியுற்றது போலவும் தோற்றும். அத்தகைய முகத்தோற்றத்தைச் சுற்றியுள்ள கண்ணாடிகளிற் பார்த்த குற்றவாளி தன்முகமே தன் அகத்திலுள்ளதை வெளியிட்டு விட்டதாக நம்பி உள்ளதைக் கூறவருவானென்று அவ்வறையை நிறுவுபவர் நம்புகிறார்.

—பாபுலர் ஸயன்ஸ்.




## பவுடர்

வி. விசாலாக்ஷியம்மாள்

'சூடே ஒரு ருசி; சிவப்பே ஓர் அழகு' என்பது ஒரு முதுமொழி. 'கண்ணும் மூக்கும் அவ்வளவாக இல்லாவிட்டாலும், பட்டாணிச்சி மாதிரியில் நல்ல சிவப்பாக இருக்கிறாள்!' என்று சிவப்பாக இருப்பதை மேன்மைப் படுத்திக் கூறுகிறார்கள். களை பொருந்திய முகமும் தலைநிறையக் கூந்தலும் இருந்த பொழுதிலும், 'பார்வைக்கு என்னவோ லக்ஷணமாகத்தான் இருக்கிறாள்; இருந்தாலும் தொட்டால் ஒட்டிக் கொண்டுவிடும்போல் அவ்வளவு கறுப்பாக இருக்கிறாளே!' என்றும் 'அக்கினியைக் குளிப்பாட்டினால் போலிருக்கிறாள்', என்றும், 'சாந்துப் பொட்டு இட்டுக் கொண்டால், பொட்டு இட்டிருக்கும் இடம் தெரியாதுபோலிருக்கிறதே!' என்றும் நல்லகறுப்பாக இருக்கப்பட்டவர்களைச் சாதாரணமாகப் பரிகசித்துக் கூறுகிறார்கள். 'மாநிறம்; சிவப்பு என்று சொல்லுவதற்கில்லை; கறுப்பில் சேர்த்திதான்; அவளொன்றும் சிவப்பில்லை' என்று சொல்லுவதையும் நம்மவருள் சகஜமாகக் கேட்கலாம்.

இவ்விதம் சிவப்பிற்கு மகிமை ஏற்பட்டிருக்கும் பொழுது, கறுப்பாக இருக்கிறவர்கள் கூடிய வரையில் மாநிறமாகவாவது தோன்றவேண்டும் என்றும், மாநிறமாக இருப்பவர்கள் சிவப்பாகத் தோன்றவேண்டும் என்றும், சிவப்பாக இருக்கிறவர்கள் இன்னும் அதிகச் சிவப்பாகக் 'கிள்ளினால் பால் சொட்டும்!' என்ற மாதிரியில் தோன்ற வேண்டும் என்றும் ஆசைப்படுவது சகஜந்தான். முன்னாட்களில் மஞ்சளைப் பூசிக்குளித்து, நிறத்தைச் சரிப்படுத்த முயன்றார்கள். 'ஆக்கத் தெரியாவிட்டால் புளியைக் கரை; அழகு இல்லாவிட்டால் மஞ்சளைப் பூசு' என்பது ஒரு பழைய காலத்து வசனம்.

தற்காலத்தில் தோலின் இயற்கைநிறத்தை மாற்றுவதற்குப் பல வழிகளைப் போதிக்கிறார்கள். இதில் பவுடரைப் பூசிக்கொள்ளுவதுதான் எல்லாராலும் அனுசரிக்கக் கூடிய சுலபமான முறையாக இருக்கிறது. இதற்கென்று பல இலேசான வர்ணங்களில் பவுடர்களைத் தயாரித்து விற்கிறார்கள். பவுடரை வாரிப்பூசிக்

கொள்ளுவதனுல் தங்கள் முகத்திலிருக்கும் மெல்லிய தோலுக்கு ஏற்படக்கூடிய கெடுதல்களைச் சற்றும் உணராமல் நம்தேசத்தவர்கள் இதைத் தாராளமாக உபயோகிக்கிருர்கள். மேலும், பவுடரை உபயோகிப்பதாக இருந்தால், முதலிலும் பிறகும் கையாள வேண்டிய முறைகளைச்சரிவரச் செய்யாததனுல், பவுடர் பூசியிருப்பதனுல் உண்டாகவேண்டிய நாசூக்கானதோற்றத்திற்குப் பதிலாக, ஆங்காங்கே பவுடர் ஒட்டிக்கொண்டு கோடு கோடாகத் தெரிய முகம் பார்வைக்கு வேடிக்கையான தோற்றத்துடன் கூடியதாக விளங்குகிறது.

முதலாவதாகப் பவுடரைப் பூசுவது முகத்தின் தோலுக்கே கெடுதலை விளைக்கக்கூடியது. அவ்விதம் பவுடரை உபயோகிப்பதாக இருந்தாலும் சில முறைகளை அனுசரிக்கவேண்டும். முகத்தைக் கழுவிவிட்டு உடனேயே பவுடரைப் பூசிக்கொள்ளக் கூடாது. முதலில் ஈரம் போகத் துடைத்துச் சற்றுக் காய்ந்ததும் பவுடர் போடுவதற்கு அடிப்படையான எண்ணெய்பூசினதுபோல் பள பள என்று மின்னுமல் மறைகிற 'கிரீம்' ஒன்றை நன்ருக முகம் எங்கும் தடவவேண்டும். அதன்மேல் ஒரே சீராக இலேசாகப் பவுடரை ஒத்தவேண்டும். அடிப்படையாக மறைகிற 'கிரீம்' தடவிப் பிறகு பவுடரை ஒத்துவதனுல், பவுடர் தட்டுத்தட்டாகக் காணுமல் போட்டது தெரியாமல் இருக்கும். பவுடர் பூசியானதும் இமைமயிர் புருவத்து மயிர் இவைகளில் பவுடர் ஒட்டிக்கொண்டிருக்கிறதா என்பதைக் கவனித்துக் கொள்ளவேண்டும். இரவில் முகத்தை வெந்நீரினுல் சுத்தம் செய்து, இதற்கென்று விற்கப்படும் கொழுப்புள்ள 'கிரீம்' ஒன்றை முகத்தில் நன்ருகத் தடவ வேண்டும். இரவில் பவுடர் போக முகத்தை அலம்பிக் 'கிரீம்' உபயோகிக்காவிட்டால், முகத்தில் சுருக்கங்களும் அவலக்ஷணமான கறுப்பு மருக்களும் சிக்கிரத்தில் தோன்றும். கூடியவரையில் பவுடரை உபயோகிக்காமல் இருப்பதே மேல்; அப்படியே உபயோகிப்பதாக இருந்தால் இந்த முறைகளை அனுசரித்து நாசூக்காக உபயோகிக்கவேண்டும்.

நல்ல கறுப்பாக இருப்பவர்கள் சிவப்பாகத்தோன்ற வேண்டும் என்று பிரியப்படாமல் இதர வழிகளில் தங்கள் வனப்பை விருத்தி செய்துகொள்ளப் பிரயத்தனப்படுவதே நலம். 'மார்க்டொவியின்' என்ற அமெரிக்க ஆசிரியன் ஆப்பிரிக்காவுக்குச் சென்றிருந்த பொழுது, அங்குள்ள நீக்ரோ சாதியாரைப் பார்த்து விட்டு, 'இவர்கள் கருங்காலி மரத்தில் கடைந்து எடுத்தாற் போல் எவ்வளவு அழகாக இருக்கிருர்கள்! நம் தேசத்தவர்கள் வெளேர்

என்று பிரேதம் போல் சோபையின்றி இருக்கிறார்களே!' என்று வியந்து கூறினானும். அழகு என்பது நிர்ணயிக்க முடியாத விஷயம்; இதில் சிவப்பு அழகு, கறுப்பு அழகில்லை என்று கூறுவது தவறு என்றுதான் சொல்லவேண்டும். இது விஷயமாக அபிப்பிராயபேதங்கள் எவ்விதம் ஆயினும், நல்ல கறுப்பாக இருப்பவர்கள் பவுடரை வாரிப் பூசிக்கொண்டதும் ஏற்படும் சாம்பல் வர்ணம் பார்வைக்கு எவ்வளவு வேடிக்கையாக இருக்கிறது என்பதை உணர்ந்தார்களானால் பவுடர் வழிக்குப் போகவேமாட்டார்கள்; 'சிவமயம்' என்று கூறிக்கொண்டு சந்நியாசம் வாங்கிக் கொள்ளுவதற்கு ஏற்றதான சாம்பல் வர்ணம், கறுப்பாக இருப்பவர்கள் நிறையப் பவுடரைப் பூசிக்கொண்டதும் ஏற்படுகிறது.

கூடிய மட்டில் பவுடரை உபயோகிக்காமல் சிங்காரம் செய்து கொள்ளுவதே முகத்தின் தோலுக்கும் நல்லது; பார்வைக்கும் அழகாக இருக்கும். அப்படியே உபயோகிப்பதாக இருந்தாலும் தோலின் நிறத்திற்கு ஏற்ற நிறத்தில் பவுடரை வாங்கி அடிப்படையான மறைகிற 'கிரீம்' தடவிப் பிறகு மிகவும் நிதானமாகப் பவுடரைப் பூச வேண்டும். கண்ட மட்டில் பவுடரை முகத்தில் பூசிக்கொள்ளுவதனால் தோலின் நிறம் மாறிச் சிவப்பாகத் தோன்றும் என்று எண்ணுவதை, மனிதர்களுக்குத் தோன்றும் பல பிரேமைகளில் ஒன்றாகத்தான் சேர்த்துக் கூறவேண்டும். குளிப்பாட்டினதும் குழந்தைகளுக்குப் போடுவதற்கும், நோயாளிகளுக்கு உடம்பைத் துடைத்ததும் பூசுவதற்கும் பவுடர் சிலாக்கியமானதே. உடம்பிற்கு ஓர் ஆரோக்கியமான உணர்ச்சியைக் கொடுக்கும். சிங்காரித்துக்கொள்ளும் பொழுது ஒரு தஸ்துப் பொருளாக உபயோகிப்பதற்கு அவ்வளவு சிலாக்கியமான பொருளாகக் கூறுவதற்கில்லை. தஸ்து சாமானாக உபயோகிக்கிறவர்கள் பவுடர் பூசி இருப்பதே தெரியாமல் இருக்கும்படி அவ்வளவு இலேசாக உபயோகிப்பதே நாசூக்காகும். பிறகு நன்றாகக் கழுவவேண்டும். சிரமத்தைப் பாராட்டி இரவில் அப்படியே முகத்தில் விட்டுவிட்டால், முகத்தின் தோலுக்குக் கெடுதலையே விளைவிக்கும். பவுடருக்குப் பதிலாக நல்ல 'கிரீம்'களை உபயோகிக்கலாம். மொத்தத்தில் நல்ல தேக ஆரோக்கியமும், சுகாதாரமுறைகளை அனுசரித்த பழக்க வழக்கங்களும் உடையவர்களுக்கு முகத்தில் தோன்றும் இயற்கை வனப்பே போதுமானது; இவர்கள் செயற்கையின் உதவியைத் தேடவேண்டியதே இல்லை.




## தமிழ் வித்வானுக்குப் பரிசு

திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடாலயத்தலைவர்களாகிய ஸ்ரீஸ்வாமிநாதத் தம்பிரானவர்கள், சென்னைச் சருவகலாசாலையாரால் ஏற்படுத்தப்பட்ட தனித்தமிழ் வித்வான் பரீட்சையில் முதல்வகுப்பில் முதல்வராகத் தேர்ச்சிபெறுபவர்களுக்கு ஆயிரரூபாய்ப்பரிசு வழங்கிவருவதை நேயர்கள் முன்பே அறிந்திருப்பார்கள். இதுவரை ஆறுபேர்கள் அந்தப் பரிசைப் பெற்றிருக்கிறார்கள். இந்த வருஷத்தில் ஆறாவது முறையாகப் பரிசைப் பெற்றவர் ஸ்ரீமான் ஏ. எஸ். நாராயணசாமி நாயுடு அவர்சள். இவர் திருவையாறு அரசர்கல்லூரியில் பயின்றவர். இப்பொழுது திருப்பூர் முனிஸிபல் ஹைஸ்கூலில் தமிழ்ப்பண்டிதராக இருக்கிறார்.



இப்பரிசளிப்பு வைபவம் கோவையில் 8-12-34-இல் நடைபெற்றது. காசிமடாலயத் தலைவர்களின் சார்பாக பிரம்ம ஸ்ரீ மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் பலருக்கு அழைப்புப் பத்திரிகை அனுப்பியிருந்தார்கள். கோயம்புத்தூர் அட்வொகேட் ஸ்ரீமான் ராவ்பகதூர், டி.ஏ. இராமலிங்கசெட்டியாரவர்கள், பி.ஏ., பி. எல்., எம். எல். ஸி. தலைமை வகித்துப் பரிசை வழங்கினார்கள்.

இத்தகைய அரிய உதவி தமிழ்மாணாக்கர்களுக்கு அதிகவூக்கம் அளிக்குமென்பதில் ஐயமில்லை. வரவரத் தனித்தமிழ்வித்வான் பரீட்சைக்குச் செல்லும் மாணாக்கர்கள் அதிகமாகிவருகின்றார்கள்.

இதற்குக்காரணம் இந்தப்பரிசே என்பது மிகையாகாது. இவ்வருஷம் பரிசுபெற்ற ஸ்ரீமான் நாராயணசாமி நாயுடு அவர்கள் தமிழ்த் தொண்டு புரியும் நெறியில் நன்கு ஈடுபட்டு இன்னும் பலவகையான சிறப்புக்களை எய்தவேண்டுமென்று வாழ்த்துகிறோம்.

## கலைமகளுக்கு மற்றொரு கௌரவ ஆசிரியர்

சென்ற மாதம் கலைமகள் இதழிலிருந்து கௌரவப்பத்திரிகாசிரியர்களுடைய வரிசையில் மற்றொரு நல்லறிஞரின் பெயரும் சேர்க்கப்பட்டிருப்பதை நேயர்கள் கவனித்திருக்கக் கூடும்.

ம-ா-ா-ஸ்ரீ கே. ஸ்வாமிநாதன் அவர்கள் எம். ஏ., பி. எல். நம்பத்திரிகையின் கௌரவப் பத்திரிகாசிரியர்களுள் ஒருவராக இருக்க ஒப்புக்கொண்டார்கள். எம்முடைய நன்றியறிவு அவர்களுக்கு மிகவும் உரியதாம். சென்னை அரசாங்கக்கலாசாலையில் ஆங்கிலப்பேராசிரியராக இருந்து விளங்கும் அவர்களுடைய உயர்ந்த அறிவுநலம் கலைமகளுக்கு இனிப் பெரிதும் பயன்பட்டு வரும். அவர்களுடைய கட்டுரைகளும் யோசனைகளும் கலைமகளை அணிசெய்யும்.

## கலைமகள் ஆறுந்தொகுதி

இந்த இதழுடன் கலைமகள் ஆறுந்தொகுதி நிறைவேறுகிறது. சென்ற மூன்றுவருஷங்களாகப் பலதுறையிலும் தமிழ்மக்களுக்கு அறிவூட்டும்தொண்டில் ஈடுபட்டு எம்மால் இயன்றவரை உழைத்துவருகின்றோம். இலக்கியத்துறையிலும் சாஸ்திரத்துறையிலும் இதுகாறும் வேறு பத்திரிகைகளிற் காணப்படாத பல சிறப்பியல்களைக் கலைமகளிற் காணலாம். இவ்வருஷம் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சைக்குரிய தமிழ்ப் பாடத்தில் இப்பத்திரிகையில் வெளிவந்த 'நமது கிராமவாழ்க்கை' என்பதும் சேர்க்கப்பட்டிருக்கிறது. பள்ளிக்கூடத்துக்குரிய தமிழ்ப் பாடபுத்தகங்கள் பலவற்றில் கலைமகளில் வெளிவந்த கட்டுரைகள் இடம்பெற்றிருக்கின்றன. பலபத்திரிகைகள் இதில் வரும் கட்டுரைகளைப் பெயர்த்து வெளியிட்டு வருகின்றன. இவை இதில் வரும் கட்டுரைகளின் உயர்ந்த மதிப்பை வெளியிடுகின்றன. அவ்வப்போது அன்பர்கள் எழுதி வரும் பாராட்டுக் கடிதங்களால் இத்தொண்டு தமிழ் மக்களுக்குத் திருப்தியை விளைவித்து வருதல் புலப்படுகிறது.

இத்தகைய சீரிய பத்திரிகைக்குக் கிடைத்து வரும் ஆதரவு மேன்மேலும் பெருக வேண்டும், இன்னும் எந்த எந்த வகையில்

அழகுபடுத்த முடியுமோ அந்த அந்த வகையில் முயன்று தொண்டுபுரிய வேண்டுமென்ற ஆர்வத்தையுடைய எம்மை ஊக்குதல் தமிழர் கடமை.

கலைமகளுக்குக் கட்டுரைகளையும் கதைகளையும் எழுதி வரும் அறிஞர்களுக்கும் அவ்வப்போது மதிப்புரை எழுதிப் பாராட்டும் பத்திரிகாசிரியர்களுக்கும் அடிக்கடி பாராட்டுக் கடிதம் எழுதும் அன்பர்களுக்கும் பிற சந்தாநேயர்களுக்கும் எம்முடைய நன்றி உரியவை. கலைமகள் வளர்ச்சியைக் கருதிக் கட்டுரைகளெழுதியும், வரும் கட்டுரைகளைப் பற்றித் தங்கள்கருத்தை அறிவித்தும், இன்ன இன்ன வகையில் திருத்தம் பெறவேண்டும் என்பதைக் கூறியும், பிறவாறு உதவி புரிந்தும் வரும் கௌரவப்பத்திரிகாசிரியர்களுடைய பேருதவிக்குக் கைம்மாறு காணேம்; "உலகம் செயற்பால செய்யாவிடினும்........என்னை உலகுக்குமாறு" என்பதை நினைந்து அமைகின்றேம்.

## காலஞ்சென்ற ஸ்ரீமான் வி. பி. மாதவராவ்

சென்ற கார்த்திகை மாதம் 16-ஆம் தேதியன்று முற்பகல் ஸ்ரீமான் வி. பி, மாதவராவ் பங்களூரில் பட்டம்பவன் என்ற தமது கிருஹத்தில் காலமானரென்று தெரிந்து விசனிக்கிறேம். இவ்விந்தியத்தாய்நாடு ஈன்றெடுத்த புத்திர ரத்தினங்களில் அவர் ஒருவர் ஆவார். ஆகவே இந்நாடு அவரது மரணத்தால் தமது அருமைப்புதல்வர்களில் ஒருவரை இழந்துவிட்டது.

ஸ்ரீமான் மாதவராயரின் முன்னேர்கள் மகாராஷ்டிர தேசத்திலிருந்து அநேக வருஷங்களுக்குமுன்னேயே தஞ்சாவூரில் வந்து குடியேறியவர்கள். அதுபற்றித் தஞ்சையையே அவர்கள் தங்களுடைய ஜன்மபூமியாக மதித்திருந்தவர்கள். இவர் 1850-ம் வருஷத்தில் தஞ்சையில் பிறந்தவர். தமது இளமையில் கும்பகோணம் கவர்ன்மெண்ட்காலேஜில் படித்து வந்தார். அந்நாளில் அந்தக் காலேஜ் பிரின்ஸ்பாலாயிருந்து வந்த போர்ட்டர் துரையிடமும், ஸ்ரீமான் டி. கோபாலராயரிடமும் இவர் வாசித்து 1869-ம் வருஷத்தில் பி.ஏ. பட்டதாரியானர். போர்ட்டருக்கு இவரிடம் விசேஷ மதிப்பும் அன்பும் இருந்து வந்ததுபற்றி இவர் அந்தக்காலேஜிலேயே மெட்றிகுலேஷன் வகுப்புக்குப் பாடம் சொல்லிவைக்கும் உபாத்தியாயராக அப்போது ரஜாவிலிருந்து வந்த அவ்வகுப்பு உபாத்தியாயர் ஸ்ரீமான் சாது சேஷையாவுக்குப் பதிலாய் வேலைபார்த்துவர எடுத்துக்கொள்ளப்பட்டார். ஸ்ரீமான் வி. பி. மாதவராவின் வகுப்பில் அக்காலத்தில் வாசித்தவர்களுள் இப்போது கும்பகோணத்தில் சுகஜீவியாயிருந்துவரும் ப்ரொபஸர் சுந்தரராமையர் ஒருவர். ஆனல் சென்னைமாகாணக் கல்வியிலாகாவில் ராயரவர்கள் நிலைத்து நிற்கும் பாக்கியத்தை இம்மாகாணஞ்செய்யவில்லை.

பிறகு மைசூர் சென்று இவர் அங்குள்ள லண்டன் மிஷன்ஹைஸ்கூலில் கொஞ்சநாள் வேலை பார்த்துவிட்டு அந்த ஸம்ஸ்தானத்திலேயே ஓர் உத்தியோகத்தில் அமர்ந்தார். அதுமுதல் படிப்படியாய் இவர் உத்தியோகத்தில் உயர்ந்து 1898-ம் வருஷத்தில் டிப்டி கமிஷனர் பதவியை அடைந்தார். பின்னர், சிறிது காலம் பிளேக் கமிஷனராக விசேஷ வேலையிலிருந்தார். அப்பால் பம்பாய்க்குச் சென்று பிரிட்டிஷ் இந்தியாவின் ரெவினியூ இலாகா நிர்வாக ரகசியங்களைத் தெரிந்துகொண்டு திரும்பவே, இவர் மைசூர் ஸம்ஸ்தானத்தில் ஒரு பக்கா ரெவினியூ கமிஷனர் பதவிக்கே உயர்த்தப்பட்டார். அப்பதவியை வகித்துவந்ததுமன்றி முதல் கவுன்சிலர் பதவியையும் வகித்து வந்தார்.

இப்படி இருந்து வருகையில் 1904-ம் வருஷத்தில் இவர் திருவாங்கூர் ஸம்ஸ்தானத்துத் திவான் பதவியை ஏற்கும்படியாயிற்று. அப்பதவியை வகித்து வந்தகாலத்தில் இவர் அந்த ஸம்ஸ்தானத்தில் செய்துள்ள சீர்திருத்தங்கள் பலவாகும். ஆனல் அங்கே இவர் 3 வருஷங்களுக்கு மேலிருக்கச் சாத்தியமாகாமற் போயிற்று. 1906-ம் வருஷத்தில் இவர் மைசூர் திவான் பதவியிலே நியமிக்கப்பட்டு அந்த ஸம்ஸ்தானத்துக்குத் திரும்பினர். இவர் மைசூர் திவானயிருந்துவந்தபோது அந்த ஸம்ஸ்தானத்தில் ஏற்பட்ட திருத்தங்களையும் அந்த ஸம்ஸ்தானத்தாருக்குச் செய்யப்பட்ட நன்மைகளையும் இங்கெடுத்துச் சொல்வது சாத்தியமில்லை. 1909-ம் வருஷத்தில் மைசூர் திவான் வேலையிலிருந்து இவர் விலகினர். ஆனல் அப்புறம் சில வருஷங்கள் கழித்து இரண்டு வருஷகாலம் இவர் பரோடா திவானகவும் இருந்ததுண்டு.

ஸ்ரீமான் மாதவ ராயர் இறந்து போகும்போது இவருக்கு வயது 85. ஆகவே தமது இளமைப் பருவந்தொட்டுச் சுமார் 45 வருஷங்களுக்குக் குறையாமல் ராஜாங்க சேவைக்குத் தமது தேகத்தை இவர் அர்ப்பணஞ் செய்து வந்தவர். மூன்று தேசஸம்ஸ்தானங்களின் திவானய் இருந்து வந்ததுமன்றி அப்பால் தாம் மறையுந்தனையும் இந்திய தேச சேவைக்குத் தம் வாழ்நாளை அர்ப்பணஞ் செய்துவந்த உத்தமரென்று இவரைக் கொண்டாட நாம் கடமைப் பட்டிருக்கிறேம். ஏனெனில் உத்தியோகப் பற்றையொழித்துச் சுக ஜீவியாயிருந்து வந்த சென்ற 15 வருஷகாலத்தையும் இவர் தேச நன்மையைக் கருதித் தேசசேவையிலேயே கழித்து வந்திருக்கிறர். பெரிய காங்கிரஸ் அபிமானியாயும் இருந்து வந்திருக்கிறர். 1916-ம் வருஷத்தில், அதாவது இவர் பரோடா திவானயிருந்துவிட்டுத் திரும்பிய வருஷத்தில் லட்சுமணபுரியில் நடந்த அகில இந்திய ஹிந்து மகாநாட்டின் தலைமையை இவர் வகித்தார். அடுத்த வருஷத்தில் கூடலூரில் கூடிய சென்னை மாகாண மகாநாட்டின் தலைமையை வகித்தார். அதே வருஷத்தில் கல்கத்தாவில் கூடிய இந்தியத் தொழில்கள் சம்பந்தமான கைத்தொழில் மகாநாட்டின் தலைமையையும் வகித்தார். இவை மட்டுமா இவர் செய்தார்? 1919-ம் வருஷத்தில் தம்முடைய தள்ளாப் பருவத்தில் காங்கிரஸ் தூதக்குழுவின் தலைவராய் இந்தியச் சீர்திருத்

தங்களைப் பற்றி கூட்டுப் பார்லிமெண்டரிக் கமிட்டி முன் சாட்சியஞ் சொல்ல இங்கிலாந்துக்குப் போய் வந்தார். ஆனால் 1920-ல் கல்கத்தாவில் நடந்த காங்கிரஸுக்குப் பிறகு அம்மகாசபையின் தொடர்பை விட்டு நீங்கினர். இந்திய ராஜீயத்திருத்தங்கள் உருக்கொள்ளவிருக்கும் இச்சமயத்தில் இந்திய ராஜீய வாதிகள் இவருடைய ஆலோசனையைக் கேட்டுத் தெரிந்து கொள்வதற்கு இயலாது போய்விட்டது.

டி. எஸ். கோதண்டராமையர்.

## சிற்சில உணவுப் பொருள்களில் காணப்படும் வைடமின்களின் அட்டவணை

குறிப்பு:—ஏ, பி[1], பி[2], சி, டி என்பன வைடமின்களின் வகைகளைக் குறிப்பன. அவற்றின் பின் போடப்பட்டிருக்கும் எண்கள் அவ்வப் பொருள்களில் சுமார் இன்ன இன்ன அளவில் வைடமின்கள் காணப்படுகின்றன என்பதைக் குறிப்பன.

பால்:—(பச்சைப் புல் தழை முதலியவற்றை மேயும் பசுக்களினின்று கிடைப்பது.) ... ... ... ஏ-1; பி[2]-1; சி-1; டி-1.

வெண்ணெய்:—(டி வகைப் பாலிலிருந்து எடுக்கப்படுவது.)ஏ-2;டி-1.

முழுக் கோதுமை ... ... ... பி[1]-2; பி[2]-1.

வெள்ளைக் கோதுமை மா ... ... ஒன்றும் இல்லை.

பட்டாணி, அவரை, பீன்சு (பச்சை) ... ஏ-2; பி[1]-3; பி[2]-1; சி-3.

குறிப்பு:—இப்பதார்த்தங்கள் பச்சையாயிருக்கும்போதுதான் இவற்றிலே இவ்வளவு வைடமின்கள் காணப்படுகின்றன. இவற்றை உலர்த்திவிட்டால் இவற்றிலுள்ள வைடமின்கள் அளவில் மிகவும் குறைந்து போகின்றன. பி-வைடமின் மட்டும் அதிகம் குறைவதில்லை.

உருளைக்கிழங்கு (வேவாதது—பச்சை) ... பி[1]-1; சி-1.

காரட்டுக் கிழங்கு (சிவப்பு முள்ளங்கி.) (வேவாதது—பச்சை) ... ஏ-2; பி[1]-1; சி-2.

டர்னிப், பீட்ரூட் (சீமைவள்ளிக் கிழங்கு), ராடிஷ் (முள்ளங்கி), வெங்காயம் (வேவாத நிலைமையில்) ... ... பி[1]-1.

முட்டைக்கோசு, காலிப்ளவர் (பூ) (வேவாதது) ஏ-2; பி[2]-1; சி-3.

ஆரஞ்சுப்பழம், எலுமிச்சம்பழம் ... சி-3; பி-ஒருதுளி.

மற்றப் பழங்கள் ... சி-1 முதல் 2 வரை; பி-ஒருதுளி.

வாதாங்கொட்டை, முந்திரிக்கோட்டை முதலிய கோட்டைகள். பி[1]-3.

[சீமையில் பிரசுரிக்கப்பட்ட ஓர் அட்டவணையிலிருந்து இது எடுக்கப்பட்டதால் நம்முடைய நாட்டுக் கறிகாய் கிழங்குகளின் பெயர்கள் இதில் இல்லை.]

அ.



திருக்குறள் நாட்குறிப்பு: [கிடைக்குமிடம்: சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம், திருநெல்வேலி, சென்னை.]

சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகத்தார் சென்றவருடமுதல் திருக்குறள் நாட்குறிப்புக்களை வெளியிட்டுவருகிறார்கள். சென்ற ஆண்டுப் புத்தகத்தில் 365 குறள்கள் வெளிவந்துள்ளன. இந்த ஆண்டு 366 முதல் 700-ஆம் குறள் வரையில் வந்துள்ளன. ஒவ்வொரு தேதிக்குரிய பக்கத்தின் முதலிலும் ஒரு திருக்குறளும் அதற்குரிய கருத்துரையும் விளங்குகின்றன. திருக்குறள், மக்கள் வாழ்க்கையைச் செப்பஞ்செய்யும் சிறப்பினதாதலின் அதனை நாடோறும் நினைப்பதற்கும் கருத்தையறிந்து மகிழ்வதற்கும் இந்த டைரி ஏற்ற சாதனமாகும். தமிழன்பர்கள் இந்த நாட்குறிப்பைப் பொன்னேபோற் போற்றுவார்களென்று நம்புகின்றோம்.

புதிய சீர்திருத்தங்கள்: [தாருல் இஸ்லாம் பத்திரிகாலயத்தார் வெளியிட்டது; கிடைக்குமிடம்: தாருல் இஸ்லாம் கம்பெனி லிமிடெட், 158-பி, பிராட்வே, சென்னை; விலை அணா $2^1$.]

சமீபத்தில் வெள்ளை அறிக்கையாலும் கூட்டுக்கமிட்டி அறிக்கையாலும் சிபாரிசு செய்யப்பட்ட சீர்திருத்தங்களைப் பற்றிய செய்திகள் இதில் சுருக்கமாகவும் தெளிவாகவும் விளக்கப்பட்டிருக்கின்றன. அவற்றைப் பற்றிச் சில தலைவர்களுடைய அபிப்பிராயங்களும் இதில் அடங்கியிருக்கின்றன. தமிழ் நாட்டினர் சீர்திருத்தங்களைப் பற்றி எளிதில் அறிந்துகொள்வதற்கு இது தக்க கருவியாக இருக்கும்.

வீரமாநகர்: [எழுதியவர்: ஸ்ரீமான் ரா. பி. சேதுபிள்ளை அவர்கள், பி. ஏ., பி. எல். கிடைக்குமிடம்; அமைச்சர், தில்லைத் தமிழ்க் கழகம், சிதம்பரம்; விலை: ரூ 1—0—0.]

இராவணன் ஆண்ட இலங்கையை ஆசிரியர் வீரமாநகர் என்று குறித்துள்ளார். இச்சிறுநூல் அரக்கர்கோன் அருந்தவம், வீணைக்கொடியோன், அயோத்தி அமைச்சரும் இலங்கை அமைச்சரும் முதலிய பதினைந்து கட்டுரைகளைக் கொண்டுள்ளது. ஒவ்வொரு கட்டுரையும் கம்பராமாயணத்தை ஆதாரமாகக்கொண்டு புதிய ஆராய்ச்சி முறையில் உயரியசெந்தமிழ்நடையில் பல இடங்களிற் பிராஸம் பொலிய எழுதப்பட்டிருப்பது போற்றத்தகுந்த

தோன்றும். இலக்கியநூல்களிற் பலவற்றின் செய்யுளடிகள் உரைநடையாக இந்நூலிற் பயின்றுவந்திருப்பது வசனநடைக்கு ஓரழகைத் தருகின்றது. கட்டுரைகளின் இடையிடையே சிறந்த மேற்கோள்களும் புத்தகத்தின் ஈற்றில் அவற்றிற்குப்பொழிப்புரையும் காணப்படுகின்றன. உயர்தரத்தமிழ் மாணவர்களுக்கு இந்நூல் ஒரு புதியவிருந்தாகுமென்று கூறலாம்.

அபிமன்யு: [ஆசிரியர்: ஸ்ரீமான் வெ. சாமிநாதசர்மா; கிடைக்குமிடம்: ஸ்ரீமான் வெ. சாமிநாதசர்மா, 'வசந்தாலயம்', மாம்பலம், சென்னை; விலை: அணா 8.]

பாரதத்தில் பதின்மூன்றும் போரைப்பற்றிய கதையை நாடகரூபமாகக் கூறுவது இது. பழைய கதைச்கும் இதர்கும் சிற்சில வேறுபாடுகளுண்டு. கதையளவில் இந்நூல் மாணவர்க்கு மிகவும் சுவைபயப்பதாக இருக்கிறது. இரண்டொரு விஷயங்கள் அடுத்தபதிப்பில் மாற்றப்படவேண்டும். முதலங்கம் முதற்களத்தில் கௌரவர்கள் பாசறைக்காட்சி இராக்காலத்தில் நிகழ்வதாகக் கூறிய ஆசிரியர் 'அதோ யுத்தகோஷம்! அனைவரும் என்னோடு சிறிது வாருங்கள். சக்ரவியூகத்தை வகுக்கச் சில ஏற்பாடுகள் செய்யவேண்டும்' என்று துரோணர் கூறுவதாக எழுதியுள்ளார். 'நாளைய ரணரங்கத்தில்......செய்கிறேன்' என்று மேலேகாட்டிய கூற்றுக்கு இது மாறுபட்டிருக்கிறது. இரண்டாவது களத்திற்கண்ட விஷயங்களால் அடுத்த நாள் காலைவரையிற் பாண்டவர் தம் பாசறையிலேயே இருந்தாரென்ற செய்தி வெளியாகிறது. அங்ஙனமிருக்க இரவிலே யுத்தகோஷமுண்டானது எப்படி என்ற ஐயம் நமக்குள் தோன்றுகின்றது. 9-ஆம்பக்கத்தில் 'அம்புறத் தூணி' என்று ஒருசொல் காணப்படுகிறது. அம்பு அறாத (நீங்காத) தூணி என்பதே பொருளாகையால், அச்சொல் 'அம்பறாத்தூணி' என்றிருத்தல் வேண்டும். பொதுவாக இப்புத்தகம் சிறுவர் சிறிய கால அளவில் நாடகம் நடிக்க ஏற்றதாக அமைந்திருக்கிறதென்று கூறலாம்.

சங்கீதமணி தாவீதரசன்: [ஆசிரியர்: திரிசிரபுரம் பிஷப் ஹீபர் உயர்தரப் பாடசாலைத் தலைமை ஆசிரியர் ஸ்ரீமான் எஸ். கே. தேவசிகாமணி அவர்கள்; புத்தகம் வேண்டுவோர் ஆசிரியருக்கெழுதிப் பெற்றுக்கொள்க; விலை அணா 4.]

இது விவிலியநூலிலிருந்து எடுக்கப்பட்டது. ஆடுகளை மேய்த்துவரும் தாவீது என்னும் ஒரு சிறுவன் கின்னரவிளையாட்டிற் கைதேர்ந்தவன். இவனது வீரச்செய்கைகள் கருதற்குரியன. இவன் பிற்காலத்தில் அரசனாகவும் விளங்குகிறான். பிறபாஷைப்பெயர்களைத் தமிழோசைக்கு இயைய மாற்றிக் கொண்டு அழகாக ஆசிரியர் கதையைவிஸ்தரித்திருப்பது பாராட்டற்குரியது.

ஆலய அமைப்பு: [ஆசிரியர்: ஸ்ரீமான் ச. குமாரசாமி குருக்கள் அவர்கள்; கிடைக்குமிடம்: வேதாகம சைவசித்தாந்தசபை, அச்சுவேலி, யாழ்ப்பாணம்; விலை தெரியவில்லை.]

பக்கம் 20 கொண்ட இச்சிறுநூல் ஆலயமென்னும் சொல்லின் பொருளையும், சிவாலயத்தின் பலவேறு பாகவிவரங்களையும், அங்கத்தின் விளக்கத்தையும், வழிபாட்டு முறைமையையும், கோவில் அதிகாரிகளின் லக்ஷணங்களையும் ஆலயங்களின் அவசியத்தையும், இன்ன இன்ன சாதியார் இங்கிங்கிருந்து தொழவேண்டிய தென்பதையும் தெளிவாகத் தக்க மேற்கோள்களுடன் விளக்குகின்றது. யாம் மேற் கூறியபடி தலைப்புக்கள் ஆங்காங்கு மறுபதிப்பில் எழுதப்படுமாயின் வாசகர்களுக்கு இதனைப்படிப்பதில் ஊக்கம் பிறக்குமென்று நினைக்கிறோம்.

வண்ணத்திரட்டு: [கிடைக்குமிடம்: லக்ஷ்மிவிலாச புத்தகசாலை, திருவல்லிக்கேணி, சென்னை; விலை அணு 6.]

வண்ணம் என்பது தமிழ்மொழியிலே சந்தத்தை குறித்துவழங்கும் ஓர் சொல்லாகும். சிலர் வண்ணங்கள் நூறென்றும் வேறு சிலர் வேறுவகையாகவும் கூறுபவர். இவ்விதவண்ணங்கள் பாடும் சக்தியை இயற்கைக் கவிஞர்களிடையிலேதான் காணலாம். சிற்றின்ப விஷயமாகவும் பேரின்ப விஷயமாகவும் பலபுலவர்களால் பாடப்பெற்ற 13 வண்ணங்களடங்கியது இந்நூல். அப் புலவர் பெருமக்களில் பட்டினத்துப்பிள்ளையார், தாயுமானவர், அந்தகக்கவி வீரராகவ முதலியாரென்பவர்கள் சிலர். புத்தகம் எழுத்துப் பிழையின்றிச் சீர்திருத்திப் பதிப்பிக்கப்பெற்றிருப்பது போற்றத்தக்கது. இவ்வித ரசமான நூல்கள் தமிழ்மக்களால் பெரிதும் ஆதரிக்கப்படல் வேண்டும்.

---

PRINTED AT THE MADRAS LAW JOURNAL PRESS, MYLAPORE, MADRAS.

கலைமகள் வெளியீடு - ௬

௳

முருகக்கடவுள் துணை

மேலகரம் பண்டாரக்கவிராயர் இயற்றிய

# திரு இலஞ்சி முருகன் உலா

(குறிப்புரையுடன்)

—:o:—

பதிப்பாசிரியர்:

மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி

டாக்டர் உ, வே, சாமிநாதையர்

சென்னை லா ஜர்னல் அச்சுக்கூடம்

மயிலாப்பூர்.

பவ ஹு தை மீ

1935

# இப்புத்தகத்திலடங்கியவை

உ

கணபதி துணை

# முகவுரை

---

விழிக்குத் துணைதிரு மென்மலர்ப் பாதங்கண் மெய்ம்மைகுன்றா
மொழிக்குத் துணைமுரு காவெனு நாமங்கண் முன்புசெய்த
பழிக்குத் துணையவன் பன்னிரு தோளும் பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலுஞ்செங் கோடன் மயூரமுமே.

—கந்தரலங்காரம்.

**பாட்டுடைத்**தலைவன் வீதியிற் பவனிவருகையில் ஏழுபருவத்தை யுடைய பொதுமகளிர் அவனைக் கண்டு மயங்கியதாகப் புலவராற் புனைந்து கலிவெண்பாவாற் பாடப்பெறும் தமிழ்ப் பிரபந்தம் உலாவாகும். இஃது உலாப்புறமெனவும் வழங்கும்; புறவுலாவென்பது அங்ஙனம் மாறிவந்ததென்பர் சங்கரநமச்சிவாயர்; நன்னூல், சூ. 267, உரை.

தலைவன் பவனிவருதல் காப்பியங்களிலும் சிறப்பித்துப் பாராட்டப்பெறும். பெருங்கதையில், 'நகர்வலங்கொண்டது' என்னும் பகுதியிலும், சீவகசிந்தாமணியிலும், கம்பராமாயணத்தில் உலாவியற்படலத்திலும் அவ்வக்காப்பியத் தலைவர்களுடைய பவனிச்சிறப்புக்கள் கூறப்பட்டுள்ளன.

உலாவிற் கூறப்படும் ஏழுபருவமகளிரும் பொதுமகளிரென்பதை, 'பக்குநின்ற காமம் ஊரிற் போதுமகளிரோடு கூடிவந்தவிளக்கமும் பாடாண்டிணைக்கு உரித்தென்று கூறுவர் ஆசிரியர். அது பின்னுள்ளோர் ஏழுபருவமாகப் பகுத்துக் கலிவெண்பாட்டாகச் செய்கின்ற உலாச்செய்யுளாம்', 'இனிஊரொடு தோற்றமும் பரத்தையர்க்கன்றிக் குலமகளிர்க்குக் கூறப்படாது' (தோல். புறத். சூ. 30—31, உரை) என்னும் பகுதிகளால் நச்சினார்க்கினியர் வற்புறுத்தியிருக்கின்றனர். கற்புடையமகளிர் பிறரைக்கண்டு காமுறுதல் அறமன்றாதலின் இவ்வரையறை அமைந்ததென்று தோற்றுகின்றது. உதயணன் உலாவந்தகாலத்தில் கற்புடைமகளிரல்லாத ஏனையோர் அவனைக் கண்டு காமுற்றனரென்பதைப் புலப்படுத்தி,

"ஞாலந் திரியா நன்னிறைத் திண்கோள்
உத்தம மகளி ரொழிய மற்றைக்
கன்னிய ரெல்லாங் காமன் றுரந்த
கணையுளங் கழியக் கவினழி வெய்தி
இறைவளை நில்லார் நிறைவளை நெகிழ"

(பெருங்கதை, உ. 7: 53-7)

எனக் கவிஞர்பெருமானாகிய கொங்குவேளிர் அமைத்திருக்கும் பகுதியும், சீவகன் உலாவருகையில் ஆசி கூறிய மாதரைக் கற்புடை மகளிரென்றும் மயங்கிய மாதரைக் கற்புடை மகளி ரொழிந்தோரென்றும் (சீவகசிந்தாமணி, 456-7) நச்சினார்க் கினியர் விளக்கி எழுதியிருக்கும் உரையும் இவ்வரையறையைப் புலப்படுத்தி நிற்றல் இங்கே அறிதற்குரியது.

*உலாப்பிரபந்தத்தில் ஏழுமகளிருடைய பருவங்களுக்கேற்ற செயல்களாகிய சிற்றிலிழைத்தல், சிறுசோறடுதல், கழங்கு பந்து அம்மானையாடுதல், கிளி பூவைமுதலியவற்றோடு குலவுதல், யாழ் வாசித்தல், பொழிலாட்டு, புனல்விளையாட்டு, மலர்விழாவெடுத் தல், ஊசல் முதலியனவும் பாட்டுடைத்தலைவனது சிறப்புக்களும் தசாங்கமுதலியனவுமாகியவற்றிற் சில குறைந்தும் குறையாமலும் வரும்.

திரு இலஞ்சி முருகனுலாவென்பது இலஞ்சியென்னும் தலத் தில் எழுந்தருளியுள்ள முருகக்கடவுளைப் பாட்டுடைத்தலைவராகக் கொண்டு பாடப்பெற்றது. இலஞ்சியென்பது திருநெல்வேலியைச் சார்ந்த திருக்குற்றாலத்துக்கு வடக்கே உள்ளதாகிய பழைய சுப்பிரமணியஸ்தலம்; திருக்குற்றாலத்துக்குரிய பரிவாரஸ்தலங்க ளுள் ஒன்றாக விளங்குவது. இங்கே அகத்தியமுனிவராற் பிர திஷ்டை செய்யப்பட்ட இருவாலுகேசரென்னும் திருநாமத்தை யுடைய சிவலிங்கப்பெருமான் எழுந்தருளியிருக்கின்றனர்; இங்கே பிரமதேவர் முதலியோர் பூசித்துப் பேறுபெற்றுள்ளார். இதற் குரிய ஸ்தலவிருட்சம் மகிழ் (இலஞ்சி—மகிழ்.) இத்தல விஷயமாக ஸ்ரீ அருணகிரிநாதரால் இயற்றப்பெற்ற திருப்புகழ் சில உண்டு.

இந்நூலாசிரியர் திருக்குற்றாலத் தலபுராணம் முதலிய வற்றை இயற்றிய கவிஞர்பெருமானாகிய மேலகரம் திரிகூடராசப்பக் கவிராயருடைய முதற்புதல்வராகிய பண்டாரக்கவிராய ரென்பவர்.

---

* உலாக்களின் இலக்கணங்களும் பிறவும் இதற்குமுன் என்னாற் பதிப்பிக்கப்பெற்ற உலாக்களின் முகவுரைகளால் அறியலாகும்.

பண்டாரமென்பது முருகக்கடவுள் திருநாமங்களுள் ஒன்று. இந்நூலில், "செய்யதிரு நாமஞ் சீரடியேற் கன்றளித்த, மெய்யன் றிருமலைமேல் வீற்றிருப்போன்" (400) என்று உள்ள குறிப்பால் இந்நூலாசிரியர் முருகக்கடவுளுக்குரிய திருநாமங்களுள் ஒன்றை யுடையவரென்பது தெரிகிறது. இவர் செய்தனவாக வேறு நூல் ஒன்றும் காணப்படவில்லை. இந்நூலினால், இவர் முருகவேளிடத்துப் பேரன்புடையாரென்பதும் திருக்குற்றாலத்தலத்தில் ஈடு பாடுடையவரென்பதும் தெரியவருகின்றன. பிற உலாக்களிற் புலவர் பலர் அமைத்துள்ள பலவகைமரபுகளை அறிந்து அவற்றிற் சிலவற்றை இதில் அங்கங்கே அமைத்திருக்கின்றார். இதன் நடையைப் பார்க்கும்போது இளமைப்பிராயத்தில் இந்நூல் இவரால் இயற்றப்பெற்றிருக்கவேண்டுமென்று தோற்றுகின்றது. இந்நூலில் உள்ள கண்ணிகள் 460; காப்புச்செய்யுள் 2; வாழ்த்துச் செய்யுள் 1.

இந்நூலால், இத்தலம் மிகப்பழமையுடையது என்பதும் (9, 14), முருகவேளாற்படைக்கப்பட்ட தென்பதும் (18—25), பிரமதேவர் (11) இந்திரன் (12) முதலியவர்கள் இங்கே பூசித்துப் பேறுபெற்றனரென்பதும், அகத்தியர் திருக்குற்றாலத்துக்குப் போகும்வழியில் இங்கே முருகக்கடவுளை வழிபட்டு இருவாலுகேசமூர்த்தியைப் பிரதிஷ்டை செய்தனரென்பதும் (37—48), இத்தலம் தென்னாரியநாட்டைச் சார்ந்ததென்பதும் (387), சித்திராநதி இதற்குமுரியதென்பதும் (389), இங்கே கந்தஷஷ்டியில் திருத்தேர்விழா நடைபெறுமென்பதும் (83) தெரியவருகின்றன. இங்கே திருக்கோயிலில் சரவணமண்டபம் (91) என்னும் பெயரையுடைய மண்டபம் ஒன்று உண்டு; இங்குள்ள நந்தவனம், "உய்யானம் பாடி" (317), உய்யானஞ்சென்றே" (424) என்பவற்றிற் கூறப்பட்டுள்ளது. இந்நூலாசிரியருடைய காலத்தில் திருத்தேர்விழா தொண்டைவேளாளரும் வண்டூரென்னும் ஊரினருமாகிய சாமிநாதர் என்பவரால் நடத்தப்பெற்றது (81—2.) இக்கோயிற்பணிக்கொத்தைச் சார்ந்த புன்னைவனக்குருக்கள், மண்டலிகன்ஆண்டான், ஸ்தானீகன்முத்தையன் என்பார் இதிற் கூறப்படுகின்றனர். திருவிழாக்காலத்தில் முருகக்கடவுள், முதல்நாள் பிரமதேவராகவும் இரண்டாம்நாள் திருமாலாகவும் மூன்றாம்நாள் உருத்திர மூர்த்தியாகவும் நான்காம்நாள் மகேசுவரராகவும் ஐந்தாம்நாள் சதாசிவமூர்த்தியாகவும் ஆறாம்நாள் வெள்ளிமயில் வாகனாரூடராகவும் திருக்கோலங்கொண்டு உலாவந்து ஏழாம்நாள் திருத்தேரிற் பவனிவருவது வழக்கம் (84—8.)

அகத்திய முனிவர் இத்தலத்தில் சிவலிங்கப்பிரதிஷ்டை செய்து வழிபட்டபின்னர்த் திருக்குற்றாலஞ்சென்று திருமாலைச் சிவபிரானாகச் செய்து வழிபட்டுத் துதித்ததாக உள்ளபகுதியில் திருக்குற்றாலப்புராணத்திலுள்ள வரலாறுகள் பல சுருக்கிக் கூறப் பட்டுள்ளன. இந்தத்தலம் திருக்குற்றாலத்தோடு தொடர்புடைய தென்பது இப்பகுதியால் விளங்குவதோடு, "சித்திரமா மன்றத் திருநடனத் தானருள்வி, சித்திரமா மன்" (198), "திரிகூடத் தோன்ற லொருமகனை" (284), "திரிகூடத் தைம்முகனார் வேண்ட வரும், ஆறுமுகன்" (401—2), "திரிகூடத்தேவன்—நயமாகத், தந்தபிள்ளை" (419—20), "வற்றா வடவருவி யான்மைந்தன்" (436) என்பவற்றாலும் புலப்படுகின்றது. கந்தபுராணத்திலுள்ள செய்தி களாகிய முருகக்கடவுள் திருவவதாரம் முதலியன இந்நூலின் முத லிலும், அரிவைப்பருவத்தில்அரிவை சித்திரமெழுதிக்காட்டுவதாக அமைந்துள்ளபகுதியிலும் சொல்லப்பட்டுள்ளன. இதிற் கூறப் பட்டுள்ள சுப்பிரமணியஸ்தலங்கள்: கதிர்காமம், கந்தமாதனம், குன்றுதோறாடல், சோலைமலை, திருச்செந்தூர், திருத்தணிகை, திருப்பரங்குன்று, திருமலை, திருவாவினன்குடி, திருவேரகம், வள்ளியூர், வேள்விமலை என்பன.

முருகக்கடவுளே திருஞானசம்பந்த மூர்த்திநாயனாராக அவ தரித்தாரென்னுங்கொள்கையினர் இவ்வாசிரியரென்பது, "பாவ னைத்தும், வாசிதீர் காசுபெற மண்டலத்திற் சொன்னவனை" (151—2), "பெண்ணைப்பெண் ணாக்கிவிடப் பேதலித்த தாகா மல்" (167), "கோலுசமண், ஆற்றை யொழியவைத்தா யல்லையோ" (168-9), "வாசிபெறக் காசுமுன்னாள் வாங்கினேன்" (237) என்ப வற்றால் அறியப்படுகிறது. "திருமுருகாற்றுப்படையைச் செப்பிய நக்கீரன், வெருவு பயந்தவிர்த்த வீரன்" (66), "அற்புதனக், கீரன் புகன்மாலை யேந்தினீர்" (165—6), "கீரன் மெய்யாமொழி" (227) என்பவற்றில் நக்கீரதேவரையும், "பாடுந் திருப்புகழைப் பன்னி ரண்டு நற்புயமும், சூடுங் கருணைச் சுவாமி" (68), "திருப்புகழும், சேர்ந்தசெவிக் கொண்டருளிச் செய்தபின்னர்" (113) என்பவற் றில் திருப்புகழையும், "ஆசிலாப், பாவி லருணகிரி பைந்தமிழின் மாரிபெய்ய, நாவிற் றிருப்பெயரை நட்டோனை" (152—3), "கந்த ரனுபூதி சொன்னகிளி" (205), "போத வருணகிரி" (227) என்பவற்றில் அருணகிரிநாதரையும், 113-ஆம் கண்ணியில் கந்த புராணத்தையும், 227-ஆம் கண்ணியில் பொய்யாமொழிப்புலவரை யும்பற்றிய செய்திகள் வந்துள்ளன. முருகவேளுக்குரிய கார்த்தி கைத்திருநாளும் (427) கந்தஷஷ்டிவிரதமும் (437) இதிற்கூறப் படுகின்றன.

இந்நூலாசிரியர் பேதையைப்பற்றிக்கூறுகையில் அப்பருவத்திற்குரிய சிற்றிலிழைக்கும் செய்தியை அமைக்கின்ருர். அவள் குதலைச் சொல்லை, "பன்னியுரைக்கும் பதினெட்டுப் பாஷையன்றி, இன்னமொரு பாஷை யெனுமொழியாள்" (178) என்று வருணித்திருத்தல் இன்பத்தை ஊட்டுகிறது. "குஞ்சரத்தை யிந்தக் குடத்தடைத்துத் தாருமென்றே, பஞ்சரிக்கு மந்தப் பருவத்தாள்', (183) என்பதில் பேதைப்பருவமனப்பான்மையைத் தெளிவாகப் புலப்படுத்துகிருர்.

பெதும்பைப்பருவத்தில் அப்பருவத்துக்குரிய கழங்காடலும் மங்கைப்பருவத்தில் மங்கை பந்தாடுதலும் சொல்லப்படுகின்றன. பந்தாட்டத்தைப்பற்றிக் கூறியுள்ள பகுதியில் அமைந்துள்ள சந்தம் இடத்துக்கு ஏற்றதாக விளங்குகின்றது.

மடந்தைப்பருவத்தில் மடந்தை முருகவேளைத் துதித்து யாழ் வாசித்தாளென்ற செய்தி காணப்படுகிறது. அப்பகுதியில் இசை நூற்செய்திகள் சிலவும், காந்தாரி, காம்போதி, கல்யாணி, தேவ காந்தாரி, மாளவி, தோடி, வராளி, மலகரி, வராடி, நாட்டை, பயிரவி, பூபாளம், மோகனம், முகாரி, செயசாட்சி என்னும் இராகப்பெயர்களும் சொல்லப்படுகின்றன.

அரிவைப்பருவத்தில் அரிவை முருகவேள் திருவிளையாடல்களை ஓவியத்தில் எழுதிப் பிறருக்கு எடுத்துக் கூறுவதாக ஒரு செய்தி உள்ளது. தெரிவைப்பருவத்தில் முருகவேளுக்குரிய தசாங்கங்கள் கூறப்படுகின்றன. அவை வருமாறு:—(1) மலை: கந்தமாதனம், (2) நாடு: தென்னுரியநாடு, (3) நகர்: இலஞ்சி, (4) ஆறு: சித்திராநதி, (5) யானை: ஐராவணம், (6) படை: வேல், (7) கொடி: சேவல், (8) முரசு: மும்முரசு, (9) மாலை: கடம்பு, (10) ஆணை: குமரன்றுணையென்னும் ஆணை.

பேரிளம்பெண்பருவத்தில் பேரிளம்பெண் யாவரினும் இளமையையுடையவர் யாரென்று வேதியர்களைக்கேட்க, அவர்கள் ஒவ்வொருவராக எடுத்துக் கூறிப் பிறகு முருகவேளே என்றும் இளமையையுடையவரென்னும் முடிவுக்குவருவதாக ஒருசெய்தி கூறப்படுகிறது. அன்றி, இப்பருவத்தினள் ஒருகடப்பங்கன்றைக் கொண்டு அதற்கு முருகக்கடவுள் திருநாமத்தை இட்டு வளர்த்து அது மலர்ந்தகாலத்தில் அதன்மலரை முருகவேளுக்கு அணிய எண்ணினுளென்ற வரலாறு காணப்படுகிறது. திருவாரூருலாவில், பெதும்பைப்பருவப்பெண் ஏழு செவ்வந்திச்செடிகளை ஆதிவிடங்கர் முதலிய ஸப்தவிடங்கருடைய திருநாமமிட்டு வளர்த்துவந்து வீதிவிடங்கரென்னும் பெயரையுடைய செடி மலர அதன்மலரைத்

திருவாரூர்த் தியாகராசப்பெருமானுக்குச் சூட்ட எண்ணினு ளென்றுள்ள பகுதியைப் பின்பற்றி இஃது அமைக்கப்பெற்றது போலும்.

யமகம், திரிபு, சந்தம், மடக்கு, சிலேடை, உவமை முதலிய வற்றை இந்நூலில் அங்கங்கே காணலாம். "பாந்தத் தயலென்றும் பாரவவ்வில் ரண்டென்றும், மாந்தர்களை யேவு மதர்விழியாள்" (372), "ஒற்றின், தொடையாம் பதினெட்டிற் சொன்னபதின் மூன்றே, இடையா யுடைய விடையாள்" (375—6) என்பவற் றில் நெடுங்கணக்கைப்பற்றிய செய்திகளாற் சில பொருள்களை இந்நூலாசிரியர் அமைக்கின்றார். பச்சம் (179), குமிந்து (266), ரண்டு (306), போச்சுது, வாச்சுது (443) முதலிய மரூஉமொழி களும், "உனதுசித்தம்" (16), "காரியமோ வீரியமோ" (453) என்னும் உலகவழக்குக்களும்; அளகை (132), கொஞ்சம் (449, 451), கதம்பு (269), கோரித்து (299), சரப்பளி (268), சாலுவை (422), செக்கணி (270), சொம்பு (371), பஞ்சரித் தல் (183), பாந்தம் (113), பிசிப்பு (265), பெண்டுவைத்தல் (365, 451), பேதலித்தல் (167) மூப்பியர் (211), வங்கணம் (455) முதலிய பதங்களும் இதில் இடம்பெற்றுள்ளன.

இந்நூலின் ஏட்டுப்பிரதியொன்று பல வருஷங்களுக்கு முன் திருவாவடுதுறையாதீனத்தில் திருமுகப்பணிவிடை இயற்றி வந்த ஸ்ரீ முத்துக்குமாரசாமி பிள்ளையவர்களிடமிருந்து கிடைத் தது. இஃது எளிய நடையில் அமைந்திருத்தலின் மிகச்சுருக்க மாகவே குறிப்புரை எழுதப்பட்டது.

இதனைக் கலைமகளில் வெளியிடுவித்த இப்பத்திரிகையின் அதிபரும் நிர்வாகப்பத்திரிகாசிரியருமான ஸ்ரீமான் ரா. நாராயண ஸாமி ஐயர், பி. ஏ., பி. எல். அவர்களுக்கு இதன்முகமாக எனது நன்றியறிவைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

'தியாகராஜவிலாஸம்'
திருவேட்டீசுவரன் பேட்டை,
12—1—35.

இங்ஙனம்,
வே. சாமிநாதையர்.

உ

கணபதி துணை

# திரு இலஞ்சி முருகன் உலா

---

## காப்பு

(வெண்பா)

ஏர்கொண்ட தென்னிலஞ்சி யீசன் குருபரன்மேற்
சீர்கொண் டுலாமாலை சேர்க்கவே—நார்தருமால்
ஐந்துகர நால்வாய்முன் றுனவிழி யோரிருதாள்
எந்தை யொருமருப்ப வே.

2. ஒண்டா மரைமலர்த்தாள் வேல னுலாத்தமிழ்க்குத்
தண்டா மரையாள் தமிழ்முனிவன்—பண்டருமோர்
அப்பன் முதன்மூவ ரானதிரு வாசகத்தேன்
அப்பனுமே காப்ப ரடுத்து.

---

## நூல்

(கலி வெண்பா)

[முருகக்கடவுள் திரு அவதாரம்]

சீர்கொண்ட மாலுந் திசைமுகனுந் தேவர்களும்
கார்கொண்ட கந்தரனைக் கைகுவித்தே—ஏர்கொண்ட

---

காப்பு : 1. நார் - அன்பு. மாலை சேர்க்க என்பதற்கேற்ப நார்தருமால் என்றது ஒருநயம் ; நார் - மாலைகட்டும் நார்.

காப்பு : 2. தண்டாமரையாள் - கலைமகள். தமிழ்முனிவன் - அகத்தியர். அப்பன்முதல்மூவர் - அப்பர், சம்பந்தர், சுந்தரர். திருவாசகத்தேனப்பன் - மாணிக்கவாசகர். திருவாசகத்தேன் : “ திருவாசகமென்னுந் தேன் ” பழம்பாடல்.

கண்ணி, 1. கார்கொண்ட கந்தரன் - சிவபெருமான்.

2. நாடெங்கே யெங்கடிரு நங்கைமா ரெங்கேயெம்
வீடெங்கே யென்று மெலிவுரைப்ப—வாடுமுங்கள்

3. வாட்டங்க ளெல்லா மதலை தவிர்ப்பனென்று
நாட்டமிசை யோராறு நற்பொறிகள்—ஈட்டியே

4. அக்கினிநல் வாயுகங்கை யாம்வா கனமீதில்
உய்க்கச் சரவணத்தி னுள்ளுருவாய்த்—தக்கபுகழ்

5. ஆராறு மீன்முலைப்பா லாரவுண்டு வாழுங்காற்
சீரார் சிவபெருமான் றேவியுடன்— பேரான

6. பொய்கைக் கரையிற் புகுதுங்கான் மைந்தரைக்கண்
டைய னனுக்கிரகத் தாலெடுத்தே—மெய்யுமையாள்

7. ஈராறு காலை யிருகாலாத் தானிருவிப்
பேராத வன்பாற் பிரியமுற்றாள்—சீராளன்

8. அஞ்சுமுகம் போதாவென் றாறுமுகத் தோடெழுந்து
வஞ்சச்சூர் மாய்க்கவந்த வான்பொருளான்—தஞ்சமுற்ற

[தலப் பெருமை]

9. பின்னவர்க ளோடே பிரியமுறு மந்நாளும்
தென்னிலஞ்சி யாகச் செழித்ததலம்—மின்னயிலான்

10. வெள்ளிக் கயிலை விளையாடு மப்பொழுதும்
உள்ளக் களிப்பா லுகந்ததலம்—தெள்ளுமறைப்

11. பூமேவு நான்முகத்தோன் பொன்னிலஞ்சி யென்றுதிரு
நாமேவு வாக்கா னவின்றதலம்--காமேவு

---

2. எங்கே எங்கேயென்றது இழந்தோம் இழந்தோமென்றபடி.

3. நாட்டம் - நெற்றிக்கண்.

5. மீன் - நட்சத்திரம்; கார்த்திகைப் பெண்கள்.

6. பொய்கை - மானிடராக்காத நீர் நிலை.

7. இருவி - இருத்தி. பிரியமுற்று ஆள்.

6-7. "மையா நின்ற சிறுமருங்கு னங்கை யுமையாள் பாமனொடு - நறு நீர்ப் பொய்கைத் தடங்கரைவாய் நண்ணி முகமா றினுக்கேற்பக், கையா றிரண்டு புரிந்ததுபோற் காலா றிரண்டு செய்யாது - கருதி யிரண்டே செய்தனண்முற் கடையேஞ் செய்த நல்வினையால்" திருவிடைக்கழி முருகன் பிள்ளைத்தமிழ், சிற்றிற். 9.

8. "சூர்பெருங் குலத்தை மாய்ப்ப, அஞ்சுமுக மமையாவென் றாறுமுக மாகவெழுந் தருளி னனே" திருக்குற்றலத் தலபுராணம், திருமால் சிவபிரானைன. 106.

9. பின்னவர்கள் - வீரவாகுமுதலிய நவவீரர்களாகிய தம்பிமார்கள்.

12. கற்பகநா டாளி கருதி யிணைமலர்த்தாள்
அற்பகலு நாடி யருச்சித்துப்—பொற்புடனே

13. போற்றுமரை யெங்கோன் பொருதுவெல்லப் பொன்னுட்டை
மாற்று தடிவணங்கி வாழ்ந்திருந்தான்—ஏற்றூர்வாழ்

14. குற்றால மிந்தக் குவலயத்துண் டாகுமுன்னே
பற்று யிருந்த பழையபதி—கற்றூரோ

15. டந்நாட் கயிலைக் கயன்வருங்கால் வேதத்தின்
முன்னும் பொருளை மொழிகென்ன—என்னாலே

16. ஊகமில்லை யையா வுனதுசித்த மென்றுரைக்கச்
சேகரத்திற் குட்டிச் சிறைப்படுத்தி—வாகயிலான்

17. அண்டபகி ரண்ட மசரஞ் சரங்களெல்லாம்
உண்டுபண்ணு முன்னே யுகந்தகந்து—பண்டதும்பு

18. கோயில் படைத்துக் குலவு மதில்படைத்து
வாயிலொரு நான்கு வகைபடைத்துத்—தாயினிலும்

19. அன்பு படைத்த வரிய குடிபடைத்தே
இன்பம் படைத்த வெழில்படைத்து—முன்பெல்லாம்

20. வாழை பலாப்படைத்து மாங்கனிகள் தேன்பிலிற்றப்
பாளைக் கமுகு பலபடைத்து—வேளையே

21. நேராம் புருடரெலா நேரிழையா ரேயிரதி
யாரா மெனவே யருள்படைத்துச்—சீரான

22. நீதிமன்னர் செங்கோ னெறிபடைத்துப் பைந்தொடிமார்
காதலுறுங் கற்புக் கதிபடைத்து—மாதங்கள்

23. மும்மழைகள் பெய்யு முறைபடைத்துப் பைங்கூழ்கள்
செம்மைபெற வோங்குந் திருப்படைத்து—மும்மைபெறத்

---

12. கற்பகநாடாளி - இந்திரன். 13. பொன்னுட்டை வெல்ல.

16. ஊகம் - அறியும் ஆற்றல். சேகரத்தில் - தலையில். வாகு - அழகு.

20. வேளை - காமனை.

22-3. மன்னர் செங்கோல்நெறியும் மகளிர் கற்பும் மழை பெய்தற்குரிய காரணங்களாதலின் அவற்றை முறையே கூறினர்; மழைபெய்யாமைக்குக் காரணங்களைக் கூறுகின்றபொழுது, "செங்கோல் கோடியோ செய்தவம் பிழைத்தோ, கொங்கவிழ் குழலார் கற்புக்குறை பட்டோ, நலத்தகை நல்லாய் நன்னா டெல்லாம், அலத்தற் காலை யாகியது" (மணி. 28 : 188 - 91) என்று சொல்லும் பகுதியால் இது புலப்படும்.

23. கூழ்கள் - பயிர்கள்.

24. தங்கையினு லள்ளியிடா தார்பிச்சை பிச்சையென்ன
எங்கோ ’னிருந்து படைத்தவிடம்—மங்காத
25. தென்னிலஞ்சி யென்றுற் செழிக்கும்வள மத்தனையும்
என்னி லியம்ப வெளியதோ—மன்னு

[ஆறு படைவீடுகள்]

26. திருப்பரங் குன்றுமற் சேரடியார் போற்றும்
திருப்பரங் குன்றுருஞ் செவ்வேள்—விருப்பான
27. சீரலைவா யாகாமற் சிந்தை நினைப்பருளும்
சீரலைவா யாளுந் திருக்குமரன்—ஆரத்
28. திருவாவி னன்குடியா மென்னச் சிறந்த
திருவாவி னன்குடிவாழ் தேவன்—பெருவாய்மை
29. ஏரகத்தா ரிவ்விடத்தா ரென்றிமையோர் தாம்புகழும்
ஏரகத் தார்வா னெழிலயிலான்—பாரகத்தில்
30. குன்றுதோ ருடுங் குலமஞ்ஞை வாகனத்தான்
குன்றுதோ ருடுங் குகப்பெருமான்—மன்றல்சேர்
31. வண்டானஞ்சோலை மலைசூ ழுலகின்மிக்க
வண்டானஞ் சோலை மலைக்கிழவன்—கண்காதங்

---

24. முன்பிறப்பில் தங்கள் கையினுல் அள்ளி, இரப்பவர்களுக்குப் பிச்சையிடாதவர்கள் இந்தப் பிறப்பில் பிச்சை பிச்சையென்று இத்தலத்தில் வந்து கூறும் வண்ணம் படைத்த இடம்; என்பது பிற இடங்களிலுள்ள இரவலர்கள் இவ்விடத்திற்கு வந்து பிச்சை பெறுதற்குரிய செல்வமுடையது இத்தலமென்று குறித்தபடி ; “மாசித் திங்கண் மாசின சின்னத் துணி முள்ளின், ஊசித் துன்ன மூசிய வாடை யுடையாகப், பேசிப் பாவாய் பிச்சை யெனக்கை யகலேந்திக், கூசிக் கூசி நிற்பர் கொடுத்துண் டறியாதார்” (சீவக. 929) என்னும் அருமைச்செய்யுள் இங்கே கருதற்குரியது.

26. திரு பரம் குன்றுமல் சேர் - செல்வத்தின் மிகுதி குறையாமல் சேர்ந்துள்ள; பரம் - பாரம் ; “உரியார், திருப்பரங்குன் றத்திருந்தான்” (136 - 7) என்பர் பின்.

27. சிறப்புக்கெடாதபடி மனத்திலுள்ள எண்ணங்களை நிறைவேற்றும். சீரலைவாய் - திருச்செந்தூர். ஆர - இருப்பதற்கு.

28. திரு வாவி நன்குடியாம் என்ன - திருமகள் தாவிவந்து இதுவே நமக்கு நல்ல வாழிடமாமென எண்ணும்படி.

28-9. பெரு வாய்மை ஏர் அகத்தார் - பெரிய சத்தியத்தையும் அழகையும் உடைய நெஞ்சினர்.

31. வள் தானம் - வளவிய இடங்களும். வண்டு ஆல் நம் சோலைமலை; ஆல் - ஒலிக்கின்ற.

32. சோராறு மோராறு மோராறு மோராறும்
ஈராறு கையு மினிதுடையான்—ஏராரும்

33. வள்ளிக் கொடிபடர வாய்த்த தனிக்கொம்பு
தெள்ளமுதத் தெய்வச் செழுங்கொடிக்கு—மெள்ளவே

34. ஏறுங் குமார விளங்கொம்பு மேற்குடைய
ஆறுடைய தென்னிலஞ்சி யாறுமுகன்—வீறியதோர்

[அகத்தியர் தென்பால் வருதல்]

35. தெக்கணபாற் கும்பன் றிரும்பி வரும்வழியில்
அக்கணமே விந்தா சலமடக்கி—மிக்கதொரு

36. வில்வலன்வா தாவியையும் வென்றுபுவி மீதினிலே
சொல்லரிய காவேரி தோற்றுவித்து—நல்லதொரு

[அவர் இலஞ்சியில் இருவாலுகேசரைப் பிரதிட்டை செய்து பூசித்தல்]

37. தென்னிலஞ்சி மேவிச் சிவகுருவைப் பூசித்தே
மன்னுதிரு வெண்மணலை வாணித்துச்—சென்னி

38. வணங்கிச் சிவபூசை வாய்த்ததெனப் போற்றிக்
குணங்குறிகள் காணாக் கொழுந்தை—இணங்கியே

39. பின்னு மகிழ்ந்து பிரியமுட னப்படியே
துன்னுசிவ பூசை தொடுத்தியற்றி—இந்நிலத்தில்

40. என்று மழியா தெழுபுவிக்குங் கீழ்வேராய்
நின்றநிலை கண்டு நிலைகலங்கி—அன்று

41. பெருமை யிருவரையும் பேரன்பு மொன்றா
இருவாலு கேசனென வேத்தி—அருமையாய்

---

31-2. கண் ஓராறும் ஓராறும் காது ஓராறும் ஓராறும் என முறையே கூட்டுக.

33. தெய்வச் செழுங்கொடி - தெய்வயானையம்மையார்.

35. கும்பன் - அகத்தியமுனிவர். இக்கண்ணி முதலியவற்றிற் கூறப்பட்ட செய்திகளின் விரிவைத் திருக்குற்றாலப் புராணம், திருமால் சிவபிரானான சருக்கத்திற் காணலாம்.

37. சிவகுரு - முருகக்கடவுள். வாணித்து - அமைத்து; பாணித்தென்பதன் திரிபு.

37-41. "குருவாங் குகவே ளருள்பெற்றுக் கும்ப முனியன் றிரவிலொரு, திருவா லுகத்தாற் சிவபூசை செய்து மறுநாட் சிறுகாலை, ஒருவாலுகத்தாற் பூசனைசெய் துபய வடிவு மொன்றாக்கி, இருவா லுகநா யகனெனவே யியற்றி யாரா தனைபுரிந்தான்" திருக்குற்றாலப்புராணம், திருமால் சிவபிரானான. 124.

42. நாதமாய் விந்துவாய் நாதவிந்து வுங்கடந்த
போதமாய் வேதப் பொருளாகிச்—சோதிபெறு

43. சுத்தவித்தை யீசுரமாய்ச் சொல்லுஞ்சா தாக்கியமாய்ச்
சத்திசிவ மானசிவ தத்துவமாய்—வித்தியா

44. தத்துவங்க ளேழுமாய்ச் சாருமறு நான்கான
சித்திபெறு மான்மதத்வச் செய்தியாய்—முத்திபெறு

45. பஞ்ச கலையாய்ப் பகர்மூல மந்திரமாய்
விஞ்சு கலாதிகளாய் மேவியே—செஞ்சொல்

46. அயனு யரியா யரியயனுங் காணு
இயலா ரிருவாலு கேசன்—நயமாய்

47. அவனவளு மல்லா லதுவுமா மெங்கோன்
இவனு மிருவாலு கேசன்—சிவமணமே

48. வீசும் படிக்கு விளங்கிய தன் னுன்மார்த்த
ஈசுரனை யங்க ணிருத்தியே—தேசுபெறு

[அவர் திருக்குற்றாலமடைந்து திருமாலைச் சிவபிரானுக்கல்]

49. தென்பாலே குற்றாலஞ் சென்றுதிரு மாலையவன்
அன்பாலே யென்பாலே யாகவென—முன்பாலே

50. போற்றிமகு டாகமமே பூண்டபரார்த் தப்பூசை
ஏற்றி லிருப்பவனே யென்றுதான்—சாற்றியே

---

42. "நாதமுநா தாந்த முடிவு நவைதீர்ந்த, போதமுங் காணுத போதமாய்" கந்தர் கலி. 2.

43. சுத்தவித்யாதத்துவம், ஈசுவரதத்துவம், சாதாக்கிய தத்துவம், சிவதத்துவமென்னும் ஐந்தும் சிவதத்துவமாகும்.

43-4. வித்தியாதத்துவமேழாவன, காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை.

ஆத்துமதத்துவம் இருபத்துநான்கு: அந்தக்கரணம் நான்கு, ஞானேந்திரியம் ஐந்து, தன்மாத்திரை ஐந்து, பூதம்ஐந்து.

45. பஞ்சகலையாவன : நிவர்த்தி, பிரதிஷ்டை, வித்தியை, சாந்தி, சாந்தியாதீதமென்பன.

மூலமந்திரம் - பிரணவம். கலாதிகள் - கலை முதலிய ஆறு அத்துவாக்கள்; அவை மந்திரம், பதம், புவனம், தத்துவம், கலை என்பன.

48-9. என்பாலே ஆக - என் பங்கிலே ஆக; என்றது சிவபிரானுக வேண்டுமென்று விண்ணப்பித்ததைக் குறிப்பித்தது.

50. மகுடாகமம் திருக்குற்றாலத்துக்குரியது; "கூறுமவர் கோலமொடு கோயிலிடை யேகி, வீறுதமி ழாலரியை வேதமனு வாலே, ஆறுபுனை வேணி

[அகத்தியமுனிவர் துதிசெய்தல்]
(திருக்குற்றலப் பெருமை)

51. சத்தா யசத்துமாய்ச் சத்தசத்து மாகியொரு
சித்தாய் விளையாடுஞ் சீர்மழுவோய்—நித்தமாய்

52. மண்ணாகி நீராய் வசுவாகி வாயுவாய்
விண்ணாகி யோங்கும் விளக்கொளியாய்ப்—பெண்ணாகி

53. ஆணா யலியா யசரஞ் சரமாகி
ஊணாகி யுண்ணு முடலுயிராய்க்—காணாத

54. ஆதியாய்ச் சோதியா யாதியந்த மில்லாத
பூதியா யைம்முகத்துப் புத்தேளாம்—நீதி

55. வடவருவித் தீர்த்த மகிமையாய் போற்றி
திடமுடைமும் மூர்த்திசீர் போற்றி—அடலுடைய

56. தென்றலங்கால் கொண்டுபவத் தீயமறை யோன்பாவம்
அன்றுதான் போக்கு மருள்போற்றி—குன்றுசூழ்

57. வானோர் சிவத்ரோக மாய்த்தவர்கள் வீடுபெறத்
தானே யருட்கமைத்த தாள்போற்றி—கானார்

58. நரிவேட னோர்வலத்தா னுதாந்த வீடு
புரிவா யளித்த புகழ்போற்றி—கரிவிருப்பாம்

---

யா னுதல்புரி பூசை, எறுமகு டாகமமெ னுவருள்செய் தானல்'' திருக்குற்றலப். திருமால். 115.

52. வசு - அக்கினி.

54. பூதி - செல்வம்.

55. வடவருவித் தீர்த்தம் - இது திருக்குற்றலத்திலுள்ள தீர்த்தங்களுள் ஒன்று. இதன் வரலாற்றைத் திருக்குற்றலத்தலபுராணத்திலுள்ள வடவருவிச் சருக்கத்தாலுணரலாம். "வடவருவி யானே மலப்பாழுஞ் சேற்றில், ஈடவருவி யானே நமை" (திருக்குற். சிலேடை.) மும்மூர்த்தி: திருக்குற்றல நாதர் பிரமாவாகவும் திருமாலாகவும் சிவபிரானாகவும் ஆயினமையின் மும்மூர்த்தியென வழங்கப் படுவார்; "நிமலனே யத்தலத்து மூவராய் முத்தொழிலு நியமித் தானே" திருக்குற்றலப். மூர்த்தி. 12.

56. தென்றலங்கால் - தென்றற்காற்று. தீயமறையோ னென்றது ஆத்திரேயனென்னு மந்தணனை. இதிற் கூறப்பட்ட வரலாற்றின் விரிவைத் திருக்குற்றலப்புராணம், மந்தமாருதச் சருக்கத்தாலறிக. குன்று - திரிகூட மலையை. சூழ் - வலஞ்செய்த.

57. வானோர் சிவத்துரோகமென்றது, சிவபிரானையவமதித்த தக்கன் செய்த வேள்விக்குச் சென்ற துரோகத்தை; திருக்குற்றலப்புராணம், தேவர்கள் சிவத்துரோகந் தீர்ந்த சருக்கம் பார்க்க.

58. நரியும் வேடனும். இதிற் கூறப்பட்ட வரலாறு திருக்குற்றலப் புராணம், வேடன் வலம் வந்த சருக்கத்தாலுணரப்படும்.

59. பூசைக்கு வீடளித்த புண்ணியா போற்றியொரு
பேசு கவிப்பன் பிழைபொறுத்துத்—தேசுபெறு

60. வீடளித்தாய் வேதியன்றன் மெய்த்தாதைக் காநரகக்
காடொழித்தாய் போற்றி கழல்போற்றி—சாடுநற

61. வுண்ட மறையோன்ற னுட்சிறந்த பாவமெலாம்
கண்டறுக்குந் தீர்த்தக் கரையானே—வண்டணுகாச்

62. சோலையாய் போற்றி துணருடைய பொன்னிதழி
மாலையாய் சித்ரசபை வாணனே—சாலப்

63. பொறுமை யருட்கடலே போற்றியென வேத்திக்
குறுமுனிவன் போற்றியகுற் றாலம்—திறமாக

[முருகக்கடவுள் பெருமை]

64. ஏர்வலப்பால் வாழ விருவானு கேசுரனார்
சீரிடப்பால் வாழ்வு சிறக்கவே—ஓரிலஞ்சி

65. தன்னில் நடுவாழுஞ் சண்முகசிந் தாமணிநீள்
தென்னிலஞ்சி மேவுந் திறற்கடம்பன்—பன்னித்

66. திருமுருகாற் றுப்படையைச் செப்பியநக் கீரன்
வெருவு பயந்தவிர்த்த வீரன்—மருவாத

67. சிங்கமுக னானைமுகன் றீயவொரு சூரபன்மன்
அங்கவரை மாய்த்த வறுமுகவன்—துங்கமுறப்

---

58-9. ஷை புராணம் யானைபூசித்த சருக்கம் பார்க்க. "தந்த வாரணம் போன் முத்திவீடு புரக்க நெஞ்சே" (திருக்குற். அந்தாதி.) கவிப்பன் - கண்டக சேதனென்பவன்; இவன் பிழையைப் பொறுத்து வீடளித்தது ஷை புராணத்துள்ள கண்டகசேதனச் சருக்கத்தால் விளங்கும்.

60. வேதியன் - சுகுற்சன்; அவன் தாதை கவுற்சன். இவ்வரலாற்றை ஷை புராணத்துள்ள கவுற்சனச்சருக்கத்தால் உணர்க.

60-61. நறவுண்ட மறையோன் - தருமசாமியென்பவன். தீர்த்தம் - வடவருவிவந்து வீழுந்தடாகம்; தருமசாமிச்சருக்கம் பார்க்க.

61-2. வண்டணுகாச்சோலை - சண்பகச்சோலை. இதழி - கொன்றை. சித்ரசபை - திருக்குற்றாலத்துள்ள சபை; இஃது இரத்தினசபை முதலிய ஐந்தனுள் ஒன்று; "ஆதியாம் பரையலது நன்னகர்ச்சிற் பொதுநடன மாருங் காணார், காதலாற் சுரர்முனிவர் பலகாலந் தவம்புரிந்து கண்டவாற்றாற், போதிஞன் முகன்மூலப் பரைபரம ணியந்திரங்கள் பொறித்தா னன்றே, வாதரா யணன்முதலோர் சித்திரமன் றெனுநாமம் வழங்கி னரால்" திருக்குற்றலப். திருநடச். 39.

65. சண்முகசிந்தாமணி: "பெண்கொடியா மிருசிதிக்கு நடுவளர்சிந் தாமணி" திருக்குற்றலப். திருமால். 100.

67. ஆனைமுகன் - தாருகாசுரன்.

68. பாடுந் திருப்புகழைப் பன்னிரண்டு நற்புயமும்
சூடுங் கருணைச் சுவாமிமிக—வாடியவப்

69. புத்தேளி ருக்கும் புரந்தரற்கும் விண்ணுலகில்
தத்தம் பதிநிலைமை தானளித்தோன்—சித்தமகிழ்ந்

70. திந்திரனர் தம்மகளை யேய்ந்துமணங் கொண்டருளிச்
சுந்தரஞ்சேர் மான்மகளாந் தோகைக்காச்—சந்திரனேர்

71. ஆறு சருணை யழகுமுகங் காட்டாமற்
கூறுமொரு வேங்கைக் குலமரமாய்—வீறியே

72. நின்று வருந்தி நெடுங்குறவர் வந்தாட
அன்று வலிய வணைந்தகுகன்—சென்றுபுரி

73. தாகமார் நாரதனுர் தாம்செயும்யா கத்தகரை
வாகனமாக் கொண்ட வடிவேலன்—பூகஞ்சூழ்

74. மன்னிலஞ்சி சூழு மலரிலஞ்சி யுஞ்சூழ்ந்த
தென்னிலஞ்சி வாழுந் திருக்குமரன்—என்னையே

75. ஏழு பிறப்பு மினிப்பிறவா தாளவந்து
வாழு மிலஞ்சி வடிவேலன்—ஊழிக்கும்

76. காய்த்த கருப்பிணிக்குக் கான்மருந்தா யென்றனக்கு
வாய்த்த விலஞ்சி வடிவேலன்—ஆய்ப்பாகர்

77. முன்னுங் குருவெனக்கு முக்கால முங்குருவா
மன்னு மிலஞ்சி வடிவேலன்—பொன்னுலகோர்

[திருவிழா]

78. பூவுலகோ ரெண்டிசையோர் பொன்மா லயனுடனே
ஏவருங் காட்சி யெமக்கென்ன—மேவியே

---

70. மான்மகள் - வள்ளியம்மையார். 72. ஆட - போர்புரிய.

73. தகர் - ஆடு; "நெருப்பிலுதித், தங்கட் புவன மனைத்து மழித்துல வும், செங்கட் கிடாயதனைச் சென்றுகொணர்ந் - தெங்கோன், விடக்குதி யென் றுய்ப்பவதன் மீதிவர்ந்தெண் டிக்கும், நடத்தி விளையாடு நாதா" (கந்தர்கலி. 58 - 60.) பூகம் - கமுகமரம்.

74. இலஞ்சி - குளம். மலரிலஞ்சி - மலரையுடைய மகிழமரம். தென் இலஞ்சி - அழகிய இலஞ்சியென்னும் தலத்தில்.

75. ஊழிக்கும் - ஊழியளவும்.

76. கருப்பிணிக்கு - பிறவியாகியநோய்க்கு. கான்மருந்தாய் - தன்னு டைய திருத்தாளே மருந்தாக ; வனமூலிகையாக எனலுமாம். ஆய்ப்பாகர் - உமாதேவியாருடைய பாகத்தையுடையவர்; விரித்தல் விகாரம்.

77. பொன்னுலகோர் - தேவர்.

78. பொன் மால் - திருமகளையுடைய திருமால்.

79. வீறுகொண்டு விண்ணேறி மேய வுருவதெனக்
கூறுகொண்ட சேவற் கொடியேற்றிச்—சாறுகண்டே

80. ஆலயத்துள் மேவா வணிவிலங்கு புண்மரங்கள்
வேலையற்றுப் போற்றும் விழாவிலே—சீலத்துத்

81. தென்னனே சோழனுடன் சேரனுமே வந்தேத்தப்
பொன்னிலத்தோர் போற்றிப் புகழ்விழவில்—மன்னுதொண்டை

82. மண்டலத்தில் வண்டூரில் வாழ்சாமி நாதனெனும்
தெண்ட னடாத்துந் திருநாளில்—எண்டிசையும்

83. கந்தசட்டி யென்று கருதுகின்ற வைப்பசியிற்
செந்தமிழோர் போற்றுந் திருநாளிற்—பந்தமற

[ஆறுநாளும் கொண்டருளும் திருக்கோலங்கள்]

84. வந்தொருநாள் போற்றினரை வாழரம்பை மார்தேவர்
சிந்தையொடு போற்றுந் திருநாளில்—முந்தொருநாள்

85. பங்கயத்தோ னாகிப் பருதி யணிந்தருளும்
செங்கையன்போல் நாளிரண்டிற் சேர்ந்தருளித்—திங்களணி

86. தேவ வுருத்திரனச் சீர்மூன்றி னலாநாள்
ஏவ லுறுதகரி லீசரன—ஆவலுடன்

87. விள்ளுஞ் சதாசிவமா வெள்ளிமயில் வாகனத்தில்
தெள்ளு மனுக்கிரகஞ் செய்வனெனத்—துள்ளலைபோல்

88. வாத்தியமெங் குந்தொனிப்ப வள்ளியம்மை தெய்வானை
ஏத்துதிருப் பள்ளி யெழுந்தருளி—நீத்தம்போற்

[அபிடேகம் முதலியன]

89. பாலாடித் தேனாடிப் பைங்கருப்பஞ் சாறாடிச்
சேலாருங் கங்கை திளைத்தாடிச்—சாலவே

90. வீறுடைய வுட்சாத்து மேற்சாத்துங் கொண்டிருக்குக்
கூறு திருப்பூசை கொண்டருளி—ஆறுதிரு

---

79. சாறு - திருவிழா.

82. தெண்டன் - வணக்கத்தையுடையவன்.

85. பருதி - சக்கராயுதம். 86. தகர் - ஆட்டுக்கிடாய் வாகனம்.

84-7. முதல்நாளில் பிரமதேவராகவும் இரண்டாம்நாள் திருமாலாகவும் மூன்றாநாள் உருத்திரமூர்த்தியாகவும் நான்காநாள் ஈசுவரனாகவும் ஐந்தாநாள் சதாசிவமூர்த்தியாகவும் ஆறாநாள் வெள்ளிமயில் வாகனரூடராகவும் திருக்கோலங்கொண்டு உலாவருவார் என்பது கருத்து.

87-8. எனத் தொனிப்ப. நீத்தம் - வெள்ளம்.

89. கங்கையென்றது சுத்த தீர்த்தத்தை.

90. உட்சாத்து - உள்ளே உடுக்கும் உடை. மேற்சாத்து - புறவுடை. இருக்கு கூறு - வேதம் கூறுகின்ற.

91. முண்டத்து நீறணிந்து முத்திச் சரவணமா
மண்டபத்தி லாசனத்தில் வந்திருந்தே—அண்டரெல்லாம்
92. போற்றுந் திருவாசற் பொன்னின் மணிக்கதவம்
ஏற்ற திருக்காப் பியலணிந்து—சாற்றரிய

[திருவாபரணம் புனைதல்]

93. பன்னிரண்டு வெய்யோர் பணிந்துசெவி சாற்றுதல்போற்
பன்னிரண்டு குண்டலமும் பார்த்தணிந்து—துன்னவே
94. கட்டுவடங் கட்டிக் காண்சன்ன வீரமிடாச்
சட்டமாக் கண்ட சரம்பூட்டி—இட்டமாப்
95. பொன்மலைக்குப் பொன்மௌலி பூட்டுதல்போ லோராறு
நன்முடிக்குப் பொன்முடிக ணன்கியற்றித்—தொன்மைபெறு
96. பாற்கடலிற் றெள்ளமுதைப் பையத் திரட்சிசெய்து
கோக்கல்போற் றண்டரளக் கோவையிட்டுத்—தீர்க்கமாத்
97. தொண்டரிடத் தன்புந் தொடர்கருணை யும்பெருகி
மண்டிய மார்பில் வழிந்தவோ—மிண்டுபுரி
98. வன்சூரை மாய்த்தவந்த மாசீர்த்தி யும்விறலும்
இன்சீரோ டெய்தியவோ வீங்கென்னத்—தென்மலயம்
99. வாய்த்தவகிற் கட்டை வழங்குபனி நீர்தோய்த்துத்
தேய்த்தநறுஞ் செஞ்சாந்தின் சேறணிந்து—ஆர்த்தெழுந்த
100. சூரன் றனைச்சயித்தே தோகையெனக் கொண்டவெற்றி
வீரமெனுந் தொங்கல் விசயமோ—வாரமதா
101. வானக் குலக்கொடிதான் வைத்தமண மாலையோ
கானக் குறத்திதருங் கண்ணியோ—தேன்மொழியார்
102. பெண்கடப்ப வோமதவேள் பேதலிக்க வோவென்ன
வண்கடப்ப மாகம் வனைந்தருளித்—திண்பொன்னின்
103. மேருவினில் வெய்யோன்முன் வீற்றிருந்த தேய்ப்பவே
ஆரும் பதக்க வணிபூண்டு—சீருடனே

---

91. முண்டம் - நெற்றி. அண்டர் - தேவர். 93. வெய்யோர் - சூரியர்.

94. கட்டுவடம் - கழுத்திற்கட்டும் ஆபரணம். சன்னவீரம் - மார்பிலிடும் வீரசங்கிலி; தக்க. 341, உரை. இடா - இட்டு. சட்டமா - முறையாக.

101. வானக் குலக்கொடி - தெய்வயானையம்மையார். கானக்குறத்தி - வள்ளியம்மையார்.

102. பெண்கள் தப்பவோ; தப்பல் - நிறையழிதல். மதவேள் - காமன். பேதலிக்க - வேறுபட. ஆகம் - மார்பில்.

104. மின்னங் கொருவடிவாய் வீற்றிருந்த தொப்பவே
பொன்னகல முப்புரி நூல் பூணுவித்துத்—தன்னிகரில்

105. நல்லதரு வென்னவளர் நான்மூன்று கைகளிலும்
சொல்லரிய கங்கணங்கள் சூழ்வித்தே—எல்லவிர

106. மன்னு நவமணியால் வண்ணமுறச் செய்ததொரு
மின்னுதர பந்தனமும் வீக்கியே—சொன்னமதாற்

107. கம்மியனுற் செய்யக் கருத்தில்லா வித்தாரச்
செம்மையுறு பொன்னரைநாண் சேர்வித்து—விம்மவே

108. இட்டவிழை யாயிரம்பொ னேற்றவிலை யாமறியாப்
பட்டுடையோ டுத்தரியம் பாங்கமைத்து—மட்டிலாப்

109. பொற்சிலம்பிற் ருழ்வரையிற் பொற்றைகளை யிட்டதெனப்
பொற்சிலம்பு பொற்காலிற் பூட்டியே—நற்புகழ்சேர்

110. ஓராறு நன்முடிமே லோங்கியவான் வில்லென்னச்
சீரார் திருவா சிகைசேர்த்துப்—பேரான

111. ஆதவனோர் காற்றவிசா வன்றுநின்ற தேய்க்குமெழிற்
சீதநிலைக் கண்ணுடிச் சீர்பார்த்து—வேதமொழி

112. ஓருந் தமிழு மொருவன்மொழி வாசகமும்
பாரிற் றிருவிசைப்பா பல்லாண்டும்—சீர்சிறந்த

113. காந்தப் புராணக் கவியுந் திருப்புகழும்
சேந்தசெவிக் கொண்டருளிச் செய்தபின்னர்—பாந்தமாய்ச்

[உடன்வருவோர்]

114. சொன்னநிலத் தோர்களுக்காத் தூதுசென்ற தம்பியெனும்
மன்னன் றனிவீர வாகுவுடன்—பின்னவரும்

115. மற்றைய வீரர்களு மாபூதச் சேனைகளும்
கொற்றமுரசு குந்தக் குரிசிலுடன்—பற்றுமனத்

116. தொண்டருடன் பத்தசனர் சொல்லரிய சீர்த்திபெறும்
அண்டருட னல்ல வடியாரும்—மண்டிவரத்

---

105. தரு - கற்பகம். எல் அவிர - ஒளி விளங்கும்படி.

106. வீக்கி - கட்டி.

109. தாழ்வரை - அடிவாரம். பொற்றைகள் - சிறுகுன்றுகள்.

111. தவிசா - ஆதனமாக.

111-2. வேதமொழியாகிய தமிழ் - தேவாரம். வாசகம் - திருவாசகம்.

113. சேந்தசெவி - அணிகலனுற் சிவந்த செவி. பாந்தமாய் - பொருத்தமாக; "பாந்தம தாயெற் கருள்வோன்" சிரகிரிக்கோவை, 104.

114. சொன்னநிலத்தோர் - தேவர்.

117. தென்னிலஞ்சி யாற்குச் சிவார்ச்சனைபோற் பத்திசெயும்
பொன்னுடைய புன்னைவனம் போற்றிவரத்—துன்னுருகன்
118. தொண்டு விரும்பியவன் றெண்டருக்கே தொண்டுசெய்யும்
மண்டலிக னுண்டான் வணங்கிவரத்—தொண்டுசெயும்
119. தானீக னாகித் தலத்தைப் பிரபலஞ்செய்
மானபரன் முத்தையன் வாழ்த்திவரத்—தீனமில்லாத்
120. தானத்தார் நல்ல தவத்தார்க டானத்தார்
ஆன புவியோ ரனைவோரும்—வானில்வரும்
121. இந்துவைச்சூழ் தாரகைபோ லெண்புவியு மோர்காலம்
அந்த முறுங்கடல்க ளார்த்தென்ன—முந்தி
122. இரைப்பப் புரந்தரனு ரேந்திழையா ளாறு
தரத்தின் முகவழகைத் தான்கண்—டுரைப்பதற்கும்
123. எட்டாத வின்பவெள்ள மேன்றமட்டும் வாரியுண்டு
மட்டாருங் கொங்கை மலைவளரக்—கட்டார்கொள்
124. மான்மகளார் முன்செய்த வன்கண்மைக் குள்ளுருகி
மீன்விழியா ளானந்த மெய்யொழுக்கத்—தேன்மொழியாள்
125. ஆன திலோத்தமையு மாடரம்பை மேனகையும்
மானி னுருப்பசியு மற்றோரும்—பானல்சேர்

[வாத்தியங்கள்]

126. கண்ணி னிருவரையுங் கைகூப்பிச் சூழ்ந்துவரப்
பண்ணின் முறையே பதலைதுடி—தண்ணுமை
127. ஓர்காளம் பம்பை யொருகட் பறைதவில்
சீர்முழவம் பேரி திடிமமொலி—ஆர்தக்கை
128. கல்லவடங் தோர்கரடி கைபடக மொண்டிமிலை
சல்லரிநன் மாமுருடு தாமுழங்க—நல்லசந்துத்

---

119. தீனம் - எளிமை.

120. தானத்தார் - தானம் செய்பவர்கள், தலத்தில் இருப்பவர்கள்.

122. புரந்தரனுர் ஏந்திழையாள் - இந்திரன் புதல்வியாகிய தெய்வயானை அம்மையார். 123. ஏன்றமட்டும் - இயன்றமட்டும்.

125. பானல்சேர் - கருங்குவளையைப்போன்ற.

128-9. சந்துத் தூ கந்த மாதனத்தோர் இருவர் - சந்தனத்தின் சுத்தமாகிய வாசனையையுடைய பெரிய ஸ்தனத்தினராகிய வள்ளி தெய்வயானையம்மையார். தோகை - மயில்; உவமை. தூ கந்தமாதனத்தோன் - பற்றுக்கோடாகிய கந்தமாதன பருவதத்தில் எழுந்தருளி இருப்பவன்; இது கயிலையைச் சார்ந்தவிடத்தில் முருகக்கடவுளுக்கிருப்பிடமாக இருப்பது.

[திருச்சின்னம்]

129. தூகந்த மாதனத்தோர் தோகை யிருவர்புணர்
தூகந்த மாதனத் தோன்வந்தான்—பாகமதிற்

130. பானலைவாய்ப் பைங்குயிலார் பாவை யிருவர்விருப்
பானலைவாய்ச் சூரன் பகைவந்தான்—தானம்வளர்

131. வேள்விமலை யான்மகளை வேட்டோன் குறத்தியணை
வேள்விமலை யான்வித் தகன்வந்தான்—தாழ்வில்

132. அளகைவள்ளி யூருடையா னைம்முகத்தோன் மைந்தன்
அளகைவள்ளி யூருடையான் வந்தான்—வளகுபெறு

133. பண்பைத் திருமலையும் பஞ்சா யுதன்மருகன்
பண்பைத் திருமலையப் பன்வந்தான்—நண்பாம்

134. பழநி மலைப்பாலன் பால்வந்தான் சீராம்
பழநி மலைப்பாலன் வந்தான்—சளமாம்

135. கதிர்காமத் தோனுங் கடுஞ்சூரை வென்ற
கதிர்காமத் தோன்காளை வந்தான்—பதமாம்

---

130. பானல் ஐ வாய் - குமுதம்போன்ற அழகிய வாயையுடைய. இருவர் விருப்பான். அலைவாய் - திருச்செந்தூர். தானம் - தேவலோகம்.

131. வேள்வி மலையான் - யாகம் செய்ய மயங்காதவன்; இந்திரன். வேட்டோன் - மணந்தவன். வேள்வி மலை - நாஞ்சில் நாட்டிலுள்ள தலம்; "நாஞ்சினாட்டு வேள்வியலையம்மே" குற்றலக்குறவஞ்சி.

132. அளகை - கூந்தலையுடையாள். வள்ளி ஊரு உடையான்; ஊரு - தொடை. ஐம்முகத்தான் - சிவபிரான். அளகாபுரியைப்போன்ற வள்ளியூரையுடையவன்; வள்ளியூர்: தென் பாண்டிநாட்டில் உள்ள சுப்பிரமணிய ஸ்தலங்களுள் ஒன்று; திருப்புகழ் உடையது. வளகு - வளம்.

133. பண்பு ஐ திரு மலையும் - நற்குணத்தையும் அழகையும் உடைய திருமகளை அணிந்த; ஐ - அழகு. பஞ்சாயுதன் - திருமால். பண்பைத் திருமலை - பண்புளிப்பட்டினத்தைச் சார்ந்த திருமலை; இது திருக்குற்றாலத்திற்கு அருகேயுள்ள ஸ்தலம்.

134. பழ நிமலைப்பால் அன்பால் வந்தான் - பழமையும் தூய்மையும் உடைய உமாதேவியாரிடத்தில் அன்பினால் அவதரித்தான்; "இழையணி சிறப்பிற் பழையோள் குழவி" என்றார் திருமுருகாற்றுப்படையிலும். சளம் - வஞ்சனை.

135. கதிர் காமத்தோனும் - கதிர்க்கின்ற ஆசையையுடையவனாகிய. சூர் - சூரபன்மன். கதிர்காமத்தோன் - கதிர்காமமென்னும் தலத்தில் எழுந்தருளியுள்ளவன்.

136. திருவே ரகத்தினட்டான் சீரடியார்க் கென்றும்
திருவே ரகத்தினட்டான் வந்தான்—உரியார்

137. திருப்பரங் குன்றத் திருந்தான் விருப்பாய்த்
திருப்பரங்குன் றத்திருந்தான் வந்தான்—தரிப்பாய்வாழ்

138. சீதத் திருவிலஞ்சிச் சேவகன்வந் தானெனவே
ஓதுதிருச் சின்ன மொலியெழுப்ப—பூதலத்திற்

[குழாங்கள்]

139. பேதை பெதும்பையுடன் பேசுமங்கை சீர்மடந்தை
காத லரிவை கமழ்தெரிவை—வாதைதவிர்

140. பேரிளம்பெண் ணாரும் பிலத்திலுள்ள கன்னியரும்
சீரிளம்பெண் ணாயத் திரளுடனே—நேரில்

141. அரமகளிர் கூட்டமுமே யாகி நிரையாய்த்
திரமுடைய மாடஞ்செய் குன்றும்—தரமுடைய

142. மாளிகையுங் கோபுரமு மண்டபமுந் தெற்றியுடன்
சூளிகையும் மேடைகளுஞ் சூழ்மறுகும்—ஆளிபோல்

143. அம்பொன் மடப்பிடிபோ லஞ்சொற் கிளிமயில்போற்
செம்பொனின் மான்போற் றிகழனம்போற்—கொம்பிலுறை

144. கோகிலம்போற் பூவைபோற் கோவைபோல் வாய்திகழ
வாகிலஞ்சி வீதியெலாம் வந்தீண்டி—வேகமுடன்

---

135 - 6. பதமாம் திரு சீரடியார்க்கு ஏர் அகத்தில் நட்டான்; அகம் - மனம்; நட்டான் - பதித்தவன். என்றும் திருவேரகத்தில் நட்டான்; திருவேரகம் மலைநாட்டகத்துள்ளதொரு திருப்பதி; - சுவாமிமலையுமாம்; நட்டான் - விரும்பியவன். உரியார் - உரிமையையுடைய அன்பர்களது.

137. திரு பரம் குன்ற திருந்தான் - செல்வமிகுதி குறைவுபடச் சம்மதியாதவன்; மேன்மேலும் வளர்ப்பவனென்றபடி.

140. பிலம் - நாகலோகம். ஆயத்திரள் - பாங்கியர் கூட்டம்.

141. அரமகளிர் - தெய்வப்பெண்கள். நிரையாய் - வரிசையாய். திரம் - நிலை.

142. தெற்றி - திண்ணை. சூளிகை - மாடத்தின் உச்சிக்கட்டிடம். ஆளிபோல் - இடையால் சிங்கம்போல.

143. நடையாற் பிடிபோலவும் சொல்லாற் கிளிபோலவும் கண்ணால் மான்போலவும் நடையால் அன்னம்போலவும்.

144. குரலாற் குயில்போலவும் சொல்லாற் பூவைபோலவும்; பூவை - நாகணவாய்ப்புள். கோவை - கொவ்வைக் கனி.

145. தேருடனே தேருண்டையார் சேர்ந்து பொருவதற்கு
நேருடைய வேளை நிகழுமட்டும்—சேரலர்கள்

146. ஈடுபெறத் தேரொளித்த தென்னவல்குற் பொற்றேர்கள்
ஓடிக் கலிங்க மொளித்திருப்ப—நாடியே

147. ஆறிரண்டு தோளு மழகுமுக மோராறும்
ஏறுங் கருணைவிழி யீராறும்—கூறுதிருக்

148. கையிலொரு வேலுங் கதிர்த்தபுரி முந்நூலும்
சைய நிகருந் தடமார்பும்—துய்யதிருக்

149. கந்தரமுங் காதுங் கனகமணிக் குண்டலமும்
அந்த முறுங்கருணை யார்மொழியும்—சிந்தூரஞ்சேர்

150. நெற்றியுஞ் சேவ னெடுங்கொடியு நல்லடியார்
பற்றியிடு பாதப் பரிபுரமும்—உற்றுவளர்

151. தேவனைச் செந்தூர்வாழ் தேசிகனைச் சோலைமலைக்
காவனை வேள்விமலைக் காங்கெயனைப்—பாவனைத்தும்

152. வாசிதீர் காசுபெற மண்டலத்திற் சொன்னவனை
வீசுதிரு வேரகத்தின் மெய்ப்பொருளை—ஆசிலாப்

153. பாவி லருணகிரி பைந்தமிழின் மாரிபெய்ய
நாவிற் றிருப்பெயரை நட்டோனைக்—காவிலொரு

154. வள்ளிக் கொடிக்கு மரமாத் தவமிருந்து
கள்ள மணத்தாற் களித்தோனைத்—தெள்ளுதமிழ்த்

155. தென்னிலஞ்சி யானைச் சிவபிரான் றேசிகனை
உன்னி வணங்கி யுவந்தேத்திக்—கன்மிதப்பில்

156. அன்றுவந்த நாவுக் கரசன் றிருவுளம்போல்
ஒன்றிவந்து மாத ரெழிலுற்றுத்—துன்றவே

---

145. சேரலர்கள் - பகைவர்கள்.

146. ஈடு - எளிவரவு. கலிங்கம் - ஆடை; கலிங்கதேசமென்பது வேறு பொருள்.

148. சையம் - ஒரு மலை.

149. கந்தரம் - கழுத்து. அந்தம் - அழகு. சிந்தூரம் - குங்குமதிலகம்.

150. பரிபுரம் - சிலம்பு.

152. வாசி - வேறுபாடு. சொன்னவனை - திருஞான சம்பந்தமூர்த்தியை; முருகக்கடவுளே திருஞானசம்பந்தராக வந்தாரென்னுங் கொள்கையையுடையவர் இவ்வாசிரியர். இங்கே குறிப்பிட்டது திருவீழிமிழலையிற் படிக்காசுபெற்ற வரலாற்றை.

154. மரமென்றது வேங்கைமரத்தை.

[குழாங்களின் கூற்று]

157. வெண்கடம்பு சூடும் விளக்கொளிசென் றேறிவரும்
திண்கடம்பு சூடுதிருத் தேர்பாரீர்—விண்புகழும்
158. பொன்னிலஞ்சி பாரீர் புகழிலஞ்சிச் சீர்பாரீர்
தென்னிலஞ்சி பாரீர் திருப்பாரீர்—மின்னனையீர்
159. தேன்வழியும் வீதிவரு தேரழகோ வவ்வீதி
தானழகோ வீதுணர்ந்து சாற்றுமென்பார்—வானிரவி
160. தேசெல்லாங் கூடித் திரண்டதுவோ நம்முடைய
ஆசையெல்லா மோருருவ மானதோ—தேசிகனை
161. எம்மை யணையவொட்டா தீர்புறமுஞ் சேர்ந்திருக்கும்
உம்முடையார் யாவ ருரையுமென்பார்—செம்மைபெறு
162. தெய்வக் கொடியுஞ் சிலைக்குறவர் மின்கொடியும்
பையப் படருமொரு பண்மலையே—உய்யும்வகை
163. எத்தித் திருக்கறுத்தே யேழை யடியரையாள்
சத்தித் திருக்கரத்துச் சண்முகா—நித்தமுமே
164. நித்திரையு நீங்காம னெஞ்சி னினைப்பவர்க்கு
முத்தித் திருவா முருகோனே—சத்துருவின்
165. வெற்புக் கயிற்றொட்டாய் வீதிவரு மெங்கண்முலை
வெற்புக் கயிற்றொட வேண்டாவோ—அற்புறநக்
166. கீரன் புகன்மாலை யேந்தினீர் கேளுமெங்கட்
கீரன் புகன்மாலை யீந்திலீர்—வாரமுடன்
167. பெண்ணைப்பெண் ணாக்கிவிடப் பேதலித்த தாகாமற்
பெண்ணைப்பெண் ணாக்கிவிட்டாற் பேதமோ—மண்ணுக்குள்

---

158. இலஞ்சி - மகிழ மரம், பொய்கை, இலஞ்சி யென்னும் தலம்.

160. தேசு - ஒளி.

162. தெய்வக் கொடி - தெய்வயானை யம்மையார். குறவர் மின் கொடி—வள்ளி நாயகி.

163. சத்தி - வேல்.

165. வெற்புக்கு அயில் தொட்டாய் - கிரவுஞ்ச மலையை அழிப்பதற்கு வேலை விட்டாய். கயிற்றொட=கையில் தொட.

166. புகழ் மாலை. ஈர் அன்பு உகள் மாலை.

167. பெண்ணைப் பெண் - பெண் பனை. பெண்ணைப் பெண்ணாக்கி விட்டால் - பெண்களாகிய எங்களைப் பெண் தன்மையுடையவர்களாகச் செய்துவிட்டால்.

168. வேலைக் கடம்பா விரும்புமெளி யேங்களுக்கோர்
வேலைக் கடம்பகர வேண்டாவோ—கோலுசமண்

169. ஆற்றை யொழியவைத்தா யல்லையோ வெங்கள்கண்ணீர்
ஆற்றை யொழியவைத்தா லாகாதோ—போற்றினர்க்குத்

170. தொங்க லணிந்தாய் சுவாமியுனைப் போற்றெமக்குத்
தொங்கலணிந் தாலதற்குத் தோடமுண்டோ—துங்கமுற

171. ஆலிங் கனம்வயிறே யாகுமென் றீர்கூடி
ஆலிங் கனஞ்செய் தணைகிலீர்—மேலுமென்றே

172. சென்றீர்ப்பத் தென்னிலஞ்சிச் செட்டிப் பெருமான்றோர்
நன்றுதிரு வீதி நடாவினான்—அன்றுதான்

[பேதை]

173. மேவுமொழி பேதைமொழி விள்ளு மொழிப்பேதை
கூவ வறியாக் குயிற்குழவி—தாவுவிழி

174. மான்போலு மென்னினந்த மான்போற் றெழிலறியா
மீன்போற் பிறழா விழியினாள்—யான்போற்றும்

175. ஆறுமுகத் தாறெழுத்தா னாரிலஞ்சிப் பூங்கொம்பில்
ஏறிவிளை யாடா விளந்தோகை—தேறியே

176. ஈன்றாளைக் காணா திருக்கவறி யாளழகார்
மூன்றாம் பிறைபோலு முண்டத்தாள்—ஆன்றமே

177. வீடாதி வேண்டின் விளங்குந் திருவிலஞ்சி
கூடார்போற் கூடாக் குழலினாள்—நாடாரும்

178. பன்னி யுரைக்கும் பதினெட்டுப் பாஷையன்றி
இன்னமொரு பாஷை யெனுமொழியாள்—தென்மதுரைப்

179. பொய்ச்சமணுக் குள்ளாகிப் போனசைவந் தான்முளைக்க
மெய்ச்சம்பந் தர்பார்த்த வேளைபோற்—பச்சம்

180. தளைக்குமுடற் குள்ளிருந்து தப்பா தெழும்பி
முளைக்கநாட் பார்க்கு முலையாள்—பிழைக்க

181. மறந்து மிலஞ்சி வணங்காரைப் போல
இறந்து பிறக்கு மெயிற்றாள்—சிறந்ததொரு

---

168-9. வேல் ஐ கடம்பா—வேலையும் அழகிய கடப்ப மாலையையும் உடையாய். வேலை கடம் பகர - தொழிலாகிய கடமையைச் சொல்ல. சமண் ஆற்றை - சமணர்களது மார்க்கத்தை.

171. ஆல் இங்கனம் வயிறே ஆகும் ; ஆல் - ஆலிலை.

176. முண்டம் - நெற்றி. ஆன்று - அடங்கி.

179. பச்சம் - பட்சம்.

182. வைக்கோற் பழுதையைப்போல் வாழுகின்ற பாம்பையொரு
கைக்கே பிடிக்குங் கருத்தினள்—மிக்கமலைக்

183. குஞ்சரத்தை யிந்தக் குடத்தடைத்துத் தாருமென்றே
பஞ்சரிக்கு மந்தப் பருவத்தாள்—மிஞ்சனையைப்

184. பேச்சுமரப் பாவை பிதற்றுதற்கு மென்னைப்போல்
ஏச்சுப் பயிற்றுவிப்பா யின்றென்பாள்—வாச்சவில்லின்

185. முன்றிலிடைச் சிற்றிலின்வாய் மொய்மணற்சோ றாக்கியதைத்
தின்றிடுமி னென்றென்று செப்புவாள்—அன்றயிலாப்

186. பண்புதனைப் பார்த்துப் பயந்தாண்முன் கூட்டமிடக்
கண்பிசைந்து நின்று கதறுவாள்—பெண்பிள்ளாய்

187. மங்கைப் பருவம் வருங்கா லயில்வரென்று
நங்கைமார் கூட்டி நடந்துசெல்லச்—சங்கையிலாத்

188. தென்னிலஞ்சி தன்னிற் றிருவீதி யோர்மருங்கிற்
தன்னிகரில் பொய்கைச் சரவணமும்—மின்னிகராம்

189. வள்ளியம்மை தெய்வானை வாய்த்த நடுவதனில்
வெள்ளிமயில் வாகனனை மேலமைத்தே—ஒள்ளிழையீர்

190. சேவியுமின் சேவியுமி னென்றென்று செப்பியே
பாவையுந்தா னின்று பகருங்கால்—ஆவிநிகர்

191. பாத சரமும் பரிபுரமுங் கிண்கிணியும்
சீதப் புரிநூற் றிருமார்பும்—ஆதவர்கள்

192. எல்லா முதித்ததென்ன வீராறு குண்டலமும்
சொல்லா லடங்காச் சுடர்முடியும்—சல்லாபம்

193. சேரு மழகுஞ் சிறப்பு மதற்கிசைந்த
சீரு முடைய திருவுடையான்—கூருடைய

194. வேலுடையான் றோகை விடையுடையான் வீரகண்டைக்
காலுடையா னறிரண்டு கண்ணுடையான்—மேலும்வளர்

---

183. பஞ்சரிக்கும் - தொந்தரவு செய்யும்; "பஞ்சரித்து நின்னைப் பலகா லிரந்ததெலாம்" தாயுமானவர்.

184. மரப்பாவை பேச்சுப் பிதற்றுதற்கு. எச்சு - எய்த்து. வாச்ச - வாய்த்த.

186. பயந்தாள் - பெற்றதாய்.

192. சல்லாபம் - இன்பம்.

194. விடை - ஆட்டுக்கிடாய்; "மதவலி நிலைஇய மாத்தாட் கொழு விடை" முருகு. 232.

195. செந்தூ ருடையான் றிருப்பரங் குன்றுடையான்
நந்தூர் திருவாவி னன்குடியான்—சந்தூரும்

196. ஏரகத்தான் சோலைமலை யென்றும் விருப்புடையார்
சீரகத்தான் காவித் திருமலையான்—பாரகத்தில்

197. குன்றுதொறு மாடல்புரி கோமா னடியர்மனம்
குன்றுதொறு மாடல்புரி கோமான்—மன்றுகளில்

198. சித்திரமா மன்றத் திருநடனத் தானருள்வி
சித்திரமா மன்றப்பாத் தேசுடையான்—நத்தரியை

199. அம்மா னெனவுரைப்போ னம்மான் மருகனெனும்
பெம்மா னிலஞ்சிப் பெருமையான்—எம்மான்

200. திருவருள்போ லெத்திசையுந் தெய்வமுர சார்ப்ப
அருமைத்தே ரேறி யணையத்—தெரிவையர்கள்

201. ஓரானந் தக்கடலி லோயாமன் மூழ்கியந்தச்
சீரானந் தக்கடலைச் சேவிப்பக்—காராரும்

202. கோதையரு மன்னையருங் கூறுமுயிர்த் தோழியரும்
பேதையரும் போற்றுதல்போற் பின்போற்றித்—தாதியரும்

203. சென்னி வணங்கித் திருக்குமரன் கைப்பிடித்த
வன்னி தனைப்பிடித்து வாருமென்றாள்—கன்னிக்

204. குயிலே மடக்கொடியே கோடரத்தி லாடும்
மயிலே பிடியே வளர்மானே—கையிலே

205. யார்பிடிப்பார் கந்த ரனுபூதி சொன்னகிளி
ஏர்பிடிக்கு நீபிடிக்க வெய்துமோ—பார்பிடிக்க

---

195. நந்து ஊர் ; நந்து - சங்கு. சந்து ஊரும் - சந்தன மரங்கள் பரந்து வளரும்.

196. சோலை மலையிலும் எப்பொழுதும் அன்புடையவர்களுடைய சிறப்புப் பொருந்திய நெஞ்சிலும் இருப்பவர். காவித் திருமலை - திருத்தணிகை; திருக்குற்றாலத்துக் கருகிலுள்ள திருமலையுமாம்.

197. அடியர் மனம் குன்று தொறும் ஆள்தல் புரி - அடியவர்களுடைய நெஞ்சம் சோரும்பொழுதுகளில் ஆண்டருளும்.

198. சித்திரமா மன்றம் - திருக்குற்றாலத்திலுள்ள சித்திர சபை. விசித்திர மா மன் - விசித்திரத்தையும் பெருமையையும் உடைய தலைவன். நத்து அரியை - சங்கினை உடைய திருமாலை.

199. அம்மான் என - மாமன் என்று. அம் மான் மருகன் - அழகிய மானுக்கு மாப்பிள்ளை.

203. வன்னி - கிளி. 204. கோடரம் - மரக்கிளை.

205. அருணகிரிநாதர் கிளிவடிவமாக முருகன் திருக்கரத்திலிருந்து கந்தரனுபூதியை அருளினாரென்பது கர்ணபரம்பரைச் செய்தி.

203-5. திருத்தணிகையுலா.

206. என்றுகனி வாய்ச்சியர்க ளெல்லோருந் தான்கூற
நின்று நிலஞ்சுரண்டி நிற்பவே—வென்றிவடி

207. வேல னுலாவி விளையாடி மேற்சென்றான்
சேலனுமங் கோடியே செல்கின்றான்—சாலப்

[பேதும்பை]

208. பெதும்பை யவளொருத்தி பேதைமைகள் சற்றே
பதுங்கி யொதுங்கும் படியாள்—ததும்புகொங்கை

209. ஏரார் திலோத்தமைக்கோ விந்திரைக்கோ மேனகைக்கோ
தாரா ருருப்பசிக்கோ தங்கையாள்—பாராரும்

210. வெய்ய கதிர்க்கு வெளிவரா துண்ணெகிழும்
துய்ய கமலமுகைச் சொர்க்கத்தாள்—பையவே

211. மிக்க குழைநெகிழ மேன்மேலு மூப்பியர்கைத்
தக்கை தவிர்ந்த தனிக்குழையாள்—புக்கவொரு

212. பம்பரத்தி னன்முளைபோற் பற்றிக் கடைந்தறுத்த
அம்பரத்தி னன்முளைபோ லாமுலையாள்—நம்பும்

213. அருட்பார்வை யல்லாம லாடவரை வாட்டும்
மருட்பார்வை யான வலையும்—தரிப்பாக

214. மூலந்தான் பார்த்து முதன்மைபெறக் கற்பதற்குக்
காலந்தான் பார்க்குமிரு கண்ணினாள்—மேலுந்தான்

215. தென்னிலஞ்சி யெங்கோன் றிருத்தொண்ட ரானவர்கள்
தந்நிலைமைத் தொண்டு தலைக்கொண்டே—உன்னும்

216. அடிமையாற் செய்கரும மல்லலின்றும் போல
நெடிமையாய்க் கூடுகுழ லானோர்—துடியிடையிற்

217. பட்டாடை சுற்றப் பணிபூண வாசையல்லால்
கட்டாக வேறோர் கருத்தில்லாள்—தட்டாமல்

218. இல்லத் திருந்துமன்ற லென்றவிளை யாட்டயர்ந்து
மெல்லத் திருந்தும் விருப்பினாள்—நல்ல

219. மகிழம்பூஞ் சோலைநிழல் மௌவல்படர் பந்தல்
மகிழுங் கனகமலர் முன்றில்—மகிழும்

---

207. சேலன் - சேல்மீன் கொடியையுடைய மன்மதன்.

210. சொர்க்கம் - ஸ்தனம்.

211. மூப்பியர் - செவிலியர். தக்கை - மகளிர் காதை வளர்க்கும் ஒரு வகைக் கருவி; வழக்கு.

212. அம்பரம் - மஞ்சள்.

219. மௌவல் - முல்லை.

220. குயில்பேடை செம்போத்துக் கோழி புறவம்
மயில்பூவை பின்னே வரவே—ஒயிலாக
221. வல்லியருங் கிள்ளைகளு மான்களுமே முன்செல்ல
மெல்லியர்கள் மெல்லென்ன மெல்லென்ன—நல்லசங்கைச்
222. சங்கினமுந் தண்மதியைத் தாரகையுஞ் சூழ்வதென்ன
மங்கைமார் சூழ்ந்துவர வந்திருந்து—கங்கைமுதற்
223. சத்தநதி முத்தோ தடங்கடலேழ் முத்தமோ
சித்ரநதி முத்தோ தெரிந்தெடுத்துப்—பத்தியாய்க்
224. கொங்கைக் குவட்டிற் குலவுமுத்த மாவமெனச்
செங்கைமேற் கூத்தாடுஞ் சீர்காட்ட—அங்கியிலே
225. வந்த தகர்க்கு மருண்டமர ரோடியநாட்
சிந்தையுடன் காத்த செயலொன்றும்—முந்துசூர்
226. கூறிரண்டே யாக்கிக் கொடிமயில் வாகனமா
ஏறிப் பிடித்த வெழிலிரண்டும்—தேறியசீர்ப்
227. பொய்யா மொழிகீரன் போத வருணகிரி
மெய்யா மொழிகள் விதமூன்றும்—நையாத
228. கும்பன் முசுகுந்தன் கோவீர வாகுவுக்கும்
உம்பருக்குஞ் சொன்ன வுரைநான்கும்—அம்பதுமம்
229. துன்றயனர் வேடருடன் சூரரொரு மூவரையும்
அன்றுபங்கஞ் செய்த வவையைந்தும்—வென்றிசேர்
230. கின்றபரங் குன்றுங் கிளர்செந்தூ ரேரகமும்
குன்றுதொ ருடல்குளிர் சோலைமலை—என்றுமே
231. காந்த மணியிற் கதிருரிமை தானிருந்தும்
வேய்ந்தவொளி யெங்கும் விளங்குதல்போல்—வாய்ந்ததிருத்

---

220. ஒயில் - ஒய்யாரம் ; வழக்கு.

221. நல்ல சங்கு - (இங்கே) வலம்புரி.

223. சித்திர நதி - திருக்குற்றாலத்தைச் சார்ந்த ஒரு நதி ; இத்தலத்திற்கும் உரியது.

224. அங்கியில் - நாரதர் செய்த வேள்வித் தீயில்.

225. தகர் - ஆட்டுக் கிடாய். சூர் - சூரனாகிய மாமரத்தை.

226. மயில்வாகனமாக ஏறிக் கொடியாகப் பிடித்த ; எதிர் நிரனிறை.

227. பொய்யாமொழி - பொய்யா மொழிப்புலவர். கீரன் - நக்கீரர்.

228. கும்பன் - அகத்தியர்.

229. வேடர் - வள்ளியினுடைய சுற்றத்தார். சூரர் ஒரு மூவர் - சூரபன்மன், சிங்கமுகன், தாருகன்.

231. காந்தமணி - சூரியகாந்தக் கல். கதிர் - சூரியன்.

232. தென்னிலஞ்சி தன்னிற் றிருவருணீங் காதிருந்தும்
தன்னிலைமை யான தலமாறும்—பன்னியே
233. விண்ணமுத முண்டுவந்தோர் மீறிவள ரேழிசையின்
பண்ணமுத முண்டுவப்பப் பாடியே—நண்ணுகழங்
234. கன்றெடுத்துக் கொண்டுவிளை யாடும் பொழுதெளியோர்
மன்றுணையாய் மேவி வளர்குமரன்—குன்றுதனைத்
235. தூளாக்கு மெம்பெருமான் றொண்டருட னென்னையுமோர்
ஆளாக்கு மெம்பெருமா னென்னையன்—தாளாரும்
236. மூவருக்கு மேலா முதற்பொருளா யோங்குகுகன்
தேவருக்குச் சேனு பதித்தலைவன்—யாவருக்கும்
237. தேசிகன்வே தாந்தன் றிறற்கடம்ப னற்புலவோன்
வாசிபெறக் காசுமுன்னுள் வாங்கினேன்—வீசுபுகழ்
238. ஆறுமுக னைந்துமுகத் தான்மைந்தன் வள்ளியூர்
ஏறி மலைகுடைந்த வெந்தையான்—வீறுமயில்
239. வாகனத்தன் வாகனத்தன் வன்சிரத்தி லேபுடைத்த
வாகனத்தன் மாகனத்தன் வள்ளியோன்—கூறுதிரு
240. மான்மருகன் மான்மருகன் மான்மருகன் வேன்முருகன்
மான்மருகன் மாதுமையாண் மாமதலை—ஞாலமெல்லாம்
241. வந்து முழவொலிக்க வாழ்கோடி சூரியர்கள்
சுந்தரமு மோருருவாய்த் தோன்றியசேய்—முந்து
242. புறக்கடலின் றேயெழுந்து போந்ததென்னுஞ் சேனை
திறற் கடம்பன் றேர்மீதிற் செல்ல—உறக்கழங்கு
243. பாதியிலே யாடல் பலமறந்து விட்டகன்றுள்
வீதியிலே பாவையைப்போன் மேவினுள்—நீதிபெறு
244. திங்களைநேர் கண்ட திருமால்சீர்க் கொப்பூழ்போல்
அங்கை குவித்தே யடிபணிந்தாள்—மங்கலநாண்

---

237. தேசிகன் - குரு. நற்புலவோன்: "நூலறி புலவ" (முருகு.) வாங்கினேன் - திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர்.

238. ஐந்து முகத்தான் - சிவ பெருமான்.

239. வாகனத்தன் - வாகனமாக உடையவன். வாகு அனத்தன் வன் சிரத்திலே புடைத்த வாகன் அத்தன்; வாகு - அழகு; வாகன் - திருக்கரத்தை யுடையவன். மா கனத்தன் - மிக்க மேன்மையை யுடையவன்.

240. மான் மருகன் - திருமாலுக்கு மருகன், மானுக்கு மாப்பிள்ளை, இந்திரனுக்கு மாப்பிள்ளை. மால் மரு கல் மாது உமையாள் - பெருமை மருவிய இம்யமலையின் திருமகளாகிய உமாதேவியாருடைய.

244. திருமால் சீர் கொப்பூழ் - தாமரை.

245. பூண்டிருவர் வாழும் புதுமைகண்டாள் கண்டவுடன்
வேண்டியவ ரோடிருக்க விண்டிசைத்தாள்—பாண்டதும்பு

246. காவிடத்துக் கோகிலமே கண்மணியே யுன்றனக்கென்
கோவிடத்திற் போயிருக்கக் கூடுமோ—தேவமயில்

247. வள்ளி மயிலின் மலரடியைப் பூண்டாலும்
ஒள்ளிழையா யுன்றனக்கு மொண்ணுமோ—தெள்ளமுதே

248. பொன்னேவா வென்றாயும் போந்தழைக்கச் சேவகன்பால்
தன்னேச மும்பொறியுஞ் சார்த்தியே—மின்னுவாள்

249. கூடத் தொடர்ந்தேகிக் கோமான்றே ரெங்கென்று
தேடத் திருத்தேர் செலவிட்டான்—வேடன்

250. தனுப்பார்த்து நாண்பார்த்துச் சத்தியுடன் மங்கை
தனுப்பார்த்துத் தானு நடந்தான்—இனிப்பான

[மங்கை]

251. மங்கைப் பருவ வரிக்குயில்மிக் காய்வளர்க்கும்
செங்கைக் கிளிபதுமஞ் சேரன்னம்—சங்கையின்றி

252. அண்டரையும் வெல்லு மனங்கனுடன் வாதாடும்
கெண்டையையும் வெல்லுங் கிளர்கண்ணாள்—கண்டுமொழிக்

253. காரிகைமார் யார்யார்க்குங் காம னிரதிக்கும்
வேரிதா னூற விரும்பிதழாள்—வாரிவிளை

254. முத்தமோ வன்றியிள முல்லையோ நேரென்னச்
சித்த நிலைப்பரிய சீரெயிற்றாள்—நித்தமுமே

255. தென்னிலஞ்சி யேத்தாருந் தென்னிலஞ்சி யேத்தினரும்
என்ன விளம்பு மிடைமுகத்தாள்—சொன்னமலை

256. இங்கிரண்டு தானுண்டே யீடுசொல்லக் கூடுமென்னப்
பொங்கிரண்டு மேருப் புணர்முலையாள்—சங்கையின்றிச்

---

245. இருவர் - தெய்வயானை, வள்ளி. அவரோடு வேண்டி இருக்க.

246. தேவ மயில் - தேவயானை அம்மையார்.

248. வா என்று ஆயும் ; ஆய் - தாய். பொறி - அறிவு.

249. வேள் தன். 250. தனு - வில், உடல்.

251. மிக்கு ஆய் வளர்க்கும் ; ஆய் - தாய்.

252. வாதாடும் கண்ணாள் - வெல்லும் கண்ணாளென்க. கண்டு - கற்கண்டு.

253. வேரி - தேன்.

255. எத்தார் தேய்தலும் எத்தினர் விளக்கம்பெறுதலும் இங்கே அறிதற்குரியன.

256. ஈடு - ஒப்பு.

257. சானுக்கு ஞெண்டு தனுவினுக்கு நற்புருவம்
தேனுக்கு நேராந் தெரிமொழியாள்—வானுக்குள்

258. உம்ப ருவக்கு முவட்டாத தெள்ளமுதம்
செம்பதுமக் கோயிற் றிருவனையாள்—அம்பரத்தைத்

259. தொட்டுலவு மேடையையுந் தோகையர்க டங்களையும்
விட்டுத் தனியே வெளிவராள்—உட்டினமாம்

260. வெப்பந் தவிர்ந்திடவே வீசுதென்றன் மேடையின்மேல்
துப்பிதழி யார்சூழத் தோகைபோல்—செப்பமுடன்

261. கந்துகங்கொண் டாடுதொறுங் கானமயி லாடவங்கே
வந்தொளித்து நின்றே மதனுடச்—சந்ததமும்

262. கண்ணும் பிறழக் கடைக்கண் சிவப்பேறப்
பண்ணுடனே செங்கனிவாய் பாட்டயர—நண்ணுமிரு

263. காதிற் குழையாடக் கண்ணின் மணியாடச்
சோதிக் கலன்கள் துவண்டாடச்—சூதில்

264. நயங்கண் மிகுந்து நலங்கள் சிறந்த
குயங்க ளிரண்டுங் குலுங்கத்—தியங்கி

265. நுசுப்பு மொசிந்து நுடங்கி மடங்கிப்
பிசிப்பின் வருந்திப் பெயர்ந்து—வசிப்பின்

266. நிமிர்ந்து குனிந்து நெருங்கி விரைந்து
குமிந்து மயர்ந்து குலைந்தே—அமிழ்ந்தே

267. எழுந்து மிருந்து மிடங்கை பரிந்து
செழுங்கை வலங்கை திரிந்து—விழுந்தும்

268. உரத்தின் மிகுத்த வொளித்திரண் மொய்த்த
சரப்பளி பொற்பணி தத்த—நிரப்பிய

269. கந்த சுகந்த கதம்பொடு குங்கும
சந்தன முங்கு தனங்களில்—வந்திடு

270. கட்டு ரவிக்கை கதித்திட மெய்க்கலை
மட்டறு செக்கணி வைத்திட—இட்டமாய்ப்

---

257. சானு - முழந்தாள். 258. அம்பரம் - ஆகாசம்.
261. கந்துகம் - பந்து. 263. சூதில் - சூதாடு கருவிகளைப்போல்.
264. குயங்கள் - கொங்கைகள்.
265. நுசுப்பு - இடை. வசிப்பு - வசீகரத் தன்மை.
266. குமிந்து - குவிந்து; வழக்கு. 267. பரிந்து - நீங்கி.
268. உரத்தில் - மார்பில். சரப்பளி - ஒருவகைக் கழுத்தணி.
269. கதம்பு - கதம்பம்; கந்தப்பொடி. முங்கு - முழுகும்.
270. செக்கணி - ஒருவகைக் கூத்து.

271. பாதச் சிலம்பு பயப்பயவென் றோலமிடச்
சீதக் கரவளைகள் சேர்ந்தொலிப்ப—நீதியாய்க்

272. கந்தருவ தேசத்துக் கன்னியருங் கைவிதிர்ப்பச்
சுந்தரியு மேனகையுந் தோளசைப்பப்—பந்துபிடித்

273. தாடினு ளாடுதொறு மாறுமுகத் தான்புகழே
பாடினுள் பூவாளி பாக்கியமே—தேடியே

274. ஓடி யரனு ருருவுவக்கு மோகினியே
ஆடிநிகர் கன்னத் தருங்கிளியே—ஓடைவளர்

275. அஞ்சமே கஞ்சமே யம்பொன் மடப்பிடியே
மஞ்சமேய் மாதங்க மாமயிலே—தஞ்சமே

276. எங்கள் குயிலே யெனமடவார் போற்றிசைப்பப்
பங்கயமான் பந்து பயிறல்விட்டு—மங்கையுமே

277. தென்னிலஞ்சி வாழ்கருணைச் செவ்வேளைத் தேடுதலும்
மன்னு புதையல் வறிஞனுக்குத்—தன்னிலே

278. வந்ததுவே போல வதனமதி யோராறும்
கந்தரமு முந்நூலுங் கட்கடம்பும்—எந்தமையாள்

279. வேலு மயிலும் விளங்குந் திருமுடியும்
காலுந் திருச்சிலம்புங் கண்டுதான்—சீலமுறும்

280. அன்பர்களுக் கன்பானை யன்பகத்தி லில்லாத
வன்பருக்கு வன்புடைய வானவனை—இன்பமாய்

281. ஏரகத்தில் வாழு மெளியேங்கட் காரமுதைச்
சூரகத்தைக் கீறுஞ் சுடர்க்கொழுந்தைப்—பாரகத்தில்

282. வெண்ணெயுண்ட வாயாலே மேதினியெல் லாமுண்ட
கண்ணனுக்கு நன்மருகக் காங்கெயனை—விண்ணினுக்கு

283. மெய்ப்பா மொருமணியை வேத விழுப்பொருளைத்
துய்ப்பார்க்கு நல்குஞ் சுடர்க்கொழுந்தைப்—பைப்பாந்தள்

284. சூடுந் திரிகூடத் தோன்ற லொருமகனை
நாடுந் திருவிலஞ்சி நாயகனைத்—தேடியே

---

271. பயப்பய=பையப் பைய - மெல்ல மெல்ல.

272. விதிர்ப்ப - அசைக்க. சுந்தரி - இந்திராணி. தோள் - கை.

273. பூ வாளி - மலரம்பையுடைய மன்மதன் ; பூ ஆளி எனலுமாம்.

274. ஆடி நிகர் கன்னம் ; ஆடி - கண்ணாடி.

275. அஞ்சம் - அன்னம். கஞ்சம் - தாமரை; மகளிருக்குத் தாமரை மலரை உவமைகூறுதல் மரபு. மஞ்சம் - கட்டில். தஞ்சமே - எங்களுக்குப் பற்றுக்கோடாக இருப்பவளே.

283. பை - படம்.

285. உள்ளங் களிப்ப வுரோமமெலாந் தான்சிலிர்ப்ப
வள்ளற் குருபரனை வந்தித்தாள்—தெள்ளுதமிழ்ச்
286. சீரானந் தக்கடலைச் சேரவெதிர் நோக்கினுள்
பேரானந் தத்தின் பெருங்கரையை—ஆராய்ந்தும்
287. காணுள் புனக்குறத்தி காதலனு னீரவளும்
காணுதென் காதலனுக் கைகலவீர்—நாணுளும்
288. பக்கத் திருந்து பணிவிடைசெய் யும்மவர்க்குப்
பக்கப் பணியேனும் பாலிப்பீர்—செக்கர்நிறத்
289. தேவரீ ரென்றுரைப்பச் சேயிழையைப் பாரான்போல்
தேவனுந்தான் வேருேர் தெருவணைந்தான்—பாவைக்குச்
290. செவ்வேள் வடிவமெலாஞ் சிந்தையுணீங் காதிருக்கும்
அவ்வேளை யெய்வதுவு மல்லவென்று—மெய்வேளும்
291. மைத்துனனே யாகையால் மாதவளுந் தங்கையென்று
சித்தசனுந் தேரைச் செலவிட்டான்—நித்தமுமே
292. வேண்முரசும் வேளிருதும் வேளுடைய சின்னமுடன்
வேளுடைய தேரும் விகாதமென்றும்—வேள்குடையாம்
293. இந்துவும்வெப் பன்றிமுத்து மீரப் புழுகுடனே
சந்தனம்வெப் பென்றுமன்று தானறிந்தாள் - விந்தைபெறு

## மடந்தை

294. சீரார் மடந்தை தெரிவையர்க்கெல் லாமரசி
பேரா ரநங்கன் பெருங்குருவே—நீரார்
295. குமிழிக் குழுவைக் குலவுங் கனகச்
சிமிழைத் தெருவிற் சிதறி—அமிழ்திற்
296. பழகிப் பழகித் தடித்துப் பணைத்தே
அழகைப் பிடித்தங் கடைத்து—விழையக்
297. குடத்திற் பருத்துக் குதித்துக் குதித்துத்
திடத்தைக் கனத்தைச் செலுத்தி—அடர்த்துத்
298. தவத்தர் மனத்தைத் தவிக்க வடித்துச்
சிவத்தைத் தரிப்பர் திறத்தைக்—கவர்த்துமேற்

---

290. மெய்வேள் - முருகக்கடவுள்.

291. மைத்துனன் - அத்தைமகன், சித்தசன் - மன்மதன்.

292. வேள்முரசு: கடல். வேள் இருது: வஸந்தகாலம். வேளுடைய சின்னம்: குயில். அவன் தேர்: தென்றல். விகாதம் - பகை.

295. குழுவை - கூட்டத்தை.

299. கோரித்துப் பூரித்துக் கோடொத்துப் பூணிட்டு
வீரத்தின் சீரொத்து வீரத்துப்—போரிட்ட

300. வாரற்று மீறிட்டு வாகொத்து மோகத்துத்
தார்சுற்று போகத் தடமுலையாள்—கார்சுற்றும்

301. தண்டலையிற் சென்றிலஞ்சித் தாமரைவா ழன்னமென
மண்டபத்தி லாசனமேல் வந்திருந்தே—ஒண்டொடிமார்

302. சூழ முடிப்போலத் தோகையொரு சந்திரன்போல்
வீழி யிதழ்மடந்தை வீற்றிருந்தே—ஏழிசைக்

303. கின்னரிகண் மீட்டிக் கிளர்யாழுங் கைப்பிடித்து
மன்னுசுர மண்டலமும் வாழ்த்தெடுத்துப்—பன்னி

304. மகரயாழ் வீக்கியதின் மாடகமே றிட்டுச்
சகரமுத லேழெழுத்துந் தாக்கி—அகரத்தின்

305. சாரி யெழுப்பியே சத்தசுர மாக்கியே
ஆருமோ ரேழிசையு மன்றிசைத்துச்—சேரவே

306. வாழோசை ரண்டுடனே மந்தரமத் யந்தாரம்
ஏழோசை யுந்திவவி லேற்றியே—நாளுமே

307. வாயு மிடறும் வழங்கு மிடமுமலால்
ஆயவுறுப் பெல்லா மசையாமல்—மேயதிறற்

308. காந்தாரி காம்போதி கல்யாணி யுந்தேவ
காந்தாரி மாளவியுங் காவடி—சேர்ந்தாடும்

309. தோடி வராளி துலங்கு மலகரியும்
நேடி வராடி நிசநாட்டை—நாடும்

---

299. கோரித்து - கொடுமையுற்று. கோடு - யானைக்கொம்பு. சீர் - கனம்.

301. இலஞ்சி - தடாகம். மண்டபத்துக்கு இலஞ்சியும், ஆசனத்துக்குத் தாமரையும், மடந்தைக்கு அன்னமும் உவமைகள்.

303. கின்னரி, யாழ், சுரமண்டலம்: இவை இசைக்கருவிகள்.

304. மாடகம் - முறுக்காணி. சகரமுதலேழெழுத்து - சரிகமபதநி யென்பன.

304-5. அகரத்தின்சாரி - ஹகார சஞ்சாரம்.

306. ஓசை ரண்டு - ஆரோகண அவரோகணங்கள்; "ஆரோசை யமரோசை களினமைத்தார்" (பெரிய. ஆனாய. 24.) மந்தாரம் - மெல்லோசை, மத்யம் - மத்தியமம் - சமன்; தாரம் - வல்லோசை; "மந்தரத்து மத்திமத்துந் தாரத்தும் வரன்முறையாற், றந்திரிகண் மெலிவித்துஞ் சமங்கொண்டும் வலிவித்தும்" (பெரிய. ஆனாய. 27.) திவவு - நரம்புக்கட்டு.

310. வயிரவி பூபாள மாமோ கனமும்
செயிர றுமு காரியுடன் சேர்ந்த—உயிரான
311. வல்ல செயசாட்சி மற்றுமுள்ள ராகமெல்லாம்
சொல்லரிய தாளங்கள் சோர்வின்றி—அல்லற்
312. கருப்பையுடன் பூனையுந்தங் காதுவந்து கேட்பப்
பருத்த கருடனுடன் பாந்தள்—விருப்பமாய்
313. ஓவியமுந் தாவரமு மொக்கவே நின்றுருக
ஆவலுட னும்ப ரமுதென்னச்—சீவனுண்டாய்ப்
314. பட்டமர முந்தளிர்க்கப் பண்டிருவர் கொண்டாட
இட்டமுடன் பாடி யியற்றினாள்—மட்டவிழும்
315. தாரைக் குழலமைத்த சஞ்சீவி யாரமுது
காரைக் குழலமைத்த கற்கண்டு—சீர்மிகுத்த
316. எங்கள் குடிதனக்கு மிவ்வூர்க்கு நாயகமென்
றங்கை வளையா ரதிசயிப்ப—மங்கலவாழ்த்
317. துய்யானம் பாடி யுயரிலஞ்சி யூர்பாடி
வையார் வடிவேல் வளம்பாடிப்—பொய்யாத
318. வாக்கு மனமு மலர்ப்பதத்தி லேயிருத்தித்
தேக்குந் திருவழகின் சீர்பாடி—ஆக்கமாம்
319. கானக் குறத்திதன்மேற் காதலெல்லாம் பாடுங்கால்
தானை சரியவளை தான்சரிய—மானவேற்
320. கொற்றவனார் மீதே குலாவுமயல் கொண்டதால்
அற்றமாய் வீணை யயர்க்கின்றாள்—பொற்றொடிமார்
321. ஏதென் றெடுப்பளவி லீராறு செங்கைபெறு
நாத னறுமுகத்து நாதாந்தன்—வேதன்
322. சிரத்திற் புடைத்த திறற்செந்தி லாரும்
தரத்த னிலஞ்சித் தலத்தான்—திரத்துடனே
323. வந்தான்வந் தானெனவே மாதினுக்கு நற்செவியிற்
சிந்தாமற் சின்னஞ் சிறப்பிக்கச்—சந்தாப

---

312. கருப்பை - எலி.

312-3. “ நலிவாரு மெலிவாரு முணர்வொன்றா நயத்தலினால், மலிவாய்வெள் ளெயிற்றரவ மயின்மீது மருண்டுவிழும், சலியாத நிலையரியுந் தடங்கரியு முடன்சாரும், புலிவாயின் மருங்கணையும் புல்வாய புல்வாயும் ” பெரிய. ஆனாய. 34.

314. இருவர் - தும்புரு நாரதர்.

319. தானை - ஆடை.

320. அற்றம் - சோர்வு.

323. சந்தாபம் - வெம்மை.

324. மோகமய நீர்ந்தெழுந்து முத்தனையார் தற்சூழத்
தாக முடனெழுந்து தானணுகி—நாகம்வரு

325. செம்மேகம் போன்று சிவந்த திருவடிவும்
அம்மேகம் போன்றிருண்ட வம்மயிலும்—எம்மேலும்

326. ஊன்று பதமு முபய பரிபுரமும்
தோன்றுமுடி யோராறந் தோட்கடம்பும்—ஆன்றுதான்

327. மான்மகளார் கொங்கையுடன் வானரசி கொங்கையணி
நானம் வழிந்தொழுகு நன்மார்பும்—தேன்மொழியாள்

328. வெற்பரசி யான விமலைகுழல் வாய்மொழிமான்
அற்புடனே யீன்ற வறுமுகனைப்—பொற்புடைய

329. வேள்வி மலையானை வீர மயிலானைக்
காவி மலையானைக் காங்கெயனைத்—தாழ்வில்

330. திருவிலஞ்சி யானையெதிர் சேவித்தாள் சேவித்
தருவிலஞ்சிப் பொன்னையுரம் பெற்றாள்—மருவியே

331. சேவித்த நற்பலன்கைச் சிக்கிற்றென் றேயவன்றேர்த்
தாவிநடந் தாள்சிறிது சாற்றுவாள்—கோவியப்ப

332. மேக முடையாய் வெட்டிவளர் கண்ணுடையாய்
மோக முடையாய் முகமுடையாய் - தாகமுடை

333. மாலை யுடையாய் வளையு மரையுடையாய்
சேலை யுடையாய் திருவுடையாய்—கோலமுடன்

334. தால மிகவுடையாய் சண்முகனை யுள்ளுடையாய்
வேலை யுடையாய் விருப்புடையாய் - நீலமுடன்

335. கோங்குடனே காந்தள் குமிழுடனே தாமரைப்பூத்
தாங்கியெனைப் போலுமிந்தத் தன்மைபெற்றும்—ஓங்கும்

---

324. நாகம்வரு - மலையின்மேல் வருகின்ற. 325. எமது சிரத்தும்.

326. உபய பரிபுரம் - இரண்டு சிலம்பு.

327. வானரசி - தேவயானை.

329. வேள்விமலை: 131-ஆம் கண்ணியைப் பார்க்க. காவிமலை: கண்ணி, 196.

330. அஞ்சிப் பொன்னை உருவில் உாத்திற்பெற்றாள்; பொன் - பசலை; உரம் - மார்பு. 331. தேரை அடைதற்கு என ஒரு சொல் வருவிக்க.

332. இதுமுதல் தனக்கும் தேருக்கும் உள்ள ஒப்புமையை மடந்தை கூறுகின்றாள். கண் - மூங்கிற்கணு.

333. அரை - இடை. சேலை - தேர்ச்சீலை.

334. தாலம் - பனை.

332-5. தலைவிக்குப் பொருள் பொருந்துகையிற் கீழ்க்கண்டவாறு கொள்க:—முடி - தலை, கண் - விழி, தாலம் - நாக்கு, வேலை - காரியம்; நீலம்: கண், கோங்கு: நகில், காந்தள்: கை, குமிழ்: நாசி, தாமரைப்பூ: முகம்.

336. கடப்பனையென் கண்ணெதிரே காட்டாமல் வீதி
கடப்பதுவு நீதிகொல்காற் றேரே—கடப்பனையே

337. வைத்திருக்கு முன்போனன் வைத்திருக்க வேண்டுமென்பால்
உய்த்திருநீ யென்றுரைத்து மோடுமதை—மொய்த்து

338. மறிப்பவள்போற் செல்வாளை மாதரெல்லாங் கூடிக்
குறித்து வணங்கிக்கொண் டேகச்—சிறப்புநகை

339. மான்மருக னீந்தந்த மான்மகனே டேயுலவி
மான்மருவும் வேறோர் மறுகணைந்தான்—மேன்மை

## அரிவை

340. அரிவை யொருத்தி யரிவையர்க்கு மேலாம்
தெரிவைக்கு நேரிளைய செல்வி—வரியரவின்

341. பையோநற் றேர்த்தட்டோ பார மதனிருப்போ
சையோகஞ் செய்யுந் தடநிதம்பம்—மெய்யான

342. பைந்தமிழைக் கேட்டுப் பலனுதவார் பாக்கியம்போல்
நைந்த விடையுடைய நங்கையாள்—செந்தமிழின்

343. கல்வி மழைக்குக் கனக மழைபொழிவோர்
செல்வம்போல் வீறுந் திருமுலையாள்—நல்லதொரு

344. வித்துரும மேடையின்மேன் மெல்லியலார் சூழ்ந்துநிற்பக்
கைத்துரும்பொன் றேந்தியெதிர் கந்தனர்—சித்துவிளை

345. யாடினதெ லாமுதியோ ராய்ந்தெடுத்துக் கூறவே
நாடி யவையெழுது நாளின்கண்—கூடியே

346. பாவைமா ரெல்லாம் படிப்படிநீ தானெழுதும்
தேவர்களை யொன்றொன்றாச் செப்புகெனப்—பூவையீர்

347. சூரனிடந் தூதுசென்று சொல்லித் திரும்பிவந்து
வீர னுரைக்கும் விதம்பாரீர்—சாரமாய்த்

348. தேவகுரு வந்துகுரு தேசிகர்க்குச் சொல்லுவார்
மூவர் பிறப்பை மொழிகுதலும்—ஆவலுடன்

---

338-9. நகை ஈந்து. மானின் மருகன் - முருகன். மால்மகன் - காமன். மால் மருவும் - பெருமை மருவிய.

340. தெரிவையை, "பெரிய தெரிவையிவள் பேரிளம்பெண்டங்கை" (369) என்பர் பின்.

344. வித்துருமம் - பவழம். 347. வீரன் - வீரவாகு.

348. மூவர்பிறப்பு - சூரன்முதலிய மூவருடைய பிறப்பை. குரு தேசிகர் - முருகக்கடவுள்.

349. வெள்ளியா லண்டமெல்லாம் வேண்டியது மற்றுமெலாம்
வள்ளல்பாற் கூறு வதும்பாரீர்—உள்ளமுடன்
350. சென்னி வணங்காத் திசைமுகனைக் காவல்வைத்து
மன்னி யிருந்த வகைபாரீர்—துன்னியே
351. இந்திரன்வந் தெய்தி யிடருரைப்பக் கேட்டுவந்து
சிந்தை மகிழ்ந்திருக்குஞ் சீர்பாரீர்—அந்தமுனி
352. மீறு மகத்தில் வெகுண்டு வருந்தகரை
ஏறி நடத்து மெழில்பாரீர்—சீறியே
353. அண்டம் புரந்திருந்த வாண்மயிலை வாகனமாக்
கொண்டு நடத்துங் கொலுப்பாரீர்—தொண்டுபுரி
354. அண்டரெல்லாங் கூடி யடிவணங்கிப் போற்றிசெய்து
தெண்டனிட்டு நிற்குஞ் செயல்பாரீர்—கண்டமறு
355. உள்ளவன்றான் வேண்டியே யுண்மைப் பொருள்கேட்ப
விள்ளவவன் வீற்றிருக்கு மெய்பாரீர்—உள்ளும்
356. அகத்தியன்வாய் பொத்தி யடிபோற்ற வுண்மை
மகத்துவத்தைக் கூறுமறை பாரீர்—மிகக்குறத்தி
357. துன்றுதினை நற்றேனுஞ் சொற்றேனுங் கூட்டியே
தின்று ருசித்திருக்குஞ் சீர்பாரீர்—என்றுரைப்ப
358. முத்தர்களும் பத்தர்களு மோன முனிவர்களும்
சித்தர்களு மாழிபோற் சேர்ந்தொலிப்ப—நித்திலத்தின்
359. தொங்கலார் தேர்மீதிற் சோலைமலை செந்தூரில்
தங்குந் திருவிலஞ்சிச் சண்முகனார்—புங்கமுடன்
360. இங்குவந்தா ரென்றியங்க ளீரொன் பதுமொலிப்ப
மங்கைமார் கூட மடமயில்போய்—அங்கைகுவித்

---

349. வெள்ளி - சுக்கிரன்.

351. முனி - நாரதர்.

352. மகத்தில் - யாகத்தில். தகரை - ஆட்டுக்கிடாயை.

353. அண்டங்களை ஆண்டிருந்த சூரபன்மனாகிய ஆண்மயிலை; முட்டையைக் காத்திருந்த ஆண்மயிலையென ஒரு பொருள் தொனிக்கின்றது.

354-5. கண்டத்தில் மறு உள்ளவன்: சிவபெருமான்.

357. சொற்றேன்: "குறப்பெண்........தேனூறு கிளவிக்கு வாயூறி நின்றவன்" முத்துக். பிள்ளை. 15.

358. ஆழி - கடல்.

360. இயங்கள் - வாத்தியங்கள்.

361. தாசைகொண்ட் பித்தருட ஞனசித்தர் தஞ்செயலும்
பேசி னிவர்கடொழில் பேதமோ—பாசிழையாள்
362. அப்படியே மாலி லழுந்தினு ளேரகத்திற்
செப்பு திருமலைவாழ் செவ்வேளே—முப்புரி நூல்
363. வாணனே வள்ளியூர் வானவனே பொற்பணியின்
பூணனே தென்னிலஞ்சிப் புண்ணியனே—நீணிலத்திற்
364. சேரத் திருவுளமோர் சிந்தையில்லை யோவிந்த
வேரிக்குழ ழுழு மெல்லியலை—ஆரமுடல்
365. காயுமோ வென்பளினிக் காதல்கொண்டு பெண்டுவைப்ப
தோயுமோ வெங்கள்குடிக் கொண்ணுதோ—நீயுந்தான்
366. சொந்தமுடன் பெண்டாயெந் தோகைதனைக் கொள்ளாயேல்
இந்த வழக்குவிடோ மென்பார்முன்—சிந்தையுடன்
367. தம்மிடத்தி லன்புவைப்போர் தங்களுக்கு வேண்டுவன
செம்மைதருஞ் செவ்வேளுஞ் சேயிழைக்கு—வெம்மைவந்து
368. காயாமற் சற்றே கடைக்கட் கிருபைவைத்துக்
சேயோனும் வேறூர் தெருச்சென்றான்—காயாப்

## தெரிவை

369. பெரிய தெரிவையிவள் பேரிளம்பெண் டங்கை
தெரிவையர்க்குள் ளேராச செல்வம்—பரிவினரன்
370. உண்ணஞ்ச மென்றே யுவமித்தோ மாயினிவள்
கண்ணஞ்சி னுரழைப்பார் காசினியில்—நண்ணு நுதி
371. அம்பு முறையி லடங்கி யொடுங்கிவிடும்
வெம்பும் விழிக்கணைக்கு வெள்கியே—சொம்புபெறும்
372. பாந்தத் தயலென்றும் பாரவவ்வில் ரண்டென்றும்
மாந்தர்களை யேவு மதர்விழியாள்—சாந்தணியும்

---

362. மால் - காமமயக்கம்.
363. வள்ளியூர்: 23-ஆம் கண்ணியைப் பார்க்க.
364. வேரிக்குழல் - வாசனையையுடைய கூந்தல். ஆரம் - சந்தனம்.
368. காயா - பிறரைக் கோபியாத.
370. நுதி - நுனி.
371. அம்பும் உறையில்; உறை - அம்பறாத்தூணி. சொம்பு - அழகு.
372. பாந்தத்து அயல்: 'ப' என்ற எழுத்து வரிசையின் ஈற்றயல்; என்றது 'பே' என்பதை. வவ்வில்ரண்டு: வா. போவென்றும் வாவென்றும் ஏவும்.

373. கொங்கைக் கிணையாக் குலாவவிள நீர்தாளில்
தொங்கித் தலைகீழாய்த் தூங்குமே—பொங்கிவளர்

374. விந்தம் புவியினுக்குண் மேருவரன் வில்லாகும்
எந்தமலை யிந்தமுலைக் கீடாகும்—சந்திரனேர்

375. வத்திரத்துக் கொப்பாக வாரிச நான்முகனை
நித்தியமுந் தாங்கிநிற்கு நீரினுக்குள்—ஒற்றின்

376. தொடையாம் பதினெட்டிற் சொன்னபதின் மூன்றே
இடையா யுடைய விடையாள்—இடைமேல்

377. வரைமேல் வரைகளின்மேல் வான்கமுகி னீலம்
நிரையாகப் பூத்தநெடுங் கொம்பு—விதியாரம்

378. மாதவரை முன்னாண் மயக்கவந்த மாதரசி
மாதரைவிட் டேகாத மாணிக்கம்—மாதரெல்லாம்

379. சூழ்ந்து வணங்கித் தொழுதுநிற்ப வாசனமேல்
வாழ்ந்து கொலுவாய் மகிழ்ந்திருப்ப—வீழ்ந்து

380. சதங்கைதண்டை பாடகமுந் தாம்பாடப் பாடும்
மதங்கி யொருவனிதை வந்தாள்—இதம்பெறவே

381. மின்னேபொன் னாட்டரசு விட்டகன்று மண்ணுலகில்
அன்னேநீ வந்த ததிசயமே—துன்னுமுலை

382. விண்டுக் குடையினைப்போல் வீண்குற்றங் கூந்தலுக்கு
வண்டுதான் செய்ததுண்டோ மாங்குயிலே—வண்டைக்

383. களங்கமறப் பாடிக் கருதிவெல்வ னென்றே
விளங்குமிசை பாடினியும் விள்ள—வளம்பெருகு

---

374. விந்தம் - விந்தமலை. புவியினுக்குள்ளாகும் என்று 'ஆகும்' என்பதை முன்னுங் கூட்டுக. ஈடு - ஒப்பு.

375. வத்திரம் - முகம்; இது வக்த்ரம் என்பதன் திரிபு. ஒற்று - மெய்யெழுத்து.

376. தொடை - வரிசை. பதின்மூன்று: லகரஒற்று; அதனை இடையெழுத்தாக உடையது இல்லையென்றசொல்; இடை இல்லையென்றபடி.

377. வரையென்றது வயிற்றிலுள்ள மடிப்புக்களை. வரைகளென்றது நகில்களை. கமுகென்றது கழுத்தை. நீலமென்றது கண்களை. விதி - நூலின் விதி.

378. மா தரைவிட்டு - பெரிய பூமியைவிட்டு.

379. கொலு வாய் - கொலுவில்.

381-2. முலைவிண்டுக்கு - நகிலாகிய மலைக்கு. உடை - ஆடை. நகிலுக்கு ஆடை குற்றஞ்செய்ததாவது மேல்மூடியிருத்தல். கூந்தலுக்கு வண்டு குற்றஞ்செய்தலாவது மொய்த்தல்.

384. செந்தூர் திருமலையான் சீர்வேள்வி நன்மலையான்
நந்தார் திருவாவி னன்குடியான்—சந்தூரும்

385. தென்னிலஞ்சி வீற்றிருக்குஞ் செவ்வேள் தசாங்கமெல்லாம்
உன்னி யுரையென் றுரைத்தலுமே—மன்னிவளர்

386. பாரார் பெருமை பகர்கந்த மாதனமாம்
சீரார் வரையின் செழுமைகளும்—பேரான

387. முன்னு ரியநாடு மோன முனிவர்புகழ்
தென்னு ரியநாட்டின் செல்வமும்—எந்நாளும்

388. பன்னிலஞ்சித் தாதியரும் பார்த்துமகிழ் வெய்தும்இந்தத்
தென்னிலஞ்சித் தானச் சிறப்பும்—இந்நிலத்தில்

389. குத்திரம்வெண் குட்டமுடன் கோடி வினையறுக்கும்
சித்திர மாநதியின் சித்திரமும்—நித்தியமும்

390. நாடிரண்டைஞ் ஞூறு நரவரியும் போயுலவும்
கோடிரண் டாயிரமார் குஞ்சரமும்—நாடியே

391. வேலா யுதம்படைத்த மீளித் திருக்கரமும்
காலா யுதம்படைத்த கைக்கொடியும்—மேலான

392. வெற்றியுடன் வீரம் விளங்குமன்ற லம்முரசே
உற்று முழங்கு முயர்முரசும்—பற்றித்

393. திடம்பலரும் போற்றத் திருமார்பிற் சூடும்
கடம்பலர்ப்பூங் கொத்துக் கணியும்—அடங்கிக்

394. குமரன் றுணையெனவே கோவுலகங் கூறி
அமருந் திருவாணை யன்பும்—குமரவேள்

---

384. நந்து - சங்கு.

386. கந்தமாதனம் - கைலையைச்சார்ந்த ஒருமலை; இது முருகக் கடவுளுக்குரியது; செந்தூருமாகும்.

387. முன் ஆர் இயம் நாடும். தென்னுரியநாடு - திருவிலஞ்சியுள்ள நாடு.

388. பன்னில் அம் சித்தாதியரும்; சித்தாதியர் - சித்தர் முதலியோர்.

389. குத்திரம் – கூஷ்த்ரம்; "குமரகண்டங்குத் திரம்பேய் கயரோகன் சார் பிரேதம், இவைபிறவு முடற்குட்ட முதற்பிணியுந் தீர்த்து" (சேது. துராசார. 29.) சித்திரம் - அழகு.

390. நரவரி - நரசிங்கம். ஆயிரம் நரசிங்க அவதாரமாயினும் உலாவுகின்ற குஞ்சரம்; அயிராவணம்.

391. காலாயுதம் - கோழிச்சேவல்.

392. மன்றல் - கலியாணம்.

393. கணி - கண்ணி.

395. வென்றித் தசாங்கத்தின் மெய்ம்மைபெறும் பாட்டமுதம்
ஒன்றிச் செவிவாயி னுட்புகுத—மன்றல்சேர்
396. கூந்தற் பிணையாசை கோடிகொண்டாள் காமவெள்ளம்
நீந்தப் புணைகாணாள் நின்றயர்ந்தாள்—சாந்தகுண
397. வல்லி விறலிதனை வாவென் றருகழைத்துச்
சொல்லியே காமத் துயர் செறித்தாள்—வல்லதெல்லாம்
398. பேசுவன பேசிப் பிதற்றுவன தான்பிதற்றி
ஆசையுடன் சேருமென்றே யன்றிசைப்ப—நேசமுடன்
399. சங்கந் திமிலை சமுத்திரம்போ லேமுழங்கப்
பொங்கடியார் சீரோசை போந்திசைப்பத்—தங்கவே
400. செய்ய திருநாமஞ் சீரடியேற் கன்றளித்த
மெய்யன் றிருமலைமேல் வீற்றிருப்போன்—பையரவம்
401. பூண்டார் புகழ்பூண்டார் போற்று மடியவரை
ஆண்டார் திரிகூடத் தைம்முகனார்—வேண்டவரும்
402. ஆறு முகனிலஞ்சி யைய னெழுந்தருளி
ஏறிவரும் வைய மெதிர்தோன்றக்—கூறியதோர்
403. மூவர்க்கு ளேயொருவன் மொய்தமிழ்க்கு நீர்க்குளத்தில்
ஆவற் பொருள்கைக்கு ளானதுபோல்—தாவியே
404. இன்பவெள்ள மேற்கொண் டிருங்கசிர மேற்கூப்பி
அன்பினுடன் பாதத்தி னம்புயமும்—துன்பமற
405. மார்பழகுந் தோளழகும் வத்திரத்தி னல்லழகும்
தேரழகுங் கண்டாள் திகைப்புற்றாள்—பேரழகின்
406. மன்மதனே யுன்றன் வளர்குடையு முன்றேரும்
என்மதியை யுண்டே யிடர்செயுமோ—நின்மதத்தாற்
407. சூர்மதத்தைச் செற்றோன் றொடர்பெனக்கு முண்டாகிற்
சீர்மதியுந் தென்றலுந்தாஞ் சீறுமோ—ஓரென்று

---

396. கூந்தற்பிணை: தெரிவை. புணை - தெப்பம்; "காமவெள்ளம் நீந்தவொரு புணையின்றி" திருக்குற். மந்தமாருதச்.

402. வையம் - தேர்.

403. ஒருவன்: சுந்தரமூர்த்தி நாயனார். நீர்க்குளத்தில் - திருவாரூர்க் கமலாலயத்தில். பொருள் - திருமுதுகுன்றத்தில் மணிமுத்தாநதியிலிட்ட பொன்.

405. வத்திரம் - முகம்.

406. குடை: சந்திரன். தேர்: தென்றல்.

407. ஓர் - இதை நினைப்பாயாக.

408. பன்னிப் பிதற்றுதலும் பன்னிரண்டு கையோனும்
சின்னக் குயிலோனுந் தேருமாய்—மன்னித்

409. திருமறுகிற் சென்றேகச் சேயிழைசெவ் வேளை
உருவெளியிற் கூடி யுகந்தாள்—பெருமைசேர்

### பேரிளம்பெண்

410. பேரிளம் பெண்ணொருத்தி பேருலகங் கட்கெல்லாம்
சீரிளம்பெண் ணென திருவனாள்—பார்பிளந்து

411. பொன்னாட்டை யெல்லாம் பொருதுவென்று பொன்மலையை
இந்நாட்டை வெல்லு மிருதனத்தாள்—நன்னாட்டில்

412. வேளையம்புக் கம்பேவி மேலு மவனைவெல்ல
வாளும்புக் கேவு மதர்விழியாள்—நாளும்புக்

413. காலுக்கு நேருதர மம்மலைக்கு நேருமுலை
நாலுக்கு நேரான நுண்ணிடையாள்—பாலுக்கு

414. நேர்மொழியார் சூழ நெடுவேள் ரதிபணியத்
தாருலவு சிங்கா சனத்திருந்தே—ஏருலவு

415. பண்டுமின்று மென்றும் பகரிளையான் யாவனென்று
கண்டின்று சொல்லுமென்று கட்டுரைப்ப—மண்டலத்தில்

416. அன்ன நடையா ரவனி புரந்திருக்கும்
மன்னவரைச் சொல்ல மடமயிலும்—இன்னவரில்

417. மிக்கவர்கள் யாவரென்று வேதியரைத் தான்வினவத்
தக்கபதி னெண்கணமுஞ் சாற்றியே—திக்கரசர்

418. ஆதி முனிவருக்கு ளானமார்க் கண்டனுடன்
நீதிமக வானை நிகழ்த்தியே—போத்

419. அயன்மாலைச் சொல்லி யவர்களுக்குண் மேலாம்
செயமாந் திரிகூடத் தேவன்—நயமாகத்

420. தந்தபிள்ளை யோரிருவர் தந்திமுகன் முன்னோனென்
றிந்தவகை யெல்லா மியம்பியே—கந்தனே

421. என்று மிளையா னெவர்களுக்குந் தானிளையான்
துன்றிளையான் றென்னிலஞ்சிச் சோதியென்றார்-நன்றென்றே

---

408. சின்னக்குயிலோன் - குயிலாகிய சின்னத்தையுடையவன்; சின்னம் - காளம்.

412. வேள் ஐ அம்புக்கு - காமனுடைய ஐந்துமலர்ப்பாணங்களுக்கு.

418. போத - மலரிலுள்ள.

421. "என்று மிளையாய்" (முருகு. இறுதி வெண்பா); "என்றுமழி யாத விளமைக்கார" திருப்புகழ்.

422. சொன்னவர்கள் வாய்நிரம்பச் சொன்னஞ் சொரிவித்துப்
பொன்னரைநாண் சாலுவைகள் பொற்கடுக்கன்-மின்னுமொரு
423. கண்டசரங் கட்டுவர்க்கங் கற்கட்டு வட்டமனம்
கொண்டதுவாய் கொள்ளாமற் கூர்ந்தளித்துத்—தண்டலையில்
424. உய்யானஞ் சென்றே யொருகடப்பங் கன்றெடுத்துச்
செய்யோன்பே ரிட்டுநட்டுச் செப்பியே—மெய்யாகக்
425. கட்டினுள் போற்றுங் கடப்பமலர் பூத்தவுடன்
மட்டிலா நல்ல மகிழ்ச்சிபெற்றே—இட்டமுடன்
426. அங்கனையார் கூடி யழகு குரவையிட்டுப்
பொங்கு பதலைபம்பை புக்கியம்ப—இங்கெவரும்
427. காண்டிரெனத் திங்கடொறுங் கார்மயிலின் மேற்பவனி
வேண்டியே யாரல் விழாவெடுத்தே—ஈண்டுபொன்னும்
428. ஓதனமு நல்கி யுயபரடியார் தங்களுக்குச்
சாதனமா முத்திநிலை சாற்றியே—போதக்
429. கடப்ப மலரெடுத்துக் கண்ணிகட்டிச் செவ்வேள்
தடப்புயத்திற் சாத்துவமோ வென்னத்—திடப்படவே
430. பெண்ணா ரமுதம் பிரியமுட னேயுரைப்பத்
தண்ணா ரமுதே தனிமயிலே—கண்ணேகேள்
431. இந்திரனார் பத்தர்மல ரேழை யடியர்மலர்
சந்தவரைக் கும்பன் றனிமலர்கள்—அந்தமுற
432. முந்நூல் மணிமார்பர் முப்போதுஞ் சாத்துமலர்
எந்நேரஞ் சூடு மிணையடிக்குப்—பொன்னேநீ
433. யேயெடுத்துச் சாத்துமல ரேறு தெனமறுப்பப்
போயெடுத்து வல்லி புலம்புதலும்—வாயெடுத்துப்
434. பாடு மடியார் பகர்ந்த படிதிருக்கூத்
தாடும் பெருமா னறுமுகவன்—நீடும்
435. கொடியார் தமைச்சாடுங் கொற்றவைக்கு மைந்தன்
அடியார்க் கெளியனலை வாயான்—பொடியாரும்
436. குற்றாலத் தண்ணல் குழல்வாய் மொழியுமைசேர்
வற்றா வடவருவி யான்மைந்தன்—கற்றாய்ந்து
437. சட்டி விரதஞ் சகத்திருந்த பேர்க்குமன
திட்டவ பீட்டமெல்லா மீந்திடுவோன்—கெட்டியாய்த்

---

423. கூர்ந்தளித்து - மிகுதியாக அளித்து.
427. ஆரல்விழா - கிருத்திகைத்திருவிழா. 428. ஓதனம் - அன்னம்.
431. சந்தவரை - சந்தனமரத்தையுடையமலை; பொதியின்மலை. கும்பன் - அகத்திய முனிவர்.
432. முந்நூல் மணிமார்பர் - அந்தணர்.
435. கொற்றவை - துர்க்கை. அலைவாய் - திருச்செந்தூர்.

438. தென்னிலஞ்சி வீற்றிருப்போன் செண்பகவி நாயகர்க்குத்
தன்னிகரில் லாததுணைச் சண்முகத்தோன்—முன்னரெல்லாம்
439. பூத கணநடப்பப் பொய்ம்மையில்லா மெய்யடியார்
ஏதமறப் பின்னே யிசைந்துவரப்—போதமுறும்
440. கும்பன் முதன்முனிவர் கொண்டாடிப் போற்றிவர
இம்பரிலே யைந்தருவு மீந்துவரத்—தம்பமாம்
441. தேவர்சே ஞபதியாஞ் செட்டிப் பெருமான்றேர்
தாவியே யவ்வேளை தானெய்த—ஆவலுடன்
442. காணுமற் போனபொருள் கண்டவர்போ லுண்மகிழ்ந்து
நாணும லங்கே நடந்துசென்ருள்—வீணுளாய்ப்
443. போச்சுதே நேற்றுவரை பூங்குயிலா ரேயெனக்கும்
வாச்சுதின்றே யென்று வணங்கினுள்—பேச்சதனுல்
444. வேதியர்கள் சொன்னதெல்லா மெய்யே குமரனென்றே
ஓதி யுணர்ந்தா ளுவப்புற்ருள்—வீதியிலே
445. வந்தானைப் போற்றி மகிழ்ந்தெடுத்த புட்பமெல்லாம்
சந்தாபந் தீரவே சாத்தினுள்—கொந்தாரும்
446. கோதை சரியமலர்க் கோதைபோ லேபணிந்தாள்
போத விரண்டுகுடம் பொன்பெற்ருள்—ஊதைக்கான்
447. மான்மகளைக் கூட மயங்கித் தியங்கினீர்
மான்மகளைக் கூட மயங்கிலீர்—மான்மகளைக்
448. கொள்ளாத கோட்டாலை கொண்டீ ரெனைமதனும்
கொள்ளாத கோட்டாலை கொள்வானேன்—வள்ளியென்னும்
449. கொஞ்சக் குறத்திதன்னைக் கொண்டீர் சசிவருத்தும்
கொஞ்சந் தவிர்த்தெனையுங் கொள்ளீரோ—இன்சொலவள்

---

438. செண்பகவிநாயகர் - திருக்குற்ருலத்து விநாயகர்; இவ்விநாயகர் மேலகரத்திலுள்ளார்.

440. இம்பரில் - இவ்வுலகத்தில்.

442. சென்ருள் : சென்றவள் பேரிளம்பெண்.

445. புட்பம் - தான் வளர்த்த கடம்பமரத்தின் மலர்கள். சந்தாபம் - வெம்மை.

446. கோதை - கூந்தல், மாலை. போத - நிறைய. இரண்டுகுடம் பொன் பெற்ருள் - இரண்டு குடங்களைப் போன்ற தனங்களிற்பசலையைப் பெற்ருள்; பொன் - பசலை. ஊதை - காற்று. கான் - காடு.

447. மான் மகள் - மானின்மகளாகிய வள்ளி, மாலின் (மால் - இந்திரன்) மகளாகிய தேவயானை. 448. கோட்டாலை - துன்பம்.

449. கொஞ்சக்குறத்தி - சிறுமையையுடைய குறமகள். சசி - சந்திரன்.

450. வள்ளிக் கொடிச்சி வளர்கொடிச்சி வன்கொடிச்சி
வள்ளற் கொடிச்சியும்நான் வாய்ப்புக்கால்—எள்ளலறப்
451. பெண்டுவைத்துக் கொள்வீர் பெருமையுண்டா மான்மகளைக்
கொண்டதுபோற் கொஞ்சங்கள் கூறுரே—மண்டலத்தில்
452. அங்கவளு மானைமக ளல்லவோ நாயடியேன்
பொங்கவனி வேந்தர் புதல்விகாண்—மங்கையவள்
453. பேரிளம்பெண் ணேயடியேன் பேர்பெரிய தேர்வேந்தர்
காரியமோ வீரியமோ கைக்கொள்வார்—நீரும்
454. மணந்தான் மயக்கமறும் வாய்முத்தந் தந்தே
அணைந்தாலென் னுசையறு மென்றுட்—கிணங்கிருவர்
455. தங்கள்முகம் பார்த்துத் தனிக்கிருபை மூரலே
புங்கமுடன் செய்தான் புகழ்வேலன்—வங்கணமாய்ச்
456. சொன்ன வெழுவருக்குஞ் சொல்லரிய மாலேறப்
பொன்னகரும் பன்னகரும் பூவுலகும்—நன்னகரும்
457. மீறி நெறியேற மிக்கசைவந் தானேற
மாறிலாச் செங்கோல் வளர்ந்தேற—ஈறிலாக்
458. குற்றாலம் வாழக் குழல்வாய் மொழிவாழ
வற்று வடவருவி வாழவே—பற்றுக
459. மாதங்கண் மும்மழைகண் மங்காமல் வாழவே
வேதங்கண் மெய்ப்பொருள்கண் மெய்வாழ—நீதங்கள்
460. சீருடையார் வாழத் திருவாழத் தென்னிலஞ்சி
ஊருடையான் போந்தா னுலா.

---

## வாழ்த்து

(வெண்பா)

முத்திதருங் குற்றால முற்றுமே வாழிவெற்றிச்
சத்தியணி வேன்முருகர் தாம்வாழி—எத்திசையும்
சீர்வாழி பத்தர் செயம்வாழி தென்னிலஞ்சி
ஊர்வாழி வாழி யுலா.

திருவிலஞ்சி முருகன் உலா முற்றிற்று.

---

452. அவளென்றது தெய்வயானையம்மையை. அவள் மங்கை.
453. அடியேன் பேரிளம்பெண்.
454. இருவர் - வள்ளியும் தெய்வயானையும்.
455. வங்கணமாய் - நேசமாக.
456. எழுவர் - பேதைமுதலிய ஏழுபருவமகளிர். மால் - காமமயக்கம், பொன்னகர் - தேவலோகத்திலுள்ளார். பன்னகர் - நாகலோகத்தினர். நன்னகர் - திருக்குற்றாலம்.